# திருப்புடைமருதூர்
# நாறும்பூநாதர்
# திருவிளையாடற்புராணம்

மூலமும் உரையும்








பேராசிரியர்

## ம. வே. பசுபதி

திருப்புடைமருதூர் நாறும்பூநாதர்

# திருவிளையாடற்புராணம்

(மூலமும் – உரையும்)

உரையாசிரியர்

பேராசிரியர் ம.வே. பசுபதி

மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை
சென்னை-600108.

முதற் பதிப்பு : நவம்பர், 2008

திருவள்ளுவர் ஆண்டு : 2039



**விலை : ரூ. 250.00**

மணிவாசகர் வெளியீட்டு எண் : 1551

நினைவில் வாழும் நிறுவனர்

**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

**'வள்ளுவம்'** இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **'தமிழவேள்'** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**'பதிப்புச் செம்மல்'** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

கிடைக்குமிடங்கள்:

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, **சிதம்பரம்** - 608001. **✆:230069**

31, சிங்கர் தெரு, பாரிமுனை, **சென்னை** - 600108. **✆:25361039**

6, சிவஞானம் தெரு, **தி. நகர், சென்னை** - 600017. **✆:24357832**

110, வடக்கு ஆவணி மூல வீதி, **மதுரை** - 625001. **✆:2622853**

15, ராஜ வீதி, **கோயமுத்தூர்** - 641001. **✆:2397155**

78, செரி சாலை, **சேலம்**-636001. **✆:3207722**

28, நந்தி கோயில் தெரு, **திருச்சி** - 620002. **✆:2706450**

---

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 021, தொலைபேசி : 25954528

# காணிக்கை !



நீதியரசர் மாண்புமிகு சு. இரத்தினவேல் பாண்டியன்
திருமதி இர. லலிதா

# காணிக்கை

'திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளை யாடற்புராணம்' – உரையுடன் வெளியிட ஊக்கு வித்த பெருமகனார், அருள்மிகு. கோமதி அம்பிகை உடனாகிய, அருள்மிகு. நாறும்பூநாதரின் நல்லருள் பெற்றவர்; திருப்புடைமருதூரில் தோன்றி, உலக றிந்த சாதனையாளராக விளங்குபவர்; இந்திய உச்ச நீதி மன்றத்தின் நீதியரசராக விளங்கி, நீதித்துறைக்கு முன்னுதாரணமான பல தீர்ப்புகளை வழங்கியவர்; ஐந்தாம் ஊதியக்குழுத் தலைவராக விளங்கி, பாரதம் முழுவதும் பணியாற்றும் அரசு ஊழியர் களுக்கு, நியாய ஊதியம் வழங்கி, அனைவரின் நெஞ்சங் களிலும் நிலைத்திருப்பவர்; இந்திய அரசுக்கு அச்சுறுத்தலாக – ஜம்மு காஷ்மீரில் உள்ள அனந்த் னாக்கில் நிகழ்ந்த நிகழ்வுகளுக்குத் தீர்வுகாண அமைக்கப்பட்ட குழுத்தலைவராக விளங்கி, பிரச்சனை களுக்கு முடிவுகள் கண்ட பேரறிஞர்; நடுவண் அரசின் பிற்படுத்தப்பட்டோர் நலவாரியத் தலைவராக விளங்கிப் பல நல்ல செயற்பாடுகளை அரசுக்குப் பரிந்துரைத்து, பிற்படுத்தப்பட்ட பலகோடி மக்களின் ஒளிவிளக்காக மிளிர்பவர்; எளியேன்பால் பேரன்பு வைத்துள்ள என் தலைவர், **நீதியரசர் மாண்புமிகு சு. இரத்தினவேல் பாண்டியன்** அவர்கள் ஆவார்.

இவர், திருப்புடைமருதூரைப் பறவைகள் சரணாலயமாக, முன்மாதிரிக் கிராமமாக,

சுற்றுலாத் தலமாக விளங்கச் செய்வதுடன், ஊரின் அனைத்து நலன்களையும் மேம்படுத்தும் உன்னதத் தொண்டராகவும் விளங்குகிறார்; தம் ஓய்வூதியப் பயன்களாகிய பெருந்தொகைகளை ஊர் நலத்துக்கும் திருக்கோயில் வளர்ச்சிக்கும் உளமுவந்து அளித்துவரும் உத்தமர் இவர்.

இத்தகைய பெருமக்கள் இருப்பதனாலேயே உலகம் நிலைத்திருக்கிறது என்று, 'தனக்கு என முயலா நோன்தாள், பிறர்க்கு என முயலுநர் உண்மையானே, உண்டால் அம்ம இவ்வுலகம்' என, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் இளம்பெருவழுதி பாடினார்.

**நீதியரசர் மாண்புமிகு சு. இரத்தினவேல் பாண்டியன்** அவர்களுக்கும், அவர்தம் இல்லத் தரசியார் **திருமதி. இர. லலிதா** அவர்கட்கும் எளியேனின் வணக்கங்களையும் நன்றிகளையும் உரித்தாக்கி, இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

பணிவன்புடன்,

**ம.வே. பசுபதி**

# அறிமுக உரை

**அம்மையும் அப்பனும்:**

தென்பாண்டிச் சீமையின், திருநெல்வேலி மாவட்டத்தில், அம்பா சமுத்திரம் வட்டத்தில் அமைந்த அழகிய சிற்றூர் திருப்புடைமருதூர். அருள்மிகு கோமதி அம்மன் உடனாகிய அருள்மிகு நாறும்பூநாதர், இந்த ஊரில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ளார். நாறும்பூ என்றால், மணமுள்ள பூ என்று பொருள்.

பூ என்று பொதுவாகச் சொன்னால் தாமரைப் பூவைக் குறிக்கும். அதுபோல, நாறும்பூ எனப் பொதுவாகச் சொன்னால், மருதமரத்தின் பூவைக் குறிக்கும். கொன்றைப்பூவைச் சூடும் பெருமானுக்கு, மருதப்பூ என்று திருநாமம் அமைந்தது அற்புதமல்லவா?

இமயமலைத் தொடரில் கோமதி என்று ஒரு மலை உள்ளது. அம்மலை பச்சைநிறக் கல்லால் ஆனது. அதிலிருந்து கல்லெடுத்துத் திருவுருவச்சிலை செய்து, அதில் அம்பிகையைப் பிரதிஷ்டை செய்தமையால், இத்தலத்து அம்பிகைக்குக் கோமதி என்ற திருநாமம் ஏற்பட்டது.

தமிழ்ச்சைவ உலகம், இறைவன் எட்டு வீரச்செயல்கள் செய்த தலங்களை அட்டவீரட்டத் தலங்கள் என்றும், ஐம்பூதத் திருமேனிகள் கொண்ட தலங்களைப் பஞ்சபூதத் தலங்கள் என்றும் கொண்டாடும். ஆனால், மூன்று மருதத் தலங்களைச் சிறப்பித்துப் பேசும் வழக்கம் இல்லை.

தலைமருது மல்லிகார்ச்சுனம்; இடைமருது திருவிடைமருதூர்; கடைமருது திருப்புடைமருதூர்.

இறைவனை மையப்படுத்தாமல் தலவிருட்சத்தை மையப் படுத்தி எழுந்த வழக்காதலின், இது பெருவழக்காகச் சமய உலகில் கொண்டாடப்படவில்லை எனலாம்.

**திருவிளையாடற்புராணம்:**

விளை = விளைவு; பயன். ஆட்டு = மகிழ்ச்சியில் மூழ்குதல். முடிவு, மகிழ்ச்சி தருவதாக அமைவது விளையாட்டு. விளையாட்டில் வெற்றி தோல்வி இல்லை. உடல்நலம் பெற்றுக் குதூகலித்தலே விளையாட்டின் பயன். வெற்றி தோல்வி கணிக்கப் பெற்றால், போர் என்ற தலைப்பிலேயே அடக்கவேண்டும். இவை மானுடர்க்கான விளையாட்டின் விளக்கம்.

இறைவனின் விளையாட்டை, அருளாடல், திருவிளையாடல் என்பர். புராணங்கள், இறைவனின் திருவிளையாடல்களைச் சொல்பவை.

புராணம் என்ற சொல்லுக்குப் பழங்கதை என்பது பொருள். கதை என்பது கதைப்பது.அதாவது சொல்லப்படுவது. இறைவனின் அருள் ஆடல்களாகத் தொன்றுதொட்டுச் சொல்லப்படுபவையே திருவிளையாடல் புராணம் எனப்படும்.

மதுரைச் சொக்கநாதப் பெருமான் செய்தருளிய திருவிளையாடல்கள் பிரசித்தமானவை. அவற்றை இரண்டு கவிஞர்கள் தனித்தனி நூல்களாகச் செய்தனர். ஒருவர் பரஞ்சோதியார்; மற்றொருவர் பெரும்பற்றப்புலியூர் நம்பி.

திருவிளையாடற் புராணம் எனப் பொதுவாகச் சொன்னாலே, பரஞ்சோதி முனிவர் இயற்றிய 'மதுரைச் சொக்கநாதர் திருவிளையாடற் புராணத்தைக் குறிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய நூலை, 'நம்பி திருவிளையாடல்' எனப் புலவர்கள் கூறிவருகின்றனர்.

நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணம்:

சேக்கிழார், தாம் இயற்றிய நூலுக்கு, 'திருத்தொண்டர் புராணம்' என்று பெயரிட்டார். 'நூற்பெயர்' என்ற தலைப்பிட்ட தனியொரு செய்யுளில் இப்பெயர் வருகிறது.

'எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளால் நடக்கும்' என்று, வேறொரு பாடலில் ஒரு தொடர் வருகிறது. அதில் 'மாக்கதை' என அவர் குறிப்பிட்டதைக் கொண்டு, மா = பெரிய; கதை = புராணம்; பெரிய புராணம் என அந்நூல் வழங்கப்படுகிறது. திருத்தொண்டர்

புராணம் எனச் சேக்கிழார் வைத்த பெயரும் மாறாமல் நின்று நிலவுகிறது.

திருப்புடைமருதூர் நாறும்பூநாதரின் திருவிளையாடல்களைக் கூறும் இந்நூலுக்கு நூற்பெயர்ப் பாடல் இல்லை. ஓலையிலிருந்து படியெடுத்த பழைய கையெழுத்துப் பிரதியின் தொடக்கத்தில் 'திருப்புடைமருதூர் என்னும் புடார்ச்சுனப்பதிப் புராணம், புடார்ச்சுன மான்மியம்' என இரண்டு பெயர்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன. 2005ஆம் ஆண்டில், இந்நூலின் மூலம் மட்டும், டாக்டர் உ.வே.சா. நூலகம் வாயிலாக வெளிவந்தது. அப்பதிப்பில், 'திருப்புடைமருதூர்ப் புராணம்' என்றே, இந்நூலுக்குத் தலைப்பிட்டிருந்தேன்.

இந்நூலின் கடவுள் வாழ்த்தையொட்டியும் இறுதியிலும் வரும் 'வாழ்க தட்சிணகாசி வளம்பதி' எனத்தொடங்கும் வாழ்த்துச் செய்யுளில், 'புடார்ச்சுனம் சார்ந்தருள்சூழ் இலேபன சுந்தரன் தொல்கதை' என ஒரு தொடர் வருகிறது. அத்தொடரில் ஊர்ப்பெயரும் (புடார்ச்சுனம் = திருப்புடைமருதூர்) இறைவன் திருப்பெயரும் (இலேபன சுந்தரன்; இப்பெயர் வழக்கில் இல்லை. நாறும்பூநாதர் என்ற திருப்பெயர் வழக்கத்தில் உள்ளது) சார்ந்தருளுதலும் (அருளுதல் = திருவிளையாடல், அருளாடல்) தொல்கதையும் (தொல்கதை = புராணம்) வருவதைக் கொண்டு, எளியேனின் உரையுடன் வெளிவரும் இப்பதிப்பில், இந்நூலுக்கு, புராணம் பாடிய கவிஞர் பெருமானின் உளக்கருத்துக்கு ஏற்றவாறு 'திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணம்' எனப்பெயர் சுட்டப்பெற்றுள்ளது. இப் பெயருடன் இந்நூல் நிலைத்துப் பரவுவதாகுக. ஆசிரியர் விரும்பியவாறு இந்நூல், 'ஏழ் பெரும்புவி எங்கும் விளங்க' வேண்டும் என்று, எல்லாம் வல்ல திருவருட்சக்தியின் திருவடிகளைச் சிந்தித்து வந்திக்கிறேன்.

**இருவர் இயற்றியது:**

இந்தத் திருவிளையாடற்புராண நூல் 16ஆம் படலமாகிய வீரமார்த்தாண்டப் படலத்துடன் ஒருவகையால் முற்றுப்பெறுகிறது. அதற்குப் பிறகு உள்ள ஐந்து படலங்களை இயற்றியவர், வேறொரு கவிஞராவார்.

இந்நூலின் பதினாறாம் படலம் வரை இயற்றிய ஆசிரியர் பெயரை, 'புண்டரீக புரம்புகழ்த் தேசிகன் கண்டகதை' (கடவுள்

வாழ்த்து) என்ற தொடரைக்கொண்டு, 'சிதம்பரநாத தேசிகர்' என ஒருவாறு ஊகிக்கலாம். இவரின் உபதேசகுரு, 'சதாசிவதேசிகர்' எனத் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது.

இவ்விலக்கியத்துக்கான இன்னும் சில மூல ஓலைச்சுவடிகள் கிடைத்தால் மட்டும், இந்நூலாசிரியர் பெயர் சிதம்பரநாத தேசிகர் என்பதை முடிந்த முடிபாகச் சொல்ல முடியும். அதன்பிறகு நூலாசிரியர் வரலாற்றைக் கண்டறிவது எளிமையாகும்.

தாமிர வன்னிப்படலம் முதல் ஐந்து படலங்களை இயற்றியவர், வேறொரு கவிஞர் என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன.

தீர்த்தப் பெயர்கள் வேறுபடுவது, முன்பகுதியில் வந்த இமவான் மகள் திருமணம், கருவூர்த்தேவர்க்கு அருளியது போன்ற செய்திகளைச் சில மாற்றங்களுடன் மீண்டும் கூறுவது, கவிதைநடை, சொல்லாட்சி ஆகியவற்றை உற்று நோக்கினால் இவ்வுண்மை புலனாகும். விரிவஞ்சி அக்காரணங்கள் முழுவதையும் இங்கு எழுத இயலவில்லை.

புராணக் கதைகளைச் சிவன், உமையம்மைக்குச் சொன்னதாகவும், அவற்றை உமை, முருகனுக்குச் சொன்னதாகவும், அவற்றை முருகன் சனற்குமாரருக்குச் சொன்னதாகவும், சனற்குமாரர் அகத்தியருக்கும் வியாசருக்கும் சொன்னதாகவும், வியாசர் சூதமுனிவருக்குச் சொன்னதாகவும், சூதமுனிவர் நைமிசாரணிய ஆசிரமத்து முனிவர்களுக்குச் சொன்னதாகவும் ஒரு மரபுச்செய்தி உண்டு.

இந்நூலிலும் அம்மரபு அகத்தியப்படலம் வரை வருகிறது. சூதமுனிவரும் நைமிசாரண்ய முனிவர்களும் திருப்புடைமருதூருக்கே வந்து, மகத்துவத்தை நேரில் அறிவதாகத் தாரக உபதேசப்படலம் அமைகிறது.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரமார்த்தாண்ட வர்மன், திருப்புடைமருதூர் இறைவனிடம் ஈடுபாடு கொண்டு வழிபட்டு, திருப்பணிகள் செய்து, தன் ஊராகிய களக்காட்டுக்குச் சென்று, திருப்புடைமருதூர்க் கோயில் போலவே தன்னூரிலும் கோயில் எழுப்பி வழிபட்ட வரலாற்றுச் செய்தி கூறும் பகுதியைச் சூதமுனிவர் சொன்னார் என்று சொல்வது பொருந்தாது என்னும் அறிவார்ந்த சிந்தனையுடன் கவிக்கூற்றாகவே சொன்ன இவர் திறமை மெச்சத் தக்கதாகும்.

தொடக்கத்தில் வந்த 'வாழி தட்சிண காசி வளம்பதி' எனத் தொடங்கும் வாழ்த்துப்பாடல், வீரமார்த்தாண்டப்படலத்துள்ளும் வந்து, நூல் நிறைவடைகிறது.

திருப்புடைமருதூர்த் தலத்துடன் தொடர்புள்ள புட்பவனம், ஆத்திவனம், அரியநாயகிபுரம், மூன்றீசம் ஆகிய தலங்களின் பெருமைகளையும் இப்புராணத்துடன் இணைக்கவேண்டும் என்ற வேட்கையினால், இரண்டாம் கவிஞர் அப்படலங்களைப் பாடி இணைத்துள்ளார். ஒரு புராணத்தில் பிற தலங்களைப் பாடுவதும் உண்டு. நெல்லையப்ப பிள்ளை பாடிய திருநெல்வேலித் தலபுராணத்தில், திருப்புடைமருதூர்ச் சருக்கம் என ஒரு சருக்கம் இருப்பதே இதற்குச் சான்றாகும்.

எவ்வாறாயினும், இருபெரும் கவிஞர்களின் இனிய கவிதைகளின் தொகுப்பே இந்நூல் என்பது நிச்சயமாகும். கயிலைச் சிறப்புப் பகுதி, 20 பாடல்களுடன் முடிகிறது. 21ஆம் பாடலிலிருந்து 35 ஆம் பாடல் வரை படலச்சுருக்கம் முதலியன வருகின்றன. அப்பகுதி, இந்நூல் முழுவதையும் ஒருவரே பாடினார் என்ற எண்ணத்தை உண்டாக்குவதற்காக, இடைச்செறுகலாக வந்தது என்பதில் ஐயமில்லை. நூலின் சாரத்தை முன்னமே அறிந்துகொள்ள அப்பகுதி உதவுவதால், அவ்விடைச் செறுகலை நீக்காமல் பதிப்பிக்க நேர்ந்தது.

காப்பியத் தரம்:

புராண இலக்கியங்கள், காப்பியங்களே ஆகும். இக்கருத்துக்கு இலக்கண ஆதாரங்கள் உள்ளன. நாறும்பூநாதர் திருவிளையாடல் புராணத்தில், காப்பியத்தில் இருக்கவேண்டிய செய்திகள் யாவும் உள்ளன. 'நிரம்பிய சுவையும் பாவமும், விரும்பக் கற்றோர் புனையும் பெற்றி' என்னும் முத்தாய்ப்பான இலக்கணம், இந்நூலுக்கு மிகவும் பொருந்தியுள்ளது.

இந்நூலின் நாட்டுப் படலமும், நகரப்படலமும், கம்பன், சேக்கிழார், பரஞ்சோதி போன்ற தமிழில் முத்திரை பதித்த பத்தரை மாற்றுத் தங்கக் கவிஞர்களுடன் போட்டி போடுகின்றன.

பொருனைநதியைச் சிவனைப் போன்றது என்றும், உமையைப் போன்றது என்றும், திருமாலைப் போன்றது என்றும், பிரமனைப் போன்றது என்றும், கந்தனைப் போன்றது என்றும், திருத்

தொண்டர்களைப் போன்றது என்றும், பொருனைநதியில் வெள்ளம் பெருகுதல்- ஆணும் பெண்ணும் சேரும் புணர்ச்சி போன்றது என்றும் காரணச் சிலேடைகளுடன் இவர் தரும் கற்பனைகள், பிரமிக்கச் செய்பவையாகும்.

**'தண்டலை மயில்கள் ஆட,**
**தாமரை விளக்கம் தாங்க,**
**கொண்டல்கள் முழவின் ஏங்க,**
**குவளைகண் விழித்து நோக்க,**
**தெண்திரை எழினி காட்ட,**
**தேம்பிழி மகர யாழின்**
**வண்டுகள் இனிது பாட**
**மருதம்வீற் றிருக்கும் மாதோ'**

என்று, மருதநிலத்தைக் கம்பன் பாடியது போல, இக்கவிஞர் வசந்த காலத்தை,

**திங்கள்வெண் குடைநி ழற்ற,**
**செறிகந்தி கவரி வீச,**
**மங்கலம் குயில்இ சைப்ப,**
**காமரம் இசைப்ப வண்டு,**
**பங்கயம் களாஞ்சி ஏந்த,**
**முழவம்பைந் திரைகள் ஆர்ப்ப,**
**ஐங்கணை வசந்தன் காவில்**
**அரசுவீற் றிருத்தல் மானும்**

என்று பாடுகிறார்.

கம்பனின் கற்பனையில் ஒன்றைக்கூடக் களவாடாமல், கம்பனின் பாணியில் செல்லும் இந்தக் கவித்துவத்தை வியக்காமல் தாண்டிச் செல்ல முடியவில்லையே! இது, மாதிரிக்கு ஒன்றுதான். முந்தைய பெருங்கவிஞர்களின் கவித்துவத்தை அப்படியே படியெடுக்காமல், அதே பாணியில் கொடியெடுத்து நட்டுவைக்கும் வித்தைகளை, இக்கவிஞர் நிறையச் செய்துள்ளார்.

இந்நூலைக் கற்றால், அடுக்கி அடுக்கி வரும் உவமைகளுக்கு நெஞ்சைப் பறிகொடுப்போம். கந்துகச் சந்தங்களில் (பந்தாடும் சந்தங்களில்) துள்ளிக் குதிப்போம். சிலேடைகளில் சிலிர்ப்போம். மடக்கு முதலிய சொல்லணிகள் நம்புத்தியைக் கூர்மையாக்கும்.

இவர் கற்பனை செய்யும் நாடு - நகரம், வளமானவை; இன்பக் களமானவை. ஆசாரம் பிறழாத கொடையாளிகள் கூடாரம் அந்த நாடு; அந்த நகரம்!

மொத்தத்தில் இந்த நூல் தமிழுக்கும், தமிழ்ச்சைவ உலகுக்கும் - வரமாகக் கிடைத்த தரமான நூலாகும். முன்னூறு ஆண்டுகட்கும் மேலாகப் புதைந்திருந்து, வெளிப்பட்ட புதையலே ஆகும்.

தமிழ்ச் சைவர்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டிய பொதுச் செய்திகள் அத்தனையும் இந்த நூலில் உள்ளன. கோயிலில் பூசை செய்தல், இல்லத்தில் பூசை செய்தல் பற்றிய முறைகள், விபூதி, உருத்திராட்சம், புராணபடனம் முதலிய விளக்கங்கள் எல்லாம், முழுமையாக இந்நூலில் உள்ளன.

இது பக்தி இலக்கியம். எனவே, இதன் பக்தி நம்மைப் பரவசப் படுத்துவதைப் படித்து அனுபவிக்க வேண்டும்.

**உரையின் தன்மை:**

திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடல்புராண நூலை, அருமையான நூல் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால், எளிமையான நூல் என்று சொல்லவே முடியாது. நிகண்டுகளில் மட்டுமே அடைந்துகிடந்த பல சொற்கள், இந்த நூலில் புழக்கத்திற்கு வந்துள்ளன. அரிய கையெழுத்துப் பிரதியிலிருந்து அச்சுக்குப் படியெடுக்கும் நிலையில், அங்குமிங்குமாகச் சில நூறு பாடல்கள் செப்பம் பெறாமலிருந்தன. அதனாலும் எளிதில் அணுகிப் பொருளுணர இயலாமலிருந்தது. இப்படியாக இருக்கும் நிலையைச் சமஸ்கிருதத்தில் 'நாளிகேரபாகம்' என்பார்கள். நாளிகேரம் = தேங்காய். தேங்காயைச் சாப்பிட, பல முயற்சிகள் செய்யவேண்டும். பறித்த உடன் அப்படியே சாப்பிட முடியாது.

நாளிகேர பாகமாக இருந்த இந்நூலின் பல பகுதிகளை, 'கதலீ பாகம்' ஆக்கவேண்டும் என்று, என் உள்ளத்தில் வைராக்கியம் எழுந்தது. கதலீபலம் = வாழைப்பழம். வாழைப்பழத்தை எளிதில் உண்ணலாம். எல்லாரும் படித்துணருமாறு இந்நூலை, எளிமையான உரைநடையில் எழுத நினைத்தேன்.

மிகக்கடினமானது என மிகப்பலரால் கருதப்பட்ட நயினை நிரோட்டக யமக அந்தாதி, பனசைச் சிலேடை வெண்பா ஆகிய

நூல்களுக்கு அன்னை பராசக்தியின் திருவருட்பார்வையால் உரைசெய்த அனுபவம், இப்பணிக்கு உதவும் என்பது எளியேனின் நம்பிக்கை. சங்கத்தமிழின் முதன்மைத் தொகுப்பாகிய பத்துப்பாட்டின் அருமை பெருமைகளில் ஒன்றையும் விடாமல் சாமானியத் தமிழறிவு கொண்டவர்களும் எளிதில் புரிந்துகொள்ளுமாறு 'பத்துப்பாட்டு - எளிய உரைநடை' எழுதியவன் ஆகையால், எல்லாரும் அறிந்துணர்ந்து பயன்பெறும் வகையில், உரைநடையாக எழுதலாம் எனத்தொடங்கினேன்.

உள்ளொளி பெருக்கி, மூளையைக் கசக்கி, இந்நூலின் சில நூறு பாடல்களுக்குச் செப்பமான வடிவம் கொடுத்திருக்கிறேனே... பாடல்களை வெளியிடாமல் உரைநடையாக மட்டும் எழுதி வெளியிட்டால், செப்பம்பெற்ற பாடல்கள் பதிவு பெறாமல் போகுமே... என்பன போன்ற 'சின்ன கவலைகள் என்னைத் தின்னத் தொடங்கின.' முடிவு... இந்த வடிவு... செய்யுளும் உரையும் சேர்ந்த படிவு.

நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணத்தில் குளகச்செய்யுள் பல உள்ளன. 'குளகம் பலபாட்டு ஒருவினை கொள்ளும்' என்பது இலக்கணம். ஒரு பாட்டிலேயே தொடரை - செய்தியை முடிக்காமல், அடுத்த பாட்டிலோ, மேலும் ஓரிரு பாடல்கள் கடந்தோ முடிந்தால், குளகம் எனப்படும். அத்தகைய இடங்களில் ஒரு பாட்டின் இறுதியில் உள்ள ஒரு சொல்லுக்கோ, சில சொற்களுக்கோ அடுத்த பாடலின் உரைப்பகுதியில் பொருளெழுத வேண்டிவரும்; சில இடங்களில் முன் பாடலில் பொருளெழுத வேண்டிவரும். குளகப்பாடல்கள் வரும் இடங்களில், அவ்வண்ணமே உரை எழுதியுள்ளேன்.

பாடல்களைப் படிக்காமல் உரைப்பகுதிகளைத் தொடர்ச்சியாகப் படித்தாலும், நூலின் செய்திகளையும், நயங்களையும், சிறப்புகளையும் முழுதும் அறியும்படி எழுதியுள்ளேன். பாடலில் விரிவில்லாத பட்சத்தில், சாமானியரும் அறியவேண்டும் என்பதற்காக உரையில் அவ்விரிவைச் சேர்த்துள்ளேன்.

பாடல்களையும் கூடுமான வரையில் பிரித்துப் பதிப்பித்திருப்பதால், பாடல்களையும் எளிமையாகப் படித்தறிய முடியும்.

மொத்தத்தில் இலக்கிய ஆர்வலர்கள், சுவைஞர்கள், பக்தர்கள், சமயவாதிகள் ஆகிய அனைவருக்கும், இந்நூற் செய்திகளும் சுவைகளும் எளிமையாகக் கிடைக்கவேண்டும் என்ற பேரார்வத்துடன் எளியேனால் இயன்ற எல்லா முயற்சிகளும் செய்துள்ளேன்.

இந்நூலில் விநாயகரை, நாறும்பூநாதரை, அம்பிகையை, பிற தெய்வங்களைத் துதிக்கும் போற்றிப்பாடல்கள் உள்ளன. திருப்புடைமருதூர் பற்றிய ஆய்வேடு தயாரித்துள்ள திருமதி ஞா. மேகலா எம்.ஏ., எம்.ஃபில்., (பிஎச்.டி.,) அவர்கள், அப்பகுதிகளைத் தொகுத்துத் தாம் உரையெழுதி வெளியிட வேண்டும் என வேட்கை யுற்றதால், அத்தகு போற்றிப் பாடல்களுக்கு அருஞ்சொற்பொருள் மட்டும் முழுமையாகத் தந்துள்ளேன்.

'இந்நூலைத் தங்கட்கும் தங்கள் துணைவியார் அவர்கட்கும் காணிக்கை ஆக்குகிறேன்' என, எளியேன் அன்புடன் தெரிவித்தவுடன் என்னை வாழ்த்தி, இந்நூலைக் காணிக்கையாக ஏற்ற **நீதியரசர் மாண்புமிகு சு. இரத்தினவேல் பாண்டியன்** அவர்கட்கும், **திருமதி. இர. லலிதா** அவர்கட்கும் என் பணிவார்ந்த நன்றிகள் என்றும் உரியன.

இந்நூலின் மூலத்தைப் பதிப்பித்து, இவ்வுரை எழக் காரணமான டாக்டர் உ.வே.சா. நூல் நிலையத்தார்க்கு என் நன்றிகள்.

நினைவில் வாழும் தமிழறிஞர், பதிப்புச்செம்மல், அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் பேராசிரியர் அமரர் **திரு. ச. மெய்யப்பன்** அவர்களால் உருவாக்கப்பட்ட - அரிய தமிழ் நூல்களை வெளியிடும் பெரிய பதிப்பகம் மணிவாசகர் பதிப்பகம் ஆகும். பேராசிரியர் அவர்கள், என் ஆசிரியரும் தந்தையுமாகிய நினைவில் வாழும் தமிழறிஞர், கல்வெட்டாராய்ச்சிப் புலவர், தமிழ்மாமணி, பேராசிரியர் **திரு. கா.ம. வேங்கடராமையா** அவர்களிடம் பெருமதிப்புக் கொண்டவராவார். என்பால் மிகுந்த பாசமும் பரிவும் உடையவராய் இருந்தார். காரைக்குடியிலும், சிதம்பரத்திலும், சென்னையிலும் அவரைப் பலமுறை நான் சந்தித்திருக்கிறேன். பார்க்கும் போதெல்லாம் என் எழுத்துப் பணிகளை ஊக்குவித்துப் பேசுவார். என் யாப்பருங்கலக் காரிகை - புத்துரைநூலைப் பாராட்டுவார். அதே எளிமையுடன் தொல்காப்பியத்திற்குத் தெளிவுரை எழுதச் சொல்வார். களங்கமற்ற அந்தப் புன்சிரிப்பு முகம், மனத்திரையில் அழுந்தப் பதிந்திருக்கிறது.

அமரர் திரு. ச. மெய்யப்பன் அவர்களின் ஒளிப்பட நகலாகவே அவரின் திருமகனார் திரு. ச.மெ. மீனாட்சி சோமசுந்தரம் அவர்கள், அன்பாலும் பண்பாலும் தரமான நூல்களைத் தெரிவுசெய்து

வெளியிடும் தனித்திறத்தாலும் ஓங்கி வளர்ந்திருப்பது, மிக்க உவகையைத் தருகிறது.

மணிவாசகர் பதிப்பக வாயிலாக, 'திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணம்' உரையுடன் வெளிவருவதால், நான் பெருமையடைகிறேன். மணிவாசகர் பதிப்பக உரிமையாளர், **திரு. ச.மெ. மீனாட்சி சோமசுந்தரம்** அவர்களுக்கும், பதிப்பக மேலாளர் **திரு. இராம. குருமூர்த்தி** அவர்களுக்கும் என் பாராட்டுதல்களையும் நன்றிகளையும் மனமொன்றிப் படைக்கிறேன்.

திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணத்திற்கு உரை எழுதி முடித்தவுடன், இந்நூல் மணிவாசகர் நூலகப் பதிப்பாக வெளிவரவேண்டும் என நான் வேட்கையுற்றேன். பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றுக்கும் திருவாசகத்துக்கும் தெளிவுரைகள் எழுதிய புலவரும், சிறந்த கவிஞருமாகிய திருக்கழுக்குன்றம், புலவர் **திரு. வ. சிவசங்கரன்** அவர்களிடம் என் வேட்கையைத் தெரிவித்தேன். 'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டனர்' என்ற கம்பனின் கவி வேகத்தில் செயற்பட்டு, திரு. ச.மெ. மீனாட்சி சோமசுந்தரம் அவர்களிடம் இசைவு பெற்று, எனக்குத் தெரிவித்தார். அத்துடனன்றி, இப்பதிப்பு மிகச்செப்பமாக வெளிவரும் வண்ணம், மிக நுணுக்கமாக மெய்ப்பு ஒப்பீடு செய்யும் பணியையும் மேற்கொண்டு, செவ்வனே செய்துதவினார். அவருக்கு என்நேயம் கனிந்த நன்றிகள்.

பிரமனின் தலை எழுத்தையும் படிக்கும் பேராற்றல் படைத்தவர்களே, என் எழுத்துகளைப் புரிந்துகொண்டு, தட்டச்சுச் செய்யமுடியும். அத்தகு பேராற்றலுடன் என் எழுத்துகளைப் படித்துத் தட்டச்சுச் செய்த 'அழகு சிஸ்டம்ஸ்' **திரு. சொ. அழகர்** அவர்களுக்கு என் நல்வாழ்த்துகள்.

நன்றியுடன்,

**ம.வே. பசுபதி**

17/2, பாரதி தெரு,
சீனிவாசபுரம்,
பெருங்களத்தூர்,
சென்னை - 600 063.
செல் : 94448 81281

# பொருளடக்கம்

## காண்டம் ஒன்று

தி.2

## காண்டம் மூன்று

# திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடற்புராணம்

## காண்டம் ஒன்று



### கடவுள் வாழ்த்து

#### விநாயகர்

பூமேவு புடார்ச்சுனப் புண்ணியற்கே, அவர்புகழாம்
பாமேவு நால்வகைய சொல்மலரால் பத்திபெற
நாமேவுஅக்கரநாரே நாராகத் தொடைஇயற்றிக்
காமேவு மருதடிஐங் கரன்அடியைக் கைதொழுவாம்.

*பூக்கள் நிறைந்த புடார்ச்சுனத்தில் உள்ள புண்ணியராகிய சிவனுக்கு, அவருடைய புகழாகிய பாடல்களை, பெயர், வினை, இடை, உரி என்கிற நான்கு வகையான சொற்களாகிய மலர்களால், நாக்கில் பொருந்தும் எழுத்துகளாகிய அன்பே நாராக — பக்தி பெறுவதற்காக — கவிதை மாலை தொடுக்க, மருதக்காட்டில் எழுந்தருளியுள்ள ஐந்துகரங்களைக் கொண்ட விநாயகரின் திருவடியைக் கைகூப்பி வணங்குவோம்.* 1

## நாறும்பூ நாதர்

கூறும்பூ உடையோனும் குவலயப்பூக் கொண்டோனும்
தேறும்பூ அடிமுடியும் தேடுதற்கும் தேற்றாதார்
ஆறும்,பூ வும்புனையும் அம்சடையார் அன்புஊறும்
நாறும்பூ நாயகர்தம் நாறும்பூம் பதம்நவில்வாம்.

புகழ்மிகுந்த பூவில் அமர்ந்த பிரமனும், பூவுலகைக் காத்துக் கொண்டுள்ள திருமாலும் சிவனின் தெளிவான திருவடிகளையும் திருமுடியையும் தேடினார்கள், காண முடியவில்லை. கங்கை யாற்றையும், பூவையும் முடியில் அணிந்த, அன்பு ஊறும் நாறும் பூ நாயகரின் மணம்மிக்க பூம்பாதங்களைப் போற்றுவோம்.2

## வாழ்த்து

பூவி ளங்குக! புண்ணியர் மல்குக!
கோவி ளங்குக! கொண்டல் பொழிகுக!
சேவி ளங்கு சிவன்பணி நீடுக
மாவி ளங்கும் வளங்கள் பொலிகவே!

உலகம் நன்றாகட்டும்; புண்ணியம் செய்பவர்கள் பெருகட்டும்; ஆட்சி நன்றாகட்டும்; மேகம் பொழியட்டும்; காளையின்மேல் எழுந்தருளியிருக்கும் சிவனுக்குச் செய்யும் திருத்தொண்டுகள் தொடரட்டும்; செல்வம் கொழிக்கும் வளங்கள் அழகாகட்டும். 3

மருத வாணனைப் பூசிக்கும் வண்மையார்
சரதர் இந்தச் சரித்திரம் சாற்றுவோர்
வரதர் உள்புற மெய்அடி யார்துதி
பரவும் வாய்மையர் பண்பினர் பல்கவே.

மருதவாணராகிய நாறும்பூநாதரைப் பூசிப்பவர், கொடையாளிகள், திருப்புடைமருதூர்ப் புராணத்தைச் சொற்பொழிவாகச் செய்பவர்கள். சிவனை உள்ளும் புறமுமாகக் காணும் உண்மை அடியவர்கள், துதிப்பாடல்களைப் பாடும் வாய்மை (இசைஞானம்) உள்ளவர்கள் — ஆகியோரும் பண்பாளர்கள் ஆவர். அவர்களுக்கு அழிவு இல்லை. இப்படிப் பட்டவர்கள் பெருகட்டும். 4

## பயன்

மருத நாதன் மகிமையை வாழ்த்துவோர்
சரத வாழ்வும் சந்தான பந்தமும்

கருது ஞானமும் பெற்றுக் கடவுளார்
திருவி ளங்கிச் சிவகதி சேர்வரே.

*மருதநாதரின் அளப்பரும் பெருமைகளைச் சொல்லி வாழ்த்துபவர்கள், நிரந்தரமான நல்வாழ்வும், நன்மக்கட்பேறும், நல்ல சுற்றமும், சிந்தனை வழியிலான ஞானமும் பெற்றுக் கடவுளரின் புகழ்செழிக்கச் சிவகதி அடைவார்கள்.* 5

## நூலாசிரியரின் குருவணக்கம்

பேசு நால்வர்க்கு அருளிய பிஞ்ஞகன்
வாசம் உற்றிடும் மால்வ ளம்பதி
மாசி லாத சதாசிவ மாமணித்
தேசி கன்பதம் சென்னியில் சேர்த்துவாம்.

*இறைவன் தட்சிணாமூர்த்தியாகச் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நால்வருக்கும் புகழத்தக்கவாறு அருள்செய்தார். அவ்வாறு அருள்செய்யப் பெற்றதலம் பழைமையான தலமாகும். அத்தலத்தில் வசிக்கும் குற்றமற்ற பெரிய மாணிக்கம் போன்ற, என் குருநாதர் சதாசிவ தேசிகர் அவர்களின் திருவடிகளை, என் தலைமேல் வைத்துப் போற்றுகிறேன்.* 6

## நூலாசிரியர்

மண்த லத்தினில் நால்வகை மாட்சிநூல்
பண்டு கண்டவன்; பால்கன்; பால்தந்த
புண்ட ரீகபு ரம்புகழ் தேசிகன்
கண்ட காதைஇ வைஎன்பர் கற்றுளோர்.

*இந்நூலை இயற்றுவதற்கு முன், இவ்வுலகில் சிறப்பான நான்கு நூல்களைச் செய்தவனும், சிறியவனும், நல்லூரழால் சிதம்பரநாத தேசிகன் என்ற பெயரைப் பெற்றவனும் — ஆகிய நான் இயற்றிய கதைபொதிந்த நூல் இது என்று, கற்ற பெரியோர்கள் சொல்வார்கள். திருவருள் துணையே இந்நூலைச் செய்துமுடிக்க உதவியது என்பது இதன் உட்கருத்தாகும்.* 7

## வாழ்த்து

வாழ்க தட்சிண காசி வளம்பதி
தாழ்வி லாத புடார்ச்சுனம் சார்ந்தருள்
சூழ்இ லேபன சுந்தரன் தொல்கதை
ஏழ்பெ ரும்புவி எங்கும் விளங்கவே.

தென்னாட்டுக் காசியாகிய திருப்புடைமருதூர் வாழ்க! தாழ்வு இல்லாத மருதமரத்தில் அமர்ந்து அருள்புரியும், சந்தனம் மற்றும் மணப்பொருள்களின் குழம்பு பூசிய திருமேனியராகிய நாறும்பூநாதரின் திருவிளையாடல்களாகிய பழைமையான கதைகள், பெரியனவாகிய ஏழு உலகங்களிலும் — எல்லா இடங்களிலும் பேசப் பெறுவதாகும். 8

## சிவ வணக்கம்

பூதி நாயகர் புடைமா மருதீசர் கயிலேசர்
புனித யோகர்
தாது லாவு நாறும்பூ நாதர் மனுவரதர்
சம்பு வாணர்
வேத காரணர் சாய்ந்துஓர் சித்தர்பால் பேசும்
இலேபன வினோதர்
ஆதி கோமதி சேர்வுடை மாது பாகர்
எமதகத்து உளாரே.

திருநீற்றின் நாயகரும், பருத்த பெரிய மருதமரத்தின் கீழ் அமர்ந்தவரும், கயிலை ஈசரும், புனிதமான யோகம் புரிப வரும், மகரந்தம் உலாவுகின்ற மணம் வீசும் பூவின் நாதரும், மனுவரதர், சம்புவாணர், வேதகாரணர் என்ற திருநாமங் களைப் பெற்றவரும், தலைசாய்ந்து கருவூர்ச் சித்தரிடம் பேசிய வரும், சந்தனம், மணக்குழம்பு பூசியவரும், வினோதங்கள், திருவிளையாடல்கள் செய்பவரும், எவற்றிற்கும் மூலமாகிய கோமதியைச் சேர்ந்தவரும், அந்த அம்பிகையை இடப்பாகத் தில் கொண்டவரும் — ஆகிய சிவபெருமான் எங்கள் மனத்தில் இருக்கிறார். 9

## அம்பிகை வணக்கம்

காவுடைய கரும்குழலும் கருணைபொழிந்து அருள்விழியும்
கமலம் மேவும்
பூவுடைய மலர்முகமும் புனைகாதும் துவர்இதழும்
பொன்பூண் ஏந்தும்
மாவுடைய கனதனமும் வளைக்கரமும் பட்டுடையும்
அழகு வாய்ந்த
ஆவுடைய நாயகியார் இருசரணக் கோலமும்எம்
அகத்துள் வைப்பாம்.

நெருக்கமான — கருப்பான கூந்தலையும், என்றைக்கும் கருணை வழங்கிக்கொண்டிருக்கும் — காப்பாற்றும் திருவிழி களையும், தாமரை போன்ற — திருப்போன்ற முகமும், அழகிய

வடிவுடைய காதுகளும், காவிநிறம் உடைய உதடுகளும், யானையின் மத்தகங்கள் போன்றவையும் — பொன்னணிகள் தவழுபவையும் ஆகிய கனத்த முலைகளும், வளையல்கள் அணிந்த கரங்களும், பட்டாடையும் கொண்ட அழகு அமைந்த 'ஆவுடை நாயகி' அம்பிகையின் இரண்டு திருவடிகளையும் மனத்தில் வைத்துத் தியானிப்போம். 10

## தலவிநாயகர் வணக்கம்

சந்தவரை முனிகடத்தில் சைவரை தனில்புனிதன்
தவத்தால் சார்ந்து
முந்தைஒரு கோடிபோல்வந் தேகவிழ்க்கக் கண்டுமுன்
முனிமுன் தோன்றிச்
சிந்துரஆ னன்இவன்என்(று) அறிந்திலேன் எனக்கரத்தால்
சிரத்தில் தாக்கி
வந்தனைசெய் திடம்புரிந்து மகிழ்மருத வாரணத்தை
வணக்கம் செய்வாம்.

மணம் பொருந்திய மலை பொதிகைமலை. அதன் முனிவர் அகத்தியர். குடமலைக்கு அம்முனிவர் சென்றபோது, விநாயகர் காகமாக வந்து, அகத்திய முனிவரின் கமண்டலத்திலிருந்து நீரைக் கவிழ்த்தார். முனிவர் கோபம் கொண்டார். பிறகு முனிவரின் முன்பு விநாயகர் காட்சி கொடுத்தார். அகத்தியர் மிக்க மகிழ்ச்சியுடன் தலையின் மேல் கரம்கூப்பி வணங்கினார். மருதநிழலில் இருக்கும் யானையாகிய அந்த விநாயகரை வணங்குவோம். 11

## முருக வணக்கம்

திருமானை உரத்தில்வைத்துச் செகமானைப் புணர்வோனின்
தேசம் பூத்த
மருமானை, இருபாகப் பெம்மானைத் தந்தைஎனப்
பெறும்எம் மானைப்
பெருமானை எண்மானை, பொருமிகல் வேடர்குலப்
புனமான் முன்பு
வரும்ஆனை முகற்குஇளைய மலைமானின் வருமானை
வணக்கம் செய்வாம்.

திருமகளாகிய செல்வியை மார்பில் வைத்து, புவிமகளாகிய மானைப் புணர்ச்சி செய்பவர் திருமால். அவரின் கொப்பூழில் தோன்றிய பிரமனே உலகு இயற்றியவர். திருமாலின் மருமான்

முருகன். ஆண் பாதி பெண் பாதி என இருபாகம் கொண்ட பெம்மானாகிய சிவனாரைத் தந்தை எனப்பெற்ற எங்கள் தலைவர் முருகன். எளிய மான் போன்றவளும், மிகுதியாகப்போர் செய்பவர்களாகிய வேடர்களின் குலத்தில் பிறந்தவளுமாகிய வள்ளியின் பொருட்டுக் காட்டுமான் முன்பாகத் தோன்றிய வரும், யானைமுகவராம் விநாயகருக்கு இளையவரும், மலைமானாகிய உமையம்மையிடம் உதித்த வலிமையாளரும் ஆகிய முருகப் பெருமானை வணங்குவோம். 12

## நடராஜ வணக்கம்

வெள்ளி மால்வரைக் கயிலையில் வேதியன்
மால்முதல் விண்ணோர்க்கு
வள்ளல் நல்கிய படிஐந்து சபையினும்
மகத்துவம் மருதின்பால்
புள்ளி நாகனும் புலிப்பத முனிவனும்
போற்றிடப் பொதுமேவிக்
கள்ள லர்குழல் காணவே நடமிடும்
காரணன் கழல்போற்றி.

வெள்ளிமலை எனப்படும் கயிலைமலையில் பிரமன் திருமால் முதலாகிய தேவர்களுக்குப் பெருமான் வாக்குக் கொடுத்தபடி ஐந்து சபைகளிலும் (இரத்தினசபை, பொன் சபை, வெள்ளியம்பலம், தாமிரசபை, சித்திரசபை) நடனமாடு கிறார். அந்த ஐந்து சபைகளிலும் ஆடும் மகத்துவம் முழுதும் பொருந்தப் பதஞ்சலி முனிவரும், வியாக்ரபாத (புலிப்பத) முனிவரும் போற்றும்படியாகப் பொதுச்சபையில் (திருப்புடை மருதூரில்) தேன் பொருந்திய மலரணிந்த கூந்தலையுடைய உமையம்மை காணுமாறு நடனமாடுகிறார். அந்தக் காரணரின் திருவடிகளைப் போற்றுவோம். 13

## தட்சிணாமூர்த்தி வணக்கம்

நல்லோர் சூழ்ந்திட நயந்து சனகன்
முதல்நான் மறைகளெல்லாம்
வல்ல வர்க்கிசை யச்சொல் இறந்த
பொருளே தான்இதுவே
அல்லா தொன்றிலை அறிவர் என்றே
அருளால் அருள்செய்து
கல்லா லின்நிழல் அமர்ந்த கார
ணர்தம் பதம்போற்றி.

சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நல்ல சீடர்கள் நால்வரும் சுற்றி அமர்ந்திருக்க, நான்கு வேதங்களையும் முன்பே அறிந்து வல்லவர்களாக விளங்கிய அவர்களுக்கு, அவர்கள் மனம் ஏற்குமாறு 'சொல் இறந்த — வாக்குக் கடந்த வேதப்பொருள் தாமே; தாம் அன்றி வேதத்திற்கு வேறுபொருள் இல்லை; அறிவீராக' என்று, கருணையினால் உரைத்தவர் கல்லால மரத்தின் நிழலில் அமர்ந்திருக்கும் காரணர் ஆகிய தட்சிணாமூர்த்தி ஆவார். அவரின் பாதங்களைப் போற்றுவோம். 14

## நந்தீஸ்வரர் வணக்கம்

இந்திரனே முதலான
இறைவர்இமை யோர்கள்எலாம்
சந்திரசே கரர்தம்மைத்
தொழுசமையம் பெறுதற்காய்
மந்திரம்சூழ்ந்து இவர்மலர்த்தாள்
வணங்கிமகிழ்ந்து; இவர்வானைச்
சிந்தைகளிப் புறவணங்கச்
செய்தநந்தீ சுரர்பணிவாம்.

இந்திரன் முதலாகிய வேந்தர்களும் இமையவர்களும், சிவனை வணங்குவதற்குத் தத்தமக்கு நேர ஒதுக்கீடு பெறுவதற்கு, திருநந்தி தேவரின் திருவடி வணங்கி, மகிழ்ந்து ஆலோசனை கேட்பர். அப்பொழுது இவர்மேல் இவர்வான் (அமர்பவன்) தரிசினம் கிடைக்கும். ஆக, சிவதரிசனத்திற்கு வழி செய்த — மனம் களிக்க வணங்கச்செய்த நந்தீஸ்வரரைப் பணிவோம். 15

## பசுபதி வணக்கம்

கவள,யா னையை உரித்த
கறைமிடற்று ஆனை அன்னத்
துவளறு மறையோன் கற்பம்
தோற்றிடும் முன்னை, தொல்லை
தவர்,இறை, தருமம் எல்லாம்
தான்ஒரு வடிவாய்த் தோன்றிப்
பவனமால் விடையாய்த் தாங்கும்
பசுபதி பதங்கள் போற்றி.

கவளம் கவளமாக உணவு உண்ணும் யானையை உரித்துப் போர்த்துக் கொண்டவரும், திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சை உண்டதால் நீலகண்டம் பெற்றவரும், அன்னப்பறவையை

வாகனமாகக் கொண்ட மறையவன் (பிரமன்) கற்ப காலங்களை உண்டாக்குவதற்கு முன்பே பழமையான தவசிகள், இறை, தருமம் எல்லாம் ஒரே வடிவமாகத் தோன்றிய வெள்ளை ரிஷபம் தாங்குகின்றவருமாகிய பசுபதியின் பாதங்களைப் போற்றுவோம். 16

## பைரவ வணக்கம்

அரன்அருள் மைந்தர் நால்வர்க்(கு)
அமைத்தஆச் சிரமம் தன்னில்
கரிமுகன் பிரம சாரி;
காங்கயன் கிருக சாரி;
அரிஅர புதல்வன் வானப்
பிரத்தனே ஆகும்; யோகி
பரிஎகி னத்தின் மேவும்
பைரவன் தொழுது வாழ்வாம்.

*சிவனாரின் அருள் திருமக்கள் நால்வருக்காக அமைத்த ஆசிரமங்கள் நான்காகும். யானைமுகனாகிய பிள்ளை பிரம்மச்சரிய ஆசிரமத்தினர் ஆவார்; காங்கேயனாகிய முருகப் பெருமான் கிரஹஸ்த (இல்லற) ஆசிரமத்தினர் ஆவார்; அரிஹரன் ஆகிய ஐயப்பன் வானப் பிரஸ்த ஆசிரமத்தினர் ஆவார்; பரி எகினம் (குதிரை அன்னம்) எனப்படும் நாயை வாகனமாகக் கொண்ட பைரவர் யோகாஸ்ரமத்தினர் (துறவி) ஆவார். அந்தப் பைரவரை வணங்கி வாழ்வோமாக.* 17

## சாத்தனார் வணக்கம்

மாக்களை உகைத்துச் சேரர்
தோழரும் வஞ்சி நீங்கி
மேக்குயர் கயிலை எய்தி
விமலன்பால் அரசர் சாற்றும்
பாக்களைப் புவியில் தந்த
பண்புடைச் சாத்தன் தாளை
நாக்களால் பரவிப் போற்றி
நன்முடி தரித்து வாழ்வாம்.

*சேரமான் பெருமாள் நாயனாரும் அவருடைய தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும், வஞ்சி எனப்படும் திருவஞ்சைக் களத்திலிருந்து குதிரையின் மேலும், யானையின் மேலும் ஏறி மேல் நோக்கி விண்வழியாகச் சொர்க்காபுரிக் கயிலாயத்திற்குச் சென்றார்கள். அப்படிப் போகும்போது 'தானெனை முன்*

படைத்தான்' எனத் தொடங்கும் பதிகத்தைச் சுந்தரரும், அந்தாதி இலக்கியத்தைச் சேரமானும் பாடினர். அவர்களுடன் சென்று அவர்கள் பாடிய பாடல்களை உலகத்துக்கு எடுத்து வந்தவர் பண்புமிகுந்த சாத்தனார் ஆவார். அவருடைய திருவடிகளை யாவரும் தத்தம் நாவுகளால் வாழ்த்திப் போற்றி, நல்ல சிரசில் அணிந்து வாழ்வோம். 18

## இந்திர வணக்கம்

பொருதுகா னவனை மாய்த்துப்
புகர்கொடு புவியில் சார்ந்து
சுரர்குரு விதித்த வாறே
தாரகே சுரத்தில் வந்து
மருதினில் தவம்செய்து, அன்பால்
மனுவர தனைப்பூ சித்துப்
பிரமதோ டத்தை நீங்கும்
புனிதனைப் பேணி வாழ்வாம்.

காட்டில் உலாவிய விருத்திராசுரன் என்ற அரக்கனை அழித்து, காசிபரின் வேள்வியில் தோன்றிய அவனை அழித்த தால் பிரமஹத்திபற்ற மண்ணுலகிற்கு வந்து, தேவ குருவாகிய வியாழபகவானின் கட்டளைப்படி தாரகேஸ்வரம் எனப்படும் திருப்புடைமருதூரில் மருதமரத்தில் தவம் செய்து, ஆதிமனுவுக்கு வரம் தந்தவராகிய நாறும்பூநாதரை அன்புடன் பூசித்துப் பிரமதோஷம் நீங்கப் பெற்றவனாகிய புனிதன் தேவேந்திரன் ஆவான். அவனைப் போற்றி வாழ்வோம். 19

## திருஞானசம்பந்த வணக்கம்

பாந்தராய் அருள்சிவசம் பந்தராய் உமைமுலைப்பால்
பரிந்துண் பாராய்ச்
சாந்தராய் மறையவராய்ச் சைவபரி பாலகராய்த்
தலைவ ராய்மன்
காந்தராய் உறைபவர்பால் கருத்தராய் மணம், வாது
கடந்தா ராய்,நன்
பூந்தராய் தனில்ஞானப் புனிதராய் வந்தவர்தாள்
போற்றி வாழ்வாம்.

பொருத்தம் உள்ளவராகவும், அருள்வடிவான சிவசம்பந்தம் உள்ளவராகவும், உமையம்மையின் திருமுலைப்பாலைப் பரிவு டன் உண்பவராகவும், சாந்தம் உள்ளவராகவும், வேதியராக வும், சைவசமயத்தைப் பரிபாலிப்பவராகவும், தலைவராகவும்,

நிலைபெற்ற ஈர்ப்பு உள்ளவராகிய சிவனையே கருதுபவராகவும், திருமணத்தில் மோட்சம் பெற்றவராகவும், அனல்புனல் வாது களில் வென்றவராகவும், நல்ல இப்பூவுலகில் ஞானப் புனித ராகவும், வந்தவராகிய திருஞான சம்பந்தரின் திருவடிகளைப் போற்றி வாழ்வோம். 20

## நாவுக்கரச வணக்கம்

அந்தரர் முதலோர் உய்ய
ஆழிநஞ் சமுதம் உண்ட
கந்தரன் போல அன்னோன்
கருணையால் அமண்கார் ஆழி
தந்தநஞ் சமுதம் உண்டு
தரணியில் சைவம் ஓங்க
வந்தருள் கின்ற நாவுக்
கரசரை வழுத்தி வாழ்வாம்.

தேவர்கள் முதலாக யாவரும் உய்யும்பொருட்டுத் திருப்பாற் கடலில் தோன்றிய விஷத்தை அமுதம் போலக் கருதி உண்டார் சிவபெருமான். அந்த நீலகண்டரைப்போல, அவருடைய கருணை யினால் — கருப்புமனம் படைத்த சமணர்கள் கடல்போல் திரண்டு, கொடுத்த விஷத்தை 'நஞ்சும் அமுதாகும் நாதன் அடியார்க்கு' என்று சொல்லி உட்கொண்டவர் நாவுக்கரசர். உலகத்தில் சைவம் செழிக்க வந்தவர் — அருள்கின்றவர் நாவுக்கரசர். நாவுக்கரசரை வாழ்த்தி வாழ்வோம். 21

## சுந்தர வணக்கம்

அடிமுடி இருவர் தேடி
அளவிடற்கு அரியார் தம்மைத்
தொடர்வுடைப் பதிகம் பாடித்
தோழமை யாகக் கொண்டு
படியினில் பரவை ஊடல்
பரிந்திடத் தூது கொண்ட
முடிவிலா நாவ லூரன்
முளரிஅம் பதங்கள் போற்றி.

சிவனாரின் திருவடிகளைத் தேடப் பிரமன் அன்னப் பறவையாகிப் பறந்தார். சிவனாரின் திருவடிகளைத் தேடத் திருமால் பன்றியாகி நிலத்தைத் தோண்டினார். இருவராலும் திருமுடியையும் திருவடியையும் காணமுடியவில்லை. இவ்வாறு

அளவிடமுடியாத சிவனைத் தொடர்ச்சியான பதிகப் பாடல்கள் பாடித் தோழனாகக் கொண்டவர் சுந்தரர். அவர் இந்த உலகத்தில் — திருவாரூரில் பரவை நாச்சியாரின் ஊடல் தீர்வதற்காகச் சிவனைத் தூது செல்ல வைத்தார். இந்த அரும் செயலால் முடிவில்லாத புகழைக்கொண்ட நாவலூரரராகிய சுந்தரரின் தாமரை போன்ற திருவடிகள் போற்றி. 22

## மாணிக்கவாசக வணக்கம்

நாவல்ல தமிழால் இந்த
நல்தல உண்மை தன்னைப்
பூவல்லிப் பதிகம் தன்னில்
பொந்தைநாம் பரவி என்று
பாவணி வாச கத்தில்
பாடிய வாத வூரர்
சேவடி கமலப் போதைச்
சிந்தித்தெப் போதும் வாழ்வாம்.

நாவாற்றலில் வல்ல தமிழினாலே ‘நல்ல தலமாக’ இந்தத் திருப்புடைமருதூர் இருக்கும் உண்மையைத் திருவாசகத்தில் திருப்பூவல்லி என்ற பதிகத்தில், ‘பொந்தைப் பரவி’ எனக் குறிப்பிட்டு, அழகிய பாட்டுப் பாடிய திருவாதஊரர் என்னும் மாணிக்கவாசகரின் சிவந்த திருவடித் தாமரைகளை எப்போதும் சிந்தித்து வாழ்வோம். 23

• ‘பொந்தைப் பரவி’ என்ற தொடர் அமைந்துள்ள திருவாசகம்
“எந்தைஎந் தாய்சுற்றம் மற்றும்எல்லாம் என்னுடைய
பந்தம்அறுத்து என்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த ஷிடைமருதில் ஆனந்தத் தேன்இருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ”
(திருவாசகம் 276 திருப்பூவல்லி 2)

இப்பாடலில், ‘அந்த விடைமருதில்’ என்பதை அந்த இடைமருதில் எனப் பிரித்து, ‘இடைமருதூர்’ என்னும் தஞ்சை மாவட்டத் தலத்தைக் குறித்ததாகப் பொருள் கொள்வர். மருதமரப் பொந்தில் பெருமான் எழுந்தருளிக் காட்சி கொடுப்பது திருப்புடைமருதூரில் மட்டுமேயாகும். எனவே, அந்த விடை (ரிஷபம்) மருதில்’ என்ற தொடரைப் பிரிக்காமல் பொருள்கொள்ள வேண்டும்.

இப்பாடல், இடைமருது என்னும் தலத்தைக் குறிப்பதாகக் கொள்ளும்போது, ‘பாண்டிப்பிரான்’ என்ற எழுவாய்க்கும், ‘தேன்

இருந்த பொந்து' என்பதற்கும் வலிந்து பொருள்காணவேண்டியுள்ளது. அந்த விடை = அழகான காளை; மருதப்பொந்தில் சிவலிங்கத்தை இத்தலத்தில் இன்றும் தரிசிக்கலாம்.

ஆன்உறுகொன் றைக்கடவுள் சசிகாண அருச்சுனத்தில்
உதயம் ஆகித்
தான்அரிய கோடரத்தில் சிவலிங்க வடிவாகத்
தான்கண்டானே. (இந்திரன் பழிதீர்த்த படலம் 34)

கோடரம் = மரப்பொந்து.

## திருத்தொண்டர் வணக்கம்

தாதைதாள் தடிந்து பெற்ற
சண்டிநா யகர்தாள் போற்றி
பூதிசா தனம்பு ரந்த
கோதையார் பொன்தாள் போற்றி
மாதொரு பாகர்க்கு அன்பாம்
வரம்பினால் தொழும்பு செய்யும்
நாதராய் இருந்த தொண்டர்
நாயன்மார் சரணம் போற்றி.

தந்தையின் தாளை வெட்டி, அக்கொடுஞ்செயலாலும் நன்மைபெற்ற சண்டேசர் என்னும் தலைவரின் திருவடிகள் போற்றி! திருநீறு என்னும் சிவசாதனத்தை மிகமதித்துப் பாதுகாத்த பெருமாக்கோதையார் எனப்பட்ட சேரமான் பெருமாள் நாயனாரின் திருவடிகள் போற்றி! உமையை ஒரு பாகத்தில் கொண்ட சிவனுக்கு, அன்பு என்பதை எல்லையாகக் கொண்டு அடிமைத்திறம்பூண்டு, அதனால் தலைமைபெற்று விளங்கிய நாயன்மார்கள் சரணம் போற்றி! 24

## அகத்திய வணக்கம்

செந்தழல் புரையும் மேனிச்
சிவனருள் வரத்தி னாலே
விந்தவெற்பு அடக்கி, விண்ணோன்
வேண்டுதற்கு அங்கை யாலே
உந்துவார் திரைஅ டக்கி
உலகெலாம் நிலைபெற்று ஓங்கச்
சந்தவெற்பு அதனில் வந்த
தமிழ்முனி சரணம் போற்றி!

*செந்தீப் போன்ற சிவந்த திருமேனியை உடைய சிவ பெருமான் கொடுத்த வரத்தால் விந்தமலையை அடக்கி, தேவர் தலைவன் வேண்டியபடி உந்தியெழும் அலைகளையுடைய கடலை உள்ளங்கையில் அடக்கி, உலகமெல்லாம் நிலைபெற்று ஓங்கும்படியாக, மணம் பொருந்திய சந்தன மரங்கள் செழித்த மலையாகிய பொதிகை மலைக்கு வந்து தங்கிய தமிழ்முனிவராகிய அகத்தியரின் திருவடிகள் போற்றி! 25*

## கருவூர்ச்சித்த வணக்கம்

சிந்தை யால்சிவம் மூழ்கி அழைத்திட
எந்தை சாய்ந்தவர் 'ஏன்'என்று எதிர்மொழி
'உந்தி காட்டும் வழிஉறு வாய்'என
வந்தி டும்கரு வூரனை வாழ்த்துவாம்.

*மனத்தினால் சிவத்தில் மூழ்கி, அச்சிவத்தைக் கருவூரார் அழைத்தார். தந்தையாகிய சிவன் மெய்சாய்ந்து, ஏன் என்று கேட்டதுடன், 'பொருனைநதி நீரின் நீர்ச்சுழி காட்டும் வழியில் வந்து சேர்க' என்றும் அருள் செய்தார். அவ்வாறே திருப்புடை மருதூர்க்கு வந்த கருவூர்ச் சித்தரை வாழ்த்துவோம். 26*

## மனுவணக்கம்

எந்தை பூத்துஇவர் தற்குஇ சைந்திட
வந்து கோயில் திருப்பணி வாய்ப்புடன்
உந்த வேசெய் மனுகுல உத்தமன்
கந்த நாள்மலர்ப் பாதம் கருதுவாம்.

*என் தந்தையாகிய சிவபெருமான் தானே தோன்றி அமர்வதற்கு ஏற்றவாறு, திருக்கோயில் திருப்பணியைப் பிறவிக்குக் கிடைத்த வாய்ப்பாக உத்வேகத்துடன் மனுகுலத்தின் உத்தமனாகிய ஆதிமனு என்பவன் செய்தான். அவனின் மணம் பொருந்திய அன்றலர்ந்த மலர்போன்ற பாதங்களை மனத்தில் நினைப்போமாக. 27*

## கலைமகள் துதி

வெள்ளை மேனியில் வெண்மலர் மாலையும்
வெள்ளை ஆடையும் வெண்பணி யும்புனை
வெள்ளை ஓதிம வேதியன் நாவில்வாழ்
வெள்ளை வாரிசத் தாள்பதம் வேண்டுவாம்.

தி3.

வெண்மையான திருமேனி கொண்டவள் கலைமகள். அவள் வெண்மையான மலர் மாலையையும், வெண்மையான பட்டாடையையும், வெண்மையான முத்தணிகளையும் அணிந்தவள்; வெள்ளை அன்னப்பறவையை வாகனமாகக் கொண்ட பிரமனின் நாவில் வாழ்பவள். வெள்ளைத் தாமரைப்பூவில் வீற்றிருக்கும் அவளின் திருவடிகளை வணங்கி, நம் வேண்டுதல்களைக் கேட்போம். *28*

## திருப்பணி செய்பவர்களுக்கு வணக்கம்

பன்னும் வேதப் பரமற்குப் பத்தியாய்
மன்னு கின்ற திருப்பணி மாண்புடன்
நன்ன லம்கொளச் செய்திடு நாயன்மார்
பொன்னம் பொற்கழல் போற்றிப் புனைகுவாம்.

பலகாலும் ஓதப்பெறும் வேதங்களின் பொருளான பரமேஸ்வரனுக்குப் பக்தியுடன் நிலைபெற்ற திருப்பணிகளைச் சிறப்புடனும், நன்மை விளையும்படியாகவும் செய்கின்ற நாயன்மார்களுக்கு ஒப்பான தலைவர்களின் பொன்போன்ற திருவடிகளைப் போற்றி, அத்திருவடிகளைச் சிரமேற் கொள்வோம். *29*

ஆகத் திருவிருத்தம் – 29

# 2. பாயிரம்

மாத வன்,சுகன் கேட்க மகிழ்வுடன்
வேதம் மேவும் வியாசன் அருளிய
காதை யைத்தவ யோகர் கழறுஎன
சூத மாமுனி சொல்லல்உற் றான்அரோ.

*பெரிய தவசியாகிய சுகர் என்ற முனிவர் கேட்டுக் கொண்டதற்காக, வேதங்களின் கரைகண்டவராகிய வியாசர் மகிழ்ச்சியுடன் அருளிச்செய்த கதையைத் தவயோகர்களாகிய நைமிசாரண்ய முனிவர்கள் வேண்டிக்கொண்டதற்காகச் சூதமா முனிவர் கூறியவையே புராணங்கள் ஆகும். 1*

பதினெண் நூலில் பரன்இயல் பத்தினுள்
கதிவி ளங்கிய சைவத்தில் தோன்றிய
மதித ரும்நதிச் சேத்திர வைபவ
விதியின் தோன்றிஇக் கதை விரிந்தவே.

*புராணங்கள் பதினெட்டு. அவற்றுள் சிவனைப் பற்றிய புராணங்கள் பத்து. நற்கதி விளங்கும்படி சைவத்தில் தோன்றிய அறிவுதரும் நதிக்கரைத் தலபுராணங்கள் என்னும் மங்களகரமான விதியின்படி, இத்திருப்புடைமருதூர்ப் புராணக்கதை தோன்றி விரிவடைந்தது. 2*

சொல்லும் இவ்வியல் தூய பொருனைசூழ்
மல்லல் அம்பதி மன்னு புடார்ச்சுனச்
செல்வன் செய்கை செறியும் கருத்துள
பல்பெ ரும்புகழ் பாலித்த பான்மையே.

*கதைசொல்லும் இப்புராணம், தூய்மையான பொருனை நதிசூழ்ந்த, செல்வம் செழித்த, அழகான, நிலைபெற்ற புடார்ச்சுனத்தில் எழுந்தருளியுள்ள நாறும்பூநாதரின் திருவிளையாடல்கள் செறிந்த கருத்துள்ள பல பெரிய புகழ்தரக் கூடிய தன்மை உடைய நூலாகும். 3*

## நூற்பயன்

பொருவி லாதஇச் சரிதையைப் போற்றுவோர்
கருது நாற்பயன் எய்துவர் நற்கதி
தரும்இக் காவியம் சாற்றுநர் கேட்குநர்
பெருமைச் சைவ சமயப்ர தாபரே.

ஒப்புமை கூறஇயலாத இந்த வரலாற்று நூலைப் போற்றுபவர்கள், எந்த நற்பயனை விரும்புகிறார்களோ அதை அடைவார்கள். நற்கதி கொடுக்கும் இக்காவியத்தை விரிவுரை செய்பவர்கள், அவ்விரிவுரையைக் கேட்பவர்கள், பெருமைமிகுந்த சைவசமயத்தில் மிகுபுகழ் பெறுவார்கள். 4

## நூல் தோன்றிய வரலாறு

'ஏற தேறும் இறைவனின் கீர்த்தியை
கூறு கின்ற வடபதக் கொள்கையைத்
தேறி, மெய்அரு ளால்முனி செப்பிய
மாறி லாத திராவிட வாய்மையால்,

முதிய பா,விருத் தம்,துறை முற்றுற
விதியி னால்,உரை! என்று விரும்பி,இப்
பதியி னில்பெரி யோரும்அ யல்பதி
மதியி னில்பெரி யோரும் வகுத்தனர்.

'நல்லது' என்றுஇவை காரணம் நாட்டியே
எல்லை நான்குடன் பயிலும் இயல்தமிழ்ச்
சொல்லி னால்தமி யேன்செயச் சூழுதல்
கல்அ ணைக்குஅணில் செய்பணி காட்டுமே.

'காளையை வாகனமாகக் கொண்டு ஏறும் சிவபெருமானின் மிக்க புகழை, அவனின் உண்மையான அருளால் சூத முனிவர் வடமொழியில் சொன்ன கொள்கைகளை, வடமொழியில் கற்றுத் தெளிந்து, மாற்றம் இல்லாத மெய்ம்மையான திராவிட மொழியில், 5

முதிய பாவாகிய தாழிசை, விருத்தம், துறை, ஆகிய வகைகளில் புராணம் முழுமையாக விதிப்படியே சொல்லுக என்று, விருப்பத்துடன் இந்தத் திருப்புடைமருதூரில் உள்ள பெரியவர்களும், மற்ற ஊர்களில் உள்ள அறிவிற் சிறந்த பெரியவர்களும் எனக்குக் கட்டளையிட்டார்கள். 6

நானும் 'நல்லது' என்று சொல்லி, அவர்களின் கட்டளைகளையே இந்நூல் தோன்றக் காரணமாக வைத்தேன். வடவேங்கடம், தென்குமரி, கிழக்கே கடல், மேற்கே மலை என முன்னோர் கூறிய எல்லைக்குள் பயிலுகின்ற இயல்தமிழ்ச் சொற்களால், எளியவனாகிய நான் இந்நூலை இயற்றத் தொடங்கிய செயல், இராமர் கல்லால் அணைகட்டியபோது அணில் ஈரஉடம்பில் மணல்எடுத்து உதவியதைக் காட்டுவதாகும். 7

# 3. அவையடக்கம்

ஆணிப் பொன்அமை யும்பணி இவ்விடம்
பூணற்கு என்றுஅறி யேன்,புகல் சொல்கலை
வாணர்க்கு ஒவ்வில வேனும்என் வான்சொலைப்
பேணிக் கொள்க பெரியோர் பெருமையால்.

*ஆணிப் பொன்னால் செய்த ஆபரணங்களை இந்த இந்த இடத்தில் இதையிதை அணியவேண்டும் என்று அறியாதவன் நான். (சொற்களையும் எந்த எந்த இடத்தில் இடவேண்டும் என அறியாதவன்) நான் சொல்லும் சொற்கள் கலைவாணர்களுக்கு ஏற்பின்றி அமைந்தாலும், என்னுடைய உயர்ந்த சொற்களைப் பெரியவர்கள் பெருந்தன்மையுடன் பாதுகாத்து ஏற்றுக்கொள்வர்.* 1

மணியினால் கனகம் தன்னால்
வழங்குறும் பணி;ம திப்போர்
அணிஉலோ கத்தால் மற்றால்
அமைபணி அகற்று வாரோ?
பணிமிகச் செய்யாப் பொன்னும்
பைம்பொனே அதுபோல் ஈசன்
துணிவுடைக் கீர்த்தி என்று
துகள்அறுத்து உட்கொள் வாரே.

*நவமணிகளால், தங்கத்தால் ஆபரணங்கள் செய்வார்கள். மதிப்பும் அழகும் உடைய மணிகளை — கனகத்தை வேறு உலோகத்துடன் பொருத்தி ஆபரணம் செய்தால், அவற்றை யாரும் அகற்றுவார்களா? ஆபரணமாக வேலைப்பாடு செய்யாத பொன்னும் பொன்தான். அதைப்போலச் சிவனின் பராக்கிர மங்களை — புகழைச் சொல்லும் இந்நூலைச் சொற்கள், வடிவமைப்பு ஆகியவற்றைக் கருதாமல் சொல்லப்பட்ட பொருளின் மதிப்பால், ஆன்றோர்கள் மனத்தில் பதித்துக் கொள்வார்கள்.* 2

எலும்புவெண் தலைஎ ருக்கோடு
ஏனக்கொம்பு ஆமை யின்நன்
கலம்பல அன்றி நஞ்சுஆர்
கண்செவி கங்கை கண்டத்து

இலங்கவே இவைஅணிந்தார்க்கு
ஏழையேன் உரைக்கும் புன்சொல்
அலங்கலும் புனைவார் என்றே
அதுவும்ஓர் உறுதி தேர்ந்தேன்.

புன்மையான சொற்களால் மாலைபோல, ஏழையாகிய நான் தொடுத்த இதனை, இறைவன் ஏற்று அணிவான் என நான் ஒருவகையில் உறுதியாக நம்புகிறேன். எப்படியென்றால், பயனற்ற பொருட்களையெல்லாம் அலங்காரப் பொருட்களாக அணிபவன் இறைவன். எலும்பு, வெள்ளை மண்டை ஓடு, எருக்கு, பன்றிக்கொம்பு, ஆமை என்னும் இந்த நல்லா பரணங்கள் மட்டுமன்றி விடம்பொருந்திய, கண்ணையே செவி யாகக் கொண்ட பாம்புகளையும் அணிபவன். கங்கையைத் தலையில் கொண்டவன். விஷத்தைக் கண்டத்தில் கொண்டுள் ளான். எனவே, என் கவியையும் ஏற்பான். 3

ஆகத் திருவிருத்தம் – 39

## 4. திருக்கயிலாயச் சிறப்பு

மெய்யர் மெய்யினில் பூசும்வெண் ணீறுபோல்
துய்ய பான்மையில் தோன்றும் கயிலையே
வையம் ஈன்றருள் வாலை உமையுடன்
வையம் வீற்றிருக் கும்திரு ஆலயம்.

உண்மையான அடியவர்கள் உடம்பெல்லாம் திருநீறு பூசிக்கொண்டு, வெண்மையாக இருப்பார்கள். அவர்களைப் போல, வெண்மையாகக் காட்சி கொடுப்பது கயிலாய மலை. உலகத்தை எல்லாம் ஈன்ற அருட்சக்தியாகிய — குமரியாகிய உமா தேவியுடன் நம் தலைவர் விற்றிருக்கும் ஆலயம் திருக்கயிலாய மலையே ஆகும்! 1

புகழ்உ ருக்கொண்டது எனப்பவப் பூதரம்
துகள்இ லாதவர் சிந்தையில் தோன்றும்ஓர்
சகள மாக நிறைந்திடும் தாபரம்
நிகளம் தீர்அயி ராவணம் நிற்பது.

புகழ், ஓர் உருவம் கொண்டதைப் போலத் தோன்றிய கயிலாயமலை, குற்றம் இல்லாதவர்களின் சிந்தையில் ஒப்பற்ற உருவாக நிறைவுடன் விளங்கும். விலங்கு என்ற நிலை இல்லாத அயிராவதம் என்னும் வெள்ளையானை, இம்மலையில் தஞ்சமடைந்து நிற்கும். 2

மற்றை மாவும் பகைஇன்றி வாழ்வது
சுற்றும் தேவர் முனிவர் துதிப்பது
பற்றி லாதவர் பற்றும் பதிஅது
கற்ற வர்பர வும்கயி லாயமே.

யானை மட்டுமன்றிப் பிற விலங்குகளும் பகையின்றி வாழும் இடம் கயிலாயம் ஆகும். இம்மலையைச் சுற்றித் தேவர்களும் முனிவர்களும் துதிப்பார்கள். பற்றற்றவர்களின் பற்றுக்கோடான திருத்தலம் இதுவாகும். கயிலாயம், கற்றவர்கள் துதி செய்வதாகும். 3

போற்று கின்றஇப் பூதரம் தன்னிலே
ஏற்று கந்த இறைவர்தம் கோயிலில்

சாற்று கோபுரம் சூழ்சந்நி தானத்தில்
மாற்றம் இல்லதோர் மானத வாவியே.

*இப்பூவுலகத்தில் காளையை வாகனமாகக் கொண்டு மகிழ்ந்த இறைவனின் திருக்கோயில்கள் யாவுக்கும் திருக்கயிலாயமே, போற்றுகின்ற கோபுரமாகும். அக்கோபுரத்தின் திருமுன்னிலையில் மானசரோவர் என்ற ஏரி, மாற்றமில்லாமல் உள்ளது.* 4

அந்தத் தீர்த்தத்து அருகில் அணிபெறும்
சந்தம் மேவும் தமனியத் தால்பொலிந்து
உந்தும் ஆயிரக் கால்மண் டபம்உளது
எந்தை அன்பர்கள் எய்தும் இருப்பிடம்.

*அந்த மானசரோவர் தீர்த்தத்தின் அருகில், அழகானதும் மணம் வீசுவதுமான — தங்கத்தாலான, அழகால் ஆசையைத் தூண்டும் ஆயிரங்கால் மண்டபம் ஒன்று இருக்கிறது. அது எம் தந்தையாகிய சிவனின் அன்பர்கள் சேரும் இருப்பிடமாகும்.* 5

## சூதமுனிவர் புராணம் சொல்லுதல்

மன்னும்மண் டபத்துஆ லின்கீழ்
வதிந்துஅரன் தனக்குஓர் வைகல்
சொன்னநூற் பொருளை முன்னம்
சூர்தடிந் திடும்வேல் கந்தன்
அன்னைதன் மடியில் எய்தி
அனைத்தும்தேர்ந்து அதனை அன்பால்
துன்னிய சனற்கு மாரர்
அகத்தியர் தமக்குச் சொன்னார்.

*அந்த மண்டபத்தில் சனற்குமாரர் என்ற முனிவர் அகத்தியருக்குப் புராணக் கதைகளைச் சொன்னார். அவை, ஆலின்கீழ் அமர்ந்த சிவன் ஒருநாள் உமாதேவிக்குச் சொன்னவையாகும். சூரசம்ஹாரம் செய்த முருகனை மடியில் அமர்த்தி, அன்னையாகிய உமாதேவி, சிவன் சொன்ன புராண நூற்பொருளை எல்லாம் சொன்னார். முருகன் அன்புடன் தன்னை அடைந்த சனற்குமாரருக்குச் சொன்னார். (சனற்குமாரர் அகத்தியருக்குச் சொன்னார்.)* 6

சொல்லிய பொருளை எல்லாம்
துரிசுஅறு சனற்கு மாரன்
நல்லவி யாசர்க்கு ஓத
நயப்புடன் தெளிந்துஅன் னானும்

**கல்விசேர் சூதர்க்கு ஓத,**
**சூதமா முனிவன் கற்றுப்**
**பல்பெரு முனிவர்க்கு ஓதப்**
**பயன்பெறு முனிவன் ஓர்கால்...**

*அகத்தியருக்குச் சொன்ன புராணப் பொருளையெல்லாம், குற்றமற்ற சனற்குமாரர், நல்ல வியாசமுனிவருக்குச் சொன்னார். விருப்பத்துடன் அவற்றைக் கேட்ட வியாசமுனிவர் தெளிவாக, கல்வியறிவு வாய்த்த சூதமுனிவருக்குச் சொன்னார். அந்த மகாமுனிவர், அப்புராணப் பொருளை நன்கு தெளிந்த பெரியவர்களாகிய பல முனிவர்களுக்குச் சொன்னார். வியாசரிடன் பயன்பெற்ற சூதமுனிவர், ஒருகாலத்தில் மண்ணுலகிற்கு வந்தார்.* 7

**பூதலம் தனில்சி றந்த**
**நைமிசா ரணியம் போந்தான்**
**மாதவம் இயற்றி அங்஗ன்**
**வதிகின்ற மௌன யோகர்**
**போதக வாணர் போத**
**சாதகர் பொய்யைக் காய்ந்தோர்**
**ஆதலம் பெருகு பக்ரி**
**மரீசியோ டயக்கி ரீவர்,**

*உலகத்தில் சிறந்த இடமாகிய நைமிசாரணியம் என்னும் காட்டுக்கு வந்தார். அங்கே தவம் செய்தார். அக்கானகத்தில் தங்கியிருந்த மௌனயோகர் போதகவாணர், போதசாதகர், பொய் பேசினால் கோபப்படும்படியான, ஒளி பெருகிய பக்கிரி, மரீசி, அயக்கிரீவர்,* 8

**காசிபன், சாது கன்னன்**
**கர்க்கன்,கண் ணுவன்,வ சிட்டன்**
**பேசுமுற் கலன்,சி லாதன்**
**முனிசங்கன், பிருகு,உத் தங்கன்**
**கோசிகன், பரத்து வாசன்,**
**கோதமன், குமுதன், பார்க்கன்**
**மாசுதீர் முனிமார்க் கண்டன்**
**முதலிய மாத வத்தோர்...**

*காசிபர், சாது கன்னர், கார்க்கர், கண்ணுவர், வசிட்டர், புகழ் பேசத்தக்க முற்கலர், சிலாதர், சங்கமர், பிருகு, உத்தங்கர், கௌசிகர், பரத்துவாசர், கௌதமர், குமுதர், பார்க்கவர், குற்றம் தீர்ந்த முனிவராகிய மார்க்கண்டர் முதலிய பெரிய தவசி களுடன்,* 9

பன்னகா பரண யோக
சமரசப் பருதி வாணர்
தன்னையாற்று இருபோது அற்ற
இடத்தினில் சயனம் உற்றோர்
சொன்னவே தாக மத்தோர்
சுயம்பிர காச நீரார்
மன்னுமா சற்றோர் யாரும்
எதிர்கொடு வந்து சூழ்ந்து...

நாகாபரணம் பூண்ட யோக சமரசப் பருதிவாணர், நைமிசாரணிய வனத்தில் ஓடும் ஓர் ஆற்றில், பகலிரவு அற்ற இடத்தில் படுத்துத் தவம் செய்பவரும், வேதாகமம் சொன்னவருமான சுயப்பிரகாசர் ஆகிய நிலைபேறு உடையவர்களும், குற்றமற்றவர்களுமாகிய யாவரும் சூதமுனிவரை எதிர்கொண்டு வரவேற்றுச் சூழ்ந்து நின்றார்கள். 10

பாதங்கள் பரவி யோக
ஆதனம் இட்டுப் பண்பால்
போதுடன் சாந்தம் கந்தம்
அருக்கியம் புனலால் போற்றிக்
கோதிலா முகமன் கூறிக்
கரையிலாக் குணங்கள் பேசி
மாதவ முறையால் வாழ்த்திச்
சூதரை வணங்கிக் கேட்பார்.

நைமிசாரணிய முனிவர்கள், சூத முனிவரின் திருவடிகளை வணங்கினார்கள். உட்காருவதற்கு யோக ஆசனம் இட்டார்கள். மலர்கள், சந்தனம், மணப்பொருள் கலந்த நீரால் அர்க்கியம் — மந்திர நீரிறைத்தல் — செய்து வழிபட்டார்கள். குற்றமில்லாத உபசார வார்த்தைகள் சொன்னார்கள். சூதமுனிவரின் எல்லையற்ற குணங்களைப் புகழ்ந்து பேசினார்கள். பெரிய தவமுறைகளால் வாழ்த்தினார்கள். சூதமுனிவரை வணங்கிக் கீழ்வருமாறு கேட்டார்கள். 11

நாங்கள்செய் தவத்தால் இங்஥ன்
நண்ணினீர் நம்பன் கீர்த்தி
ஓங்கிய மேன்மை யான
சிவத்தல உண்மை எல்லாம்
பாங்கினில் உரைத்தீர் முன்னும்
இன்னமும் பருக ஆசை
தீங்கிலாத் தலவி சேடம்
தீர்த்தம்நின் மலவி சேடம்...

*சுயம்பிரகாசர், சூதமுனிவரை நோக்கி, 'நாங்கள் செய்த தவத்தால் இங்கு வந்தீர்கள். முன்பும் பல முனிவர்களுக்குச் சிவனின் கீர்த்தி, உயர்ந்த மேன்மையான சிவத்தலங்களின் இருப்பிடம் ஆகியவற்றைப் பக்குவமாகச் சொல்லியுள்ளீர். அவற்றைக் கேட்டும், இன்னமும் பருகவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. தீங்கில்லாத தலவிசேடங்களையம், தீர்த்த விசேடங்களையும், ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்களற்றவராகிய மூர்த்தி விசேடம்... 12*

மூவகை ஒருங்கு மொய்த்த
முன்னவன் பதிவி சேடம்
மாவுள மனையீர் எங்கட்கு
அருள்செல்வீர் என்ன, அன்பாய்
மேவிய தவ,வி யாசர்
விருப்புடன் உரைத்த வாறே
தாவிலா மகத்வம் ஆன
சரித்திரம் சாற்று கேமால்.

*மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றின் சிறப்புகளும் ஒரு சேரக் கவ்வியிருக்கும் ஊர்ச் சிறப்புகளை, செல்வம் தங்கிய குடிலைக்கொண்ட முனிவரே! எங்களுக்குச் சொல்லியருள வேண்டும்! என்று கேட்டவுடன், சூதமுனிவர், 'அன்புடன் பொருத்தமாகத் தவவியாசர் விருப்பத்துடன் எனக்குச் சொன்னபடியே குற்றமற்ற புனிதப்பெருமையான சரித்திரத்தைச் சொல்கிறேன். 13*

## புராணங்களின் வரலாறு

பகுத்திடும் சுருதி நான்கில்
பரப்பிய பொருளின் உண்மை
இகத்தவர்க் காக மூவாறு
இயம்பிய புராணம் தன்னில்
சகத்தைஉண் டவர்க்கு நான்காம்
சதுமுகற்கு இரண்டாம் சண்ட
முகத்துடன் இரவி தீக்குஒன்
றொன்றதாய் மொழிந்தது இன்னும்

*நான்காகப் பகுக்கப்பட்ட வேதங்களில் விரிவு செய்த உண்மை, மண்ணுலகத்தவர்களுக்காகப் பதினெட்டுப் புராணங் களாகச் செய்யப்பெற்றன. அவற்றில் உலகத்தை உண்டவராகிய திருமாலுக்கு நான்கு புராணங்கள், நான்முகனுக்கு இரண்டு புராணங்கள், சண்டமுகன் என்னும் சூரியனுக்கும்*

அக்கினிக்கும் ஒவ்வொரு புராணம் எனப் பகுக்கப்பட்டது. மேலும்... 14

முன்னவர் புராணம் பத்தில்
முதல்சைவ நூல்மொ ழிந்த
பன்னுசங் கிதையில் ஒன்று
பரமசங் கிதையின் காண்டம்
சொன்னநான் கதனில் சேத்ர
வைபவச் சுருதி தன்னில்
தென்னிலம் அதனில் காசிச்
சேத்திரம் ஒன்றுண் டாமால்.

முதற்கடவுளாகிய சிவனுக்குரிய புராணங்கள் பத்தில், முதலாகிய சிவபுராணத்தில் விரிவான பல பிரிவுகளில் பரம சங்கிதை என்பது ஒன்று. அதில் நான்காம் காண்டத்தில், "க்ஷேத்திர வைபவம்" என்ற பகுதி உள்ளது. அதில் 'தென்னாட்டில்' 'காசிச்சேத்திரம்' ஒன்று உண்டு என வருகிறது. 15

அத்தலம் புடைசேர் கின்ற
அருச்சுனம், அதனில் வேத
வித்தக முனிவர் நீவிர்
விருப்புடன் வேண்டு கின்ற
உத்தமப் பொருள தான
உயர்பதி, தீர்த்தம், ஈசன்
நீத்திய விசேட மாக
நிகழ்வது; நிகழ்த்து கேமால்.

தட்சிணகாசி எனக்குறிப்பிடப்படும் அந்தத் தலம் திருப்புடை மருதூர் ஆகும். வேதங்களில் வித்தகர்களும், முனிவர்களுமாகிய நீங்கள் மிக்க ஆசையுடன் வேண்டிக் கேட்கின்ற உயர்ந்த தலவிசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் ஆகிய உத்தமச் செய்திகள், நாளும் சிறப்பாக நிகழ்வது அத்தலத்திலாகும். அவற்றை நான் உங்களுக்குச் சொல்கிறேன். 16

## திருப்புடைமருதின் தனிப்பெருமை

அவனிசேர் தவலோ கம்தான்
சிவலோக மான இந்தச்
சிவன்நகர்ப் பெருமை எண்ணிச்
சேர்ந்திடப் பெறுகின் றோரும்
தவம்உயர் ஞானம் மேவிச்
சீவன்முத் தர்களாய்ச் சார்வர்
இவர்களுக்கு எய்தும் பேறு
வேறுஎவண் எண்ணும் காலே.

*தவலோகம் எனப்படும் சுவர்க்கம், மண்ணுலகத்தில் தோன்றிச் சிவலோகம் எனப்பெயர் பெற்றது. அச்சிவலோகமே திருப்புடைமருதூர் ஆகும். சிவனுக்கு ஒப்பான இந்த நகரத்தின் பெருமையை நன்றாக எண்ணிப் பார்த்து, இங்கே வந்துசேரப் பெற்றவர்கள் யாவரும், தவமும் உயர்ந்த ஞானமும் அடைந்து, சீவன் முத்தர்களாய் (வாழும் போதே முத்தியின்பம் அடைப வர்களாய்) விளங்குவார்கள். இவர்களுக்குக் கிடைக்கும் பாக்கியங்கள் வேறு எங்கே கிடைக்கும்?* 17

**எத்தலத் தினும் விசேடம்**
**ஒன்றிரண்டு எய்தும்; இந்த**
**மெய்த்தலம் மூவி சேடம்**
**விளங்கிய மேன்மை யாலே**
**முத்தலத் தினிலும் நன்காம்**
**முறைஅறிந்து இங்ஙன் எய்த**
**வித்தகர் ஆகி மேலாம்**
**வீடுபெற்று உயர்வர் என்றே.**

*எந்தத் தலத்திலும் ஒன்றிரண்டு சிறப்புகள் இருக்கும். இந்த உண்மையான தலம் மூன்று விசேடங்கள் (மூர்த்தி, தலம், தீர்த்தம்) பெற்றது. இந்த மேன்மையால் தலைமருது இடைமருது கடைமருது என்னும் மூன்று தலங்களில் நன்றானது என்பதை அறிந்து இங்கு வந்து தொழ, வல்லவர்கள் ஆவர். மேலான மோட்சம் பெறுவர்; உயர்வர்.* 18

**சகத்தணி திலகம் என்னும்**
**தண்புடை மருதம் ஆன**
**மகத்துவத் தலத்தின் எல்லை**
**வருசரம் அசரம் ஆகத்**
**தொகுத்திடும் உயிர்கள் தம்மில்**
**தொல்வினை உடலை நீங்கத்**
**தகைத்திடும் வேளை ஈசன்**
**தாயுடன் விடைமேல் சார்ந்து...**

*உலகத்திற்கு நெற்றிப் பொட்டாக அமைந்தது திருப்புடை மருதூர்; இது மகத்துவம் மிக்கது. இதன் எல்லைக்குள் இயங்குவன, நிலையாக நிற்பன (சரம் — மனிதன் விலங்கு பறவை; அசரம் — புல்; மரம்) எல்லாவற்றின் பழைய வினை வழிப்பட்ட உடலிலிருந்து உயிர்நீங்கும் போது — ஈசன் உமையம்மை யுடன் ரிஷபத்தின் மேல் தோன்றி...* 19

'பயம்ஒருவு' என்று சாற்றிப்
பசுவினை மடியில் ஏற்றி
வெயர்வினை முந்தி யாலே
விமலைமாற் றிடவே, ஈசன்
தயவுடன் வலது காதில்
தாரக உபதே சத்தை
நயமுடன் ஓதி, வேண்டும்
நல்வரம் அளிப்பான் அன்றே!

"பயப்படாதே" என்று சொல்லுவார். உமையம்மை அவ்வுயிரைத் தன் மடியில் ஏற்றிக் கொள்வாள். உமையம்மை தன் முந்தானையால் வியர்வையைத் துடைப்பாள். சிவன், வலக் காதில் தாரக மந்திரத்தை நயமுடன் ஓதி உபதேசம் செய்வார்; அவ்வுயிருக்கு மோட்சவரம் அளிப்பார். 20

## படலங்களின் சுருக்கம்

மெய்த்தல உண்மை இன்னும்
விளம்புதும் விடையம் நீங்கும்
சித்தர்கள் ஒருகா லத்தில்
செங்கம லத்து மேய
உத்தமன் திருமால் இந்த்ரன்
முதலிய உம்பர் போற்ற
நித்திய சபையில் எங்கோன்
நடம்செய்து நின்ற வாறும்...

உண்மையான தலமாகிய திருப்புடைமருதூரில் உள்ள சிறப்புகளை மேலும் சொல்கிறேன் என்றார் சூதமுனிவர். (கதை களின் குறிப்புகளை முதலில் தெரிவிக்கிறார்) மக்களின் செய்தித் தொடர்புகளிலிருந்து நீங்கிய சித்தர்களும், (மனிதர்களுக்குப் புலப்படாதவர்களாகிய சித்தர்களும்), தாமரையில் அமர்ந்த உத்தமனாகிய பிரமனும், திருமாலும், இந்திரனும், தேவர்களும் போற்ற எங்கள் தலைவராகிய சிவபெருமான், திருப்புடை மருதூரில் உள்ள நித்தியசபையில் திருநடனம் புரிந்தார். (1. திருநடனம்புரி படலம்) 21

விண்பகை யாய்ள திர்த்த
விச்சுவன் தன்னை வென்று
திண்படு பாவம் நீங்கித்
தேசிகன் விதித்த வாறே

மண்புகழ் புவியில் தென்பால்
　　மருதுடன் மருதாய் ஒன்றித்
தண்படு முகில்ஊர் அண்ணல்
　　தவத்தினில் சார்ந்த வாறும்...

*தேவர்களுக்குப் பகையாய்த் தோன்றிய விருத்திராசுரனை வென்ற நிகழ்வில், இந்திரனுக்குப் பிரமகத்திப் பாவம் ஏற்பட்டது. இந்திரன் தன் குருவாகிய வியாழபகவானின் ஆணைப்படி, மண்ணுலகில் புகழ்மிக்க தென்பகுதியில் உள்ள திருப்புடைமருதூருக்கு வந்து, மருதமரத்தில் மருதாகவே ஒன்றி, குளிர்ந்த மேகங்கள் தங்கும் அவ்வூரின் சிவபெருமானை வணங்கினான். (2. விருத்திராசுர வதைப்படலம்) 22*

இந்திரன் தன்னை நேடி
　　இமயவ ருடனே போந்த
சுந்தரி விரதம் ஆற்றிச்
　　சுந்தரன் தன்னைப் போற்ற
வந்து, அரன் மருதில் தோன்றி
　　மருத்துவன் பாவம் தீர்த்து
நந்தலில் வரங்கள் நல்க
　　நல்வரம் பெற்ற வாறும்...

*அழகியாகிய இந்திராணி, இந்திரனைத் தேடித் தேவர்களுடன் திருப்புடைமருதூருக்கு வந்தாள். அழகராகிய சிவனைப் போற்றினாள். கேதார கௌரி விரதம் இருந்தாள். இறைவன் மருதமரத்தில் தோன்றி, மருத்துவன் என்ற சிறப்புடைய இந்திரனின் பாவத்தை நீக்கி, அணையாத வரங்களை அளித்தார். அதனால் இந்திரனும் இந்திராணியும் தேவர்உலகை ஆளும் நல்ல வளங்களை மீண்டும் அடைந்தார்கள். (3. இந்திரன் பழிதீர்ந்தபடலம்) 23*

மாதவன் காசி தன்னில்
　　மா,தவன் உபதே சத்தால்
பூதலத்து அரனைப் போற்றிப்
　　புடைஅருச் சுனத்தில் வந்து,
நாதனைப் பரவி எங்கோன்
　　அருளினால் நதியின் நீரில்
போதகம் தன்னைக் காத்து
　　முதலையைப் பொருத வாறும்...

*காசிநகரில், மாதவனாகிய திருமால், மா தவனாகிய (பெரிய தவசியாகிய) உபமன்யுவிடம் பெற்ற உபதேசத்தால், மண்ணுலகில் உள்ள திருப்புடைமருதூர்ச் சிவனைப் போற்றிப் புகழ்ந்து,*

*சிவன் அருளால் பொருநைநதியின் நீரில், முதலையை அழித்து யானையைக் காப்பாற்றினார். (4. சீதரன் படலம்)* *24*

மனுபதி இவண்வந்து எய்தி
மருதனைக் காணான் மாழ்கி
உனி,அருச் சுனத்தில் வேலை
உய்த்ததில் பாய உள்க
அனைஅவன் செய்கை கண்டாள்;
அரன்அவண் எய்தப் பெற்று,
நனியவான் பணியை முன்னி
நற்றவம் செய்த வாறும்...

*ஆதிமனு இத்தலத்துக்கு வந்தான்; இறைவன் ஒளிந்து கொண்டார். மனு, கலங்கினான்; யோசித்தான். மருத மரத்தில் வேலைச் செறுகி, அதில் பாய்ந்து இறந்துபோக முற்பட்டான். உமையம்மை, அவனின் செய்கையைப் பார்த்தார்; சிவன் அங்கே வெளிப்பட்டு, மனுவைக் காப்பாற்றினார். மனுவேந்தன், கோயில் எழுப்புவதாகிய பெரியபணி நிறைவேறத்தவம் செய்தான். (5. ஆதிமனுப் படலம்)* *25*

சிவன்பணி கருதி வேந்தன்
செய்திடும் தவத்துக் காகப்
பவன்அந்த இலிங்கத் தின்பால்
பாவனை வடிவாய்த் தோன்றித்
தவமனு, கருத்தின் பாங்காய்ச்
சங்கரன் அங்ஙன் வைக
உவமைஇல் குணபால் கோயில்
உவப்புடன் செய்த வாறும்...

*சிவனாருக்குக் கோயில் எழுப்பும் பணிக்காக ஆதிமனு செய்த தவத்தால், இலிங்கவடிவை இடம்மாற்றித் தோன்றி, பாவனை செய்து, இறைவன் சுயம்புவாய் அமர்ந்து, மனுவுக்கு உதவியாகக் கருவறையில் தங்கினார். ஆதிமனு, மகிழ்ச்சியுடன் உமையம்மைக்கும் கோயில் எழுப்பினான். (6. ஆலயம் காண் படலம்)* *26*

பங்கயன் காசி எய்தப்
பரன்அவன் முன்பு தோன்றிக்
கங்கையின் சோத கம்நின்
கதையினால் மருதில் காண்பாய்
அங்கண்எய் திடுவாய் என்றான்
அதுமுற்றி அருச்சு னத்தில்
தங்குநா யகனைப் போற்றித்
தண்டம்தா பித்த வாறும்...

பிரமன் காசிக்குச் சென்று தவம் செய்தபோது, பரமன் அங்கே தோன்றி, 'உன் பிரமதண்டத்தைக் கங்கையில் போட்டு விடு; அது திருப்புடைமருதூரில் பொருனையில் வெளிப்படும்; அங்கே சென்று எடுத்துக்கொள்வாய்' என்றார். அது அப்படியே நடந்தது. பிரமன் அருச்சுனத்தில் எழுந்தருளிய தலைவனைப் போற்றி, அங்கே பிரமதண்டத்தை நிறுவினான். (7. சதுர்முகன் படலம்) 27

பதியத்தி தீர்ந்த வாறும்,
பன,வனி சத்தை உற்ற
விதி,அவர்த் தானன் பாவம்
வீய்ந்திடு செயலும், வெல்லும்
மதியன்,கோ தமனால் வால
சதானந்தர்க்கு அளித்த வாறும்
நிதிதரு பவுத்தம் நீங்கி
நிருபர்கோன் பெற்ற வாறும்...

இறைவன் பார்ப்பனியாகிய குலடி என்பாள் கணவனைக் கொன்றதால் உண்டான பாவத்தைப் போக்கினார். (8. பதியத்தி தீர்ந்த படலம்) அவிர்த்தானன் என்பவன் விதியினால் செய்த காமக்குற்றத்தை அழித்தார். (9. அவிர்த்தானன் படலம்) வெல்லும் அறிவினையுடைய கௌதம முனிவர் வால சதானந்தனுக்குக் கொடுத்த சாபத்தை நீக்கினார். (10.வால சதானந்தன் படலம்) செல்வத்தை வாரி வழங்கும் அரசனாகிய சித்திர சாபமாறன், பௌத்த சமயத்திலிருந்து நீங்கிச் சைவ னாகச் செய்தார் (11. புறமதம்தீர்ந்த படலம்) 28

கதிஅல தந்த னுக்குக்
காட்டிய செயலும், கங்கை
நதியின்பால் கருவூ ரற்கு
நல்கிய நலனும், நாதன்
விதிமணக் கோலம் போற்றி
விருப்புடன் அருச்சு னத்தில்
பொதிகைமா முனிவன் வந்து
புகழ்வரம் பெற்ற வாறும்...

இறைவன் அலதந்தனின் போர்வெறியை நீக்கி ஞானம் அளித்தார். (12. அலதந்தன் படலம்) கங்கை நதியாகிய பொருனை நதிக்கரையில், கருவூரார் அழைக்கச் சாய்ந்த பெருமான் அவருக்கு அருள் செய்தார். (கருவூர்ச்சித்தர் படலம்) சிவனாரின் திரு மணக்கோலத்தைப் பொதிகையில் கண்ட அகத்தியர், ஆசையுடன் திருப்புடைமருதூருக்கு வந்து வரங்கள் பெற்றார். (14. அகத்தியர் படலம்) 29

பங்கயன் திருமால் ஆதிப்
பண்ணவர் முதலாய் ஞானப்
புங்கவர் முனிவர் யாரும்
புடைஅருச் சுனத்தில் வந்து,
மங்கையோர் பாகன் தன்னை
வழிபட்டுத் தார கத்தைச்
சங்கரன் அருளப் பெற்றுச்
சாயுச்யம் பெற்ற வாறும்...

*பிரமன், திருமால் முதலிய தேவர்கள், ஞானகுருமார்கள், முனிவர்கள் முதலிய யாவரும் திருப்புடைமருதூருக்கு வந்து, மங்கைபங்கனாகிய சிவனை வழிபட்டு இன்பம் செய்பவனாகிய அப்பெருமானிடம், ஓம் என்னும் தாரமந்திர உபதேசம் பெற்றுச் சிவனடியில் கலத்தலாகிய சாயுச்ய முத்தியைப் பெற்றார்கள். (15. தாரக உபதேசப் படலம்)* *30*

பின்னுமோர் காலம் தன்னில்
பிறைமுடிப் பெருமான் தன்னை
மன்னவன் மாறன் போற்றி
வரங்கள்பெற்று உய்ந்த வாறும்,
கன்னியாம் பொருனைத் தீர்த்தம்
காசினி நதியாய் ஓங்கித்
துன்னுவோர்க்(கு) அருளி முந்நீர்ச்
சங்கமம் சுலவு மாறும்...

*பிற்கால மன்னனாகிய வீரமார்த்தாண்ட பாண்டியன், பிறையைத் தலையில் சூடிய பெருமானைப் போற்றி, வரங்கள் பெற்றுப் பிழைத்தான். (16. வீரமார்த்தாண்டன் படலம்) கன்னியாகிய பொருனையாறு, உலகுக்கு உதவும் நதியாகப் பெருகி, நீராடுவார்க்கு அருள் செய்யும் (பொருனை, கடனை, கங்கை என்னும்) முந்நீர்ச் சங்கமம் ஆகிச் சுழன்றோடுகிறது. (17. தாமிர வன்னிப் படலம்)* *31*

பழமறை பரவும் ஆத்தி
வனப்பதிப் பண்பும் தென்பால்
குழகன்வாழ் பூவணத்தின்
கொள்கையும் அதற்குத் தென்பால்
விழவுஉயர் அரிகைச் சேத்ர
மேன்மையும் மேல்பால் மூன்றாய்
அழகிய பரமன் வைகும்
அரிகைமா நகர்ச்சி றப்பும்...

பழைமையான வேதங்கள் துதிக்கின்ற ஆத்திவனத்தில் இறைவன் எழுந்தருளிப் பண்பும், (18. ஆத்திவனப் படலம்) அதன் தெற்கில் திருப்பூவணத்தில் இறைவன் வணிகப் பெண்ணுக்கு அருளும் கொள்கையும், (19. புட்பவனப் படலம்) அதற்குத் தெற்கே உயர்ந்த விழாக்கள் நடைபெறும் அரிய நாயகிபுரம் என்னும் தலத்தின் மேன்மையும், (20. அரிகை படலம்) அதற்கு மேற்கில் பிரமனாகவும் திருமாலாகவும் சிவனாகவும் ஓருருவில் காட்சிதரும் நகர்ச்சிறப்பும் (21. மூன்றீசுவரப் படலம்) 32

## கவிக்கூற்று

முனிவரர் அருச்சித்து ஏத்தும்
முறைமையும் முன்னை ஓர்கால்
பனிவரை இமயச் செல்வி
பாலகன் தந்த வாறே
மனியசந் தானச் சூதன்
வகுத்தனன் வகுத்த வாறே
கனிவுடன் தொகையில் கூறி
வகைஇனிக் கழறல் உற்றாம்.

முனிவர்கள் எவ்வெவ்வாறு அருச்சனைகள் செய்து இறைவனைப் புகழ்ந்தார்கள் என்ற முறைகளையும், பனிபடர்ந்த இமயத்தின் மகளாகிய உமையம்மைக்கு மகனாகிய முருகன் அருளியபடியே விஷயதானம் செய்யும் சூதர் வகுத்துச் சொன்னார். அதேபோல நானும் அவற்றைத் தொகுத்துச் சொன்னேன் (பாடல் 21—32). இனி அவற்றின் விரிவைச் சொல்லப்போகிறேன். 33

### படலங்களின் முதல் நினைப்புச் செய்யுட்கள்

(இந்நூலில் 21 படலங்கள் உள்ளன. அவற்றின் தலைப்புகளையும், எண்ணிக்கைகளையும் நினைவுபடுத்திக் கொள்ளக் கவிஞர் இரண்டு பாடல்களை எழுதியுள்ளார். படலப் பெயர் முழுதுமாக இப்பாடல்களில் இருக்காது. முதற்குறிப்பு மட்டுமே இருக்கும். சில குறிப்புகளால் படலப் பெயரை நினைவு கொள்ளலாம்)

திரு,நகரம் தீர்த்,தல,மூ,வரலாறு, திருநடனம்
புரி,புனிதன், தவமோட்சம், அரிபரவல், ஆதிமனுப்
பரவல், ஆலயம், பிரமர்,அப் பதிஅத்தி, அவிர்த்தானன்
தரும்அலகை உருநீங்கும் வாலசதா னந்தமுனி,

1. திரு — திருநாட்டுப்படலம்; 2. நகரம் — திருநகரப் படலம்; 3. தீர்த் — தீர்த்த விசேடப் படலம்; 4. தல — தல விசேடப் படலம்; 5. மூ — மூர்த்தி விசேடப் படலம் (வரலாறு — விசேடம்; தீர்த்தம், தலம், மூர்த்தி என்ற மூன்றனுக்கும் சேர்த்துக்கொள்ளவேண்டும்). 6. திருநடனம்புரி — திருநடனம் புரிபடலம்; 7. புனிதன் தவ — இந்திரன் தவம் புரிந்த செய்தியைக் கூறும் விருத்திராசுரவதைப் படலம்; 8. மோட்சம் — இந்திரன் பாவம் நீங்கிய இந்திரன் பழிதீர்ந்த படலம்; 9. அரிபரவல் — சீதரன் படலம்; 10. ஆதிமனுப் பரவல் — ஆதிமனுப் படலம்; 11. ஆலயம் — ஆலயம் காண்படலம்; 12. பிரமர் — சதுர்முகன் படலம்; 13. அப்பதிஅத்தி — பதியத்தி தீர்ந்த படலம்; 14. அவிர்த் தானன் — அவிர்த்தானன் படலம்; 15. தரும் அலகை உருநீக்கும் வாலசதானந்த முனி — வாலசதானந் தானப் படலம். 34.

அகம்நீங்கும் பவுத்தமதன், அலதந்தன், அருள்சித்தன்,
சகம்நீங்கு குறுமுனி,தா ரகமோட்சம் தமிழ்வேந்தன்
தொகையாக நான்கு,ஐந்து அரன்சூழ்ந்த தலம்,சொல,வைத்தாம்
வகைஇருபத் தோரைந்து படலம்வரி பகுத்துரைப்பாம்.

16. அகம்நீங்கு பவுத்த (பௌத்த) மதன் — புறமதம் தீர்ந்த படலம்; 17. அலதந்தன் — அலதந்தன் படலம்; 18. அருள்சித்தன் — கருவூர்ச் சித்தர் படலம்; 19. சகம் நீங்கு குறுமுனி — அகத்தியர் படலம்; 20. தாரக மோட்சம் — தாரக உபதேசப் படலம்; 21. தமிழ்வேந்தன் — வீரமார்த்தாண்டன் படலம்.

ஐந்து அரன் சூழ்ந்த தலம்: 1. தாமிரவன்னிப் படலம்; 2. ஆத்திவனப் படலம்; 3. புட்பவனப் படலம்; 4. அரிகை படலம்; 5. மூன்றீசுவரப் படலம்.

தொகையாக நான்கு: தொகை ஒன்று — கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், கயிலைச்சிறப்பு; தொகை இரண்டு: திருநாட்டுப் படலம், திருநகரப் படலம், தலவிசேடப் படலம், தீர்த்தவிசேடப் படலம், மூர்த்திவிசேடப் படலம்; தொகை மூன்று — திருநடனம் புரிபடலம் முதலாக வீரமார்த்தாண்டன் படலம் முடிய, அருள்பெற்றோர் செய்திகள் கூறும் பதினாறு படலங்கள்; தொகை நான்கு — நாறும்பூநாதரின் திருக்கோயிலைச் சுற்றியுள்ள நதி கோயில்கள் பற்றிய தாமிர வன்னிப் படலம் முதலாக மூன்றீசுவரப் படலம் முடிய ஐந்து படலங்கள். 35

# 5. திருநாட்டுப்படலம்

மன்செய் காலத்தில் ஆதிமா மனுமறை வழியே
மின்செய் வாளினால் கலிப்பகை, ஒதுக்கி,மே தினியை
முன்செய் கோலினால் முறைநிறுத் திட,வளம் ஓங்கும்
பொன்செய் குன்றுஎனும் பொதிகைநாட்டு அணியினைப்
புகல்வாம்.

*அரசர்கள் ஆண்ட காலத்தில், ஆதிமனுவின் தர்மப்படி வாளாற்றலால் வறுமையை ஒழித்தார்கள். முனைப்புடன் செங்கோலாட்சியால் உலகத்தில் நீதியை நிலைநாட்டினார்கள். அவர்களின் ஆட்சிக்குட்பட்ட வளம்மிக்க 'பொன்மலை' எனப்படும் பொதிகைமலை இருக்கும் நாட்டின் வளத்தைச் சொல்கிறேன்.* 1

## மழைவளம்

மை,அ வாம்நிறக் கடல்எனும் மன்னன்வான் என்னும்
செய்யும் மெய்வகை அமைச்சுடன் தேர்ந்து,மா நிலங்கள்
உய்ய வே,தனது அரசுசெய் வதனையே உன்னி,
வெய்ய கோடைமேல் மிகைசெய நாற்படை விதிப்பான்.

*கருப்புநிறக்கடல் என்பது அரசன்; வானம் என்பது அமைச்சு; நிலங்கள் பிழைப்பதற்காக அந்த அமைச்சுடன் ஆராய்ந்து அரசு செய்ய எண்ணி, கோடை என்னும் கொடிய பகைவன்மேல் நான்கு படைகளையும் ஏவிப் போர்செய்ய முடிவு செய்தான்.* 2

வானெலாம் மள்ளர் மின்வாள்
வார்முரசு அசனி ஆர்ப்பத்
தானமது ஒழுகும் வேழம்
சாகரம் உழந்த கொண்டல்
பால்நுரை கவரி மச்சம்
பாய்திரை வாசி யாகச்
சேனையாய் அணிவ குத்துத்
திரைமுகில் இரதம் ஊர்ந்தே...

*ஆகாயம் எல்லாம் போர்வீரர்கள்; மின்னல்கள் வாட்படை; இடியோசை முரசொலி; கடலில் மூழ்கி எழுந்த*

*மேகங்கள், மதநீர் பொழியும் யானைப்படை; கடல் நுரை கவரி; மீனுடன் பாயும் அலைகள் குதிரைப்படை; கடலரசன் மேகம் என்னும் இரதத்தில் அமர்ந்து, மழை சேனையாக அணி வகுக்க — கோடைப்பகைவன்மேல் போர்தொடுத்தான். 3*

வான்வழிப் படர்ந்துகார் மலையப் பாசறைத்
தானமது எய்திவிண்டு ஆரத்து எழுந்ததன்
மானநீர்ச் சோனையால் மதித்து, மேவலர்
கானல்ஆர் பாறையைக் களையச் சூழ்ந்ததே.

*மேகம் வான்வழியாகப் படர்ந்து, மலை என்னும் பாசறையில் தங்கிப் பலவாகப் பிரிந்து, மாலைபோல எழுந்த சோனைநீரால், கோடைப்பகைவனின் கானல்நீர்ப் பாறைகளை நீக்கின. 4*

தனுஎனும் இந்திர சாபம் கோட்டி,மின்
கனைசெறி சோனையாம் கணைகள் தூவியே
வனைதரு கூளித்தேர் மன்னை மாற்றிவான்
புனைகடல் ஆழியால் புவனம் காத்ததே.

*இந்திர சாபம் என்னும் வானவில் வளைந்தது. மின்னல் வெட்டுகள் பெருகின. மழைத்தூறல் அம்புகளாக விழுந்தன. பேய்த்தேர் என்னும் கானல் நீரை மாற்றி, வானமே நீர்க்கடலாக மாறி உலகத்தைக் காத்தது. 5*

தென்மலை உச்சியில் பொழிதல் தெண்திரை
மன்னவன் வழிபட வந்து மஞ்சனம்
முன்னவன் நாறும்பூ முடியினில் சொரிந்து,
இன்னபொன் மலர்களால் இறைஞ்சல் மானுமே.

*குளிர்ந்த அலைகடலாகிய மன்னவன் தென்மலையின் உச்சியில் மழை பொழிவது, முதல்வராகிய இறைவன் முடியில் மஞ்சனம் ஆட்டி மலர்கள் தூவி வழிபாடு செய்து போற்றுவது போல் இருந்தது. 6*

**மடக்கு**

வானவன் அமுதலர் கொண்டு வானவர்
வானவர்க்கு உறுவழி பாடு செய்வன
வான,வன் வானமார் மலையின் மாமழை
வான்நவ மணியுடன் சொரிந்த வண்ணமே.

வானவனாகிய இந்திரன் தேன்மலர் கொண்டு, தேவ தேவனாகிய சிவபெருமானுக்கு உற்ற வழிபாடாகிய அபிஷேகம் செய்வனவான செயல், வன்மையான மலையின் மாமழை — வானத்திலிருந்து வரும் பெருமழை — வானுலகின் நவமணிகளைச் சொரிவது போன்றிருந்தது.

இந்திரன் மழைக்கு அதிபதி. எனவே, மழைபொழிதலை இந்திரனின் வழிபாடாகக் குறிப்பிட்டார். இப்பாடலில், 'வானவ' என்பது மடக்கு. 7

**விண்டு,உயர் மஞ்சனம் விமலர்க்கு ஈந்தென**
**விண்துயர் மலையினில் விண்டு பெய்தவை**
**விண்டு,உரை தந்தனம் பொழிந்த வேணிநீர்**
**விண்டு,இல் கொடுபுனை விளைவை ஓதுவாம்.**

மகாவிஷ்ணு, சிவனுக்கு உயர்ந்த திருமஞ்சனம் ஆட்டியதைப் போல விண்ணுக்குத் துயர் செய்வது போல உயர்ந்து வளர்ந்த மலையில், பெய்த மழை — மலை பிளக்கு மாறு பெய்த மழை பற்றி விவரித்து உரைத்தேன். அப்படிப் பெய்ததால், சிவனாரின் தலையிலுள்ள ஆகாய கங்கை பெருகிக் கரைஉடைத்துப் பாய்ந்தது. அதனால் பெருவெள்ளமாகத் தரைக்கு வந்து, இல்லங்களுக்குக் கொண்டு வரும் அழகிய விளைச்சலுக்கு ஏதுவானது. அந்த விளைவுகளை இனிச் சொல்வேன். 8

## நீர்வளம்

**விரைசெய் சந்துசூழ் பொதிகையின் மேல்மழை விரவி**
**அருவி கான்றுஇழி அழகுதான் அந்தரத் தெய்வச்**
**சுரபி,நாயகன் முடியின்மேல் சுரந்தபால் அதனைப்**
**பரவி யே,சொரி கின்றன ஒத்தன பண்பே.**

மணம் வீசுகின்ற சந்தனமரங்கள் சூழ்ந்த பொதிகை மலை மேல் விழும் மழைநீர், சந்தன மணத்துடன் கலந்து அருவியாகப் பெருகி விழும் அழகு, தெய்வ உலகக் காமதேனு சிவனின் முடிமேல் சுரந்தபால், பரவிச் சொரிவது போல் இருக்கிறது. 9

**சொரிந்துஇழி அருவிசூழ் காஞ்சி மேகலை**
**மரம்செறி பொதிகையாம் வனிதை மா,தனத்து**
**அரும்பெறல் ஆரம்ஒத் திடும்,அன் றேல்,உயிர்க்கு**
**இரங்கிவீழ் பால்என இசைக்கல் ஆகுமே.**

*மரங்கள் பொதிகைமலை என்னும் பெண்ணுக்கு அருவி யானது, காஞ்சி, மேகலாபரணங்கள் போல் உள்ளன. அவளுடைய பெருத்த மார்பகங்களுக்கு மாலைபோல் உள்ளன. அல்லது அவள் முலைகளிலிருந்து, உயிர்கள் குடித்துப் பிழைக்கப் பெருக்கெடுத்து வரும் பால்போல் இருக்கின்றது.* 10

வரைபெறு வனமகள் வனமும் சோலையும்
குரைவுடன் தவழ்ந்துகால் கொடு,ந டந்து,மென்
கரைஉடைந் திட,விளை யாடிக் கன்னிநீர்
புரைதவிர் வண்டல்ஆட்டு அயர்ந்து போனதே.

*மலை என்ற பெண்ணுக்கு மகள், காடு. காட்டில் வனம், சோலை என்ற பிரிவுகள் உள்ளன. அருவிநீர் இவ்விடங்களி லெல்லாம் ஓசையுடன் தவழ்ந்து செல்கிறது. அங்கங்கே மென்மையாக இருக்கும் கரைகளை உடைப்பது அதன் விளையாட்டாகும். குற்றமில்லாத வண்டல் மணலில், பல்வேறு உருவங்கள் ஏற்படுமாறு செய்யும் 'வண்டல் ஆட்டு' என்னும் விளையாட்டும் ஆடிச் செல்கிறது அருவிநீர்.* 11

## நானில வருணனை

குறிஞ்சிபால் முல்லை பண்ணை
கோல்வளை நெய்தல் என்னும்
சிறந்தபூ மகளிற்கு ஆய்ஆய்
செவிலியின் அமுதம் ஈந்து,
பெறும்பல பருவம் தந்து,
பேணியே பரைஒப் பாக
அறம்பல இயற்றி நாளும்
அருமையாய் வளர்க்கும் அன்றே.

*மலைப்பகுதி (குறிஞ்சி), காட்டுப்பகுதி (முல்லை), வயல்பகுதி (மருதம்), சங்கு விளையும் கடல்பகுதி (நெய்தல்), என்னும் நான்கிற்கும் தாயாகவும், செவிலியாகவும் (வளர்ப்புத்தாய்) இருந்து அமுதம் அளிக்கிறது. அந்நிலங்கள் பல பருவம் அடைந்து வளருமாறு நீர்தந்து காக்கிறது. பராசக்தியைப் போல் அறங்களை இயற்றி வளர்க்கிறது. அந்நிலங்கள் அருமையாய் வளர்கின்றன.* 12

மணந்தவன் மனையில் செல்லும்
மங்கல மகளிர் போல
வணங்குஇடை வஞ்சி மீதில்
காஞ்சிவாய்ந்து அணிமுத் தாரம்

இணங்கிட வளையும் தோடும்
கூந்தலும் இசைந்துஅங்கு உள்ள
கணம்தரு பலவும் கொண்டு
கன்னிநீர் கடல்மேல் செல்லும்.

*திருமணம் ஆன பெண், புகுந்த வீட்டிற்குச் செல்வாள். மழைக்கு, மலை பிறந்த வீடு; கடல், புகும் வீடு. நெளிந்து போகும் இடை உள்ள வஞ்சியாகிய ஆறு, காஞ்சி மரங்களின் மீது படிந்து முத்துகள் மிதக்க, வளை (சங்கு) மிதக்க, தாழைகள் (கோடு) மிதக்க, கூந்தல் பனை மிதக்க — பெண்ணுக்குள்ள அலங்காரங்கள் எல்லாம் பெற்று, மணாளனின் வீட்டுக்குப் போகும் புதுமணப் பெண்போல் கடலில் கலக்கும்.* *13*

பொதியமாம் வனிதை கொங்கைக்
குவட்டினில் பொதிந்த சாந்த
மதுமலர்க் கூந்தல் தாது
வாசமார் ஏலம் மற்றுஅப்
பதி,வரை மாதர் ஆடும்
பழுக்கரி சனமும் கூடி
நதியினில் கலங்கி நல்லார்
உளம்என நணுகிற்று அன்றே.

*பொதியமலை என்ற பெண்ணின் கூரான முகடுகள் கொங்கைகளாகும். அங்குள்ள சந்தனம், அம்மங்கையின் உடலி லெல்லாம் பூக்கும் தேன்மலர்கள். கூந்தலாகிய தாதுப் பொருட் கள், அங்கு விளையும் ஏலக்காய்கள். மேலும் அவ்வூரிலும், அம்மலையிலும் வாழும் பெண்கள் குளிக்கும்போது கரையும் படியான — அவர்கள் உடலில் பூசிய பழுப்புநிறக் கஸ்தூரி முதலிய மணப்பொருட்கள் எல்லாம், இந்தப் பொருனை நதியில் குழம்புகின்றன. — பெண்களின் மனம்போல, மணமான குழப்பத்துடன் அந்நதி வருகிறது.* *14*

## சிவனும் பொருனையும்

அலர்தலை உடைய தாலும்,
அரவமும் தரித்த தாலும்
தலையணி வேணி யாலும்,
தரைவழிப் படுத லாலும்
கலைவரி வேங்கை சுற்றிக்
கடுக்கையும் புனைத லாலும்
சிலைவரை உடையோன் போலும்
சிறந்தது பொருனைத் தீர்த்தம்.

விரிந்த இடம் கொண்டது பொருனை; விரிந்த சடையுடையவன் சிவன். ஓசையுடன் ஓடுவது பொருனை; பாம்பை அணிந்தவன் சிவன். தலைமையான அழகன நீர் பொருனை நீர்; தலையில் அழகான கங்கையை அணிந்தவன் சிவன். தரை வழியே ஆறாக ஓடுவது பொருனை; மண்ணுலகில் பல திருக் கோயில்களில் விளங்குபவர் சிவன். கலையழகு பொருந்திய வேங்கை மரங்கள், கடுக்கை மரங்கள் ஆகியவற்றைப் பொருனை வெள்ளம் அடித்துவரும்; மானைக் கையிலும், புலித்தோலை இடையிலும் அணிந்து, உருத்திராக்கம் அணிந்தவன் சிவன். எனவே, கயிலாய மலையை உடைய சிவனைப் போன்றது பொருனைத் தீர்த்தம். 15

## உமையம்மையும் பொருனையும்

வான்வழிப் பிறத்த லாலும்,
வரைதனை வளர்த்த லாலும்,
தேன்நிகர் சொல்லி னாலும்,
திசைஎலாம் அமுதம் ஊட்டித்
தான்வளர்த் திடுத லாலும்,
தண்புனல் தலைவன் சார்ந்து,
தூநலம் படைத்த கன்னி
இமையவன் தோகைக் கொப்பாம்.

வான்மேகத்தின் நீரால் பிறந்தது பொருனை; வான்வழியாக மண்ணுக்கு வந்து, தடாதகைப் பிராட்டியாக — மலயத்துவச பாண்டியன் மகளாகப் பிறந்தவள் உமாதேவி. பொதிகை மலை செழிப்பாகக் காரணமானது பொருனை; இமவான் மகளாகப் பிறந்தமையால், மலை வளர்த்த மகளாக விளங்கு பவள் உமையம்மை. தேன் போன்ற இனிமையான ஓசை உடையது பொருனை; உமையம்மையின் அருட்சொற்கள் தேன் போன்றவை. எல்லாத் திசைகளிலும் பயிர்களுக்கு நீர் ஆகிய அமுதத்தை ஊட்டி வளர்ப்பது பொருனை; எல்லாத் திசைகளில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் ஜீவாமிர்தம் ஊட்டி வளர்ப்ப வள் தாயாகிய உமையம்மை. எனவே, பொருனைநதி, இறைவ னைச் சார்ந்து தூய நன்மைகள் படைக்கும் கன்னியும், இமவான் மகளுமாகிய உமையம்மையைப் போன்றது. 16

## திருமாலும் பொருனையும்

வளைஉறு பாணி யாலும்,
வாரிபால் மேவ லாலும்,
குளிர்அலர்த் தாரை யாலும்,
குவலயம் கொள்வ தாலும்,
நளிர்கம லத்தாள் பூமான்
தன்னிடம் நயந்தே ஆர்வம்
விளைவுறப் பெருகும் உந்தி
விறல்அரி நிகர்க்கும் அன்றே.

வளைந்து செல்லும் அமைப்பு உடையது பொருனை; வளைவான சக்கரத்தை ஏந்தியவர் திருமால். கடலில் கலப்பது பொருனை; திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவர் திருமால். குளிர்ந்த மலர்களுடன் கூடிய நீரொழுக்கு உடையது பொருனை. குளிர்ந்த விரிந்த சங்கை உடையவர் திருமால். உலகோர் மகிழ்ந்து ஏற்பது பொருனையை; உலகத்தை உண்டவர் திருமால். குளிர்ந்த தாமரை விளையவும், உலகம் செழிக்கவும் ஆர்வப் பெருக்கால் பெருகி ஓடும்போது நீர்ச் சுழியல்கள் ஏற்படுவது பொருனையில்; திருமகளும் நிலமகளும் தேவிகளாகத் தன்னிடம் நயப்புடன் ஆர்வம் விளையப் பெரிய உருவமும் தாமரை பூத்த அழகிய கொப்பூழையும் உடையவர் திருமால். எனவே, பொருனை, திருமாலைப் போன்றது. 17

## பிரமனும் பொருனையும்

பங்கய மேல தாலும்,
படைத்திடும் குணத்தி னாலும்,
தங்கிய வனத்தி னாலும்,
தகும்கடம் ஏற்ற லாலும்,
மங்குல்மே னியனால் சந்தி
பெற்றிட வருத லாலும்,
பொங்கிய பொருனை நீத்தம்
பூமனைப் போன்ற தன்றே.

தாமரைப்பூக்கள் மிதக்கவருவது பொருனை; தாமரை மேலே இருப்பவர் பிரமன். விளைவுகள், ஆக்கங்கள் படைப்பது பொருனை; படைத்தல் தொழிலைச்செய்பவர் பிரமன். காடுகள் சூடி ஓடுவது பொருனை; அன்னப்பறவையை வாகனமாகக் கொண்டு, அதன்மேல் தங்கியவர் பிரமன். குடங்களில் மொண்டுகொள்ளக் குடிநீர் தருவது பொருனை;

தக்க கடமையைச் செய்பவர் பிரமன். மேகம் என்ற உடம்பால் உந்தப் பட்டுப் பொங்கி வருவது பொருநை; மேக வண்ணனாகிய திருமாலின் கொப்பூழில் முளைத்த தாமரையின்மேல் பொங்கியவர் பிரமன். எனவே, பொருநைநீர் பிரமனுக்குச் சமமாகும். 18

## முருகனும் பொருநையும்

ஈறிலா வேலை முன்கொண்டு
எறிந்துசூர் அலைவாய் முற்றக்
கூறம்கே கயமேல் கொண்டு,
கூர்வள்ளிக் கொடியைச் சார்ந்தும்
ஆறிரு கையால் தேனுந்
தினையும்கொண் டார்த லாலே,
மாறிலாப் பொருநை கந்த
மைந்தனை மானும் அன்றே.

முடிவில்லாத கடலை நோக்கிச் செல்வது பொருநை; வெற்றிக்கு அளவில்லாத வேலைக் கையில் கெண்டவர் முருகன். அஞ்சத்தகும் அலை எறிய முழுதுமாக நிறைந்தது பொருநை. சூரர்களைத் திருச்செந்தூரில் வேலை எறிந்து அழியச் செய்தவர் முருகன். ஆழம் காரணமாக அச்சம் தரும் குளங்களை நிரப்பி, வள்ளிக் கொடிகளை வளரச் செய்வது பொருநை; கேகயம் என்னும் மயில்மேல் ஏறி, வள்ளி என்னும் கொடி போன்றவளைச் சார்ந்திருப்பவர் முருகன். பொருநைஆற்றின் இருகரைகளிலும் தேனுந்து இனையும், அதாவது மலர்களின் தேன்ததும்பிக் கரையில் இறுகும் — முருகன் ஆறு கைகளில் இருகைகளால் தேனும் தினைமாவும் கலந்துண்பார். நீர்முழக்கம் செய்வது பொருநை; போர்முழக்கம் செய்வார் முருகன். மாற்றம் இல்லாதது பொருநை; பகைவர்கள் இல்லாதபடிக்கு அழிப்பவர் முருகன். எனவே, கந்தன் என்னும் வலிமையுடையவருக்குச் சமமானது பொருநை. 19

## திருத்தொண்டரும் பொருநையும்

வரைவளர் அகில்,ஆர் சந்து,
வன்னி,மந் தாரம், கொன்றை,
விரைமலர் வனைந்து, வேழம்,
மா,வருக் கை,நல் வாழை

உரைதரு கனி,தேன் கொண்டே,
உந்து,நீர் சாய்ந்தோர் தம்மைத்
திரைவளைக் கையால் பூசை
செயவரும் தொண்டர் போலாம்.

*மலையில் வளரும் சந்தனம், அகில், வன்னி, மந்தாரம், கொன்றை ஆகியவற்றின் மலர்கள் அருவியில் விழ, அவை பொருனைநதியில் மிதந்துவரும். சந்தனச் சாந்து, அகில்சாந்து ஆகியவற்றையும், வன்னி, மந்தாரம் கொன்றை மலர்கள் தொடுத்த மாலையையும் அடியார்கள் இறைவனுக்குக் கொண்டு வருவார்கள். யானை, விலங்குகள் ஆகியவை பொருனையில் நீராடும்; பலா, வாழைக் கனிகளும் தேனடைகளும் மிதந்து வரும். அடியார்கள் தெங்கங்கனி (தேங்காய்), மாம்பழம், பலாப் பழம், வாழைப்பழம் ஆகியவற்றைப் படையலுக்காகவும், தேனை அபிஷேகத்திற்காகவும் மெய்சாய்ந்த பெருமானுக்காகக் கொண்டுவருவார்கள். பொருனை, அலையாகிய வளைந்த கையால் பெருமானைப் பூசிக்கும். அடியவர்களில் பெண்கள் வளையல் அணிந்த கையால் பூசிப்பார்கள். எனவே, பொருனை தொண்டர்களுக்குச் சமமாகும்.* 20

வருக்கைமா வாழைத் தீங்கனி வழிந்துஇழி
பெருக்குதேன் சேறுடன் பொருனை பெய்குளம்
தருக்குநீர் நிலம்தொறும் சார்ந்து பேணியே
முருக்கிய உவர்கடிந்து உவரி மொய்த்தவே.

*பலா, மா, வாழைப்பழங்கள் மற்றும் தேன்கலந்து வந்து குளங்களை நிரப்புகிறது பொருனை. எல்லா நிலங்களிலும் இப்படிச் செய்து கடலில் கலக்கிறது. இனிப்பான இந்தநீர் கலந்ததால், கடலின் உப்புத்தன்மை மாறியது.* 21

இன்னணம் பெருக்குஉயர் பொருனை யின்துறை
மன்னவன் ஆணையால் உலகம் வாழ்தல்போல்
துன்னுநீர் வினைஞரால் சார்ந்து கால்வழி
செந்நெலை வளர்த்திடும் செய்கை பூண்டதே.

*அரசன் அரண்மனையிலிருந்து ஆணை இட்டாலும் அது நாடு முழுவதும் செயல்படுவதுபோல, நீர்ப்பாசன நுணுக்கம் அறிந்தவர்களின் நீர் மேலாண்மையால் செந்நெல் வளர, பொருனை நீர் வாய்க்கால் வழியாக வயல்களில் பரவியது.* 22

வெள்ள நீர்பரந்து அருவிகால் ஓதையும், வேலை
மள்ளர் ஓதையும் வருபுனல் சிறைசெய்,கம் பலையும்

கள்உ லாவிய கன்னலைப் பாகுசெய் கறங்கும்
பள்ள நீரொலி தன்னைமாற் றுவ,நதிப் பாலே.

*நதியில் வெள்ளம் பெருகி, அருவிபோல் கரையை மீறி வரும் ஓசையும், தடுப்புகளில் நீரைத்தேக்கும் ஓசையும், கள்போன்று மகிழ்வுதரும் கரும்பைச் சாறுபிழியும் ஓசையும், பள்ளத்தில் பாயும் நீரொலியைக் காட்டிலும் பெரிதாயின.* *23*

## புணர்ச்சி இன்பமும் பொருனையும்

அணைப்பக் கூடலால் வாரமே பெருக்கலால் அகன்கால்
பிணையற்கு ஏற்றலால் கட்டியே கிடக்கையால் பிரியா
மணிமுத் தாடலால் உவரியில் சேரலால் வருநீர்
துணைவற் கூடியே தோய்பவர் போகத்தைத் தோற்றும்.

*அணைகளில் கூடுவது பொருனை; கணவனும் மனைவியும், ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டு கூடுவது புணர்ச்சி இன்பம். இசையைப் பெருக்குவது பொருனை; அன்பைப் பெருக்குவது புணர்ச்சிஇன்பம். அகன்ற கால்வாய்களில் நீர்செலுத்துவது பொருனை; காலை அகற்றிப் பிணைவதாகிய செயல் புணர்ச்சிஇன்பம். நீரைக் கரைகட்டி அணைகட்டித் தேக்க உரியது பொருனை; கணவனும் மனைவியும் கட்டிக் கொண்டு கிடப்பது புணர்ச்சி இன்பம். பிரியாமல் மணிகளும் முத்துக்களும் மிதந்து வருவது பொருனை நதியில்; பிரியாமல் மணிமணியாக முத்தங்கள் கொடுத்துக்கொள்வது புணர்ச்சி இன்பம். கடலில் கலப்பது பொருனை; உப்பு வியர்வை கலப்பது புணர்ச்சிஇன்பம். நீர் வருவது பொருனையில்; விந்துநீர் வருவது புணர்ச்சி இன்பம். எனவே, கணவனிடம் தோயும் புணர்ச்சியைப் போன்றது பொருனை.* *24*

## உழவுப் பணிகள்

நீர்ப ரப்பிய நிலம்தொறும் நெறிகொடு மள்ளர்
ஏர்ப ரப்பியே உழுபவர் இறைவலி வளமைச்
சீர்ப ரப்பியே சேறுசெய் நாறுசெய் வார்கள்
பார்ப ரப்பியே பயிர்செய்து வளம்படுத் திடுவார்.

*உழவர்கள் நிலத்தில் நீரைப் பரப்பி, பயிர் செய்வதற்குரிய முறைகளின்படி, ஏர்பூட்டி உழுதார்கள். இறைவனின் திருவருளால் வளம் வருமாறு நிலத்தைச் சேறாக்கினார்கள். நாற்றை வயல் முழுவதும் நட்டார்கள். பயிர்கள் பரவலாக — வளமாக வளர்வதற்கு உரிய எல்லாக் காரியங்களும் செய்தார்கள்.* *25*

மோனம் ஆதிய பலன்களை எய்வான் வேண்டித்
தான மே,செயத் தவம்தரக் கிளக்குநல் தவம்போல்
ஏன லே,பெறும் உழவர்கள் இடுபயிர் எங்கும்
வான மே,பொழி பருவத்தால் வளர்வன அன்றே.

*மௌனம் முதலாகிய பயன்களை அடைவதற்காகத் தானம் செய்வார்கள். அந்தத் தானத்தால் தவம் வரும். தவம் செய்வதற்கும் தவம் வேண்டும். தான் உண்பதற்குத் தினையரிசியையே பெறும் உழவர்கள், பிறருக்காக இடுகின்ற பயிர்கள் தக்க பருவங்களில் பொழியும் மழையால் விளைவன அல்லவா?* 26

வேலை யாம்,எனும் மடுவில்வீழ் மேதிகள் பொழிந்த
பாலை, வாளைகள் பருகியே உறழ்தரப் பணைத்த
சோலை நீள்கனி உதிர்தலில் பனசத்தேன் சுளை,விண்டு
ஆலை பாய்,நறை யத்துடன் பாய்வன அயலே.

*கடல்போன்ற மடுவில் எருமைகள் இறங்கின. அதன் மடியிலிருந்து பால் வெள்ளமாக வழிந்தன. அதனை வாளைமீன்கள் குடித்தன. அந்த மகிழ்வில் அவை துள்ளிப் பிறழ்ந்தன. பக்கத்தில் இருந்த சோலையில் பழுத்த பழங்கள் மேல் விழுந்தன. அதனால் பழங்கள் உதிர்ந்தன. அவை தேன்பலாக்களில் பட்டன. தேன்பலாக்கள் பிளந்து, கரும்பாலையின் கருப்பஞ்சாற்றில் தேனைப் பீச்சின. தேன் கலந்த கருப்பஞ்சாறு ஆறு போல் பாய்ந்தது.* 27

## களை எடுத்தல்

திருவந்து எய்தியே வளம்பெறு செல்வர்கள் செல்வம்
தருமம் செய்திடத் தழைவதுபோல் தழைத்திடும் பயிர்க்குக்
கரு,வன் மள்ளர்கள் களைகளை பதம்எனக் கருதிப்
பருவம் காட்டிடக் கடைசியர் பணைதொறும் படர்வார்.

*செல்வம் வந்து சேர்வதால் வளம் அடைகின்ற செல்வர்கள் சேர்ந்த செல்வத்தால் தருமம் செய்தால் செல்வம் பலமடங்கு தழைக்கும். அதைப்போலக் கருத்த வலிமையான கால்களைக் கொண்ட மள்ளர்கள், களைகளை நீக்கும் பதம் என்று, உரிய நேரத்தைக் குறிப்பிடுவார்கள். களைபிடுங்க உழத்தியர் வயலுக்கு வருவார்கள். களைபிடுங்கினால் பயிர் வளரும்; தருமம் செய்தால் (பாவப் பணத்தைப் பிறருக்குக் கொடுத்துவிட்டால்) உழைப்புப் பணம் மிகப்பெருகும்.* 28

நறவம் மாந்துவர் கடைசியர் நகை,முகத்து அரும்பச்
சுறவு நோக்குவர் கன்னலோ செந்நெல்சொல் என்பர்
புறவு நோக்குவர் சாடைகள் பேசுவர் புகுவர்
அறலின் ஆர்ந்தசெய்க்கு அணியதாய்க் களைஅகற் றிடுவர்.

உழத்திப் பெண்கள், கள் குடிப்பார்கள்; அதனால் சிரிப்பார்கள்; வயலில் நீர் மிகுதியால் இருக்கும் சுறாமீன்களைப் பார்ப்பார்கள். வயலில் வளர்ந்த பயிர் பெரிதாக வளர்ந்துள்ளதால், 'இவை செந்நெல் பயிரா? கரும்பா?' என்று கேட்பார்கள். களத்துமேட்டைப் பார்ப்பார்கள்; தத்தம் கணவன்மார்களைப் பார்த்து, ஜாடையாகப் பேசுவார்கள்; வயலில் இறங்குவார்கள். வயலின் களைகளை நீக்குவார்கள். 29

ஊடி னார்எறிந் தார்எனக் கஞ்சம்,உற் பலம்தேன்
பாடும் ஆம்பல்வாய் விழிமுகத்து உவமையும் பாரார்
நாடி யே,உடை யவன்பணி யால்,பகை நாட்டிச்
சாடி யே,களை வார்,உறவு ஓர்ந்திடார் தகைத்தே.

கணவனுடன் ஊடல் கொள்ளும்போது, பெண்கள் பூக்களைப் பிய்த்துத் தூக்கி எறிவார்கள். தாமரை முகத்துக்கு உவமை; நீலோற்பலம் கண்களுக்கு உவமை; தேன் பொருந்திய ஆம்பல், இனிப்பான எச்சில் ஊறும் வாய்க்கு உவமை. இப்படித் தம் அழகுக்கு உவமையாகும் மலர்களாயிற்றே இவை என்றுகூடக் கருதாமல், அவற்றைப் பிடுங்கித் தூக்கி எறிவார்கள். தனக்கு உறவானவன் ஒருவன் தன் முதலாளிக்குப் பகைவனானால், முதலாளி உத்தரவிடும்போது உறவென்றும் பாராமல் வீழ்த்தும் வீரர்கள் போல, உழத்தியர்கள் தமக்கு உவமையாகும் மலர்களையும் கணவன்மார்களின் கட்டளைப்படி களைந்தெறிந்தார்கள். 30

## விளைச்சல்

மள்ளர்கள் மிகுவெள் ளம்போல்
வளர்முதல் வலயம் போலக்
கொள்ளவார் குரல்முன் தோன்றிக்
குஞ்சரக் குழாத்தின் ஊடு
விள்இர தம்போல் வாய்ந்து
வெம்பரத் திரள்மு கம்போல்
தெள்ளுநெற் கதிர்க விழ்ந்து
சிறந்தன சாலி எல்லாம்.

மிகுந்த வெள்ளம்போன்ற போர்வீரர்களின் கூட்டத்தைப் போல, வளரும் மூலதனக் குவியல்போல, பால்கதிர் பிதுங்கி

முன்னே தோன்ற யானைக் கூட்டங்களுக்கு நடுவில் வெள்ளி இரதம் போலத் தெளிவான நெற்கதிர்கள் முற்றித் தலை கவிழ்ந்து சிறந்தன. 31

பேரின்பத்து அமுதுஉண் பார்கள்
பேணிய விளைவு போலும்,
நாரியர் பருவம் கண்டு
நசைஉணர் வகைந யம்போல்,
சாரியும் ஈரைந் தாம்பூந்
தருவிளைவு அறிந்து சார்ந்து,
சேர்இன்ப விளைவும் போல
விளைந்தன செந்நெல் சாலி.

பேரின்பமாகிய அமுதத்தை உண்பவர்கள் நிரந்தரமாகக் காக்கும் விளைவு போலவும், பெண்களின் பருவஎழில் கண்டு ஆசையைக் குறிப்பாகச் சொல்ல அவர்கள் உணர்ந்து கொள்ளும் போது ஏற்படும் இன்ப விளைவு போலவும், பத்து வகையான தெய்வமரங்கள் வரிசையாக விளைந்ததைப் போலவும் ஏற்படும் மகிழ்ச்சி தந்து, செந்நெல் விளைந்தன. 32

## அரிவடை

வண்டுஒலி நீலம் ஆம்பல்
வனசமும் படஅ ரிந்து
கண்டு,அரிச் சும்மைத் தாக்கி,
கதிர்வரை எனப்போர் செய்து,
கொண்டுஉவை களைய மேதி
ஏறுடன் குவையத் தூற்றி,
எண்தொகு சாலி பண்டி
ஏற்றியே இல்லில் உய்ப்பார்.

நெற்பயிருடன் கூட வளர்ந்திருந்த, வண்டுகள் ஒலிக்கும் நீலமலர், ஆம்பல்மலர், தாமரைமலர் ஆகியவற்றை நீக்கி, நெற் பயிரை உழவர்கள் அரிவடை செய்தார்கள். அவற்றைக் கட்டு களாகக் கட்டி, கதிர்மலை போல் போராக்கினார்கள். வைக்கோல் களைப் போரடித்துப் பிரித்தார்கள். எருமை, எருதுகளைக் கொண்டு கடாவடி செய்தார்கள். நெற்குவியலை, பதர்நீங்கத் தூற்றினார்கள். மூட்டைகட்டி வண்டிகளில் ஏற்றி, வீட்டில் சேர்த்தார்கள். 33

புன்நில விளைவுள் ளிட்ட
பொதும்பரின் விளைவும் கானம்
தன்னிடை அவரை தோரை
சாதிகள் உளது மற்றும்
கன்னலும் முதலிட் டெல்லாம்
கரையிலா வளங்கள் ஆக்கிப்
பன்னும்நல் அறங்கள் செய்வார்
பகரும்இல் லறத்தி னோரே.

*நன்செய் நிலத்தின் விளைச்சல் மட்டுமன்றிப் புன்செய்நில விளைச்சல்களாகிய அவரை துவரை முதலிய தானியங்கள், தோட்ட விளைவுகளாகிய காய்கனி வகைகள், கரும்பு முதலிய எல்லையில்லா வளங்களையும் அவர்கள் வீடுகளில் சேர்த்துக் கொண்டார்கள். அவற்றை அறம்செய்ய, அந்த இல்லறத்தினர் விரும்பினார்கள்.* *34*

## இல்லறக் கடமைகளும் ஏற்றங்களும்

அஞ்சுமாறு ஆணை போக்கி,
அஞ்சுறாது அவனி ஆளும்
மன்சுறா உயர்த்த தோன்றற்கு
அஞ்சில்ஆறு ஒன்று போக,
வஞ்சுணா அறுசு வைத்தால்
அஞ்சுநீங் கிடும்மூ வர்க்கும்
அஞ்சுகா ரணர்க்கும் பூசை
அன்புடன் இயற்றி வாழ்வார்.

*அரசன் தீயோர் அஞ்சுமாறு ஆணைகள் இடுவான். அவன் அஞ்சாமல் அரசாட்சி செய்வான். நிலைபெற்ற மீன்கொடியை உயர்த்திய தோன்றலாகிய பாண்டியனுக்கு உழவார்கள் விளைச்சலில் ஆறில் ஒருபங்கைக் கொடுப்பார்கள். எஞ்சிய ஐந்து பங்கில் (தனக்கு ஒரு பங்கு போக) தென்புலத்தார், விருந்தினர், சுற்றத்தினருக்கு வஞ்சனம் (காய்களுடன்) கூடிய அறுசுவை உணவு படைப்பார்கள். பஞ்சபூத காரணராகிய பரமனுக்கு ஒருபங்கு வைத்து, அன்புடன் பூசனைகள் செய்து வாழ்வார்கள்.* *35*

சரிகை மெய்பெற நிலம்பெறத் தாழ்விலாது ஆற்றிக்
கிரியை நல்முதற்கு, உறுவிதைப் புக்,கிளர் போகம்
புரிகை, கால்வழி அன்பின்நீ ரால்புலம் கரந்து
வருகை ஞானம்போல் அமுதுண்டு மகிழ்சிறந் திடுவார்.

தனக்குள்ள ஒருபங்கில் சரிகை ஆடைகளை வாங்கி அணிந்து கொள்வார்கள்; நிலம் வாங்குவார்கள். குறைவற்ற பணிகளைச் செய்வார்கள். நல்ல முதலுக்கு விதைப்புக்கு அடுத்தபோகம் செய்வதற்கு, வாய்க்கால் வழியாக நீர் வருவதற்கு, நிலத்தை மறைக்குமளவுக்கு நீர் நிரப்புவதற்கு உரியன செய்வார்கள். ஞானிகள் அமுதம் உண்பது போல, மிகச்சிறந்த உணவையும் இனிதே உண்டு மகிழ்வார்கள். 36

அன்பர்கள் உற்ற போதில்
அடிபணிந்து அஞ்சி யேசூழ்ந்து
இன்பம்உற்று இனிய பேசி
இன்சுவை அமுது அருத்தி
பொன்புனை ஆடை நல்கிப்
போற்றுவர் பொருனை சூழ்ந்து
நன்பதி உற்ற மாந்தர்
நாள்தொறும் நயத்தால் மாதோ.

பொருனைநதி சூழ்ந்த நல்ல திருப்புடைமருதூர் மக்கள் நாள்தோறும் சிவனடியார்கள் வரும்போது, அவர்களின் திருவடிகளில் விழுந்து வணங்கி, பயபக்தியுடன், இன்ப மடைந்து, இனிய வார்த்தைகள் பேசி, இன்சுவை உணவுகளை அவர்கள் உண்ணப் படைத்து, பொன்னாடைகளை அணிவித்துப் போற்றுவார்கள். 37

நீடு நல்அறம் இயற்றுவோர் நீள்மறுகு எங்கும்
மாட மாளிகை உபரிகை மந்திர மகங்கள்
நாடு சாலைகள் நாவலோர் பட்டிமண் டபங்கள்
பீடு தங்கிய பெருமதிச் செல்வங்கள் பிறங்கும்.

தெருக்களில் வசிப்போர்கள் எல்லாம் இணைந்து, எப்பொழுதும் நிலைபெற்ற நல்ல தருமகாரியங்களில் ஈடுபடுவார் கள். அதன் பயனாக, மாடமாளிகைகள், உப்பரிகைகள், மந்திர யாகங்கள் செய்யும் யாகசாலைகள், புலவர்கள் வாதிடும் பட்டிமண்டபங்கள், பெருமை தங்கும் பேரறிவுச் செல்வங்கள் ஆகியவை செழித்தன. 38

பொருள் இரண்டினில் அளகையோன் தேயமார் பொருள்கள்
வரும்இ ரண்டும்இந் நாட்டுள மற்றுஇதற்கு உவமை
தெருளும் யோகரால் தேவரால் திரிபுவ னத்தும்
துருவி னும்,கிடை யாது,உற்றோர் புண்ணிய சுதரே.

அளகாபுரியின் குபேரனுக்குரிய சங்கநிதி, பதுமநிதி என்னும் இரண்டு அளப்பரும் செல்வங்கள் இங்கே உள்ளன. திரிலோக

சஞ்சாரிகளாகிய யோகிகளும் தேவர்களும் எவ்வளவு முயன்று தேடினாலும், இந்த ஊருக்கு உவமையாகச் சொல்லத் தக்கவூர் வேறெங்கும் கிடையாது. இங்குள்ளவர் யாவரும் செல்வச் செழிப்பால் இராஜகுமாரர்கள் போல இருப்பார்கள். 39

## மாத்திரைப் பெருக்கம்

மலைஒன் றேறிய வண்டுகள் பாடுவ; மைந்தர்
கலைஒன் றேறிய கலவிகள் கழுறுவ காதல்;
வலைஒன் றேறிய மணாளரை நோக்குவர் மாதர்
அலைஒன் றேறிய பாகுசெய்ப் பாய்ந்திடும் அயலே.

மலை என்ற சொல்லில் ஒரு மாத்திரை நீட்டினால், மாலை என்றாகும்; மாலைநேரத்தில் வண்டுகள் பாடும். கலை என்ற சொல்லில் ஒரு மாத்திரை கூட்டினால், காலை என்றாகும்; வலிமையுள்ள இளைஞர்களின் வாய் காதல் பெண்களைப் புணர்வதையே அக்காலையில் (காலை—நேரம்) — அக்காலை நேரத்தில் பேசும். வலை என்ற சொல்லில் ஒரு மாத்திரை பெருக்கினால், வாலை என்றாகும்; வாலைப் பெண்களின் — இளம்பெண்களின் கண்கள், தத்தம் கணவரை மாலைநேரத்தில் தேடும். அலை என்ற சொல்லில் ஒரு மாத்திரை அதிகமாக்கினால், ஆலை என்றாகும்; ஆலையில் தயாராகும் வெல்லப்பாகு, வயல்களில் பாய்ந்து, வயல்களை நிரப்பி, மேலும் பெருக்கெடுத்து ஓடும். 40

## மாத்திரைச் சுருக்கம்

ஒன்று நீங்கிய மாகத்தை ஆற்றுவோர்க்கு உவந்தே,
ஒன்று நீங்குகா னகம்தனை உதவிடும் கடுக்கை;
ஒன்று நீங்கிய வாரியின் இசையினுக்கு உவப்பாய்
ஒன்று நீங்கிய மகரந்தம் தேமலர் உகுக்கும்.

மாகம் என்ற சொல்லில் ஒரு மாத்திரை குறைத்தால், மகம் என்றாகும்; மகம் = வேள்வி. கானகம் என்ற சொல்லில் ஒரு மாத்திரை குறைத்தால், கனகம் என்றாகும்; கனகம் = தங்கம். வாரி என்ற சொல்லில் ஒரு மாத்திரை குறைத்தால், வரி என்றாகும்; வரி = ஒரு வகை வண்டு. மகரந்தம் என்ற சொல்லில் ஒரு மாத்திரை குறைத்தால், கரந்தம் என்றாகும்; கரந்தம் = கரந்தைமரம்.

உழவர்களின் வலியகரங்கள், யாகம் செய்யும் அந்தணர்க்ளுக்கு மகிழ்ச்சியுடன் தங்கத்தைக் கொடுக்கும். வண்டுகள் பாடும் இசைக்கு ஏற்பக் கரந்தைமலர்கள் தேனுடன் உதிரும். 41

## வசந்த வருணனை

மருதம் மேவிய கிளி,மறை ஓதுவ; பூவை
சுருதி கூட்டுவ; சொல்குயில் ஆம்;எனச் சோலை
கருதி யே,சிரம் கம்பிதம் செயமகிழ் கள்நீர்
சொரியும் வேங்கைகள் சொனம்தரும் செம்மலால் துணிந்தே.

வயல்களும் வயல்சார்ந்த ஊர்களுமாகிய மருதநிலத்தில் உள்ள கிளிகள் வேதம் ஓதும்; நாகணவாய்ப் பறவைகள் சுருதி கூட்டும்; அச்சோலைக் குயில்கள் ஆம் எனச் சொல்லும்; இவற்றைச் சோலையில் உள்ள செடிகளும் மரங்களும் சிரம் அசைத்து ரசிக்கும். வேங்கைமரங்கள் தங்கத்தை (பொன்னிற மலர்களை) வள்ளல் தன்மையுடன் வழங்கும். 42

கோல மென்மலர்க் கொம்பராம் வனிதையர் குழைந்து,
தாலம் பங்கயத்து இலைகொடு தளிர்க்கையால் சார்ந்து,
நீல நிம்பமுத்து உடன்நிராஞ் சனங்கள்செந்நீ ராடிச்
சாலும் போதுறும் மணந்தவர்க்கு இயற்றுவ சோலை.

அழகான மென்மையான மலர்க்கொம்புகள் ஆகிய பெண்கள், தட்டுப் போன்ற தாமரை இலைகளைக் கைகளில் ஏந்தி, நீல மலர்கள் (நீலமணிகள்) உருளும் முத்துகள் (தாமரை இலையின்மேல் உள்ள நீர்த்துளிகள்) கொண்டு ஆரத்தி எடுத்து முடிந்தவரை மகிழ்ச்சியை, மணமுடித்துச் சோலைக்கு வருபவர்கட்கு அளிக்கின்றனர். 43

திங்கள்வெண் குடைநி ழற்றச்
செறிகந்தி கவரி வீச,
மங்கலம் குயில்இ சைப்ப,
காமரம் இசைப்ப வண்டு
பங்கயம் களாஞ்சி ஏந்த,
முழவம்பைந் திரைகள் ஆர்ப்ப,
ஐங்கணை வசந்தன் காவில்
அரசுவீற் றிருத்தல் மானும்.

சந்திரன் குடையாக இருந்து நிழல் செய்ய, செறிவான குறுக்கத்திமரங்கள் கவரி வீச, குயில் மங்கலம் பாட, வண்டு சீகாமரப் பண்பாட, தாமரை எச்சில் துப்பும் பாத்திரம் ஏந்த,

*அலைகள் மத்தள ஒலி எழுப்ப, சோலையில் மன்மத ராசன் அரசுவீற்றிருப்பதைப்போல் உள்ளது.* 44

வண்டு பாடுவ மயில்விரித் தாடுவ குயில்,வாய்
விண்டு நேரிசை கூடுவ; ஆம்பல்வாய் விள்வ
கெண்டை நேர்விழி உற்பலம் காட்டுவ கிளர்ந்து
கண்டு எனும்சொலார் பயில்அரங்கு இசையும்அக் காவே.

*அந்தச் சோலை ஒரு நாட்டிய அரங்கம் போலவும் உள்ளது. வண்டுகள் பாடுகின்றன; மயில்கள் தோகை விரித்து ஆடுகின்றன; குயில்கள் வாய்விரித்துச் சுருதிகூட்டுகின்றன; ஆம்பல் வாய்விரிக்கின்றன; கெண்டை மீன்கள் விழியசைக் கின்றன; நீலோற்பலம் கண்ணழகு காட்டுகின்றன. இதனால் கற்கண்டைப்போல் இனிப்பான மொழிபேசும் பெண்கள், கிளர்ச்சியுடன் நடனம் நிகழ்த்தும் அரங்கம் போல அச்சோலை உள்ளது.* 45

மலரின்தண் டலையை நோக்கி
மன்னிய கருமே கங்கள்
கலைமதி முகத்தி னார்தம்
கூந்தலைக் கவர்ந்தீர் என்னத்
தலைஅசைத்து அன்னார் ஓதி
தன்னைநீ ரே,க வர்ந்தீர்
அலர்என நாணம் உற்றே
அந்தரத்து ஏகிற்று அன்றே.

*மலர்கள் பொருந்திய சோலையைப் பார்த்து, மேகங்கள் 'சந்திரன் போன்ற முகத்தைக்கொண்ட பெண்களின் கூந்தல் அழகை நீங்கள் ஒத்ததால் போலிகள்' என்று கேலி பேசியது. சோலைகள் தலையசைத்து அக்கருத்தை ஒத்துக்கொண்டு 'மேகங் களே! நீங்கள் பெண்களின் கூந்தலில் கருத்த நிறத்தைக் கவர்ந்து கொண்ட போலிகள்' என்றன. மேகங்கள் வெட்கப்பட்டு, வானத்துக்கு ஓடிவிட்டன.* 46

## நாட்டுவளம் – திணைமயக்கம்

வரைவளர் குறிஞ்சியும் வளம்கொள் முல்லையும்
கரைஇலா வளம்தரும் மருதும் கம்பலைத்
திரைதரு நெய்தலும் செறிந்து,அ தன்பொருள்
தரைஎலாம் மயங்கிய தன்மை சாற்றுவாம்.

*மூங்கில் வளரும் மலைகளையுடைய குறிஞ்சிநிலமும், காடுகளையுடைய முல்லைநிலமும், எல்லையில்லாத விளைச்சல்*

களைக் கொடுக்கும் வயல்களையுடைய மருதநிலமும், ஒலிக்கும் அலைகளைக் கொண்ட நெய்தல் நிலமும் தரும் பயன்கள் யாவும் கலந்து சேரும் பொருனை நாட்டு வளத்தைச் சொல்வோம். 47

குறிஞ்சியின் தேன்களும் கொல்லை மூஇனத்து
உறும்,ததி பால்களும் மருதம் ஓங்கியே
சிறந்திடும் கன்னலும் அறத்தில் சிந்திய
நிறம்தரு நீர்களும் உவரி நீத்ததே.

குறிஞ்சிநிலத்தின் (மலைநிலத்தின்) கொம்புத்தேன் வழியும். அதில் காட்டுநிலத்தில் ஆயர்பாடியில் பெருக்கெடுத்த தயிரும் பாலும் கலக்கும். அவை மருதநிலத்துக் கருப்பஞ்சாற்றுடன் கலந்து, தருமமாகச் சிந்திய நிறம்பொருந்திய நீருடன் நெய்தல்நிலக் கடலில் கலக்கும். 48

தேனுடன் தினைகளும் செலுத்தி முல்லையில்
கானவர் கொள்ளுடன் கள்ளும் கொள்வன
நானமும் தேரையும் நல்கி ஆயர்கள்
மாநிலம் தெரிசனம் செந்நெல் மாற்றுவர்.

தேனையும் தினையையும் கொடுத்துக் குறிஞ்சிநில மக்கள் முல்லைநில மக்களிடமிருந்து கொள்ளு என்ற தானியத்தையும், கள்ளையும் பண்டமாற்றாகக் கொள்வார்கள். மணப்பொருளையும் வரகரிசியையும் கொடுத்து, முல்லை நில மக்கள் மருதநில மக்களிடமிருந்து செந்நெல் பெற்றுக் கொள்வார்கள். இப்படிப் பண்டமாற்றுச் செய்பவர்கள், உலகம் அறிந்த வியாபாரிகள் ஆவர். 49

பண்ணும் சந்தில்வாழ் அறுபதம் குறிஞ்சியாழ்ப் பழனம்
பொன்அ லர்த்திய தாமரை வண்டுக்குப் புகன்று
துன்னும் கம்பலை யாழினைப் பயிலுவ தோகை
அன்னப் பார்ப்பினுக்கு அடைகிடப் பன,அளிக் கயலே.

நெருங்கிய மலைப்பொந்தில் அடைகட்டி வாழும் வண்டுகள், வயலில் முளைத்த பொன்போன்ற, மலர்ந்த தாமரையை மொய்க்கும் வண்டுகளுக்குக் குறிஞ்சியாழின் ஓசையைக் கற்றுக்கொடுக்கும். அந்தக் கூட்டிசைக்கு ஏற்ப மயில்கள் ஆட்டம் பயிலும். அந்த மயில்கள் ஆடுவதற்கு முன்பு, பக்கத்தில் இருந்த அன்னப் பார்ப்புகளுக்குத் துணையாக இருந்தன. 50

மேதி சாரலில் தினைதரித்து அம்மடு மேவி
போதுஉ லாம்அறல் உழக்குவ; போதகம் மருதில்

தீதுஇ லாக்கழை குதட்டியே தேம்பொதி சோலைச்
சூதம் மேவியே முறச்செவி துளக்கியே துயிலும்.

எருமைகள், மலைச்சாரலில் தினையை அறுத்த தாள்களைத் தின்றன. பிறகு மடுவில் மலர்மொட்டுகள் மற்றும் அறல் மணல் ஆகியவற்றைக் கலக்கின. யானைகள், வயல்களில் உற்ற நல்ல கரும்புகளைத் தின்று குழப்பி, தேன்பொதிந்த சோலையில் உள்ள மாமர நிழலுக்குச் சென்று, முறம்போன்ற காதுகளை ஆட்டிக்கொண்டு உறங்கின. 51

பாறு மேவிய பாலை,முல் லை,ச்சிறார் படர்ந்து
சூறை ஆடுவர்; குறிஞ்சியில் சூறைமா ருதம்போல்
வீறு சான்றிடு மீளியும் விடலையும் நாகத்து
ஏறி யேபடர் கறியினை எறிந்துஉகுப் பனரே.

பருந்துகள் நிறைந்த பாலை நிலத்தில், முல்லைநிலத்து ஆயர்பாடிச் சிறுவர்கள், பொருள்களைக் கவர்ந்து செல்வார்கள். மீளி, விடலை என்ற உயர்ந்த ஆண்கள், சூறைக்காற்றுப் போல் நாகமரத்தில் ஏறி, அங்கே படர்ந்துள்ள மிளகுக் கொடியை இழுத்து, மிளகுகள் உதிரச் செய்வார்கள். 52

வேலை மேவிய துவர்க்கொடி சந்தன விருக்கத்
தோலை மேவியே படர்வன; மருதமாம் துறையும்
சீலர் சாடிய சிற்றிலால் வெகுண்டுஅழச் சிறுமின்
பாலர் மேல்அணி முத்தினைப் பரித்தெறி வனவே.

கடலில் வளர்ந்த பவளக்கொடி, மலையில் உள்ள சந்தன மரத்தின் தோலைப்பற்றிப் படரும். மருதநில நீர்த்துறையில், சிறுமியர் கட்டிய மணல்வீட்டைச் சிறுவர்கள் சிதைக்க, அதனால் சிறுமியர் வெகுண்டு அழுது, சிற்றில் சிதைத்த சிறுவர்கள்மேலே தாம் அணிந்த முத்துமாலையைப் பறித்து எறிவார்கள். 53

நெய்தல் அம்களிப் பரதயர் கொடிச்சியர் நேர்ந்து
துய்ய முத்தினுக்கு எடைக்குஎடை ஏனலைச் சொரிவர்
மையல் ஓதிய உழத்தியர் முல்லைமா தர்பால்
தொயி லால்எழு துவர்முலைச் சுவட்டினைப் பார்த்தே.

நெய்தல்நிலத்து, கள்ளுண்ணும் அழகான பரதயர் தரும் நல்முத்துக்குச் செந்தினை அரிசியைக் கொடிசியர் எடைக்கெடை கொடுப்பார்கள். மயங்கவைக்கும் கூந்தல் கொண்ட உழத்தியரின் முலைமுகட்டைப் பார்த்து, அவற்றில் தொய்யில் என்னும் படம் எழுதி, அவற்றைமேலும் அழகுபடுத்துவார்கள். 54

மாது ளங்கனி விளந்தை மாதரார்
காது வேற்கண்ணி னைக்,கவர்ந்த நீஎன
ஓதிடில் ஆதனம் உனக்கும் உண்டெனத்
தாதுக நாணொடும் தலைக விழ்ந்தவே.

(மாதுளஞ்செடியிலும் சிறிதளவு முள் உண்டு; விளாமரத்தி லும் சிறிதளவு முள் உண்டு. மாதுளை, மருதநிலச்செடி; விளா, பாலைநிலமரம்) மாதுளை விளாமரத்தைப் பார்த்துப் 'பெண் களின் துன்பம்செய்யும் கண்களை நீ திருடிக் கொண்டாய்' (முள் துன்புறுத்துவது) என்றது. அதற்கு விளாமரம், 'நீ மட்டும் என்ன? ஆ! தனம் (முலை) உனக்கும் உண்டே! '(மாதுளங்கனி, சிவப்பாலும் திரட்சியாலும் முலைக்கு உவமை) என்றது. 55

கும்பம் போன்றகாய்க் குரும்பைஇன் தாழையைக்
கூந்தல் என்றுஉயர் போந்தை
அம்பல் பேசுவ கவர்ந்தனை அம்நலார்
முலையை என்றுஅதை நாடி
கும்பம் என்றுஉயர் தாழையும் அவர்குழல்
கவர்ந்தும் கட்டறி யாய்,என்று
உம்பர் ஓங்கியே தலைஅ சைத்திடு
வனஓங் கியஉய் யானம்.

பூர்ணகும்பம்போலச் சுற்றி இலைதொங்கும் தாழையைக் குரும்பை விட்டிருக்கும் கூந்தல்பனை கேலி பேசியது, 'அழகிய பெண்களின் முலையைக் கவர்ந்து கொண்டாய்' என்று. (தாழைக்காய், முளைக்கும் முலைக்கு உவமை) தாழைகூந்தல் பனையைப் பார்த்து, 'பெண்களின் கூந்தலை நீ கவர்ந்து கொண்டாய். ஆனாலும், அவர்கள் கூந்தலை அழகாகக் கட்டிக்கொள்வதைப் போல உனக்குக் கட்டிக்கொள்ளத் தெரியவில்லையே' என்றது. தாழையும், கூந்தற்பனையும் இந்த நகைச்சுவைக்கு மகிழ்ந்து நிமிர்ந்து தலையசைத்தன. இது சோலையில் நிகழ்ந்த காட்சியாகும். 56

## கொண்டுகூட்டுப் பொருள்கோள் பாடல்

வரிச்சு ரும்பு வயிர்இசை வந்துஉலாம்
விரிக்கும் சாமரம் மேகம் எதிர்புகை
செரிக்கும் தோகை அரம்பையர் சந்தனக்
கிரிக்குள் ஈசன் பவனி கிளக்குமே.

(இந்தப் பாடல் சொற்களின் அடுக்காக இருக்கும். எந்தச் சொல்லை எந்தச் சொல்லுடன் சேர்த்தால் பொருள்வரும்

என்று யூகித்துப் பொருள்காணவேண்டும்) தோகை (மயில்) சாமரம் விரிக்கும் (வீசும்); மேகம் புகை செரிக்கும் (மேகம் புகையைக் கீழ்நோக்கித் தவழவிடும்); ஈசன் எதிர்வரிச் சுருப்பு இசைஉயிர் கிளக்கும் (உலாவரும் சிவனின் எதிரில் இசையில் வல்ல வயிரியர் போன்று இசை பாடும். சந்தனக்கிரிக்குள் — பொதிகை மலையில்; அரம்பையர் — தேவர் உலக அரம்பை மாதர்கள், வந்து உலாம் — வந்து நடனமாடுவர். இசை பாடுவது, நடனம் ஆடுவது, புகை போடுவது, சாமரம் வீசுவது ஆகியன, சிவன் திருவீதி உலாவரும்போது நடக்கும் நிகழ்ச்சிகள். இயற்கையாக நடைபெறும் இந்நிகழ்ச்சிகளால், இறைவனின் திருவீதி உலா நினைவுக்கு வருகிறது. 57

## இருவகைப் புகைகள்

வேள்வி யின்புகை வேடர் புனத்துஎரி
காழ்அ கில்புகை கங்குலைக் காட்டுவ
நீள்சி னைப்பணை முத்த நெடுவரை
சூழ்ம ணிக்குலம் சொல்பகல் காட்டுமே.

பொதிகை நாட்டில் யாகங்கள் வளர்ப்பார்கள்; வேடர்கள் அகில் மரங்களை எரிப்பார்கள். இரண்டு புகைகளும் வானத்தில் படர்ந்து, பகலையே இருட்டாகக் காட்டும். நீண்ட கிளைகளை உடைய மரங்கள் மிகுந்த காடுகளில், நவமணிகளும் நிறையக் கிடக்கும். அவற்றின் ஒளியால், இரவுநேரம்கூடப் பகல்போல் வெளிச்சமாக இருக்கும். 58

அருவி ஓசையும் ஐவனம் தூற்றுவோர்
கருவி ஓசையும் கானம்செய் காமரம்
மருவி யாழ்செயும் ஓசையும் கண்டு,வான்
உருமின் ஓசை,ஒ துங்கிடும் உட்கியே.

அருவிகளின் ஓசையும், வரகரிசியைத் தூற்றுபவர்கள் அடிக்கும் கிணைப்பறை ஓசையும், காட்டில் காற்றடிப்பதால் ஏற்படும் 'காமரம்' என்னும் சீகாமரப் பண்ணின் ஓசையும், யாழோசையும் கலந்த பேரோசையால், இடியோசையும் பயந்து ஒதுங்கிக்கொள்ளும். 59

கயிலைநா யகன்புடை மருதக் காவினில்
நயமுடன் இருத்தலால் நம்பன் வில்எனும்
வயம்உறும் மேருவே பொதியம் வந்துஇழி
பயன்மலி பொருந்தமே பரந்த கங்கையே.

திருப்புடைமருதூர்க் கோயிலில் கயிலைநாதன் உள்ளான். அவன் சோலையின் மத்தியில் உள்ளான். அவன் திரிபுரம் எரிக்க மேருமலையை வில்லாக வளைத்தவன். அந்த மேருவைப் போன்றது பொதிகை. பொதிகையில் வரும் அருவியால் தோன்றும் பொருநை, பயன்தரும் கங்கைக்குச் சமமானது. 60

அகத்தி யன்,இறை சிகரத்து அணிந்துஉறு
மகத்து வானநீர் வரும்பொ ருந்தமே
சகத்துஇயல் கடந்தவர் சாரும் நீர்மையால்
சிகைத்தனிப் பொதிகையே கயிலை செப்பவே.

இறைவனின் தலையில் அணிந்துள்ள ஆகாச கங்கையின் நீரே அகத்தியன் வழியாக வந்த பொருநைநீர். உலக இயல் கடந்த ஞானிகள் இதில் நீராடுவர். உச்சி உயர்ந்த பொதிகை மலையே கயிலாய மலையாகும். 61

அங்க யல்கணாள் தனைப்பாணி பட்டதும், அமலன்
மங்கை யோடுஉயர் திருமணக் கோலத்தை மலையும்
தங்கு மாதவர்க்கு அருளிய தன்மையும் தமிழால்
பொங்கு வேதமும் பொலிந்திடக் கிளர்ந்ததுஇந் நாடே.

அழகிய கயல்மீன்போன்ற கண்களையுடைய உமையம்மையை இறைவன் திருமணம் செய்துகொண்டதும், இறைவன் உமையம்மையுடன், உயர்வான திருமணக் கோலத்தைப் பொதியமலையில் தங்கிய அகத்தியர்க்குக் காட்டியருளியதும், தமிழ்பொங்கி எழும் வேதமாகிய தேவாரம் பெற்றதும் உயர்ந்ததும் ஆகியது இந்நாடே ஆகும். 62

மகத்து வம்பெறு பொதிகைநாட் டினுக்குஉப மானம்
சகத்தில் வேறிலை; அதன்பயன் முழுவதும் சாற்ற
அகத்தி யர்க்குஇணை யானபேர்க் கும்அரிது; அதனை
இகத்தில் யான்சொல முடியுமோ? இயன்றவாறு இதுவால்.

பொதிகைநாடு மகத்துவம் பொருந்தியது. அதற்கு உவமையாகச் சொல்லக்கூட வேறு நாடு உலகத்தில் இல்லை. அதன் சிறப்பை முழுதும் சொல்ல, அகத்தியனுக்கு இணையான புலவர்களாலும் இயலாது. எனவே, அதன் பெருமையை என்னால் முழுதுமாகச் சொல்ல முடியவில்லை. இயன்றவரை சொன்னேன். 63

# 6. திருநகரப்படலம்

பொதிகைநாட் டியல்பினைப் புகன்று மற்றதன்
அதிகம்ஆ கியதலம் ஆன பதிக்குஇணை
மதிபுனை சோலைசூழ் மருத மாநகர்ப்
பதிவளம் இயன்றவா பகரல் உற்றனம்.

*பொதிகைநாடு பற்றிய செய்திகளில் புனைவு கலவாமல் இயல்பானவற்றை இதுவரை சொல்லி, அந்நாட்டில் மேலான தலம்ஆன பொதிகைக்கு இணையான — சந்திரன் தங்கும் உயரமான மரங்களைக்கொண்ட — சோலைகள் சூழ்ந்த திருப்புடைமருதூர் என்னும் பதியின் வளத்தை, இயன்ற அளவு சொல்லத் தொடங்குகிறேன். 1*

## சிறப்புப் பெயர்களும் இறைவன் திருப்பெயரும்

புண்ணிய வனிதையும் புகழ்செய் மங்கையும்
தண்அளி அன்பெனும் சரதப் பேதையும்
பண்அமர் நீதிநூல் பருவப் பாவையும்
நண்ணிய தலம்மண நகரம் என்பவே.

*புண்ணியம் புகழ், கருணை, அன்பு, நிலைப்பாடு, இசை மலிந்த நீதிநூல் என்பவை பருவப்பெண்களாக விளங்கி, நெருங்கிய தலம் இது. ஆகையால், இதை மணநகரம் என்பார்கள். 2*

கடல்நெடுந் துகில்உடைக் கன்னி நாடெனும்
மடமகள் தனவரை வயங்கு மாலையே
தடநெடும் பொருனையூர் சார்ந்த மாமணி
நடுமணி மருதமா நகரம் என்பவே.

*இவ்வூருக்குக் கடலே, நெடிய உடை. கன்னிநாடு என்னும் பெண்ணுக்கு, இவ்வூரே அழகிய பெண்பிள்ளை. இவளுக்குரிய மாலை, அகன்ற நீண்ட பொருனை. கன்னி நாட்டின் மாமணியாக நடுமணியாக இந்த மருதமா நகரம் உள்ளது. 3*

சாகரம் வேலியாம் தரணி பொன்னிலம்
பூகதம் சூழ்வயல் பொருந்த நாடதில்
வாகுசேர் கன்னலாம் வளங்கொள் ஊரதன்
பாகுசேர் கட்டிமா மருதப் பாடியே.

கடலை வேலியாகக் கொண்ட உலகில் பொன்விளையும் பூமி எனும் புகழ்சூழ்ந்த வயல்களையுடை நீர்நாட்டில், பருத்த கரும்புகள் விளையும் வளங்கொண்ட ஊர் இதுவே. மருதநிலத் தின் வெல்லக்கட்டி இவ்வூரேயாகும். 4

பாருடைக் காஞ்சியே அறம்ப லித்தது
சீருடை அளகையே பொருள்சி றந்தது
தாருடை வானமே போகம் சார்ந்ததாம்
ஏருடை முத்திவீ டிவ்அ ருச்சுனம்.

காஞ்சிபுரமே, தருமம் செழித்த நகரம்; அளகாபுரியே, செல்வம் செழித்த நகரம்; தேவலோக நகர்கள், இன்பம் செழிப்பவை. திருப்புடைமருதூர், மோட்சம் தரும் நகரம். 5

அத்தலம் மூன்றினும் அமைந்த ஒவ்வொரு
வித்தகம் இந்நகர் விரும்பு வோர்பெறு
நித்திய அறம்பொருள் இன்ப நீர்மையும்
உத்தம மோட்சமும் உறுவ திந்நகர்.

அந்த மூன்று நகரங்களாலும் ஒவ்வொரு நன்மை கிடைக் கும். இந்த நகரை விரும்புபவர்களுக்கு, நிலையாக அறம் பொருள் இன்பத் துய்ப்புகளுடன், சிறந்த முத்தியும் கிடைக்கும். 6

இந்நகர் சிவநகர் என்ப மானத
நன்னதி பொருனையே நதியின் பாங்கர்வாழ்
பொன்னணி கற்பகம் புடைஅ ருச்சுனம்
மன்னிய நாயகன் மருத வாணனே.

இது சிவநகர்; இங்குள்ள பொருனை, மானசரோவர் ஆகும். இதன் அருகில் உள்ள மருதமரமே, பொன்மயமான கற்பகவிருட்சம் ஆகும். இங்குள்ள மருதவாணனே நிலைபெற்ற தலைவன் ஆவான். 7

சொல்வளத் தாரகச் சுருதி வாய்மையும்
நல்வித சாதக நலத்தை ஈவதும்
கல்வியைத் தருவதும் கவலை தீர்ப்பதும்
செல்வமே வியப்புடை மருதச் சேத்திரம்.

வளமான சொல்லாகிய தாரக மந்திரத்தையுடைய வேதத்தின் உண்மையையும், நல்லவிதமாகப் பயிலும் மந்திர உச்சாடனப் பயனைக் கொடுப்பதும், கல்வியைக் கொடுப்பதும், மனக்கவலைகளை நீக்குவதும், செல்வமாகவே விளங்குவதும், வெற்றிபொருந்திய திருப்புடைமருதூர்த் திருத்தலமாகும். 8

செய்ய பூமகள் சேர்ந்தசெந் தாமரை
துய்ய பூமகள் சோதிஅம் போருகம்
சையம் ஈன்ற மகள்இம யாசலம்
வையம் ஏத்தும் மருதெனும் மாநகர்.

*திருமகளின் செந்தாமரையும் இதுவே; தூய கலைமகளின் ஒளி பொருந்திய வெண்டாமரையும் இதுவே; மலைபெற்ற மலைமகளின் இமயமும் இதுவே என உலகம் இவ்வூரைப் புகழ்கிறது.*

*9*

### வளங்கள்

படியில் மிக்க மருதெனும் பைந்தொடி
வடிவில் சூழ்ந்திடும் காஞ்சிவ ளந்திகழ்
கொடியில் பூத்த குலமலர் கொய்தளிர்
கடிகொள் காவும் கழனியும் காட்டுமே.

*காஞ்சி என்னும் வளம் திகழும் கொடியில் பூத்த குலமலர் இதுவேயாகும். உலகில் சிறந்த புடைமருது என்னும் மங்கல மங்கை, அழகால் மிக்கவள். கொய்யும் தளிர்களும் மணமும் கொண்ட சோலைகள், வயல்கள் ஆகியவை இவ்வுண்மையை மெய்ப்பிக்கும்.*

*10*

ஆர ணத்தொடுஎண் எண்கலை ஆய்ந்திடும்
கார ணத்தரும் காமுகர் இன்பமும்
வாரி ணக்கிய தனமட வார்களும்
சீரி ணக்கிய செல்வரும் சேர்பதி.

*வேதத்தையும் அறுபத்து நான்கு கலைகளையும் ஆராய்ச்சி செய்பவர்களாகிய பயன்படும் பணி செய்பவர்களும், இன்பம் துய்க்கும் காமுகரும், கச்சினால் இறுகக் கட்டிய பெருத்த முலைகளைக் கொண்ட பெண்களும், சிறப்புப் பொருந்திய செல்வரும் சேர்ந்த ஊர் இதுவேயாகும்.*

*11*

எங்கும் செல்வம் நிறைந்திடும் இல்களே
எங்கும் அன்னங்கள் ஈபவர் சாலையே
எங்கும் புண்ணியர் போற்றும் இடங்களே
எங்கும் உத்தமர் எண்ணிலர் என்பவே.

*இங்குள்ள வீடுகள் எல்லாம் செல்வம் நிறைந்தவை; தருமசாலைகளில் அன்னதானம் எப்போதும் நடைபெறும்; எங்கேயும் புண்ணியம் செய்பவர்களே உள்ளனர்; எண்ணற்ற உத்தமர்கள் இவ்வூரில் உள்ளனர்.*

*12*

வீதி தோறும் விழாஅணி காளையர்
போது சாந்தம் புனைந்துயர் பொன்எனும்
மாதர் மைந்தர் மகிழ்ந்தினி தாய்உறை
ஏதம் அற்றவர் வாழ்பதி எங்கணும்.

*வீதிகளில் எல்லாம் விழாக்கள் செய்யும் இளைஞர்கள்; மலர்கள் சந்தனம் ஆகியவை அணிந்து பொன்போன்ற பெண்களும், வலிமையுடைய ஆண்களும் இனிமையுடன் வாழ்கின்ற ஊர் இது. குற்றமற்றவர்களே எங்கும் இருக்கும் ஊர் இதுவேயாகும்.* 13

## வீதிகள்

ஆரண விதிகளும் ஆக மங்களும்
காரண ஒழுக்கமும் கருணை அன்பினால்
ஓரணி மனைகளில் விருந்தி யற்றுவோர்
சீரணி முகமனும் சிறந்த வீதியே.

*வேதவிதிகள், ஆகமங்கள், காரண ஒழுக்கம், கருணை, அன்பு இவையெல்லாம் நிறைந்த வீடுகளில், விருந்தினரை உபசரிக்கும் சிறப்பான முகமன் வார்த்தைகள் வீதிகளிலெல்லாம் ஒலிக்கும்.* 14

## சிலேடை

மணங்கள் எய்துவ காவும் மனைகளும்
அணங்கு செய்வத் கங்களும் மாதரும்
வணங்கிச் சூழ்வன மைந்தரும் சாலியும்
இணங்கு வீதிகள் எங்கணும் இன்னவே.

*சோலைகள், மணம் பொருந்தியவை; வீடுகளில் திருமணங்கள் நடக்கும். வியக்கத்தக்கவையாக வீடுகள் இருக்கும்; தெய்வத் தன்மை உள்ளவர்களாகப் பெண்கள் இருப்பர். இளைஞர்கள் பெரியவர்களைக் கடக்கும்போது, வணக்கம் செய்துகொண்டே போவார்கள்; செந்நெல், கனத்தினால் தலைவணங்கும். எல்லா இடங்களின் நிலைமையும் இதுவேயாகும்.* 15

## சோலைவளம்

சந்த னம்அகில் சண்பகம் தண்பலா
மந்த ரம்மகிழ் புன்னைநன் மாதவி
கொந்த லர்க்கொன்றை கோங்குடன் கூவிளம்
கந்தி பாடலம் காவுகள் எங்கணும்.

சந்தனம், அகில், சண்பகம், குளிர்ந்த பலா, மந்தாரம், மகிழம், புன்னை, மாதவி, கொன்றை, கோங்கு, கூவிளம், குருக்கத்தி, பாடலம் என்னும் மரங்களும் கொடிகளும் சோலைகளில் உள்ளன. 16

புன்கும் புன்னையும் பூம்பொரி தூற்றுவ
நன்கு முப்பழ மும்தரு நல்குவ
வின்கு லைக்கமு கம்அரை ஏந்துவ
தென்ப திக்குப சாரம்செய் சோலையே.

சோலைகளில், புன்கு, புன்னை முதலியன, மகரந்தப் பொரி களைத் தூவும். முக்கனிகளைத் தரும் மரங்கள் இருக்கும்.பாக்கு மரங்கள், குலை விரிந்து ஏந்தி நிற்கும். இவை தெற்குக் கயிலாயத் திற்கு உபசாரம் செய்வதுபோல் அமைந்திருக்கும். 17

## மடக்கு (அடிமடக்கு)

1. வனங்கள் எய்துவ தாமரை ஆம்பலே
2. வனங்கள் எய்துவ தா,மரை யாம்,பலே
3. அனங்கள் எய்துவ சாலை, உவளக(ம்)
4. மனங்கள் எய்துவ சாலை உவளகம்.

*1. தாமரையும் குமுதமலரும் அழகுபெறும். (வனம்—அழகு). 2. காடுகளில் (வனங்களில்) தாவும் மரை எனப் பெறும் விலங்குகள் பல; (ஏ — ஈற்றசை). 3. சோறு, அறச்சாலை களின் ஒருபக்கம் கொட்டிக்கிடக்கும். (உவளகம் — ஒரு பக்கம்) 4. மனங்கள் அரண்மனையின் (சாலையின், இல்லத் தின்) அந்தப்புரத்தில் (மனைவி இருக்கும் இடத்தில், மனைவி யினிடத்தில்) இருக்கும். (காதலர், காதலியின் நினைவுடனேயே இருப்பர்.)* 18

## வீதிகள்

மாக மஞ்சிவர் மாளிகை மஞ்சியே
நாக மிஞ்சிய நன்புற மிஞ்சியே
சோக மிஞ்சிடும் சொல்லெழுத் தஞ்சினால்
மேக மஞ்சனம் வீசிய வீதியே.

ஆகாயம் (மாகம்), மேகங்களை உடையது; அம்மேகங்கள், திருப்புடைமருதூரில் உள்ள மாளிகைகளின் மேல் தங்கும். அந்த மாளிகைகள், பெட்டிகளை (மஞ்சி—பெட்டி) அடுக்கியதுபோல் இருக்கும். மலைகள்மிகுந்த நல்ல புறநகர்மதிலும் உடையதாகும். சொல்லாகவும் எழுத்தாகவும் உள்ள சிவாயநம என்பதை

உச்சரிப்பதால், மேகம் மஞ்சனமாக (நீராட்டாக) வீசும் திருவீதிகளில் ஆடுகள் மிகுதியாக இருக்கும். (ஆடுகள் இருப்பன செல்வ வளத்தைக் குறிக்கும்) 19

**தோகை வஞ்சி சுருங்கிடை வஞ்சியே**
**மேக மென்குழல் மின்குரல் மென்குழல்**
**பாக ணஞ்சனம் பானங்கள் அஞ்சனம்**
**வாகு டன்பயில் வீதியே போகமே.**

மயில்போன்ற பெண்ணின் சுருக்கமான இடை, சீந்தில் கொடிபோல மெல்லிதாக இருக்கும். (வஞ்சி—பெண்; சீந்தில் கொடி) மேகம்போன்று பெண்ணின் சுருட்டிமுடிந்த கூந்தல் கருத்திருக்கும்; மின்னல்போலப் பளிச்சிடும் வார்த்தைகள் பேசும் குரல், புல்லாங்குழல் போல இசைக்கும். (குழல் — சுருட்டிமுடித்த கூந்தல் — புல்லாங்குழல்) பா, கணம், சனம் — அதாவது அழகுக் கூட்டமாகிய பெண்கள் (பா—அழகு); அவர்களின் கருங்குவளை போன்ற (பானல் — கருங்கு வளை) கண்கள் கருப்பானவை. (அஞ்சனம் — கருப்பு) இப்படிப் பட்டவர்கள் ஒழுங்குடன் (வாகு — ஒழுங்கு) நடக்கும் வீதிகள், காட்சிக்கு இன்பம் தருவனவாகும். 20

**அஞ்சு மாறுள தால்நில வஞ்சுமே**
**எஞ்சு மாறுமின் னாரிடை எஞ்சுமே**
**நஞ்சு மாறுமின் னார்விழி தஞ்சமே**
**கஞ்ச மாதர் உலவு கடிநகர்.**

அஞ்சத்தகும் வகையில் பல பெண்களின் முகம் உள்ளன. எனவே, நிலவு அச்சப்பட்டுத் தேயும். வானத்திலிருந்து சந்திரன் பூமியைப் பார்க்கிறது. பெண்களின் முகம் தன்னைப் போலவே இருப்பதால் தனக்குப் பெருமை இல்லையே என்று அஞ்சும், தேய்ந்து தேய்ந்து மிச்சம் இருக்கிறது என்று சொல்லுமளவுக்கு, மின்னல்போன்ற பெண்களின் இடை குறைவாக இருக்கும். ஆடவர் மனம் நைந்துபோகும் படியாகப் பெண்களின் கண்கள், விஷம் பொருந்தியனவாக இருக்கும். கஞ்சம் எனப்படும் தாமரையில் உள்ள திருமகள் ஒருத்தியே. இவ்வூரில் உலாவும் அனைத்துப் பெண்களும் திருமகள்களே. 21

**வளமு லாவு வனசத் திருப்பிதே**
**வளமு லாவு வனசத் திருப்பிதே**
**களம ரஞ்செய் கவிதைக் குரல்களே**
**களம ரஞ்செய் கவிதைக் குரல்களே**

*அழகு உலாவரும் தாமரையின் (திருமகளின்) இருப்பு இவ்வூரேயாகும்; செல்வம் பொருந்துவனவாகிய சத்துகளின் இருப்பு இதே ஆகும்; அடியார்கள் (களமர்) அழகாகச் செய்கின்ற — இசையுடன் பாடுகின்ற, குரலால் பாடுகின்ற கவிதைகளாலே. உழவர்கள் (களமர்) விதைகள் கதிர்களாக (குரல் — கதிர்) அழகு செய்யட்டும் (அம் செய்க)* 22

அரசர்கள் நடத்துதேர் ஒலியும் மன்னவர்
பரிதொடுத் திடுநடை ஒலியும் பாகர்கள்
கரிசெல நடத்துகம் பலையும் கஞ்சமார்
திருவளர் மங்கலம் சிறந்த வீதியே.

*அரசர்கள் செலுத்தும் தேர்ஒலியும், அரசர்கள் குதிரை ஓட்டுதலால், குதிரையின் குளம்பொலியும், பாகர்கள் யானையை நடத்திச்செல்லும் ஒலியும், தாமரையில் தங்கியுள்ள திருமகள் நடமாடும் தெருக்களில் ஒலிக்கின்றன.* 23

### சிலேடை

1. மதிஉலாவுவ சோலையும், மேலவர் மனமும்
2. துதிஉலாவுவ பூகதர் புனிதர்வாய்த் தொகையும்
3. கதிஉலாவுவ மருதமும் கந்துக நடையும்
4. நிதிஉலாவுவ மனை,வளர் நீதியின் நெறியே.

*1. சோலையின்மேலே சந்திரன் உலாவுகிறான். (சோலை அவ்வளவு உயரமான மரஞ்செடிகளை உடையது) மேலானவர் களின் மனம் மதி (அறிவு) மிக்கனவாக உள்ளது. 2. பூதகர் எனப்படும் புகழ்ச்சி பேசுவோர்கள் வாய், பிரபுக்களைத் துதிக்கும்; நல்லடியார்களின் வாய், தொகை எனப்படும் திருமுறைத் துதிநூல்களை ஓதும். 3. மருதம் என்னும் வயல்களே மக்களுக்குக் கதியாக அமையும்; குதிரையின்நடை 'சாரி' எனப்படும் கதிபொருந்தியதாக அமையும். 4. வீடுகளில் நிதி உலாவும்; நீதியின்நெறி நிறைவுள்ளதாக இருக்கும் (நிதி — பொன்; நிறைவு)* 24

1. மடவரல் இடையும்மா ளிகையும் மென்கொடி
2. வடிவினார் ஓதியும் மறுகும் மாலையே
3. அடிகளும் மாடமும் அணியும் வெண்பொடி
4. புடவியர் புகழ்ந்திடு பொன்செய் வீதியே.

*1. மடப்பம் என்னும் அற்புதக் குணம்பொருந்திய பெண் களின் இடை கொடிபோல மெல்லிதாக இருக்கும்; மாளிகை களின் மேல் கொடி பறக்கும். 2. அழகான பெண்களின் கூந்தல்*

*இரவுப் பொழுதுபோல் கருத்ததாகும்; மறுகு எனப்படும் தெருவும் ஒழுங்கானதாகும். 3. சிவனடியார்கள் வெண்மையான திருநீறு அணிவார்கள்; மாடங்கள், சுண்ணாம்பு பூசப்பட்டிருக்கும். 4. உலகவர் புகழும்படியான செல்வச்செழிப்புடைய வீதிகள் இவ்வண்ணம் இருக்கும்.* 25

**1. கானமர் சோலையும் தடமும் கந்தரம்**
**2. வானமர் காவும்நன் மனையும் கற்பகம்**
**3. கானமா மேலவர் கையும் தானநீர்**
**4. தூநலார் மேவிய மருதத் தொல்நகர்.**

*1. காடாக வளர்ந்துள்ள சோலைகளில், மரஞ்செடிகொடிகளின் அடர்த்தியால் மேகம் சூழ்ந்த காட்சி தெரியும்; குளங்களில் பாசிக்கொடிகள் படர்ந்திருக்கும். (கந்தரம் — மேகம்; பாசி) 2. வானத்தைத் தொடும் காடுகளின் மரங்கள், தேவலோகக் கற்பகம் போன்றவை; நிறையப் பயன்கள் தருபவை; இங்குள்ளவர்களின் மனைவியர், மனத்தில் கற்பு நிறைந்தவர்கள். (கற்பகம் — தேவலோக மரம்; கற்பு + அகம் = மனத்தில் கற்பு நிறைந்தவர்கள்.) 3. காட்டு விலங்காகிய பெரிய யானைகள், மதநீர் பொழிவன; மேலானவர்களின் கை தானம் செய்யும் நீர் பொழிவன. 4. இப்படித் தூய — நல்லவர்கள் இருக்கும் மருதநிலப் பழையநகர் திருப்புடைமருதூர் ஆகும்.* 26

## நிரல்நிறை

**வனசம் ஆம்பல்அம் உற்பலம் சைவலம் முகம்வாய்**
**முனைய வேல்விழி கூந்தலாம் முல்லையே கோங்கம்**
**சினை அரம்பைமென் மூரல்தேர் செந்தனம் குரங்காம்**
**அனைய சண்பக மேனியாம் மருதநா யகிக்கே.**

*திருப்புடைமருதூர் ஒரு நாயகி. அவளுக்கு அங்குப் பூத்த தாமரை (வனசம்) முகம்; குமுதம் (ஆம்பல்) வாய்; குவளை (உற்பலம்) வேல்போன்ற விழி. முல்லை மென்மையான புன்முறுவல்; கோங்க மொட்டுகள், தேர்ந்த, மென்மையான முலைகள்; வாழை (அரம்பை) தொடைகள் ஆகும்.* 27

**மல்லிகை, குவளை,செவ் வந்தி, மாமருப்**
**பில்கிய பித்திகை, வாச்சி, பிச்சி,மென்**
**முல்லை, கேதகை வனம்முடித்து உலாவிய**
**செல்வளர் சிகழிகை மருதச் செல்வியே.**

*திருப்புடைமருதூராகிய செல்வி, மேகம் என்னும் கூந்தலை உடையவள். மல்லிகை, குவளை, செவ்வந்தி, மிகுந்த*

மணமுள்ள சிறுசெண்பகம் (பித்திகை), இருவாச்சி, பிச்சிப்பூ, முல்லை, தாழை (கேதகை) ஆகியவை கொண்ட மாலை அணிந்தவள் ஆவாள். 28

பண்ணிய லாள்பயில் பதுமச் சேக்கைபொன்
மண்ணிய மேல்நிலைப் பதியின் மல்கிய
எண்ணிலாக் கொடிகளும் இலங்கி ஆடுதல்
விண்ணவர் கருடரை அழைக்கு மேன்மையே.

திருமகள் தங்கும் தாமரை போன்ற படுக்கை அமைந்த பொன்னால் செய்யப்பட்ட மாளிகையின் மேல்பாகத்தில் உள்ள எண்ணிக்கையற்ற கொடிகள் ஆடுகின்றன. அக்காட்சி, தேவர்களையும், பதினெண் கணத்தவர்களையும் (கருடரையும்) அழைப்பதுபோல உள்ளது. 29

பளிங்கி னால்செய்த பத்தியின்மேல் செம்மணிப் பத்தி
வளம்கொள் மேல்நிலை தனில்,பயில் மகளிர்கள் வழங்கல்
தழங்கு நீரில்செந் தாமரை மலர்களில் சார்ந்து
விளங்கு கின்றசெந் திருக்கள்வீற் றிருப்பது விளைக்கும்.

பளிங்கினால் செய்தது இவ்வூர். இங்குள்ள மாளிகைகளின் மேல்பகுதிகள், செம்மணிகளால் இழைக்கப்பட்டன. அங்கே பெண்கள் புழங்குவார்கள். அக்காட்சி, நீரில் உள்ள செந்தாமரைமலர்களில் திருமகள்கள் வீற்றிருப்பது போல இருக்கும். 30

தழையும் கும்பமும் மாலையும் கயல்தருப் பணமும்
கழையும் சங்கமும் கொடிகளும் காட்டிய வீதி
குலைமென் கொங்கைமே கலைவிழி கொடிறுதோள் கண்டம்
இழைஇ லங்கிடை மங்கல மகளிரை இணையும்.

இவ்வூர்த் தெருக்களில் தழைகளைக் கட்டியுள்ளார்கள்; பூர்ணகும்பம் வைத்துள்ளார்கள்; மாலைகள் தொங்கவிட்டுள்ளார்கள்; உலோகங்களால் கயல்மீன்கள் செய்து தொங்க விட்டுள்ளார்கள்; தெரு ஓரங்களில் கண்ணாடிகளைப் பதித்துள்ளார்கள்; மூங்கிலை நட்டுள்ளார்கள்; அதில் சங்குகளைப் பதித்துக் கொடிகளைச் சுற்றியுள்ளார்கள்; இவை பெண்களை ஒத்துள்ளன. தழை — குழைகள்; கும்பம் — முலைகள்; மாலை — மேகலை; கயல் (கண்ணாடி) — கன்னங்கள் (கொடிறு); மூங்கில் — தோள்; சங்கு — கழுத்து; கொடி—இடை. 31

விழவ றாதன வீதியும் சோபனம் மேவி
மழவ றாதசம் பன்னஇல் லங்களும் வயலில்
உழவ றாதபைம் போகமும் உலப்பிலா தோங்கு
மழவ றாதது முன்னவன் கோயில்அம் மூதூர்.

விழாக்கள் எப்பொழுதும் நடக்கும் தெருக்களும், மங்களம் பொருந்தி இளமை குன்றாத (புதிதாகவே இருக்கும்) செல்வக் குறைவில்லாத வீடுகளும், வயல்களில் விளைச்சல் நீங்காத போகங்களும், வறளாது ஓங்கும் — முரசம் எப்பொழுதும் முழங்கும் கோயிலும் உடையது, அந்தப் பழமையான திருப்புடை மருதூர் ஆகும். 32.

தோரண நிரைகளும் துழனி ஆடுவோர்
காரண நிரைகளும் கந்து சீறிய
வாரண நிரைகளும் வாசிப் பந்தியும்
தேரணி நிரைகளும் சிறந்த வீதியே.

இவ்வூர் வீதிகளில் தோரண வரிசைகள் இருக்கும். பறவைகளை ஒலிஎழுப்பச் செய்யக்கூடிய கருவிகள் இருக்கும். கட்டுத்தறியை அசைக்கும் யானைக் கூட்டங்கள் இருக்கும். குதிரைக் கூட்டங்கள் இருக்கும். அழகான தேர்கள் நிறைய இருக்கும். 33

சொற்படு கலைகள்தேர் தொகையின் செல்வரும்
பொற்புடை நிதியரும் பொருந்தும் வேள்வியால்
அற்புடை ஆடவர் அன்றிச் சேர்கலாக்
கற்புடை மகளிர்வாழ் கவின்கொள் வீதியே.

புகழ்மிக்க கலைகளில் வல்ல அறிஞர்கள் கூட்டமாகச் செல்வர். கலைகளே அவர்களின் செல்வமாகும். மதிப்புடைய பணக்காரர்கள், பொருத்தமான யாகங்கள் செய்யும் அன்புடைய அந்தணர்கள், யாரும் நெருங்கமுடியாத கற்புடைய பெண்கள் எனப் பலவகையினர் அத்தெருக்களில் வாழ்கின்றனர். 34

விஞ்சையர் மகளிர்பால் வேசை மாதர்கள்
மிஞ்சிடப் பாடியே வீணை வெல்குவார்
வஞ்சியர் ஊடலால் அவுணர் மார்பமும்
குஞ்சியும் பஞ்சடிச் சுவட்டுக் கோலமே.

இசையில் வல்ல வித்யாதர லோகத்துப் பெண்களிடம் தேவதாசிகள் இசைப்போட்டி நடத்தி வென்று, அவர்களின் வீணைகளைப் பரிசாகப் பெறுவார்கள். பெண்கள், ஊடல் செய்வார்கள். அப்பொழுது ராட்சச வலிமை பொருந்திய கணவனையும் உதைப்பார்கள். அதனால் அப்பெண்களின்

*கால்களில் அழகுக்குப் பூசிய செம்பஞ்சுக் குழம்பு, கணவரின் மார்பிலும் தலையிலும் படியும்.* 35

## சந்த விருத்தம் [கந்துகச்சந்தம்]

மின்உருப் பொலிந்த மங்கை
யர்கள் வெம்மை மைந்தர்மேல்
கன்னல்வேள் சரங்க ளான
கண்கள் மூரல் வதனமே
அன்னபோதி னால்அ டர்த்தும்
அனையர் கொங்கை யானையால்
துன்னுமார் பகம்பொ ரச்சு
ரந்த காமம் மூழ்குவார்.

*மின்னல்போன்ற உருவ அழகுகொண்ட பெண்கள், சூடான ஆண்களிடம் கரும்புவில்லில் மன்மதன் தொடுக்கும் அம்புகளாகிய கண்களால் நோக்கியும், புன்முறுவல் செய்தும், முகம் காட்டியும் செய்யும் போது, ஆண்கள் அப்பெண்களின் முலைகளாகிய யானையின் மேல் மார்பு அழுந்தும்படியாகக் காமப்போர் செய்வார்கள். அப்பொழுது காமவெள்ளம் சுரக்கும். அதில் ஆணும்பெண்ணும் மூழ்குவார்கள்.* 36

மாதர் காம வலைப்படு மைந்தர்கள்
தூதி யங்கும் தொழிலரைப் போற்றுவார்
பேதை யார்பணி பேணுவர் பேதையார்
கோதை அங்கம் புகழ்ந்துகொண் டாடுவர்.

*பெண்களின் காமவலையில் சிக்கக்கூடிய வலிமை உள்ளவர்கள் வேசிப் பெண்களுக்குத் தூதுபோகும் தொழில் செய்பவர்களை வசப்படுத்திக் கொள்வார்கள். அதன்பின் அவ்வேசியரை அடைந்து பேதையராகிய அவர்களுக்கு அவர்களின் தேவைகளைப் பேதைமையால் நிறைவு செய்வார்கள். அப்பெண்களின் ஒவ்வோர் அங்கத்தையும் புகழ்ந்து கொண்டாடுவார்கள்.* 37

அன்ன மென்நடை யாருடன் ஆடவர்
மின்னும் மேகமும் மேவின ஒப்பவே
மன்னு தண்சுடர் முற்றமஞ் சத்தினில்
கன்னல் பால்கலந் தென்னக் கலப்பரே.

*மின்னலும் மேகமும் சேர்ந்த சேர்க்கைபோல அன்னம் போன்ற மென்மையான நடையை உடைய பெண்களுடன் ஆடவர்கள், நிலையாகச் சந்திரனின் ஒளிபடும் முற்றத்தில்—*

*மஞ்சத்தில் கருப்பஞ்சாற்றில் தேன் கலந்ததுபோலக் கலந்து விடுவார்கள்.* *38*

முத்தம் தாஎன மோகமின் னார்களைச்
சித்தம் ஒன்றிச் சிறுகலை பற்றியே
நத்தி நத்தி நயந்து நளினத்தில்
அத்தம் சேர்த்தி அணைகுவர் ஆடவர்.

*ஆண்கள், 'முத்தம் கொடு' என்று மோகம்தரும் மின்னல் போன்ற பெண்களை மனம் ஒன்றி, சின்ன ஆடையைப் பிடித்து இழுத்து, நெருங்கி, கெஞ்சலுடன் உதட்டை ஒட்டி, கட்டிப் பிடித்துக்கொள்வார்கள்.* *39*

அன்ன பான்மையர் இன்னிசை யாழ்வலோர்
மின்ன னார்பயில் ஊடல் விலக்குவோர்
இன்ன லார்விடு தூதின் இயங்குவோர்
முன்னி ஆவணம் எங்கணும் முற்றுவோர்.

*அப்படிப்பட்ட குணம் உள்ள ஆண்களும் பெண்களும் யாழில் [வீணையில்] இன்னிசை எழுப்பவல்லவர்கள் ஆவர். மின்னலைப் போன்றவர்கள் செய்யும் ஊடலை [வேடிக்கைச் சண்டையை] விலக்கும் சாமர்த்தியம் உள்ளவர்களும் ஆவர். குடும்பப்பெண்கள் தம் கணவர்கட்கு விடும் தூதுவராகவும் செயல்படுவார்கள். கடைவீதிகளில் எல்லா இடங்களிலும் இவர்கள் இருப்பார்கள்.* *40*

## சந்தவிருத்தம் [கந்துகச்சந்தம்]

வேளைவென்ற மைந்தர் தம்மை
விரத மான பார்வைசேர்
வாளைவென்ற கண்க ளால், வ
லைப்ப டுத்தும் மாதர்கள்
தோளைநவ்வி யேதி ரிந்த
சுரத சீலர் கள், பினர்
நாளைஎன்று இ ராது சுரதம்
நாட்டு வார னேகரால்.

*அழகினால் மன்மதனை வென்ற இளைஞர்களை, விரகதாபத்துடன் கூடிய பார்வையினால் [உன்னைப் பிரிந்திருக்க முடியாது என்று சொல்வது போன்ற பார்வையினால்) கூர்மை யால் அரிவாளை வென்ற கண்களால் காமவலையில் விழச்செய்யும் பெண்களின் தோள்களை அழகுடன் (நவ்வி) திரிந்த — புணர்ச்சி விளையாட்டில் வல்லவர்கள்*

*[சுரதசீலர்கள்] அப்புறம் ஆகட்டும், நாளைக்காகட்டும் என்றிருக்காமல் காமநீரை நாட்டுவார்கள். இப்படிப்பட்டவர்கள் பலராவர்.* *41*

## சந்தம் [கந்துகச்சந்தம்]

விழவுகண்டு மைந்தர் மாதர்
மிகம கிழ்ச்சி எய்துவார்
குழைகள்காஞ்சி பணிகள் இன்ன
புதிய கோல மேசெய்வார்
புளகிதம் கொளச்சு கந்த
களப மும்பு னைகுவார்
அளகம்நீவி ஆடி நோக்கி
அழகு செய்துஅ மைப்பரால்

*திருவிழாக்களைக் கண்டு ஆண்களும் பெண்களும் மிகுந்த மகிழ்ச்சி அடைவார்கள். விழாநாட்களில் புதிய காதணிகள், மேகலாபரணங்கள், மற்ற அணிகள் ஆகியவற்றை அணிந்து, புத்தழகுடன் திகழ்வார்கள். புளகாங்கிதம் அடைவதற்காக, நல்ல வாசனைஉடைய சந்தனத்தைப் பூசிக் கொள்வார்கள். கூந்தலை நீவி, கண்ணாடியைப் பார்த்து, அழகுசெய்து கொள்வார்கள்.* *42*

*மேகலை — ஏழுமணிக்கோவை; இடுப்பில் அணிவது காஞ்சி.*

## மடக்கு

1. கோல வாய்முலை யும்கோவை முத்தமே
குமுத வாய்முலை யும்கோவை முத்தமே
2. மேலும் மாதர்கை வண்டுகள் ஆடுமே
விரிமலர்தொறும் வண்டுகள் ஆடுமே
3. சோலை யாவும் மயில்கள் உலாவுமே
சூரர்கையும் அயில்கள் உலாவுமே
4. மாலை நேர்குழல் மாலைவ னங்களே
மருதம் எங்கணும் ஆலை வனங்களே.

*1. கோலம் — அழகு; வாய் — பொருத்தம்; கோவை — கோக்கப்பட்டது. பெண்ணின் முலைமேல் கோக்கப்பட்ட முத்துமாலை அழகாகவும் பொருத்தமாகவும் இருக்கும்; குமுதம் —ஆம்பல்; கோவை— தொடர்ச்சி. குமுதம் போன்ற வாயும், முலையும் தொடர்ச்சியாக ஆணின் முத்தங்களைப் பெறும். 2. மேலும் — மேற்பகுதிவரை; வண்டுகள் — வளையல்கள்.*

கையின் மேற்பகுதி வரை வளையல்கள் ஆடும். விரிந்த மலர்களி லெல்லாம் வண்டுகள் ஆடும். 3. எல்லாச் சோலைகளிலும் மயில்கள் உலாவும்; சூரத்தனம் வாய்ந்த வீரர்களின் கையில் வேல்கள் [அயில்கள்] சுழலும்.4. மாலை— மங்கும் (இருட்டும்) நேரம்; நேர்—போன்ற ; மாலை— பூமாலை; வனங்கள் — கூட்டங்கள். மாலைநேரம் போன்ற கருத்த கூந்தலில், பூமாலைகள் கூட்டமாக இருக்கும். [இது மணமகளைக் குறித்தது] மருதம் — வயல்சார்ந்த நிலம்; வனங்கள்— சோலைகள்; வயல்சார்ந்த நிலங்கள் எங்கும் கரும்பாலைகளும் சோலைகளும் இருக்கும். 43.

## மடக்கு

1. சோலை எங்கும் மணியும் குழைகளே
   தோகையார் அணியும்பொன் குழைகளே
2. ஏலம் வார்குழல் சாயல் கலாபமே
   இலங்கு மின்இடை மேலும் கலாபமே
3. கால் இசைந்த சிலம்பு பயோதரம்
   கால் அசைந்த சிலம்பு பயோதரம்
4. சாலும் சீர்மலர் சூழும் மருச்சுனம்
   சம்பு மேல் மலர்சூழும் அருச்சுனம்.

1. மணி—விதைமணிகள்: குழை—தளிர்கள். சோலைகளில் விதைமணிகள் சிதறிக்கிடக்கும்; செடிகளில் இளம் தளிர்கள் இருக்கும். தோகையார்— பெண்கள்; குழை — காதணி. பெண்களின் காதணிகள், பொன்னால் செய்யப்பட்ட குழைகள் ஆகும்.

2. ஏலம் — ஏலக்காய்த்தைலம்; வார் — நிறையப் பூசிய; கலாபம் — மயில். ஏலக்காய்த்தைலம் ஒழுகும்படிப் பூசிய பெண்களின் சாயல், மயில்போன்ற சாயல் ஆகும். [சாயல்—ஒதுங்கி நடக்கும் அழகுநடை] இலங்கு— விளங்கும்; மின் — மின்னல்போன்ற; கலாபம் — சரமணிக்கோவை. மின்னல் போன்ற இடையின்மேல் சரமான மணிக்கோவை விளங்கும்.

3. கால்— காற்று; இசைந்த — பொருந்திய; சிலம்பு — மலை; பயோதரம் — மேகம். காற்றடிப்பதால் மலையின் மேல் மேகம் வந்து தங்கும். சிலம்பு— காலில் அணியும் அணி; பயோதரம்—முலை. பெண்கள் நடக்கும்போது காலில் அணிந்த சிலம்புகள் அசைந்தன; முலைகள் தளதளத்தன.

4. சாலும்—போதுமான; சீர்—அழகு; மரு—வாசனை; சுனம் — சுண்ணம்; துகள். அழகுபொருந்திய மலர்களில் போதுமான வாசனையும் மகரந்தத்துகளும் இருக்கும். சம்பு — சிவன்; அருச்சுனம் — திருப்புடைமருதூர்க்கோயில்; திருப்புடைமருதூர்க் கோயிலில் உள்ள சிவனின்மேல் மலர்கள் சூழ்ந்திருக்கும்; அருச்சிக்கப்பட்டிருக்கும். 44

## மடக்கு

1. மணந்தவர்வர நாட்டம் தழைத்திடும்
   மறுகு இலக்கண நாட்டம் தழைத்திடும்
2. புணர்ந்த மாதர்கண் வேலைக் கடுக்குமே
   போதுஉலாம் குளம் வேலைக் கடுக்குமே
3. இணங்கும் யோகர்க்கு நண்பாம் தவம்தரும்
   இனம் கிளைஞர்க்கு நண்,பாந் தவம்தரும்
4. அணங்கு அனார் இதழ் ஆம்பல்அம் தந்திடும்
   அரு மகத்தினர்க்கு ஆம்பலம் தந்திடும்.

1. மணந்தவர்களாகிய கணவர்கள் வரப் பெண்களுக்கு விருப்பம் [நாட்டம்] அதிகரிக்கும்; தெருக்கள் எப்படி அமைய வேண்டுமோ அப்படிக்கான இலக்கணமாக இருப்பதால், பார்க்கவேண்டும் என்ற விருப்பம் அதிகமாகும்.

2. ஆணைப் புணர்ச்சி செய்த பெண்ணின்கண் போரில் பயன்பட்ட வேல்போல் சிவந்தும் கூர்மையாகவும் இருக்கும்; பாதி மலர்ந்த மலர்கள் [போது], உலாவும் குளம் நீர்மிகுந்திருப்பதால், கடலைப்போலக் காட்சிகொடுக்கும். [வேலை—கடல்]

3. யோக மார்க்கத்தில் இணங்கிய யோகியர்களுக்குத் தவம் நட்பாகிவிடும்; நல்லவர்களின் சேர்க்கை [இனம்] உறவினர்களுக்கு [கிளைஞர்க்கு] நெருங்கிய [நண்] பந்துத்துவம் [பாந்தவம்] கொடுக்கும்.

4. தேவதை போன்ற அழகான பெண்களுக்கு, வாய் உதடு[இதழ்] குமுதமலரின் [ஆம்பல்] அழகைத் [அம்] தரும், அருமையான [அரு] யாகம் செய்பவர்களுக்கு [மகத்தினர்க்கு], அந்த யாகங்களே பலம்கொடுக்கும். 45

## மடக்கு

1. கழனி மாதர் கமலம் களையுமே
கருது பாஅங்கு அமலம் களையுமே
2. விழ அறாதன காவணம் எங்கணும்
விரிதலைய தெங்கு ஆவணம் எங்கணும்
3. மழவு அறாத வளம்கொள் மனைகளே
மகளிர் ஆடு கழங்கம் மனைகளே
4. அழகு மேவும் இந்திர திருஆர் பதி
அன்பு மேவுஇந்திர திரு வார்பதி.

1. *கழனி— வயல்; கமலம் — தாமரை. வயலில் களை எடுக்கும் பெண்கள் தண்ணீர் மிகுதியால் வயலில் பூத்திருக்கும் தாமரையையும் களை எடுப்பார்கள்; அமலம் — வெண்மை. இது வெள்ளறிவைக் குறிக்கும், வெள்ளறிவு என்பது முட்டாள்தனம். ஊன்றிப் படிக்கும் பாட்டு[பா] அங்கு [ஊன்றிப் படிக்கும் மனத்தில்] முட்டாள் தனத்தைக்[அமலத்தை]களையும்.*
2. *கா வணம் — காக்கும் வண்ணம். ஊரெங்கும் காக்கும் வண்ணம் இறைவன் திருவிழா இடைவிடாமல் [அறாதன] நடைபெறும்; விரிந்த தலையையுடைய [விரிதலைய] தேங்காய் [தெங்கு] கடைத்தெருவில் எங்கும் கிடைக்கும்.*
3. *வளமை கொண்ட வீடுகளில் குழந்தைகள் [மழவு] இல்லாத வீடில்லை [அறதென]; மகளிர் கழற்சிக்காய் [கழங்கு] அம்மானை[ஓர் ஆட்டம்] ஆடுவார்கள்.*
4. *இந்திரதிரு — மருதமரம்; ஆர்—பொருந்திய. அழகுடன் மருதமரம் பொருந்திய ஊர்[பதி] இதுவாகும். அன்பு பொருந்திய இந்திரனின் செல்வம் அவன் வழிபட்டுச் செலுத்தியதால், தலைவனாகிய [பதி] இறைவனிடம் சேர்ந்தவூர் இதுவாகும். 46*

நலம்தரு வீதியின் நாள்தொ றும், புரி
பலம்தரு வளங்களைப் பகர்ந்த னம், இனிக்
குலம்தரும் அந்தணர் முனிவர் கொள்கைசேர்
தலம்திகழ் ஆவணப் பெருமை சாற்றுவாம்.

*நலத்தைக் கொடுக்கின்ற தெருக்களில், நாள்தோறும் நிகழுகின்ற பலன்களையும் வளங்களையும் சொன்னோம். இனி நல்ல குலத்தினராகிய அந்தணர்கள், முனிவர்கள்*

வாழும் நற்கொள்கை சேர்ந்த தெருவின் பெருமையைச் சொல்வோம். 47

## அந்தணர் – முனிவர்தெரு – எண்ணலங்காரம் சந்தவிருத்தம் (கந்துகச்சந்தம்)

ஒருமை யாளர், இருபி றப்பர்; உதவு மூன்று நூலினார்
அருமை நான்கு வேதம் ஓதி ஐய ராகி அறுதொழில்
பெருமை யோர்கள் எழுக டல்பு விக்குள் எட்டு பிறைவையைத்
தருசு டர்க்க ருக்கி யம்செய் சந்தியா பனத்தரே.

ஒரே சிந்தனை — தெய்விகச் சிந்தனை கொண்டவர்கள்; உபநயனத்துக்கும் முன் தாய்வயிற்றில் பிறந்த பிறப்பும், உபநயனத் துக்குப் பின் குரு உபதேசத்தில் பிறந்த ஞானப்பிறப்பும் — ஆக இரண்டு பிறப்புகளை உடையவர்கள்; முப்புரி நூலை [பூணுநூலை] அணிந்தவர்கள்; அருமையாக—இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்னும் நான்கு வேதங்களையும் ஓதி ஐயராக ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு தொழில்களை உடைய வர்கள்; பெருமை உடையவர்கள்; ஏழுகடல் சூழ்ந்த உலகத்தில் ஆசையுடன் [எட்டு] பெருவிரலை முன்வாங்கி நீட்டி, மற்றைய விரல்களைப் பின்னாக நீட்டுகின்ற [பிறைவை] முத்திரைகாட்டி, சுடராகிய சூரியனுக்கு மந்திரநீர் இறைக்கின்ற [அர்க்கியம்] காலை பகல் இரவு ஆகியவை சந்திக்கின்ற [காலை 6 மணி, பகல் 12 மணி, மாலை 6 மணிகளில்] காலங்களில் வணக்கம் [சந்தியபந்தனம், சந்தியா வந்தனம்] செய்பவர்கள் அந்தணர் ஆவர். 48

## சந்தவிருத்தம் [கந்துகச்சந்தம்]

மகவ ளர்க்கும் நீர தென்ன மகம்வ ளர்க்கும் மாண்பினால்
அகம்நெ கச்செய்[து] அவியை வான வர்க்க ருத்தும்அன்பினார்
பகவ னுக்கு வந்து பூசை செய்கு வோர்கள் பதுமன்நன்
முகம தில்பி றந்து வாழும் முனிவர் வீதி இவணதே.

பாலும், பழமும், தேனும், நெய்யும் கொடுத்துத் தான் பெற்ற பிள்ளைகளை வளர்ப்பதைப்போல யாகம் வளர்க்கும் மாண்பி னாலே, உள்ளம் நெகிழச் செய்து, யாகத்தின் அவிர்ப்பாகத்தைத் தேவர்கள் உண்ணச் செய்யும் அன்பினை உடையவர்கள்; பகவானுக்கு ஆசையுடன் பூசை செய்பவர்கள்; பிரம்மாவின்

முகத்தில் பிறந்தவர்கள்; இப்படிப்பட்ட அந்தண முனிவர்கள் வாழும் வீதி இவ்வூரில் உள்ளது. 49

## சந்தவிருத்தம் [கந்துகச்சந்தம்]

முஞ்சி நாணர்; தோல ணிந்த
நூலர்; முண்ட கத்தொடை
குஞ்சி வாய்ந்த குடுமி யார்கள்
குரவ னைப்ப ணிந்துபின்
அஞ்சி நூல்ப யின்ற டங்கி
ஆர ணப்ப குப்பினை
விஞ்சு சந்தை கூடி ஒதி
மேவி டங்கள் எங்குமே.

பூணுநூலில் புல் கட்டியவர்கள்; மான்தோலின் சிறு துண்டினைப் பூணுநூலில் அணிந்தவர்கள்; தாமரையின் இதழ் களைத் தொடுத்துக் குடுமியில் சூடிக்கொண்டிருப்பவர்கள்; இப்படிப்பட்ட அந்தணர்கள் குருவை வணங்கிய பிறகு, பயத் துடன் சாஸ்திரங்களைப் படித்து, அதன்பிறகு வேதங்களின் சாகை களை, அதிகமானவர்கள் ஒன்றாகக் [சந்தை — சதஸ்] கூடி, ஓதிப் பொருந்தும் இடங்கள் இவ்வூரில் பல உள்ளன. 50

## சந்தவிருத்தம் [கந்துகச்சந்தம்]

குண்டி கைக்கை முண்டி தத்தர்
கோல நீறு தாங்கியே
புண்ட ரத்தர் மணிஅ ணிந்த
புனைகல் லாடை தாங்குவோர்
தண்டில் வைத்த கோவ ணத்தர்
தரணி விட்ட ரன்தனைக்
கண்டு பெற்ற மவுனம் உற்ற
காட்சி யாரும் அவணதே.

கமண்டலத்தைக் கையில் வைத்திருப்பவர்கள்; தலை முடியை மொட்டையாக்கிக் கொண்டவர்கள்; திருநீற்றை எடுத்துத் திரிபுண்டரிகமாகக் [மூன்றுபட்டையாகக்] குழைத்து அணிந்திருப்பவர்கள்; அக்கமணி [உருத்திராட்சம்] அணிந்தவர்கள்; கல்லாடை எனப்படும் காவிஉடையை உடுத்திருப்பவர்கள்; கையில் தண்டத்தில் சிறு ஆடையைக் கட்டிவைத்து ஏந்தியிருப்பவர்கள்; உலக நினைவுகளை விட்டு, சிவனைக்கண்டு அதனால் பேசாநிலை அடைந்தவர்கள் —

இவ்வகையான தோற்றம், செயல், குணம் கொண்டு காட்சி கொடுக்கும் துறவிகளும் அவ்வீதியில் இருப்பார்கள். 51

## சந்தவிருத்தம் [கந்துகச்சந்தம்]

முன்து றந்த மோன யோகர்
முழுதும் வைதி கத்தினார்
கற்ற நூலர்க் கன்பு வாழ்வு
கந்த போதர் காலினை
பெற்றி யேஅு டக்கல் உற்ற
பரிவு கண்ட ரன்தனை
பெற்று வேறு காண்கி லாத
பெருமை யோரும் இவணதே.

முன்பே துறவுநிலையை மேற்கொண்ட பேசாநிலை அடைந்த, யோகமார்க்கத்தை மேற்கொண்டவர்கள்; முழுமை யான வைதிகர்கள்; வேதக் கல்வி வல்ல நூலோராகிய மேலாரி டம் அன்பு பூண்டு, அவர்கள் தருவதைக் கொண்டு உலகவாழ்வு மேற்கொண்ட ஞானிகள்; மூச்சுக்காற்றைப் பொருத்தமான முறையில் அடக்கி, அதனால் ஏற்படும் சுகத்தை அனுபவித்து, அந்தச் சுகானுபவத்தில் சிவனைப் பெற்றுப் பின்னர் வேறெதையும் காணாதவர்கள் — இப்படிப்பட்ட பெருமை உடையவர்களும் இத்தெருவில் உள்ளார்கள். 52

சரிதையே முதல்இ யற்றிச் சாயுச்ய வாழ்வு பெற்றோர்
விரதியர் ஐந்தும் வென்றோர் கோபத்தை வெறுத்த மெய்யர்
பருதிபோல் இருள கற்றிப் பரப்பிய யோகச் சோதி
மருவிய மாண்பின் மிக்கார் மன்பதை ஒத்து வாழ்வார்.

புராணங்களை இயற்றி, அதனால் இறைவனோடு ஐக்கியப் படுதலாகிய சாயுச்ய வாழ்வு பெற்றவர்களும், விரதம் மேற் கொண்டவர்களும், ஐம்புலன்களையும் வென்றவர்களும், கோபத்தை வெறுத்தவர்களும், உண்மையே பேசுபவர்களும், சூரியன் இருட்டைப் போக்குவது போல அஞ்ஞானத்தை யோகத் தினால் ஓட்டி, அந்த யோகஜோதியில் கலந்து மாட்சிமை மிக்கவர்களும் உலகத்தில் உள்ள பிற சாமான்ய மனிதர்களைப் போல அவர்களுடன் ஒத்துவாழ்வார்கள். 53

## அரசர் தெரு

அந்தணர் முனிவரர்க்கு அமைந்த வீதியின்
சுந்தரம் உரைத்தனம் வாகை சந்தொடைச்

சந்தமார் புயமுடை சக்தி ரிக்குலம்
வந்தமன் னவர்திரு மறுகு சாற்றுவாம்.

அந்தணர்களுக்கும் முனிவர்களுக்கும் அமைந்த வீதியின் அழகை உரைத்தோம். வெற்றிக்கான வாகைமாலை அணிந்த வலிய தோள்களைக்கொண்ட சத்திரிய குலத்தில் வந்த மன்னர்களின் தெருவைப்பற்றி இனிமேல் சொல்வோம். 54

உலக நீதிமன் னவர்கள்செங் கோல்முறை உய்க்கும்
பலத ராதல மன்னர்கப் பங்களும் பன்னூல்
கலைகள் ஆய்ந்தவர் கல்வியின் செல்வமும் காக்கும்
அலகி லாதநல் அறங்களும் மந்திரர் அமைச்சும்,

உலகுக்கே நீதி செய்கின்ற அரசர்கள், செங்கோல் எனப்படும் நியாய ஆட்சி செய்வார்கள். பல நாடுகளின் மன்னர்களும் இப்படிப்பட்ட மன்னருக்கு அடிபணிந்து கப்பம் கட்டுவார்கள். இம்மன்னர்கள், பலநூல்களைப் படித்தவர்கள்; கலைகளை ஆராய்ந்தவர்கள்; இவர்களுக்குக் கல்விச்செல்வமும், தலைகாக்கும் தருமமும், இரகசியம் காக்கும் அமைச்சும் முடிவின்றி உள்ளன. 55

ஆட கம்பயில் சாலையில் அம்புநேர் விழியார்
நாட கம்பயில் நூல்முறை நாட்டியச் சிறப்பும்
நீடு மாந்தரின் நிதிக்குவை அடுக்கலும் நெறிநூல்
பீடு சான்றவர் சூழல்அத் தரணியில் பெருகும்.

ஆடல்கலை பயிலும் சாலையில், அம்புபோன்ற விழிகளைக் கொண்ட பெண்கள், நடனநூல்களில் கூறிய முறைப்படி நடனமாடும் சிறப்பும், பெரிய மனிதர்களின் செல்வக்குவியல்களும், மார்க்கநூல்களில் பெருமை பெற்ற சான்றோர்களின் சிறப்பும் இத்தெருவில் பெருகியிருப்பனவாகும். 56

சிலைப யின்றிடு கழகமும் சேர்படைக் கலத்தால்
கொலைப யின்றிடு வென்றியும் வீரர்கள் குழுவும்
மலைப யின்றேதேர் நடத்திடு மைந்தரும் வாரி
அலைப யின்றதாய் துரங்கசா லையில்அணி வகுத்தே.

குதிரைகள் கட்டும் பகுதியில், வில்வித்தை கற்கும் கூடம், படைக்கலங்களால் கொலை வெற்றிபெறும் வீரர்கள் கூட்டம், மலைபோன்ற தேர்களை ஓட்டும் பயிற்சிபெற்ற வலிமையாளர்களின் கூட்டம் கடல் அலைக்கு வரிசைகற்றுக் கொடுப்பதுபோல அணிவகுத்தன. 57

மனம், எனச்செலும் வாசியைச் சாரியால் கதியால்
வினையி னால்பரி வேடம்ஒத் திட, விளை யாடி

முனையை வெல்பவர் முற்றிய பகைஉக முனைப்போர்
தனை,உ ஞற்றுவான் வாரணம் பொருதிடத் தளைவார்.

மனோவேகத்தில் செல்லும் குதிரைகளுக்குச் சாரி [ஓரநடை] கதி[துள்ளுநடை] பரிவேடம் [சுழலும் நடை] ஆகிய செயல்களும் செய்யுமாறு வீரர்கள் பயிற்சி அளிப்பார்கள். குதிரை வீரர்களுக்கு அது விளையாட்டாகும். போர்முனையில் வெற்றிபெறுபவர்களாகிய வீரர்கள், முற்றிய பகையாளிகள் அழிய வேண்டும் என்பதற்காகப் போர்க்களம்போல் ஓரிடத்தை அமைத்துக்கொண்டு, யானைகளைப் போரிடச் செய்து, தாமும் இடையிலிருந்து அந்தச் செயற்கைப்போரில் இணைந்து கொள்வார்கள். 58

கூற்றெ னச்செலும் கறையடி உகைக்கமேல் கொதித்துக்
காற்றெ னச்சுழல் புழைக்கையால் முகிலினைக் கசக்கி
ஏற்றநன் னீர்குடித் துக்களி மும்மதம் எய்தும்
தாற்று மாவினை நடத்துவோர் வீரமும் தயங்கும்.

அந்தப்போரில் யமனைப்போல் யானைகள் புறப்படும். எதிரில் காற்றைப்போல் யானைகள் சுழலும், இந்த இருபக்கமும் ஒரே அணியைச் சேர்ந்த யானைகள் ஆகையால், மேகங்களை எதிரி யானைகளாக வைத்துக்கொண்டு மேகங்களைத் துதிக்கை யால் சுழற்றிப் பிடித்துக்கசக்கும். அப்படிக் கசக்குவதால், மேகங் களில் உள்ளநீர் பிழியப்பட்டுப் பொழியும். அந்தநீரைக் குடித்து யானைகள் மதம் அடையும் [மதம்—கொழுப்பு; மும்மதம்— காதோரமும் மத்தகத்திலும் பீஜத்திலும் கொழுப்புநீர்] தாற்றுக் கோலால் [அங்குசத்தால்] யானைப்பாகர்கள் மதம் அடக்கி யானையை நடத்தும் வீரத்தையும் அங்கே காணலாம். 59

இத்த கைத்தரும் மறுபுலச் சொல்அரும் இயற்சொல்
முத்த மிழ்க்குல வேந்தர்கள் குழுவுடன் மொய்த்த
பித்த கைத்திரு மாடமும் கூடமும் பிறங்கும்
சத்தி ரிக்குல மன்னர்கள் ஆவணச் சார்பே.

இவை போர்ப்பயிற்சி இடங்களாகும். இதேபோன்றவை மொழிப்பயிற்சி இடங்கள். முத்தமிழ் வேந்தர்கள், அறிஞர் குழுவுடன் கூடி, அருமையான இசைத்தமிழ்ச் சொற்கள், வேற்றுநாட்டுச் சொற்கள் ஆகியவற்றை ஆய்வர். இந்த ஆய்வு மலரலங்காரம் செய்த மாடங்களிலும், பெரிய கூடங்களிலும் நடைபெறும். சத்திரியகுல மன்னர்களின் ஓலைநூல்கள் அங்கே வைக்கப்பட்டிருக்கும். 60

## வணிகர் தெரு

முன்னைமாற் றவள்பழித்த மொழிபழுதாய் அவள்நாண
வன்னியுடன் கிணறுலிங்கம் மதுரைதனில் அழைப்பித்த
பொன்னையாள் அவதரித்த புகழ்ஓங்கும் வணிகர்குல
மின்னுமா ளிகைசெறிந்த வீதியினை விளம்புவாம்.

முன்பொருகாலத்தில் மதுரையில் பொன்னனையாள் என்பவள், சக்களத்தி பழித்துச்சொன்ன சொல் தவறாகும் படியாக, அந்த மாற்றவள் வெட்கப்படும்படியாகச் சொக்க நாதரைத் துதித்து வன்னிமரம், கிணறு, இலிங்கம் ஆகிய வற்றைச் சாட்சியாக வரவழைத்தாள். அந்தப் பொன்னனை யாள் பிறந்த குலம் புகழ் ஓங்கும் வணிகர்குலம். அந்தக் குலத்தில் வந்த வணிகர்கள் வாழும் ஒளிபொருந்திய மாளிகை கள் நிறைந்த வீதியைப்பற்றிச் சொல்வோம். 61

மின்திகழ் மணிப்பூண் நாய்கர் வெறுக்கையின் மணிகள் வேறு
துன்றுபல் வண்ணத் தூசு சுவைதரும் பொருள்கள் ஈது
சென்றுகொள் பவர்கட் குள்ளம் செவிகளில் அமுதம் ஊறத்
துன்றிய பரிசு கூறிச் சொல்லினும் இலாபம் கொள்வார்.

இவை செல்வச் செழிப்புக்குரிய நவரத்தினங்கள் ஆகும்; இவை நிலைபெற்ற ஆடைகள் ஆகும்; இவை சுவை யுடன் உண்ணுதற்கு உரிய பொருள்கள் ஆகும் என்று, நுகர்வோர் களின் செவிகளில் அமுதம் ஊறும்படியாகப் பொருட்களின் சிறப்புகளைச் சிலவார்த்தைகளால் சொல்லிச் சொல்லிலும் லாபம் கொள்பவர்கள்; மினுமினுக்கும் அணிகளை அணிந்த கடல்வாணிபம் செய்பவர்கள் [நாய்கர்]ஆவர். 62

மன்றல்ஆ வணம்எலாம் கரும வார்த்தையே
தென்றலான் கணைபொரச் செல்வழிப் பொம்மலின்
பொன்திகழ் முலையினார் புணர்ப்பின் ஆடல்போல்
சென்றகண் பொருளின்மேல் திரும்பி டாதரோ.

திருமணக்கோலம் போலவே பொலியும் அத்தெருவில், எப்பொழுதும் வியாபாரச் செய்திகளே பேசப்படும். அத் தெருவைப் பார்ப்பவர்கள் வைத்தகண் வாங்காமல் பார்ப்ப தால், அவர்கள் கவனம் தாம் நினைத்து வந்த செய்தியின் பக்கம் திரும்பாது. அது எதைப்போல என்றால், மன்மதன் பாணம் விடும் படியான மிக அழகான பெண் மிகப்பெருத்த முலைகள் உடைய வளாகி, காமரசத்துடன் ஆடும் ஆடல் பார்க்க நேர்ந்தால் எப்படிக் கண் வேறு பக்கம் திரும்பாதோ அதைப்போல! 63

ஐந்திணை நிலத்தில் உள்ள அரும்பொரு ளான யாவும்
சுந்தர வளம்சேர் மாடம் துன்னிய உடுக்கள் போலும்
சந்தமார் மணியின் கோவை சார்ந்தொளி வீசு கின்றது
இந்திர வில்லின் தோன்றும் வைசிகர் வீதி ஈதால்.

*வணிகர்களின் மாளிகைகளில் காடு, மலை, கடல், வயல், பாலை ஆகிய நிலங்களில் உள்ள பொருள்கள் எல்லாம் இருக்கும். அவை அழகான வளமானமாடங்கள். அவை நட்சத்திரங்கள் போன்றவை. அழகான நவமணி தொங்கி ஒளி வீசும் அம்மாடங்கள், இந்திரவில்போல இருக்கும். இதுவே வைசியர் வீதியின் பெருமை ஆகும். 64*

## வேளாளர் தெரு
## கணிதச் செய்யுள்

அறையும் ஈறுஆறு ஈரெட்டால்
ஐந்து உறாது அவனி காக்கும்
இறை, இறை போக நின்ற
ஏர்வளப் பொருள்கள் எல்லாம்
முறை, ஒக்கல், பிதிர், தான், தெய்வம்
முனிவரர், விருந்துஉள் ஆர்க்கும்
குறைவிலாது அளிக்கும் வேளாண்
குலத்தவர் மறுகுஉ ரைப்பாம்.

*ஆறு, ஈரெட்டு [6 × 16 = 96] 96 தத்துவங்களை அறிந்த வனாகவும் 5— பஞ்சமா பாதகங்கள், [பொய், களவு, கள் அருந்துதல், கொலைசெய்தல், குருவை நிந்தித்தல்] செய்யாதவனாகவும் இருந்து, உலகத்தைத் தருமத்தால் காக்கிற உத்தமனே வேளாளன் ஆவான். அவன் அரசனுக்கு வரிசெலுத்துபவன். [விளைச்சலில் ஆறில் ஒருபங்கு இறை செலுத்துபவன்] ஆறில் ஒரு பங்கு போக மிச்சமுள்ள ஐந்து பங்கில் உறவுமுறை உள்ளவர்களாகிய சுற்றத்தாருக்கு ஒருபங்கு, இறந்துபோன பிதிரர்களுக்கு நீர்க்கடன் செய்ய ஒருபங்கு, தனக்கு ஒரு பங்கு, தன் குடும்பத்திற்கு ஒருபங்கு தெய்வத்திற்கு [உள்ளூர்க் கோயில்களுக்கு] ஒருபங்கு என்று நான்கு பங்கைப் பிரித்துக் கொடுப்பான். மிச்சமுள்ள ஒருபங்கை முனிவர்கள், புதியவர்கள் மற்றும் தெரிந்தவர்கள் முதலியவர்களுக்கு உணவளித்தல் முதலிய தருமங்களுக்குப் பயன்படுத்துவான். அப்படிப்பட்ட வேளாளர்களின் தெருவைப்பற்றிச் சொல்வோம். 65*

செயல்வினை உழவின் வேளாண் செய்கையின் திறத்தி னாலே
இயல்புடை மூவர் தம்முள் இருபிறப் பாளர் தம்மைத்
தயவினால் அறுதொ ழிற்கும் தவறிலர் கரத்தி றைக்கும்
புயல்என ஈந்து காத்துப் புவியினை வளர்க்கும் நீரார்.

செய்யும் தொழில் உழவுத்தொழில். அது பரோபகாரச் செய்கை. அதைத் திறமையாகச் செய்வதால், உலகத்தை வளர்க்கும் தன்மை உடையவர்கள் இவர்கள். அரசர், அந்தணர், வணிகர் என்னும் மூன்று இயல்புடையவர்களில் இருபிறப்பாளர் எனப்படும் அந்தணர்களை, அவர்கள் தயவுடன் செய்யும் ஆறு தொழில்களுக்கும் [ஓதல், ஓதுவித்தல், யாகம் செய்தல், யாகம் செய்யச் செய்தல், தானங்கள் தருதல், தானங்களை ஏற்றல்] தவறு ஏற்படாதபடிக்காத்து, கையால் இறைக்கும் தண்ணீரைப்போலச் செல்வங்களைக் கொடுத்துக் [தாரைவார்த்துக் கொடுப்பது போலக் கொடுத்து அதாவது பிரதிபலன் கருதாமல் கொடுத்து] காப்பவர்கள் வேளாளராவர். 66

வணிகர்க்கு வாணி பம்செய் வகைப்பொருள் ஈந்து காத்தும்
பணிதக்க பெரியோர் தம்மைப் பரிவினால் பாது காத்தும்
அணிதர்க்கா பரணம் என்ன அரும்புகழ் தரித்தே அன்பாய்த்
துணிவுற்ற அரசற் கா்ன மந்திரித் தொழிலும் செய்வோர்.

வாணிபம் செய்பவர்களுக்கு வியாபாரத்திற்கு வேண்டிய தானியங்கள், காய், கனி, முதலியவற்றைப் பயிரிட்டுக் கொடுத்துக் காப்பவர்களும் வேளாளர்களே ஆவர். [அரசர்க்கு வரியும் அந்தணர்களுக்குத் தானமும், வணிகர்களுக்குப் பொருள்களும் கொடுத்தாலும் செறுக்கில்லாமல்] பணியத்தக்க பெரியவர்களிடம் பணிவும், பரிவும் காட்டிப் பாதுகாப்பார்கள். அணிவதற்கு உரிய ஆபரணங்கள்போல, மிக்க புகழுடனும், அன்புடனும், துணிவுடனும் விளங்குவதால், இவர்கள் அரசர்களுக்கு மந்திரித் தொழிலும் செய்வார்கள். 67

பொருவிலார் உற்ற போதில் பொள்ளென எழுந்தி ருந்து
பிருதுவி மீதில் தாழ்ந்து சூழ்ந்துபே ரின்பம் எய்தி
வரும்இவர் நம்மைக் காக்கும் மாதொரு பாகன் என்றே
அருமையால் அன்னம் சொன்னம் அளித்தவர் ஆசி ஏற்பார்.

ஒப்புமையற்ற அடியார்கள் எதிரில் வந்தால், மிக விரைவாக எழுந்து நின்று, வணங்கித் தரையில் விழுந்து காலைத் தொட்டுக் கும்பிட்டு அதனால் மகிழ்ச்சியடைந்து, 'வந்துள்ள இவர் நம்மைக் காப்பாற்றும் உமாமகேஸ்வரரே' என்று கூறி, அருமையாகச் சமைத்த அன்னத்தை அளித்து

உண்ணச் செய்து, பொன்னையும் கொடுத்து அவர்களின் வாழ்த்தைப் பெறுவார்கள். 68

இருக்கறை விதியை நீங்கா தியற்றுவோர் இல்து றந்த
கருத்தரைக் காக்கும் இன்பம் கருதுவோர் கைம்மா றின்றி
வருத்தம்உற் றாலும் ஈவோர் வணக்கத்தார் வாய்மை காப்போர்
அருத்திஇவ் வண்மை யானோர் வீதியின் அணிகள் ஈதால்

வேளாளர்கள், இருக்குவேதம் சொல்கின்ற விதிகளை விட்டு நீங்காமல் நற்செயல்கள் செய்பவர்களுக்கும், வீட்டை விட்டு நீங்கிய துறவின் கர்த்தாக்களையும் காப்பாற்றுவதை இன்பமாகக் கருதுபவர்கள் ஆவர். பிரதிபலன் கருதாமல் கொடுக்கும் குணம் உள்ளவர்கள் அவர்களே. வறுமை வந்தாலும் கொடுக்கும் வழி அறிந்தவர்கள் அவர்களே. வணக்கம் உடையவர்கள்; வாய்மை காப்பவர்கள். இவை அன்புள்ள கொடைத்தன்மை உள்ள வேளாளர் வாழும் வீதியின் பெருமைகள் ஆகும். 69

## வேசியர் தெரு [சந்தவிருத்தம் - கந்துகச்சந்தம்]

பண்ண யந்த ரப்ப கர்ந்து
பாடு கின்ற பந்தமும்
உண்ண யந்த ரக்க னிந்து
லாவு கின்ற உவகையும்
கண்ண யந்த ரக்க லந்த
காதல் உண்மை காட்டியே
நண்ணும் வேசை மாதர் மேவும்
நளின வீதி நவிலுவாம்.

வேசையர்கள் இராகங்களை விரும்புவார்கள்; நயமுடன் அவற்றின் விளக்கங்களைச் சொல்வார்கள்; அந்த இசைத் தொடர்பினால் மனத்திற்குள் நயம் ஏற்படும்படிக் கனிந்திருப்பார் கள். அதனால் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பார்கள். அவர் களின் கண்கள் குறிப்பு மொழிகளைக் கொடுக்கும். கலந்தகாதலின் உண்மையைக் காட்டி, நெருங்கும் விலைமகளிர் வாழும் சிங்காரமான வீதியைப் பற்றி இனிச் சொல்லுவோம். 70

## [சந்த விருத்தம் - கந்துகச்சந்தம்]

சித்தி ரத்தி னும்செ றித்த
தெற்றி வைத்த பாவினும்
பத்தி ரத்தி னும்க லந்த
பாவை யாரும் மைந்தரும்

முத்தம் வைத்தி டப்பொ றித்த
முன்றில் கண்ட மோகர்கள்
வைத்த சிந்தை ஈர்ந்தி டச்செய்
மாதர் மாடம் எங்குமே.

பெண்களும் ஆண்களும் கலந்த நிலையில் முத்தமிட்டுக் கொள்வது போன்ற காட்சியைச் சுவர் ஓவியங்களாகவும், திண்ணையில் வைத்த கண்ணாடி ஓவியங்களாகவும், இலை ஓவியங்களாகவும் பொறித்து வைத்திருப்பார்கள். வீட்டின் முன்னே செல்லும் காமுகர்கள், அவற்றைப் பார்த்து மனம் லயிப்பார்கள். அப்படிப்பட்ட ஓவிய மாளிகைகளே, எல்லா விலைமாதர் மாளிகைகளும் ஆகும். 71

## [சந்த விருத்தம் - கந்துகச்சந்தம்]

ஆசை வைத்த மைந்தர் தம்மை
ஆசை கூட்டி அந்நலார்
பாசம் வைத்தி வண்வா என்னப்
பரிந்த சிந்தை யோடழாய்
நேசம் வைக்கக் காமி கத்தர்
நிலவு சொர்க்கம் இதனினும்
பேசி டச்சி றந்த சொர்க்கம்
எதுஎ னப்பி தற்றுவார்.

காம ஆசை கொண்ட ஆடவர்களைச் சாகசங்களால் ஆசையை அதிகப்படுத்தி, 'பாசத்துடன் இங்கே வா' என்று கூறி, பரிவுள்ள மனத்துடன் அழைத்து நட்புத்தொடர்பு கொள்வார்கள். அந்த ஆண்கள், 'விளக்கமான சொர்க்கம் இதைக்காட்டிலும் சிறந்ததாக எது இருக்கமுடியும்?' என்று, பிதற்றத் தொடங்கிவிடுவார்கள். 72

## [சந்த விருத்தம் - கந்துகச்சந்தம்]

சூதம் மேவும் சோலை யில்சு
லாவு கின்ற தீயளிச்
சூதம் நேரும் விழியி னார்கள்
தோள்ந யந்த கேள்வர்பால்
சூதெ னுந்த னங்கள் ஈந்து
சுகமு றும்த னத்துடன்
சூதி ணங்க ஆடி வென்று
தொகைப்ப டும்த னங்கொள்வர்.

மாந்தோப்புகளில் சுழலுகின்ற, வெப்பம் கொடுக்கின்ற மன்மதபாணம் போன்ற கண்களைக் கொண்ட வேசியர்கள், தம் தோளை அடைய விரும்பும் அன்பர்களிடம், வட்டாடும் கருவி போன்ற உருண்டையான முலைகளைக் கொடுத்துச் சுகத்தையும் அடைந்து பணத்தையும் அடைவார்கள். அத்துடன் சூதாட்டம் ஆடி வெற்றிபெற்றுப் பெருந் தொகையையும் கொள்வார்கள். 73

## பொது

அலகிலா துலகில் சாதி நான்கில்அவ் வருக்கம் இன்றி
நலமிகும் உயர்ந்த சாதிக் கிழிந்தபெண் நலிந்த ஆணுக்கு
இலகிய உயர்ந்த மாதர் ஏற்பவும் இரண்டும் கூடி
நிலவிய பலவாஞ் சாதி நெறிகொடு நிகழும் மாதோ.

உலகத்தில் முடிவில்லாத சாதிகள் நான்கு. அந்த நான்கு மட்டுமன்றி; முன்னிரு சாதியினருக்குப் பின்னிரு சாதிப் பெண்ணுடனும், பின்னிரு சாதியினருக்கு முன்னிரு சாதிப் பெண்ணுடன் இதேபோலப் பலவகைக் கலப்புகளால், உலகில் மிகப்பல சாதிகள் தோன்றும். இப்படித் தோன்றியவர்களுக்குரிய தெருக்கள் மட்டுமன்றி, நான்கு ஆசிரமங்களுக்கான தனித்தனிப் பகுதிகளும் உள்ளன. 74

அந்தந்தப் பகுதி அன்றி ஆச்ரமம் நான்க தாகி
பந்தமாய் உறைவோர் எய்தும் பதிகளும் உளது பாரில்
இந்திர லோகம் என்னும் எழில்புடார்ச் சுனத்தின் கீர்த்தி
தந்துமுற் றுரைக்க நானோ வல்லவன் சாற்றும் காலே.

நான்கு ஆசிரிமத்தினரும் பிறரும் உறவால் வாழும் பதிகளும் சுற்றி உள்ளன. உலகத்தில் உள்ள இந்திரலோகம் எனப்படும் புடார்ச்சுனத்தின் கீர்த்தியை, முழுதுமாகச் சொல்ல நானா தகுதி வாய்ந்தவன்? 75

# 7. தலவிசேடப் படலம்

அம்பரம்அம் பரமாகச் சூழ்கின்ற அம்புவியில்
உம்பர்தொழும் புகழ்உடுத்த தமிழ்நாட்டில் உயர்நறும்பூங்
கொம்பர்சூழ் புடைமருதம் குலாவிவளர் புண்ணியமாம்
விம்பம்உறு தலவிசேடப் பெருமையினை விளம்புவாம்.

கடலையே ஆடையாகச் சுற்றிக்கட்டிக் கொண்டுள்ளது, அழகான உலகம். இந்த உலகத்தில் புகழையே ஆடையாகச் சுற்றிக் கட்டிக் கொண்டுள்ளது தமிழ்நாடு. தமிழ்நாட்டில் தேவர்களும் வந்து வணங்கும் உயர்வு உடையது திருப்புடை மருதூர். அது நாறும்பூநாதர் என்னும் கொம்பைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. இப்படி இன்பம் குலாவிய புண்ணியமாகிய விம்மிதம் கொண்ட தல விசேடப் பெருமைகளை இனிச் சொல்லு 1
வோம்.

## உலகின் தோற்றம்

ஆதியில் ஒருகா லத்தில் அவனியே முதல யாவும்
ஓதமாம் கடலில் மூழ்க உகமுடிவு உற்ற காலைச்
சீதமார் பிரள யத்தில் சிதைவிலா தித்த லத்தை
நாதன்கைச் சூலம் தன்னில் நாட்டினான் வேத நாடன்.

இந்த உலகம் தோன்றும்முன் ஒருகாலத்தில் முந்தைய உலகம் முதலாகிய எல்லாமும் ஒலிக்கும் கடலில் மூழ்கிப் போயிற்று. அந்தயுகம் முடிவுக்கு வந்த காலத்தில், வேதங்களின் தலைவனாகிய சிவன், குளிர்ந்த பிரளயத்தில் திருப்புடை மருதூர் மட்டும் அழியாதபடியாகத் தன்கைச் சூலாயுதத்தை 2
இவ்வூரில் நட்டுவைத்தார்.

நாதன்தன் இடத்து ஒடுங்கும் நாரணன் முதலோர் தம்மில்
போதனை அழைத்து முன்போல் புவிகளைச் சிருட்டி என்ன
வேதனும் படைக்கல் உற்றான் மேதினி முதல யாவும்
ஈதனில் முனிவோர் தோன்றி இருவினைக்கு எண்ணில் தோற்றம்.

தலைவனாகிய சிவனிடத்தில், நாராயணன் முதலான தெய்வங்களெல்லாம் ஒடுங்கிவிட்ட நிலையில், சிவன் தனக்குள்

ஒடுங்கிய பிரமனை அழைத்து, 'முன்புபோல உலகங்களைச் சிருஷ்டி செய்' என்று உத்தரவிட்டார். பிரம்மா அவ்வாறே செய்யத் தொடங்கினார். உலகம் முதலாகிய அனைத்தும் படைக்கப்பட்டன. முனிவர்கள் தோன்றினார்கள். 3

வந்திடும் அவாவும் சாதி நான்கில்ஆண் பெண்மற் றுள்ள
தந்திடும் குலம்அ னேகம் சார்ந்திடும் உயிர்கட் கெல்லாம்
பந்தமாம் தொழிலும் மற்றைப் படைத்திடும் நூலும் அன்றி
முந்தும்ஆச் சிரமத் தோர்க்கு முறைதரும் விதிவி ளக்கம்.

"இந்த உலகில் நல்வினை தீவினைகளினால், பல பிறப்புகள் வரவிருக்கின்றன. நான்கு சாதிகள் உருவாக இருக்கின்றன. ஆண்கள் பெண்கள் என்ற பால் பகுப்பு உருவாகும். பலதொழில்கள் தேவைப்படும். தொழில்களுக்கான நூல்கள் உருவாகும். வருணாஸ்ரமத்தோருக்கு முறையான விதிகளும் விளக்கங்களும் தரவல்லது வேதமேயாகும்! 4

தருவது வேதம் அன்றி வேறில்லை என்ற தாம்செய்
தருமமும் நூலே அந்த மறைதனைக் கருதிக் காணத்
துருவிடும் போதில் எங்கும் தோன்றிடா வகையினாலே
பரமன்பால் கயிலை தன்னில் பவுடிகம் பெறுவோ மென்றே.

அதைத்தவிர வேறொன்றும் இல்லை. வேதம் ஏகம். தருமமும் வேதமேயாகும். இந்தப் புதிய உலகத்தில் துருவித் தேடினாலும் வேதம் கிடைக்கவில்லை. எனவே, கயிலாயத் திற்குச் சென்று, பரமனிடம் முதல்வேதத்தைப் பெறுவோம் என்று கூறி, முனிவர்கள் தவம் செய்தார்கள். 5

தவத்தினைப் புரிந்தார் ஈசன் முனிவர்பால் சார்ந்து நீவிர்
புவிக்கணே வேதம் நான்கும் புடார்ச்சுனம் அதனில் நிற்கும்
நவிக்கரன் தனைப்பூ சித்து நண்ணிய ததனை அந்தச்
சிவத்தலத் தினிலே சென்று பெறுகெனச் சித்தர் எல்லாம்,

ஈசன், முனிவர்கள் எதிரில் வெளிப்பட்டார். 'உலகத்தில் நான்கு வேதங்களும் புடார்ச்சுனத்தில் நிலைபெற்றுள்ளன. நீங்கள் மானைக்கரத்தில் கொண்டுள்ள பெருமானைப் பூசித்து, அவற்றைப் பெற்றுக்கொள்ளுங்கள்' என்றார். 6

## சூதமுனிவர் சொன்னவை

பூதலம் அதனில் வந்து புடைமரு தரனைப் போற்றி
வேதம்நான் கினையும் பெற்று வியந்தனர் முனிவர் என்று
சூதமா முனிவன் சொல்ல முனிவர்கள் துதித்துப் பின்னும்
நாதனை வேதம் போற்றும் நலத்தினை விரிப்பாய் என்றார்.

சித்தர்களாகிய அந்த முனிவர்கள் எல்லாம் மண்ணுலகத் திற்கு வந்தார்கள். புடைமருதப் பெருமானைப் போற்றினார் கள். நான்கு வேதங்களையும் பெற்றுக் கொண்டார்கள். வியப் படைந்தார்கள் என்று, இந்நிகழ்ச்சியைச் மகாமுனிவராகிய சூதமுனிவர் சொன்னார். அதைக்கேட்ட முனிவர்கள், அவரைத் துதித்தார்கள். 'சிவனையும் வேதங்களையும் எப்படிப் போற்ற வேண்டும்? அவற்றால் என்ன நன்மைகள் ஏற்படும்? அவற்றை விரிவாகச் சொல்லவேண்டும்' என்று, வேண்டிக் கொண்டார்கள். 7

**ஆதியில் கிருத யுகத்தினில் இருக்கு**
**வேதம்மெய் அருச்சுனம் ஆகி**
**நீதியால் பணிந்தும் திரேதநீள் உகத்தில்**
**நிமலனைத் தயித்திரிய மதமா**
**வேதமே ஆம்பிர விருக்கமாய்த் துதித்து**
**மேயது வாபர யுகத்தில்**
**ஓதிய சாம வேதவெண் சம்பாய்**
**உறுதிகொண்டு உழைநின்று பணிந்தும்,**

'ஆதியில் கிருத யுகத்தில் இருக்கு வேதம் மருதமரமாகி, இறைவனை வணங்கியது. நீண்டதாகிய திரேதாயுகத்தில் இரண்டாம் வேதம் யசுர்[தயித்திரியம்] மாமரமாகி இறைவனை வணங்கியது. துவாபரயுகத்தில் சாமவேதம் வெண்ணாவல் மரமாகி, உறுதியுடன் இறைவனின் பக்கத்தில் சென்று வணங்கியது. 8

**சீர்தர மூன்று யுகத்தினும் போற்றும்**
**செயலிதாம் பொய்செறி கலியாம்**
**போர்தரு யுகத்தும் அவ்வகை யான**
**பின்ஒரு வேதமும் முறையே**
**நீர்தரு வேணி நிமலனைச் சூக்க**
**உருவினால் பணிவதால் நிறைந்த**
**ஏர்கொள்முத் தருவில் இந்திரன் முதலா**
**எண்ணிலார் இருந்தவம் புரிந்தார்.**

மூன்று யுகங்களிலும் சிறப்பு ஏற்படுமாறு இறைவனைப் போற்றிய செயல் இதுவாகும். பொய்மலிந்த கலி என்ற பெயர் பெற்ற யுகத்திலும் அதேபோலப் பின்னே தோன்றிய வேதம் [அதர்வவேதம்] கங்கை அணிந்த சடையானை, முறைப்படியாகச் சூட்சம உருவத்துடன் பணிந்து கொண்டுள்ளது. அதனால் அழகு பொருந்திய நிறைவான மூன்று மரங்களின் கீழ் இந்திரன் முதலாகிய எண்ணற்ற தேவர்கள் பெரிய தவம் செய்கிறார்கள். 9

இவ்வகைத் தாய மூவகைத் தருவும்
பிறப்பிறப்பு இன்றிஎக் காலும்
திவ்விய வடிவாய்ப் பணிபவர் தங்கள்
பிறவியை ஒழித்திடும் செயலாய்
நவ்விசேர் கரத்தார் அருளையே பொருந்தி
நாள்தொறும் வதிந்திடும் நலத்தால்
அவ்வியம் அகற்றும் இத்தல மகிமை
யாவரும் அளந்திடற் கரிதால்.

*இப்படிப்பட்ட புகழுடைய மருதமரம், மாமரம், வெண்ணாவல் மரம் ஆகிய மூன்று மரங்களும், பிறப்பு இறப்பு இல்லாமல் எக்காலத்திலும் நிலைத்தவை ஆகும். எல்லாக் காலங்களிலும் திவ்வியவடிவாக இருக்கும். இவை பணிபவர்களின் பிறவியை ஒழிக்கும். மானைக் கையில் ஏந்திய பெருமானின் அருளைப் பொருந்தி, இவை நாளும் வாழும் காரணத்தால், வறுமையை அகற்றும். இந்தத் தலத்தின் மகிமையை யாராலும் அளவிட்டுச் சொல்ல முடியாது.* *10*

இன்பமார் மருத நீழல் முத்திஎய் திடம தாகும்
அன்பினால் அதனை ஈவோன் அருச்சுன வாண னாவன்
தென்புவிக் கங்கை கூடும் திருவேணி தீரம் ஆகும்
நன்பத வியதாம் இந்த நகர்த்திரு நாமம் சொல்வாம்.

*இன்பம் பொருந்திய மருதமரத்தின் நிழல், முத்தி அடைவதற் குரிய இடமாகும். அன்புடன் முத்தியை அளிப்பவன், அருச்சுன வாணன் ஆவார். தென்னாட்டில் கங்கை கூடும் திரிவேணி சங்கமம் இவ்வூரேயாகும். நல்ல பதவியாகிய இந்த ஊருக்குள்ள பெயர்களை இனிச் சொல்லுவேன்.* *11*

## திருப்புடைமருதூரின் வேறுபெயர்கள்

சிவநகர் தென்கயிலை சீவன்முத்தி புரம்மணம்சேர்
அவனிதனில் இந்த்ரபுரி ஆம்பிரபதி ஆதிபுரி
தவநகர்தென் பால்காசி தாரகே சுரம்மருதென்று
உவமைஇலாப் பூதிநகர்க் கோதுவர்இன் னும்பலவே.

*மணம் பொருந்திய இந்த உலகத்தில் சிவநகர், தென்கயிலை, சீவன்முத்திபுரம், இந்திரபுரி, ஆம்பிரபதி, ஆதிபுரி, தவநகர், தெற்குக்காசி, தாரகேஸ்வரம், மருதூர், பூதிநகர் என்று ஒப்புவமை இல்லாப் பல பெயர்களை, இவ்வூரின் பெயர் களாகச் சொல்லுவார்கள்.* *12*

## தலப்பெருமைகள்

பாவமோ சனம்செய்து பரத்தை ஈதலால்
சீவன்முத்தி யைத்தரும் சேத்திரம் ஆதலால்
ஆவுடை யாள்எனும் அமலை மேவலால்
பூவில்இத் தலத்தினோர் புகலல் பாலதோ.

*பாவங்களை நீக்கி, முத்தியைத்தரும்; சீவன்முத்தியும் தரும் தலம் இது ஆகையாலும், ஆவுடையம்மன் என்னும் அமலை அருள்பாலிப்பதாலும் இவ்வுலகத்தில் இத்தலத்திற்கு இணை யான தலமாக வேறொன்றைச் சொல்ல முடியாது.* 13

ஆணவம் முதலிய அகற்றும் சீலினி
மாணும்இத் தலத்துமுத் தருக்கள் மற்றுஇதைக்
காணுவோர்க் கின்பமாம் ஞானக் கண்ணினால்
பேணுவோர்க்கு ஆனந்தம் பெருக்கும் என்பவே.

*இத்தலத்தில் உள்ள நற்குணம் உடைய பெண் போன்ற புகழுடைய மூன்று மரங்களும், ஆணவம் முதலிய தீய குணங் களை நீக்கும்; தரிசிக்க இன்பம் கொடுக்கும். ஞானக்கண்ணால் பார்த்து, இவற்றைப் பாதுகாக்கும் யோகிகளுக்கு ஆனந்தத்தைப் பெருக்கும்.* 14

புண்ணியர் சேரும்இத் தலத்தில் போந்திட
எண்ணியே ஓர்அடி எடுக்கில் ஓர்பரி
பண்ணிய யாகத்தின் பயன்உண் டாம்பதி
அண்ணினோர் பெறும்கதிக் களவின் றால்அரோ.

*புண்ணியம் செய்தவர்கள் வரும் இந்தத்தலத்திற்கு வந்து தரிசனம் செய்யவேண்டும் என்று ஓர் அடி எடுத்து வைத்தாலே அஸ்வமேதயாகம் செய்த பயன்கிடைக்கும். எனவே, இப்பதிக்கு வந்தோர் பெறும் நற்கதிக்கு அளவே இல்லை என்பதை அறியலாம்.* 15

பிறவி சாகரப் பெருவெள்ளம் கடப்பவர்க்கு இந்த
நறைத ரும்புடார்ச் சுனம்புணை; அதிலுறை நாதன்
அறம தாகிய காலினால் செலுத்தியார் அரந்தைச்
சிறையை நீக்கியே முத்தியாம் கரையினில் சேர்க்கும்.

*பிறவி என்னும் கடலைக் கடப்பதற்கு, இந்த மணம் மிகுந்த புடார்ச்சுனம் புணை ஆகும். புடார்ச்சுனத்தில் இருக்கும் தலைவன், தர்மம் என்னும் காற்றைச் செலுத்திப் பிறவிச் சிறையை நீக்கி, முத்தி என்னும் கரையில் சேர்ப்பார்.* 16

பாவகா ரியர்கட்கு எய்தாது இப்பதி வதிய முன்னம்
தாவிலாத் தருமச் சார்பால் சார்பவர்க்கு எய்தும் முத்தித்
தேவுயர் தலத்தை உன்னில் செய்பவம் தீரும் சேர்ந்தார்க்கு
ஆவன அனைத்தும் நல்கும் அருங்கதி அளிக்கும் மாதோ.

*இப்பதியில் வசிக்கும் பாக்கியம், பாவம் செய்தவர்களுக்குக் குக் கிடைக்காது. முற்பிறவியில் குற்றமில்லாத தருமம் செய்தவர் களுக்கே கிடைக்கும். முத்தித்தெய்வம் தங்கியுள்ள இத்தலத்தை நினைத்தால் பிறப்பு நீங்கும். இங்கு வந்து சேர்ந்தவர்களுக்கு எல்லாமும் கிடைக்கும். நற்கதி கிடைக்கும்.* *17*

## சிவனார் உமையம்மைக்கு உரைத்தவை

இத்தல மகிமை ஓர்கால் இமையவட்கு இறைவன் சாற்றும்
உத்தமம் உரைப்பாம் அண்டம் புருடன்தன் உருவம் தன்னில்
கைத்தலம் காசி காஞ்சி காளத்தி அவன்சு வாச
மத்திக ளடுக்கல் மூன்றாம் அருச்சுனம் அவன்கண் ஆமால்.

*இமையவளாகிய உமையம்மைக்குக் கணவனாகிய சிவன், உனக்கு இத்தத்தலத்தின் மகிமையைச் சொன்னார். அதை நான் சொல்கிறேன். அண்டம் என்னும் ஆணின் உருவத்தில் கை என்னும் உறுப்பு காசி, காஞ்சி, காளத்தி; அவன் சுவாசிக்கும் மூக்கு, மலைகள்; மூன்றாகிய அர்ச்சுனத்தலங்கள் [தலைமருது மல்லிகார்ச்சுனம், இடைமருது திருவிடைமருதூர், கடைமருது திருப்புடைமருதூர்] அவனின்கண்கள்.* *18*

இதனில்வண் பொருனை சூழ்ந்த எழில்புடை அருச்சு னந்தான்
முதல்வனின் வலக்கண் ஆகும் மொழிந்தமெய் அவய வத்தில்
அதிகம்நேத் திரமே என்ன அறைவர்அத் தன்மை யாகிப்
பதிதனில் மேன்மை யான இத்தலம் பரமத் தானம்.

*இதில் பொருனை சூழ்ந்த இத்தலம், அண்டபுருஷனின் வலக்கண். உறுப்புகளில் கண்ணே சிறந்ததாகும் என்பார்கள்; அதனால் பதிகளில் இதுவே மேலானதாகும்.* *19*

சிமையம்ஆர் கயிலை மூலம்; திங்களூர், தினக ரேசம்;
அமைதரு அரன்கண்; தில்லை; தெரிசனைக்கு அருளும்; கற்போர்
தமைஅருள் காள கத்தி தாணுவே; அருணைத் தானத்து
இமையவர் துதிப்பர்; ஆரூர் இலிங்கம், நீர் ஆனைக் காவே.

*மலைஉச்சியாகிய கயிலாயம், எல்லாத் தலங்களுக்கும் மூலமான தலமாகும். சூரிய சந்திரர்களைக் குறிக்கும் திங்களூர்,*

தினகரேசம் என்று இரண்டு தலங்கள் உள்ளன. அவை சிவனின் இருகண்கள். தரிசனத்துக்கு அருள்செய்யும் கோயில் எனப்படும் தலம் தில்லை ஆகும். மார்க்கம் கற்றவர்களுக்கு அருள்செய்யும் தலம் திருக்காளத்தி. திருவண்ணாமலையில் தேவர்கள் துதிப்பார்கள். திருவாரூர் இலிங்கவிசேடம் உள்ளது. திருவானைக்கா அப்பு [நீர்] இலிங்கத்தலமாகும். 20

இவ்வகைத் தானம் எல்லாம் எமதுஅட்ட மூர்த்தம் இந்தத்
திவ்விய முத்தித் தானம் திகழ்உப தேசச் சேத்ரம்
எவ்வம்இல் மருதம் நாமே எனச்சிரம் சாய்ந்து காட்டி
அவ்வகை இருப்போம் காண்போர்க்கு அடையாள மாகத் தானே.

முன்னே கூறிய எட்டிடங்களும், 'அட்ட மூர்த்தங்கள்' எனப் படும். இவ்வூர் முத்தித்தலம்; உபதேசத்தலம். தரிசிப்பவர்க்கு அடையாளம் காட்ட, 'நாமே மருதம் என்று தலைசாய்ந்து காட்டி இருப்போம்.' 21

திருவளர் சீவன் முத்தி அருச்சுனம் தெரிசிப் போர்க்குக்
கருதுவ எய்தும் சோரக் கலிகவர்ந் திடுமுன் கன்மம்
வெருவுறு மயக்கம் தீரும் விலங்குபேய் பிணிவிலங்கும்
பெருமகிழ்வு எய்தும்; இம்மைப் பிறப்பின்நல் பேறுஅது ஆம்ஆல்.

செல்வம் வளரும் ஜீவன் முத்தித் தலமாகிய இந்த அருச்சுனத் தலத்தைத் தரிசிப்பவர்களுக்கு நினைத்தவெல்லாம் நடக்கும். வஞ்சமாகிய வறுமை வராது. வினை, மயக்கம் ஆகியன தீரும்; விலங்குகளால், பேய்களால், பிணிகளால் வரும் துன்பங்கள் நீங்கும். பெரிய மகிழ்ச்சி சேரும். இதைத் தரிசிப்பதே இப்பிறப்பின் பேறாகும். 22

## தலப்பயன்கள்

இத்தல மகிமை இவ்வாறு
அறிந்தவர் இடைவி டாமல்
நித்தனை வழிபட்டு ஏத்தி
நெடும்கிரி வலம்கொண்டு உள்ள
சித்தம்அது ஆன மோன
சிந்தனை உடையர் ஆகி
முத்தியை எய்தி நின்றார்
பெறுபலன் மொழியற் பாற்றோ?

இந்தத் தலச்சிறப்பை இவ்வண்ணம் அறிந்தவர்கள், நிலைபேறுடைய சிவபெருமானை வழிபட்டுப் புகழ்ந்து, பெரிய மலையாகிய கயிலாயத்தையே வலம் வருவதான தியானத்தை உடைய சித்தத்தில் மௌன சிந்தனை உடையவர் ஆகி, வீடுபேற்றை அடைவர். இத்தலச்சிறப்பை அறிந்தவர் கட்கே இவ்வளவு பலன்கிடைக்கும் என்றால், இத்தலம் தரும் பயன்களை முழுவதும் சொல்ல இயலுமா? 23

என்றுஇறை அருளிச் செய்த
எழில்புடை மருதம் என்னும்
நன்றுஇசை பெற்ற மூதூர்க்கு
உவமையாது என்று நாடில்
மன்றல்அம் போத னாலும்
வழுத்துதற்கு அரிய தான
மின்திகழ் மாடம் ஓங்கும்
சிவன்நகர் என்பர் மேலோர்.

மேலே சொன்னபடி இறைவன் அருளிச்செய்த அழகான புடைமருதம் என்னும் புகழ்பெற்ற பழைமையான ஊருக்கு உவமையாகச் சொல்லத்தக்க ஊர் யாது என்று ஆராய்ந்தால், மணமான அழகிய மலரில் வீற்றிருக்கும் பிரமனாலும் போற்று தற்கு அருமையான மின்னல் ஒளிவீசும் மாடங்கள் ஓங்கிய கயிலாயமே [சிவன் நகரே] உவமை என்று, பெரியவர்கள் சொல்வார்கள். 24

கருமத்தால் பாடல் ஆடல் காட்சியால் கலவி மாதர்க்கு
ஒருமித்த மனத்தால் வெய்யோன் உமிழும்ஆ தவத்தால் பெய்யும்
வருடத்தா லேனும் இந்த மருதில்மாத் திரைப்போ தேனும்
நிருமித்து வதியப் பெற்றோர் நிருமலன் கயிலை நீங்கார்.

இவ்வூரின் செயல் திறத்தால், பாடல் ஆடல் காட்சிகளால், புணர்ச்சிக்குரிய பெண்களின் ஒருமித்த உணர்வினால், கொடுமை யின்றி வரும் வெயிலால், தேவையான அளவுக்குப் பெய்யும் மழையால் ஒரு மாத்திரைப் பொழுது இங்கு வசித்தவர்கள் கையலாயத்திற்குப் போகும் எண்ணத்தையும் விட்டு விடுவார்கள். 25

பொன்னினைக் கொடுவந் தேனும் புண்ணியம் விரும்பினோர்கள்
இன்னல்கூர்ந் திருந்தா னாலும் ஏவல்யார்க் கியற்றி யேனும்

துன்னிய சுமைஏற் றானும் சூழ்ந்துஜயம் ஏற்றா னாலும்
மன்னுதா ரகத்தை நல்கும் இந்நகர் வதிய வேண்டும்.

*தங்கத்தை அள்ளிக் கொடுத்தாவது, எவ்வளவு துன்பப் பட்டாவது, யாருக்கு அடிமை வேலை செய்தாவது, மூட்டை தூக்கி யாவது, பிச்சையெடுத்தாவது இந்த ஊரில்தான் வாழவேண்டும். ஏன்என்றால், இந்த ஊரில் மரணிப்பவர்களுக்கு மட்டும் தான் இறைவன் தாரக மந்திரத்தை உபதேசிக்கிறார். 26*

பன்னிஇத் தலத்தில் செய்த பாவபுண் ணியம்இ ரண்டும்
தன்னிலே மிகுதி யாகும் வேறொரு தலத்தில் செய்த
துன்னிய பாவம் இங்குத் துகள்கண்ட சூறை போலும்
மன்னுவோர் வினைகள் ஓட்டும் தண்டத்தின் மகிமை தானே.

*இந்தத் தலத்தில் பலநாளும் செய்யும் புண்ணிய பாவங்கள் பல மடங்காகப் பெருகும். மற்ற தலங்களில் செய்த பாவங்கள் சூறைக்காற்றில் அகப்பட்ட தூசு போல ஓடிவிடும். இங்கே நிலைபெற்றுத் தங்குபவர்களுக்கு நீதிக் கோல் [பிரமதண்டம்] வினைகளை ஓட்டும். 27*

காசியே அயோத்தி மாயை முதலிய கதிசேர் கின்ற
வாசமார் பதிகட்கு எல்லாம் மகிமையாய் வளம்பெற்று ஓங்கி
நேசமாய் அருள்சேர் கின்ற நிருமல உலக மான
பேசுவோன் நகரம் ஈதைப் பேசுவோர் பிறப்பற் றோரே.

*காசி, அயோத்தி, பிரயாகை முதலிய பிறப்பறக்கும் மகிமை யுள்ள தலங்கள் எல்லாவற்றிற்கும் மேலாக, நிர்மலமான இந்த நகரம்தான் பேசும் பிரான் உள்ள நகரமாகும். பேசும் நாதனின் இந்த நகரத்தைப் புகழ்ந்து பேசியவர்கள், பிறப்பி லிருந்து விடுபடுவார்கள். 28*

பத்தி யும்தரும் பண்பும் பரிவும்நல்
புத்தி யும்தரும் புன்மை அகற்றிடும்
சித்தி யும்தரும் சீவன் மருவிய
முத்தி ஆன புரம்இதை முன்னிலே.

*ஜீவன் முக்தி புரமாகிய இத்தலத்தை அடைந்தால், பக்தி, பண்பு, புத்தி ஆகியவற்றுடன் எல்லாக் காரியங்களும் சித்தியு மாகும்; கீழ்மைக் குணங்களும், கீழ்மைச் செயல்களும் அகன்று போகும். 29*

இத்தலத்தில் யார்ஒருவற் கேனும் அன்னம்
ஈதல்ஆ யிரம்எதிகட்கு ஈந்த பேறாம்;
நித்தமும்எத் தலத்தினிலும் வதியும் பேறோர்
நிசியில்இவண் வதிபலனாம்; இங்கு நீங்கா

உத்தமநல் உயிர்மற்றும் இலிங்க ரூபம்;
உரைசெபமாம்; உலவுநடை வலம்அ தாகும்;
வித்தகர்க்குஊண் செயல்வேள்வி; விருந்து காப்போர்
விரும்பும்உப சாரம்எலாம் விமலன் பூசை.

இந்த ஊரில் யாராவது ஒருவருக்கு உண்ண உணவு கொடுத்தால், ஆயிரம் துறவிகளுக்கு அன்னதானம் செய்த புண்ணியம் கிடைக்கும். புண்ணியத் தலத்தையே சொந்த ஊராகக் கொண்டவர்கள், அதனால் என்ன நன்மை அடைவார்களோ, அந்த நன்மை ஓர் இரவு இங்குத் தங்கினாலே கிடைக்கும். இங்கே இடைவிடாமல் தங்குபவர்கள் உயிர், இலிங்க வடிவமாகிவிடும். இந்த ஊரில் பேசும் பேச்சுகளெல்லாம் ஜபங் களுக்குச் சமமாகும். இந்த ஊரில் எந்த இடத்தில் எப்படி நடந்தாலும், திருக்கோயிலை வலம் வந்த புண்ணியம் கிடைக் கும். வேத வித்தகர்களுக்கு உணவளிக்கும் செயல், வேள்வி செய்தல், விருந்து செய்தல், மற்ற உபசாரங்களைச் செய்தல் ஆகியவை எல்லாமும் சிவனுக்குச் செய்யும் பூசைகளாகவே அமைந்துவிடும். 30

பொருனையில்இந் திரமோட்சம் படிந்துபுடார்ச் சுனம்பரவிப்
போந்து கோயில்
மருவிவலம் செய்துமையை மழுவில்வலா ணைப்பணிந்து
மனுவை ஓதிக்
கருதிவரு பெரியோர்கள் உடன்கூடித் துதிகூறிக்
கணப்போ தேனும்
மருதமுத்தித் தலத்துறைவோர் வானமுத்தித் தலம்நீங்கா
மகிமை யோரே.

பொருனைநதியில் உள்ள இந்திர மோட்சம் என்னும் படித் துறையில் குளித்துப் புடார்ச்சுனம் என்னும் திருக்கோயிலைப் புகழ்ந்துகொண்டு கோவிலுக்கு வந்து உமாதேவியை— சிவ பெருமானை வணங்கி மனு மந்திரங்களை ஜெபித்துக்கடமை செய்பவர்களும், அவர்களுடன் கூட வந்து துதி செய்பவர்களும், ஒருகண நேரமாவது இந்தத் தலத்தில் தங்குபவர்களும் ஆகிய அனைவருமே மோட்சமடைந்து, நீங்காத மகிமையைப் பெறுவார்கள். 31

ஆகத் திருவிருத்தம் – 243

# 8. தீர்த்த விசேடப்படலம்

முத்தலத் தினுக்கு முதல்தலம் சீவன்
முத்திய தானஇத் தலத்தின்
உத்தமம் உரைத்தாம் முத்தர்கள் வலமாய்
உலவியே உயிர்களுக் கினிதாய்ச்
சித்திதந் தடைந்தோர் செய்வினைப் பவங்கள்
அனைத்தையும் சிதைத்தருள் சிறந்த
வித்தகப் பொருனை விளங்கிய தீர்த்த
விதிவிசே டத்தினை விரிப்பாம்.

ஜீவன் முக்தித் தலமான இந்தத் தலத்தின் சிறப்புகளைச் சொன்னேன். முக்திக்கு உரியவர்கள் வலம்வந்து, உயிர்களுக்கு இனிமையான சித்தியை அடைந்தோர் செய்யும் வினைகளையும், பிறப்புகளையும், தீமைகள் எல்லாவற்றையும் சிதைக்கும்படியான சிறந்த பெருமைகள் பொருந்திய பொருனைநதி என்னும் தீர்த்தத்தின் விசேடத்தை, இனிமேல் சொல்லப்போகிறேன். 1

## தீர்த்த வரலாறு

ஆதியில் புடைசேர் அருச்சுனத் தரனை
அரிஅயன் முதலினோர் கண்டு
நாதனைப் பரவிப் புகல்வர்இக் குறியை
நறும்புனல் மலரினால் நாங்கள்
காதலால் போற்றக் கருதிஇங்கு அடைந்தோம்
கங்கைஒன் றருள்எனக் கருதி
வேதநா யகனும் அவர்க்கருள் சுரந்து
விருப்புடன் இன்னன விளம்பும்.

புடார்ச்சுனத்து அமர்ந்த சிவபெருமானை, திருமாலும், பிரமனும் முன்னாளில் போற்றிப் பின்வருமாறு சொன்னார்கள்: 'இந்த அடையாளத்தை [இலிங்கத்தை] வாசனையுள்ள பூக்களாலும், நீராலும், வழிபட்டுப் போற்றுவதற்காக இங்கே வந்தோம். எனவே, இங்கே கங்கையை வரவழைக்க வேண்டும்' என்றனர். இறைவனும் அதைக் கேட்டுக் கீழ்வருமாறு கூறினார். 2

அகத்தியன் கடத்துப் புனிதநீர் இங்ஙன்
அடைந்திடப் புரிகுதும் அதனால்
சகத்தினில் நீவிர் பூசனை புரிவீர்
என்னவே சங்கரன் சாற்றி
மகத்துவ முனியான் நதிவர நினைந்தான்
வான்நதி மழைமுழக் கெனவே
இகத்தவர் புகழ எழுந்துடன் ஏக
இவர்கண்டு இன்பம்எய் தினரால்.

*'அகத்தியனின் கமண்டலத்தில் உள்ள புனிதநீர் இங்கே ஆறாக வரும்படி செய்கிறோம். அந்த நீரைக்கொண்டு நீங்கள் பூசை செய்யுங்கள்' என்றார். அப்பொழுது மகத்துவம் பெற்ற அகத்திய முனிவனின் கமண்டல நீர், வான்வழியாக மழை முழக்கத்துடன் உலகோர் புகழும்படியாக ஆறாக வந்தது. பிரமனும் திருமாலும் கண்டு, இன்பம் அடைந்தார்கள். 3*

ஈசனைத் தொழுதுஎவ ரும்நதி மூழ்கிக்
கடன்முடித்து இறைவனுக்கு இந்த
வீசுநீர்க் கங்கை மஞ்சனம் ஆட்டி
விரைமலர் தூவியே பழிச்சி
நேசமோடு எளிதாய் வரங்கள்பெற் றிருந்தார்
நிறைபுனல் இதனிடை நிலத்தே
வாசவன் முதலோர் ஓதிட அடையும்
வளங்களும் மகிமையும் வகுப்பாம்.

*எல்லோரும் நதியில் மூழ்கி நீர்க்கடன்களை முடித்து, பொருனை என்கின்ற கங்கை நீரை இறைவனுக்கு அபிஷேகம் செய்தார்கள். மணம்பொருந்திய மலர்களையும் தூவி வாழ்த்தி னார்கள். அந்த அன்பு காரணமாக இறைவனிடம் மிக எளிமை யாகப் பல வரங்களைப் பெற்றார்கள். இந்த நதியின் கரையில் உள்ள நிலங்களில், இந்திரன் முதலானவர்கள் இறைவனைப் புகழ்ந்து, அடைந்த வளங்களையும் இனிச் சொல்கிறேன். 4*

## வளங்களும் மகிமையும்

மண்பரவும் புடைமரு தூரிலே
மன்னும் உத்தர வாகினி தீர்த்தத்தில்
பண்புடன் படியப்பலன் ஒன்பது
பான்மை உள்ள கிறுச்சனம் நல்கிடும்
எண்பதோ டொருநான்கு கிறுச்சனம்
இந்திர மோட்சம் படிபவர்க் கெய்திடும்
விண்பர வுந்தைப்பூ சந்துலா
விடுமேட நலவிடு மிக்க பலன்களே.

உலகம் போற்றும் திருப்புடைமருதூரில் வடக்காக ஓடும் இந்தத் தீர்த்தத்தில் குளித்தால், ஒன்பது பங்கு நன்மைகள் கிடைக்கும். எண்பத்து ஐந்து [85] முறை குளிப்பவருக்கு இந்திர மோட்சமே கிடைக்கும். விண்ணோர்கள் போற்றும் தைப்பூசத் திருநாளில் மேஷ லக்னத்தில் குளிப்பவர்களுக்கு, எண்ணிக்கையற்ற பலன்கள் கிடைக்கும். 5

தோன்றும் பாதல கங்கை பொருனைநீர்
சுலவு கின்ற கடனை நதியுடன்
மூன்றும் கூடித் திரிபத கைப்பெயர்
மூத்தி நல்கிடும் மடுவினில் மூழ்கு
கீன்றி டும்பலன் எண்பான் கிறுச்சனம்
இவைதண்டா யுததீர்த்தம் இதன்கீழுக்கு
ஆன்ற மாண்ட வியாசன் தீர்த்தமோடு
ஐந்தும் ஆட ஐங்குற்றம் அகற்றுமே.

பாதாள கங்கையும், பொருனை நதியும், கடனா நதியும் கூடி, திரிபதகை என்று இந்நதி பெயர் பெறுகிறது. எனவே, இந்நதியின் நடுவில் மூழ்கினால், முக்தி கிடைக்கும். தண்டாயுதத் தீர்த்தத்தில் மூழ்கினால், எண்பது பங்கு பலன்கள் கிடைக்கும். அதன் கீழ்ப் பகுதியில் உள்ள வியாசதீர்த்தம் முதலாகிய ஐந்து தீர்த்தங்களிலும் குளித்தால், பஞ்சமாபாதகங்களும் தீர்ந்துவிடும். 6

மாற்றம் உள்ள மற்றுள தீர்த்தமுன்
வந்து தோய்ந்த வளம்பெற்ற வளம்தரு
நாற்றி சைப்பதி போற்றும்இத் தீர்த்தத்தில்
நாளும் மூழ்க நலம்தரும் உண்மையாய்ப்
போற்று வோர்க்குப் புதல்வரும் செல்வமும்
புந்தியில் சிந்தை செய்பொரு ளும்தரும்
கூற்றம் சீற்றம் கொடுவினை கொண்டநோய்
குற்ற மும்தவிர்த் துக்குணம் நல்குமே.

பல்வேறு மாற்றங்களை அடையும் மற்ற தீர்த்தங்களிலும் குளித்தால் செல்வம் வரும். இத்தீர்த்தங்களில் நாளும் மூழ்கி உண்மையாக வழிபடுபவர்களுக்குப் பிள்ளைப்பேறும் செல்வமும் மனத்தில் நினைத்த பொருள்களும் கிடைக்கும். எமனின் கோபமும், கொடுமையான பாவங்களால் வரும் நோய்களும் நீங்கும். குற்றங்கள் நீங்கிக் குணங்கள் பெருகும். 7

## தீர்த்தப்பெருமை

எங்கும்வாழ் தீர்த்த மான சேனைகட்கு இறைவி யாகும்
மங்கள தீர்த்தம் என்னும் பொருனையாம் கங்கை மாது
பங்கினன் சிரத்தில் உற்றும் பாகமும் வேண்டி யன்றோ
இங்குயர் வலம தாக எய்திடும் இயல்பு தானே.

*இவ்வூரில் உள்ள எல்லாத் தீர்த்தங்களுக்கும் இறைவியாக விளங்குவது, மங்களம் பொருந்திய பொருனையாகிய கங்கை என்னும் பெண்ணாவாள். பெண்ணைப் பாதியில் கொண்டிருக்கிற ,சிவனின் தலையில் கங்கை உள்ளது. கங்கை என்னும் பெண், சிவனின் வலப்பாகத்தைத் தனக்கு வேண்டுமென்று கேட்டு, வலப்பக்கமாகச் சுழன்று ஓடுகின்றாள்.* 8

இப்பெரும் தீர்த்தம் தன்னை ஆடினோர் இறைஞ்சி னோர்பின்
இப்பெரும் தீர்த்த மேன்மை உரைத்துளோர் இசைந்து கேட்போர்
இப்பெரும் தீர்த்தம் ஈசற்கு இயற்றுவோர் இயற்று விப்போர்
இப்பெரும் தீர்த்தம் கொள்வோர் இறைசிவ லோகம் நீங்கார்.

*இந்தத் தீர்த்தத்தில் குளித்தவர்கள், புகழ்ந்தவர்கள், மேன்மையை அறிந்தவர்கள், இத்தீர்த்தத்தை எடுத்து இறைவனை அபிஷேகம் செய்தவர்கள், செய்விப்பவர்கள் இத்தீர்த்தத்தை உட்கொண்டவர்கள், இறைவனின் சிவலோகத்தில் நீங்காமல் வாழ்வார்கள்.* 9

இச்சிவ தீர்த்தப் பான்மை இசைத்திடில் பரத்துக்கு ஏணி
இச்சிவ தீர்த்தம் காண்பார்க்கு இறைஅரி அயனும் கங்கை
இச்சிவ தீர்த்தம் யார்க்கும் பவித்திரம் இயற்ற லாலே
இச்சிவ தீர்த்தம் தார கத்தினை இயற்றும் அன்றே.

*இதன் பான்மையைச் சொல்வதானால், இத்தீர்த்தமே பரலோகத்திற்கு ஏணி என்று சொல்லலாம். இந்தத் தீர்த்தத்தைப் பார்ப்பவர்களுக்கு, முப்பெரும் கடவுளர்களும் கங்கைபோலவே தெரிவார்கள். இது பவித்திரத்தை உண்டாக்கும். இந்தத் தீர்த்தத்தின் ஓசை, தாரக மந்திரத்தின் ஓசையாகும்.*

*10*

செப்பரும் தீர்த்தம் ஆடிச் சிவபரன் தன்னைப் போற்றி
முப்பெரும் தேவர் வாழும் முத்திமண் டபத்தில் எய்தி
மெய்ப்படு சுத்த பஞ்சாட் சரத்தினை விளம்பப் பெற்றோர்
கைப்படு கனிபோல் முத்தி எய்துவர் கதிசேர் வாரே.

*இத்தீர்த்தத்தில் குளித்துச் சிவபரம் பொருளைப் புகழ்ந்து, முப்பெரும் தேவர்களும் வாழுகின்ற முக்தி மண்டபம் என்ற மண்டபத்தில் உட்கார்ந்து, சுத்தமான பஞ்சாட்சரத்தைச்*

செபிப்பவர்கள், முக்தி அடைவது உள்ளங்கை நெல்லிக்கனி போல் உறுதி ஆகும். 11

எங்கும்வாழ் தீர்த்தம் எல்லாம் தம்இடத் தெய்தி ஆடும்
அங்கவர்க்கு அருளி அன்றோர் பவங்களைச் கிரகித்து அந்தப்
பொங்கிய தவந்தாம் தீரப் புடைஅருச் சுனத்தில் எய்தி
மங்கள தீர்த்தம் ஆடி வரங்களும் பெற்று மீளும்.

உலகத்தில் உள்ள தீர்த்தங்களிலெல்லாம் பலர் குளித்துப் பாவங்களைப் போக்கிக்கொள்கிறார்கள். அவர்களின் பாவங் களை ஏற்றுக்கொண்ட அந்தத் தீர்த்தங்களின் தவங்கள் தீர்ந்து போகின்றன. எனவே, அத்தீர்த்தங்களெல்லாம் மங்களத்தீர்த்தத் திற்கு வந்து குளித்து, மீண்டும் சக்திபெற்று மீள்கின்றன. 12

புண்ணிய இத்தீர்த் தத்தில் புன்மையோர் பொருந்தி னாலும்
பண்ணிய பவங்கள் போக்கிப் பரகதிப் படுத்தி விக்கும்
திண்ணம்ஈது என்னை என்னில் தெருப்புறக் கழிவு நீரும்
கண்ணக நதியில் சேரில் கங்கை நீரான வாபோல்.

பாவிகள் இத்தீர்த்தத்தில் குளித்தாலும், இத்தீர்த்தம் அவர்களின் பாவங்களைப் போக்கி, அவர்களுக்குப் பரகதி யைக் கொடுக்கும். கங்கையில் கழிவுநீர் கலந்தாலும், கங்கைநீர் என்றே பெயர் பெறுகிறது. அதைப்போல இதில் குளித்த புன்மை யோரும் மேன்மையானோர்களாக ஆகிவிடுகிறார்கள். 13

இருக்கில் உரைத்த விதிகருதி இருக்கும் மேலோர் தமக்குஈந்து
முருக்கும் சாப மதியாட முருக்கும் சாப வினைநீங்கும்
பெருக்கு மயனத் தினில்ஆடப் பிறவி நீங்கும் பிழைநீங்கும்
அருக்க உதயத் தினில்ஆட வருக்க முடன்நற் கதிஅடைவார்.

முதல் வேதமாகிய ருக்வேதத்தின் விதிப்படியாக வாழும் பெரியவர்கள், 'இத்தீர்த்தக் கரையில் செய்யும் செபதபங்களால் நம்மை வாட்டும் வினைகள் நீங்குகின்றன. உத்திராயனக் காலத்தில் இத்தீர்த்தத்தில் குளித்தால் பிறவிகளும், பிழைகளும் நீங்கும். சூரியோதயத்தில் இத்தீர்த்தத்தில் குளித்தால், அவர்களின் சந்ததியாளரும் நற்கதி அடைவார்கள். 14

தீர்த்தம் இதன்பால் செயும்யாகம் தென்பால் உற்ற பிதிர்யாகம்
தீர்த்தம் இதன்பால் சிவபூசை அனப்பூ சைஅத் தசதானம்
தீர்த்தம் இதன்பால் இருமுகிசேர் கோதா ணங்கள் திருமேவும்
தீர்த்தம் இதன்பால் செயில்ஒன்றுக்கு அனந்த பலனாய்ச்
சிறந்திடுமே.

இத்தீர்த்தக் கரையில் செய்யும் யாகங்கள், இதன் தென்பகுதி யில் செய்யும் முன்னோருக்கான நீர்க்கடன்கள், இத்தீர்த்தத்

தின் கரையில் செய்யும் சிவ பூசனைகள், அன்னதானங்கள், பத்துத்தானங்கள், இரண்டு கொம்புகளை உடைய பசுக்களைத் தரும் தானம் ஆகியவையெல்லாம், ஒன்றுக்குப் பலவான பலன்களைக் கொடுக்கும். *15*

ஆண்டொன் றுக்குஇந் நதிமூழ்க அசுவ மேத யாகம்ஒரு
தாண்டும் தொண்ணூ றியற்றுபலம் தரும்நித் தியமும் சார்வோர்க்கு
வேண்டும் பலனும் இம்மையிலே விளையும் பலனும் மேதினியில்
ஈண்டும் பலனும் சாயுச்யம் எய்தும் பலனும் இயற்றிடுமே.

ஆண்டொன்றுக்கு இந்நதியில் குளிப்போருக்குப் பயன் தொண்ணூறு அசுவமேத யாகம் இயற்றியதற்குச் சமமான தாகும். தினமும் குளிப்பவர்களுக்கு வேண்டும் எல்லா நல்ல பலன்களும், இம்மையிலேயே கிடைக்கும். உலகத்தின் பலன்கள் மட்டுமன்றி, மறுமையில் சாயுச்சியம் என்னும் முக்தியும் கிடைக்கும். *16*

தென்பால் காசிக் கங்கைதனைக்
காணத் தீண்டச் சிந்திக்க
அன்பால் துதிக்க நீராட
அவலம் களையும் கவலைஅறும்
இன்புஆச் சரியம் மிகஉண்டாம்
இனிய சுபசோ பனம்எய்தும்
வன்பால் செய்யும் பவம்நீங்கும்
வாழ்நாள் நீங்கும் வினைபோமே.

தெற்குத் திசையிலே இருக்கும் காசியாகிய இத்தலத்தில் ஓடும் கங்கையாகிய பொருனையைக் கண்டாலும், தீண்டினாலும், சிந்தித்தாலும், அன்புடன் துதித்தாலும், அந்நதியில் நீராடினாலும் துன்பங்கள் போகும். மனக்கவலைகள் அறுந்து போகும். இன்பமும் ஆச்சரியமும் அதிகமாக உண்டாகும். இனிமையான சுப சோபனங்கள் நடக்கும். கொடிய பாவத்தால் வரும் பாவங்கள் போகும். பிறப்பு நீங்கும். நல்வினை தீவினைகள் சமமாகும். *17*

கண்ட பொழுது மகிழ்வுண்டாம்
கலந்தால் தேகம் புனிதம்உறும்
அண்டர் தொண்ட ருடன்ஆடும்
அதனைக் காண ஆகம்எலாம்

கொண்டல் எய்தும் பயிர்என்னக்
குழைந்து ரோமம் குச்செறிந்து
பண்டை வினைகள் தமைஒழிந்தார்
வருவார் தாம்ப்ர பன்னியையே.

இந்நதியைக் கண்டபொழுது, மகிழ்ச்சி உண்டாகும். இந்நதியில் இறங்கினால், உடம்பு புனிதமாகும். தேவர்கள் தொண்டர்களோடு குளிக்கும் இந்நதியைக் காண, மழையைக் கண்ட பயிர்போல மகிழ்ச்சியால் குழைந்து மயிர்க்கூச்செறிந்து, பழவினைகள் நீங்கி நலம் பெறுவார்கள். 18

விண்ணவன் பிரம தோடம்
வேதியன் பிரம ஹத்தி
திண்ணிய மறையோன் தேவி
செய்திடும் பதிய ஹத்தி
அண்ணிய திதிஅு கற்றி
அலகையோடு அரக்கி தீர்ந்த
புண்ணிய இத்தீர்த் தத்தின்
புகழ்மையார் புகறல் பாலார்.

தேவர்தலைனாகிய இந்திரனின் கொலைப்பழியும், வேதியனின் கொலைப்பழி ஆகிய இரு பிரமஹத்திகளும், அந்தணனின் மனைவியாகிய குலடியின் பதிஹத்தியும் இத்தீர்த்தத்தை நெருங்கிய உடனே அகன்றன. பேய்கள் நீங்க அரக்கி நீங்கச் செய்த புண்ணியமிக்க இத்தீர்த்தப் புகழை முழுதுமாக யாரால் சொல்லமுடியும்? 19

## தீர்த்தப் பெயர்கள்

உத்தம இத்தீர்த் தத்தில் உற்றவர்க் கொவ்வோர் காலம்
வித்திய பவங்கள் நீக்கி மெய்க்கதி உதவும் தானம்
இத்தென உரைப்பாம் தென்பால் இபம்தனக் கருளும் தீர்த்தம்
நத்தணி கரத்தோன் தீர்த்தம் நாரணன் கோயில் மேல்பால்

உத்தமமான இத்தீர்த்தத்தில் குளித்தவர்களுக்கு ஒவ்வொரு காலத்திலும் பாவங்கள் நீங்கி நற்கதி கிடைத்துள்ளது. அத்தீர்த்தங்கள் எவை எவை என்று இன்றைக்குச் சொல்லுகிறேன். இக்கோவிலுக்குத் தெற்குத் திசையில் யானைக்கு அருளிய தீர்த்தம் உள்ளது [இப தீர்த்தம்] அதற்கடுத்துச் சங்குத் தீர்த்தம் உள்ளது. அது திருமால் கோவிலுக்கு மேற்கில் உள்ளது. 20

அதன்வடக் கான முன்றீ சுரத்தன்ஆ லயத்தின் மேல்பால்
நதியின்முன் றீச தீர்த்தம் நவகன்னி மாதர் தீர்த்தம்
இதன்வடக் கெண்பான் விற்கோல் எய்திய இடத்தில் தானே
மதிமுடி ஈசன் ஈந்த மணிகர்ணி தீர்த்தம் மாதோ.

*திருமால் கோவிலின் வடக்கே, மூன்றீஸ்வரர் கோவிலின் மேற்கே, மூன்றீசர் தீர்த்தம், நவகன்னி தீர்த்தம் ஆகியன உள்ளன. இதன் வடக்கே எண்பது விற்கடை தூரத்தில் சிவபெருமான் கொடுத்த மணிகர்ணிகை தீர்த்தம் உள்ளது.* 21

பொதிகை முனிவர்க் கருள்தீர்த்தம் புனித வாம தேவர்க்குக்
கதிநல் கியதோர் பிரயாகைத் தீர்த்தம் கடந்தப் பால்வடபால்
நதியில் ஈரெண் பான்விற்கோல் நாலும் கடந்து நாப்பணுறும்
விதிசேர் திரிவே ணியில்ஐந்து தீர்த்தம் முன்பு விரித்தனமால்.

*அதற்குப் பிறகு பொதிகை முனிவன் தீர்த்தம், வாமதேவர் உண்டாக்கிய பிரயாகைத் தீர்த்தம் உள்ளன. அவற்றிற்கு வடக்கில் நூற்று அறுபது விற்கிடை தூரத்தில், திரிவேணியில் ஐந்து தீர்த்தங்கள் உள்ளன.* 22

இதற்கு வடபால் ஈரைந்து தனுவி னுபமன் னியதீர்த்தம்
இதற்கு வடபால் ஈரைந்தில் ததீசி தீர்த்தம் இந்திராணி
இதற்கு வடபால் இருமூன்று தனுவிற் குலடி மோசனமாம்
இதற்கு வடபால் இருங்கமலை கலைமான் இவர்கள் தீர்த்தமதால்.

*இதற்கு வடக்கில் பத்து விற்கடை தூரத்தில், உபமன்ய தீர்த்தம் உள்ளது. இதற்கு வடக்கில் பத்து விற்கடை தூரத்தில், ததீசி தீர்த்தமும், இந்திராணி தீர்த்தமும் உள்ளன. இதற்கு வடக்கில் ஆறு விற்கிடை தூரத்தில், குலடிமோசன தீர்த்தம். இதற்கு வடக்கில், கமலை தீர்த்தம், கலைமான் தீர்த்தம் ஆகியவை உள்ளன.* 23

இதற்கு வடபால் தனுவொன்றாய் எண்ணில் திருமூ லத்தானம்
இதற்கு மேற்குக் கவுதமராம் இதற்கு மேற்குக் குறுமுனிவன்
இதற்கு வடக்கு நந்திகளாம் இதற்குக் கிழக்கு மகதிமுனி
இதற்குக் கிழக்கு மித்ரமுனி இதற்கு வடக்கெண் கணன்தீர்த்தம்.

*இதற்கு வடக்கே ஒரு விற்கிடை தூரத்தில், திரு மூலட்டான தீர்த்தம் உள்ளது. இதற்கு மேற்கே, கௌதம தீர்த்தம் உள்ளது. அதற்கு மேற்கில், அகத்தியத் தீர்த்தம் உள்ளது. அதற்கு வடக்கில், நந்தி தீர்த்தம் உள்ளது. அதற்குக் கிழக்கில், மகதி முனிவர் தீர்த்தம் உள்ளது. அதற்குக் கிழக்கில், மித்ர முனிவர் தீர்த்தம் உள்ளது. அதற்கு வடக்கில், எண் கண்ணன் தீர்த்தம் உள்ளது.* 24

இதற்கு மேற்குச் சிவதீர்த்தம் இதற்கு மேற்குப் பரைதீர்த்தம்
இதற்கு வடக்குப் பிறியமகர் இதற்குக் கிழக்கெண் வசுதீர்த்தம்
இதற்குக் கிழக்கில் அவிர்த்தானன் இதற்கு வடக்கிந் திரமோட்சம்
இதற்கு மேற்கு வசிட்டமுனி இதற்கு மேற்கில் இருக்காமால்.

எண்கண்ணன் தீர்த்தத்திற்கு மேற்கே சிவதீர்த்தம் உள்ளது. அதற்கு மேற்கே பராசக்தி தீர்த்தம் உள்ளது. அதற்கு வடக்கே பிறிய மகர் தீர்த்தம் உள்ளது. அதற்குக் கிழக்கே அஷ்டவசுக்கள் தீர்த்தம் உள்ளது. அதற்குக் கிழக்கே அவிர்த்தானன் தீர்த்தம் உள்ளது. அதற்கு வடக்கே இந்திர மோட்சத் தீர்த்தம் உள்ளது. அதற்கு மேற்கே வசிட்டமுனிவர் தீர்த்தம் உள்ளது. அதற்கு மேற்கில், 25
இருக்கு வேத தீர்த்தமுள்ளது.

இதற்கு வடபால் அரக்கியுரு ஏகல் இதன்கீழ் அலகைவிடல்
இதன்கீழ் இபமா முகன்தீர்த்தம் இதற்கு வடபால் ஏகசுதர்
இதற்கு மேல்பால் ஆதிமனு இதற்கு மேல்பால் அலதந்தன்
இதற்கு வடபாற் புறமதந்தீர்ந் தினிய சைவ தீர்த்தம்அரோ.

இதற்கு வடக்கில் அரக்கி உருமாறிய தீர்த்தம் உள்ளது. இதற்குக்கிழக்கில் பேய் நீங்கிய தீர்த்தம் உள்ளது. இதற்குக் கிழக்கே விநாயகத் தீர்த்தமுள்ளது. இதற்கு வடக்கே ஏகசுதர் தீர்த்தம் உள்ளது. இதற்கு மேற்கே ஆதிமனு தீர்த்தமுள்ளது. இதற்கு மேற்கே அலதந்தன் தீர்த்தம் உள்ளது. இதற்கு வடக்கே புறமதம் தீர்த்துக்கட்டிய சைவதீர்த்தம் உள்ளது. 26

இதற்கு வடபால் ஈரெண்கோல் எய்தும் அதினில் கருவூரான்
மதிக்கும் தீர்த்தம் அங்ஙன்எழு மாதர் தீர்த்தம் வடமேல்பால்
பதித்த சாலைத் தடம்அங்ஙன் பதுமன் ஓர்கால் பரமனுக்காய்
விதித்த யாகத் தீர்த்தம்அவை சாலா தீர்த்தம் விளங்குமவண்.

அதற்கு வடக்கே பதினாறு கோல் அளவில் கருவூரான் தீர்த்தம் உள்ளது. அங்கேயே சப்த மாதர் தீர்த்தமும் உள்ளது. அதற்கு வடமேற்கில் ஒரு சாலை இருக்கிறது. அதை ஒட்டி ஒரு தீர்த்தமுள்ளது. [சாலைத் தீர்த்தம்] பிரமன் முன் பொருகாலத்தில் சிவனுக்காக அமைத்த யாக தீர்த்தம் உள்ளது. 27
அவற்றைச் சாலாதீர்த்தம் என்பார்கள்.

வேதா மிர்த தீர்த்தம் படிய வேதை மிருத்து முதல்நீங்கும்
சீத நதியின் தீர்த்தமெலாம் திளைத்தார் பேறு செப்புவதோ
பூதி தீர்த்தம் மருதினில்தென் கீழ்பால் பூதி எடுத்தணிய
நீதி தருஞா னப்பேறா நிருமித் தனநித் தியம்பெறுவார்.

வேதாமிர்த தீர்த்தத்தில் குளித்தால் வேதனைகள் நீங்கி விடும். குளிர்ச்சி மிகுந்த பொருனைநதியின் தீர்த்தத்தில் குளிப்பவர்

*கள் பேறுபெற்றவர் ஆவர். மருதமரத்தின் தென்கிழக்கில் உள்ள பூதி தீர்த்தத்தில் குளித்து விபூதி அணிந்து கொண்டால், நீதியும் ஞானமும் கிடைக்கும். இப்படிக்கு நியமித்தவற்றைத் தினமும் பெறுவார்கள்.* *28*

**இந்தத் தீர்த்தம் நாற்பதுடன் ஐந்தாம் இதற்குப் பொதுப்பெயர்தாம்**
**எந்தை ஞானம் தருதீர்த்தம் இனிய தார கத்தீர்த்தம்**
**கந்த மருத வனத்தீர்த்தம் தென்பால் கங்கை நதித்தீர்த்தம்**
**நந்தி தீர்த்தம் சிவதீர்த்தம் நளின தீர்த்தம் இதன்நாமம்.**

*இந்தத் தீர்த்தங்கள் மொத்தம் நாற்பத்தைந்தாகும். இவற்றிற்கு ஏழு பொதுப்பெயர்கள் உள்ளன. எம் பெருமானாகிய சிவபெருமானின் சிவஞானம் தரும் தீர்த்தம், ஞான தீர்த்தம், இனிய தாரக தீர்த்தம், மணம்பொருந்திய மருதவனத் தீர்த்தம், தெற்குகங்கைத் தீர்த்தம், நந்தி தீர்த்தம், சிவ தீர்த்தம், நளின தீர்த்தம் என்பன பொதுப் பெயர்கள்.*

**ஆகத் திருவிருத்தம் – 272**

# 9. மூர்த்தி விசேடப் படலம்

புடைஅ ருச்சுனம் மேவிய புண்ணிய மடுவில்
கடனை தண்பொரு ணாநதி கங்கைஇம் மூன்றும்
உடன்நி றைந்ததீர்த் தத்திரு மகிமையை உரைத்தாம்
விடைய வன்திகழ் மூர்த்திவி சேடத்தை விரிப்பாம்.

திருப்புடைமருதூரில் உள்ள புண்ணியமான நீர்நிலையில் கடனாநதி, பொருனை, கங்கை, என்பன கலந்துள்ளன. இதன் மகிமையை இதுவரை சொன்னேன். இனி, ரிஷபவாகனத்தில் உள்ள சிவனின் சிறப்பை உங்களுக்குச் சொல்வேன். 1

## தலங்களும் தலைவனும்

பொதிகை யிற்படா பொருனைசூழ் புவிகளிற் புனித
நதிஅ ணிந்தவர் தானத்தில் அறுபத்து நான்கு
முதிய என்பதாம் அதனில்மூ எட்டில்முன் தோன்றும்
அதிகம் இத்தலத்து அமர்குறி என்பர்கள் அறிஞர்.

பொருனைநதி பாயும் ஊர்களில் அறுபத்து நான்கு கோயில்கள் பழமையானவை. அதில் இருபத்து நான்கு கோயில்கள் மிகச் சிறந்தவை. அந்த இருபத்து நான்கிலும் இக்கோயிலில் உள்ள மூர்த்தம், அதிகச் சிறப்புடையது, என்று அறிஞர்கள் கூறுவார்கள். 2

அந்த நாள்அயன் அரிஅரன் ஆதி அநாதி
விந்து நாதமே சிவம்சத்தி விதிவழி ஒடுங்கும்
முந்து தத்துவங் களில்அவை கடந்திடும் முடிவில்
தொந்த மேசெயும் ஒருவன்இச் சுடர்க்குறி யாமால்.

உலகின் இறுதி நாளில் அயனும் அரியும் அரனும், ஆதியும் அநாதியும், விந்துவும் நாதமும் சிவசக்திக்குள் ஒடுங்கும் தத்துவம், தத்துவம்கடந்த முடிவு ஆக உள்ளது இந்த மூர்த்தமே ஆகும். 3

ஈறி லாதவன் எங்குமாய் நின்றவன் என்றும்
மாறி லாதமெய் அன்பர்கள் மனத்துளான் மருதின்
பேற தாயினோன் பேருல கீன்றருள் பேதை
கூற தாயினோன் குடிலையாய் நிறைந்ததுஇக் குறியே.

முடிவில்லாதவர், எங்கும் நின்றவர், என்றைக்கும் மாற்றம் இல்லாதவர், அன்பர்களின் மனத்தில் உள்ளவர், மருத மரத்தின் பாக்கியமானவர், எல்லா உலகங்களையும் ஈன்ற உமையின் பாகத்தில் இருப்பவர், பிரணவமாய் இருப்பவர் இவரே ஆவார். 4

கோதி லாதஎண் குணத்தவன் கொண்டிடும் கோலம்
பூத லம்புனல் பொங்கழல் வாயுவான் பொலிந்த
ஆத வன்மதி இயமானன் அட்டமூர்த் தமதா
ஓத நின்றிடும் ஒருவன்இம் மருதினில் உறைவோன்.

இவர் குற்றமில்லாத எட்டுக்குணமே வடிவமானவர்; உலகு, நீர், நெருப்பு, காற்று, வான், சூரியன், சந்திரன், ஆன்மா, எட்டு மூர்த்தங்கள் ஆனவர்; அவையெல்லாம் போற்ற நிலைபெற்ற ஒருவர், புடைமருதில் உறையும் இறைவர். 5

பேசு கின்றநான் மறைக்கும்எட் டாத்தவன் பலத்தால்
பேசி யேஅழைக் கின்றமா தவருடன் பெட்பாய்ப்
பேசு கின்றவர் மனுவொடும் பேசிய குணத்தால்
பேசு கின்றநா யகர்எனப் பெயர்படைத் தனரே.

புகழப்படும் நான்கு வேதங்களாலும் எட்ட முடியாதவர்; தவசக்தியினால் பேசி அழைக்கும் பெரும் துறவிகளுக்கு நட்பானவர்; மனுமன்னனுடன் பேசிய காரணத்தால், 'பேசும் நாயகர்' எனப்பெயர் பெற்றவர் இவரே. 6

## தத்துவங்கள்

இரங்கும் ஓர்சொலை வாகனம் ஆகவும் இனிதாய்
வரந்த ரும்பரை யாகவும் வைத்தவர் முடிமேல்
தரங்க நீர்எனும் தாமரைத் தொடையலாள் தனது
புரஞ்சு லாவுறும் வளத்தினர் பூதிவித் தகரே.

இரக்கம் தரும் ஒரு சொல்லையே வாகனமாகவும், அதையே உமையம்மையாகவும் வைத்தவர்; தாமரை மலர்சூடும் கங்கையை முடியில் வைத்து, அவளையே திருப்புடைமருதூரில் தன்னைச் சுற்றிவரும்படியாக (தாமிரபரணி கோயிலைச் சுற்றி வருகிறது.) வைத்தவர், திருநீறணிந்த நாயகனாகிய இவரே ஆவார். 7

தலமதில் மேன்மை பெற்ற தண்மருது உறைவோர் தம்மைக்
குலவரை என்ன ஓங்கு கோபுர தாப ரத்தை
நலமுடன் கண்டோ ரேனும் சாய்ந்தநா யகரைப் போற்றும்
மலபாி பாகம் உற்ற மாதவர் ஆவர் அன்றே.

தலங்களில் உயர்ந்த திருப்புடைமருதூரில் வாழ்பவர்களை, குலகிரிபோல ஓங்கிய கோபுரமாகிய ஸ்தூல சரீரத்தை நன்மையுடன் கண்டவர்கள் எல்லாம், சாய்ந்த நாயகரைப் போற்றுகின்ற மலபரிபாகத்தை [ சக்திநிபாதத்தை] அடைந்த முனிவர்களின் தகுதியை அடைவார்கள். 8

புலனுடன் பொறிக லங்கும் போதுயிர்க் கபயம் நல்கி
வலதுசோத் திரத்தில் தார கத்தினை வழங்கி முத்தி
நிலமதில் அருளும் இந்த நின்மல மூர்த்தி மூளட்(டு)
இலகிய மூர்த்திக் காதி எப்படிப் போலும் என்னில்,

ஐம்பொறிகளும் ஐம்புலன்களும் செயலற்றுப்போகிற காலத்தில் [மரணத்தில்] உயிருக்கு அபயம் கொடுத்து, வலக் காதில் தாரக மந்திரத்தை உபதேசித்து, மோட்சத்தில் சேர்க்கும் மூர்த்தி இவரே ஆவார். இருபத்து நான்கு மூர்த்தங்களில் இம்மூர்த்தமே ஆதி [முதல்] மூர்த்தம். இதற்கு உவமைகள் சொல்கிறேன் கேளுங்கள். 9

கலைகளில் வேதம் போலும் கவிகையில் கனமே போலும்
சிலைதனில் மேருப் போலும் திருவிற்றே நிதியம் போலும்
அலைபுனல் அதனில் கங்கை ஆவினில் காம தேனு
நலமலி புண்ணி யத்தின் நாயகன் பூசை போலும்,

கலைகளில் வேதக்கலையே மூலம் போல, அரசர்குடையில் பொன்னாலாகிய மேல்குமிழ் போல, மலைகளில் மேருமலை போல, செல்வங்களில் தெய்விகம் போல, நீரில் கங்கைபோல, பசுக்களில் காமதேனு போல, புண்ணியத்தில் சிவபூசை போல, 10

புவியினில் மருதம் போலும் பூவினில் நாறும் பூவே
தவமதில் உயிர்கட் கன்பு சார்ந்திடும் தன்மை போலும்
கவைகொள்பா தவத்தில் தாரு உறுப்பினில் கண்கள் போலும்
நவைஇலா இன்பம் தன்னில் பேரின்ப நன்மை போலும்,

நிலத்தில் மருதநிலம்போல, பூக்களில் நாறும்பூப் போல, தவத்தில் உயிர்களிடம் அன்பு செலுத்தும் தவம் போல, மரங்களில் கற்பகமரம்போல, உடலுறுப்புகளில் கண்போல, குற்றமில்லாத இன்பத்தில் பேரின்பம் போல, 11

தானத்தில் அதிகம் அன்ன தானமாம் தரணி யோரில்
வானத்து அவரில் மிக்கோர் வானநா யகரே வான
மீனத்தில் சோமன் போலும் வேள்வியில் துரகம் போலும்
மோனத்தால் அரனைக் காண்பார்க் கிக்குறி முதலாம் அன்றோ.

தானத்தில் அன்னதானம்போல, தேவர்களில் இந்திரன் போல, விண்மீன்களில் சோமன் போல, யாகத்தில் அஸ்வமேத யாகம் போலத் தவத்தினாலே சிவத்தைக் காண்பவர்கட்கு, இந்த மூர்த்தமே தலைமையானது என்பது புலப்படும். 12

ஆதியும் நடுவும் ஈறும் அல்லதோர் அதீதம் ஆகும்
பேதமும் பிணிப்பும் ஆகும் அல்லவாம் பிரமம் ஆகும்
போதமும் கடந்த நாத பூரண புனிதம் ஆகும்
ஓதிடும் அளவுக் கெட்டா ஒருவன்இம் மருது ளானே.

இது முதல் நடு முடிவு அற்ற அதீதம் ஆகும். பேதம், பிணிப்பு அவை அல்லாததும் இதுவே; பிரமம் இதுவே; ஞானம் கடந்த நாதம் இதுவே; முழுமையான புனிதம் இதுவே; வார்த்தைகளின் பொருள் அளவுக்கு எட்டாதவர் இந்த மருதீசரே ஆவார். 13

## உவமை இலாப்பெருமான்

காண்பானும் காட்சியுமாய்க் கள்ளமனம் இல்லார்க்குப்
பூண்பானும் பூணுமாய்ப் புண்ணியமும் புகழுமாய்
ஆண்பாலாய்ப் பெண்பாலாய் அவைகடந்த அப்பாலாய்
மாண்பான மருதீசன் தனக்குவமை வகுக்குங்கால்,

காண்பவனும், காட்சியும் ஆகி, திருட்டுமனம் இல்லதவர்களுக்கு அணிபவனும் அணியும் ஆகி, புண்ணியமும் புகழும் ஆகி, ஆண்பாலாகிப் பெண்பாலாகி, இவையிரண்டும் கடந்த அப்பாலும் ஆகி உள்ள மாண்பு மிகு மருதீசர் தனக்கு உவமை சொல்லப்புகுந்தால்... 14

மேருவுக் குவமை அந்த மேருவே வேலை சூழ்ந்த
பாரினுக் குவமை பாரே பள்ளநீர்க் குவமை மற்றே
காரினுக் குவமை காரே கருதின்சிந் தாம ணிக்குச்
சீர்பெறு நிதியம் என்பர் ஆனபோல் சிறப்பு வாய்ந்த

மேருமலைக்கு மேருமலையே உவமை; கடல் சூழ்ந்த உலகத்திற்கு உலகமே உவமை; கடலுக்கு உவமை கடலே; மேகத்துக்கு உவமை மேகமே; சிந்தாமணி என்னும் அதிசயமணிக்கு அச்செல்வமே உவமையாகும். அதைப் போல் சிறப்பு வாய்ந்த... 15

திருப்புடை மருதில் வாழும் செல்வனுக்கு உவமை அந்த
விருப்புடை யோர்கட்கு உண்மை விமலனே ஆகும் வெற்பார்
அருப்புடைத் தனத்தி யோடும் அருள்வழி நடத்தும் செய்கை
உரைத்திடில் உதவு நட்புக்கு ஒற்றுமை போலும் அன்றே.

திருப்புடைமருதூரில் வாழும் செல்வனாகிய சிவனுக்கு உவமை, விருப்பம் தரும் அந்த விமலனே ஆவார். அவர் மலைபோன்ற செல்வத்தை அன்புடன் அளித்து அருள்வழி நடத்துவார். அது, உதவுகின்ற ஒற்றுமை மிகுந்த நட்புப் போன்றது. 16

## வழிபாட்டுப்பயன்

எள்ளிடை எண்ணெய் போலும் இரவியும் சுடரும் போலும்
வள்ளலும் புகழும் போலும் மலரும்வா சனையும் போலும்
ஒள்ளழல் வெதுப்பும் போலும் உதகமும் குளிரும்போலும்
பள்ளநீர் உருவம் போலும் பாகுறும் இரதம்போலும்,

*எள்ளில் எண்ணெய் போல, சூரியனில் ஒளிபோல, வள்ளலும் புகழும் போல, மலரும் மணமும் போல, நெருப்பும் சூடும்போல, மழையும் குளிரும் போல, குளத்துநீரில் உருவம் போல, வெல்லப்பாகும் ருசியும்போல,* 17

மருவிஇங்கு உறைந்து வாழும் அவனிணை பணியப் பெற்றோர்
விரவிய பாவம் எல்லாம் வெவ்வழல் பட்ட பஞ்சாம்
பரிதிஎன்று ஊழைக் கண்ட பனிஅதாம் பரந்து சூழும்
உருமினைக் கண்ட பாம்பாம் உலவையைக் கண்ட தூளாம்.

*கலந்து இங்கே வாழும் அவருடைய திருவடிகளை வணங்கியவர்களின் பாவங்கள், நெருப்பில் விழுந்த பஞ் சாகிப்போகும்; அவர்களின் ஊழ்வினை, சூரியனைக் கண்ட பனிபோலாகிவிடும்; பரவித் தொடர்ச்சியாக இடிக்கும் இடியோசை கேட்ட நாகம்போலாகும்; புயலில் சிக்கிய தூசுபோல் ஆகும்.* 18

அரிகண்ட வேழம் போலும் அஞ்சுறா முதலை கண்ட
வரிகொண்ட சிறுமீன் போலும் மாதவர் தம்மைக் கண்ட
பெரியதீ வினைகள் போலும் பிழம்புறும் சுடரைக் கண்ட
இருளது போலும் பாரில் இட்டுணார் செல்வம் போலும்,

*சிங்கத்தைக் கண்ட யானையைப்போல அஞ்சும்; முதலையைக்கண்ட சிறுமீன் போலாகும்; பெரிய துறவிகளைக் கண்ட தீச்செயல்கள் போலாகும்; பிழம்பான ஒளியைக்கண்ட இருட்டைப்போலாகும்; பிறருக்குக் கொடுத்து உண்ணாதவர் செல்வம் போல இல்லாமல் போகும்.* 19

அன்பிலா தவரைக் கண்ட ஆதுலர் போலும் இல்லோர்க்(கு)
இன்பம்எய் திடவே நின்ற துன்பம்அ திரியல் போலும்

வன்பிணி மருந்தைக் கொண்ட வாறெனும் மழையைக் கண்ட
கொன்பயில் கோடை போலும் குலைகுலைந் தோடும் மாதோ.

அன்பில்லாதவரைக்கண்ட வறியவன் போலாகும்; இல்லாதவர்க்குக் கொடுப்பவனுக்கு வந்த துன்பம் அழிவது போல் அழியும்; கொடுமையான பிணி, தக்க மருந்தைக் கண்டவுடன் அழிவது போல் அழியும்; மழையைக் கண்டவுடன் கோடை குலைவதுபோல் குலைந்துவிடும். 20

விதிப ராவு புடார்ச்சுன நாயகன் மேலோர்
இதயம் மேவும் இலேபன சுந்தர இறையை
உதய காலத்தில் உமையுடன் இறைஞ்சிட உலகில்
புதல்வர்ப் பேறுடன் பொருள்களும் மகிமையும் பெறுவார்.

பிரம்மன் துதிக்கின்ற புடார்ச்சுன நாயகரை — மேலானவர்களின் இதயத்தில் இருப்பவரை — சந்தன சுந்தரரை — உமையுடன் உதய காலத்தில் வணங்கினால் புதல்வர்ப்பேறும், பொருள்களும் மகிமையும் கிடைக்கும். 21

சீல மாகவே கடும்பகல் போற்றச்செங் கோலால்
தாலம் மூன்றையும் புரந்திடும் தகைமைசேர் மாலை
மூல லிங்கம்ஓர் ஆயிரம் மூர்த்தியை உன்னிச்
சால வும்தொழும் பலன்தரும் யாமத்தில் சார்ந்தே.

நண்பகலில் ஒழுக்கத்துடன் அவரை வணங்கினால், மூன்றுலகங்களையும் நீதியுடன் அரசாளும் நிலைவரும்; மாலையில் வணங்க, நல்ல தகைமைகள்வரும்; யாமத்தில் வணங்கினால், மூலலிங்கங்கள், ஆயிரம் மூர்த்தங்களை வணங்கும் பயன்கள் கிடைக்கும். 22

துதிசெய் வோர்கள் நாற்பயன் பெறுவார் சுருதியினால்
நிதமும் போற்றுவோர் தேவரே நிருமலன் பணியைக்
கதியை வேண்டியே செய்பவர் கணங்களே வழுவா
விதியை உற்றவர் விமலராய் வீற்றிருப் பாரே.

அவரைத் துதிப்பவர்கள், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பயன்களையும் அடைவர்; வேதம் ஓதி நாள்தோறும் போற்றுபவர்கள், தேவராவார்கள்; திருக்கோயில் பணியை வேண்டிப்பெற்று விரும்பிச் செய்பவர்கள், தேவகணங்களாக ஆவார்கள்; விதிகளினின்றும் மாறாதவர்கள், ஆணவ கன்ம மாயைகள் அகன்று வாழ்வார்கள். 23

பக்கம் இரண்டினும் மூன்றிரு பருவத்தும் பணிய
மிக்க செல்வமும் கல்வியும் ஞானமும் விளையும்
செக்கர் அஞ்சடை நாயகன் நிசிதனில் செய்ய
நக்க பங்கயம் போற்றுவோர் நாதர்ஆ குவரே.

இரண்டு பட்சங்களிலும் [பதினைந்து நாள்கள் ஒரு பட்சம்], ஆறுபருவங்களிலும் [கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்] இவரைப் பணிந்தால், மிக்க செல்வம், மிக்க கல்வி, மிக்க ஞானம் விளையும். செஞ் சடையாரை, நிசியில் பூசித்தால், பதுமநிதி [குபேரசெல்வம்] பெற்றுத் தலைமை பெறுவார்கள். 24

**சாய்ந்த நாயகன் சன்னிதா னத்தினில் தீபம்**
**ஆய்ந்த லோகத்தால் பாத்திரம் பட்டுடை வருக்கம்**
**காந்தி சேர்நவ மணிப்பணி கற்பணி கவிகை**
**வாய்ந்த வாசனைத் தீம்புகை ஆடல்வாத் தியங்கள்**

சாய்ந்த நாயகருக்கு அவர் சன்னிதானத்தில், ஆராய்ந்த உலோகங்களாலான விளக்கு, பாத்திரங்கள், பட்டுடைகள், ஒளிபொருந்திய நவமணிகளாலான ஆபரணங்கள், மற்ற கற்கள் பதித்த அணிகள், குடை, வாசனைப் புகைப் பொடிகள், ஆடல் செய்வதற்கான அலங்காரப் பொருள்கள் — வாத்தியங்கள்... 25

**மாலை சந்தனம் மஞ்சனம் ஆட்டநெல் மதுத்தேம்**
**பாலோ டன்னநல் வருக்கம்வேள் விகள்பல செய்பொன்னில்**
**ஏலு மாறுப கரிப்பவர் அணுஒன்றுக்கு எண்எண்**
**சீலம் ஆகிய கற்பங்கள் சிவபதம் சேர்வார்.**

மாலைகள், சந்தனம், அபிஷேகப்பொருட்கள், நெய், தேன், பால், அன்னம்[சோறு] வேள்விகள் செய்வதற்குரிய சமிது முதலியவை, திரவியங்கள் ஆகியவற்றைத் தங்கள் சக்திக்கேற்ற வாறு கொடுப்பவர்கள், உலகில் எத்தனை அணுக்கள் உள்ள னவோ அத்தனைக்கும் பதினாறு மடங்கான கற்பகாலங்கள் சிவபதத்தில் இருப்பார்கள். 26

## இறைவன் திருப்பெயர்கள்

**தென்பால் காசிநாதர் சிவக்கொழுந் தீசுரர் தென்கயிலை**
**பொன்பாய் புடைமா மருதீசர் பூதி வரதர் நாறும்பூ**
**இன்பார் சாய்ந்த இலிங்கரி லேபன சுந்தரர் மெய்கொள்**
**அன்பர்க் கருளும் முத்தீசர் அரியதார கேசுரரே.**

தெற்குக் காசிநாதர், சிவக்கொழுந்தீசர், தென்கயிலை யீசர், புடைமருதீசர், பூதிவரதர், நாறும்பூநாதர், சாய்ந்தலிங்கர், இலேபன சுந்தரர், முத்தீசர், அரியதாரகேசுரர் என்பன, உண்மையான அன்பர்களுக்கு அருள்செய்யும் இறைவனின் திருப்பெயர்கள் ஆகும். 27

வேத நாதர் புனிதேசர் மித்தி ரேசர் விதியுடனே
சீத ரேசர் மனுநாதர் சித்த நாதர் அகத்தீசர்
கோத மேசர் மூலேசர் குடிலே சுரராம் பிறவாவன்
போத வாணர் சம்புவனர் புகழை யைந்தாய்ப்...'

*வேதநாதர், புனிதேசர், மித்திரேசர், சீதரேசர், மனுநாதர், சித்த நாதர், அகத்தீசர், கோதமேசர், மூலேசர், குடிலேசுரர், போத வாணர், சம்புவனர் என்பனவும் பிறவாதபெருமானுக் குரிய பெயர்களாகும்.* *28*

## வழிபடும் முறை – புகழ்

தீர்த்தம் ஆடி நீராடிச் செய்ய அக்கு வடம் புனைந்து
மூர்த்தி வாழும் புடைமருதில் முத்தி மாமண்டபம் எய்தி
சேர்த்த பஞ்சாட் சரம்இயன்ற சத்தி செபத்துச் சரிப்போர்தம்
கீர்த்தி பேசு வோர்மகிமை எம்மால் கிளக்க முடியாதே

*தீர்த்தத்தில் நீராடி, செம்மையான ருத்ராட்ச மாலை அணிந்துகொண்டு புடைமருதத்து முத்தி மண்டபத்திற்குச் சென்று இயன்ற வரை பஞ்சாட்சரத்தைச் செபித்து உச்சரித்து, இறைவனின் பெருமைகளையே பேசுவோரின் மகிமையை என்னால் முழுமையாச் சொல்லமுடியாது.* *29*

ஆகத் திருவிருத்தம் – *301*

# காண்டம் இரண்டு

## 1. திருநடனம் புரிபடலம்

சூதயோ கியரை எய்தித் துடக்கறு முனிவர் நல்ல
பாதங்கள் பரவி மேற்சொல் தொகையினில் படன மேசெய்து
ஆதரம் பெருக விண்ணோர்க்கு அருளிய வகையை எங்கட்கு
ஓதுதல் வேண்டும் என்ன முகமலர்ந்து உரைக்க லுற்றார்.

தவத்தில் குறைவற்ற முனிவர்கள் சூதமுனிவரிடம் சென்றார்கள். அவரின் பாதங்களில் விழுந்து வணங்கினார்கள். 'சுவாமி! தேவர்களுக்கு முன்னே சொன்ன எண்ணிக்கைப் படியாகப் புராண படனம், ஒரு செய்தியும் விடாமல் சொன்னீர்கள். அதே வகையில் எங்களுக்கும் சொல்லவேண்டும்' என வேண்டினார்கள். சூதயோகி முகமலர்ச்சியுடன் சொல்லத் தொடங்கினார். 1

### இறைவனைப் போற்றுதல்

ஆதியில் கயிலா சத்தில் ஆன்றதைப் பூசம் தன்னில்
வேதனும் மாலும் வேள்வி நாதனும் விண்ணு ளோரும்
நாதனை எய்திப் போற்ற நலமிகு நடனம் அன்னோர்க்கு
ஆதரம் பெருகக் காட்ட அடியிணை பழிச்சு கின்றார்.

ஆதிகாலத்தில் நிகழ்ந்தது இது. கயிலாயத்தில் நிகழ்ந்தது. பெருமை பொருந்திய தைப்பூசநாளில் நிகழ்ந்தது. பிரமனும் திருமாலும், வேதபுருஷனும் பரம்பொருளாக இருக்கிற

பெருமானைப் போற்றினார்கள். பரம்பொருளே திருநடனம் ஆடினார். பரம்பொருளின் திருவடிகளை, மூம்மூர்த்திகளும் போற்றினர். 2

புண்ணிய முதலே போற்றி!
பூதநா யகனே போற்றி!
விண்ணவர்க்கு இரங்கி நஞ்சம்
உண்டருள் விகிர்தா போற்றி!
அண்ணலே போற்றி எங்கள்
அற்புத நாதா போற்றி!
தண்ணளி யான ஞானத்
தற்பரா போற்றி போற்றி!

*[பூதநாயகன்—பஞ்சபூதங்களின் தலைவன்; பூதகணத்தின் தலைவன். விண்ணவர் — தேவர்; நஞ்சம்— விஷம்; விகிர்தன் —வேறுபட்டவன் [வித்தியாசமானவன்]; அண்ணல் — தலைவன்; தண்ணளி—கருணை; தற்பரன்—தனக்குத் தானே பரமானவன். [தனக்குமேல் யாரும் எதுவும் இல்லாதவன்]*

*புண்ணியச் செயல்கள் யாவற்றிற்கும் மூலமானவரும், பூதங்களின் தலைவரும், தேவர்கள் வாழ்வதற்காக இரக்கப்பட்டுத் திருப்பாற்கடல் நஞ்சை உண்ட வேறுபட்ட குணம் உடையவரும், தலைமைப் பண்புகள் உடையவரும், எங்களுடைய அற்புதநாதரும், கருணை மிக்கவரும், ஞான வடிவானவரும், தனக்குமேல் தலைவர் அற்றவரும் ஆகிய பெருமானே! போற்றி.* 3

முற்றுணர்ந் தவனே போற்றி!
முடிவில்இன் புடையாய் போற்றி!
உற்றதன் வயத்தாய் போற்றி!
உணர்வியற் கையனே போற்றி!
மற்றுஇயல் பாசம் நீங்கி
வரம்பிலா ஆற்ற லான
பற்றுதூய் உடம்பாய் போற்றி!
பரம்பொருள்! உடையாய்! என்ன,

*முற்றும் உணர்ந்தவர்; முடிவில்லாத இன்பம் உடையவர்; தன்வயத்தனானவர் [பிறரின் ஆதிக்கத்திற்கு உட்படாதவர்]; இயற்கை உணர்வுடையவர்; பாசபந்தங்களிலிருந்து நீங்கியவர்; எல்லையில்லாத ஆற்றல் உடையவர்; தூய உடம்பினை உடையவர் ஆகிய பரம்பொருளே! என்னை உடையவரே!*

## வரம்

அளவிலாத் துதிகள் செய்தார் அவர்கள்பால் அன்பு கூர்ந்து
வளமிகு செயலால் வேண்டும் வரம்பெறு வீர்கள் என்ன
நளிர்புனல் தரித்தோன் கூற நற்பதம் பணிந்து மாயோன்
முளரியோன் முதலோர் கேட்போர் முத்திநா யகனே இந்த,

இப்படித் திருமாலும், பிரமனும் வேதபுருஷனும், இறைவனைத் துதிசெய்தார்கள், அவர்களிடம் குளிர்புனல் கங்கையைத்தரித்த இறைவர் அன்பு கூர்ந்தார் 'வேண்டும் வரங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்றார். 5

நடத்தின்நற் செயலும் தீர்த்த நன்மையும் திருநாள் வாழ்வும்
துடக்கறுத் தவர்கள் செய்யும் துதிகளும் பொருந்தும் இந்த
இடத்தினில் பணிந்தி ருக்க எங்களுக் கருள்வாய் என்னப்
படத்தர வசைத்த நாதன் நந்தியைப் பார்த்துக் கூறும்.

முத்திநாயகனே! இந்த நடனத்தின் செயலும், தீர்த்த விசேடமும் திருவிழாக்களின் சிறப்பும், தவசிகளின் துதியும் பொருந்திய ஓர் இடத்தில் நாங்கள் உம்மை வணங்கி இருக்க வேண்டும் என விரும்புகிறோம். அவ்வாறு எங்களுக்கு அருள வேண்டும் என்றனர். இறைவர் திருநந்திதேவரைப் பார்த்துக் கூறினார்: 6

## இறைவர் புடைமருதச் சிறப்பைக் கூறுதல்

தலத்துயர் முத்தி நல்கும் தானமாய்த் தார கத்தின்
குலத்துயர் பதியாய் வேதக் குடுமியாய்க் குடிலை யான
நலத்ததென் மருதில் நாமே நடனம்கொண் டருள்வ தாலே
பலத்துயர் பரமர் நித்ய சபைஎனப் பகர லாமே.

பாம்பை அணியாகக் கொண்ட பரமர் நந்திதேவனைப் பார்த்துக் கீழ்வருமாறு கூறலானார்: தலத்தில் உயர்ந்தது; முத்தி தரும் இடமாக விளங்குவது; தாரகமந்திரத்தின் கூட்டமாகிய பதி; வேதத்தின் உச்சியாக விளங்குவது; குடிலை [ஓம்] ஆக இருப்பது தென்மருது; அங்கே நாமே நடனம் புரிவதால், பலம் பொருந்திய உயர்ந்த நித்தியசபை என்று அதனைக் கூறலாம். 7

தரைக்கணில் அதிகத் தெய்வத் தானங்கள் அனந்தம் தன்னில்
உரைத்திடத் தரணி லிங்கம் உற்பவம் முத்தி நல்கும்
பிருத்துவி ஆரூர் ஆகும் பேசிடில் அப்பு லிங்கம்
திரைப்புனல் பொன்னி சூழ்ந்த தென்திரு ஆனைக் காவே.

உலகத்தில் அதிகமான தெய்வத்தலங்கள் உள்ளன. அவற்றில் லிங்கோற்பத்தியானதும், முத்திநல்குவதுமான தலங்கள் சில. பூமித்தலம் — திருவாரூர்; நீர்த்தலம் — பொன்னிநதி சூழ்ந்த திருவானைக்கா. 8

வதிபவர்க் கெய்தும் முத்தி வன்னியாம் சோதி லிங்கம்
நிதிபெற நினைக்க முத்தி நீடுகா ளத்தி வாயுப்
பதிஅதன் பெருமை கேட்கப் பரகதி நடனம் ஓங்கும்
கதிதரு வான லிங்கம் கருதியே தரிசிப் போர்க்கே.

வருபவர்க்கு முத்திநல்கும் வன்னி சோதிலிங்கச் செல்வம் பெற நினைக்க முத்தி தருவது காளத்தி; வாயுப்பதி. அதன் பெருமையைக் கேட்க, வானலிங்கத்தை எண்ணினால், தரிசிப்பவருக்குப் பரகதி கிட்டும். 9

இறக்கமுத் தியதாம் காசி எழில்புடை மருதக் காசி
சிறக்கும்இ ரத்னம் ஓங்கித் திகழ்சபை திருஆ லங்கா
நிறக்கன கத்தால் மேவும் நெடுஞ்சபை தில்லை யாகும்
துறக்கநா டென்னும் கூடல் இரசத சபையாய்த் தோன்றும்.

இறந்தால் முத்திகிடைக்கும் தலங்களுள் வாரணாசி; அழகான திருப்புடைமருதூர். சிறப்பான ரத்தினத்தால் உயர்வான திருவாலங்காடு இரத்தினசபை; நிறம்பொருந்திய தங்கத்தால் ஆன உயர்ந்த சபை தில்லை; தேவலோகம் எனப்படும் மதுரை வெள்ளியம்பலம். 10

பொருனைசூழ் தீர்த்தம் தன்னில் பூந்துறை நெல்லை மீதில்
தருவளர் பணைசேர் கின்ற தாம்பிர சபைய தாகும்
திருவளர் திருக்குற் றாலம் சித்திர சபைய தாகும்
மருதமா பதிதான் நித்ய சபைஎன வழங்கும் மாதோ,

பொருனைத் தீர்த்தம் சூழ்ந்த பூந்துறை நெல்லையில் உள்ளது, பெருத்துவளர்ந்த மரங்களால் ஆகிய தாமிரசபை; செல்வம் வளர்ந்த திருக்குற்றாலத்தில் உள்ளது, சித்திரசபை ஆகும். மருதமரம் உள்ள புடைமருதப் பதியே நித்தியசபை எனப்படும். 11

உதித்திடக் கருதக் கேட்க
உண்மையாய்க் காணப் போற்ற
வதித்திட இறக்க முத்தி
வழங்கிடும் மகத்வம் நல்கும்
கதிக்குஇட மான தென்பால்
காசிக்கா சினிபோல் மூன்றாய்
விதித்திடும் உலகில் இல்லை
தரிசிக்க வேண்டு வோர்க்கே.

பிறக்கமுத்தி, நினைக்கமுத்தி, கேட்கமுத்தி, காணமுத்தி, போற்றமுத்தி, வாழமுத்தி, இறக்கமுத்தி என எல்லா நிலைகளுக்கும் முத்திதரும் மகத்துவம் உள்ளதலம், தெற்குக் காசியாகிய மருதத்தலமாகும். மூன்று உலகங்களிலும் அதைப்போல் வேறு எத்தலமும் இல்லை. தரிசனம் வேண்டுவோர்க்கு அதுவே ஏற்றதலமாகும். 12

பூமியில் முத்தித் தானம் புடைமரு தென்னும் காசி
நேமிதென் கயிலை யாகும் நீங்கிடாது இதனில் நித்தம்
வாமமே கலையாள் காண மகரபூ சம்போல் என்றும்
சேமநல் நடனம் செய்து திருவிழாக் கொள்வோம் அங்ஙன்.

அது உலகில் மோட்ச பூமி. இதுவே காசி; தென் கயிலை என்று நியமிக்கப்பட்ட தலமும் அதுவே. அந்தத் தலத்தில் இடையில் மேகலாபரணம் அணிந்த உமை காணுமாறு தைப்பூசத்தில் நலம்தரும் நடனம் செய்து திருவிழாக் கொள்வோம். 13

துத்தியம் உதவு மின்னோர் தங்கட்குச் சுதின நித்த
முத்திசேர் கின்ற சீவன் முத்திஅும் பலம தான
நித்திய சபையில் ஈவோம் அவண்வர நிகழ்த்து கென்றான்
இத்திற வசனம் நந்தி இவர்கள்பால் இசைக்க லுற்றான்.

'படையலிட்டு [துத்தியம் —படையல்] வழிபடும் இவர்களுக்கு மங்களகரமான மோட்சம் சேர்கின்ற முத்தியம் பலமான நித்திய சபையில் நலங்களைத் தருவோம். அங்கே வருமாறு சொல்' என்று நந்தியிடம் கூறினார். இந்தத் திறம் மிகுந்த உரையை, நந்திதேவர் பிரமன் முதலியவர்களுக்குக் கூறினார். 14

## பிரமன் முதலியோர் புடைமருதூர்க்கு வந்து பூசித்தல்

கேட்டுள்ளம் மகிழ்ச்சி எய்தி கிளர்நந்தித் தேவைப் போற்ற
சேட்டவர் பரவும் தெய்வத் திருக்கயி லாயத்து அண்ணல்
பாட்டாளி முரலும் கஞ்சப் பாதங்கள் பரவி ஏத்தி
நாட்டம்பெற் றிடும்பேறு எய்தும் இத்தலம் நண்ணி னாரே.

அவர்கள் இந்தச் செய்தி கேட்டு, மகிழ்ச்சியடைந்தார்கள். நந்தியைப் போற்றினார்கள். வெகுதூரத்தவர்களும் புகழும் திருக்கயிலாயத்துத் தலைவரின் — பாட்டுப்பாடும் வண்டுகள் ஒலிக்கும் இறைவனின் திருவடிகளை வணங்கினார்கள். கண்பெற்ற பயன், திருப்புடைமருதூர்க்கோயிலைக் காணுதலாகும். அப்படிப் பட்ட இத்தலத்திற்கு வந்தார்கள். 15

பூசம்சேர் மகர மாதம்
பொங்கிய புடைசேர் கின்ற
வாசமா மருதில் ஈசன்
மகிழ்விழாக் கண்டு மன்னி
நேசமோடு கூவந்து போற்றி
நித்திய பரமா னந்த
ஈச!நா றும்பூ நாத!
என்றுபன் முறையாய் ஏத்தி...

*திருப்புடைமருதூரில் தைப்பூசநாளில் விழாவைக் கண்டார்கள். இங்கேயே தங்கினார்கள். நட்புடன் மகிழ்ந்து போற்றினார்கள். நித்தியமான பரமானந்தமான ஈசன் நாறும்பூநாதர் என்றுகூறிப் பலவகையான வழிபாடுகளும் செய்தார்கள். 16*

## திருநடனக்காட்சி

பூசித்து மலரால் போற்றிப் புனிதமா தவங்கள் செய்தார்;
காசிக்கோன் விடைமேல் தோன்றிக் காட்சிதந்து அவரைநோக்கி,
மாசற்றீர் வம்மின் வம்மின் மன்னிய நடனம் காண்பீர்;
தேசுற்ற அழிவி லாத இத்தலம் சேரப் பெற்றீர்.

தன்னில்ஆ னந்த மான தாண்டவம் புரிவோம்; நீவிர்
துன்னியே பணிவீர் என்று சுதினநல் வரங்கள் நல்கி,
அம்நடம் புரிந்தான் எங்கோன் அம்பலம் அதனில் போற்றி,
மன்னினார் மாயோன் ஆதி மாதவர் மகிழ்ந்து போற்றா.

*பூசித்தார்கள்; மலர்தூவினார்கள்; புனிதமான தவங்கள் செய்தார்கள்; காசித்தலைவராகிய சிவன் ரிஷபத்தின் மேல் தோன்றினார். காட்சி கொடுத்தார். பிரமன் முதலானவர்களைப் பார்த்து, 'குற்றமற்றவர்களே! வாருங்கள். நிலைபெற்ற நடனத்தைக் காணுங்கள். ஒளிபொருந்திய அழிவிலாத இத்தலத்திற்கு வந்துள்ளீர்கள். எனக்குள்ளேயே ஆனந்தம் அடையும் தாண்டவம் செய்கிறோம்; நீங்கள் பார்த்து வணங்குங்கள். நல்ல வரங்களைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்றுகூறி, நடனம் செய்தார். அம்பலத்தில் நடனமாடினார். பிரமன் முதலியோர் போற்றினார்கள். நிலையாக அங்கேயே தங்கினார்கள். அது அவர்களின் பாக்கியமாகும். 17,18*

கண்ணகல் ஞாலமும் கற்ப கம்திகழ்
விண்ணுடன் யாவரும் விரும்பு லோகமும்
புண்ணியர் எண்ணிலார் பொருந்து பூமியும்
மண்ணில்வாழ் மருதம்என் றறைந்திட் டார்அரோ.

இடமகன்ற உலகமும், கற்பகம் பொருந்திய தேவர்உலகமும், யாவரும் விரும்பும் உலகமும், புண்ணியர்கள் பொருந்தும் பூமியும் நிலஉலகில் உள்ள இந்தப் புடைமருதுதான் என்று பேசினார்கள். 19

ஆதவன் கண்டதா மரையின் அன்னதாம்
போதக முகமலர்ந் தின்ன போற்றுவார்
நாதனே நித்திய சபையில் நாடக
பாதனே பரைஉமை பாக போற்றியால்.

இப்படி யேபுகழ்ந் தேத்தும் மேலவர்
மெய்ப்படு புகழுமாய் விருப்ப மோடெழீஇ,
மைப்படி கண்டனை வணங்கி வாழ்த்தியே
ஒப்பிலா தளவளாய் உவந்தி ருந்தனர்.

சூரியனைக் கண்ட தாமரை மலரைப் போல, தம்முகம் மலர்ந்து இவ்வாறு பேசினார்கள். 'நாதரே! நித்திய நடனமாடும் திருவடிகளைக் கொண்டவரே! பராசக்தியாகிய உமையைப் பாகத்தில் கொண்டவரே! போற்றி!' என்று இப்படிப் புகழ்ந்தார்கள். மேலானவர்கள் துதிக்கும் உண்மைப் புகழாக விருப்பத்துடன் எழுந்தருளிய கருத்த கண்டத்தை உடையவரை வணங்கி வாழ்த்தி, ஒப்பில்லாச் சொற்களால் அவருடன் உரையாடி, மகிழ்ச்சியுடன் இருந்தார்கள். 20,21

## ஆகத் திருவிருத்தம் - 322

# 2. விருத்திராசுர வதைப் படலம்

விடையவன் கடவு ளோர்கள் விரும்பிட நடன சேவை
புடைஅருச் சுனத்தில் ஈந்த புகழ்இது புனித நாதன்
அடல்செயும் அசுரை வென்ற பழிதனை அகல வேண்டி
இடமதில் மருதோடு ஒன்றித் தவம்செயும் இயல்பு சொல்வாம்.

*கடவுளோர்கள் விரும்பியபடி இறைவன் புடைமருதில் நடனம் செய்த நிகழ்வைக் கேட்டீர்கள். கொலைசெய்யும் அசுரனைக் கொலைசெய்ததையும், இந்திரன் மருதமரத்துடன் ஒன்றித் தவம்செய்ததையும் இனிச் சொல்வேன்.* *1*

### காசிபர்

மாதவர் யாரும் போற்றி மலரடி வணங்கிக் கேட்பச்
சூதமா முனிவன் சொல்வான் தும்பையோடு அறுகு வேய்ந்த
பூதநா யகன்வ ரத்தால் புவனமும் யாவும் ஈன்ற
காதலர் கமலப் புத்தேள் காசிப முனியைத் தந்தான்.

*சூதமுனிவரை மற்ற முனிவர்கள் வணங்கினார்கள். சூதர் என்ற மகாமுனிவர் கதைசொல்லத் தொடங்கினார். தும்பையும் அறுகும்சூடிய பூதநாயகனாகிய இறைவனின் வரத்தால் புவனங்களையும் யாவற்றையும் படைத்த அன்பு பொருந்திய பிரமன், காசிப முனிவரைப்பெற்றார்.* *2*

காசிபப் பிரமற் கான கற்புடை அதிதி என்னும்
பேசிய திதிமின் என்னும் பெண்கள்ஓர் இருவர் தம்மில்
ஆசில்சீர் அதிதி பெற்றாள் அமரரை; அசுரர் தம்மை
நேசமோடு உவந்து பெற்றாள் திதியவள் நிகழும் நாளில்...

*காசிபர் என்னும் பிரம்ம குலத்தவருக்கு அதிதி என்பவளும், திதி என்னும் மின்னல் போன்றவளும் புகழுடைய மனைவியராக இருந்தனர். அந்த இருவரில், அதிதி என்பவள் தேவர்களைப் பிள்ளைகளாகப் பெற்றெடுத்தாள். குற்ற மற்ற சிறப்புகள் பொருந்திய திதி என்பவள், அசுரர்களை அன்புடனும் மகிழ்ச்சியுடனும் பெற்றெடுத்தாள். இப்படியான நாட்களில்,* *3*

அந்தரர் அசுரர் தாயா தியர்களாய் அகங்கா ரம்கொண்டு
உந்தவே ஒன்றுக் கொன்று வீறுடன் ஒன்ன லாராய்
வந்துஇகல் புரிந்த காலை அசுரரை மாய்த்தோர் விண்ணோர்
இந்தவாறு அசுரை ஈன்ற திதி அறிந்து இரங்கி நின்று,

தேவர்களும் அசுரர்களும் பங்காளிகளாய், ஆணவத்துடன் வீறார்ப்பும், திமிரும் ஒன்றை ஒன்று உந்தித்தள்ளப் பகையாளி களாய் எதிரெதிராகப் போர் செய்தபோது, தேவர்கள் அசுரர் களை வீழ்த்தினார்கள். அசுரரைப்பெற்ற திதி, இச்செய்தி கேட்டு வருந்தினாள். 4

## திதியின் சூழ்ச்சி

உளந்தடு மாறி என்செய் குதும்என உன்னி ஆசான்
விளக்கிய பதம் பணிந்து வேண்டுகோள் விளம்பி ஐய
வளங்கொள்ளம் மக்கள் ஆன அசுரரை மாய்த்தார் விண்ணோர்
அளந்தறி காலம் பார்த்தே எனஅழு தழுங்கி னாளே.

என்ன செய்வது? என அவள்மனம் தடுமாறியது. குருவாகிய சுக்கிரனை வணங்கி வேண்டினாள். 'ஐயா! வளமான என் பிள்ளைகளைச் சோர்வான சமயம்பார்த்து அழித்து விட்டார்கள்' என்றுகூறி, அழுதாள்; புழுங்கினாள். 5

நின்னருள் வரத்தால் அந்த நிருதரை நிருமித்து என்றன்
இன்னல்தீர்த்து ஆள்வாய் என்றே இறைஞ்சுவாட்கு இரங்கி வெள்ளி
மன்னவன் புகல்வான் உன்றன் மனத்துயர் தீரும் வண்ணம்
நன்னல மாகச் செய்தும் நடுக்குறேல் நங்கை என்றான்.

'உன் அருளால் — வரத்தால் அசுரர்களை உண்டாக்கி, என் துன்பத்தைத் தீர்ப்பாயாக!' என்று வேண்டினாள். அசுரகுருவாகிய சுக்கிரன், இரக்கத்துடன் உன் மனத்துயர் 'தீரும்படி நன்மை செய்கிறேன்; பெண்ணே! நடுங்காதே' என்றார். 6

திதியுறு வருத்தம் தீரச் செப்புவான் திங்கள் செல்வன்
அதிதிகா சிபன்இ யற்றும் அருமகத் துறுவோம் நீயும்
கதியுடன் வருதி மாறு காட்டிய சமிதை நெய்யால்
விதியுடன் இயற்றில் அந்த வேள்வியின் விருத்தி யாக,

திதி என்பவள் அடைந்த வருத்தம் தீரும்படியாகச் சுக்கிரன் இவ்வாறு கூறினார். 'சந்திரன், காசிபன், அதிதி ஆகியோர் ஒருயாகம் செய்யப்போகிறார்கள். நீயும் அதற்கு வா. வித்தியாசமான சமிதுகளை நெய்யில் தோய்த்து, யாகத்தில் இடவேண்டும். அதில், 7

அசுரனும் மைந்த னாக் அவதரித் திடுவான் அன்னோன்
விசுவமாய்ச் சுரரை வெல்வான் என்றவட்கு உணர்த்தி வெள்ளி
வசுவினுக் குதவும் யோக வானிட முற்றித் தன்மைக்
கசிவுடன் உரைக்க மாதும் காசிபற் றொழுது நின்றாள்.

*'அப்படிச் செய்தால், அந்த வேள்வியில் அசுரன் மகனாக வருவான். அவன் தேவர்களைப் பேருருவுடன் வெல்வான்' என்றார். தன்மையுடனும் கசிவுடனும் இதைச் சொன்னார். காசிபனின் வானபூமிக்குச் சென்று, திதி அவரை வணங்கி நின்றாள்.* 8

சுக்கிரன் வேள்வி நண்ணிச் சொற்பெறு முனிவ னோடு
அக்கினிக் குதவும் போழ்தில் அருள்எனத் திதியும் கூற
மிக்கவள் உரைமேல் உள்ளம் மேவிடச் சுரபே தத்தால்
அக்கணம் பழுவென்று ஓராது ஆகுதி மனுவால் ஆற்றி,

*சுக்கிரன் வேள்விச் சாலைக்குச் சென்றார். அக்கினி காரியத்துக்கு உதவத்தொடங்கினார். மறைவாக இருந்த திதி, 'உதவுங்கள்' என்று வேண்டினாள். அவள் பேச்சில் மனம் சென்றதால், மந்திரங்களின் சுரம் மாறியது. அப்பொழுது அதுபிழை என்று அவர் உணரவில்லை. என்றாலும், ஆகுதியை மந்திரங்களால் தன்கருத்தையே மன்றாடி, வேண்டுதலுடன் செய்தார்.* 9

## சந்தவிருத்தம்

நோக்கினன்அவ் வன்னிதனை நோக்கஒரு பானு
ஆக்கினை யினால்அழிவில் வந்தவத ரிப்பான்
பாக்கியம் இவர்க்குவரு பாலகன் எனத்தான்
தாக்கியகொல் கொண்டசுரர் தாம்மகிழ் வுறத்தான்.

*நெருப்பைச் சுக்கிரன் நோக்கினார். 'யாகத்தலைவனின் ஆணையால்' ஒரு குழந்தை அவதரிப்பான், இவர்களுக்குப் பிள்ளையாக வரும் அவன், பாக்கியம் பெற்றவன்' என்றார். அந்தச் சொல், தேவர்கள் கேட்டு மகிழ்வதற்காகச் சொன்னார்.* 10

## யாகத்தில் வந்த யக்ஞ வியோனி

செந்தழல் அழன்றசிறு குஞ்சியொடு சீறும்
வெந்தழல் குன்றிநிகர் அம்பகமும் வீர
தந்தமுறு மந்தநகை கொண்டுதரு வாழும்
இந்திரனோ டந்தரும் ஏகிட உதித்தான்.

தீய்ந்தது போன்ற குறுகிய தலைமுடியுடன் சீறும்கொடு நெருப்புப்போன்ற — குன்றிமணிபோன்ற கண்ணுடன், வீரமான கோரைப்பற்களுடன், கற்பகத்தருவுடன் வாழும் இந்திரனும் தேவரும் ஓடுமாறு யாகத்தில் ஒருவன் பிறந்தான். 11

வந்ததொரு பாலகனை மாதவன் வழங்கச்
சிந்தைகொடு வாங்கிஅவர் சேவடி பணிந்தே,
உய்ந்தனன் எனத்திதியும் ஓகையுடன் எய்தி,
எந்தைபுகர் முன்பணிவித் தேதிதி இசைப்பாள்.

அச்சிறுவனைக் காசிப முனிவர் திதியிடம் கொடுத்தார். அவள் மகிழ்ச்சியுடன் வாங்கிக்கொண்டாள். அவர் திருவடிகளை வணங்கினாள்; 'பிழைத்தேன்' என்றாள் — மகிழ்ந்தாள். தந்தை போன்ற குருவின் முன்னே, குழந்தையைக் கிடத்திக் கூறுவாளானாள்: 12

மிக்கமக வுக்குறுதி செப்பென விரும்பிச்
சுக்கிரனும் அன்பொடு சுதற்கு உவகை யாலே
இக்கனலில் எய்துதலின் எக்கியவி யோனி
தக்கதென வேபெயர் தரித்தனன் அதன்பின்

'இந்தக் குழந்தைக்கு உறுதிமொழி சொல்லுங்கள்' என்றாள். இராஜகுமாரனுக்குச் சுக்கிரன், நெருப்பில் தோன்றியதால், யக்ஞவியோனி என்ற பெயர் தக்கது என்று, மகிழ்ந்து கூறினார். 13

ஆசிபல நல்கினன் அரும்புதல்வ னுக்கு
காசிபன் மிகுந்தகரு ணைத்திருவு ளத்தால்
வீசுபுகழ் எய்துவரம் மேன்மைகள் அளிப்பான்
ஆசொழிக என்றசுர மைச்சனருள் செய்தான்.

காசிபரும் அரிய புதல்வனுக்கு ஆசிகள் சொன்னார். மிக்க கருணையுடன், 'புகழ்கொள்க' என்று, மேன்மையான வரம் அளித்தார். 'குற்றங்கள் ஒழியட்டும்' என்றும் கூறினார். 14

மைந்தனுறு வாலுழைய சிங்கம்என வேவந்து,
அந்தமிகு வீரமுடன் அன்னையை வணங்கி,
விந்தைஅசு ராதிகளின் மேன்மைபெறு வண்ணம்
தந்தருள் எனக்கழறி யேசரணம் உற்றான்.

குழந்தை சிங்கம் போல் வளர்ந்தான். முடிவற்ற வீரத்துடன் விளங்கினான். அன்னையை வணங்கினான். 'அதிசய அசுரர்கள் மேன்மை அடைய ஆசிதருக' என வேண்டினான். அடியை வணங்கினான். 15

உற்றதொரு பாலனை உவந்தனை மகிழ்ந்தே;
எற்றுகடல் சூழ்புவி எவைக்குமரசு எய்தி,
பற்றலர் இகந்துபரி வெய்துவை பராவி
அற்புமுனி காசிபர் அருள்பெறுதி என்றாள்.

*தனக்குக்கிடைத்த மகனுக்காகத் தாய் மகிழ்ந்தாள். 'கடல் எற்றும் உலகம் யாவுக்கும் அரசனாகி, பகைவர்களை அழித்து, புகழ் அடைவாயாக! அன்புள்ள முனிவராகிய காசிபரைப் போற்றி, அவரின் அருள் பெறுக!' என்றாள்.* *16*

புத்திரனும் அன்னைவச னம்தலை புனைந்தே
அத்தரருள் காசிபரை எய்திஅடி போற்றி
இத்தரணி யேமுதல யாவும்அர செய்த
வித்தகம தாகஅருள் செய்என விளம்ப,

*தாயின் வார்த்தையைச் சிரமேற்கொண்டு, தந்தையாகிய காசிபரிடம் சென்று காலில் விழுந்து வணங்கி, 'இந்த உலகம் முழுவதும் ஆளும்படியாக அருள் செய்யவேண்டும்' எனக் கேட்டுக் கொண்டான்.* *17*

## பிரமனை நோக்கித் தவம்புரிந்து வரம்பெறுதல்

மைந்தனை வியந்துமுனி வாஎன அழைத்தே,
புந்தியுரை செய்துவளர் பொன்மய, வனத்தெம்
தந்தையை மனத்தில்உனி யேதவம் முயன்றால்,
விந்தைமலர் அம்புயன் மிகுந்தவரம் நல்கும்.

*முனிவர் மகனை 'வா' என்று அழைத்து, புத்திமதிகள் சொல்லி, 'பொன்மயமான காட்டிலே, எம்தந்தையாகிய பிரமனை மனத்தில் நினைத்துத் தவம் செய்தால், விந்தையான மலரில் அமர்ந்துள்ள அவர் மிக்கவரங்கள் தருவார்.* *18*

அன்னவரம் எய்திஅசு ரர்க்குமுத லான
மன்னவனும் ஆகிவளம் எய்துவை வரத்தால்
முன்னியன யாவும்முடி யப்பெறுவை என்னச்
சொன்னமுனி யைப்பரவி யேசுதனும் வந்தான்.

*அந்த வரத்தைப் பெற்று, அசுரர்களின் மன்னவன் ஆகி, வளங்களைப் பெறுவாயாக! அவ்வரத்தால் நினைத்த காரியங்கள் எல்லாம் நடக்கும்' என்றார். இளவரசன் [சுதன்] தந்தையைப் போற்றினான்.* *19*

முன்னிய யாவும் எய்த ஆசிகள் மொழிந்த வாறே
மன்னிய முனிவர் போற்றி மனுஉப தேசம் பெற்றுப்
பொன்மய வனத்தில்

நினைத்ததெல்லாம் நடக்கும்படியாகத் தந்தை தந்த ஆசிகளின்படியே செய்வதற்காக மீண்டும் அவரை வணங்கி மந்திர, தர்ம உபதேசம் பெற்றுப் பொன்மயமான காட்டுக்குச் சென்று, தவம்புரியத் தொடங்கினான், யக்ஞவியோனி என்னும் தோன்றல். 20

சாற்று கின்றமெய்த் தவத்தினைக் கருதியே சார்ந்தான்
சீற்றம் மிக்கதோர் அரிகரிப் பகைத்திறம் ஒழியா
மாற்றம் இல்வரைச் சாரலில் குற்றுபோல் வதிந்தே,
ஏற்ற நற்றவம் செய்தனன் கண்டவர் இரங்க.

இடைவிடாத்தவம் செய்ய இடையூறு செய்யும் சிங்கம், யானை முதலியவற்றின் பகை ஒழிவதற்காக, ஒருமலைச் சாரலில் கல்போல் அசைக்க முடியாதபடி மறைவாகத் தங்கித் தவம்செய்தான். அதைப்பார்த்த நாட்டுமக்கள் இரக்கப்படும்படி, அவனின் தவம் அமைந்தது. 21

விஞ்சை கொண்டெழு நாவெரி விதியினால் சொலித்த
அஞ்சு தீயின்மேல் ஆறையும் அவித்த,வன் அருளால்
உஞ்சல் ஆடிய சிக்கமே வறிதிகொண் டேறிக்
கஞ்ச நாள்மலர்க் கடவுளைக் கருதியே நோற்றான்.

உக்ரமந்தர உச்சரிப்பால், சப்த, ரூப, ரச, கந்தங்கள் மேல், திரயோதார, சுவாதிட்டான, மணிபூரக, அநாகத, விசுக்தி, ஆக்கினையை எழுப்பி, அவித்து, பிரமன் அருளால் உய்தற்கு உரித்தான குண்டலினிச் சக்தியை எழுப்பிப் பிரம்ம தரிசனத்துடன் தவம்செய்தான். 22

யோகம் மேவியே விழியினை அந்தரத்து உய்த்து
வேகம் ஆகிய காலினை அடக்கிமெய் அங்ஙன்
சோகம் அற்றனன் உணர்வன்றிச் செயலின்றிச் சுரர்கள்
வேகம் அற்றிட இப்படி நோற்றனன் வெகுநாள்.

யோகம் வந்தது. விழியைப் புருவ நடுவுக்குக் கொண்டு வந்தான். வேகமான காற்றை அடக்கினான். சோகம்அற்ற சுகஉணர்வு அடைந்தான். உணர்வும் அற்ற — செயலற்ற நிலைக்குச் சென்றான். தேவர்களின் வேகம் அடங்க, இப்படித் தவம் செய்தான். இத்தவம் வெகுநாள் தொடர்ந்தது. 23

அரிய நற்றவம் ஆண்டுநூற் றிருபதின் அளவும்
புரிய எக்கிய யோனிதன் தவாக்கினி பொங்கி,
விரியும் வையகம் விண்சுவர்க் கத்தினும் மேவி,
எரிய தென்னவே வெம்மையை இயற்றிட இதுதான்...

*நூற்றிருபது ஆண்டுகள் இப்படி நல்ல கடுந்தவம் செய்தான். அவனிலிருந்து தவாக்கினி பொங்கியது. விரிந்த உலகத்திலும், சுவர்க்கத்திலும் நெருப்புப்போல அது தகித்தது.* 24

யாதெ னச்சுவர்க் கத்தினர் முதலியர் யாரும்
ஏத வெம்மைவாட் டிடும்இவை எக்கிய யோனி
பூத லத்தினில் புரியும்த வாக்கினி போந்து,
வேதை செய்வதென் றுணர்ந்தவர் ஆற்றலர் வெருண்டு,

*இது என்ன எனச் சுவர்க்கத்தினர் முதலிய யாவரும் கேட்டனர். தீயவெம்மை வாட்டியது. யக்ஞவியோனியின், உலகத்தில் செய்யும் தவாக்கினி வெம்மையே இது; வெப்பம் செய்கிறது என உணர்ந்தவர்கள், பொறுக்காமல் கோபம் அடைந்தார்கள்.* 25

சத்திய லோகம் சார்ந்து, தாமரை வாணன் தன்னைத்
துத்தியம் செய்து பாதம் பரவியே தொழுது நின்றார்;
அத்தனே அசுரன் செய்யும் தவாக்கினி யான வெம்மை
எய்த்திடத் தாகச் சோகம் இயற்றிட யாங்க ளெல்லாம்...

*அவர்கள் பிரமனின் சத்திய உலகத்திற்குச் சென்றார்கள். பிரமனைத் துதித்துப் படையலிட்டுப் பாதம் பரவித் தொழுதார்கள். 'தலைவனே! அசுரன் செய்யும் தவத்தால் அக்கினி புறப்பட்டு எங்கும் வெப்பம் பரவியுள்ளது; தாகமும் துன்பம் தருகிறது.'* 26

அஞ்சியே உனைஅ டைந்தேம் அடைக்கலம் என்று தாழ்ந்தார்;
கஞ்சநாண் முகத்து வேதா கடவுளர் தமக்கு இரங்கி,
அஞ்சலென்று அபயம் தந்தே அனத்தினை உகைத்து அகன்றே
மிஞ்சவே தவம்செய் எக்ய யோனிபால் மேவி னானே.

*'நாங்களெல்லாம் பயந்து உன்னிடம் அடைக்கலமாக அடைந்துள்ளோம்' என்று, பணிந்து சொன்னார்கள். தாமரையில் அமர்ந்த வேதாவாகிய பிரமன் அந்தத் தேவர்களுக்கு இரங்கிப் 'பயப்படாதீர்கள்' என்று கூறி, அபயம் தந்தார். அதன்பின் அன்ன வாகனத்தில் ஏறி, யக்ஞவியோனியிடம் சென்றார்.* 27

மேவிய வேதன் முன்பு தவத்தினான் விழித்து எழுந்து
பூவலர்ப் பாதம் போற்றிப் புண்ணிய முதலே பூவில்
நாவினாள் பாகா போதா நான்முகத்து ஒருவ வானோர்
தேவனே போற்றி என்று தோத்திரம் செய்து நின்றான்.

*யக்ஞவியோனி தவம் கலைந்து விழித்தெழுந்தான். பிரமனின்*

களின் மூலதனமே! பூவில் வீற்றிருப்பவரே! நாவில் இருக்கும் சரஸ்வதியின் கணவரே! ஞானவடிவானவரே! நான்கு முகங் களைக்கொண்ட ஒப்பற்றவரே! தேவதேவரே!' என்றெல்லாம் தோத்திரங்கள் சொல்லிப் போற்றிநின்றான். 28

நின்றவன் தன்னை வேதா நோக்கிநீ தவம்செய் நீர்மை
நன்றென நின்க ருத்தேது எனவினாய் நவிற்று கென்னத்
துன்றுமற் றவன்ப ணிந்து சொல்லுவான் சுலவு பாரில்
பொன்திகழ் உலகில் சொர்க்க புவனத்தில் உள்ளோர் தம்மால்,

'நீ நன்றாகத் தவம் செய்தாய். உன் வேண்டுதல் என்ன?' என்று, பிரமன் யக்ஞவியோனியைக் கேட்டார். 'சுழலுகின்ற உலகத்திலும், பொன்மயமான சொர்க்கத்திலும் உள்ள யாரும் என்னை வெல்லக் கூடாது; 29

சூலம்மழு வாட்படை தோமரம் முசலம்
வேலம்பி தனால்எனை வென்றிடா வரமும்
ஞாலம்முத லாயின புவனமும் யானே
கோலின்வழி யாளவும் தந்தருள் கூர்வாய்

சூலம், மழு, வாள், தோமரம், உலக்கை, வேல், அம்பு, இவற்றால் என்னை வெல்லக் கூடாது; மண்ணுலகம் முதலாகிய எல்லா உலகங்களையும் நானே அரசாட்சி செய்யவேண்டும். இப்படி எனக்கு வரங்கள் கொடுத்து அருள வேண்டு கிறேன்'. 30

என்ன துள்ளத்தில் எண்ணிய யாவையும் எய்த
மன்னு மேனிகாத் திரமதாய் நாள்தொறும் வளர
அன்னை அத்தன்நீ யாவையும் படைத்திடு மலரில்
துன்னு நான்முகத் தொருவனே இத்துணை வரமும்,

'என் உள்ளத்தில் நினைத்தவையெல்லாம் நினைத்தபடி நடக்கவேண்டும். என் உடம்பு திண்மையாக நாளுக்குநாள் வளரவேண்டும். தாயாகவும், தந்தையாகவும், எல்லாவற்றையும் படைப்பவராகவும் உள்ள தாமரையில் அமர்ந்தவராகிய நான்முகக்கடவுளே! நீர்தான் இத்தனை வரங்களையும் தரவேண்டும்.' 31

தந்த ளிக்கெனப் போதனும் தயவினால் தந்தே,
மைந்த என்றனன் எக்கிய யோனிஇவ் வரங்கள்
இந்த வண்ணமே பெற்றனன்; துதித்தனன்; எழில்சேர்
சந்த வேதனும் சத்திய லோகத்தைச் சார்ந்தான்.

இப்படி யக்ஞவியோனி வரங்கள் கேட்டவுடன் பிரமனும், 'மைந்தனே! அவ்வண்ணமே ஆகட்டும்' என்றார். வரம்பெற்ற

அசுரன் பிரமனைத் துதித்தான். அழகான சந்தங்கள் நிறைந்த வேதத்தின் அதிபதியான பிரமனும், சத்தியலோகத்தை அடைந்தார். 32

## விருத்திராசுரன் என்ற பெயர்வந்த விதம்

ஏட விழ்ந்தமா மலரவன் ஈந்திடும் வரத்தால்,
நாடொ றுமிக்க மிக்கென வளர்ந லத்தால்,
சேடர் யாவரும் ஓங்குமெய் விருத்தியால் சிந்தை
நீடி யேவிருத் தாசுரன் என்னவே நிகழ்த்தி,

இதழ் விரிந்த மலரவன் கொடுத்த வரத்தால், யக்ஞவி யோனி நாள்தோறும் வளர்ந்தான். தினம் தினமும் அவன் உருவத்திற்கு வேறுவேறு உவமைசொல்ல வேண்டியதாயிற்று. அவனுடைய நண்பர்கள் தினமும் விருத்தி ஆகின்ற அசுரன் என்ற பொருளில், விருத்திராசுரன் எனப் பெயரிட்டு அழைக்கலானார்கள். 33

## விருத்திராசுரனின் போர்

பெயர்வி தித்தனர் விதிதர மேற்பெறும் வரத்தால்,
புயல்நி றத்தவன் எனப்புவி அந்தரம் பொருந்தும்
வயமு டைத்துயர் தேகத்தன் மன்னுமூ வுலகும்
சயம்ப ரத்தினிது ஆண்டனன் பூண்டிடும் தருக்கால்.

இப்படிப் பெயர் விதித்தனர். பிரமன் தந்ததால் பெற்ற மேலான வரத்தால், மேகம்போன்ற கருநிறத்தவன் விண்ணை முட்டும் உயரமும், பெரியதும் பிறக்குத் துயர் தருவதுமான தேகமும் கொண்டு, மூவுலகிலும் தன் வெற்றியைப் பரப்பித் திமிருடன் ஆண்டனன். 34

அழுந்து நேசமொடு அசுரரை உயர்த்திட அமைந்தே,
எழுந்து வானுளோர் தங்களைப் பொருவதற்கு எண்ணி,
தொழுந்தன் தானைகள் சூழ்வரப் போந்துவெம் கதந்தான்
கொழுந்த வேவிருத் தாசுரன் சுரர்கள்மேல் கொதித்து,

அசுரர்களை வளர்க்கவேண்டும் என்பதற்கான அழுத்த மான நேசத்தோடு, விருத்திராசுரன் தேவர்களுடன் போர் தொடுக்க எண்ணினான். மிக்க கோபத்துடன் விருத்திராசுரன் புறப்பட்டான். அவனை வணங்கியவாறு சேனைகள் அவனைச் சூழ்ந்து வந்தன. 35

போந்து வான்வழி பொருந்திட விண்பதி புகுவான்
பாய்ந்து சென்றிடும் பரிகரி தேர்படைக் கலங்கள்
வேய்ந்த மள்ளர்கள் வெள்ளமும் பள்ளநீர் விரியச்
சாய்ந்து சூழ்வரத் தருக்குடன் சூறைபோல் சார்வான்.

*வான்வழியாகத் தேவலோகத்தை அடைந்தான். பாயும் குதிரைகள். யானைகள், தேர்கள், படைக்கலன்களை உடம்பில் தாங்கிய மள்ளர்களாகிய வெள்ளம் எல்லாம் விரிவாகச் சூழ்ந்துவரத் தருக்குடன் அவன், சூறைக்காற்றுப் போல் தேவலோகத்தைச் சுற்றினான்.* *36*

## சந்தவிருத்தங்கள்

அதிர்ந்து வருப ராக்கிரம வீரன்அவன் முன்னே
எதிர்ந்தசரம் மற்றசரம் யாவும்இரி வெய்தி,
ஒதுங்குற உயிர்ப்பில்வரு சூறைஉல வைக்கே
அதுங்கவிழி மாவடவை யாம்எனவும் மேவா.

*அதிரும் பராக்கிரமம் பொருந்திய அவன், தேவவீரர்கள் எறிந்த அம்புகளை அழியச் செய்தான். ஒதுங்குவதும் உயிர்ப்புடையதுமான சூறைக்காற்றுக்கு முன் வடவா முகாக்கினி போல எதிர்எதிர் அம்புகள் மோதின.* *37*

அண்டமுகடு உந்தமுடி அடிகொடுஅகி லம்தான்
விண்டிட நடந்தசுரன் மேவிட விரைந்தே,
கண்டவர்கள் ஓடவளர் கைகள்திசை மேவக்
கொண்டல்உரு முக்குரல் கொதித்தமுளை வாயால்,

*அசுரன் அண்டங்களின் உச்சிகளைக் காலால் மிதித்தான். உலகம் உடையும்படியாக அதிரநடந்தான். அவன் வருவதைப் பார்த்தவர்கள் பயந்தோடினார்கள். கைகளால் திசைகளைத் தொட்டான். அவன் சத்தம், பேரிடிபோலக் கேட்டது.* *38*

விண்ணவர்கள் மன்னபொர வாஎன விளித்தான்;
துண்ணென எழுந்தமரர் சூழ்படை திருத்தி,
அண்ணல்அயி ராபதத்து அமர்க்களம்அ துற்றே,
எண்ணமொடு போர்வினை இயற்றிட எதிர்ந்தான்.

*அந்த இடிக்குரல் கொதித்த வாயால், 'விண்ணவர் தலைவனாகிய இந்திரனே! போர்செய்ய வா' எனக்கூவி அழைத்தான். இந்திரன் விரைவாகப் படைகளைச் சரிசெய்து கொண்டு, அயிராவதம் என்னும் வெள்ளையானையில் ஏறிப் போர்க்களம் அடைந்தான். போர்செய்யும் எண்ணத்துடன் விருத்திராசுரன் எதிரில் நின்றான்.* *39*

## வேறுசந்தம்

தேவ வீரர் ஆர்த்தெழுந்து சிலைகள் கோடி மெய்திரிந்து
ஆவ மீதி னில்தெரித்த னேகவாளி அவுணர்மேல்
ஏவி டக்க னன்றொனார் எதிர்த்து வாளி மாறியே
தூவி டச்சி வந்த மாகர் தோள்கைவாள் சுழற்றினார்.

*தேவவீரர்கள் கோபித்தெழுந்தார்கள். கோடி வில்களில் நாணேற்றினார்கள். அனேக அம்புகளை அசுரர்மேல்விட்டார்கள். கோபத்துடன் எதிரிகள் விட்ட அம்புகளைத் தடுத்தார்கள். மன்னர்கள் தோள்வலிமையுடன் கைவாளைச் சுழற்றினார்கள்.* *40*

தான வீரர் ஆயிரம் தருக்கு வாளி ஏவிட
வான வீரர் ஆயிரம் மறுத்து வாளி தூவினார்
சோனை என்ன எய்தவாளி சொல்லுகின்ற இருவகைச்
சேனை வீர ரும்கலந்து செருவி ளைத்து நின்றனர்.

*அசுரர்கள், ஆயிரம் அம்புகளை ஏவினார்கள். தேவர்கள் ஆயிரம் அம்புகளால் தடுத்தார்கள். சோனைமழைபோல் அக்காட்சி அமைந்தது. இருவகை வீரரும் தொடர்ந்து போரிட்டனர்.* *41*

கோலம்பு முள்வா யம்பு கோடம்பு பிறவா யம்பு
வேலம்பு விடவா யம்பு மிகுகனல் வடவா யம்பு
சூலம்பு சுழல்வா யம்பு சுரிகைவாய் அம்புள் ளிட்ட
மாலம்பி னாலும் மாறி மாறிவந் தடுபோர் செய்வார்.

*கோல்போல் உள்ளவை, முள்போல் உள்ளவை, பிறவகையான வாய் உள்ளவை, வேல்போல் உள்ளவை, விஷம்கக்குபவை, மிக்க நெருப்புக் கக்குபவை, ஊழிநெருப்புக் கக்குபவை, சூலம்போல் உள்ளவை, வாள்போல் உள்ளவை ஆகிய பல்வேறு வடிவங்கள் கொண்ட மயக்கம்தரும் அம்புகளை, மாறிமாறி ஏவினர். கடும்போர் மூண்டது.* *42*

## சொல்மடக்கு [கந்துகச்சந்தம்]

தேரு கைத்த வயவ ரோடு
　　தேர்உகைத்த வயவரே!
கோரம் முற்ற பரிய ரோடு
　　கோரம் உற்ற பரியரே!
வார்அ ணைத்த பாக ரோடு
　　வார ணைத்த பாகரே!
போரில் உற்ற வீரரோடு
　　போர்வ லத்தர் பொருவராய்

[தேரு — தேர்ந்த; கைத்த— கசந்த; உகைத்த — செலுத்திய; வயவர் — வீரர்; கோர — கொடிய; கோரம் — குதிரை; வார் — தோல்பட்டை; பாகர்—பக்கத்தினர்; வாரணம் — யானை.]

தேர்ந்தவர்களும் கசந்தமுகம் கொண்டவர்களுமான வீரருடன், தேரில் ஏறிய வீரர்களும் கொடுமை முற்றும்படியாகச் செய்யும் பரிவற்றவர்களோடு, குதிரை உடைய பரிவீரர்களைத் தோல்பட்டையை யானைக்குக் கட்டும் பக்கவாட்டில் உள்ளவர்களுடன், யானைப்பாகர்களும் இப்படிப் பல்வேறு வகையினர், போர்வீரருடன் போர்வெற்றிக்காகப் போர்புரிந்தனர். 43

மல்லரோ டெதிர்த்த மள்ளர் வாள ரோடு வாளரே;
வில்லரோ டெதிர்த்த வில்லர் வேல ரோடு வேலரே;
சொல்லரோ டெதிர்த்த சொல்லர் சூல ரோடு சூலரே;
வெல்லு மள்ளர் ஆர்ப்பெ ழுந்து மிகுசமர்ப் பொருதரோ

மற்போர், வாட்போர் , வில்போர், வேல்போர், சொல் போர், சூலப்போர், ஆகியவகைப் போர்செய்வோர் அவ்வவ் வகைப் போர்செய்வாருடனே பேரோசை எழுப்பியவாறு போர்செய்தனர். 44

வானம் ஒத்த யானை யில்பெய் வாளியே உடுக்கணம்
ஈனமற்றி லாது தைத்து விடுதல் மேக நுழைசுடர்
ஆன தப்பு றத்தெ ழும்பல் கவுள்சொ ரிந்த தானதாத்
தானை யிற்செ றுத்த வின்ன அமர்செய் கின்ற களமரோ

மேகம் போன்றன யானைகள். அவற்றில் தைத்த அம்புகள் நட்சத்திரக் கூட்டங்கள். ஈனமில்லா யானைகள் கொப்புடன் அலைகின்றன. அவை மேகத்தில் வெண்சுடர் போல உள்ளன. கவுள் எனப்படும் அவற்றின் கன்னங்களில் மதநீர் சொரிந்தன. யானைப் போர்க்களம் இவ்வாறமைந்தது. 45

கொள்ளி கொட்பு றுத்த சாரி கோலே னச்செல் வேகமா
வெள்ளம் உற்ற கடலும் வானும் விரிய முற்று தூள்எழ
பள்ள நல்த ரங்கம் ஒத்த பாயுமா அனேகமா
வள்ளி லைக்கை வேலயத்த வாசிவெள் ளச்சுமால்†

ஒரு கால் வெள்ளையான வளைந்த தடையுடைய குதிரை, விட்டெறிந்த கோல்போல வேகமாக ஓடும். அதனால் நீர்நிறைந்த கடலிலும் வானிலும் வீரியம் அடைந்து, தூசு படியும். பள்ளமான நல்ல கடலைப்போன்று, குதிரைகள் பல பாய்ந்துபாய்ந்து போர் செய்யும். 46

† இறுதிச்சீர் பிழையாக உள்ளது.

வாழி யெட்டு மலையி னோடு மற்று முள்ள வரையதோ
ஏழி சைத்த அரியி னோடு எழுந்த பானு இரதமே
ஆழி யிற்செ றித்தபா றடுக்கும் ஆர்க லித்திரள்
பாழி மொய்த்த பாகர் உய்த்த பாண்டில் வைய மீண்டதே.

எட்டு மலைகளுடன் எண்ணிக்கையற்ற இவையும் மலைகளா என்று, ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட சூரியத் தேர்கள் பிரமிக்கவைக்கும்; கடல்கள் உள்ள உலக அடுக்குகள், பாகர்களால் இயக்கப்படுகின்றனவோ எனச் சொல்லத் தோன்றும். 47

கந்து கச்சி ரிப்பின் ஓசை கவிழ்ம தக்க ளிற்றிசை
தந்தி ரத்துத் தேரின் ஓசை சங்கின் ஓசை எங்கணும்
வந்து ரத்த வயவர் ஓசை வாள்ப டைக்க லத்தொலி
அந்த ரத்தர் நாடு முட்டி அப்பு றத்தெ ழுந்ததே.

குதிரைகளின் கனைப்போசை, மதயானைகள் பிளிறும் இசை, தேரின் ஓசை, சங்கின் ஓசை, குருதிசொட்டப் போரில் வீரர்களின் ஓசை, வாள்கள் மோதும் ஓசை, அந்தரத்தைமுட்டி, அப்புறத்திலும் கேட்டது. 48

சாரி சுற்றி மாரி எற்றி நேர்எ திர்த்த தானவர்
வீரி யத்தர் வீற டக்கி வெற்றி பெற்ற வென்றதம்
தாரி சைத்த தோள்பு டைத்த தறுகண் வீரர் மறுகவே
வாரி எற்றி வாரி எற்றி வல்ல போர்ம லைந்தனர்.

குதிரைகளைச் சுழற்றி விட்டும், யானைகளை உதைத்துத் தள்ளியும் வீரியத்துடன் எதிரிகளின் வலிமையை அடக்கி, வெற்றி பெற்றுவிட்டோம் என்ற வீரர்கள், மாலை [தார்] அணிந்த தோள்களைத் தட்டினர். அவர்கள் குழம்பும்படி அவர்களை ஏற்றித்தள்ளி, எதிரிகள் மீண்டும் போரைத் தொடர்ந்தனர். 49

## தேவர்களின் தோல்வி

இத்தி றத்த போர்வி ளைத்தி றந்து ளோர்கள் எண்ணிலார்;
தைத்த வாளி யோடி ழிந்து சாய்ந்து ளோரும் எண்ணிலார்;
மைத்த குஞ்சி தாரி னோடு மாண்டபேர் அனேகரால்
மெய்த்த மார்பில் நேமி தைக்க வீய்ந்த வெங்க ளத்தரே

இப்படியாகப் போரில் ஈடுபட்டு இறந்தவர்கள் பலர்; அம்புதைத்து மாய்ந்தவர்கள் அனேகர்; கரிய மயிருடன்கூடிய தலையிழந்து இறந்தவர் எண்ணற்றோர்; மயிர்மார்பில் வேல்தைத்ததால், களத்தில் இறந்தவர்கள் பலர். 50

கால்சி தைந்த நீர ரும்கோல் கரிசி தைந்த பாகரும்,
மேல்சி தைந்த போர ரும்சொல் வெகுளி சிந்து வீரரும்,
தோல்சி தைந்த தோள ரும்கை வாள்சி தைந்த சூரரும்,
பால்சி தைந்த தார ரும்செய் பைங்க ளத்தி றந்தனர்.

கால் வெட்டுண்டவர்கள், யானை இறந்ததால் தனிமைப் பட்டபாகர்கள், உடம்பின் மேற்பகுதியை இழந்தவர்கள், கோபம் கொப்பளிக்க இறந்தவர்கள், தோல் கிழிக்கப்பட்டவர்கள், தோளிழந்தவர்கள், வாளைப் பறிகொடுத்துத் தோற்றவர்கள், பால் என்ன என்று அறியாதபடிக்கு அழிந்தவர்களும் பலராவர். 51

மொழிசி தைந்த பாக ரோடு மூரி வைய மற்றன
சுழிசி றந்த துரக மோடு சூரர் வேகம் அற்றன
அழியும் வெம்ப டைக்க லத்தோ டாண்மை யற்ற வங்ஙனம்
விழியி னோட றும்க பந்தம் வெங்க ளத்தில் ஓடவே.

தேர்ப்பாகர்கள் பலர் பேச்சற்றுப் போனார்கள்; தேர்த்தட்டுகள் பல அழிவுற்றன; குதிரைகள் பல செயலற்றன. அரக்கர்பலரின் வேகம் அற்றுப்போயிற்று; படைக்கலன்கள் பல அழிந்தன. பலர் ஆண்மை அற்றனராயினர், பலரின் விழிகள் நோண்டப்பட்டன. குறையுடலங்கள் ஓடின. 52

செந்நி லத்தி றந்து ளோர்கள் சோரி யாறு செல்லவே
பன்னி ணத்த குவியல் மீது பாரி டங்கள் கூளிகள்
கன்னி யைத்து தித்தி றைஞ்சி உண்ண வேக ளிப்புடன்
துன்னி ஆடல் பாடல் செய்து தொகுபி ணம்சு வைக்குமால்.

பொன்னிறமான தேவலோகம் இரத்தத்தால் செந்நிறம் ஆகியது. இரத்தம் ஆறுபோல் பெருக்கெடுத்து ஓடியது. பிணக் குவியல்களின் மேல் பேய்களும் பிசாசுகளும் அமர்ந்தன. அவை காளியைத் துதித்து வணங்கிப் பின் பிணங்களைத் தின்பதற்காக ஆடிப்பாடின. பின் காளியை வணங்கிப் பிணங்களைச் சுவைத்தன. 53

காக மோடு பாறும் வேறு கழுகி னங்கள் கவ்வியே
வேக மற்ற பிணம லைத்து மேதை சுற்றும் ஊளைவாய்
யாக முற்ற வேசு ழற்ற அதனொ டுங்கு றைத்தலை
மாக முற்றி வீழ்வ தற்ற வாரி யொத்த களரிவாய்.

கடல்போன்ற போர்க்களத்தில் காகம், பருந்து, கழுகு முதலிய பறவைகள் பிணங்களைக் கவ்விப் பிய்த்தன; சுழற்றின. நரிகள் ஊளையிட்டபடி வந்தன; சுழன்றன. நரிகளொடு தலை வெட்டுண்ட முண்டங்கள் ஆட்டம் ஆடி வீழ்ந்தன. 54

மயங்கு வீரர் மயல்தெ ளிந்து வல்ல போரில் முற்றியே
பயங்கொ ளார்ம லைந்தி டார்ப ணைத்த தோள்பு டைத்துடன்
வயங்கொள் வெஞ்சி னத்த ராகி மதியி னைப்பி ளந்தெனத்
தயங்கும் வக்ர தந்த வாய்ம டித்து மென்று சாடுவார்.

மயக்கநிலையில் இருந்த வீரர்கள் பலர், மீண்டும் தெளிவு பெற்றுப் பயத்தைப் போக்கிக்கொண்டு, தோள்களைப் புடைத்துக் கொண்டு, மலைக்காமல் வெற்றிக்கான கடுங்கோபத்துடன் யானைகளுடன் போரிட்டனர். சந்திரனைக் கீற்றுப்போட்டு வைத்ததைப்போன்ற தந்தங்களையுடைய யானைகளுடன் வென்று, கொல்வோம் என்றுகூறிப் போரிட்டனர். 55

தகுவ வீரர் தேவ வீரர் சாரி மாறி வேல்பிடித்து
எகுவம் உற்ற வெழுவெ டுத்த இருதி றத்த லைவரும்
வெகுவி தந்த போர்வி ளைத்து வீரர் சாய விருத்திர
தகவ னும்பொன் நாட னுந்த னித்தெ ழுந்து சமர்செய்வார்.

அசுரவீரர்களுடன் தேவவீரர்கள் அம்பு, வேல், ஈட்டி, உலக்கை ஆகிய கருவிப்போர்களை மீண்டும் மீண்டும் மேற் கொண்டனர். இருபக்கங்களிலும் பெரும்பாலான வீரர்கள் மாண்டார்கள். இறுதியில் விருத்திராசுரனும், இந்திரனும் தனித்தனியாகப் போர் மேற்கொண்டார்கள். [43ஆம் பாடல் முதல் இதுவரை சந்தவிருத்தங்கள்] 56

சுரர்பதி வருண பாணம் தொடுத்தனன் அசுரன் துள்ளி
எரிசரம் தொடுத்துச் சீற்றம் தணிந்தனன் இமையோர் வேந்தன்
பரிதிஅத் திரம்கொண் டெய்தான் பதிகனும் சசிவிட் டார்த்தான்
அரிஅரிக் கணையை விட்டான் அவுணன்சிம் புள்ளால் அட்டான்.

இந்திரன் வருணாஸ்திரம் விட்டான்; அசுரன் கோபத்துடன் அக்னியஸ்திரம் விட்டான். இந்திரன் சூர்யாஸ்திரம் விட்டான்; அசுரன் சசி அஸ்திரம் விட்டான். இந்திரன் சுக்கிர அஸ்திரம் விட்டான்; அசுரன் சிம்புள் அஸ்திரம் விட்டான். 57

நாகர்கோன் சூறை ஏவ நாகமாப் படைவிட் டார்த்து
வேகம்வந் தகற்றக் கள்வன் வெள்ளைவா ரணத்தி னானும்
மோகமாப் படைவிட் டார்த்தான் தகுவனும் முயன்று ஞான
வாகைவா ளியினால் எய்தான் வான்உளோர் யாரும் அஞ்ச.

இந்திரன் சூறைப்படையை விட்டான்; அசுரன் வேகமாக நாகப்படையை ஏவினான். வெள்ளையானையை உடைய இந்திரன், மோகப்படையை விட்டான்; அசுரன் ஞானப்படையை ஏவினான். சரிக்குச் சரியாக அசுரன் அம்பு விடுவதைப் பார்த்துத் தேவர்கள் பயந்தார்கள். 58

இவ்வகைத் தேவ பாணம் எய்தபின் எழுவி னாலே
மைவண அசுரன் வென்றான் வாசவன் புறகிட் டோடத்
தெவ்வினை அட்டோன் வாகை சூடினான் செழுங்கோல் தாங்கக்
கைவினை அதனால் தேவர் பொருள்எலாம் கவர்ந்தான் மன்னோ.

தேவ பாணங்களை எய்த பிறகு, அசுரன் இந்திரன்மேல் கணையமரத்தை ஏவினான். வாசவன் புறமுதுகிட்டான். அசுரன் வென்றான். இந்திரனின் செங்கோலை அசுரன் ஏந்தினான். தேவர்களின் செல்வங்களையெல்லாம் கவர்ந்து கொண்டான். 59

வானமும் திசையும் பாரும் மற்றதில் உள்ள வான
தானமா நிரையும் பாய்மாத் தரங்கமும் தடந்தேர் யாவும்
கானமும் மணியும் பொன்னும் காமதே னுவும்கால் கின்ற
மேனிதி களும்கைக் கொண்டான் வேதியன் வரத்தி னாலே.

பிரமன் கொடுத்த வரத்தினால் இது சாத்தியமாயிற்று. வானம், திசைகள், உலகம், அவற்றில் உள்ள செல்வங்கள், கடல், தேர்கள், காடுகள், மணிகள், பொன்குவியல்கள், காம தேனு இப்படியாக மேன்மையான யாவற்றையும் அசுரன் கைப் பற்றினான். 60

## தேவரும் இந்திரனும் பிரமனை வேண்டுதல்

புரந்தரா தியர்ம றைந்தார் எங்ஙனம் புகுவோம் என்ன
இரங்கிட அகப்பட் டோரைச் சிறையினில் இட்டான் அன்ன
அரம்பையர் இடுக்கண் எய்த ஆண்டனன் அசுரன் இன்னல்
கரந்திட உருவும் மாறி மகபதி கருது கின்றான்.

இந்திரன் முதலானவர்கள், அசுரனின் கண்ணுக்குப் படாமல் மறைந்துகொண்டார்கள். எங்கே தஞ்சமடைவது எனப் புரியாமல் தவித்தவர்களை எல்லாம், அசுரன் பிடித்துச் சிறையிலிட்டான். அரம்பை முதலான அழகிகளைக் கொடுமைப் படுத்தினான். அசுரனின் இந்த அக்கிரமங்கள் மறையவேண்டும் எனக்கருதிய இந்திரன் மாற்றுரு எடுத்தான். 61

புந்தியில் எண்ணி இன்ன புகழ்தரு மதிஎன்று ஓர்ந்தே,
இந்திரன் தேவ ரோடும் சத்திய லோகத்து எய்திக்
கந்தமா மலரில் மேய கடவுளைப் பணிந்து நின்று,
வந்தவே தனைகள் தீர முறையிட்டார் வணங்கி னாரே.

இந்திரன் தேவர்களுடன் அறிவாற்றலுடன் கலந்தாலோசித் தான். புகழ்கொள்ளத்தகுந்த முடிவு என்பதாக ஒரு முடி வெடுத்தனர். அதன்படி பிரமனின் சத்திய லோகத்திற்குச்

சென்றார்கள். மணம்பொருந்திய மலரில் அமர்ந்த பிரமனை வணங்கினார்கள். தங்களுக்கு நேர்ந்த வேதனைகளைக் கூறி முறையிட்டு, மீண்டும் வணங்கினார்கள். 62

கமலமா மலரில் மேய கடவுளே கருணை மூர்த்தி
தமலம்நீங் கியவே தாவே சகலபல் லுயிரை ஈன்ற
அமலனே வாக்கின் செல்விக் கன்பனே அயனே என்றென்று
இமையவர் முதலோர் போற்ற இவர்தமை நோக்கி வேதன்,

கமலமலரில் அமர்ந்த கடவுளே! கருணாமூர்த்தி! வேதாவே! எல்லா உயிர்களையும் ஈன்றவரே! மலமற்றவரே! வாக்வாணிக்கு [கலைமகளுக்கு] அன்பானவரே! அயனே! என்றெல்லாம் இமயவர்கள் போற்றினார்கள். 63

## பிரமன் சொன்ன உபாயம்

பகருவான் முகம்பு லர்ந்து பருவர லுடன்இங் கெய்தும்
தகமைஏ துரையும் என்னச் சாற்றுவார் விருத்ரன் என்னும்
இகல்புரி அசுரன் செய்த இடுக்கணால் அவதி எய்திப்
புகல்இலா துனைஅ டைந்தோம் புரந்திட வேண்டும் என்றார்.

பிரமன், வருத்தத்துடன் இங்கு வந்துள்ளீர்களே! என்ன நடந்தது? எனக்கேட்டார். விருத்திராசுரன் என்ற பகைவன் எங்களுக்குத் துன்பம் செய்தான்; அதனால் இழப்புகள் அடைந்தோம். எனவே, உங்களிடம் தஞ்சம் அடையவந்தோம் என்றனர். 64

செங்கையால் அமைத்து நீவிர் அஞ்சலீர் என்றான்; தேவர்
தங்குறை புகல்வார் எங்கள் பொருள்எலாம் தகுவர் கொண்டார்
பொங்கிய பகையைப் போக்கிப் பொன்நகர் எங்கட் கீவாய்
பங்கய முதலே என்று பரவினார் பணிந்து நின்றார்.

பிரமன் அபயகரம் காட்டி, 'நீங்கள் அஞ்சாதீர்கள்' என்றார். 'எங்கள் பொருள்களையெல்லாம் அசுரன் கவர்ந்து கொண்டான்; அந்தப் பகைவனைத் துரத்திப் பொன்னகராகிய இந்திராபுரியை மீண்டும் எனக்குத் தரவேண்டும்' என இந்திரன் வேண்டினான். 65

விண்ணவன் தன்னை நோக்கி வேதநான் முகத்தோன் கூறும்
எண்ணிலாத் தவங்கள் முன்னம் இயற்றினோன் எக்ய யோனிக்
கண்ணிகழ் பெயரோன் ஒங்கு காயத்தால் விருத்ர காலன்
தண்ணளி இல்லான் மேலாம் காசிபன் வேள்வி தந்தோன்

தேவர் தலைவனாகிய இந்திரனைப் பார்த்து, வேதனும் நான்கு முகங்களைக் கொண்டவருமாகிய பிரமன், விருத்திரன் என்ற எமன் முன்பு, எண்ணற்ற தவங்கள் செய்தவன்; யக்ஞ வியோனி என்ற பிறப்பிடத்தால் பெயர்பெற்றவன்; உருவத்தால் விருத்திரன் எனப்பட்டவன்; கருணையற்றவன்; காசிபமுனிவரின் வேள்வியில் பிறந்தவன். 66

வன்னியை நிகர்வோன் சுக்ரன் வழங்கிடும் வரங்கள் பெற்றோன்
உன்னரும் திறலோன் தன்னை வெல்லுதற் குறுதி ஒன்று
மன்னிய யாகம் தன்னில் சுரபேத மந்தி ரத்தால்
துன்னினோன் அதனால் அற்ப வாழ்வினோன் சுகுணம் இல்லோன்.

நெருப்புப் போன்றவன்; அசுரகுருவாகிய சுக்கிரனின் வரங்களும் அவனுக்கு உள்ளன. அசுரகுரு, காசிபனின் வேள்வியில் மந்திரத்தை வேறுவிதமாக உச்சரித்த காரணத்தால், அவ்வசுரன் தோன்றினான். அற்பவாழ்வு உள்ளவன்; நற்குணங்கள் இல்லாதவன். 67

விண்ணவர் பகையாய் வந்த விறலினோன் வேண்டப் பெற்ற
எண்ணிய வரத்தி னாலே இளம்பிறை எனவ ளர்ந்து,
நண்ணிய பருமத் தாலே விச்சுவம் நயந்து நின்று,
திண்ணிய புயத்தி னானைச் செகுத்திடச் செய்வ தொன்று,

அவன் தேவர்களுக்குப் பகையாய் வந்தவன்; வலிமை உள்ளவன்; அவன் இளம்பிறைபோல் தோன்றிப் பெற்ற வரங்களினால், பெரிதாக வளர்ந்தவன்; திண்மையான தோள்களைக் கொண்ட அவனை வீழ்த்த ஓர் உபாயம் உள்ளது. 68

உன்னுடை வச்சிரம் உவனை வென்றிட
முன்னியம் அழுங்கிய முனையில் மொந்தையாம்
துன்னிய அவயவம் துண்டம் செய்திட
மின்னிய கூர்மையால் வேறு வேண்டுமால்.

உன்னுடைய வச்சிராயுதம் கூர்மை, சக்தி குறைந்ததாகி விட்டது. முனை மழுங்கிவிட்டது. அவனின் உறுப்புகளைத் துண்டாக்க, மின்னும் கூர்மையான வேறொரு வச்சிராயுதம் உனக்குத் தேவை. 69

வேண்டுதற்கு யோசனை விரித்து மேருபால்
ஆண்டுயோ கம்புரி ததீசி அந்தணன்
காண்தகு மெய்முதுகு என்பு,கை கவர்ந்துபின்
ஈண்டுவச் சிரம்செயில் இவனை வெல்லலாம்.

பலநூறுகல் தொலைவு தாண்டிச்சென்று, மேருமலைக்குப் போ. அங்கே யோகநிஷ்டையில் உள்ள 'ததீசி' என்னும் முனிவரைப் பார். அவரின் அழகான உடம்பின் முதுகெலும்பைப் பெற்றுக்கொண்டு, பிறகு இங்குவந்து வச்சிராயுதம் செய்தால், இந்த விருத்திராசுரனை வெல்லலாம். *70*

என்றுநான் முகன்இசைத்து இருடி எய்திடம்
சென்றுமது இடர்சொலில் தீர அம்முனி
நன்றென ஈகுவன் நடமின் நீர்என
மன்றலம் தருஉறை மன்ன னேமுதல்,

'முனிவன் இருக்குமிடத்திற்குச் சென்று, உம் துன்பத்தைச் சொல். அத்துன்பம் தீரத் ததீசி முதுகெலும்பைத் தருவார். உடனே புறப்படு' என்று நான்முகன் கூறினார். *71*

## ததீசி முனிவர்

அமரர்கள் அனைவரும் அயனைப் போற்றியே,
சிமயமா மேருவின் பக்கம் சென்றுநாம்
தமைநிகர் முனிவனை அடைந்து சாற்றியே,
எமதுயர் நீங்கலாம் என்று போயினார்.

கற்பகத்தரு உள்ள உலகின் மன்னனாகிய இந்திரன் முதலாகத் தேவர்கள் அனைவரும் பிரமனைப் போற்றினார்கள். உச்சியான மேருமலையை நோக்கிச் சென்றார்கள். தருமத்துக்கு இணையான முனிவனிடம், தம் நிலைகளைச் சொல்லித் துயரை நீக்கிக்கொள்ளலாம் எனக்கருதிச் சென்றார்கள். *72*

வழிகொடு போந்தனர் வான்உ லாவிய
தழைஅவிழ் சந்தனம் செருந்தி சண்பகம்
குழைநிறை பனசமாம் கோங்கு பாடலம்
கழைவளை காஞ்சியும் கலந்த காஎலாம்.

வழியை நன்கறிந்து சென்றார்கள். வழியில் உள்ள காடுகளில் வானை முட்டும் உயரமும் தழைகளும் நிறைந்த சந்தனம், செருந்தி, சண்பகம், பலா, கோங்கு, பாடலம், காஞ்சி ஆகிய மரங்கள், கிளைகளுடன் இருந்தன. *73*

விண்தொடு யூகமும் வேள்விச் சாலையும்
பண்தரு மறைவலோர் பன்ன சாலையும்
கொண்டல்ஆர் சோலைசூழ் குவளை வாவியும்
கண்டுகண் களிப்புறக் கருதிப் போந்தனர்.

வழியில், யாகப்பசுவைக் கட்டும் தறி விண்ணை முட்டப் பதிக்கப்பட்டிருந்தது. வேள்விச்சாலைகள் இருந்தன. இருக்கை யுடன் வேதம் ஓதுபவர்களின் பர்ணசாலைகள் இருந்தன. மேகம் தவழும் சோலைகள் இருந்தன. குவளை மலர்கள் நிறைந்த குளங்கள் இருந்தன. இவற்றையெல்லாம் கண்களால் கண்டு களித்தனர். 74

வானவர் அனைவரும் ததீசி மாமுனி
தானுறை இருக்கையைச் சார்ந்து தண்ணளி
மோனம தாகிய முனியை வாழ்த்தினார்
மானத மவுனயோ கத்தை மாற்றியே.

அனைவரும் ததீசி முனிவரின் இருப்பிடத்தை அடைந்தனர். அவர் மௌனநிலையில் இருந்தார். அவர் மௌனம் கலைந்து விழிக்குமாறு வாழ்த்துரைகள் கூறினார்கள். 75

முனிவனும் விழித்துமுன் எய்தும் விண்ணவர்
தனைஉப சரித்துநன் முகமன் சாற்றிப்பின்
அனைவரும் இமையவர்க் கரசும் இங்ஙனம்
மனுவதென் என்றுரை வழங்கி னான்அரோ.

ததீசி முனிவரும் கண்விழித்தார். எதிரில் இருந்த தேவர் களை உபசரித்தார். வாழ்த்துரைகள் சொன்னார். பிறகு, 'அனை வரும், தேவர்களுக்கு அரசரும் இங்கே மன்னுவது [கூட்டமாகவந்தது] ஏன்?' என்று வினாத்தொடுத்தார். 76

அந்தரத் தசுரன் வந்து அடர்செய் போரினில்
இந்திரன் என்னையும் இமையார் யாரையும்
சிந்திட அவன்செயும் தீமை ஆற்றலால்
எந்தைஉன் இடந்தனில் எய்தினோம் என்றார்.

'தந்தையே! அசுரன் தேவலோகத்திற்கு வந்து நெருக்கடி கொடுத்துச்செய்த போரில், என்னையும் தேவர்களையும் அழிக்கப் பெருந்தீமை செய்தான். அதனால் உம்மிடத்தில் வந்தோம்' என்றான். 77

ஆற்றலம் அசுரன்செய் அவதி நீங்கிட
மாற்றம்இ லாதஎம் வருத்தம் நோக்கியே,
நீற்றினால் அழகிய முனிவ நின்அருள்
தோற்றிடச் செய்தெம துயரம் நீக்குவாய்.

'திருநீற்றால் அழகுபெற்ற முனிவரே! அசுரன் செய்யும் துன்பம் தாங்க முடியவில்லை. அத்துன்பம் நீங்கும்படியாக எங்கள் வருத்தத்தைக் கவனித்து, உங்கள் அருள் தோன்றும் படியாகச் செய்து, துயரம் போக்கவேண்டும்.' 78

பங்கயன் வரம்பெறு பதகன் மாய்ந்திட
எங்கள்தம் உலகினில் யாங்கள் எய்திட
அங்கதற் குறுதியும் அருள வேண்டுமால்
துங்கமா முனிவனே எனத்து தித்தனர்.

'காக்கும் முனிவரே! பிரமனின் வரம்பெற்ற பாதகன் அழியவேண்டும். தேவர்உலகம் மீண்டும் எங்களுக்குக் கிடைக்க வேண்டும். அதற்குத் தாங்கள் உறுதிதரவேண்டும்' என்று கூறித் தேவர்கள் துதித்தார்கள். 79

விசுவமாய் வந்திடும் விருத்தி ராசுரன்
நசியவே அவன்தனை நாங்கள் வென்றிட,
உசிதமாய் வச்சிரம் ஒன்று செய்திடக்
கசிவுறும் அன்பனே கருதி வந்தனம்.

'பேருருவம் எடுத்து வந்திருக்கும் விருத்திராசுரன் அழிவதற்கும், அவனை நாங்கள் வெல்வதற்கும் ஏற்றபடி வச்சிராயுதம் செய்யவேண்டும். இரக்கமும் அன்பும் உள்ளவரே! அதற்காக உங்களை நாடிவந்தோம்.' 80

என்னெனில் நின்உடம் பினில்இ ருப்பது
தன்னிகர் முனிவஎம் இடர்த விர்ப்பது
பொன்னனப் போற்றிவிண் குடிகொள் பொன்நகர்
தன்அர சளிப்பது தருக என்றனர்.

'தனக்குத் தானே நிகர் என விளங்கும் முனிவரே! உன் உடம்பில் இருப்பது — எங்கள் துன்பம் போக்கவல்லது — பொன்நகரின் அரசாட்சியை எங்களுக்கு அளிக்க வல்லது — பொன்போலத் தாங்கள் போற்றிவருவது—அதைத்தருக' என்றனர். 81

## ததீசி முனிவரின் தத்துவ உரைகள்

சாற்றுதும் நின்முது கென்பு தான்அது
ஆற்றிய முனிவனே அருளிச் செய்எனச்
சேற்றிதழ்த் தாமரை வாசம் செங்கதிர்
தோற்றிய தெனமுனி மலர்ந்து சொல்லுவான்.

'தவம் மிகச்செய்த முனிவரே! அது என்ன எனச் சொல்கிறோம். உங்கள் முதுகெலும்புதான் அது. அதை எங்களுக்குக் கொடுத்து, அருள்செய்ய வேண்டும்' என்றனர். சூரியன் தாமரையை மலரச்செய்து, அதன் மணத்தைப் பரப்புவதுபோல, முனிவர் பிரகாசத்துடன் பேசத் தொடங்கினார். [தேவர்களின் முகத்தாமரைகள் மலரத்தொடங்கும்படியாகப் பேசத்தொடங்கினார்]. 82

இன்னலம் தான்பெற இடுக்கண் மற்றையோர்
துன்னுதல் தேர்கிலார் தொன்மை என்னவே
என்னுயிர் கவர்வதற் கிவண்வந் தெய்திநீர்
நன்மையே புகன்றனிர் நன்றுஉரைத் தீர்அரோ.

'தான் இன்பமும் நன்மையும் அடைவதற்காக மற்றவர்கள் இடுக்கண் — துன்பம் அடைவதைப் பலர் சிந்திப்பதே இல்லை. இந்தநிலை தொன்றுதொட்டு வருகிறது. [விருத்திராசுரன் தன் சுயநலத்துக்காகத் தேவர்களை வதைப்பதையே முனிவர் இவ்வாறு கூறினார்.] என் உயிர் கவர்வதற்காக நீங்கள் இங்கு வந்தீர்கள். இதை நல்ல செய்தி என்றே நான் கொள்கிறேன். நல்லவார்த்தை சொன்னீர்கள்.' 83

யாவதா கிலும்இரப் பென்ன எய்தினோர்க்கு
ஈவதே இசைபடல் இலைஎன் றேசொலல்
சாவிலும் இழிவிலும் சழக்கென் பார்களே
ஆஉடன் ஈதலே அழகது என்றனன்.

'யாசித்துக் கேட்போர்கள், எதைக்கேட்டாலும் மறுக்காமல் கொடுப்பதே புகழாகும். 'இல்லை' என்று சொல்வது, சாவைக் காட்டிலும் — இழிவைக் காட்டிலும் இழிவானதாகும். ஆ! உடனே கொடுப்பதே அழகாகும்!' என்றார். 84

வானவர்க் கரசை நோக்கி மாமுனி மேலும் சொல்வான்
தேனவிழ் தாரு நாட்டில் திரைக்கடற் புவியிற் செல்லாது
ஏனைய திசையிற் போகா என்உடம் பெய்தும் என்பு
தானமென்று அதற்குக் கைம்மாறு யாதெனச் சாற்றி னானே.

இந்திரனை நோக்கி முனிவர் மேலும் சொன்னார். 'கற்பகத்தரு உள்ள தேவலோகத்திலும், அலைகடல் உள்ள மண்ணுலகத்திலும் இந்த [என்] உடம்பு சஞ்சரித்ததில்லை. மற்றமற்ற உலகங்களுக்கும் போனதில்லை. இதைத் தானமாகக் கேட்டீர்கள். இந்த நல்லவார்த்தைக்கு நான் இன்னும் வேறு நன்றி சொல்லமுடியுமா?' என்றார். 85

பூதமும் நோயும் பேயும் புள்விலங் காதி யாய
பேதமும் பெற்றோர் தாமும் பிறவிகள் தாமும் பேசில்
வேதனும் சலிக்கத் தோற்றி அழிந்திடும் மெய்யில் வந்த
ஏதமும் தீரும் காலம் இமையவர் எய்தி னீரே.

'உடல் பஞ்ச பூதங்களால் ஆனது. நோயின் இருப்பிடமாவது. பேய் பற்றி நிற்பது. பறவை, விலங்கு, முதலாகிய பேதங்கள் சரீர வடிவுகளால் வருபவை. பெற்றோர், மக்கள், என்பனவெல்லாம் சரீரம் தோன்றிய காலம் தொட்டு வரும்பெயர்கள் ஆகும். பல்லாயிரக் கணக்கான பிறவிகளைப் பிரமன்

உண்டாக்கி, உண்டாக்கி அலுத்துக் கொண்டிருக்கின்றார். அழிந்து போகின்ற சரீரத்துள் துன்பம் தீரும் நல்லகாலம் வந்ததனால், தேவர்களாகிய நீங்கள் வந்து சேர்ந்தீர்கள்.' 86

சீயுறு நாற்றம் பற்றும் ஊனுடல் செறிந்த என்பின்
காயமும் வழும்பு மூளை இறைச்சியும் கதுவ ஒன்பான்
வாயுறு மலமும் ஐவர் வருத்தமும் மாறும் வேளை
மீயுறு தேவர் யாரும் விருந்தென மேவி னீரே.

'சீழும் நாற்றமும் பற்றிக்கொண்டிருக்கும் தசைப் பிண்டத்தில் செறிந்துள்ள எலும்புகள் காயங்களாக, வழும்பு களாக, மூளையாக, இறைச்சியாகக் கவ்விக் கொண்டுள்ளன. இவ்வுடம்பில் ஒன்பது ஓட்டைகள் உள்ளன. ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்கள் ஆட்டிப் படைக்கின்றன. மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள் வருத்தம் தருகின்றன. இத்துன்பங்களெல்லாம் தீரும் வேளை இப்பொழுது வந்துவிட்டது. அதற்காக மேன்மை பொருந்திய தேவர்களாகிய நீங்கள், என் விருந்தினர்களாக வந்துள்ளீர்கள்.' 87

மன்றலம் தாரு நாடர் மகிழ்வுற அசுரன் தன்னை
வென்றிட இமையோர் எல்லாம் விண்குடி யேற வானில்
ஒன்றிய குலிசம் ஆக உறுசெயல் உலகம் யாவும்
நின்றிடப் புகழைப் பெற்றுப் பொன்றுநான் நீங்கு வேனால்.

'மணம் பொருந்திய கற்பகத்தரு உள்ள தேவநாட்டைச் சார்ந்தவர்கள் மகிழ்ச்சி அடையும்படியாக — விருத்திராசுரனை வெல்வதற்காக — இமையோர் தேவலோகத்தில் குடியேறுவதற் காக — வானத்தில் வச்சிராயுதம் சுழல்வதற்காக — எல்லா உலகங் களும் அச்சமின்றித் தத்தம் செயல்களில் ஈடுபடுவதற்காக, புகழுடன் நான் சரீரத்தை விட்டு நீங்குவேன்.' 88

## ததீசியின் தியாகம்

புகழுடம்பு அதனைப் பெற்றுப்
பொய்யுடல் நீத்தும் என்னா
அகம்மகிழ்ந்து அட்ட மூர்த்தி
அடிஇணை மனத்தில் உன்னித்
தகைமைசால் கரணம் ஒன்றித்
தத்துவம் கடந்து நின்ற
சுகநெறி அடைய நின்றான்
சோதிமா முனிவன் தானே.

'புகழுடம்பைப் பெற்றுப் பொய்யுடம்பை விட்டு இப்பொழுது நீங்கப் போகிறேன்' என்று கூறிக்கொண்டே ததீசி

முனிவர், அட்டமூர்த்தியாகிய சிவத்தை வணங்கி, கரணங்களை ஒடுக்கி, தத்துவங்களைக் கடந்துநின்ற சுகநெறியை அடைவதற்காக எழுந்துநின்றார். அவர் அப்பொழுது ஜோதியாகக் காணப்பட்டார். 89

சுயம்பிர காசம் எய்திச் சுழிமுனை ஆதா ரத்தில்
வயம்பெறு பிரம ரந்த்ர வழியுறும் வளிமேற் செல்ல
நயம்பெற நிட்டை ஒன்றி நாதபூ ரணத்தில் ஞான
சயம்பெறக் கபாலம் கீண்டு விமானத்தில் சார்ந்தான் மன்னோ.

தன் ஒளியை வெளிப்படுத்தினார். சுழிமுனையை ஆதாரத் தானத்தில் வெற்றியுடன் நிலைநிறுத்தினார். பிரம்மதானத்தின் வழியாகக் காற்றாகிய ஜீவனை மேலே செல்லுமாறு ஏவினார். ஆன்மா, நிஷ்டையில் ஒன்றியது. நாதமாகிய பூரணத்தில் வெற்றி அடையும்படியாக ஆன்மா காபலத்தைக் கிழித்துக்கொண்டு வெளியேறியது. ஆன்மாவாகிய ததீசி புட்பக விமானத்தில் ஏறிச் சுவர்க்க உலகத்திற்குப் புறப்பட்டார். 90

ததீசிமா முனிவன் விண்ணில் சார்ந்திடச் சதவேள் விக்கோன்
முதலிய தேவர் அந்த முனிவரன் முதுகின் என்பைக்
கதியுற வாங்கித் தேவ கம்மன்கைக் கொடுப்ப அன்னோன்
விதிபெறக் குலிசம் செய்தான் விண்ணவர் தலைவற் கீந்தான்.

நூறு வேள்விகளைச் செய்தவனாகிய இந்திரன், ததீசி முனிவர் விண்ணை அடைந்தவுடன், அவரின் உடலிலிருந்த முதுகெலும்பை எடுத்தான். அதைத் தேவதச்சனிடம் கொடுத்தான். அவன் விதிமுறைகளின்படியாகக் குலிசாயுதம் [வச்சிராயுதம்] செய்தான். புதிய வச்சிராயுதத்தைத் தேவதச்சன், இந்திரனிடம் கொடுத்தான். 91

சதமுளச் சதமுள் வேய்ந்த தபனன்ஒத் திலங்கச் செய்த
விதவினைப் படையை மேலோன் தாங்கிட விறல்இ ழந்தான்
மதனைவென்று அவனை உள்கி வணங்கியே மலரினாலே
சுதினமாய் வழிபாடு ஆற்றித் தொல்வலி பெற்றான் அன்றே.

வச்சிராயுதம் நிரந்தரமாக இருக்கும்படியாக வடிவமைக்கப் பட்டது. நூறு கூர்மையான முட்கள் அதில் இருந்தன. அந்தப் படை முனிவரைப் போல ஒளியுடன் அமைந்திருந்தது. இந்திரன் அதை வாங்கிக்கொண்டான். மன்மதனை வென்ற சிவனை மனத்துக்குள் வணங்கிக்கொண்டான். நல்ல நாளில் வஞ்சிராயுதத்திற்கு வழிபாடுகள் செய்தான். அப்பொழுதே அவன் பழைய வலிமையை — இழந்த வலிமையை மீண்டும் பெற்றான். 92

இந்திரன் வயிர வேலை இறைஞ்சிப்பூ சித்தெ டுத்தான்
சுந்தர மின்னின் தோன்றும் காட்சிபோல் களிப்பின் ஓங்கி,
அந்தரர் யாரும் போற்ற அவனிஉண் டவன்போல் நின்றான்;
முந்திய பகையை வெல்ல முன்னினான் அனிகம் மொய்ப்ப.

*வச்சிராயுதத்தைப் பூசித்துக் கையில் எடுத்தவுடன், ஆகாயத்தில் தோன்றும் மின்னல் போல இந்திரன் மனத்தில் மகிழ்ச்சியான காட்சிகள் தோன்றித் தோன்றி மறைந்தன. மிக்க மகிழ்ச்சியுடன் தேவர்கள் ஆரவாரம் செய்தார்கள். உலகத்தை யுண்ட நெடுமால் போல, இந்திரன் பகையை வெல்வதற்கு நிமிர்ந்து நின்றான். அவனைப் படைவீரர்கள் சூழ்ந்துகொண்டார் கள்.* *93*

## மீண்டும் போர்

தானவன் முனைமேல் செல்லச் சாரணர் தமக்கு ணர்த்தி
வானவர் தலைவர் சூழ வயப்பரி வீரர் சூழத்
தானமாப் பாகர் சூழத் தடந்திகழ் இரதம் சூழத்
மானவெண் களிற்றில் ஏறி மல்பொரு களத்தில் வந்தான்.

*அசுரனுடன் போர் புரிவதற்குச் செல்லுமாறு வீரர்களுக்கு இந்திரன் உத்திரவிட்டான். குதிரைவீரர்களும் யானை வீரர்களும் சூழப் பெரிய இரதங்களுடன் இந்திரன், வெள்ளை யானையின் மேல்ஏறிப் போர்க்களத்துக்கு வந்தான்.* *94*

படைக்கலம் பதினெட் டான ஆயுதம் படைத்த செங்கை
உடைத்தறு கண்ணர் ஆர்ப்புக் கேட்டெழுந்து ஒன்ன லார்கள்
விடைச்சிலைத் தெழுந்தால் என்ன விதுப்பிளந் தனைய வாயிற்
கடைப்படும் எயிற்றர் மிக்க கோபாக்னி கண்ண காலர்.

*பதினெட்டு வகையான படைக்கலன்களை ஏந்திய வீரர்கள், கோபாவேசத்துடன் குரல் எழுப்பினார்கள். பகைவர் களாகிய அசுரர்கள், காளை கோபித்தெழுந்ததைப் போல வாயோரத்துக் கோரைப் பற்களுடன், சிவந்த கண்களுடன் எதிரில் வந்தார்கள்.* *95*

வன்பட்ட வாட்கை வீரர் மடித்தவாய் உருமுச் சொல்லர்
கொன்பட்ட பகழி வில்லர் கொட்புற்ற பரியின் பாகர்
முன்பட்ட போரில் மூண்டு தேவர்மேல் முனைத்து நின்றார்
மின்பட்ட குலச வேலைத் தகுவன்மேல் இமையோர் வேந்தன்,

*அவர்கள் கையில் வாளுடன் மடித்த வாயுடன் இடி போன்ற சொற்களுடன் கொலைசெய்யும் வேல்களுடன் குதிரைகளின் மேல் வந்தார்கள். போர் மூண்டது. தேவர்கள்*

மேல் அசுரர்கள் போர் தொடுத்தார்கள். மின்னல் போன்ற வச்சிராயுதத்தை விருத்திராசுரனின் மேல் இந்திரன் ஏவினான். 96

விடுத்தனன் அதுபோய் வென்று விருத்திரா சுரன்தன் மெய்யை
வடுப்பட அவன்சி ரத்தை வதைத்திட வருடம் ஒன்றின்
இடைப்படு நாள்கள் முற்றும் இவன்உடல் ஈர்ந்து துண்டம்
படச்செய்து குறைத்த தாகப் பதகனும் மாண்டு போனான்.

வச்சிராயுதம், விருத்திராசுரனின் உடம்பையும் தலையையும் வதைத்தது. ஓராண்டுக்காலம் அவன் உடம்பைத் துளைத்தது. தலையைத் துண்டாக்கியது. விருத்திராசுரன் இறந்தான். 97

## மீண்டும் இந்திரனின் ஆட்சி

விருத்திரன் தன்னை வென்று விண்ணவர் தலைவன் வாகை
தரித்தனன் இமையோ ரெல்லாம் சதமகன் தனைவ ணங்கத்
திருத்தகு தவிசில் எய்திச் சிறந்தினி திருந்தான் தேவர்
வருத்தம்அ தகன்றார் வான லோகத்தில் வந்து சார்ந்தார்.

அசுரனை வென்று, இந்திரன் வாகை சூடினான். தேவர்கள் பிரமனைத் துதித்தார்கள், இந்திரன், அரசு கட்டிலில் ஏறினான். தேவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். வேறு வேறு உலங்களுக்குச் சென்று ஒளித்திருந்த தேவர்களும், தேவர் உலகுக்கு வந்து சேர்ந்தார்கள். 98

மருக்கமழ்ந் தலர்ந்த தாரு மந்தர வனத்தில் மேவும்
தருக்குமால் யானை உச்சி இச்சிர சயிந்த கங்கள்
குருக்கிளர் பதுமம் சங்க நிதியம்மா மணிக்கு லங்கள்
பெருக்குமற் றுளவும் எல்லாம் பெரிதுவந்து உற்ற தன்றே.

மணம்கமழும் மலர்கள் பொருந்திய கற்பகவனமும் மந்தார வனத்திலுள்ள வெள்ளையானையும், மிக உயர்ந்த தாகிய சித்திரத்தூண் மண்டபமும், ஒளி பொருந்திய பதுமநிதி சங்கநிதிகளும், சிந்தாமணிகளும், மற்றுமுள்ள பெருமை பொருந்திய செல்வங்கள் யாவும் இந்திரனை வந்தடைந்தன. 99

அண்ணலார்க் குடையோர்க் குற்ற தடுத்தவர் உறுவார் என்றே,
பண்ணவர் பழமை கூறும் பான்மையத் தன்மை யாதல்
திண்ணமே புனிதன் உற்ற தீவினை அற்றார் தேவர்
விண்ணவன் மகிழ்ச்சி எய்த வியந்தனர் மேலோர் எல்லாம்.

'சிவபெருமானுக்கு அன்புடையவர்கள், பெரிய நலன்களைப் பெறுவார்கள். அவர்களைச் சார்ந்தவர்களும் அந்நலன்களை

அடைவார்கள் என்று, வேதம் அறிந்தவர்கள் தொன்று தொட்டுச் சொல்லி வருகிறார்கள். அப்பொன்மொழி சரியானது தான் என்பதைத் தேவர்கள் தீவினையிலிருந்து விடுபட்ட நிகழ்ச்சி யாலும், இந்திரன் அரசு எய்திய நிகழ்ச்சியாலும் அறிந்துகொண் டோம்' என்று, ஆன்றோர்கள் வியந்து போற்றினார்கள். 100

## இந்திரனைப் பிரமகத்தி பிடித்தது

வாசவன் உற்ற காலை அசுரனை உதைத்த சாயை
நேசமாய்த் தன்னைப் பற்ற நிறம்குன்றிப் புந்தி மாழ்கி,
ஆசுகொண்டு அவலம் உற்றே அந்தர நாடன் விம்மா
மாசுறா நகையா வாடா மம்மரின் உழக்கு மாதோ.

இந்திரன் போர்செய்த பொழுது அசுரனை உதைத் தான்; பின்னர்க் கொன்றான். பிரமவமிசத்தில் வந்த விருத்திராசுரனை உதைத்துக் கொன்ற பாவங்களினால் பிரமகத்தி சாபம் [நிழல்] இந்திரனை மிக நன்றாகப் பற்றியது. இந்திரனின் நிறம் குறையத் தொடங்கியது. புத்தி மழுங்கத் தொடங்கியது; அவன் குற்றங்கள் செய்யத்தொடங்கினான்; அழத்தொடங்கினான்; விம்மினான்; மாசடைந்தான்; தானாக சிரிக்கத் தொடங்கினான். துவண்டுபோனான், மயக்கம் அடையத் தொடங்கினான். 101

இம்மென வாய்ம டிக்கும் இடர்உறும் எங்கும் சோரும்
வம்மென ஓடும் மீளும் மாழ்குறும் சிவதா என்னும்
தும்மிடும் சோரும் வாயைச் சுவைத்திடும் சுழற்றும் கண்ணை
விம்முறும் விழிக்கும் வேர்க்கும் வெடிபட விரட்டும் விள்ளும்.

பிரமகத்தி, பேரொலியை எழுப்பிக்கொண்டும், வாயை மடித்துக்கொண்டும் துன்பம் அடைந்தது; சோர்ந்தது; 'வா' என்றது; ஓடியது; மீண்டும் வந்தது. குழப்பம் வந்து சிவதா என்று கத்தியது; தும்மியது. தொங்கும் நாக்கை உள்ளே மடக்கிச் சுவைத்துக் கண்ணைச் சுழற்றியது; விம்மியது; கண்களை அகலமாக விழித்தது; வேர்த்து நின்றது; வெடியோசைபோலச் சத்தமிட்டு, அனைவரையும் விரட்டியது. 102

இத்தனிச் சாயை செய்யும் இன்னலால் இந்தி ரன்தான்,
வைத்தசோர் வயர்ச்சி யாலே வருந்துற வானோர் எல்லாம்
எய்த்திடும் மனத்தர் ஆகி இவைகழிந் திடவே எண்ணி,
வித்தக வியாழன் முன்பு விளம்பிட வேண்டும் என்று

இப்படி பிரமகத்தி செய்த கொடுமைகளால், இந்திரன் சோர்வடைந்தான். அயர்ச்சியால் வருந்தினான். அதைக்கண்ட தேவர்களெல்லாம் கவலைகொண்ட முகத்துடன், இந்திரனின் துன்பம் தீர்வதற்காக வியாழபகவானிடம் வேண்டிக் கொள்வது என முடிவெடுத்தார்கள். 103

## தேவர்கள் வியாழபகவானை வேண்டுதலும் குருவின் அறிவுரைகளும்

**சென்றவன் அடியில் வீழ்ந்து தேவர்மன் னவனுக் குற்ற**
**துன்றுறும் இனைய துன்பம் சொல்லியே தீரும் வண்ணம்,**
**நன்றருள் புரிவாய் என்ன நாகர்தம் குரவன் கூறும்**
**பொன்றுபா வங்கள் புத்தி பூருவம் அபுத்தி பூர்வம்,**

*தேவர்கள் வியாழ பகவானிடம் சென்றார்கள். அவர் திருவடிகளை வணங்கினார்கள். இந்திரன் அடையும் துன்பங்களைச் சொன்னார்கள். 'அத் துன்பம் தீர, நீங்கள் அருள் செய்ய வேண்டும்' என்று, கேட்டுக்கொண்டனர். அதற்குக் குருபகவான் கீழ்வருமாறு பதில்கூறத் தொடங்கினார்.* 104

**இவைகளால் வந்த பாவம்**
**இயம்புதும் யாவர்க் கேனும்**
**நவைபுரிந் திடுதல் செய்யும்**
**நன்றியைக் கோறல் நல்லோர்க்கு**
**எவை அவம் புரிதல் மூவர்க்கு**
**இடரினால் ஈறு செய்தல்**
**அவைதரும் அத்தி தோடம்**
**ஆகிய பாவம் தன்னில்,**

*பாவங்கள் நம்மை அழிப்பதற்காகத் தோன்றுபவையாகும். புத்தி பல பிறப்புகளாகத் தொடரும். புத்தியின்மை முன்னொரு பிறப்பிலிருந்து தொடர்வது. இவை இரண்டினாலுமே பாவம் வரும். யாருக்காக இருந்தாலும் துன்பங்களைக் கொடுத்தே தீரும். பாவங்களில் சிலவற்றை வரிசைப்படுத்திச் சொல்கிறேன். நன்றி மறந்து வாழ்வது, நல்வர்களுக்குக் கெடுதி செய்வது, தாய், தந்தை, குரு ஆகியவர்களுக்குத் துன்பம் செய்வது மற்றும் அவர்களை வதைப்பது இவையெல்லாம் பிரம்மகத்தி பிடிக்கும் அளவுக்குப் பெரிய பாவங்கள் ஆகும்.* 105

**விரைத்தகொன் றையன்து ரோகம் அன்றியே விளையும் பாவம்**
**தரைக்கணில் அனுப வத்தால் சார்ந்திடும் பரிகா ரத்தால்**
**புரைப்பட நீங்கும் அன்றிப் புல்மரம் புள்வி லங்காய்த்**
**திரைப்படும் துரும்ப தென்னத் திரிந்திடும் செனனம் தோறும்.**

கொன்றை மலர்மாலை அணிந்த சிவபிரானுக்குச் செய்யும் துரோகமே பெரியபாவம். மற்ற எல்லாப் பாவங்களுக்கும் உலகத்தில் பரிகாரம் உண்டு. அவற்றை அனுபவித்து அறிந்துகொள்ளவேண்டும். அப்படிப் பரிகாரம் செய்தாலும், துன்பம் துளையிடுவதிலிருந்து தப்பிக்கலாமே தவிர, பாவம் முற்றிலுமாகவே அழிந்துபோகாது. புல்லாக, மரமாக, பறவையாக, விலங்காக, கடல் அலையில் துரும்பைப்போல, எடுக்கின்ற பிறவிகளெல்லாம் அப்பாவம் தொடரும். 106

விரித்திடில் மிகுதி யாம்வெவ் வினையினால் உழல்மே லோனை
வருத்திய பாவம் நீங்க மரமதாய்ச் செனித்து மண்ணில்
தரித்தவர் இழைப்பு நீங்கச் சாயையாய் இருக்கில் தீரும்
கருத்தனால் உரைத்த நூலில் காட்டிய விதியி னாலும்,

கொடிய வினையினால் இந்திரன் துன்பமடைகிறான். அவனை வருத்தும் பாவம் நீங்குவதற்கு, அவன் மரமாகப் பிறக்கவேண்டும். அதுவும் மண்ணுலகத்தில் பிறக்கவேண்டும். இதுவே விதிகளில் உள்ளதாகும். 107

குரவனால் தீரும் என்று குறித்துவந் திடுவ தாலே
மரமதாய் வரினும் மிக்க மகத்துவம் உளது மண்மேல்
பரமதாய் உறுதி யான புகழ்மையும் பதவிப் பேறும்
வரமதாய் எய்தும் என்று வழங்கினான் மறைவல் லோனே.

குருவினால் பாவத்தை நீக்க முடியும் என்று நீங்கள் என்னிடம் வந்திருக்கிறீர்கள். இந்திரன் மரமாகப் பிறக்க வேண்டுவது விதி என்றாலும், மகத்துவம் உள்ள மரமாக — எல்லாருக்கும் அருள்செய்யும் மரமாக — புகழ்உள்ள மரமாக அவன் பிறக்கவேண்டும் என்று, வியாழபகவான் வரம் கொடுத்தார். 108

பகைத்தவன் தன்னை வெல்லின் பாவங்கள் உளதோ என்று
சகத்திர நயனத் தண்ணல் தன்உல கத்தோர் கேட்ப,
மிகப்படு குரவன் கூறும் மெய்த்தவ விளைவி னாலும்
மகத்தினில் பிறத்த லாலும் அவன்தனை வதைத்த சாயை,

'விரோதியை வெல்வதற்காகக் கொல்வதால் பாவங்கள் சேருமா?' என்று, ஆயிரம் கண்கள் கொண்ட இந்திரனின் உலகத்தவர்களாகிய தேவர்கள், குருபகவானிடம் கேட்டார்கள். மேற்பட்டவனாகிய குருபகவான், விருத்திராசுரன் செய்த உண்மையான தவத்தின் விளைவாலும், அவன் யாகத்தில் பிறந்தவன் என்பதாலும் அவனைக் கொன்றது பாவமே. 109

பொதிகைசூழ் தென்றல் நாட்டில் பொருனைசூழ் புடைசேர்கின்ற
கதிதரும் மருதில் ஒன்றித் தவத்தினைக் கருதிச் செய்யில்
புதியஇப் பாவம் தன்னைப் பூதிநா யகனே தீர்ப்பான்
நிதிதரும் மருதின் மேன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

'பொதிகைநாட்டில் பொருனைநதி சூழ்ந்த ஊரில், மருத மரத்தில் தோன்றித் தவம் செய்தால், இந்திரனின் பாவத்தை இறைவனே தீர்த்துவைப்பார். செல்வவளம் கொடுக்கும் அம்மருத மரத்தின் பெருமையை, யாராலும் முழுமையாகச் சொல்ல முடியாது.' 110

எனஉரைத்து அருத்தி யோடும் இமையவர் வேந்தை நோக்கி,
மனத்தினில் அச்சம் கொள்ளேல் என்றருள் வழங்க லோடும்,
புனிதனுக் குற்ற பாவப் புரையணு அகன்று புந்தி
கனிதரப் போற்றி நின்றான் இன்னமும் கழறும் மாதோ.

என்று, வியாழபகவான் அன்புடன் கூறினார். இமையோர் தலைவனாகிய இந்திரனை நோக்கி, 'மனத்தால் நீ அச்சப் படாதே' என்று அருளுரை பகர்ந்தார். அப்பொழுதே இந்திரன் அடைந்த பாவத்தின் வேகம் குறைந்தது. புத்தி தெளிவடையத் தொடங்கியது. அவன் வியாழபகவானைக் கனிவுடன் போற்றினான். 111

மருதினில் வதிவாய் வேறு மரமதாய் நிற்கில் மற்ற
நிருதர்கள் ஊறு செய்வார் நீசிவ மருதில் ஒன்றிப்
புரிகுவை தவத்தை என்றான் புகன்றிடும் குரவன் தன்னை
மருமலர்ப் பாதம் போற்றி விடைபெற்று வணங்கிச் சென்றான்.

'நீ மருத மரத்தில் மட்டும் இருக்கவேண்டும்; வேறு மரத்தில் இருந்தால், அசுரர்கள் துன்பம் கொடுப்பார்கள். சிவமருது எனப் பெயர்பெற்ற அம்மரத்தில் ஒடுங்கிக் கொண்டு தவம் செய்வாயாக' என்று, வியாழபகவான் சொன்ன வுடன், குருநாதரின் திருவடிகளைத் தொட்டுவணங்கி, இந்திரன் புறப்பட்டான். 112

சகந்தனில் உயர்ந்த தெய்வத் தன்மரு ததன்பால் மெய்யாம்
மகங்களும் பொழிலும் தீர்த்த மகிமையும் பொருந்தும் இந்த
அகந்தனில் உருவம் மாறி அருச்சுன மாகத் தானே
புகன்றிடும் படியாய் நின்றே அரிதவம் புரிய லுற்றான்.

உலகத்தில் உயர்ந்த தெய்வத் தன்மை பொருந்திய மருத மரத்தில், உண்மையாகிய யாகங்களின் மகிமையும், சோலை களின் மகிமையும், தீர்த்தங்களின் மகிமையும் பொருந்தி உள்ளன. அம் மருதமரத்தின் உள்ளே இந்திரன் உருவம் மாறி, அரியதவம் புரியத் தொடங்கினான். 113

# 3. இந்திரன் பழிதீர்ந்த படலம்

விருத்திரன் தன்னை வென்று விண்ணவன் மருதாய் மேவும்
சரித்திரம் உரைத்தோம் அன்னோன் தவத்தினுக் கிரங்கிச்
சாய்ந்தோர்
அருச்சுனத் திடையில் தோன்றி அவன்பழி யதனைப் போக்கிக்
கருத்துறக் காட்சி நல்கிக் கதிதந்த கதையைச் சொல்வாம்.

*'இந்திரன், விருத்திராசுரனை வென்றபின் மருதமரமான கதையைச் சொன்னேன். இந்திரனின் தவத்துக்கு இரங்கி, இறைவன் மருதமரப் பொந்தில் தோன்றி, அவனுடைய கொலைப்பழியைப் போக்கக் காட்சி கொடுத்து — நற்கதி வழங்கிய கதையை இனிச்சொல்வேன் என்றார் சூத முனிவர்.* 1

## முனிவர்களின் வினா

மருதமாய் உருவம் மாறி மகபதி மனம்மெய் வாக்காம்
திரிகர ணங்கள் ஒன்றித் தேசிகன் விதித்த வாறே
அரியவாய் எவர்க்கும் தோற்றாது ஆறையு மடக்கி அங்கண்
தருவினால் சிவத்தை உன்னித் தவத்தினைப் புரிந்த காலை,

*இந்திரன் மருதமரமாக மாறி மனம், சொல், உடம்பு என்னும் திரகரணமும் ஒன்ற, வியாழபகவான் சொன்னபடியே எவர் கண்ணுக்கும் படாமல் ஐம்பொறிகளையும் மனத்தையும் அடக்கிச் சிவத்தையே நினைத்துத் தவத்தைப் புரிந்த போது,* 2

தருவுறை கின்ற தெய்வத் தரணிமன் னவனுக் குற்ற
பிரமதோ டம்தான் நீங்கப் பிருதுவி மீதில் தானே
மரமதாய் எய்தவேண்டும் வழிஎவன் வகுப்பீர் என்னக்
கருதிய முனிவர் கேட்ப முனிவரன் கழறல் உற்றான்.

*கற்பகத்தரு இருக்கின்ற உலகத்தின் அரசனுக்கு ஏற்பட்ட பிரமகத்தி நீங்க மண்ணுலகத்தில் தான் மரமாய்ப் பிறக்க வேண்டும் என்றது ஏன்? என்று, முனிவர்கள் சிந்தனையுடன் ஒரு வினாத்தொடுத்தார்கள். அதற்குச் சூதமுனிவர் விடை சொல்லத் தொடங்கினார்.* 3

## சூதமுனிவரின் விடை

செனனகா லத்துக்கு ஏது திரிவித கரணம் ஆன
மனமொடு வாக்குக் காயம் மூன்றினில் வந்த பாவ
வினையது நினைக்கும் பாவம் விதிதவ றாக நின்று
நனிவரு பாத கம்செய் நீசமாய் நடத்தும் மாதோ.

*பிறப்புக்குக் காரணமானவை திரிகரணங்களில் மனம், சொல், உடம்புகளால் செய்யும் பாவங்கள். அவற்றுள் மனம் நினைக்கும் தவறான விதியினால், பெரிய பாதகச் சிந்தனை வரும். அது நம்மை இழிவு செய்யும்.* 4

வாக்கில் தருபாவம் விளைந்திட மாக்களாகும்
நோக்கில் திகழ்காய மதால்செயும் நோய்க்குப்பாவம்
தூக்கில் தருவாகி உதிக்குமிதில் சொல்மேலோன்
ஆக்கைக் கையினால் அசுரன்தனை அட்டதாலே

*வாக்கினால் செய்யும் பாவம் விலங்காகப் பிறக்கச் செய்யும்; உடம்பால் செய்யும் வனைந்த பாவம் மரமாகப் பிறக்கச் செய்யும்; மேலுலகத்தவனாகிய இந்திரன் அசுரனைக் கொன்றது, உடம்பால் செய்த பாவமாகும்.* 5

விண்ணம் திகழ்தாருவின் நீழலில் மிக்கவேந்தன்
கண்ணம் புவிமீது ககத்தரு வாகிநின்ற
வண்ணம் இவைஎன்று வழுங்கினன் மாதவத்தோன்
நண்ணும் வினைதீர்வது கேட்க நவிற்றுகென்றான்.

*'கற்பகத்தரு உள்ள நாட்டவன் ஆனாலும், இடமகன்ற உலகில்தான் மரமாகப் பிறக்கவேண்டும். [கற்பகமரம் புண்ணிய வடிவமானது; மண்ணுலகமரம் இன்னல் அடைவது, என்றாலும், வினை தீரவே இவன் மரமானான். அந்த வரலாற்றைக் கேட்பீராக' என்றார் சூதமுனிவர்.* 6

## வியாழபகவனின் அறிவுரை

இமையாத நாட்டத் திறையோன் தவம் எய்தமற்றை
இமையோர்கள் வேந்தை இமையோருடன் இந்திராணி
இமையாள் தலங்கள் புவிஏழினும் நேடியெய்தா(து)
இமையா சலத்து இறைதன்னை இதயத்துன்னி.

*இப்படி மருதமரமாய் இந்திரன் தவம்செய்ய, அரசனைக் காணவில்லை என்று, தேவர்களுடன் இந்திராணி கண்இமைக்காமல் ஏழுலகங்களிலும் தேடினாள். அவன் கிடைக்கவில்லை. இமையமலையின் இறைவனை மனத்தில் நினைத்தாள்.* 7

மீண்டுதம் இருக்கை எய்தி விண்ணவர் குரவன் ஆன
மாண்டபீ தகன்முன்பு எய்தி வந்தனை புரிந்தே எங்கள்
ஆண்டவர் இன்றி அந்த காரத்தில் அடைந்த விண்ணும்
சேண்திகழ் பொருளும் யானும் என்றிவை செப்பி நின்று,

தன் இந்திரலோகத்துக்குச் சென்றாள். தேவகுருவாகிய மாட்சிமை உடைய பீதகன் எனப்படும் வியாழபகவானிடம் சென்று வணங்கி, 'எங்கள் அரசன் இல்லாமல் விண்ணுலகமும், வெகுவான செல்வங்களும், யானும் பேரிருளில் சிக்கியுள்ளோம்.' என்று கூறினாள். 8

பணிந்திடும் சசியை நோக்கிப் பகருவான் குரவன் மாதே
அணங்குறேல் மகவான் இங்ஙன் அணைந்திடப் புகல்தும் என்றான்
மணங்கமழ் பொதிகைக் கீழ்சார் மருதினில் தவம்செய்கின்றான்
இணங்கிய தேவ ரோடும் எய்திநீ அவனைக் காண்பாய்.

சசி எனப்படும் இந்திராணியைப் பார்த்து வியாழபகவான், 'பெண்ணே! அச்சப்படாதே. இந்திரன் இங்கு வருவான். அதற்கான வழியைச் சொல்கிறேன்' என்றுகூறி, 'மணம் மிகுந்த பொதிகை மலைக்குக் கிழக்கே புடைமருதில் அவன் தவம் செய்கிறான். தேவர்களுடன் சேர்ந்து நீ அங்கே சென்று, அவனைப் பார்' என்றார். 9

ஏகுதி அமர ரோடும் இறைவளர் மருதின் சீர்த்தி
ஆகிய சிறப்புச் சொல்லில் மிகுதியாம் அதனின் உண்மை
தோகையே சிறிது ரைத்தும் சுவர்க்கநாட் டினிலும் மேலாம்
மேதினிச் சிவலோ கம்தான் வேண்டிய வரங்கள் நல்கும்.

'தேவர்களுடன் புறப்படு. திருப்புடைமருதூரின் சீர்த்தி — சிறப்பு — ஆகியவற்றைச் சொல்லத் தொடங்கினால், மிகுதியாகும். மயில்போன்ற மங்கையே! அதைச் சிறிது சொல்கிறேன். அவ்வூர் சொர்க்கலோகத்தைவிட உயர்ந்தது. அது மண்ணுலகச் சிவலோகம். வேண்டிய எல்லா வரங்களையும் தரும் தலம் அதுவேயாகும்.' 10

திருவளர் கலைமான் ஞானச் செல்வியும் தவம்செய் கின்ற
அருமைய பதிஅ தன்பால் அளவிலார் பேறு பெற்றோர்
பொருநைசூழ்ந் திடுவ தாலே புண்ணியக் காசி யாகும்
தருஎனும் மருதக் காவே சம்புவாய்த் தழைக்கும் தானே.

இலட்சுமியும், சரஸ்வதியும் தவம்செய்கின்ற அருமையான தலம் அது. அங்கு நற்கதி அடைந்தவர்கள் பலர் ஆவர். பொருநை நதி சூழ்ந்து ஓடுவதாலே, அது புண்ணியமிக்க தட்சிணகாசி

எனப்படும். அது தருவாகிய மருதமரம், நாவல்மரமாகத் தழைக்கும் தலம் ஆகும். 11

திவ்வியப் பதியைச் சூழ்ந்த தென்திருக் கங்கை நீரில்
பவ்வியம் இலர்க ளேனும் படிந்திடில் வேண்டும் பேறும்
அவ்வியம் அகற்றி ஞானத் தருள்வழி நடத்தும் மேலும்
நவ்வியம் கடவுள் பாதம் நணுகிடும் நலனும் எய்தும்.

தன்னடக்கம் இல்லாதவர்கள் ஆனாலும், திவ்வியமான அவ்வூரைச்சுற்றி ஓடும் கங்கையில் நீராடவேண்டும். அப்படிச் செய்தால், பல பாக்கியங்கள் கிடைக்கும்; தரித்திரம் நீங்கும்; ஞானம் கிடைக்கும்; அருள்வழி கிடைக்கும்; மானைக் கையிலேந்திய மேலான கடவுளின் திருவடிகளை அடையும் நன்மையும் கிடைக்கும். 12

குய்யத்தில் குய்யம் ஆகும் கோமளை யுடனே வாழும்
மெய்வளர் அதீதம் ஆன புடார்ச்சுன விமலன் தன்னை
எய்தியே பணிகின் றோர்கள் இருமையில் வேண்டும் பேறும்
உய்வகை அருளும் மேலைப் பதவியும் உறுவர் அன்றே.

சத்தியம் வளரும் புடார்ச்சுனத்து விமலன் அதீதம் ஆனவன். அவன் பெண்குறியில் பதித்த ஆண்குறியான இலிங்க வடிவி னன். கோமளவல்லியுடன் வாழ்கிறான். அவனை அடைந்து பணிகின்றவர்கள், இம்மையிலும், மறுமையிலும் வேண்டு கின்ற பேறுகளை அடைவார்கள். கடைத்தேற்றத்திற்கான அருளையும், சொர்க்க பதவியையும் அடைவார்கள். 13

இந்தநன் மகிமை சேர்ந்த மூவகைச் சிறப்பும் எய்தி,
உய்ந்தவர் எண்ணி லாதார் நீயும்அத் தலத்தை உற்றுச்
சுந்தரன் அருளி னாலே சுவர்க்கநா யகனைப் பெற்றே,
இந்திர லோகம் மேவி இனிதுவீற் றிருப்பாய் என்றான்.

இப்படிப்பட்ட நன்மையும் மகிமையும் சேர்ந்ததும், மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்பும் உடையதும் ஆகிய புடைமருதை அடைந்து நற்கதிபெற்றவர்கள் பலர். நீயும் அந்தத்தலத்தை அடைந்து, அழகனாகிய இறைவன் அருளால், தேவர்தலைவனாகிய இந்திரனை அடைந்து, இந்திரலோகத்துக்கு வந்து இனிமையாக இருப்பாயாக' என்று, வியாழபகவான் இந்திராணிக்குக் கூறினார். 14

## இலட்சுமி, சரஸ்வதியிடம் இந்திராணி வேண்டுதல்

என்றதே சிகனைப் போற்றி விடைபெற்றுச் சசிஎன் றோதும்
மன்றலம் குழலாள் மேலை வானவ ருடன்எ ழுந்து
பொன்திகழ் தருவை நீங்கிப் பூவுல கதனில் எய்திக்
குன்றமார் இமயச் சார்பில் குணமுடன் எய்தும் ஏல்வை.

வியாழபகவானின் அறிவுரைகளைக் கேட்ட இந்திராணி, அவரைப் போற்றி விடைபெற்றுக்கொண்டு, தேவர்களுடன் பொன்மயமான கற்பகமரம் உள்ள நாட்டை விட்டு நீங்கி, மண்ணுலகத்திற்கு வந்தாள். குன்றுகள் பல சேர்ந்த இமய மலைப் பக்கத்தில் வரும்போது,

15

கவல்கரந் திடவே அங்ஙன் கமலைவெண் கமலை மேவும்
தவளமா திவர்கள் தம்மைச் சசிஉளத் தெண்ணலோடும்
அவர்கள்அங் கடைந்து மானே அமரரோ டெய்தி இங்ஙன்
சவலம்உற்று ஆற லைந்த தன்மைஏது எனவி னாவ,

இந்திராணியின் மனத்தைக் கவலை கவ்விக்கொண்டிருந்தது. செந்தாமரை, வெண்தாமரைகளில் வீற்றிருக்கும் லட்சுமி சரஸ்வதிகளை மனத்தில் நினைத்தாள். உடனே அவர்கள் இந்திராணியின் எதிரில் வந்து நின்றார்கள். 'மான்போன்ற இந்திராணியே! கவலை தோய்ந்த மனத்துடன் தேவர்களையும் அழைத்துக்கொண்டு சஞ்சாரம் செய்வது எதனால்?' என்று கேட்டார்கள்.

16

நடந்திடும் செய்கை எல்லாம் நவிற்றுவன் தேவ லோக
மடந்தையர்க் கரசி போற்றி மலர்மகள் இருவர் தம்பால்
அடங்கலர்ச் செற்ற பாக சாதனர்க் கடுத்த துன்பும்
இடந்திகழ் குரவன் கூறும் இயற்கையும் இசைத்தாள் பின்னும்,

தேவலோகப் பெண்களின் அரசியாகிய இந்திராணி, அவ்விருவரிடம், 'நடந்ததை எல்லாம் சொல்கிறேன்' என்று கூறி, விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன் பிரமஹத்தியால் துன்பம் அடைந்ததையும், குருவாகிய வியாழபகவான் சொன்ன செய்திகளையும் கூறினாள்.

17

புடைமரு தெய்தி அங்ஙன் புனிதனைக் காண்பான் வேண்டி
நடையுறு தேவ ரோடு நணுகினென் நளினத் தெய்வ
மடநலீர் மூவி சேடம் மன்னிய பதியில் எம்மை
உடையவன் தனையும் காண உதவிசெய் திடுவீர் என்றாள்.

புடைமருதை அடைந்து, அங்கே புனிதனைக் [இறைவனை, இந்திரனைக்] காண்பதற்காக நல்லொழுக்கம் உள்ள தேவர்களுடன் நெருங்கிச் செல்கிறேன். பெண்தெய்வங்களே!

மூன்று விசேடங்களும் நிலைபெற்ற தலத்தில், என்னை உடையவனாகிய இந்திரனைக்காண உதவிசெய்யுங்கள்' என்றாள். 18

## மித்ரயோகி சொன்ன கேதாரகௌரிவிரதம்

சொற்றஅப் படியே மாதர் சுந்தரி யுடன்இங் கெய்தி,
நற்றவ மித்ர யோகி தவம்செயும் நதிஓ ரத்தில்
உற்றவர் தம்மைப் போற்ற உவந்திவர் தம்மை நோக்கி,
அற்றவன் உரைப்பான் இங்ஙன் அவம்செயல் அறையும் என்ன,

சொன்னபடி, இருமாதரும் இந்திராணியுடன் இங்கே வந்தார்கள். நதியோரத்தில் மித்திரயோகி தவம் செய்து கொண்டிருந்தார். அவரைத் துதித்தார்கள். அவரும் மகிழ்ந்தார். பாசம் அற்றவராகிய மித்திரயோகி 'தவம் கலையும்படி துதி செய்தீர்களே, ஏன்?' என்று கேட்டார். 19

அருந்தவா தேவ லோகத் தயிராணி இவள்உன் பாதம்
திருந்தவே தொழஅ ணைந்தாள் என்றிரு மாதர் சொல்லக்
கருந்தடங் கண்ணி உன்றன் கணவன்இங் குற்றான் நீயும்
பெருந்தவம் புரியிற் காண்பாய் பேதைஇத் தீர்த்தம் பேணி,

இலட்சுமியும் சரஸ்வதியும் மித்திரயோகியை நோக்கி, 'அருமையான தவத்தைச் செய்பவரே! இவள் தேவலோகத்து இந்திராணி. உன்னுடைய திருவடியை வணங்க வந்துள்ளாள்' என்று கூறினர். "கருப்பான பெரிய கண்களைக் கொண்ட இந்திராணியே! உன் கணவன் இங்கேதான் இருக்கிறான். நீயும் இங்கே பெரிய தவம் செய்தால், அவனைக் காணலாம்". 20

ஆடியே ஐமுகனை உள்கிப்பூ சனைஆற்றி
அன்பில் தானே
நீடுமா பதிவிரதம் நீபுரிவாய் எனச்செப்ப
நின்ற மாதும்
கூடிஇரு மாதருடன் முனிவனைத்தாழ்ந் தவ்விரதம்
குறித்துச் செய்யப்
பீடுதரும் விதிஉரைக்க வேண்டும்என மற்றதவை
பகரும் மாதோ!

'பேதைப் பெண்ணே! இதோ இந்தத் தீர்த்தத்தைப் போற்றி செய்து, இதில் நீராடி, ஐந்து முகங்களைக் கொண்ட சிவனையே நினைத்துப் பூசனைகள் செய்து, அன்புடன் பெரிய பதிவிரதம் மேற்கொள்வாயாக!' என்று கூறினார். இந்திராணியும் லட்சுமியும் சரஸ்வதியும், 'பதிவிரதம் செய்யப் பெருமையுள்ள விதிகளை எங்களுக்குச் சொல்லவேண்டும்' எனக்

கேட்க, அவ்விதிமுறைகளை, மித்திரயோகி சொல்லத் தொடங்கினார்.

21

கன்னிமதி தனில்அமர பக்கமதில் பதினான்கு
காறும் நோற்கும்
முன்னியநல் விரதம்இவை முதற்பக்கத் தட்டமியே
முதல வாக
மன்னியமூ ஏழ்வைகல் வதனமிவை வருடமதி
நாள்மூன் றொன்றாம்
இன்னபடி யேவகைஇவ் விரதவிதி யால்செய்கை
இசைக்கல் உற்றாம்.

புரட்டாசி மாதம் தேய்பிறை பதினான்கு நாட்களும் நோற்கும் விரதம் இது. முன் பட்சமாகிய வளர்பிறை அஷ்டமி [எட்டாம் நாள்] இதைத் தொடங்கவேண்டும். ஆக இருபத்தொருநாள் விரதமாகும். இதன் முக்கோணத்தில் மேற்கோணச் சந்திரன் முதல்நாள் சந்திரன் மூன்றாம்நாள் சந்திரன் ஆகும். இதுவே வகை. இந்த விரதத்தை மேற்கொள்ளும் முறைகளைச் சொல்கிறேன்.

22

திங்களெனும் கன்னிதனில் சொன்னதிதி முதல்நாளில்
சிறந்த வேழத்[து]
ஐங்கரனைப் பூசித்து வரம்பெற்றுச் சங்கற்பித்து
அனிக்கை எய்திப்
பொங்கழலைப் பூசித்துப் புனிதநூ லோர்க்கியன்ற
புரிந்து மேலோர்
தங்களுடன் ஏகஅச னம்புசித்துச் சிவசரிதை
தன்னைக் கேட்டு,

புரட்டாசி மாதம் வளர்பிறை சப்தமி திதியில் [ஏழாம் நாளில்] விநாயக பூஜை செய்து வரம்பெறவேண்டும். அன்றைக்கே விரதசங்கல்பம் [உறுதிமொழி] அனுக்ஞை [அருள்பெறல்] ஏற்றுக்கொள்ள வேண்டும். அக்கினி வழிபாடு [யாகம்] செய்யவேண்டும். புனிதமான வேதம் பயின்றவர்களுக்கு, இயன்ற அளவு தருமம் செய்யவேண்டும். பெரியவர்களுடன் யாகசேஷம் உண்ண வேண்டும். சிவசரிதை சொல்லச்சொல்லிப் பக்தியுடன் கேட்க வேண்டும்.

23

உமைபதியைத் தகட்டெழுதி உமைலிங்கக் கும்பதா
பனம்முன் னாக
அமையநிறு விப்பூசை ஆகமத்தால் இயற்றிஅம்பொன்
வள்ளம் மீது

குமையுறுபஞ் சானனமும் கோதிலாப் பண்ணியமும்
குளம்பால் அன்னம்
அமையநிவே தனம்அருத்தி அடைக்காயும் அருக்கியமும்
அமைய நல்கி,

சிவசக்கரம் தகட்டில் எழுதி, உமைலிங்கத்தை ஸ்தாபனம் செய்து, கும்பஸ்தாபனமும் செய்து, ஆகம விதிப்படி, பூசைசெய்ய வேண்டும். பொன்கிண்ணத்தில் கெட்டியாகப் பஞ்சகவ்யம் [பசுவின் பால், நெய், தயிர், மூத்திரம், சாணம்] அதையும் பழுதில்லாப் பலகாரங்கள், வெல்லம், பால்சோறு, ஆகியவற்றை நிவேதனம் [உண்ணக்காட்டுதல்] செய்யவேண்டும். பாக்கு வெற்றிலை படைத்து, மந்திரநீர் இறைக்கவேண்டும். 24

சிவனைஉமை யவளைவழி பட்டுக்கன் னிகைநோற்ற
சிறந்த நூலால்
தவமிகுந்த இருபானோர் இழைமுடிந்த சூத்திரநாண்
தழைத்துக் காப்பு
நவமிகவே வலக்கைதனில் புருடருக்கு நாரியருக்
கிடக்கை நாடி
உவமையில ருத்தரித்துத் தருப்பைநுனிப் புல்அருத்தி
உறுக மாதோ!

சிவனையும் உமையையும் வழிபட்டு, விரதமிருப்பவள் நூல் நூற்கவேண்டும். தவமிருந்து இருபத்தொரு முடிச்சுகள் போடவேண்டும். கணவனுக்கு வலக்கையில், மனைவிக்கு இடக்கையில் கட்டி, உவமை சொல்லமுடியாத நாடி இருக்கும் இடத்தில் உத்தரிக்க [கட்டுமுடிச்சுப்போட] வேண்டும். தருப்பை யின் நுனிப்புல்லை, அதில் சேர்த்துக் கட்டவேண்டும். 25

மூவேழென் றுரைத்தநாள் முழுவதும்பால் பழம்பொசிக்கும்
முறைமை ஒன்று
தாவாஇத் தொகைப்பணிய ரந்தினம்ஒன் றாம்இவைகள்
தன்னை நீத்தே,
காவாரும் பலம்பொசிக்க நலமாகும் வேறொன்றைக்
கருதல் ஆகா
ஓவாதே அரன்நாமம் சிந்தித்தே இவ்விரதம்
உஞற்ற வேண்டும்.

இந்த விரதம் இருக்கும் இருபத்தொரு நாள்களும் பழம் மட்டுமே உண்ணவேண்டும். குற்றமற்ற தொகுப்பான நவரத்தி னங்களை அணிந்துகொள்ளக்கூடாது. தோட்டத்துப் பழங்களை மட்டும் புசிப்பது நல்லதாகும். விரதசிந்தனை தவிர்த்து

*வேறு சிந்தனை கூடாது. இடைவிடாமல் சிவன் திருப்பெயரையே உச்சரித்துக்கொண்டு, இவ்விரதம் செய்யவேண்டும்.* 26

விரதமுடி வினும்முன்போல் விளைத்துத்தம் பதிபூசை
விதியின் ஆற்றி
இரதலிங்க பூசனையும் இயற்றிப்பா ரன்மாற்றி
இடுக இந்தப்
பரவுதிரு விரதத்தைப் பார்ப்பதியும் பிருங்கிருடி
பான்மை யாலே
கருதிநா யகன்மேனி அகலாது பெறுதும்எனும்
காப்ப தானாள்.

*விரதமுடிவு நாளிலும் முன்பு சொன்னதைப்போல யாகம், தானம், சிவசரிதம் கேட்டல் முதலியன செய்யவேண்டும். கடைசி நாளில் தம்பதி பூசை [கணவன் மனைவியான ஜோடிக்குப் பூசை] செய்யவேண்டும். புணர்ச்சிலிங்க பூசையும் செய்து, உத்வாசனம் [கலைத்தல்] செய்யவேண்டும். புகழ்பெற்ற இந்த விரதத்தை, உமாதேவியும் செய்துள்ளாள். பிருங்கி முனிவர், உமையம்மைக்கு இவ்விரதம் பற்றிச் சொல்லிக்கொடுத்தார். அதனாலேயே இறைவனின் திருமேனியைவிட்டு நீங்காமல் அவள் இருக்கிறாள்.* 27

கேதாரம் தனில்இந்த வகைஇயற்றிப் பெற்றாள்உன்
கேதம் தீர
ஆதாரம் தரும்இந்த வரியாவி தந்தன்ன
அதிகம் ஆன
மாதானம் தனில்இயற்ற வரும்மிக்க பலன்என்பார்
மாதே இந்தப்
போதாரும் சம்புவனத் திடைஇயற்றிப் புனிதனொடும்
பொலிவாய் என்றான்.

*'உமையம்மை திருக்கேதாரத்தில், இந்த விரதத்தை மேற்கொண்டு பயன்பெற்றாள். உன்மனக்கவலை தீரவும், நல்ல ஆதாரம் பெறவும், நான் சொன்னபடி, கேதாரத்தைக் காட்டிலும் அதிகப்படியான இந்த இடத்தில் விரதமிருந்தால், மிக்கபலன் கிடைக்கும் என்பார்கள். பெண்ணே! மலர்கள் மிகுந்த இந்தச் சம்புவனத்தில் விரதம் இருந்து, புனிதனாகிய உன் கணவனோடு அழகாக வாழ்!' என்றார்.* 28

சுந்தரிநீ இத்தலம்போல் திடம்செய்யும் தலம்யாதோ
சுவர்க்கம் மேவும்
அந்தரரும் வெகுதவத்தால் அணுகுவர்இத் தலத்துண்மை
அறையல் பாற்றோ

முந்தையருந் தவம்இயற்றி முனிவர்களும் வதிகின்றார்
மூன்று பூவில்
இந்தவளங் கிடையாதால் இவ்விலிங்கம் பணிவோர்கள்
இறைஆ வாரே.

*அழகியே! இந்தத் தலம்போலத் திண்மையான பயன் தரும் வேறு தலம் ஏதுமில்லை. சுவர்க்கத்தில் உள்ள மேலோரும் மிக்கதவம் செய்து, அதன் பயனாய் இங்கு வருவார்கள். இத்தலத்தின் சத்தியத்தை முழுதும் சொல்லி முடியாது. முன்பே பெருந்தவம் செய்த முனிவர்களும் இத்தலத்திற்கு வந்து தங்கவேண்டும் என்பதற்காகத் தவம்செய்து, அதன் பயனாக இங்குவந்து வாழ்கிறார்கள். மூன்று உலகங்களிலும் இங்குள்ள வளம் வேறெங்கும் இல்லை. இங்குள்ள இலிங்கத்தைப் பணிந்து வணங்குபவர்கள், தெய்வமாக ஆவார்கள்.* *29*

ஒருநாள்இத் தலம்வசிக்கில் சோடசதா னப்பலனை
உதவும் இந்தப்
பொருனாந திக்கணிலும் படிந்திடுவோர் பவம்போக்கிப்
புனிதம் நல்கும்
திருமாலும் திருமாதும் திசைமுகனும் கலைமாதும்
சிறந்த இந்த
மருதான வனமகலா மகிமைசொல முடியாதால்
மாதே என்றான்.

*மாதே! ஒருநாள் இந்தத் தலத்தில் வசித்தால், பதினாறு வகைத் தானங்கள் செய்தபயன் உண்டாகும். இந்தப் பொருனை நதியில் நீராடினால், பாவம் போகும்; புனிதம் ஏற்படும். திருமாலும், திருமகளும், நான்முகனும், சரஸ்வதியும் சிறந்து வாழும் இந்த மருதவனத்தின் நீங்காத பெருமையை என்னால் முழுவதுமாகச் சொல்லமுடியாது.* *30*

## இந்திராணியின் கோதாரகௌரி விரதம்

இவ்விடத்தில் இவ்விரதம் நின்கவலை ஒழித்தின்பம்
நல்கும் என்று
செவ்வியமா முனிகூறும் திடம்தேர்ந்து சசிவிரதம்
செய்தா ளாக
மைவளரும் கண்டர்தமை வானவர்கள் தனித்தனியே
வணங்க இங்ஙன்
எவ்வம்அற இலிங்கம்தா பித்தினிய பூசனைகள்
இயற்றி னாரே.

'இந்த இடத்தில் இந்த விரதம் செய்தால், உன் மனக் கவலை தீர்ந்து, இன்பம் கிடைக்கும்' என்று, செவ்விய முனிவராகிய மித்திரயோகி சொன்னவற்றின் உறுதிகளை, இந்திராணி நன்கு ஆராய்ந்தாள். கேதாரகௌரி விரதம் இருந்தாள். அவளுடன் வந்த தேவர்களும் குறைவு நீங்கும் படியாகத் தனித்தனியே இலிங்கங்களை வைத்து, இனிய பூசைகள் செய்தார்கள். 31

முனிவர்உரைத் திடும்படியே சசிஇயற்றிப் பூசனையும்
இயற்றிப் பின்னும்
கனிவரும்இவ் விரதமொடு கட்டளைமுற் றிடஅங்ஙன்
கலந்து சேரும்
துனிவகற்றும் கன்னிபதி னான்கன்றி மதிதோறும்
சுதினம் ஆக
மனுமுறையா கம்இயற்ற அரனருளால் ஒருதினத்தில்
வானம் மீதில்,

முனிவர் சொன்னபடியே இந்திராணி, யாவரும் வியக்கும் படி பூசனைகள் செய்தாள். பிறகு கனிந்துவரும் விரதத்துடன் சாஸ்திர முறைப்படி புரட்டாசியில் பதினான்கு நாள்கள் மட்டுமன்றி, கோபத்தை நீக்கிக் கலந்து சேர்கின்ற எல்லா மாதங்களின் எல்லா நாள்களும் நல்ல நாள்கள் ஆகுமாறு யாகம் செய்தாள். 32

## இந்திராணிக்கு இறைவன் அருள்

சத்தம்முழுங் கினதொன்று சசிநீசெய் தவத்தினுக்குத்
தழைந்தோம் என்று
நித்தனார் ஆகாய வாணியால் இந்திரனை
நீசேர்ந் தின்பம்
துய்த்திடுவாய் ஐயுறேல் எனமொழியத் துதித்திறும்பூ
தெய்தி மிக்க
சித்தம்மகிழ்ந் தயிராணி பணிந்தெழுந்து சிவன்அருளே
என்று தேறி,

சிவனருளால் ஒரு நாளில் வானத்தில் ஒரு சத்தம் முழங்கியது, 'இந்திராணி! நீ செய்த தவத்தால் பூரித்தோம்; இந்திரனை நீ சேர்ந்து இன்பம் துய்ப்பாய் ஐயப்படாதே' என்று நித்தியமானவர் ஆகாசவாணி வழியாகச் சொன்னார். இந்திராணி ஆகாச ஒலியைக் கேட்டுத் துதித்துப் பெருமிதம் அடைந்தாள். மிகவும் மனமகிழ்ச்சி அடைந்தாள். பணிந்து எழுந்தாள். 'சிவன்

வான்மொழியால் அரன்அருளிச் செய்தவச னம்கேட்டு
மகிழ்ச்சி எய்தித்
தேன்மொழியால் தோத்திரம்செய் திறைஞ்சினாள் அன்பென்னும்
வலையில் சேரும்
ஆன்உறுகொன் றைக்கடவுள் சசிகாண அருச்சுனத்தில்
உதயம் ஆகித்
தான்அரிய கோடரத்தில் சிவலிங்க வடிவாகத்
தான்கண் டாளே.

வானத்திலிருந்து சிவன் அருளிச்செய்த வசனத்தைக் கேட்டு மகிழ்ந்து, தேன்போன்ற இனிய குரலால் தோத்திரம் பாடி இறைஞ்சினாள். அன்பென்னும் வலையில் சிக்குபவர் சிவன். மானைக் கையிலே ஏந்திய கொன்றைமாலை அணிந்த பெருமான், இந்திராணி காணும்படி, மருதமரத்தில், அருமையான பொந்தில் சிவலிங்க வடிவாகித் தோன்றினார். அச்சிவலிங்கத்தை இந்திராணி கண்டாள். 34

கண்டவுடன் பணிந்தெழுந்து கைதொழுது சிவனைஇங்குக்
காண என்ன
மண்டுதவம் புரிந்தேன்நான் எனமகிழ்ந்து பரவசமாய்த்
துதிகள் வாயால்
விண்டுபுள கிதம்உறவே ஆனந்த மாரிஇரு
விழிகள் சேரப்
பண்டைவினை ஒழிந்தின்பப் பயன்பெற்றேன் புடைமருதப்
பரனே என்று,

கண்டவுடன் பணிந்து எழுந்தாள்; கைகூப்பித் தொழுதாள்; 'நான் சிவனை இங்கே காண்பதற்கு என்ன செறிந்ததவம் செய்தேனோ' எனக்கூறி மகிழ்ந்தாள். வாயால், பரவசமாகத் துதிப் பாடல்கள் பாடினாள்; புளகாங்கிதம் அடைந்தாள். இருகண்களிலும் ஆனந்தக்கண்ணீர் மழைபோலப் பொழிந்தது. 'புடை மருதப் பரம்பொருளே! என் பழைய வினைகள் எல்லாம் ஒழிந்து விட்டன. இன்பப்பயனை அடைந்தேன்' என்றாள். 35

சுந்தரனை வழிபாடு செய்திடவேண் டுவனஎலாம்
துருவி யேற்றி
எந்தையைப்பூ சனைதொடங்கி இறைவிதியி னால்பரவி,
இறைஞ்சித் தேவர்
சிந்தனைக்கும் எட்டாத சிவானந்தப் பேரொளியே
தெளிவார் உள்ளத்(து)
அந்தம்இலா மறைப்பொருளே அகண்டபூ ரணவாழ்வே
அமலா என்று,

*மருதமரப் பொந்தில் வெளிப்பட்ட அழகனை வழிபாடு செய்வதற்கு வேண்டிய பொருள்களைத் திரட்டினாள். தந்தையாகிய இறைவனுக்குப் பூசனை தொடங்கினாள். விதிப்படியே பூசித்தாள். 'தேவர்களின் சிந்தனைக்கும் எட்டாத சிவானந்தப் பேரொளியே! தெளிவான உள்ளத்தில் முடிவின்றி வாழும் வேதப்பொருளே! விரிவான முழுமையான வாழ்வே! மலமற்றவனே!' என்று தோத்திரம் சொல்லி வணங்கினாள்.* 36

## இந்திரனை இறைவன் அழைத்தல்

பணிந்தனள் சிவலிங் கத்தில் நின்றொரு படிவம் கொண்டே
அணிந்தவெள் விடைமேல் ஏறி அந்தரம் அதனில் ஐயன்
இணங்கிய தேவி யோடும் இனிதெழுந் தருளி வானோர்
கணங்கள்மந் தார மாரி பொழிந்திட இயங்கள் ஆர்ப்ப,

*சிவலிங்கத்திலிருந்து ஓர் ஒளிநிழல் எழுந்தது; அந்தரத்துக்குச் சென்றது. இணங்கிய தேவியோடு வெள்ளை விடைமேல் ஏறியது. தேவகணங்கள் மந்தார மலர்களை மலைபோலப் பொழிந்தார்கள். வாத்திய ஒலிகள் ஆரவாரம் செய்தன.* 37

அந்தர மகளிர் ஆட ஆகர முழக்கம் கொண்டே
சுந்தர முனிவர் ஏத்தச் சுயம்பிர காசம் ஆக
இந்திரை காணக் காட்சி இனிதளித் திறைஞ்சி நின்ற
பைந்தொடி அவளை நோக்கி வேண்டுவ பகர்தி என்றான்.

*தேவலோகப் பெண்கள் நடனம் ஆடினார்கள். மிகப்பெரிய ஒலிகள் எழுந்தன. தவமுனிவர்கள் போற்றினார்கள். தனக்கே உரிய பேரொளியுடன் இந்திராணி பார்க்கும்படியாக இறைவன் காட்சி கொடுத்தார். பசிய அணிகள் அணிந்த இந்திராணி துதிசெய்தாள். அவளைப்பார்த்து இறைவன், 'உனக்கு என்னவேண்டும் சொல்' என்றார்.* 38

துதித்துநின் றிதனை வேண்டிச் சுந்தரி புகல்வாள் ஐய
நிதிப்பெரு வளம்உ லாவும் பொன்னகர்க்கு இறையும் நீங்கா
மதிப்பெரு வானோர் தாமும் மலைந்திடச் செயித்தான் வானோர்
பதிக்கொரு பகைவன் யாவும் படைத்தவன் வரத்தி னாலே.

*சுந்தரியாகிய இந்திரை இறைவனைத் துதித்து நின்று, 'ஐயா! நான்முகனின் வரம்பெற்றவன், தேவலோகத்துக்குப் பகைவன் ஆனான். நிதியும் வளமும் நிறைந்த பொன்நகரின் அரசனாகிய இந்திரனும், மதிப்புமிக்க தேவர்களும் போரிட்டு*

தடிந்தனன் அவனை; வானோர் தலைவனும் பிரமச் சாயை
தொடர்ந்திடக் குரவன் கூறும் சொற்படி இந்தக் காவில்
படர்ந்தனன் அந்தப் பாவம் தடிந்துபார்த் தருளி னாலே
திடம்தர வேணும் என்று சுந்தரி செப்பி அங்கண்,

'பகைவனை இந்திரன் கொன்றான். அதனால் பிரமஹத்தி பிடித்தது. தேவகுரு வியாழபகவான் சொன்னபடி இந்தக் கோயிலுக்குவந்தான். அவனின் பாவத்தை அழித்து அருள்செய்து, திண்மையுடன் அவனைத் தரவேண்டும்' என்று, சுந்தரியாகிய இந்திராணி சொன்னாள். 40

வந்தனை புரிந்து தாழ்ந்தென் மனத்துயர் நீங்கும் வண்ணம்
இந்திரன் தன்னை ஈவாய் இறைவனே என்று போற்றச்
சுந்தரிக் கபயம் நல்கித் தும்பையோ டறுகு வேய்ந்த
சந்திர வேணி நாதன் இந்திரன் தன்னைக் கூவா.

'வந்தனை செய்கிறேன்; பணிகிறேன்; மனத்துன்பம் நீங்கும் வண்ணம் இந்திரரை ஈவாய் இறைவனே!' என்று போற்றியவுடன், சிவன் அழகியாகிய இந்திராணிக்கு அபயகரம் காட்டினார். தும்பைப் பூவையும் வெள்ளெருக்கம் பூவையும் அணிந்த பெருமான் — சந்திரனைத் தலையில் கொண்டவருமாகிய சிவன் — இந்திரனை அழைத்தார். 41

ஒப்பருந் தவத்தோன் எங்கோன் உதவிய வசனம் கேட்டு,
மெய்ப்படு விரைவி னொல்லே வெள்ளநீர்ப் பள்ளம் கண்ட
அப்படி ஓடித் தாழ்ந்தே அன்புளம் ததும்ப நின்று,
செப்புறழ் தனத்தி பாகச் செல்வனை விடைமேல் கண்டான்.

எங்கள் தலைவர் — சிவன் அழைத்த குரல் கேட்டு, ஒப்பற்ற தவம் செய்த இந்திரன், சரீரத்துடன் அதிவேகமாக — வெள்ளநீர் பள்ளத்தில் பாய்வதைப்போல, ஓடிவந்து தாழ்ந்து, உள்ளத்தில் அன்புததும்ப நின்றான். செப்புப்போலக் குவிந்த முலைகளை உடைய உமையைப் பக்கத்தில் கொண்ட செல்வனாகிய சிவனை — ரிஷபத்தின் மேலிருந்தவனைத் தரிசித்தான். 42

அப்பணி அரனை வேந்தன் அன்பொரு வடிவம் ஆக
இப்படி தன்னில் கால்அற் றிடுமரம் என்ன வீழ்ந்து,
முப்புரம் செற்றார் தம்மைப் பணிந்தனன் முகம லர்ந்து
வைப்பிலான் கண்ட தொத்து மனம்மெய்வாக் கொன்றி மன்னி,

இந்திரன், கங்கையை அணிந்த சிவனை, அன்பு வடிவமாக — காலைவெட்டிய வாழைமரம் சாய்வது போலத்

தரையில் விழுந்து வணங்கினான். திரிபுரங்களை எரித்த சிவனைப் பார்த்து, முகம் மலர்ந்தான். முன்பு செல்வம் இல்லாதவன் தனக்குத் தன் எதிரில் பெரும் செல்வத்தைக் கண்டால் எப்படி மகிழ்வானோ அப்படி மகிழ்ந்தான்.

## இந்திரன் துதித்தல்

இந்திரன் மனம் மொழி மெய்களால் வணங்கி, நிலையான துதிகளைச் சொன்னான். 43

**வணங்கி அஞ்சலித்து நின்று**
**வாய்புதைத்து 'அமல போற்றி!**
**குணம்கடந்து அருள்மெய் ஞானக்**
**கோலமே போற்றி! மேரு**
**இணங்கிய சிலையாய் போற்றி!**
**இறைவனே போற்றி! ஏல**
**மணம்கமழ் குழலி பாக**
**மணாளனே போற்றி! போற்றி!**

அமல — ஆணவம் கன்மம் மாயை அற்றவனே; கோலமே — அழகே; மேரு இணங்கிய சிலையாய் — திரிபுரம் எரித்த காலத்தில், மேருமலையையே வளைந்த வில்லாகக் கொண்டவரே, ஏலமணம் கமழ் குழலி — ஏலக்காய்த் தைலத்தின் வாசனை வீசும் கூந்தலை உடைய உமை; பாக — இடப்பாகம் கொண்டவரே. 44

**காலனை உதைத்தாய் அன்று**
**கான்முளை தன்னைக் காக்க**
**வேலனைப் பெற்றாய் சூரர்**
**வீறுஅடங் கிடவே வெல்ல**
**ஞாலமது இன்னல் தீரப்**
**புரத்தினை நகைத்துச் செற்றாய்**
**தாலமார் அசுரைக் காய்ந்து**
**தாலம்தற் காத்தாய் போற்றி.**

மார்க்கண்டேயன் என்னும் பிள்ளையைக் காப்பதற்காக யமனைத் திருக்கடவூரில் உதைத்தீர்! சூரர்களின் திமிர் அடங்கு வதற்காக — தேவர்கள் வெல்வதற்காக வேலனை நெற்றிக் கண்ணிலிருந்து பெற்றெடுத்தீர்! உலகம் துன்பத்திலிருந்து நீங்குவதற்காகத் திரிபுரத்தைச் சிரிப்பினாலேயே அழித்தீர்! நாக்குப்பொருந்திய கொடிய மொழிபேசுகின்ற அசுரர்களைக் கோபித்து, உலகத்திற்குத் தற்காப்புச் செய்தீர் — போற்றி! 45

காரணா சரணம் வானோர்
கர்த்தனே சரணம் ; கங்கா
தாரணா சரணம் ; செக்கர்
சடையினில் நிலாஅ ணிந்த
பூரணா சரணம் ; அன்பர்
புண்ணிய சரணம் ; பூண்ட
ஆரணா சரணம் ; வேதத்து
அருச்சன வாண ! என்று

*யாவுக்கும் மூலகாரணமானவரே! சரணம்; தேவர்களுக்குக் கர்த்தாவாக — வாழ்வாதாரமாக இருப்பவரே ! சரணம்; கங்கையைத் தரித்தவரே ! சரணம்; செஞ்சடையில் பிறையை அணிந்த பூரணம் — முழுமையானவரே! சரணம்; அடியவர்கள் செய்யும் புண்ணியம் ஆனவரே! சரணம்; ஆரணம் எனப்படும் வேதத்தை அணியாக அணிந்தவரே ! சரணம்; வேதமாகிய மருதமரத்தில் வாழ்பவரே!* 46

துதித்துநின் றிந்தி ராதி பண்டைநாள் அமுதம் துய்க்கும்
மதித்தொரு கடல்க லக்க வாசுகி மந்தி ரத்தால்
விதித்திடும் போதில் நஞ்சம் அமரர்மேல் வெள்ளம் போலக்
கொதித்திடக் கண்ட விண்ணோர் குலைகுலைந் துனைஅ
டைந்தே,

*என்று, நின்று, புகழ்ந்தான் 'முன்பொரு நாளில் அமுதத்தை உண்பதற்காகப் பாற்கடலில் வாசுகியை நாணாக, மேருமலையை மத்தாக இட்டுக் கடைந்தபோது வெள்ளம்போல விஷம் கொதித்து வந்தது. தேவர்கள், குலை நடுக்கத்துடன் உம்மை அடைந்தார்கள்.* 47

அஞ்சினம் என்றார் அப்போது அபயம்தந்து அவரைக் காத்து
நஞ்சினை உவந்து கண்டத்து அணிந்திட நலம்பொ லிந்து
வஞ்சனைக் கொன்ற பாவம் மாற்றியே யாங்கள் உய்யத்
தஞ்சம்நீ சரணம் என்றான் தருவுறை மகவான் தானே.

*பயமாக இருக்கிறது என்றார்கள். அபயம் தந்து அப்போது அவர்களைக் காத்தீர். நஞ்சினை மகிழ்ச்சியுடன் கண்டத்தில் அடக்கிக்கொண்டீர். அதுபோல வஞ்சகனாகிய விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தை மாற்றி, நன்மையழகுடன் நாங்கள் பிழைக்குமாறு செய்யவேண்டும். உம்மைத் தஞ்சம் அடைந்தோம்' என்று, கற்பகத்தருவுக்கு உரிமையுடைய இந்திரன் வேண்டித் துதித்தான்.* 48

## இறைவன் இந்திரனுக்கு அருள்செய்து, தலப்பெருமை கூறுதல்

எனத்துதித்து இறைஞ்சி நின்ற இந்திரன் இந்தி ராணி
தனைத்திருக் கண்ணால் நோக்கிச் சங்கரன் அருளிச்செய்வான்
வினைத்துயர் தீர்ந்தது இங்ஙன் இத்தல விசேட மான
அனைத்தையும் புகல்வாம் என்றான் அனைத்துமாய் நின்ற
அண்ணல்.

துதித்துப் போற்றிய இந்திரனையும் இந்திராணியையும் கண்ணால் நோக்கிச் சங்கரன் அருளுரை செய்தார். உன் பாவத்துயர் இவ்வாறு தீர்ந்தது. இத்தல விசேடங்கள் எல்லா வற்றையும் சொல்வேன் என்று, எல்லாமுமான தலைவர் கூறினார். *49.*

எண்ணிலாத தோர்கிரேத முதல்யுகம் நான்கும்இவை
அண்ணியதோர் சதுர்யுகம் அவைஇரண்ட்ா யிரம்கொண்டு
நண்ணும்யுகம் நான்முகனுக்கு ஒருநாளாம்; நளினமலர்ப்
புண்ணியனோர் கோடிஅழிந் திடுங்காலம் புவிகேள்வன்,

எண்ணிக்கையற்று யுகங்கள் தோன்றி மறையும். கிருத திரேத துவாபர கலி என்பன நான்கு யுகங்கள். இவை இரண்டாயிரம் முறை வந்தால், பிரமனுக்கு ஒருநாள் கணக்கு. பிரமனுக்கு உரிய நான்கு யுகங்கள் ஒருகோடிமுறை தோன்றி அழிந்தால், திருமாலுக்கு ஒருநாள் கணக்காகும். *50*

தனக்களந்த நாள்ஒன்றாம் அதுநிற்கச் சதுமுகனும்
மனத்தொகையில் அளவுபடா மாயனும்வா னவர்க்கரசாம்
இனத்தொகையில் பத்திலக்கத் தெண்பதினா யிரவர்களும்
வினைத்தொகையால் இவ்விலிங்கம் தனைப்பரவி வேண்டும்வரம்,

பிரமனும், எண்ணிக்கையற்ற திருமாலும், எட்டு லட்சம் இந்திரர்களும் வினை கழிவதற்காக இங்கு வந்து, இந்த இலிங்கத் தைத் துதித்து, வேண்டிய வரங்களைப் பெற்றார்கள். *51*

பெற்றார்கள் நீயும்பூ சனைசெய்து வரம்பெறுவாய்
அற்றதால்இத் தீர்த்ததலம் மூர்த்திஅநா தியதாக
உற்றதால் இவ்விலிங்கம் தனக்குவமை உலகத்தில்
மற்றுவே றில்லைஇந்த வையகத்திற் சிவத்தலந்தான்,

நீயும் பூசித்து வரம் பெறுவாயாக அப்படி இந்தத் தலம் தீர்த்தம் மூர்த்தி ஆகியவை அநாதியாக — தோற்றம் கணிக்க முடியாததாக இருப்பதால், இந்த இலிங்கத்துக்கு நிகர் உலகில் வேறில்லை. *52*

ஆயிரத்தெட்டு எனஉரைப்பர் அவ்விலிங்கத் தரிசனத்தின்
தூயபலன் ஓர்இரவு தரிசிக்கும் துணையாகும்
மாயிருஞா லம்தன்னில் மற்றும்உள தலம்தீர்த்தம்
போயாடி வதிபவர்இப் புனிதநதித் தலந்தன்னில்,

உலகத்தில் சிவத்தலங்கள் ஆயிரத்தெட்டு உள்ளன. ஆயிரத்தெட்டுச் சிவத்தலங்களுக்கும் சென்று தரிசிப்பதால் வரும் தூய பயன், இங்கே ஓர் இரவு தரிசிப்பதால் ஏற்படும். இடம் அகன்ற பெரிய உலகத்தில் உள்ள தலங்களுக்குச் சென்று தீர்த்தமாடி வருபவர் பெறும்பலன்கள்... 53

ஓர்காலம் மூழ்குபலன் ஓர்பொழுது வதிந்தபலன்
தேர்வார்க்குஅப் படிஆகும் யாதென்னில் சித்திபுரம்
பார்மீதில் சிவலோகம் பத்திருநான் கினில்முதலாம்
சீர்சால்இத் தலம்உறைவோர் சீவன்முத்தர் இத்தலத்தில்

இத்தீர்த்தத்தில் ஒருமுறை நீராடினால் — ஒரு பொழுது இத்தலத்தில் தங்கினால் கிடைக்கும். ஆராய்ந்து நம்புபவர்களுக்கே இப்பயன்கள் கிடைக்கும். இது சித்திபுரம்; உலகில் உள்ள சிவலோகம் இதுவே. இருபத்தெட்டு நாள்கள் இத்தலத்தில் இருப்பவர்கள், சீவன் மூத்தர்கள் ஆவார்கள். 54

மரம்முதல மண்வரையும் சிவலிங்க வடிவாம்இத்
தரையில்ஒரு பணிதருமம் ஒன்றனந்த மாய்ப்பொலியும்
விரையார்கற் பகநாட வேதம்நம துருஎன்னும்
மருதிதனின் மகிமைஇனும் மகிழ்ந்துகேள் எனவகுக்கும்.

இந்தத் தலத்தில் உள்ள மரம் முதலாக மண் வரையில் சிவலிங்க வடிவமே ஆகும். இந்தத் தலத்தில் செய்யும் ஒரு தருமம், எண்ணிக்கையில்லாமல் பெருகும். மணம்பொருந்திய கற்பகமரம் உள்ள நாட்டுக்கு அரசனே! வேதம் நம் உருவம் ஆகும். அந்த வேதமே இந்த மருதமரம் ஆகும். இன்னும் சொல்கிறேன் மகிழ்ச்சியுடன் கேள். 55

## இறைவன் மருதமரப் பெருமை கூறுதல்

காரணன் மருதிதன் பரக திக்கிடம்
ஆரணங் கொடுகள் பதனம் அதன்வளர்
ஏர்பெறு சாய்கைதோல் இலைகள் சந்தமா
சீர்பெறு கோடிமந் திரங்கள் சேகெலாம்,

*இந்த மருதமரம், ஜீவன் பரகதிக்கு ஏற இடம் ஆகும். வேத சாயைகளே இதன் கிளைகள் ஆகும். பதனமாக — அழகாக வளர்ந்துள்ள சுள்ளிக்கிளைகள், தோல் இவை வேதத்தின் சந்தஸ்; மரவைரம் சிறப்புப்பொருந்திய கோடி வேத மந்திரங்கள் ஆகும்.* *56*

மந்திரம் புவனம்பூ தத்து வங்கள்காய்
முந்திய தளிரதன் ஓசை முச்சியே
தந்திர உச்சியாம் வேர்கள் சத்தமே
இந்தவாக் குதவிய நிழலிரக்கமே,

*மந்திரம், உலகம், பூதத்துவங்கள் ஆகியவை காய்கள்; அவற்றின் சப்தப் பிரமாணமே தளிர்கள்; வேதாந்த உச்சியே இதன் உச்சி; வேர்கள் வேதாந்த சப்தங்கள்; இதன் நிழல் காருண்யம்.* *57*

புடையது பிரணவம் புனித இத்தரு
விடையினின் தவத்தினால் உன்னை எய்திய
படுபழி அகன்றிடப் பகர்தும் பாவங்கள்
உடைபட நான்குகூ றாக உன்னியே,

*பக்கங்களே பிரணவம்; இந்த மரத்தின்கீழ், உன்னை வந்தடைந்த பழிஅகலும். வழிசொல்கிறேன். அவத்தினால் படுபழி உன்னை அடைந்தது. உன்பாவங்களை நான்கு துண்டுகளாக நினைத்துக்கொண்டு, அவற்றை நான்கு கூறுகளாக உடைக்கிறேன்...* *58*

## இந்திரனின் பழியை உடைத்தல்

மண்மரம் மாதர்நீர் மற்றும் நால்வர்பால்
திண்ணிய புவிக்குவா மரத்தி னில்பிசின்
பண்மொழி யார்தம்மேல் பூப்புப் பாணியில்
தண்நுரை யாகவே சார்க ஏவினார்

*மண், மரம், நீர், ஆகியவற்றுக்கும் பெண்களுக்கும் பகிர்ந்து கொடுக்கிறேன். திண்மையான மண், மாதத்தில் ஒரு நாள் உவாநாள் பெற்று, இரவு முழு இருட்டாகி உன்பாவத்தை ஏற்கும். மரங்களில் பிசின் [கோந்து] தோன்றி, உன்பாவத்தை ஏற்கும். சங்கீதம்போல் பேசும் பெண்கள், மாதம்தோறும் பூப்பு அடைந்து, உன் பாவத்தை ஏற்பர். நீரில் நுரை ஏற்பட்டு, உன் பாவத்தை ஏற்கும் என்று ஏவினார்.* *59*

நால்வரும் இப்பழி நாங்கள் எய்திடும்
சால்பெனில் பெறுபலன் தருக என்றனர்
ஆல்வதங் களுக்கமை நல்வரம் மேலவர்
மேலவன் ஈந்தனன் விதியின் என்பவே.

மண்ணும், மரமும், மகளிரும், நீரும், 'இப்பழியை நாங்கள் ஏற்பது பெருமையே. இதனால் எங்களுக்கு என்ன பயன்?' என்று கேட்க, 'நீங்கள் படும் துயர்களுக்கு ஈடாக மேலான வரங்களைத் தருகிறேன்' என்றார் இறைவன். 60

## பழி ஏற்பவர்களுக்கு வரம்

மாதர்க்குறு கருஉற்பவ வரையும்கண வன்தோள்
நீதத்துறு முறைசேருக நீருக்கிறை வையினால்
சீதத்துட ஊறுக சிதைபட்டிடு மானுக்கு
ஓதப்பல தழைவெய்துக வளிஉற்றிடும் புவிக்கே.

பெண்கள் கரு அடைந்து குழந்தை பிறக்கும் அந்தநாள் வரைக்கும், கணவனைத் தக்க முறையில் புணரலாம். நீர் இறைக்க இறைக்கக் குளிர்ச்சியுடன் ஊறும்; எவ்வளவு வெட்டினாலும், மரம் தழைக்கும்; மண்ணில் எப்பொழுதும் காற்று உலாவும். 61

அதனால்அஃது அமைவுஎய்திட அருள்செய்துபின் அமலன்
சதவேள்விய எனநோக்கி உனைச்சார்ந்திடும் சாயை
நிதம்ஆகிய மருதில்தவம் நீசெய்தத னாலும்
சுதனாம்உனை நோக்கும்செய லாலும்துகள் அற்றே.

இவ்வாறு பழி ஏற்கும் வர்க்கத்திற்குச் சுகம்தரும் வரங்களைச் சிவன் அருளினார். பின்னர் நூறு யாகங்கள் செய்தவனாகிய இந்திரனைப் பார்த்து, 'உன்னைப் பிடித்த பிரமசாயை நித்தியமான மருதில் நீ தவம் செய்ததாலும், அரசனாகிய உன்னை நாம் பார்த்ததாலும் துகள் ஆகியது. 62

நீங்கும்பிர மச்சாயை தனக்கின் னிலைசெய்தோம்
ஓங்கும்வரங் கள்என்றலும் உயர்இந் திரன்வணங்கி,
ஈங்குற்றதோர் தீர்த்தம்தனக் கேஇந்திர மோட்சம்
பாங்குற்றஇந் நகர்இந்திர புரியாகவும் பணிப்பாய்.

உயர்ந்த வரங்கள் தந்தோம்' என்று கூறியவுடன் இந்திரன் சிவனை வணங்கி, "இங்குள்ள தீர்த்தம் இந்திர மோட்ச தீர்த்தம் என்றும், இந்தநகர் இந்திராபுரி என்றும் பெயர் விளங்கும்படியாக உத்தரவிட வேண்டும்." 63

அரனின்பெயர் புனிதேசுவரன் எனவும்மரு திந்திரத்
தருவாகவும் பணிப்பாய்தரை எங்கும்புகழ்ந் தென்றும்
பரவத்திரு அருள்செய்குவை எனச்சாய்ந்தருள் பரமன்
மருவிக்கிரு பையினால்மிக மகிழ்ந்தீந்தனம் என்றான்.

'இங்குள்ள இறைவன் பெயர் புனிதேஸ்வரன் என்றும், மருதமரத்தின் பெயர் இந்திரதரு என்றும் உலகமெங்கும் பரவும் பெயராக அமையத் திருவருள் செய்யவேண்டும்' எனக் கேட்டுக்கொண்டான். கருணை உள்ள பெருமான், 'மகிழ்ச்சியுடன் கொடுத்தோம்' என்றார். 64

தினம்பூசனை செய்யும்பலன் திகழ்சித்திரை விடுவில்
மனம்பூருவத் துடன்போற்றிட வருடப்பலன் நல்கும்
அனம்சூழ்நதி நீராடிஇவ் வரனைப்பணிந் தரசே
கனம்சூழ்குழல் அயிராணி யுடன்காவலர் சூழ,

'சித்திரை விஷுவில் மனப்பூர்வமாக இங்குவந்து போற்றினால், வருஷம் பூராவும் தினமும் பூசித்த பலன் கிடைக்கும். எனவே, அரசனே! அன்னங்கள் சூழும் நதியில் நீராடி, இறைவழிபாடு செய்துகொள். 65

வானோருடன் விசும்பெய்திஅம் மந்தார நிழல்கீழ்
ஏனோர்பணிந்து அரியாசனம் இடமீதிறை கொண்டே,
தானாள்குவை எனவிண்ணவர் தலைவற்கருள் செய்தே,
மேனாடி மறைந்தான்அருள் விடையோன்குறி யிடையே.

அதன்பின் கனமான கூந்தலை உடைய இந்திராணியுடன் உன் காவலாளிகள் புடைசூழத் தேவர்களுடன் விசும்பை அடைந்து, மந்தார நிழலில் மற்றவர்கள் உன்னை வணங்குமாறு அரியாசனத்தில் ஏறித் தேவலோகத்தை ஆள்வாயாக' என்றார் சிவன். மேல் நோக்கி மறைந்தார். குறிக்கு நடுவில் நுழைந்து கொண்டார். 66

துகள்நீங்கிடு மணியேஎனத் தோன்றிச் சுரசிங்கம்
திகழ்வுற்ற சுரச்சாயை துறந்தான் துதிசெய்தான்
அகம்நெக்கிட நதிஆடினன் அமலன்தனை அன்பால்
தகநக்கலர் திருமஞ்சனம் சார்ந்தங்கனி அமுதம்,

தேவர் சிங்கமாகிய இந்திரன் குற்றம் நீங்கிய மணிபோல பிரமசாயை முற்றிலும் நீங்கி, இறைவனைத் துதித்தான்.

## இந்திரன் செய்த சித்திரை விஷு பூசை

*இந்திரன், மனம் நெக்குறுக நதியில் நீராடினான். அன்புடன் இறைவனுக்கு மலர்வழிபாடு, திருமஞ்சனமாட்டு [அபிஷேகம்], கனிகள் அமுதுபடையல், மற்றுமுள்ள உபசாரங்கள் செய்தான்.* 67

மற்றும்உள உபசாரநல் வகைசெய்து வணங்கிப்
பற்றுந்திட வேபூசனை பரிவிற்செய்து பரனைக்
கற்றன்புறும் வகையால்மரு தக்காஉறை கடலே
சொல்தந்தருள் விடையாய்மதிக் கோவேசரண் என்றான்.

*பற்றுடன் பூசனைகளைப் பரிவோடு செய்தான். 'கற்று அன்புறும்வகை செய்பவரே! மருதக்காட்டில் வாழும் அருட் கடலே! நல்லவார்த்தைகளைச் சொல்லும் ரிஷபத்தை உடையவரே! அறிவு வடிவமானவரே! சரணம்' என்று துதித்தான்.* 68

## இந்திரனின் விஷுதுதி

விண்ணவர் தலைவா போற்றி!
　　மித்திரர் பரவ நின்ற
புண்ணிய முதலே போற்றி!
　　புரங்கள் மூன்று எரித்தாய் போற்றி!
'துண்'எனக் கயமா வீழத்
　　தொலைத்துஅதன் தோலை வாங்கித்
திண்ணிய கலையாய்ப் போர்த்த
　　சிவக்கொழுந்து ஈசா போற்றி!

*[மித்திரர் — மித்திரயோகி; முதல் — மூலதனம்; புரங்கள் மூன்று — திரிபுரங்கள்; துண் — துணுக்குற்று; கயமா— யானை; கலை — ஆடை]* 69

விருத்திர பிரம கத்தி
　　எனைவிடுத்து ஏகச் செய்த
அருத்தனே! போற்றி! இந்த
　　அருச்சுனப் புடையில் தோன்றித்
திருத்தமாய் உமையா ளோடும்
　　செங்கண்மால் விடையில் ஏறிக்
கருத்தன்நான் காண வந்து
　　காட்சிதந்து அளித்தாய் போற்றி!

*[ஏக—போகுமாறு; அருத்தன் — பொருள் பொதிந்தவர்; அருச்சுனப்புடை — புடார்ச்சுனம்; திருத்தம் — பிழையற்ற பொருத்தம்; செங்கண்மால் — சிவந்த கண்களை உடைய திருமால்; கருத்தன் — கர்த்தா]* 70

## இந்திரன் தேவர்உலக ஆட்சி ஏற்றது

என்னா இறைஞ்சி மிகமகிழ் வெய்தி இந்திரனும்
இமையோரும் இம்மருதில்வாழ்
மின்னாரும் வேணிதனில் மதிசூடும் நாயகனை
விடைபெற்று விண்ணுலகத்தில்
பொன்னார்வி மானமிசை ஏறிப்பொ லிந்தினிது
பொன்தருவை எய்திஅங்கண்
நன்னாக மேதினிஉ ளார்பரவ முறைசெய்து
பேரின்பம் நண்ணினானே.

*மிக்க மகிழ்ச்சியுடன் இறைவனைப் புகழ்ந்துரைத்து, இந்திரன், இந்திராணி, தேவர்கள் ஆகியோர் புடைமருதில் உள்ள ஒளிக்கும் சடையில் மதிசூடும் நாயகனிடம் விடை பெற்றுக் கொண்டார்கள். தங்கவிமானத்தில் ஏறி, விண்ணுலகுக் குச் சென்று, பொன்மயமான கற்பகமரத்தை அடைந்து, நல்ல நாகர் உலகினரும் போற்றும்படி அரசாட்சி செய்து, இந்திரன் பேரின்பம் எய்தினான்.* 71

அன்றுதொட் டாதி அருச்சுன நாதன்
அருளிய படியந்த விறையோன்
ஒன்றிய மேட விடுத்தொறு மெய்தி
உமையொரு பாகனை வணங்கக்
கொன்றைவைத் தவனும் கோமதி யுடனே
குடிலையாம் மந்திர மோட்சத்[து]
என்றும்அவ் விடைமேல் காட்சிதந் தருள
இருந்தன சராசர மெல்லாம்.

*அன்று முதற்கொண்டு இந்திரன் சித்திரை விஷுவில் இங்குவந்து அருச்சுன இறைவன் சொன்னபடியாக உமையொரு பாகனைப் பூசித்து வணங்குகிறான். கொன்றை சூடிய சிவன், கோமதி அம்மையுடன் பிரணவமந்திர மோட்சம் அளிக்கிறார். அவர் அருளால் இயங்கும் உயிர்களும், இயங்காப் பொருட்களும் மகிழ்கின்றன.* 72

ஆகத் திருவிருத்தம் – 507

# 4. சீதரன் படலம்

விடையவன் அருளி னாலே விண்ணவர் தலைவன் பாவம்
புடைஅருச் சுனத்தில் போக்கி நெறிதந்த புகழ்ஈ தைய
நெடியமாற் கருள்பு ரிந்து நிறைமரு தினில்மற் றோனால்
கடகரி தன்னைக் காத்த கதையினைக் கழறல் உற்றாம்.

'தேவர் தலைவனாகிய இந்திரன் திருப்புடைமருதூரில் விடையவன் அருளால் பாவம் போக்கிக்கொண்டதும், அவனுக்குச் சிவன் வழிகாட்டியதுமாகிய கதையைக் கேட்டீர்கள். நெடிய திருமாலுக்கு அருள்புரிந்ததும், திருமால் கஜேந்திரன் என்னும் யானையைக் காப்பாற்றியதும் ஆகிய கதைகளைச் சொல்லப்போகிறேன்' என்றார் சூத முனிவர். 1

## திருமால் சிவதீட்சை பெற்றது

அம்முனி அருளிச் செய்வான் அருந்தவர்க்கு ஆதி நாளில்
தம்முனோர் சகரர் உய்யப் பகீரதன் தவத்தி னுக்காய்
நம்மைஆ ளுடைய நாதன் நல்கிய தெய்வக் கங்கைச்
சும்மையங் குடிஞை மேவும் துவாரகை மூலந் தன்னில்,

அருமையான தவசிகளுக்குச் சூதமுனி கதை சொல்லத் தொடங்கினார். ஆதிநாளில் நம் முன்னோர்களாகிய சகரர் [கடலைத்தோண்டியவர்கள்] பிழைக்கும்படியாகப் பகீரதன் தவம் செய்தான். நம்மை ஆளும் நாதனாகிய இறைவன், பகீரதன் தவத்துக்கு இரங்கி, மண்ணுலகுக்கு அளித்ததே கங்கைநதி ஆகும். ஒளிபொருந்திய கங்கை பாயும் ஊர்களில் ஒன்று துவாரகையாகும். 2

சுதனந்த மாயன் அங்கோர் லிங்கம்தா பித்துத் தூய்நீர்
சதமலர் சுகந்தம் சாந்தம் சருவினாற் பூசை செய்தான்
விதம்பெறச் சாற்றும் போது கழிக்கநீர் வழிமி திந்த
பதம்தனில் புலிக்கால் பெற்ற பண்ணவ னான மேலோன்,

துவாரகை அரசன் திருமால். அவர் துவாரகையில் ஓர் இலிங்கத்தை ஸ்தாபித்து, தூய்மையான நீர், நூறு மலர்கள், மணப்பொருட்கள், சாந்து முதலிய எல்லாப் பொருள்களும்

கொண்டு பூசித்தார். அவர் அபிஷேகித்த நீர், ஆறுபோல் ஓடியது. புலிக்கால் முனிவர் [வியாக்கிர பாதர்] பெற்ற புதல்வனாகிய உபமன்யு முனிவர், அபிஷேகநீர் ஆறாக ஓடுவதைப் பார்த்தார். 3

கண்டனன் தானும் பூசை செய்திடக் கருதி எய்தித்
தொண்டுசெய் பவரை நோக்கி துவாரகை தனில்தூ யோனை
விண்டுபூ சித்த போது வெள்ளத்தில் வருவ தாகும்
மண்டும்அப் பூவை வாரி வருகெனப் பணித்தான் மன்னோ

திருமாலைப்போலத் தானும் பூசைசெய்ய வேண்டும் என விரும்பினார். தன் சீடர்களிடம், 'துவாரகையில் சிவனை விஷ்ணு பூசை செய்த மலர்கள், அபிஷே நீரின் வெள்ளத்தில் மிதந்து வருகின்றன. செறிவாக வரும் அந்த அருச்சித்த நிருமாலியப்பூக்களை வாரிக்கொண்டு வாருங்கள்' என உத்தரவிட்டார். 4

பணித்தலும் அந்தச் சீடன் பகருவான் பணிந்து நின்று
பிணித்தலில் வியாக்ர பாதப் பெரியமா முனிவன் ஈன்ற
குணத்துப மனிய மேலோய் கொடுவரிற் குற்ற மாகும்
மணித்தலை அரவப் பாயல் மாயன்பூ சித்த மால்யம்

"வியாக்கிர பாதர் என்ற பெரிய முனிவர் ஈன்ற அவருடைய குணம்கொண்ட மேலானவரே! இரத்தினம் தலையில் கொண்ட ஆதிசேடன் என்னும் பாம்பைப் படுக்கையாக உடைய மாயன் பூசித்த நிர்மாலியத்தைக் கொண்டுவந்தால் குற்றமாகும். 5

இந்தநன் மலர்கள் என்றார் இவன்சிவ தீக்கை இன்றி
கந்தநாண் மலரால் பூசை செய்தது களிக்க லாகா
உந்துபூ என்றான் தொண்டர் உதவினான் அதனை மாயோன்
புந்தியால் உணர்ந்து நொந்து முனிவன்பால் போந்தான்
மன்னோ.

திருமால் சிவபூசை செய்யத் தீட்சை பெறவில்லை. ஆனால், வாசனைப் பூக்களால் வழிபாடு செய்கிறார். அதைப்பார்த்து மனம் உந்துவதாய் வியந்து மகிழக் கூடாது" என்று, ஒரு சீடன் சொன்னான். அப்படிச் சொன்னதை, மாயோன் உணர்ந்து வருந்தினார். உபமன்யுவிடம் வந்தார். 6

வந்தனை செய்து நின்று வழுத்தினான் அவனை வந்த
சிந்தையாது எனவி னாவச் சிவகுரு வாகி இப்போது
எந்தைஎற்கு உபதே சம்செய் தருள்என இறைஞ்ச லோடும்
உந்திபூத் தவனுக்கு அன்பாய் உபமனி உபதே சித்தான்.

காசியில் உபமன்யு முனிவரை, மாயன் வந்தனை செய்து போற்றினார். 'வந்தகாரியம் என்ன?' என்று உபமன்யு கேட்டார். 'என்தந்தையே! சிவகுருவாகி இப்போது எனக்கு உபதேசம் செய்தருள்க!' என மாயோன் உபமன்யுவை வேண்டினார். கொப்பூழில் தாமரை பூத்த திருமாலுக்கு, உபமன்யு உபதேசம் செய்தார். 7

பூசனை புரியும் ஆறும் புகன்றனன் புந்தி யார
நேசமோடு உவந்து பெற்று நீலமா மேனி அண்ணல்
தேசிகற் போற்றிப் பின்பு சிந்தையின் ஆர்வத் தாலே
ஆசிலாக் கிரிகை தன்னால் மனுவினால் அரற்பூ சித்து,

சிவபூசை செய்யும் வழிகளையும் சொல்லிக் கொடுத்தார். நீல வண்ணனாகிய மாயன், புத்தியில் அவற்றைப் பதித்துக் கொண்டார். நேசத்துடனும் அன்புடனும் உபமன்யுவை மகிழ்ந்து போற்றினார். மனத்தில் எழுந்த ஆர்வம் காரணமாகக் குற்ற மில்லாக் கிரியைகளுடன், மந்திரங்கள் சொல்லிச் சிவனைப் பூசித்தார். 8

## சிவன், திருமாலுக்கு வரமளித்தல்

வாசமாய்ச் சிலநாள் வைகி மன்னிய கங்கை சூழும்
காசிவிட் டகன்று மாயை கடந்துகா உயர்ந்து சால்பாய்
மாசிலாத் துவரை எய்தி மாயவன் மதுரை தன்னில்
ஈசனைப் பூசித்து ஏத்தி இருநிலம் புரக்கும் நாளில்,

சிலநாள்கள் காசியில் வசித்து — தங்கி கங்கை சூழ்ந்த அவ்வூரை விட்டு நீங்கி, மாயாபுரியைக் கடந்து சிறப்பால் உயர்ந்த குற்றமற்ற துவாரகையை அடைந்தார். வடமதுரையில் சிவனைப் பூசித்து, உலகத்தைக் காத்துவந்தார். 9

கிட்டின தீர்த்தம் தன்னில் கிட்டின மதுரைக் கோயில்
நட்டனை நாள்கள் தோறும் பூசிக்கும் நலத்தி னாலே
இட்டமாய் ஒருநாள் தன்னில் இயற்றுபூ சனைக்கு வந்தே
சுட்டவெண் நீறு பூசும் தோன்றல்முன் தோன்றி னானே.

வடமதுரைக் கோயிலில் நடனமாடும் சிவனைப் பூசித்தார். இதனை நாள்தோறும் செய்தபின், கிருட்டினை நதிக் கரையில் கிருட்டினன் நல்லபடி பூசிப்பதால் ஒருநாள், விருப்பத்துடன் — பெருமிதத்துடன் — மகிழ்ச்சியுடன், அவர் முன்னே, சாணத்தைச் சுட்டதால் வந்த திருநீற்றைப் பூசிய பெருமான் தோன்றினார். 10

பூசனை உவந்த வள்ளல் புவனம்உண் டோனை நோக்கி,
ஆசிலாய் நினக்கு வேண்டும் வரம்எவன் அளிப்ப(து) என்னக்
கேசவன் பணிந்து நிர்த்த தரிசனம் கிடைக்க வேண்டும்
மாசுடல் தோற்றம் நீங்கி வரதநிற் பணிய வேண்டும்.

*ஏழுலகையும் உண்ட மாயவன் செய்த பூசைக்கு உவப்படைந்த வள்ளல், அவரை நோக்கி, 'குற்றமற்றவனே! உனக்கு வேண்டியவரத்தில் எதைநான் அளிக்கவேண்டும்?' என்று கேட்டார். கேசவன் பணிவுடன், 'வரம் தருபவனே! உன் திருநடனக் காட்சி எனக்குக் கிடைக்கவேண்டும் ; உடல்மாசு நீங்கி, உன்னைப் பணியவேண்டும்' என்றார்.* 11

என்னவே வேண்டும் மாயோற் கிறையவன் அருளிச் செய்வான்
முன்னிய பெறுதி நம்பால் முதன்மையாம் தொண்டன் நீயே
மன்னிநாம் வதியும் தென்பால் மருதினில் வருதி மற்றைத்
தென்னிலப் பொதியச் சார்பில் தென்கயி லாயம் ஆகும்.

*அதைக் கேட்ட சிவன், 'நீ நினைத்தவற்றைப் பெறுவாய்; எனக்கு முதல்அடியவன் நீயே. நான் தென்திசையில் திருப்புடைமருதூரில் நிலையாக வாழ்கிறேன். தென்னாட்டில் பொதிகை மலைப் பக்கத்தில் உள்ள அத்தலமே தென்கயிலாயம் ஆகும்.* 12

அன்னகர் சீவன் முத்தி தரும்அலால் அதனில் மாய்வோர்
பொன்னடி எய்தத் தார கப்பொருள் உபதே சிப்போம்
தன்னிகர் சாரூ பத்தை எய்திச்சா யுச்யம் செய்வார்
மன்னிய செனனம் நீங்கும் வந்தவண் வதிகு வோர்க்கே.

*அந்த நகரம் ஜீவன் முத்திதரும் நகரமாகும். அதுமட்டுமல்லாமல், அத்தலத்தில் இறப்பவர்களுக்கு நம் பொன்போன்ற திருவடியை அடையும்படியாகத் தாரகப்பொருளை உபதேசம் செய்வோம். எமக்கு நிகராக எம் உருவத்தை அடைந்து, சாயுச்யம் என்னும் உயர்நிலை முத்தியை அடைவார்கள். அங்கு வந்து தங்குபவர்களுக்கு, நிலைபெற்ற பிறப்பு நீங்கும்.* 13

ஆதலால் சிரீத ராநீ அவ்விடத் தெய்தில் உன்தன்
காதலின் படியே நிர்த்தக் காட்சிதந் தருள்வோம் என்று,
வேதஆ கமங்கட் கெட்டா மெய்ப்பொருள் ஆகி நின்ற
சோதிஈ துணர்த்தி மாயோற் கின்னமும் சொல்லும் மாதோ!

*சிரீதரா! நீ அவ்விடத்திற்கு வந்தால், உன் ஆசைப்படியே நடனக்காட்சி தருவோம்" என்று, வேத ஆகமங்களுக்கு எட்டாத சத்தியம் ஆகிய ஜோதி—சிவன் சொன்னதுடன் மாயவனுக்கு மேலும் சில செய்திகளைக் கூறினார்.* 14

வெண்ணாவல் உவந்து வாழும் மிக்கநந் தனத்தில் எய்தி,
கண்ணால்நற் காட்சி கண்டு களிப்புடன் கவுரி யான
பெண்ணாவ லுடனே சேரும் பெரியநம் குறியைப் பேணித்
தண்ணார்பூங் கமலச் செல்வி தன்னுடன் சாரும் நாளில்,

*வெண்ணாவல் மரத்தின்கீழ் நான் மகிழ்ந்து வாழும் தலத்தில் என்னைத் தரிசித்துப் பின் கவுரி என்னும் பெண் [உமை], மிக்க ஆவலுடன் சேரும் பெரிய என் குறியை வணங்கி, குளிர்ந்த கமலப்பெண்ணுடன் நீ செல்லும் போது,* 15

ஆனைஒன் றெழிந்து வந்தே அறலினை அணையும் அங்ஙன்
மீனுலாம் கயத்தில் வாழும் வெங்கராம் ஓடி வந்து,
தானம தொழுகும் வேழம் தனைப்பிடித் திடஅத் தந்தி
ஊனம்அ தெய்தா ஆதி மூலம்என் றோலம் செய்யும்,

*மீன்கள் உலாவும் நீர்நிலையில் யானை ஒன்று, அறல் மணல் இருக்கும் துறையில் இறங்கும். கொடிய முதலை ஒன்று, மதநீர் ஒழுகும் யானையைப் பிடிக்கும். அந்த யானையின் கால் அழியும் நிலையில், 'ஆதிமூலமே' என்று ஓலமிடும்.* 16

அப்பொழு ததனைக் காக்க அருள்உனக் களிப்போம் என்று,
செப்பியே மறைந்தான் எங்கோன் திருவளர் மார்பன் அந்தம்
ஒப்பிலா மருதம் எய்தி உடையநா யகனைப் போற்றித்
துப்புறழ் சடையோன் தன்னைத் தோத்திரம் செய்கின் றானால்

*அப்பொழுது அதனைக்காக்க உனக்கு அருள்வோம்' என்று கூறி, இறைவன் மறைந்தார். திருமகள் தங்கியுள்ள மார்பைக் கொண்ட மாயன், ஒப்பில்லாத திருப்புடைமருதூரை அடைந்து, பவளம் போன்ற சடையைக்கொண்ட சிவனைத் தோத்திரம் செய்தார்.* 17

## திருமாலின்துதி

புடைமருது அரனே போற்றி!
புண்ணியப் பொருளே போற்றி!
விடைஉயர்த் தவனே போற்றி!
விண்ணவர் தலைவா போற்றி!
மடல்அவிழ் கொன்றை வேய்ந்த
மதிச்சடை முடியாய் போற்றி!
கடல்விடம் உண்ட நாதா
காரணா போற்றி! போற்றி!

*[அரன் — சிவன்; விடை — காளை; விடை உயர்த்தவர் ரிஷபக் கொடியை உயர்த்தியவர்; விண்ணவர் — தேவர்; மடல் — ஏடு; வேய்ந்த — சூடிய; முடியாய் — முடியை உடையவரே; விடம் — நஞ்சு; நாதா — தலைவரே; காரணா —யாவுக்கும் மூலகாரணம் ஆனவரே.]* 18

இப்படித் துதிப்ப முன்நாள் அருளிய படியே எங்கோன்
முப்படி பரவும் தெய்வ முத்திஅம் பலத்தில் தானே
மைப்படி உருவன் காண வழங்கினன் நடன சேவை
கைப்படி கனிபோல் கண்டு கருணையங் கடலில் ஆழ்ந்தான்.

*மாயோன் இப்படித் துதித்தவுடன், மூன்று உலகங்களும், பரவும் தெய்வத்தன்மை வாய்ந்த முத்தி அம்பலத்தில், கருநிற, மாயன் காணுமாறு நடனக்காட்சி தந்தார். கையில் உள்ள கனியைத் தெளிவாகக் காணுவதுபோலக் கண்டு, கருணைக் கடலில் ஆழ்ந்தார்.* 19

துண்டவெண் பிறையும் பாம்பும்
தும்பையும் தொண்டர் சாத்தும்
இண்டையும் கங்கை யாறும்
இதழியும் இணங்கச் சூடி,
அண்டம்மூ தண்டம் ஆட
ஆடிய அழகா போற்றி!
கொண்டலை நிகர்த்த கூந்தல்
கோமளை பாகா போற்றி!

*[துண்ட — கீற்றுப்போன்ற ; இண்டை —தலைமாலை; இதழி — கொன்றை; இணங்க — பொருத்தமாக; அண்டம் — உலக உருண்டை; மூதண்டம் — பழைய பிற உலகுகள்; கொண்டல் — மேகம்; நிகர்த்த — ஒத்த [அதாவது, கரிய]; பாகா — இடப்பாகம் கொண்டவரே]* 20

அண்டர்நா யகனே போற்றி எனப்பணிந்து அகிலம் உண்ட
விண்டுமெய் புளகம் உற்றே மெய்ம்மயிர் சிலிர்ப்ப வேர்வை
கொண்டுநாத் தழுத ழுப்பக் குழைந்துகை குவித்து நாதன்
புண்டரி கத்தாள் போற்றி போர்விடைப் பாகா என்றே,

*உலகத்தை உண்ட திருமால், 'தேவர் தலைவனே போற்றி' என்று கூறிப் பணிந்தார். புளகாங்கிதம் அடைந்து, மயிர்க்கூச்செறிந்து, வியர்த்து, நாக்குத் தழுதழுத்து, குழைந்து, கைகுவித்து, இறைவனின் தாமரைத் திருவடிகளைப்போற்றி,*

துதித்தடி பணிந்து போற்றிச் சுந்தரன் தனைப்பூ சிக்க
நதிப்புனல் சாந்தம் வில்வம் நறுமலர் கனிவர்க் கம்பால்
மதுத்ததி வருக்கம் ஆதி வகைவகை இயற்றி மல்க
விதிப்படி அமைத்துப் போற்றி வீற்றினிது இருக்கும் வேளை,

என்று துதித்தார்; பணிந்தார்; போற்றினார்; இறைவனுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்வதற்காக, நதிநீர், சந்தனம், வில்வம், மணமுள்ள மலர்கள், பழவர்க்கங்கள், பால், தேன், தயிர்வகை முதலியவற்றை வகைவகையாகச் சேகரித்து, அவைபெருக, அவற்றை வரிசைப்படி எடுத்து வைத்துக் கொண்டு, சரிபார்த்துப் பூசைக்கு அமர்ந்தார். அப்பொழுது... 22
என்று சூதமுனிவர் கூறும்போது...

தடம்அதில் முதலை வந்த தன்மையும் தந்தி அந்த
மடுவினில் வந்த வாறும் வன்கராம் பிடிக்கக் கூவும்
கடகரிக் களித்த வாறும் இடங்கரைக் காய்ந்த வாறும்
நெடியமால் நின்ற வாறும் நிகழ்த்தென முனிநி கழ்த்தும்.

முனிவர்கள் சூத முனிவனைப்பார்த்து, 'நீர்நிலையில் முதலை எப்படி வந்தது? யானை அங்கே ஏன் வந்தது? முதலை கவ்வியதும் யானை கத்த, மதநீர்க்கும் யானையைத் திருமால் எப்படிக் காப்பாற்றினார்? முதலையை எப்படிக் கொன்றார்? என்ற விவரங்களைச் சொல்லுங்கள்!' என்று, வேண்டினார்கள். சூதமுனிவர், அவ்விவரங்களைச் சொல்லத் 23
தொடங்கினார்.

பூதநா யகனை நித்தம் பூசித்துப் புடவி பூத்த
வேதன்தன் உலகும் வெள்ளி வெற்பும்விண் ணவர்கள் வாழும்
பீதமார் உலகும் வைகுண் டப்பெரு நகரும் எல்லாம்
ஈதெனக் கண்டு மாயோன் இன்புற இருக்கும் ஏல்வை,

திருநீற்று நாயகனாகிய சிவனை, மாயவன் தினமும் பூசித்து, உலகம், பூத்த வேதாவின் பிரம்மலோகம், சிவனின் கயிலாயம், தேவர்கள் வாழும் பொன்னுலகம், ஸ்ரீவைகுண்டப் பெருநகர் ஆகிய எல்லாமும், திருப்புடைமருதூரே என அறிந்து 24
இன்பமடைந்திருந்தார்.

## வாமதேவன் கதை

தேவுல கினில்வாழ் வாம தேவமா முனிவன் என்போன்
மாவலி இடத்தில் வந்து மூஅடி மண்இ ரந்த

காவலன் பாதம் சேரக் கருதியே காசி என்னும்
தாவிலா வளங்கொள் மூதூர் தன்னிடத் தெய்தி அங்ஙன்

தேவர்உலகில் வாழும் வாமதேவ முனிவர், மாவலி இடத்தில் மூன்றடி மண்ணை யாசித்து அவன் அகங்காரம் அடங்கிய வராகிய திருமாலின் திருவடிகளை அடையக் கருதினார். அதற்காகக் குற்றமற்ற வளங்களை உடைய பழைமையான ஊராகிய காசிக்குச் சென்றார். 25

திரிபத கையினில் மேவித் திசைமுகன் தன்னை நோக்கி,
வரம்அளித் திடுவாய் என்று தவம்செய மலரோன் தோன்றிப்
பரவிய முனியை நோக்கிப் பலபகல் தவம்செய் கின்றாய்;
பெரிதுநாம் உவந்தோம் வேண்டும் வரம்எவன் பேசு கென்றான்.

திரிவேணியில் தங்கி, நான்முகனை நினைத்து, வரம் வேண்டித் தவம் செய்தார். மலரவன் வெளிப்பட்டார். வாமதேவன் நான்முகனை வணங்கினார். 'நெடுங்காலம் தவம் செய்கிறாய்; நான் மிகவும் மகிழ்ந்தேன்; வேண்டிய வரத்தைக் கேள்' என்றார் நான்முகன். 26

மாமுனி வாம தேவன் மாயவன் மலர்த்தாள் சேரப்
பூமனே அருள வேண்டும் எனஅவன் புகலும் போதில்,
தாமரைக் கிழவன் சாற்றும் தக்கண காசி என்னும்
மாமதி தவழும் சோலை ஆம்பிர வனத்தில் வந்து,

'பிரமதேவனே! நான் திருமாலின் திருவடிகளைச் சேர்வதற்கு நீதான் அருள்செய்ய வேண்டும்' என்று, பெரிய முனிவராகிய வாமதேவன் வரம் கேட்டார். பிரமன் அதற்கு வழிசொன்னார். 'தட்சிணகாசிக்குச் செல்; ஆங்கே ஆம்பிர [புளிமர] வனம்' உள்ளது'. 27

தென்திசைக் கங்கை ஆடித் திகழ்புடை மருதில் எய்திக்
கொன்றைவே ணியனைப் போற்றிக் கோதிலாத் தவம்செய் என்ன,
மன்றலார் வனச வேதா வாய்மலர்ந் தருளிப் போனான்;
நன்றெனத் தாரு நாட்டு நல்தவ முனிவன் தானே.

'தென்திசைக் கங்கையில் [பொருனையில்] நீராடு. திருப்புடைமருதில், கொன்றையணிந்தவனைப் போற்று. குற்றம் இல்லாத தவம்செய்' என்று, மணம்பொருந்திய தாமரை மலரில் தங்கிய வேதா சொன்னார். 'நன்று' என்றார், கற்பக நாட்டைச் சார்ந்த நல்ல தவமுனிவர். 28

ஆம்பிர வனத்தில் எய்தி அனத்தினான் உரைத்த வாறே,
தாம்பிர வன்னி ஆடிச் சாய்ந்தநா யகனைப் போற்றி,
மாம்பல நறுந்தேன் ஊறும் கரையில்வன் மீகத் துள்ளே
பாம்பணைத் துயிலும் மாயன் பதம்பெற இருந்து நோற்றான்.

ஆம்பிரவனத்தை அடைந்தார். அன்னவாகனத்துப் பிரமன் சொன்னபடியே, தாமிர பரணியில் குளித்து, சாய்ந்த நாயகரை — புடைமருதீசனைப் போற்றி, மாம்பழச்சாறு கலந்தோடும் நதியின் கரையில் தவமிருந்தார். பாம்பணையான் — திருமால் பதம்பெறத் தொடர்ந்து தவம் செய்ததால், அவரைச் சுற்றிப் புற்றுக்கட்டியது. 29

ஒப்பிலான் தவம்செய் காலை உற்றகந் தருவர் தம்மில்
செப்பிலா ஊவன் என்போன் திருநதி ஆட வந்து,
விப்பிரன் தவம்செய் புற்றில் ஏறியே விளையாட் டெய்தி,
அப்பினில் குதித்து மீண்டும் அப்படி யாவூ வன்தான்.

ஒப்பற்றவராகிய வாமதேவன், புற்றில் தவம் செய்யும்போது, கந்தர்வலோகத்தைச் சார்ந்த ஊவன் என்பவன், திருநதியில் [பொருனையில்] குளிக்க வந்தான். அந்தணனாகிய வாமதேவன், தவம் செய்யும் புற்றின்மேல் ஏறினான். குதித்துத் தண்ணீரில் விழுந்து விளையாடினான். மீண்டும் அப்படியே செய்தான். 30

ஆடிடப் பதநீர் சிந்தி அருந்தவன் சிரசில் வீழச்
சாடினான் தன்னை நோக்கித் தவத்தினுக்கு ஊறு செய்த
கேடனே எனமொ ழிந்தான் கேதுறு முதலை யாய்நீர்
நாடியே கிடப்பாய் என்று கோபத்தால் யோக நாதன்,

இரண்டாம் முறை புற்றில் ஏறியபோது, அவன் உடலில் இருந்த நீர், புற்றுக்குள் இருந்த வாமதேவன்மேல் விழுந்தது. வாமதேவன் கோபம் கொண்டு பேசினார். 'என் தவத்திற்கு இடையூறு செய்த கேடனே! வெறிநோய் பிடித்த முதலையாக நீ நீரிலேயே கிடப்பாய்!' என்று, யோகத்தில் வல்ல வாமதேவன் சாபமிட்டார். 31

சவித்தலும், அறிவு குன்றி இடங்கராய்ச் சார்ந்தான் பின்பு
பவித்திர வாம தேவன் தவத்தினுக்கு இரங்கிப் பார்மேல்
அவித்தன்பா சத்தன் காணத் தோன்றினான் அவனிஉண்டோன்
குவித்தகை முனியை நோக்கி வேட்கையாது என்று கூற,

வாமதேவன் சாபமிட்டவுடன், ஊவன் அறிவு குறைந்து முதலை ஆனான். பவித்திரம் மிக்க வாமதேவனின் தவத்தை மெச்சி, உலகத்தின்மேல் மாமோகம் கொண்ட — பாசம் கொண்ட அவர் பார்க்கும்படியாக, உலகத்தை உண்ட மாயன் தோன்றினார். வாமதேவன் வணங்கினார்; 'உன் வேட்கை என்ன?' என மாயன் கேட்டார். 32

நின்பதம் அடைய வேண்டும் என்றனன் நெடியோன் இந்த
இன்பமூன் றீசன் பாகத் திருக்கின்றோம் இவண்தாழ் சோதி
அன்பனே என்று நல்கி வைகுந்தம் அடைந்தான்; தேவன்
பொன்பதி முனிவன் தானும் பொற்பதம் பொருந்தி னானே.

'உன்திருவடிகளை அடையவேண்டும்' என்றார். நெடியவராகிய திருமால் 'அன்பனே! இங்கே உள்ள இன்பமான மூன்றீசனில் நாமும் இருக்கிறோம்; இங்கே வணங்கு; சோதித்துப் பார்' என்று கூறிக் கேட்டவரம் அளித்து, வைகுந்தம் அடைந்தார். தேவரும் பொன் நாட்டவருமாகிய முனிவர், மூன்றீசனை வணங்கிப் பின் திருமால் திருவடி அடைந்தார். 33

## சும்மராசன் கதை

அந்தரன் முனிவன் பெற்றிக் கதைஇது ஆகூழ் என்றான்
வந்தொரு முதலை யான வண்ணமும் சொன்னோம் வண்மை
இந்திர சும்ம ராசன் இபராசன் ஆகி ஆம்ப்ரச்
சந்தமார் காவில் வந்து சாபம்நீங் கியதும் சொல்வாம்.

அந்தரலோகத்து முனிவர் பேறுபெற்ற நல்வினையால் நிகழ்ந்த கதை கேட்டீர்கள். ஊவன் முதலையானது எப்படி என்றும், அதே கதையில் சொன்னேன். வலிமை பொருந்திய அரசன் சும்மராசன் என்பவன். அவன் கஜராசன் ஆகி, ஆம்பிரவனமாகிய இந்த ஒலிபொருந்திய காட்டிற்கு வந்து, சாபம் நீங்கிய கதையைச் சொல்வேன். 34

இந்திரை வாழும் மார்பன் இருநிலத் ததிர்ஒன் றில்லான்
இந்தி,ர வியைநேர் கண்ணான் எழில்சிட்டர் துட்டர் தம்பால்
இந்திரன் முடித கர்த்த இறையவன் வங்கி சேசன்
இந்திர சும்மன் என்போன் இப்புவி புரக்கும் ஏந்தல்,

இந்திராணி [பட்டத்தரசி] சாய்ந்துகொள்ளும் மார்பை உடையவன்; இப்பெரிய உலகில் தனக்கென்று எதிரியே இல்லாதவன்; சந்திரசூரியர்களைப் போன்ற கண்ணை உடையவன்; எழில் சிட்டர் துட்டர் தம்பால், இந்திரனின் முடியைத் தகர்த்து வென்றவன்; வங்கி சேகரன், இந்திரசும்மன் என்னும் பெயர்களைக் கொண்டவன். இவன் இந்த உலகத்தை நன்கு காப்பாற்றும் தலைமைக்குணம் உள்ளவன் ஆவான். 35

மனுமுறை நடத்தும் செங்கோல் வழுதிமன் னுயிரை எல்லாம்
தனதுயிர் போலக் காக்கும் தன்மையான் தரும சீலன்;
பனுவலின் துறைகள் ஆய்ந்தோன்; பருவத்தின் மழைநேர்
கையான்;
இனியன்யா வர்க்கும் சாலி மணிப்படை எய்தும் வேந்தன்.

மனுநீதிப்படியாக நீதி ஆட்சி செய்த பாண்டியனாகிய இவன், உலகத்து உயிர்களை எல்லாம் தன்னுயிரைப்போலவே கருதிக்காப்பாற்றும் குணம் உள்ளவன்; தரும ஒழுக்கமும் உள்ளவன்; இலக்கிய நூல்களை நன்கு கற்று ஆராய்ந்தவன்; பருவகாலத்து மழையைப் போன்ற கொடைக்கரங்களைக் கொண்டவன்; எல்லாருக்கும் இனியவன்; என்றாலும், சாலினி கரணம் [நிந்தை] உள்ள அரசனாவான். 36

செவ்விய னேனும் நூலோர் சிவன்அன்பர் தம்மைப் போற்றான்
பைவளர் அரவப் பாயர் பரனைப்பூ சிப்பான் ஆக
எவ்வெவர் வருகி லேனும் பூசனை அமைய என்றே,
அவ்வவர் தமக்கு ரைத்தே அமைவுறு முகமன் மற்றும்,

அதெப்படியென்றால், அவன் செவ்வியல்புகள் கொண்டிருந்தும், நூலாராகிய அந்தணர்களையும், சிவனடியார்களையும் பாராட்டமாட்டான்; படம்விரியும் பாம்பைப் படுக்கையாகக் கொண்ட பரந்தாமனைப் பூசிப்பான். திருமால் பூசை செய்யும் போது, எப்படிப்பட்டவர்கள் வந்தாலும், அரவர்களுக்கு முகமன்கூறி, 'பூசை நன்கு நடக்கவேண்டும் என்பதற்காக நாங்களே உங்களுக்கு உபசார வார்த்தைகள் சொல்கிறோம். என்று கூறுங்கள்; என்னைக் கூப்பிடாதீர்கள்' என மந்திரி மார்களிடம் அவன் உத்தரவிட்டிருந்தான். 37

வேண்டிய செய்கை யாவும் விசாரித்து விடுமின் என்ன,
ஈண்டுமந் திரர்கட் கோதி இச்சையில் இருப்பான் தன்னைத்
தூண்டிமன் செயலை நாடிக் குறுமுனி சோதிப் பான்போல்,
ஆண்டுவந் தனன்வ ணங்கி ஆசனம் ஈந்த மைச்சர்,

வருபவர்கள் ஏதேனும் கோரிக்கை வைத்தால் என் உத்தரவுக்காக என் பூசைக்கு இடையூறு செய்யக்கூடாது; வேண்டியதை எல்லாம் நீங்களே விசாரித்துச் செய்து அனுப்புங்கள் என்றும் உத்தரவிட்டிருந்தான். அப்படி உத்தரவிட்டு ஆசைப்படி பூசை செய்பவன் செயலை ஆராய்ந்து சோதிக்கக் குறுமுனியாகிய அகத்தியர் அரண்மனைக்கு வந்தார். அமைச்சர்கள், அகத்தியரை வணங்கி, ஆசனத்தில் அமரச் செய்தார்கள். 38

முகமன்நன் குரைத்தார்; வேந்தன் வந்திலான் எனமு னிந்தான்;
தகவுடன் முனியைப் போற்றிச் சாற்றுவார் வழுதி தம்பால்
புகல்கின்ற வகைஉ ரைத்துப் பூசிக்கும் அமையம் ஈதால்,
வெகுளியாம் அவன்பால் செப்பில் என்றனர் முனிவெ குண்டான்.

நன்றாக வரவேற்புரைகள் சொன்னார்கள். 'வேந்தன் வந்து வரவேற்கவில்லையே' என்று முனிவர் முனிந்தார். அமைச்சர்கள் மிக்க மரியாதையுடன் முனிவரைப் புகழ்ந்து, 'இது அரசன் பூசைசெயும் நேரம்; இப்பொழுது அவனிடம் சென்று தாங்கள் வந்த விவரம் கூறினால் கோபிப்பான்' என்று கூறி, அரசனிடம் பூசைநேரத்தில் சென்றுபேச அனுமதியில்லை என்ற நிலைமையையும் எடுத்துக் கூறினார்கள். முனிவர் மிக்ககோபம் அடைந்தார். 39

சிவமுனி அழைக்கும் செய்தி சாற்றிடில் செழியன் சீறும்
தவமுனி வசனம் தப்பில் சபித்திடும் தன்னைத் தப்பும்
உவமையில் விதம்எவ் வாறென்று ஒருதலை துணிந்து மன்னன்
நவமலர்ப் பாதம் போற்றி முனிவந்த செயல்ந வின்றார்.

சிவமுனிவர் வந்துள்ள விவரத்தைச் சொன்னால், அரசன் சீறிப்பாய்வான்; தவமுனி சொன்னவார்த்தைப்படி நடக்கவில்லை என்றால், முனிவர் சபித்துவிடுவார். இதிலிருந்து தப்பிக்க உவமைசொல்ல முடியாத உபாயம் என்ன? எவ்வாறு செய்யலாம் என்று நிச்சயித்துத் துணிந்து, மன்னனின் மணம்பொருந்திய பாதங்களில் விழுந்தார்கள். முனிவர் வந்ததிலிருந்து நடந்த விவரங்களைச் சொன்னார்கள். 40

குடமுனி என்பது ஓரான் தாபதர் குருகி னாரேல்,
இடும்உப சாரம் என்றே உரைத்திட எய்திச் சொல்லும்
கடனிலை எனமு னிந்தான் முனிவனும் கறுத்தான் என்றால்,
படும்வகை அறியான் செவ்வி இலைஎனப் பகரும் என்றான்.

வந்திருப்பவர் அகத்தியர் என்பதை அவன் பொருட்படுத்தவில்லை. 'சன்யாசி வந்தாரென்றால், கொடுக்கவேண்டிய உபசாரங்களைக் கொடுங்கள்' என்றான். 'நான் உங்களிடம் பெறவேண்டிய கடமை உள்ளவனல்லேன்' என்று அகத்தியர் கூறினார்' என, அமைச்சர்கள் அரசனிடம் சொன்னார்கள். 'முனிவன் கோபப்படுகிறானா? என்ன நடக்கும் என்று அறியாதவன்; அரசனைப்பார்க்கும் நேரமில்லை என்று சொல்லுங்கள்' என்றான். 41

மன்னனால் முனிவற் காவ தென்என்று மதிவல் லோர்கள்,
பன்னகம் பூண்ட கோலப் பரன்அன்பர் தம்மால் ஆகும்
என்னவும் முனியில் எல்லாம் இடரதாம் இவைஎண் ணாத
தென்னனுக் குரைக்கில் தீதாம் செயல்வினை தெரிவோம்என்று,

அரசனால் முனிவருக்கு ஆகவேண்டியது என்ன இருக்கிறது; முனிவர்கள் அறிவால் வல்லமை பெற்றவர்கள்; நாகா

*பரணம் பூண்ட பரம்பொருளுக்கு, அவர்கள் அன்புள்ளவர்கள்; அவர்களுக்கு எல்லாம் முடியும்! என்றும், அவர்கள் கோபம் கொண்டால் பல இடர்கள் வரும்; இவற்றை எல்லாம் பாண்டியனுக்குச் சொன்னால், நமக்குத் தீமை செய்வான் என்றும், இந்தப் பிரச்சனை பற்றிப் பேசி ஆராய்வோம். என்றும், தக்க நேரத்துக்காகக் கவலையோடு காத்திருந்தனர் அமைச்சர்கள்.* 42

**நிகழ்கின்ற பருவம் நொந்து நின்றனர்; முனிவெ குண்டான்;**
**நகமுனி வெகுளி கேட்டு நணுகினான் மன்னன்; தன்னை**
**அகலிடம் விட்டுக் கானில் ஆனைஆக எனச்ச பித்தான்;**
**சகம்எலாம் புரக்கும் கோனும் நடுக்குற்றுச் சலனம் எய்தா,**

*அப்பொழுது பொதியமலைமுனிவர் கோபித்துக் கத்தினார். மந்திரிகளிடம் கோபித்த மன்னன் அந்தச் சத்தத்தைக் கேட்டு, முனிவர் எதிரில் ஓடிவந்தான். 'நாட்டை விட்டுக் காட்டின் யானையாகத் திரிவாய்' என அகத்தியர் சாபமிட்டார். உலகம் எல்லாம் காக்கும் அரசன் நடுக்கம் அடைந்தான்; மனச்சலனம் அடைந்தான்.* 43

## கஜேந்திரனைக் காத்தது

**முனிபதம் பணிந்து நின்று பழிச்சிமுன் னவனே இந்தத்**
**துனிவினை அகற்றி நான்செய் துயர்ப்பிழை பொறுத்துத் துய்ய**
**கனிவிலேன் ஏற்ற சாபம் கழிந்திடக் கருணை செய்கென்(று)**
**இனியநல் வசனம் கூற இரங்கியே முனிஇ சைக்கும்.**

*அரசன் முனிவரின் காலில் விழுந்தான்: புகழ்ந்தான். 'முன்னவரே — பெரியவரே! மிக்ககோபத்தால் சொன்ன சாபத்தை நீக்கி, நான்செய்த, உமக்கு மனத்துன்பம் கொடுத்த பிழையைப் பொறுத்தருள வேண்டும். நான் நல்லவன் ; ஆனால், கனிவு இல்லாதவன்; கருணை செய்யவேண்டும்' என்று இனிய உரைகூறினான். அகத்தியர் இரக்கப்பட்டார்.* 44

**மதத்தினால் கரியே ஆகி மனுமுறை மையினால் நீசெய்**
**விதத்தினால் மதிக்கே டின்றி வனங்களில் மேவிச் சார்வாய்**
**இதத்தினால் பதவி தன்னை எய்துவாய் என்றான் மேலோர்**
**அகத்திடில் புகழ்ஒன் றில்லை யாவர்க்கும் கருதும் காலே.**

*'மதம்பிடித்த யானையாக நீ ஆவாய்; மனுதர்மப்படி அரசாட்சி செய்ததால், உன் அறிவு கெடாது வனங்களில் திரிவாய்; இதமாகப் பதவி அடைவாய்' என்று, அகத்தியர் கூறினார். நன்கு யோசித்தால், மேலோர் மனத்தில்பட்டால் வேறு அடைக்க*

லம் இல்லை; மேலோர்மனம் வருந்தச் செயல் செய்தால் — அவர்கள் சபித்தால் — அவர்களே விமோசனம் தரவேண்டுமே அல்லாமல், வேறு யாராலும் விமோசனம் தரமுடியாது. 45

ஆண்டுநூறு அகன்ற காலை ஆம்பிர வனத்தில் நீயே
ஈண்டுவாய் வழிபா டாற்ற இருந்தீர்த்தம் ஆடப் போவாய்
நீண்டகார் முதலை உன்னைப் பிடித்திட நீஅந் நேரம்
ஆண்டகா ரணனைக் கூவ அருச்சுனன் அருளி னாலே,

"நூறாண்டுகள் காட்டுயானையாக இருந்து, நீயே ஆம்பிர வனத்திற்கு வருவாய். இறைவழிபாடு செய்வதற்காக நீராடப் போவாய். அப்போது நீண்ட கருத்த முதலை உன்னைப் பிடிக்கும்; நீ அந்த நேரத்தில் உலகம் யாவற்றையும் ஆள்வதற்கு மூலகாரணமாக விளங்கும் பரம்பொருளை நினைத்து, 'ஆதிமூலமே' என்று கூவுவாய்; புடார்ச்சுனப் பெருமான் அருளால் திருமால் ஓடிவருவார். 46

கேசவன் ஓடி வந்து கேதம்அ தகற்றும் சாப
மோசனம் ஆகும் என்று முனிவரன் உரைத்துப் போனான்
காசினி காக்கும் மன்னன் அப்படி, கரியாய்க் கானில்
பாசடை பறித்துப் போற்றிப் பலபகல் திரியும் நாளில்,

திருமால் உனக்கு வந்த அழிவை அகற்றுவார்; உன் சாபம் நீங்கும், என்று அகத்தியர், சாபம் நீங்குதல் பற்றிச் சொல்லிச் சென்றார். உலகம் காக்கும் வங்கியசேகர பாண்டியன், யானையாக மாறினான். காட்டில் பசிய இலைகளைப் பறித்துத்தின்று பலகாலம் திரிந்தான். 47

சிந்துர வனத்தைப் போற்றித் தென்னரு கெய்தி அங்ஙன்
சிந்துநீ ராடும் போதில் திண்கராம் பிடிக்கச் சீறிச்
சிந்துர வேழம் ஆதி மூலம்என் றோலம் செய்யா
சிந்தையில் உணர்ந்து வேதச் சிரப்பொருள் அந்த வேளை,

சிந்துர [புளிய] வனத்தில் [ஆம்பரவனத்தில்] திரிந்த யானை, தெற்குப் பக்கம் சென்றது. ஆற்றுநீரில் குளிக்கும்போது, திண்மையான முதலை அதனைக் கவ்வியது; மதங்கொண்ட யானை, 'ஆதிமூலம்' என்று அவலக்குரல் எழுப்பியது; வேதத்தின் உச்சிப்பொருளாய் விளங்கும் புடைமருதூர்ப் பெருமான், அக்குரல் கேட்டுச் சிந்தனை செய்தார். 48

பொன்மலர் கொண்டு தன்னைப் போற்றுபொற் புயத்து மாயோன்
தன்னைஉள் கிடவே ஓடிச் சார்ந்தரன் பதம்ப ணிந்தே,
பன்னகா பரணா நான்செய் பணிஎவன் பகர்தி என்ன
மன்னும்இவ் வாவி தன்னில் வந்ததோர் வார ணம்தான்

பொன்மலர்களால் தன்னை அர்ச்சிக்கும் பொன்போன்ற தோளைக்கொண்ட திருமாலை நினைத்தார். திருமாலும் ஓடி வந்தார். சிவனடியில் விழுந்து வணங்கினார். 'நாகாபரணனே! நான் செய்யவேண்டிய வேலை என்ன? சொல்!' எனக் கேட்டார். நிலைபெற்ற நீர்நிலையில் யானை வந்துள்ளது. 49

நீர்படிந் திடும்அவ் வேளை அம்மடு நிலவு கின்ற
சூர்உடல் கராம்எ ழுந்து தும்பிதன் கையைப் பற்றிப்
பேரிடர்த் துயரம் செய்யப் பேதுறா அதனை இன்னே
சாரஇக் கணத்தில் சென்று தந்தியைக் காப்பாய் என்றான்.

'இந்த நீர்நிலையில் அந்த யானை குளிக்கும்போது, அஞ்சத்தகும் உடல்கொண்ட முதலை, யானையின் கையைப் பிடித்துப் பெரிய துன்பம் செய்கிறது. யானையின் துயரம் போகும்படி விரைவாக — இப்பொழுதே சென்று, இக்கணத்திலேயே யானையைக் காக்கவேண்டும்' என்றார். 50

மாயவன் கணத்தில் போந்து மடுவினில் எய்தி வன்மீன்
மாயவே சக்க ரத்தை வலம்திரித் தெறிந்து மாற்றி,
மாய்வுறா யானை இன்னல் மருதநா யகன்வ ரத்தால்
மாயமா என்றோன் கைமத் தகத்தில்வைத் தபயம் என்றான்.

திருமால் ஒரு விநாடியில் மடுக்கரைக்குச் சென்றார். தன்னுடைய சக்கராயுதத்தை வலப்பக்கமாகத் திரித்து, முதலை அழியும்படியாக எறிந்தார். யானை பிழைத்தது. அதன் துன்பம் தீர்ந்தது. மருதநாயகன் எனக்குக் கொடுத்த வரத்தால் நடந்த இந்த நிகழ்ச்சி மாயமோ?' என்று கூறிய திருமால், யானையின் மத்தகத்தின்மேல் கையை வைத்து 'அபயம்' என்றார். 51

## சிவன், திருமாலுக்கும் யானைக்கும் முதலைக்கும் அருள் செய்தது

விடையின்மேல் உமையா ளோடும் விளங்கியே மருத வாணன்
புடைஎழுந் தருளிச் செய்து போதகம் தனைப்பு ரந்த,
மடல்அவிழ் துளவி னாற்கும் வாரணன் தனக்கும், அன்பு
கடல்என ஈந்தான் தேவர் கடவுளர் யாரும் போற்ற.

மருதவாணன் உமையோடும் ரிஷபத்தின்மேல் ஏறி, யானையைக் காத்த துளசியான் ஆகிய திருமாலுக்கும், யானையான வங்கிய சேகரனுக்கும் கடல்போல் அன்பு பொழிந்தார். தேவர்களும் கடவுளர்களும் போற்றினார்கள். 52

அப்பொழு தரியை நோக்கி அடுகராம் தன்னை மாய்த்துச்
செப்பரும் யானை காத்த செயலினால் யானை காத்த
மெய்ப்பொருள் என்று ரைத்தார் விண்ணவர் மலரின் மாரி
துப்புறத் தூவி ஆர்த்தார் துந்துமி ஐந்தும் ஆர்ப்ப

சிவன், திருமாலை நோக்கி, கொலைமுதலையை அழித்து யானையைக் காத்த செயலால், 'யானைகாத்த மெய்ப்பொருள்' என்று, பாராட்டினார். தேவர்கள், மலர்மாரி பொழிந்தார்கள். துந்துபி முதலிய பஞ்சவாத்தியம் முழங்க, ஆரவாரம் செய்தார்கள். 53

ஆனையின் வடிவம் நீங்கி அரசனும் அரன்தாள் பெற்றான்
மோனமா முனிவர் யாரும் முதலையை அட்ட தாலே,
தானம தடுகை என்று சாற்றினார் தண்து ழாயோன்
வானவன் தன்னைப் போற்றி மலரடி வணங்கி னானே.

ஆனையாக இருந்தவன் முன்னைய அரசவடிவம் பெற்றான். பின்னர் இறைவனடி சேர்ந்தான். முதலையைக் கொன்ற திருமாலை, 'யானைக்கு அருளிய கை' என்று, மோன முனிவர்கள் போற்றினர். குளிர்ந்த துழாய் மாலை அணிந்த திருமால், வானவராகிய இறைவனைப் போற்றி, அவரின் மலரடியை வணங்கினார். 54

மருதநா யகன்மா யன்பால் மகிழ்ந்திந்த வாவி என்றும்
தருகய மோட்ச தீர்த்தம் சார்ந்தவர் இடுக்கண் தீர்க்கும்
மருவினோர் பவங்கள் மாற்றும் என்றுரை செய்து மார்பில்
திருவளர் மார்பன் தன்னைத் தென்னரு கிருத்தி னானே.

மருதநாயகன், திருமாலிடம் மகிழ்ச்சியுடன், 'இந்த நீர் நிலை 'கஜமோட்சதீர்த்தம்' எனப்படும். இதனருகில் வந்தவர் களின் துன்பம்போகும். இதில் குளித்தவர்களின் பாவங்கள் மாறும்; புண்ணியங்களாகும்' என்று சொன்னார். மார்பில் லட்சுமியைக் கொண்ட திருமாலைத் தென்திசையில் — அருகில் கோயிலில்கொண்டு இருக்கச் செய்தார். 55

மாதவன் மகிழ்ந்து முந்தை வாக்குரைப் படியே இந்த
நீதமும் தந்தாய் என்று நிருத்தனைப் பூசித் தன்பாய்ப்
பாதங்கள் பணிந்து போற்றிப் பங்கய மாதி னோடும்
ஆதர வுடனே அங்஗ன் ஆலயம் அமைத்தி ருந்தான்.

திருமால் மகிழ்ச்சியடைந்தார்; 'முன்பு காசியில் நீ எனக்குக் கொடுத்தவாக்குப் படியாக [பாடல்16,17] இந்தப் பாக்கியத்தைக் கொடுத்தாய்' என்று சொல்லி, நிருத்தனாகிய சிவனைப் பூசித்து, அன்புடன் திருவடிகளை வணங்கிப்

புகழ்ந்தார். சிவனின் ஆதரவுடன் பங்கயச் செல்வியோடு, ,அங்கே ஆலயத்தில் பொருந்தி இருந்தார். 56

தெய்வஇத் தீர்த்தம்ஆடும் கந்தர்வ முதலை செய்த
எவ்வம்அ தகன்ற துண்டோ எனவினா வியபோ தற்கிங்
குய்திறன் அருளிச் செய்தார் உம்பல்வேந் தவனி தன்னில்
மைநிற முதலை தாம்ப்ர நதிவழி வந்து சேர்ந்து,

'தெய்வத்தன்மை வாய்ந்த இத்தீர்த்தத்தில் குளித்த ஊவன் என்னும் கந்தர்வன், வாமதேவன் சாபத்தால் முதலையாயிற்றே; அதன் சாபம் நீங்கிற்றா?' என்று முனிவர்கள் சூதமுனிவரைக் கேட்டபோது,. 'காளையின் தலைவனாகிய இறைவன், ஊவன் தப்பிக்கவும் வழிசொன்னார்' என்றார். 57

செக்கர்மெய் சாய்ந்தோன் தன்னைச் சிறிதுமுன் புண்ணியத்தால்
எக்கரின் உணர்ந்த போதில் இறையவன் அருளி னாலே,
சக்கர வாணன் மூன்றீ சுரனுடன் சார்ந்த ளித்துத்
தக்கபா டையைக் காக்க உய்ந்தெனச் சாற்றி னாரே.

அதன்படி கருத்த முதலை உயிர்பெற்றுத் தாமிர வருணியில் வந்தது. சிவந்த, மெய்சாய்ந்தவரை, மணல்மேட்டில் ஏறி, முன்பு செய்த சிறு புண்ணியத்தால் பார்த்தது. இறைவன் அருளால் திருமால் மூன்றீசர் திருவடிவில், 'இந்த நீர்நிலையைக் காப்பாற்றும் காவல் தெய்வமாக ஆவாய்' என அருள்செய்தார். 58

சொற்றஇத் தலத்தில் செய்த தோடம்இங் ஙனம்தீ ராதால்
மற்றொரு தலத்தில் தீர்க்கும் மற்றொரு தலத்தில் செய்த
பற்றுறு பாவம் இந்தப் பதியினில் தீரும் என்று
கற்றவர் முன்பு ரைத்த காரணம் இதுவாம் அன்றே.

புடைமருதத் திருத்தலத்தில் முனிவரின் தவம் கலைத்துப் பாவம் செய்த முதலை, மூன்றீசத்தலத்தில் அருள்பெற்றது. எனவே, 'புடைமருதத் திருத்தலத்தில் செய்த பாவம் தீராது; மற்றொரு தலத்தில்தான் தீரும்; மற்றொரு தலத்தில் செய்து பற்றிய பாவம், புடைமருதத்தலத்தில் தீரும்' என்று, வேதம் கற்றவர்கள் சொல்வதற்கு, இதுவே காரணம் ஆகும். 59

# 5. ஆதிமனுப் படலம்

மருத்துவ மருத நாயகன் அருளால்
மாயவன் முதலையை மாய்த்து,
வெருக்கொள்வா ரணத்தைக் காத்திடும் செயலை
விரித்தனம் மேல்ஒரு மனுவின்
அருத்திசேர் மருமான் அயோத்தியம் பதியான்
ஆதிமா மனுஎனும் அரசன்
திருத்தகும் இந்தத் தலத்தினில் எய்திச்
சிவன்அருள் பெற்றதைத் தெரிப்பாம்.

பிறவிப்பிணியை நீக்கும் மருத்துவராகிய தலைவர் சிவபெருமான். அவருடைய அருளால் திருமால் முதலையைக் கொன்று, அஞ்சிக் கதறிய யானையைக் காப்பாற்றிய செயலை விரித்துச் சொன்னேன். குமரி என்னும் பெண்மனுவின், மருமானாகிய ஆதிமனு என்னும் அயோத்தி நகரத்து அரசன், திருப்புடைமருதூருக்கு வந்து, சிவன் அருள் பெற்ற வரலாற்றைச் சொல்லப் போகிறேன் என்றார் சூதமுனிவர்.1

## மனுவம்சம்

முனிவரர் கேட்பச் சூதமா முனிவன்
மொழிகுவான் முன்ஒரு யுகத்தில்
தனிஇரா தந்த்ர கற்பகா லத்தில்
தாமரை மலரினான் தனது
புனிதமாம் வலது புயத்தினில் பிறந்த
புங்கவன் எனும்சுவா யம்பு
மனுஎனும் தலைவன் வரத்தினால் உதித்த
மைந்தனாம் மகபதி நிகர்வோன்

முன்பு ஒரு யுகத்தில் — ஒரு மனுவந்த்ரத்தில் [மனுவின் காலம்] இராதந்த்ரத்தில் [இரண்டிரவும் ஒரு பகலுமாக ஒருநாள் என்னும் நிலை வரும்போது யுகம் முடியும் காலம். அது இராதந்த்ரம் எனப்படும்] கற்பகாலத்தில் [ஆயிரம் கோடி ஆண்டுகளில்] பிரமன் தனது புனிதமான வலப் புயத்தில் பிறந்த, உயர்ந்தவன் சுவாயம்புவன் என்ற முதல்மனு.

*இறைவனின் வரத்தால் உதித்த இவன், தேவேந்திரனுக்குச் சமமானவன்.* 2

*[சுவாயம் புவன், சுவாரேசிஷன், உத்தமன், தாமசன், ரைவதன், சாக்ஷுசன், வைவஸ்வதன், சூர்ய சாவர்ணி, தட்சாவர்ணி, பிரமசாவர்ணி, ருத்ரசாவர்ணி, தர்மசாவர்ணி, ரௌஸியன், பௌசியன் என்பன 14 மனுக்களின் பெயர்கள். தற்போது 7 ஆம் மனுவாகிய வைவஸ்வதமனுவின் காலம் [மனுவந்த்ரம்] நடைபெறுகிறது. ஒவ்வொரு மனுவின் வம்சத்தவர்களும் அரசர்கள் ஆவர். அவர்களுக்கு மனு என்பது பட்டப்பெயர் ஆக அமையும்.]*

பூமகன் படைத்த புவிபுரந் திடுவோன்
புனிதவத் திரன்எனும் விரத
மாமனு இவன்சேய் அங்கிதீ ரக்கோ
மன்னுமே தாதிமென் பவுட்டுச்
சேமசோ திட்டு மனுத்திகழ் துதிமான்
திருமனு வவ்வியன் சவனக்
கோமனு எழுவர் இவர்எழு வேலைக்
குவலயம் புரந்திடும் குரிசில்.

*பிரமன் படைத்த மனுவம்சத்தில், புனிதவஸ்திரன் என்பவன் அரசன் ஆவான். இவனுக்கு அங்கிதிரக்கோ, மேதா, பவுட்டு, சோமதிட்டு, துதிமான், வவ்வியன், சவனக்கோ என்ற ஏழு பிள்ளைகள். இந்த எழுவரும் உலகம்காக்கும் பணி செய்தார்கள்.* 3

இவரில்முன் வந்த அங்கிதீ ரன்தான்
நுவல்கடற் புவிக்கிறை இவன்சேய்
தவம்திகழ் பரதன் தழைத்தகிம் புருடன்
தான்அரி கேதுமால் பத்ரா
சுவதாமன் னனிளா விரதக்கோ
சொலுமிர வியன்இர ணியனே
நவம்திகழ் குருவன் எனும்நவ கண்ட
நரபதி இவரில்முன் வந்த,

*இவர்களில் மூத்தமகனாகிய அங்கிதீரக்கோ என்ற மனுவே, இந்த நாட்டின் அரசன் என்ற உரிமை உடையவன். இவனின் மகனே தவத்தில் சிறந்த 'பரதன்' என்பவன். பரதனின் உடன் பிறந்தவர்கள் கிம்புருடன், அரிகேது, பத்ரா, சுவதா, இளா, இரவியன்,இரணியன், குருவன் என்பவராவர். பரதனுடன் ஒன்பதுபேரும் நவகண்ட அதிபதிகளாவர்.* 4

பரதகண் டத்துப் பார்த்திபன் ஈன்ற
பாலர்இந் திரன்கசே ருகனாம்
நரபதி தாம்பிர பன்னியன் கபத்தி
நாகனே சவுமியன் நலம்சேர்
மருவுகந் தருவன் வருணனே என்னும்
மன்னவர் எண்மர்கள் மகளோர்
தெரிவையாம் குமரி இவர்கட்குத் தனது
செகத்தினை ஒன்பதாய்த் தெரித்தான்.

இவர்களில் பரதனே அரசனாவான். பரதனுக்கு, இந்திரன், கசேருகன், நரபதி, தாம்பிரபர்னியன், கபத்தி, சவுமியன், கந்தர்வன், வருணன் என்றும் எட்டு மகன்களும், குமரி என்ற ஒரு மகளும் பிறந்தனர். பரதன் இந்த ஒன்பது பேரையும், தேசத்தை ஒன்பதாகப் பிரித்து, அரசர்கள் ஆக்கினான்.

**பரத கண்டம்**

| | ***நவ[9] கண்டம்*** | ***அரசர்/அரசி*** |
|---|---|---|
| 1. | கீழ்விதேகம் | இந்திரன் |
| 2. | மேல்விதேகம் | கசேருகன் |
| 3. | வடவிதேகம் | நரபதி |
| 4. | தென்விதேகம் | தாமிரபன்னியன் |
| 5. | வடவிரேபதம் | கபத்தி |
| 6. | தென்விரேபதம் | சவுமியன் |
| 7. | வடபரதம் | கந்தருவன் |
| 8. | தென்பரதம் | வருணன் |
| 9. | மத்திம கண்டம் | குமரி |

நவம்நிகழ் கண்டம் தனையர்தம் பெயரால்
நாட்டினன் அவ்வுரை நலம்சேர்
இவர்களில் வருணனாங் குலமனு ஈன்றோன்
இறையெனும் ஆதிமா மனுவாம்
தவம்உயர் வேந்தன் தந்தைதன் புவியும்
குமரிதன் கண்டமும் தாங்கி,
உவமையில் செங்கோல் செலுத்தியே புரக்கும்
ஒருதனி வேலுடை உரவோன்.

பரதன் ஒன்பது நாடுகளை ஒன்பது பிள்ளைகளுக்கும் கொடுத்தான். இப்படிச் செய்தது பரதனுக்குப் புகழாக அமைந்தது. இவர்களில் தென்பாரத அரசன் வருணன். அவன் மகனே ஆதிமனு

மத்திம கண்டத்தின் அரசியாகிய குமரியின் மகளை ஆதிமனு மணந்து கொண்டான். தந்தையின் நாட்டுக்கும் [தென் பரதம்] அத்தையின் நாட்டுக்கும் [மத்திய கண்டம்] அரசனாகி, ஒப்பற்ற வேலை உடைய ஆதிமனு, உவமை சொல்லமுடியாத சிறப்பான நீதியாட்சி செய்தான். 6

மன்னும யேந்த்ர மலையமே சையம்
முதலிய மலைகளும் காவும்
பொன்னியே கங்கை பொருனையே முதல
புண்ணிய நதிகளும் பிறவும்
அந்நதி தீரத் தணிசிவ நகரும்
அதனுறு விசேடங்கள் அனைத்தும்
தன்னதாம் புவியில் சார்ந்திடப் பெற்ற
தண்அளி மேவிய தவத்தோன்.

மத்திமகண்டம், தென்பரதம் ஆகிய நாடுகளில், மகேந்திர மலை, ஸ்ரீசைலம், முதலிய மலைகள் அடங்கியுள்ளன. பல காடுகள், காவேரி, கங்கை, பொருனை முதலிய பல நதிகள் அடங்கியுள்ளன. நதிக்கரைகளில் விசேடங்கள் மிகுந்த பல சிவத்தலங்கள் உள்ளன. இவற்றையெல்லாம் தவவலிமை மிக்க ஆதிமனு கருணையுடன் ஆட்சி செய்தான். 7

## ஆதி மனுவின் நீதியாட்சி

தவங்கள்ஓர் உருவாய்ச் சார்ந்திடும் தக்கோன்
தருமம்நீள் சத்தசா கரம்சூழ்
புவனமத் தியில்வாழ் கின்றபூ சக்ர
வாளபூ தரவரை ஓங்கும்
சிவம்வளர் புகழான் மேருவின் குவட்டில்
சாற்றிய வலம்தரு கொடியான்
கவனவாம் பரித்தேர் கரிபரி வெள்ளக்
கடல்அனீ கம்செறி கதிரோன்.

ஆதிமனு, தவங்களின் மொத்த வடிவமானவன்; தருமவான். நீண்ட மங்களகரமான புகழாளன். அவன்புகழ் ஏழ்கடல் வரையிலும், உலக நடுவில் உள்ள சக்கரவாளமலை வரையிலும் ஓங்கியதாகும். மகாமேருமலையில் வெற்றிக்கொடி நாட்டியவன். வேகமான நடையும், பாயும்திறனும் கொண்ட குதிரைகளைப் பூட்டிய தேர்ப்படையும், யானைப்படையும், குதிரைப்படையும் செறிந்தவன்; சூரியனைப் போன்ற ஒளி உள்ளவன். 8

கற்றவர்க் குரிய கண்ணான் கரியலர்க்கு அரிய கண்ணான்
உற்றவர்க்கு இனிய சொல்லான் ஒன்னலர் வணங்கும் தாளான்
செற்றவர் புரங்கள் செற்ற செஞ்சடை யுடையான் தாளைப்
பற்றிய மனபா கத்தான் பண்புயர் பான்மை யுள்ளான்.

படித்தவர்களிடம் கண்ணோட்டம் உள்ளவன்; சாட்சி இல்லாமல் பொய்ப்புகார் சொல்பவர்களிடம் கோபிக்கும் இயல்புடையவன். தன்னை அடைந்தவர்களிடம் இனிமையாகப் பேசுபவன்; பகைவர்கள் வணங்கும் பாதங்களைக் கொண்டவன்; பகைவரின் திரிபுரங்களை அழித்த செஞ்சடைச் சிவனின் திருவடிகளைப் பற்றிய மனப்பக்குவம், உயர்பண்பு கொண்டவன். 9

வருணம்நான் கதனில் வந்தோர் தம்மைஆச் சிரமம் நான்கிற்(கு)
உரியவர் தம்மை வேதத் துறுதியாம் மார்க்கம் தன்னைத்
தரணியைச் செலுத்தும் நீதித் தன்மையாம் சக்க ரத்தை
விரியவே காத்தெந் நாளும் வளர்த்திட வந்த வேந்தன்

ஆதிமனு நான்கு வருணத்தோரில், பிரமசர்யம் [கல்விப்பருவம்], கிரஹஸ்தம் [இல்லறம்], வானப்பிரஸ்தம் [மனைவியுடன் துறவு], சன்யாசம் [இளமை முதற்கொண்டு துறவு] என்ற ஆச்சிரமம் நான்கிற்கும் உரியவர்களைப் காப்பவன்; வேதத்து உறுதிகளைக் காப்பவன்; மார்க்கங்களைக் காப்பவன்; உலகை வழி நடத்தி, தர்மசக்கரத்தை விரிவாகச் செலுத்தி, யாவரும் வளரச்செய்யும் வேந்தன் ஆவான். 10

வாவியின் உகழ்ந்து வாளை வானமீ துயர்ந்த தெங்கில்
தாவிஅப் புறத்தில் வான்மீன் தனைப்பொரும் தாவி லாத
ஓவியப் புறத்தில் தோன்றி உம்பர்நா டிழிந்த தென்னக்
காவுயர் அயோத்தி என்னும் கடிநகர் தன்னில் வாழ்வோன்

அயோத்தி நகரின் குளத்தில் உள்ள வாளைமீன் துள்ளிப் பாய்ந்து, வானை எட்டும் தென்னைமரத்தின் தேங்காயை மோதி உதிர்த்து, விண்மீன்மேல் மோதி, குறைவில்லாமல், தேவலோகத்தில் விழும்; அயோத்தியில் சோலைகள் நிறைய இருந்தன. அப்படிப்பட்டதான காவல் பொருந்திய அயோத்தி நகரத்தில் வாழ்ந்தவன் ஆதிமனு ஆவான். 11

தக்கவே தாக மங்கள் சாத்திரம் உணர்ந்த சான்றோன்
மார்க்கர்சிங் களர்பாஞ் சாலர் மாளவர் முதலாய் உள்ள
மிக்கமன் னவர்கட் கெல்லாம் வேந்தன்வேள் வனப்பு வாய்ந்தோன்
சக்கரம் நடாத்திக் கோலால் தராதலம் பரிக்கும் தக்கோன்.

தகுதியான வேதங்கள், ஆகமங்கள், சாஸ்திரங்கள் ஆகிய யாவற்றையும் கற்று, உணர்ந்த சான்றோனாக அவன் விளங்கினான். மர்க்கடர், சிங்களர், பாஞ்சாலர்,மாளவர், முதலிய தேசத்து மன்னவர்களுக்கெல்லாம் பேரரசனாக அவன் விளங்கினான். மன்மதனைப் போன்ற அழகுள்ளவனாகத் திகழ்ந்தான். தக்கவனாக, நீதிமானாக அரசாட்சி செலுத்தி, உலகத்தைக் காத்தான். 12

## பிள்ளைப்பேறு இன்மை

சாரங்க வல்லி என்னும் தன்திருத் தேவி யோடும்
சீரங்க வளங்க ளோடும் இல்லறம் செலுத்தும் நாளில்,
பாரங்கம் பரிக்கும் பாலன் பயந்திடும் பருவம் தாழ்க்க
நேரங்கள் தோறும் சிந்தை நிறைந்திலர் நிறைந்தசெல்வர்.

ஆதிமனுவின் மனைவி பெயர் சாரங்கவல்லி என்பதாகும். அவளுடன் சிறப்புப் பொருந்திய செல்வ வளங்களுடன் ஆதிமனு இல்லறம் நடத்தினான். அடுத்த வாரிசாக அரசாள்வதற்கு ஒரு பிள்ளை பிறக்கவில்லை. திருமணமாகிப் பல ஆண்டுகளாகியும் இந்த நிலை நீடித்தது. நிறைந்த செல்வம் கொண்ட இவர்கள், இதனால் எந்த நேரமும் மனநிறைவு இல்லாமல் வருந்தினார்கள். 13

எண்ணிலாப் பொருள்பெற் றாலும்
இந்திர திருப்பெற் றாலும்
மண்எலாம் ஒருங்கு போற்றும்
வாழ்வுடன் மதிபெற் றாலும்
பண்அமர் கலைபெற் றாலும்
பயில்மனைக்கு அழக தான
புண்ணியப் புதல்வர் இல்லா
வாழ்க்கையும் புன்மை என்றே,

எண்ணிக்கையற்ற பொருள்கள் பெற்றிருந்தாலும், இந்திரனுக்குரிய தேவலோகத்துச் செல்வம் பெற்றிருந்தாலும், உலகம் எல்லாம் ஒருசேரப் போற்றுகின்ற வாழ்வும் அறிவும் பெற்றிருந்தாலும், இராகம் பொருந்திய நுண்கலை ஞானம் பெற்றிருந்தாலும், தாம் வாழும் வீட்டுக்கு அழகு சேர்க்கக் கூடிய — புண்ணியத்தினால் பெறக்கூடிய பிள்ளைகள் இல்லாத வாழ்க்கை, இழிந்ததாகும் என்று அறிந்து, 14

பருமத்த யானை வேந்தன் காசியம் பதியில் எய்தித்
தருமத்தின் வழியே நின்று சங்கரன் பாதம் போற்றி,

ஒருமித்த கருத்தி னாலே உறுமகப் பெறுவேன் என்று
நிருமித்த படிஅங் கேக நினைந்திது செய்வ தானான்.

பெருத்த மத்தகத்தைக் கொண்ட — பட்டத்து யானையைக் கொண்ட ஆதிமனு, புண்ணிய காரியங்கள் செய்யக் காசிக்குப் புறப்பட்டான். யாத்திராதானம் செய்தான். சிவபூசை செய்தான். ஒருமித்த சிந்தனையுடன் சங்கல்பம் செய்து கொண்டான். பொருத்தமான பிள்ளை பிறக்கவேண்டும் என்பதற்காக, முறைப்படியாக யாத்திரை தொடங்கினான். 15

முன்னிய படியே போத மந்திர ருடனே முன்னித்
தன்னிலத் திருத்து வோரை நிறுவிப்பின் தக்கோர் சார்வாய்
நன்னிதிப் பொதியும் கொண்டு நால்வகைத் தானை சூழத்
துன்னிய பாகர் உய்க்கும் பொன்னணி துரகத் தேரில்,

மந்திரமார்களை அழைத்து நாட்டாட்சிப் பணிகளுக்கு உத்தரவிட்டான். நாட்டில் இருக்கவேண்டிய அதிகாரிகள் யார் யார், உடன் வரவேண்டியவர்கள் யார் யார் என நியமனங்கள் செய்தான். தக்கவர்களை உடனழைத்துக்கொண்டு, நல்ல செல்வங்களை மூட்டை கட்டிக்கொண்டு, நால்வகைச் சேனைகளையும் உடன்வரச் செய்தான். 16

தாரணி வேந்தன் தேவி தன்னுடன் எழுந்து போந்து,
காரணன் உறையும் தானம் கருத்துறப் பணிந்து சென்று,
சீரணி காசி எய்தித் திகழ்கின்ற கங்கை யாடி,
நீரணி மேகம் என்ன நிதிமழை நெடியோற் கீந்தான்.

குதிரைகள் பூட்டப்பட்ட பொன்னாலான தேரைப் பாகர்கள் செலுத்த, மாலை அணிந்துகொண்டு தேவியுடன் பயணித்தான். வழியில் உள்ள தலங்களை எல்லாம் வழிபட்டுச் சிறப்பான, அழகான காசிநகரை அடைந்தான். கங்கையில் நீராடினான். நீர்பொருந்திய மேகம் மழை பொழிவதைப்போலப் பெரியவர்களுக்குத் தானங்கள் [தீர்த்தா தானங்கள்] செய்தான். 17

வரநதிக் கரையில் எய்தி மந்திரம் அடைந்து மன்னன்
புரகரன் தன்னை ஏத்தித் தான்ஒரு புனித லிங்கம்
விரைவுடன் அமைத்துப் போற்றி ஆலயம் விதித்தெங் கோனைப்
பரவினன் பரனை நோக்கித் தவம்செய்யும் பான்மை பூண்டான்.

வரநதியாகிய கங்கைக்கரையில் பிள்ளைப்பேற்றுக்குச் செபிக்க வேண்டிய மந்திர உபதேசம் பெற்றான். திரிபுரம் எரித்த சிவனை வழிபட்டுத் தானும் புனிதமான ஒரு லிங்கத்தை

ஸ்தாபித்து, அதற்குக் கோயில் கட்டி, வழிபாடு செய்து, அங்கே தவம் செய்யலானான். 18

## ஆதிமனுவின் கனவில் ஆண்டவன் தோன்றுதல்

கந்தடு கரட நால்வாய்க் கறையடி யானை வேந்தன்
எந்தையை மனம்மெய் வாக்கில் இருத்தியே ஒருமித் தெய்திச்
சிந்தனை தெளிந்தி ருந்தான் சிலபகல் கழிந்தோர் நாளில்
நந்திஅவ் விலிங்கம் நின்று நரபதி கனவில் தோன்றி,

கட்டுத்தறியில் கட்டப்படுவதும், மதம் பொருந்தியதும், தொங்கும் வாயை [துதிக்கையை] உடையதும், பெருத்த கால்களை உடையதுமாகிய ஆனைகளை உடைய வேந்தனாகிய ஆதிமனு, இறைவனைத் தன் மனம், மொழி, மெய்களில் எப்போதும் இருக்கச்செய்து, ஒருமித்த சிந்தனைத்தெளிவுடன் தவம் செய்தான். சிலநாள்கள் இப்படிச் சென்றன. ஒருநாளில் அவன் ஸ்தாபித்த சிவலிங்கம், அவன்கனவில் விருப்பத்துடன் தெரிந்தது. 19

ஆதிமா மனுவே நீசெய் பூசனை அதிக யோக
நீதியில் இயற்று பான்மைக் குவந்தனம் நினக்கு வேண்டும்
பூதலம் புரக்கும் மைந்தன் புடைஅருச் சுனத்தில் ஈவோம்
மேதினி அவண்நீ எய்திப் பணிசெய்வாய் அவ்வி சேடம்,

கனவில் சிவலிங்கம் பேசியது: 'ஆதிமனுவே! நீ செய்வது அதிகமான யோகமாகும். நியமப்படி தவம் செய்கிறாய். அதற்கு மகிழ்கிறேன். உனக்கு உலகம் காக்கும் மகன்வேண்டும்; திருப்புடைமருதூரில் அந்தவரம் தருகிறேன். நீ அங்கே சென்று பணிசெய். 20

மங்குல்ஊர் தியன்சேர் கின்ற மருதது வழுதி நாட்டில்
தங்கமாம் பொதிகைக் கீழ்பால் துகளிலார் பரவு கின்ற
திங்கள்ஊ டேகும் சோலைச் சிந்துர வனம்சேர் கின்ற
கொங்கிவர் சம்பு மேவும் குவலயம் தென்பால் காசி,

மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரன் சேர்ந்த மருதமரம் பாண்டியநாட்டில், தங்கம் போன்ற பொதிகைக்குக் கிழக்கே, மறுவற்றவர்கள் வணங்குவதும், சந்திரன் நடுவிலே செல்லக்கூடிய சோலைகள் உடையதுமாகிய சிந்துரவனத்தை ஒட்டிய, மொட்டுகள் நிறைந்த நாவல்கள் உள்ள காட்டைச் சார்ந்து உள்ளது. அது தட்சிணகாசியாகும். 21

பொருனையும் கடனை யும்சூழ் புண்ணியச் சங்க மத்தின்
திருநதி வலம்அ தான தென்புவிக் கயிலை என்னும்
மருமலர்த் தடம்சூழ் கின்ற வளந்திகழ் வனப்பு வாய்ந்த
பெருமைசேர் அருச்சு னந்தான் பிறைதரித் தவனைப் போலும்,

பொருனாநதியும் கடனாநதியும் சூழ்கின்ற புண்ணியச் சங்கமம் அங்குள்ளது. பொருனை வலம்வரும் தலம் அது. தென்கயிலாயம் என்னும் சிறப்புடையது. மணம்பொருந்திய மலர்கள் குளங்களில் இருக்கும் வளம்கொண்ட அழகுடைய பெருமை சேர்ந்த அருச்சுனம், பிறைசூடிய பெருமானைப் போன்றது. 22

பதிளத்தலத் தினும்மேன்மைய பரன்தாரக மனுவைக்
கதிபெற்றிட உயிர்க்கந்திய காலத்துப தேசம்
விதியிற்செயு மதன்உண்மைகள் விளங்குங் குறுமுனிவன்
பொதிகைத்தலத் துரைசெய்திடும் உனக்கென்று புகன்றான்.

அந்த ஊர் எல்லாத் தலத்தும் மேன்மையானது. இறைவன் தாரக மந்திரத்தை உயிர்கள் மோட்சகதி பெறுவதற்காக அந்திய காலத்தில் விதிப்படி உபதேசம் செய்யும் தலம் அதுவேயாகும். பொதிகையினால் விளங்கும் குறுமுனிவராகிய அகத்தியர், உனக்கு அத்தலத்தின் உண்மைகளைச் சொல்வார். 23

பின்னும்உள தீர்த்தம்தலம் பேசும்அதில் பெரியோர்
துன்னும்இடம் நீகண்டவண் துலங்கும் பணிசெய்ய
மன்னும்மரு தில்தோன்றிஉன் மனத்தின்வழி அருள்வோம்
என்னும்சிவன் அருள்செய்தனன் இறைவன்பணிந் தெழுந்தான்.

போகும் வழியில் பல தலங்கள் உள்ளன. தீர்த்தங்கள், தலங்கள், பெரியவர்கள் தங்கிய இடங்கள் ஆகியவற்றை எல்லாம் நீ கண்டு, உன்பேர் விளங்கும்படியாகப் பணிகள் செய்து, நிலைபெற்ற திருப்புடைமருதூருக்கு வந்தால், அங்கே உன் மனத்தின் விருப்பப்படி அருள் செய்வோம்' என்று, சிவன் ஆதிமனுவின் கனவில் கூறினார். ஆதிமனு இறைவனை வணங்கினான். 24

## ஆதிமனுவின் தலயாத்திரை

அறைந்தங்ஙனம் உறைந்தான்அரன் அருளக்குறி இடையே
மறைந்தான்விழித் திதுநன்றென மகிழ்ந்தன்பினன் துதித்தான்
நிறைந்தான்சக லதும்ஆகிய நிருத்தன்பணி நிகழ்வால்
சிறந்தேவிடை பெற்றேகினன் திகழ்காசியி னின்றும்

ஆதிமனுவின் கனவில் தோன்றிப் பேசிய இறைவன், குறியின் [இலிங்கத்தின்] இடையே மறைந்தார். ஆதிமனு கண் விழித்தான். 'இது நல்லது' என்று மகிழ்ந்தான். பிறகும் துதித்தான். மனநிறைவுடன், சகலமும் ஆகிய நடனமாடும் பெருமான் உத்தரவிட்டபடி, காசியிலிருந்து விடைபெற்றுத் தலயாத்திரை மேற்கொண்டான். 25

மதுராபுரி மாயாபுரி வரணாசி வண்குமரி
கதிசேர்அவந் திகைகாஞ்சி மெய்க்காளத்தி இறைஞ்சித்
துதிசெய்து, கழுக்குன்றுடன் சோணாசலம் போற்றி,
அதிகைப்பதி வீரட்டம் அணைந்தங்குப் பணிந்தே,

வடமதுராபுரி, மாயாபுரி, வாரணாசி, தன் அத்தையாகிய குமரி என்பவள் மோட்சம் அடைந்த அவந்தி, காஞ்சி, காளத்தி இவற்றில் வழிபட்டுத் துதித்தான். திருக்கழுக்குன்றம், சோணசைலம், திருவதிகை வீரட்டம் ஆகிய தலங்களுக்குச் சென்று வழிபட்டான். 26.

பொன்பாய்பொது இறைஞ்சிப்புனை சூழ்வீதிகள் பணிந்தே,
அன்போடிறை வன்காவிரி நதிஆடினன்; அங்கண்
மின்பாய்சடை யான்ஆலயம் எல்லாம்மிகத் தொழுது,
தென்பால்திரு ஐயாறுசி ராப்பள்ளி பணிந்தே,

பொன்வேயப்பட்ட பொதுமன்றம் உள்ளதாகிய தில்லையை [சிதம்பரத்தை] வணங்கி, புனையப்பட்ட தெருக்களில் வலம்வந்து, காவிரி பாயும் நாட்டில் நதியில் நீராடி, காவிரிநாட்டுச் சிவத்தலங்கள் எல்லாவற்றிற்கும் சென்று வழிபட்டான். திருவையாறு மற்றும் திருச்சிராப்பள்ளியில் சிறப்பாக வழிபட்டான். 27

சோணாடு கடந்தேமதி தோயும்பொழில் சூழும்
சேணாடெனும் தமிழ்மீறிய தென்நாடதில் உற்றான்
பூணாய்அர வம்தாங்கிய புனிதன்உறை கூடல்
தூணாயதில் அரியாய்இர ணியற்காய்ந்தவன் துதிக்கும்,

சோழநாட்டைக் கடந்து, மதிதவழும் சோலைகள் சூழ்ந்த தொலைத்தூர நாடாகிய தமிழ் வளர்ந்த தென்னாட்டை அடைந்தான். பாம்பை அணியாக அணிந்த புனிதன் தங்கியுள்ள மதுரையை வணங்கினான். 28

கடல்சூழ்பதி பணிந்தேகறைக் கண்டன்உறை கோயில்
இடம்எங்கணும் தொழுதேவையை இரும்பூவணத் தெய்திப்
படவாள்அர வம்தாங்கிய பரமன்உறை கோயில்
வடிவாக இயற்றிப்பணிந் தேவந்தனன் மன்னன்.

தூணில் தோன்றி இரணியனை அழித்த திருமால் துதித்த கடல் சூழ்ந்த இராமேஸ்வரத்தில் வழிபாடு செய்தான். வழியில் நீலகண்டனின் கோயில்களையெல்லாம் வணங்கினான். பெரியதாகிய திருப்பூவணத்திற்கு வந்தான். ஒளிவிடும் படம்கொண்ட பாம்பைத் தாங்கிய பரமன் தங்கும் பூவணநாதர் கோயிலை அழகாக வடிவமைத்து வணங்கினான். 29

கொடிசேர்மதில் கருவைப்பதி குறுகிக்குழ கற்கே
படிஇல்லதோர் பணிசெய்து பணிந்தான்பரன் எய்தும்
தடமாம்திரி கூடாசலம் தனைப்போற்றினன் சார்ந்தான்
கடமாமுனி உறைசந்தனக் காவார்வரை கண்டான்.

கொடிகட்டிய மதிலை உடைய திருக்கருவை என்னும் பதிக்கு வந்து குழகன் [அழகன்] ஆகிய சிவன்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்தான்; வணங்கினான். இறைவனின் இருப்பிடமாகிய திரிகூடமலையைப் போற்றினான். அந்தப் பொதிகைமலையில், அகத்தியன் தங்கிய சந்தனமரக் காட்டைக் கண்டான். 30

## பொதிகை மலையில்

முக்களா வைத்தரி சித்ததி னுள்ள மூர்த்தங்கள்
ஒக்கலை யும்பணி வுற்றனன் அங்கண் உறைசோலை
மிக்குயர் தண்டலை சிந்தலர் கொண்டலை மேல்ஓங்கிப்
பக்கம் உறுந்திரள் முத்தலை வந்து படிக்கேறும்,

முக்களாவைத் தரிசித்தான். அங்குள்ள பிற திருக்கோயில்களிலும் மூர்த்த உறவுகளையும் பணிந்தான். அங்கே உள்ள சோலைகள் — தோப்புகளில் இருக்கும் மலர்கள், நீரலைகளை மூடும். அந்த அலைகள் கரைகளில் மோதும்போது முத்துகளைக் கரைக்குச் சேர்க்கும். 31

தண்பொரு ணாநதி கண்டு மகிழ்ந்து தடஞ்சாரல்
திண்கிளை மேல்அணி மஞ்சு படிந்த திறத்தாலே
கண்சின வேழம்மு ழங்கிட ஓடு கருங்கொண்டல்
விண்புக நீள்கை பிசைந்தறல் மென்று விரிந்தாரும்,

பொருனையைக் கண்டு மகிழ்ந்தான். அம்மலையின் அருவிச்சாரலின் மரங்களின் திண்மையான கிளைகளில் மேகங்கள் படியும். சிவப்பான கண்களைக்கொண்ட யானைகள், மேகங்களைப் பகைநாட்டு யானைகள் என்று கருதிக் கத்தும். கருமேகங்கள் பயந்து விண்ணுக்கு ஓடும். யானைகள் கையைப் பிசையும். 32

தன்நிகர் மாமலை உந்திய தேனொரு சார்வோடும்
பன்மலர் நீடரு விப்புனல் சாடொலி யுட்பாங்காக்
கன்னிலம் மீதுயர் சந்தன முந்தகி லுங்கானம்
துன்னிய ளாய்வரு தென்றல் இளங்குளிர் தோய்ந்தங்கண்,

தனக்குத் தான் மட்டுமே ஒப்பான மாமலையில், தேன் ஒருபக்கம் அருவியாகப் பெருகி ஆறாக ஓடும்; பல மலர் களுடன் வரும் அருவி, தரையைச் சாடிப் பேரொலி கிளப்பும்; கல்லாகிய நிலத்தின்மேல் சந்தனமும் அகில்மரமும் ஓங்கி வளர்ந்திருக்கும். இளங்குளிர்த் தென்றல், சந்தன அகில் மணங்களில் தோய்ந்துவரும். 33

மன்னவர் மன்னன் வளங்கள் புகழ்ந்து மகத்துக்கள்
தன்னில்வ ளர்ந்து தவம்புரி சாலைகள் தனில்எய்தி
மின்னிரு டிக்கண் மாதவ ரைத்தொழு தேமேவத்
தன்னிகர் வோர்முக மன்புக லச்சர ணம்பெற்றே.

மன்னர் மன்னனாகிய ஆதிமனு, அப்பொதிகையின் வளங் களைப் புகழ்ந்தான். மகான்கள் தங்கியிருந்து தவம் செய்யும் தவச்சாலைகளுக்குப் போனான். தவஒளியால் மின்னும் ரிஷிகணங்களாகிய மாதவர்களைத் தொழுதான். அங்கே அவர்களை வணங்கவந்த மற்ற நாட்டரசர்கள் உபசார வார்த்தைகள் கூறி வணங்க, அவ்வரவேற்பை ஏற்றான். 34

கண்டு மகிழ்ந்தவன் எல்லை கடந்து கடம்பொங்கும்
தெண்டிரை மானதி வானவர் ஆடு திறங்கண்டான்
விண்டுயர் சந்தம் உறும்குவடு எய்திய மேலோனை
அண்டர்கள் போற்றினர் ஏற்றிடு மங்கண் அகன்றப்பால்

அந்த மலையழகைக் கண்டு மகிழ்ந்த மன்னவன், மலைப் பாதையைக் கடந்து மிகஉயரமான உச்சிக்குப் போனான். தேவலோகம் தெரிந்தது. வானவர்கள் ஆகாச கங்கையில் குளித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். ஆதிமனு, பொதிகை மலையுச்சியில் ஏறித் தங்களைப் பார்ப்பதை அறிந்த தேவர்கள், அவனைப் போற்றினர். அவனும் வாழ்த்துகளை ஏற்றான். அங்கிருந்து அகன்று கீழிறங்கினான். 35

## ஆதிமனு அகத்தியனைத் தரிசித்தல்

மன்னும்உ லோபா முத்திரை அந்தண் மலர்ப்பாதம்
துன்னும் இடந்தொழு தேமுனி வோர்தொகை தான்சூழ
மின்னும் வியாக்கிர ஆசன மேவி வியந்தன்பாய்த்
தன்நிய மம்கொடு இருந்துறை யும்தவ னைக்கண்டான்.

*அகத்தியனின் மனைவியாகிய உலோபாமுத்திரை நிலைபெற்ற சிறப்புடையவள். அவளின் அழகிய குளிர்ந்த மலர் போன்ற பாதங்கள் படிந்த இடங்களை ஆதிமனு வணங்கினான். முனிவர்கள் கூட்டம் புடைசூழ, மின்னுகிற புலித்தோல் ஆசனத்தில் வியப்பூட்டும் அன்புடன், தன்னுடைய நியமங்கள் [தவக்கடமைகளைச்] செய்துகொண்டிருந்த அகத்தியனை ஆதிமனு கண்டான்.* 36

கண்டனன் அன்பு கசிந்திட வந்து கனிந்தோகை
மண்டுமெய் மண்துகள் கொண்டிட உண்டுறை வண்டாடும்
புண்டரி கப்பதம் முன்பு பணிந்து புனைந்தேநா
விண்டு தழைத்து மகிழ்ந்து வியந்து துதிக்கின்றான்.

*அன்பு கசிய, கனிவுடன் அவனருகில் வந்து மகிழ்ச்சியுடன் உடம்பில் மண்துகள் செறிந்து படியும்படியாத் தரையில் விழுந்து வணங்கினான். வண்டுகள் ஒலிக்கும் தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கினான். கால்களைத் தலையில் ஒற்றிக் கொண்டான். வாய்விரித்து மகிழ்ந்து வியந்து துதித்தான்.* 37

குன்றை அடர்த்தருள் கொண்டுயர் குன்றே குரைநீரைப்
பொன்ற அயின்றிடு போதா வாதா வியினோடும்
துன்றிய வில்வல னைத்தெறு தூயோய் துகள்இல்லா
மின்திகழ் வேணி விளங்கிய மாதவ னேஎன்று.

*'மகாமேருமலையைப் பாதாளத்துக்குப் போகுமாறு அமுக்கியவரே! உயர்ந்த மலைபோன்றவரே! ஒலிக்கும் கடல் நீரைக் கைக்குள் அடக்கிப் பருகிய ஞானியே! வாதாபி, வில்வலன் ஆகியோரைச் சூழ்ச்சியால் அழித்த தூயவரே! குற்றமில்லாத ஒளிவிடும் தலையழகு கொண்ட மாதவரே!' என்று, நின்று துதித்துப் பின் பணிந்தான்.* 38

நின்று பணிந்திடு மன்னனை மாமுனி நேர்நோக்கித்
துன்று புவிக்கர சேமனு நீதி துலங்கச்செய்து,
என்றும் நிறுத்திய வண்புக ழாய்இம யச்சாரல்
குன்றுடை யோன்என மிக்க தவம்செய் குணத்தோனே.

*அகத்தியர் ஆதிமனுவை நோக்கி, 'விளங்கும் உலக அரசனே! நீதி விளங்குமாறு அதை நிலைநிறுத்தி வலிமையான புகழை ஏற்றுக்கொண்டவனே! இமயமலையை உடையவனே! மிக்கதவஞ் செய்தவனே! குணசாலியே!' என்று உபசார*

என்னவே முகமன் கூறி இங்குநீ வரல்யா தென்ன
மன்னவன் முனியைப் போற்றி மகவினை வேண்டிக் காசி
நன்னக ரிடத்தில் சென்று நாதனைப் பூசித் தேனால்
முன்னவன் கனவில் தோன்றி முனிவரன் பொதிகை நண்ணி,

'இங்கு வந்த காரணம் என்ன?' என்று அகத்தியர் கேட்டார். 'குழந்தைப் பாக்கியத்திற்காகக் காசிக்குச் சென்று, இறைவனைப் பூசித்தேன். அவர் என் கனவில் தோன்றினார். 40

குறுமுனி வனைப்ப ணிந்தான் கோவுறை மருதின் சீர்கள்
அறைகுவன் அதுகேட் டங்ஙன் எய்துவை அவண்உன் னாலே
நிறைதிருப் பணியும் கொண்டு நினதுளம் மகிழ்ச்சி எய்தப்
பெறுவரம் அளிப்போம் என்று பிஞ்ஞகன் அருளிச் செய்தான்.

முனிவர்கள் வாழும் பொதிகைக்குச் சென்று அகத்தியரைப் பணிந்தால், யாம் வாழும் திருப்புடைமருதூரின் கீர்த்திகளைச் சொல்வார். அதைக்கேட்டு, அந்தப்படி நடந்துகொள். அவ்வூரில் நீ திருப்பணிகள் செய். அவற்றை ஏற்று, உன்மனம் மகிழும்படியாகப் பெரிய வரம் அளிப்பேன். என்று, இறைவன் கனவில் அருள் செய்தார். 41

அப்பணி ஈசன் சாற்றும் அப்பணி கொண்டிங் குற்றேன்
திப்பிய வரையில் வாழும் சிவம்உணர் முனியே என்றான்
துப்புறழ் வேணி அண்ணல் கூறிய சுதின வாக்கு
மெய்ப்புக ழான்இம் மன்னன் இங்குற்ற வியப்பு நோக்கா,

'அப்பு ஆகிய கங்கையைத் தலையில் அணிந்த ஈசன் சொன்ன அப்பணியை ஏற்று இங்கு வந்தேன். திவ்வியமான மலையில் வாழும் சிவத்தை உணர்ந்த முனிவரே!' என்றான். பவளம் போன்ற சடையை உடைய சிவன் கூறிய மங்கல வாக்குப்படி, உண்மைப் புகழாளியாகிய மன்னன் பொதிகைக்கு வந்ததைக்கேட்டு, அகத்தியர் அதிசயப்பட்டார். 42

அதிசயம் அடைந்தான் எங்கோன் அருளினை உவந்தான் ஆதி
மதிதரு மனுவே என்று மலர்முகம் மகிழ்ச்சி எய்தி,
விதியுறு முனிவன் தானும் வேந்தனுக் கிருக்கை நல்கத்
துதிகொடு முனியைப் போற்றித் தோன்றலும் இருக்கும் ஏல்வை,

இறைவனின் அருளை எண்ணி அதிசயித்தார்; மகிழ்ச்சி அடைந்தார். 'ஆதிமனுவே' என்று அழைத்து, முகம்மலர்ந்து மீண்டும் மீண்டும் மகிழ்ந்தார். இறைவனின் கட்டளையை ஏற்ற அகத்தியர், ஆதிமனுவுக்கு அமர்வதற்கு ஆசனம் கொடுத்தார். துதித்தபடி மன்னன் அதில் அமர்ந்தான். 43

## பொருனை, சிறுமியாம் உருவெடுத்து வருதல்

அப்பொழுது அகத்தி யன்பால்
அம்புய மலரோன் போன்று
துப்புஉறழ் மலர்கள் பூத்த
தூய்மைபோல் முகத்தில் தோன்றிச்
செப்புஇளம் கொங்கை தோன்றும்
சிறுமியாய்ப் பொருனைச் செல்வி
மைப்படி கூந்த லாள், ஓர்
வாலையாய் வந்து நின்றாள்.

திருமாலின் கொப்பூழில் பூத்த தாமரையிலிருந்து பிரமன் தோன்றினார். அகத்தியனின் மலர்ந்தமுகத்திருந்து, மணம் பொருந்திய மலர்களின் தூய்மைபோலப் பொருனை பாலப் பருவப் பெண்ணாகத் தோன்றினாள். அவள் செப்புப் போன்ற இளமையான முலைகள் தெரியும்படியாக, கருப்பான கூந்தலுடன் வந்தாள். இக்காட்சியை ஆதிமனு பார்த்தான். 44

மனுஇவள் தன்னை நோக்கி மற்றிவள் யார்கொல் என்ன
முனிவனை வினவ லோடும் மொழிகுவான் முன்னோன் தன்பால்
பனிமலைச் செல்வி தந்த பங்கய மாலி நீராள்
தனியருள் தரங்க வல்லி தாம்பிர பன்னி என்பாள்,

அவளைப் பார்த்த ஆதிமனு, அகத்தியனிடம், 'இவள் யார்?' என்று கேட்டான். அகத்தியர், 'சொல்கிறேன்'. இறைவனிடம் இமவான் மகள் [உமை] அளித்த பங்கயமாலியைப் போன்றவள். தனித்தன்மை வாய்ந்த அருள் உள்ளவள். தாமிரபரணி என்பது இவள் பெயர். 45

அறைகுதும் அவள்தன் செய்கை அதில்இந்த வரையின்மேன்மை
இறையவன் கயிலைக் கொப்பாம் எப்படி யென்னில் அங்கு
நிறைகலை நூற்றுப் பத்து நிலவும்இவ் வரையில் அன்றிக்
குறைவிலாத் தென்ற லாலே உயிர்க்கின்பம் கொடுக்கும் மாதோ.

இவளின் செயலையும், இவள் உதிக்கும் பொதிகை மலையின் செய்கையையும் சொல்கிறேன். பொதிகைமலை கயிலாயத்திற்கு ஒப்பானது. எப்படி என்றால், கயிலாயத்தில் நூற்றுப்பத்துக் கலைகள் [மூலிகைகள்] உள்ளன. அவற்றுடன் குறைவில்லாமல் உலாவும் தென்றல் என்னும் உயிர்காக்கும் கலையும் இங்கே உள்ளது. 46

இறையவன் உயிர்கட் கின்பம் என்பதும் இதனால் ஆகும்
முறைதனில் பொதியக் குன்றும் கயிலையும் முதல்வற் கென்றும்
உறையிடம் ஆகும் என்றே உரைத்திடப் பட்ட திந்த
நறைகமழ் வரையில் நாம்வந் திடுசெயல் நவிவல் உற்றாம்.

இறைவன் உயிர்கட்கு இன்பம் கொடுப்பவர் [சங்கரன்] என்பதும் இவ்வகையிலேயே ஆகும். முறைப்படியாகப் பொதிகை மலையும் கயிலாயமும் இறைவனுக்கு உறையும் இடம் ஆகும் என்று சொல்லப்படுகிறது. இந்தப் பொதிகை மலைக்கு நான்வந்த வரலாற்றைச் சொல்கிறேன். 47

## பொதிகைக்கு அகத்தியன் வந்த வரலாறு

ஆதியில் இமய ராசன் அருமகப் பேறு வேண்டிக்
கோதையாள் மேனை யோடும் கூடியே தவம்செய் காலை
மாதவ உருவாய் அன்னோர் தமக்கொரு மகளாய்த் தேவி
சாதகி யாய்வ ளர்ந்து தவம்செய்தாள் அரனை நோக்கி.

ஆதிகாலத்தில் இமயராசன் மகப்பேறு வேண்டி, மனைவி மேனையுடன் தவம் செய்தான். அவன் தவத்தின் உருவமாக உமாதேவியே மகளாய் வந்தாள். மந்திரசாதகம் பண்ணுபவளாக வளர்ந்தாள். சிவனை நோக்கித் தவம் செய்தாள். 48

மாதிவள் தவத்துக் காக வரதனும் வந்து நோக்கிப்
பேதைபால் ஒருமுத் தாரம் பெட்புடன் தரித்தான் அன்னாள்
பூதநா யகனைப் போற்றிப் புண்டரி கத்தார் பூட்டி
நாதநீ என்னை வேட்க நற்றவம் புரிந்தேன் என்றாள்.

உமாதேவியின் தவத்தை மெச்சி, இறைவனும் வந்தார். அவளைப் பார்த்தார். அவளுக்கு முத்துமாலையைக் காதலுடன் அளித்தார். அவள் பூதங்களின் பதியாகிய இவனுக்குத் தாமரை மலர் மாலையை அணிவித்தாள். 'நாத! என்னை நீ மணம் புரிந்து கொள்வதற்காக நான்தவம் செய்தேன்' என்றாள். 49

என்றிடு மொழிக்கி சைந்தே இறையவ ளுடனே எங்கோன்
வென்றிசேர் இமய ராசன் விதித்தமண் டபத்தில் எய்த
மன்றலந் திருவி ழாவின் மணத்தினைக் காண்பான் போந்தார்
பொன்திகழ் அலங்கல் மார்பன் பூவுறை பிரம தேவன்,

அதற்கு இறைவன் சம்மதித்தார். இமயராசன் ஏற்படுத்திய திருமண மண்டபத்திற்கு, இறைவியுடன் இறைவன் வந்தார். திருமணத்தைக் காணப் பலரும் வந்தனர். பொன்மாலை அணிந்த திருமால், பூவில் வாழும் பிரமதேவன் ஆகியோர் வந்தனர். 50

மன்றலந் தாரு நாடன் முதலிய வானோர் ஏனோர்
துன்றிய உருத்தி ராதி தொகுகணத் தார்கள் மேலை
நின்றுழல் உருத்தி ராதி நீலலோ கிதர்கூர் மாண்டர்
மின்திகழ் மேனி அண்ணல் மெய்அருள் பெற்று வாழ்வோர்,

மணம்பொருந்திய கற்பகநாட்டு இந்திரன், வானுலகத்தவர், மற்றவர்கள், உருத்திரர் முதலாகிய கணங்கள், நீல உலகத்தவர்கள் பதினொரு கோடி ருத்திரர்கள், கூர்மாண்டர்கள், மின்னொளி அண்ணலாகிய சிவனருட் செல்வர்கள் வந்தனர்.

51

ஆடகே சுரர்வ சுக்கள் அட்டமூர்த் திகர்கள் அம்தார்
சூடிய சேத்ர பாலர் தொகையிலா அண்டந் தோறும்
நீடிய கடவு ளாரனோர் நிருதர்விஞ் சையர்கள் அன்றிக்
கூடிய திக்கில்உள்ளோர் முனிவர்கள் குவல யத்தோர்,

ஆடகேசுரத்தைச் சேர்ந்தவர்கள், எட்டுக்கோடி வசுக்கள், மூர்த்திகள், அழகிய மாலைசூடிய க்ஷேத்ரபாலர்கள், எண்ணிக்கையில்லா அண்டங்களில் வாழும் கடவுளர்கள், அரசர்கள், வித்தியாதரர்கள், எட்டுத் திசையில் உள்ளவர்கள், முனிவர்கள், மண்ணுலகத்தவர்கள் வந்தார்கள்.

52

மற்றுளோர் யாரும் தங்கள் மரபுளோர் மாதர் மைந்தர்
சுற்றுசே னைக ளோடும் சுலவுவி மானத் தோடும்
கற்றன கழறிப் போற்றிக் கடவுள்கல் யாணம் காண
உற்றனர் தங்கள் தங்கள் ஊர்திகள் உகைத்துப் போந்தார்.

விடுபட்ட உலகத்தவர்கள், யாவரும் தங்கள் மரபினரையும், மனைவிமார்களையும், பிள்ளைகளையும், சுற்றத்தினரையும், சேனைகளையும், அழைத்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் தாம்கற்ற தோத்திரங்களைச் சொல்லியபடி, கடவுளின் கலியாணத்தைக்காண வந்தார்கள். தங்கள் தங்களுக்குரிய ஊர்திகளில் வந்தார்கள்.

53

## அகத்தியனுக்கு இறைவன் இட்ட கட்டளை

கந்தமோ டுருவு தாங்கிக் கானமும் மலையும் மற்றும்
இந்திர மாவுங் கோளும் நாள்களும் உடுக்கள் யாவும்
சிந்தையோ டெய்த அங்஭ன் யாவரும் செறித லாலே
இந்தமே தினிஉ யர்ந்த திமயமால் வரைதாழ்ந் தன்றே.

காடுகள், மலைகள், கற்பகமரம், கோள்கள், நாள்கள், நட்சத்திரங்கள் முதலியன யாவும் உருவம் எடுத்துச் சந்தனம்

பூசிக்கொண்டு கலியாணம் பார்க்க வந்துவிட்டன. அப்படியா வும் யாவரும் வந்ததால் தெற்கு உயர்ந்தது. பாரம் தாங்காமல் இமயமலைப் பகுதி அமிழ்ந்தது. 54

நிற்பது கண்டு வானோர் நிமலனைப் போற்றி அந்தப்
பொற்புயர் வரையில் வந்தோர் யாவரும் புந்தி மாழ்கிச்
சொற்பல முறையோ என்றார் நேர்பட அருள்வாய் தொல்லை
அற்புத என்று தாழ்ந்தார் அரன்அதற் கருளிச் செய்வான்,

இமயப்பகுதி தாழ்ந்து நிற்பதைப் பார்த்துத் தேவர்கள் மற்றும் அங்கு வந்தோர் யாவரும் இறைவனைத் துதித்தார்கள். அறிவு தடுமாற ஏதேதோ பேசினார்கள். 'இதுமுறையா?' என்றார் கள். 'இறைவா அருள்செய்' என்றார்கள், 'பழைமையானவனே! அற்புதனே!' என்றார்கள். சிவன் அருள் செய்தார். 55

அப்பொழு தெனைஅ ழைத்தே அன்பன்நீ எனக்கொப் புந்தன்
மைப்படி கூந்தல் செவ்வாய் மாதுநம் உமைஒப் பிந்த
வெற்புநேர் அமையத் தென்றல் வெற்பினுக் கேகுவாய் என்(று)
இப்புவி மகிமை எல்லாம் இயம்பினன் உரைக்க டங்கா.

என்னை அழைத்தார், 'அன்பனே! நீ எனக்கு ஒப்பானவனாய் ஆவாய். கருத்த கூந்தலை உடையவளும், சிவந்த வாயை உடைய வளும் ஆகிய மணப்பெண் உமையம்மை. அவள் அருளுக்கு ஒப்பானது தென்றல். இந்த இமயமலைக்கு ஒப்பான பொதிகையில் தென்றலும் வீசும். அங்கே செல்.' என்று, உத்தர விட்டுப் பொதிகையின் சிறப்புகள் யாவற்றையும் சொன்னார். அவை வார்த்தைகளில் அடங்காத விரிவுடையன. 56

## பொதிகையில் இறைவன் மணக்கோலம் காட்டுதல்

அதுநிற்க பின்னும் ஈசன் அற்புத மணக்கோ லத்தை
புதுமலர்ச் சோலை சூழ்ந்த பொதிகையில் காண்பாய் என்று,
மதிவைத்த சடையோன் கூறி வனசத்தார் இவளை ஈந்தான்;
நதிஉற்ற கடத்தில் ஏந்தி வந்ததை நவிலல் உற்றாம்.

அதுநிற்க. 'அற்புத மணக்கோலத்தை, புதிய மலர்கள் உள்ள சோலைகள் சூழ்ந்த பொதிகையில் நீ காணலாம்' என்றார். மதிவைத்த சடையோன் பின்னும் சொன்னார். தாமரை மலர் மாலையையும் [இமவான்மகளாம் உமை இறைவனுக்குச் சூட்டியது] இவளையும் [பாடல் 44] கொடுத்தார். பொருநை யாகிய இவளை ஒரு கமண்டலத்தில் ஏந்திக்கொண்டு இங்கு வந்தேன். 57

இமையமால் வரையில் எங்கோன் ஈந்திடும் இவள்தன் னோடும்
உமையவள் கணவற் போற்றி விடைபெற்றவ் வோங்கல் நீங்கிச்
சிமையமால் வரையாம் இந்தப் பொதிகையில் சேருங் காலைச்
சமையகல் யாணக் கோலம் சங்கரன் தரப்பெற் றுய்ந்தேன்.

இமயமலையில் என் தலைவன் கொடுத்த இவளுடன் உமையவள் கணவனைப் போற்றி, விடைபெற்றுக்கொண்டு, அம்மலையை விட்டு நீங்கி, பெரிய சிகரத்தை உடைய இந்தப் பொதிகைமலைக்கு வந்தபொழுது, இறைவன் இங்கே கலியாணக் கோலத்தைக் காட்டினார். நான் மிக மகிழ்ந்தேன். 58

அற்புதம் அடைந்தேன் எங்கோன் அருளிய வனசத் தாராம்
பொற்புடைக் கண்ணி தன்னைப் பொதிகைநா யகற்குச் சாற்றிப்
பற்பல துதிகள் செய்தென் பதுமமா லிகைஇம் மங்கை
சிற்பரன் அருளி னாலே சிறந்திடு நதியாய்ப் போந்தாள்.

அற்புதக் கோலம் கண்டேன். என் தலைவன் அருளிய தாமரைமாலையைப் பொதிகைநாயகனுக்குச் சூட்டினேன். பற்பல துதிகள் செய்தேன். என் மகளாகிய இவளும், இறைவனின் தாமரைமலர் மாலையும் இறைவன் அருளால் சிறந்த நதியாக, பொருனையாக வளம் செய்கின்றது. 59

## திருப்புடைமருதூர்ப் பெருமை

வாலைதன் செயல்இ தாகும் மன்னர்கள் மன்ன காசி
நீலமா மிடற்றோன் வாக்கால் அருளிய நிமலன் வாழும்
கோலமா மருதே தென்னில் குவடிதன் கீழ்சா ராகச்
சாலும்இந் நதிசூழ்ந் தோங்கி இருப்பது சாற்றக் கேளீர்.

இங்கு வந்த இப்பெண்ணின் பெருமை இதுவாகும். மன்னர் மன்னனே! காசியில் உனக்கு நீலகண்டன் சொன்ன வாக்கில் அழகான மருதத்தலம் பற்றிச் சொல்லியுள்ளார். அது என்ன வென்றால், மலையிற் பிறந்த பொருனையின் கிழக்குப் பக்கம், இந்த நதி சூழ்ந்துசெல்லும் தலமாகும். அதன் பெருமையைச் சொல்கிறேன் கேள்! 60

இந்நதி சூழ்ந்த காசி எழில்புடை மருதின் மேன்மை
தன்னிகர் புருடன் கண்ணாம் தாரக முத்தி நல்கி
மன்னிய உயிர்கட் கிம்மை மறுமையும் மகத்வம் நல்கிப்
பொன்நக ரத்தின் மேலாம் சிவபுரம் புகுத்தும் மாதோ.

பொருனைநதி சூழ்ந்த காசி திருப்புடைமருதூர். அழகான அத்தலம் விராட்புருஷனின் கண்ணாகும். தாரக உபதேசம் செய்து முத்திதரும் தலமாகிய இது, நிலைபெற்ற உயிர்களுக்கு

*இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் மகத்துவம் கொடுப்பதாகும். இந்திரனின் பொன்னகரத்தைக் காட்டிலும் மேலானது; சிவபுரத்திற்குச் சேர்ப்பிப்பது.* *61*

புடைஅருச் சுனமே சக்தி;
புடைஅரும் சுனமே நாதன்!
புடைஅருச் சுனமே நாதம்;
புடைஅருச் சுனமே விந்து!
புடைஅருச் சுனமே வேதம்;
புடைஅருச் சுனமே போதம்!
புடைஅருச் சுனத்தின் பூவே
புடைஅருச் சுனற்கு நாமம்!

*சக்தி, சிவம், நாத தத்துவம், விந்து தத்துவம், வேதம், ஞானம் எல்லாம் திருப்புடை மருதூரே ஆகும். மருதப்பூவின் பெயராகிய நாறும்பூ என்பதே, அங்குள்ள இறைவனின் திருப்பெயராகும்.* *62*

ஆதியில் கற்ப கம்சேர் பொன்நக ரத்தில் பாக
சாதனன் பரவும் இந்தத் தலத்தினில் போக்கிப் பின்னும்
நீதிநல் வரமும் பெற்றான் நீயும்இத் தலத்தில் வேண்டும்
காதலின் நினைந்த எல்லாம் கருத்துறப் பெறுவாய் என்றான்.

*ஆதிகாலத்தில், கற்பகமரம் உள்ள பொன்னகரத்து இந்திரன், இங்குவந்து பாவம் போக்கிக்கொண்டு, நீதிகளை அறிந்து வரங்கள் பெற்றான். நீயும் விரும்பி நினைக்கும்யாவற்றையும் இந்தத் தலத்தில் நன்றாகப் பெறுவாய் என்றார் அகத்தியர்.* *63*

## சிவமந்திர உபதேசம் செய்து அனுப்புதல்

அப்புடை யருச்சுன மதுத்தர முகந்தநதி
அப்பதிய தென்றுமுனிவன்
செப்பிஅவ ணிற்செலுதி திங்களொடு கங்கையணி
செம்மல்அருள் செய்ததனிலே
மெய்ப்புகழ் உறும்பணி விருப்புடன் உனைக்கொடு
விதித்திடுவன் என்று மனுவுக்கு
ஒப்பில்சிவ மந்திரம் உரைத்துறுதி செப்பிஅவன்
ஒல்லையில் விடுத்தனன் அரோ.

*அகத்தியர், 'திருப்புடைமருதூரில் மருதமரமலர்களின் தேன் சொட்டும். அத்தேனுடன் கலந்து பொருனை நதிபாயும். அங்குச் செல். திங்களும் கங்கையும் அணிந்த சிவன் அருள்*

செய்வார். உண்மையான புகழை நீ அடையும்படி, பொருத்த மான திருப்பணிகளை உன்னைக்கொண்டு செய்யச் செய்வார்.' என்று சொல்லி, ஒப்பற்ற சிவமந்திரத்தை உபதேசம் செய்து, அம்மந்திரத்தின் சிறப்புகளையும் சொல்லி, விரைவில் அவனைப் புறப்படச் செய்தார். 64

அன்றுமுனி வன்தனை வணங்கிவிடை கொண்டுவகை
ஆகிஅர சன்அப்பொழுதே
குன்றதனி னின்றும்வழி கொண்டுறு குழாத்தினொடு
கோதைஅரு விப்புனல்உலாய்
மன்றல்தரு முக்களவில் மங்கலை யுடன்பரமன்
வண்கழல் இறைஞ்சி மகிழ்வாய்த்
தென்றல்உறு சோலைதிகழ் கின்றபதி யும்தொழுது
சிந்தைகொடு வந்தபொழுதில்,

மகிழ்ச்சியுடன் அகத்தியரை வணங்கி விடை பெற்றுக் கொண்ட ஆதிமனு பொதிகையிலிருந்து புறப்பட்டான். குன்றி லிருந்து அருவியாக வெளிப்படும் பொருநை உலாவும் திருக்களா வில் மங்கலையாம் உமையுடன் பரமனின் மணக்கோலத்தைத் தரிசித்து, அவர் திருவடிகளை வணங்கி, உற்சாகமாகத் தென்றல் உலாவும் அந்தப் பதியையும் வணங்கிப் பயணித்தான். 65

சாதிமகிழ் சந்தொடு தழைந்தபொழில் சூழவளர்
தண்மருதி தென்றுபெரியோர்
ஓதவெகு வாய்அளவி லாதமகிழ் வுற்றுமெய்
உளந்தருசொ லொன்றிபொருமித்
தேதம்அக லக்குட நதிக்குடக மேவுகரை
எய்திஇறை போற்றிஇனிய
சீதநதி யுற்றதனில் ஆடிநிய மஞ்செய்து
திருப்புடை நகர்க்கண்உறுவான்.

'இது, சாதிப்பூ, மகிழம்பூ, சந்தனமுல்லை ஆகியவை தழைத்த பொழில்கள் சூழ்ந்த தண்மையான திருப்புடைமருதூர்' என்று, பெரியவர்கள் சொன்னார்கள். ஆதிமனு அளவிலாத மகிழ்ச்சியடைந்தான். மெய், மனம் அந்த வார்த்தையில் லயித்தன. மகிழ்ச்சியால் விம்மினான். உடல் விரிந்தது. பொருநைநதியின் மேற்குக் கரைக்கு வந்தான். இறைவனைப் போற்றினான். இனிமையான குளிர்ந்தநீரில் குளித்தான். நியமங்கள் செய்தான். திருப்புடைமருத நகருக்குள் நுழைந்தான். 66

அருச்சுன நவ்வல் எய்தித் தவத்தர்ஆச் சிரமங்கள் போற்றி,
அருச்சுனன் புயங்கள் ஓர்ஆ யிரம்அரிந் தவனும் காணா

அருச்சுனப் புடையில் மேவும் அமலமா இலிங்கம் தன்னை
அருச்சனை செய்ய எண்ணி ஆவலோ டணையும் போது,

அருச்சுனப்பதியில் தவசிகளின் ஆசிரமங்களை வணங்கினான். அரிய 'சுனன்' என்னும் அரக்கனின் ஆயிரம் தோள்களை வெட்டிய திருமாலாலும் காணமுடியாத திருவடிகளைக் கொண்ட அருச்சுனப்பதியில் வாழும் மலமற்ற பெரிய இலிங்கத்திற்கு அருச்சனை செய்ய, ஆதிமனு எண்ணினான். மருதமரத்தைப் பார்த்தான். 67

## மருதம் திருமால் போன்றது

குழைத்துவிண் படரும் கோட்டுக் கொழுநிழல் மருதத் தாருத்
தழைத்திடும் பசிய தோற்றம் தண்துழாய்ப் படலைத் தாரோன்
திழைத்திடப் புவனம் மூன்றும் மூன்றடி அளந்து செவ்வே
மழைத்தபைங் கிரிபோல் நின்ற வண்ணம்ஒத் திருந்த தன்றே.

தழைகள் தழைத்து ஆகாயத்தை நோக்கிக் கிளைகள் படர்ந்திருந்தன. அதன் நிழல்கொடுத்தது. அந்த மரத்தின் பசுமைநிறம், துளசிமாலையை அணிந்து உலகம் மூன்றையும் மூன்றடிகளால் அளந்து மழைமேகம் படர்ந்த மலைபோல் நின்ற திருமாலின் நிறம்போல் இருந்தது. 68

## உமைபோன்ற மருதம்

விளங்கரை பருமம் போலும் விரிமுடி மஞ்சு போலும்
இளங்கனங் குடைஉ லாவும் இயல்நிறம் பசுமைகாட்டும்
வளந்திகழ் காமன் யோக மருதனும் மனுவாம் தாரு
களங்கனி அனைய கண்டன் கற்பினாள் போலும் அன்றே.

மரத்தின் நடுப்பகுதி அல்குல்போல இருக்கும். 'விரிவான மேற்பகுதி மேகம்போல இருக்கும். இளையமுற்றிய தளிர்கள், இயல்பான பச்சைநிறத்தைக் காட்டும். வளம் திகழ்வதால் காமனின் யோகம்போன்ற மந்திரமாகிய அம்மரம், களாம்பழம் போன்ற நீலகண்டனின் கற்பினாள் [உமையாள்] போன்றது. 69

## இறைவனின் திருவிளையாடல்

நதிசுலா மருதைக் கண்டு நாடியே நயந்து சென்று
துதிகொடு செயநின் றேத்தப் புடையில்வாழ் சுயம்பு தன்னை
மதிமுக மாதர் மூவர் வணங்கிடக் கண்டு வந்தான்
புதியன மனுவைக் கண்டு கன்னியர் புடையின் மேவ.

பொருனை சுற்றிவரும் மருதைக் கண்டு விரும்பித் துதிக்கவும் போற்றவும் அரசன் சென்றான். அதன் புடையில் உள்ள சுயம்புலிங்கத்தை, மதிபோன்ற முகத்தை உடைய அழகிகள் மூவர் வணங்கிக் கொண்டிருந்தார்கள். அக்காட்சியைப் பார்த்து அரசன் மகிழ்ந்தான். புதியவனாகிய ஆதிமனுவைப் பார்த்து, மருதின் பக்கத்தில் ஒதுங்கிச்சென்றார்கள். 70

அருகினில் எய்த அங்குப் பரவிடும் அந்நல் லாரை
விரைவினில் காணான் ஆகி வந்தவன் வியந்து பின்பு,
மருதினில் புடைவி லுற்ற மன்னுமா இலிங்கம் தன்னை
பரவிடப் பார்க்கும் போதில் காண்கிலன் புழுங்க லுற்றான்.

அரசன் மருதமரத்தின் அருகில் சென்றான்; வழிபாடு செய்துகொண்டிருந்த அப்பெண்கள், திடீரெனக் காணவில்லை. அரசன் வியந்தான். பின்னர் மருதமரத்தின் பக்கத்தில் சென்றான். நிலைபெற்ற பெரிய இலிங்கத்தையும் காணவில்லை. அரசன் துன்பம் எய்தினான். 71

நிருமலன் அருளால் உற்றேன் நெறிதவ றினனோ என்று
பரிதவித் தவத்தி பூர்வ பாவங்கள் உளதோ அன்றிக்
குருமொழி தவறுற் றேனோ எனப்பல சூழ்ந்து கோமான்
பரமனை உளத்தில் எண்ணித் துதித்திடும் பான்மை பூண்டான்.

அரசன், 'இறைவன் அருளால் இங்குவந்தேன்.ஏதேனும் நெறிதவறிய காரியம் செய்துவிட்டேனா' என்று பரிதவித்தான். பக்தி இன்மையால், பூர்வஜென்ம பாவங்கள் எவையேனும் உள்ளனவோ? அல்லது குருநாதர் உத்தரவுப்படி செய்யாமல் தவறு செய்து விட்டேனோ? எனப் பலவாறு யோசித்துப் பரமனை உள்ளத்தில் எண்ணித் துதிக்கத் தொடங்கினான். 72

நித்தனே பத்தி இல்லேன் நெறியிலேன் பொச்சாப் புற்ற
எத்தன்என் றிகழ்ந்தாய் ஆகில் என்செய்வேன் இமய மாதுக்
கத்தனே யானே செய்வ தறிகிலேன் அருள வேண்டும்
கர்த்தனே என்று நைந்து கவன்றனன் கருது கின்றான்.

'நித்தியமானவரே! என்னைப் பக்தி இல்லாதவன், நெறிதவறியவன், பொச்சாப்பு[குற்றம்] செய்யும் ஏமாற்றுக்காரன் என்றெல்லாம் நீர் இகழ்ந்தீரென்றால், நான் என்ன செய்யமுடியும்? இமவான் மகளுக்குத் தலைவரே! நான் என்ன செய்வது என்று தெரியவில்லை. கர்த்தரே! நீர்தான் அருள் செய்யவேண்டும்' என்று, நொந்து கவலைப்பட்டான். 73

## மனுவின் தற்கொலை முயற்சியும் இறைவன் தடுத்தாண்டதும்

மாதர்கள் போற்றி நின்ற வரதன்இங் ஙனம்ம றைந்தே,
பாதவத் தொழித்த தென்னோ பழவினைப் பகுதி தானோ
வேதனை யான இந்த விடக்கினைச் சுமந்தேன் வீணே;
ஆதலால் இந்த யாக்கை அகற்றுதல் இன்பென் றெண்ணி,

மூன்று பெண்கள் போற்றினர்; அவர்களும் மறைந்தனர். இறைவனும் மறைந்தார்! பழவினைத் தொடர்ச்சிதானோ? வேதனைதரும் இந்த ஊனை — மாமிசபிண்டத்தைச் சுமந்து கொண்டு, இன்னமும் வீணே இருக்கின்றேனே! இந்த உடம்பை அழிப்பதே இன்பம் என்று நினைத்தான். 74

எனஉளம் ஒருமித் தேந்தல் இங்ஙனம் மருதில் தானே
தனதுகை ஞாங்கர் வேலைத் தாக்கிஅவ் வேலின் தாளின்
மனவயிர் சத்தாற் பாய மதித்திந்த வழிய தாக
உனிநெடு வேலை வாங்கி ஒச்சினான் மருதில் ஊறாய்,

ஏந்தல்மனம் ஒருமித்து, தனது கையின்மேல் வேலை எடுத்து, மனவீரியத்துடன் வேலின் கால்பகுதி மருதமரத்தில் பாயுமாறு நீண்டவேலை ஓங்கி வீசினான். 75

உய்க்கின்ற பசும ரத்தில் ஊன்றிய ஆணி என்னத்
தைக்கின்ற வேற்பு றத்தில் சாடியே மாய உன்னி,
மைக்குன்ற வேழத் தின்பால் மடங்கல்பாய் வனவே போல,
எய்க்கின்றோன் உன்னும் வேளை ஈசன்அப் பொழுதில் தானே,

பசுமரத்து ஆணிபோல் வேகமாக வீசிய வேலின் அடிப்பகுதி, மருத மரத்தில் பதிந்தது. தற்கொலைக்கு முடிவு செய்தான். கருமையான மலைபோன்ற யானையின்மேல் சிங்கம் பாய்வதைப்போல, மருதமரத்தில் பதிந்த வேலின்மேல் பாய்ந்து தைத்துக்கொண்டு, இறப்பதற்காகப் பாய்ந்தான். 76

எய்ப்பிடத் தினில்வைப் பென்னும் இறைஇலிங் கமதாயத் தோன்றி
பைப்பணி அணிந்தோன் ஓர்கை நீட்டிப்பார்த் திபநில் என்று
செப்பியே தடுத்தான் அங்ஙன் திருமகன் கேட்டுக் கண்டு,
தற்பர வசத்தன் ஆகித் தன்வினை மறந்து தாழ்ந்தான்.

பலகீனமான காலத்துக்காகச் சேமித்துவைத்த செல்வம் போல, ஆபத்துக் காலத்தில் உதவும் இறைவன் — படமெடுக்கும் பாம்பை அணிந்த சிவன், இலிங்கமாய்த் தோன்றி ஒரு கையை நீட்டி, 'பார்த்திபனே [அரசனே] நில்' என்று கூறி,

அரசனின் பாய்ச்சலைத் தடுத்தார். அரசன் இறைவனின் செயலைக்கண்டும், சொல்லைக்கேட்டும் பரவசம் அடைந்தான். செயல்மறந்து விழுந்து வணங்கினான். 77

## இலிங்கத்தில் இரத்தமும் புண்ணும்

பணிந்தவன் எழுந்து நின்று பரமஇலிங் கத்தைப் பார்த்தான்
குணங்குறி கடந்தோன் மேனி வலப்புறங் குருதி பொங்கி,
நிணங்கிளர் வதனைக் கண்டான் நிலத்தினில் வீழ்ந்தான் சோக
அணங்கினை உற்றான் முற்ற அதுதெளிந் தரசன் பின்பு,

கீழே விழுந்து வணங்கிய அரசன் எழுந்து நின்றான். இலிங்கத்தைப் பார்த்தான். குணம் குறிகளுக்கு அப்பாற் பட்டவரின் மேனியின் வலப்புறத்தில் குருதி பொங்கியது. தசை, வெளியில் வந்து புண்ணாகியிருந்தது. அதைக்கண்ட ஆதிமனு, சோகத்தால் நிலத்தில் விழுந்தான். முழுதுமாக அச்சம் அடைந்தான். அச்சம் தெளிந்து எழுந்தான். 78

எழுந்தனன் நிலத்தில் பாய்ந்தான்;
ஈசனின் உருவில் சோரி
வழும்பதாக் கினன்நான் என்று
மனமெலாம் உருகி மாழ்கி,
அழுங்கினன் சோர்ந்தான் 'என்செய்
குதும்'என அழிந்தான் நின்று;
பழுங்கண்உற் றேனே நான்செய்
பாதகம் தவிர்ப்பாய் என்றான்.

நிலத்தில் விழுந்தபடி, 'ஈசனே! உன் உருவத்தில் நான், இரத்தம் வரும்படியாகவும், புண் ஏற்படும்படியாகவும் செய்து விட்டேன்!' என்று சொல்லி, மனமெலாம் உருகி அழுது பொருமினான். 'என் செய்வேன்' என்று துயரில் மூழ்கினான். மிக்க வேதனையடைந்தான். 'நான் செய்த பாதகத்தைத் தவிர்க்கவேண்டும்' என்றான். 79

கரும்போன்செய் பிழையும் அன்றிக் காலன்செய் பிழையும் பார்த்தன்
அரும்பிழை தனையும் மாறன் அடித்திடும் பிழையும் காத்தாய்
குரும்பைவெம் முலையாள் பங்கா அறிவிலாக் கொடியேன்செய்த
பெரும்பிழை பொறுத்துக் காப்பாய் பிஞ்ஞகா சரணம் என்றான்.

'மன்மதன் அம்பெய்த பிழையையும், இயமன் பாசக் கயிற்றைப் போட்ட பிழையையும், அர்ச்சுனன் வில்லால் அடித்த பிழையையும், அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்த

பிழையையும் பொறுத்துக் காப்பாற்றினீர். இளம் தேங்காயின் அளவும் கெட்டியும் உள்ள முலைகளை உடைய உமாதேவியைப் பாகத்தில் கொண்டவரே! அறிவில்லாத இந்தக் கொடியவன் செய்த பிழையையும் பொறுத்துக் காப்பாற்ற வேண்டும்! இறைவனே! சரணம்!' என்று கதறினான். 80

என்றுளம் வருந்திப் போற்றும் இறைமகன் தனைப்பு ரப்பான்
கொன்றைவே ணியன்முன் போலக் கோடரத் தூடா காயம்
ஒன்றிய வாணியாலே உரைத்தருள் புரிவான் ஒல்லை
நன்றுநின் செய்கை எல்லாம் நயம்என்று நவில்வான் பின்னும்,

இறைவனைப் போற்றி வருந்திய அரசனைக் காப்பாற்று வதற்காக, கொன்றை அணிந்த சடையைக் கொண்ட சிவன், மரப் பொந்தின் வழியாக விரைவாக ஆகாயத்தை அடைந்து, வானொலியாகப் பேசியருளினார். 'உன் செயலெல்லாம் நன்றான வையே; நயமானவையே' என்று சொல்லி மேலும்... 81

மருதிவை சிவமே என்று மலயமா முனிவன் கூறக்
கருதாநீ வேலால் இந்தக் ககத்தினில் ஒச்ச லாலே,
திருவுரு நமது மேனி வலப்புறம் சினவேல் தைக்க
இரணமாம் சோரி சோரக் கண்டனை இதற்குத் தீர்வு.

'பொதிகைமலையில் அகத்தியன் உன்னிடத்தில் மருதமரமே சிவம் [புடை அருச்சுனமே நாதன்' — பாடல் 61] என்று சொன்னார். அந்த வார்த்தையை மதிக்காத நீ, மருத மரத்தில் வேலைப் பாய்ச்சினாய். என் திருவுருவின் வலப் புறத்தில் சினவேல் தைத்தது. புண்ணாயிற்று. இரத்தம் சொட்டியதைப் பார்த்தாய். 82

## பூதிநாதன், புடைத்த அருச்சுனன்

துன்றுசெந் நீர்பாய் புண்ணில் பூதியைச் சொரிவா யாகில்,
நின்றிடும் சோரி அந்த நீர்மையால் பூதி நாதன்
என்றபேர் நமக்கெப் போதும் இயல்வதாம் இன்னும் அந்த
வென்றிவெற் புடையான் நாமம் புடைஅருச் சுனன்என் பாரே.

இதற்குத் தீர்வு உண்டு. நெருங்கிப் பாயும் செந்நீர்ப் புண்ணில், விபூதியை அபிஷேகம் செய். இரத்தப் போக்கு நிற்கும். அந்தச் செயலால் எமக்கு எப்போதும் 'விபூதி நாதன்' [பூதிநாதன்] என்ற பெயர் இயல்பாக அமையும். மூலத்தானத்து இறைவன் பெயரும் 'புடை அருச்சுனன்' என்று, உலகவர்கள் கூறுவார்கள். 83

வலப்புறம் வழும்பா யொன்று தோற்றியே வைய மீதில்,
உலப்பிலாது உறுவை வேலால் உறுகணோய் செய்த தற்குக்
குலத்தசாந் தாதி கூட்டும் தைலத்தாற் குளம்பால் ஆட்டி,
நலத்துடன் வருவாய் என்று நாயகன் நவிலக் கேட்டு,

புண் நீங்கிய பிறகு வலப்புறத்தில் தழும்பு ஒன்று தோன்றி அழியாதிருக்கும். வேலால் துன்பம் செய்ததற்காக நல்ல சாந்துக்குழம்பு கூட்டிய தைலத்தாலும், கருப்பஞ்சாற்றாலும், பாலாலும், நல்லபடியாக அபிஷேகம் செய்து வருவாயாக' என்று நாயகர் சொன்னார். *84*

வரன்திரு வலது மெய்யில் வடுவுறுஞ் சோரி நீங்க,
அரன்அருள் செய்த வாறே அயில்படு சோரி மாற,
விரைகமழ் பூதி அப்ப நிற்பது கண்டு வேந்தன்
புரகரன் தனைத்து தித்தான் புளகிதம் உற்று நின்றான்.

வரம்தரும் சிவனின் வலப்புறத்தில் புண் நீங்கவும், வெளியில் வழிந்த இரத்தக் கசிவு நிற்கவும், அரன் சொன்ன படியே மணம் கமழும் விபூதியை அப்பி அபிஷேகித்தான். இரத்தம் வடிதல் நின்றதைக்கண்ட வேந்தன், திரிபுரம் எரித்த சிவனைத் துதித்தான். புளகாங்கிதம் அடைந்தான். *85*

முனிவரர் அரஎன் றார்ப்ப முகைஅவிழ் கற்ப கத்தின்
பனிமலர் விண்ணோர் தூற்ற, பஞ்சநா தங்கள் ஆர்ப்ப,
இனியவி பூதி நாதர் இவர்என இயம்பி மேலோர்
கனிவுள மகிழ்வால் ஏத்தக் காவலன் துதித்துள் அன்பாய்,

முனிவர்கள் 'ஹர' என்று கூறி, ஆரவாரம் செய்தார்கள். மொக்கு அவிழ்ந்த குளிர்ந்த கற்பகமலர்களைத் தேவர்கள் தூவினார்கள். ஐந்து விதமான ஒலிகளை எழுப்பும் ஐந்துவகை வாத்தியங்கள் ஒலித்தன. மேலோர்கள், 'இனிமையான விபூதி நாதர் இவர்' என்று கனிவான மனமகிழ்வுடன் துதித்தார்கள். அரனை ஆதிமனு அன்புடன் துதித்தான். *86*

## ஆதிமனுவின் துதி

இரங்கினன் இவர்தாம் செய்த திருவிளை யாடல் எண்ணி,
புரந்தருள் மனுப்ப ணிந்தே புரகரா அடியேன் செய்த
அரும்பிழை பொறுத்தாய் அந்தோ அம்பிகை பாகா என்று,
வரம்பல எய்த நின்றோன் வரதனை வணங்கிப் போற்றி,

நாட்டைக் காக்கும் ஆதிமனு, இறைவன் செய்த திருவிளையாடலை நினைத்தான். தான் செய்த தவறுக்கு இரங்கினான். 'திரிபுரம் எரித்தவனே! அடியேன் செய்த பெரும்பிழையைப் பொறுத்துக்கொண்டாய். அம்பிகை பாகா!' என்றான். பலவரங்கள் பெறுவதற்கு உரியவனாகிய மன்னன், வரதனாகிய சிவனை வணங்கிப் போற்றினான். 87

வந்தனை செய்தெங் கோனைப் பூசிக்க மஞ்ச னாதி
சந்தன மலர்கள் வில்வம் தருநைவே தனம்அ டைக்காய்
கந்தம்ஆர் தூப தீபம் கனிவுடன் இவைக ளாலே
சுந்தரன் தனைப்பூ சித்து வணங்கியே துதிக்கின் றானால்.

இறைவனுக்கு வகைவகையான திருமஞ்சனப் பொருள்கள், சந்தனம், மலர்கள், வில்வம், நிவேதன வகைகள், வெற்றிலை பாக்கு, பொருத்தமான தூபமிட ஏற்ற மணப்பொருட்கள், தீபங்கள் ஆகியவற்றைக்கொண்டு, கனிவன்புடன் பூசனை செய்தான். வணங்கித் துதித்தான். 88

புரகரா போற்றி! வேதப்
புடைஅருச் சுனத்தில் வாழும்
கரமதா சலத்தோல் போர்த்த
கண்ணுதல் போற்றி! கங்கை
அரவுடன் மதி அணிந்த
அமலனே போற்றி! அன்பர்
பரவிட அருள்சு ரக்கும்
பரமனே போற்றி! போற்றி!

[புரகரா — திரிபுரங்களை அழித்தவரே; கரமதாசலத் தோல் — துதிக்கை உடைய மதம்பொருந்திய மலைபோன்ற யானையின்தோல்; கண்ணுதல் — நெற்றிக்கண்ணை உடையவரே! அரவு—பாம்பு; அமலனே — ஆணவம் கன்மம்மாயை என்ற மூன்று குற்றங்களும் இல்லாதவரே!] 89

செழும்தரு எறிந்த வேலால்
தேவனே! தினக ரன்போல்
எழும்,சிவ இலிங்கத்து உற்றாய்
இயற்றியே என்னை ஆண்டாய்;
உழுந்துஅளவு ஆக்கி நஞ்சம்
உண்டுவிண் ணோரை அன்று
கொழும்தரு ஏற்றிக் காத்த
குழகனே! போற்றி! போற்றி!

*தேவரே! செழுமையான மருதமரத்தில் நான் பாய்ச்சிய வேலின் காரணமாக எழும் சூரியன்போல் இலிங்கத்தில் தோன்றிக் காட்சிதந்தீர் — என்னை உண்டாக்கியவரும் நீரே! இன்று காப்பாற்றியவரும் நீரே! திருப்பாற்கடல் கடைந்த அன்று, அதில்தோன்றிய விஷத்தை ஒரு சிறிய உழுந்தின் அளவு ஆக்கி, அதனை உட்கொண்டு, தேவர்களைக் காத்து, கொழிப்புடன் வளர்ந்த கற்பகம் உள்ள நாட்டில், மீண்டும் வாழுமாறு காத்த சிவனே! போற்றி ! போற்றி!* 90

**காமனைக் காய்ந்தாய்! போற்றி!**
**கனல்விழிக் கனலே! போற்றி!**
**மாமனை வேள்வி தன்னில்**
**மாய்த்தவ! போற்றி! மாறுஆம்**
**பூமனைக் கண்டி மீதில்**
**பூமுடி அரிந்தாய்! போற்றி!**
**தாமமா யவன்சி ரத்தை**
**தடிந்ததற் பரனே ! போற்றி!**

*மன்மதனைக் கோபித்து அழித்தவரே! நெருப்புவிழியைக் கொண்ட செந்நிறத்தவரே! தட்சாயிணியாக உமை தோன்றிய போது, தாட்சாயிணியின் தந்தை அதாவது உம் மாமனார் வேள்வியில் உமக்கு அவிர்ப்பாகம் தராததால், அவனை அழித்த வரே! பகையாகிய ஒரு பிரமனைக் கண்டியூரில் பூ அணிந்த தலையை வெட்டியவரே! மாலை அணிந்த ஒரு திருமாலின் தலையைத் தாக்கி அழித்த — தமக்குத் தாமே ஆகிய தலைவரே! போற்றி! போற்றி! போற்றி!* 91

**சாக்கியன் எறிந்த கல்லும், திண்ணன்தாள் செருப்பி னாலே**
**நீக்குமா லியமும், வேடன் நிசியினில் இட்ட வில்வக்**
**காக்கிளை இலையும், மிக்க காதலால் இவைகள் எல்லாம்**
**பாக்கிய மாகக் கொண்டீர் அதனொடும் பரிவி லாதேன்,**

*சாக்கிய நாயனார் உம்மேல் எறிந்த கல்லையும், திண்ண னார் [கண்ணப்பர்] கால்செருப்பால் உம்மை அருச்சித்த நிருமாலியத்தை [மலர்களை] யும், வேடன் நடுஇரவில் காயும் கிளையுமாக உம்மேல் வெட்டிப்போட்ட வில்வத்தையும் அன்புடன் பாக்கியமாக ஏற்றுக்கொண்டீர்.* 92

**எறிந்தவேல் படுந்த மும்பும் அணிந்தெனை ஆண்டு கொண்டு,**
**நிறைந்தவெம் பிழைபொ றுத்த நிமலனே போற்றி! போற்றி!**
**மறிந்தபுண் தனக்குப் பூதி மருந்தென மதித்த ணிந்து,**
**சிறந்தஅப் பெயரும் பூண்ட சிவபரம் பொருளே போற்றி!**

பரிவில்லாத நான் எறிந்த வேலால் ஏற்பட்ட தழும்பையும் அணிந்துகொண்டு, என்னை ஆட்கொண்டு, பெரிய கொடுமையான என்னுடைய பிழைகளையும் பொறுத்துக் கொண்ட நிமலரே! வேல்குத்திய புண்ணுக்கு 'விபூதியே மருந்தாகும்' என்று அணிந்துகொண்டு, விபூதிநாதன் என்ற சிறந்தபெயர் பெற்ற சிவபரம்பொருளே போற்றி! 93

எனத்துதி செய்து நின்றான் இழந்தவன் பொருள்கண் டென்ன,
மனத்துறும் இன்ப வெள்ள மறிகடல் மீது வாழ்ந்தான்
அனைக்குநே ரான எம்மான் அருள்பெற வேண்டும் என்று,
மனுப்பணிந் தன்பால் போற்றி, வதிந்துநோற் றிருந்தான் மன்னோ.

இவ்வாறு ஆதிமனு பலவாறாகத் துதிசெய்து நின்றான். கையிலிருந்த செல்வத்தைத் தொலைத்தவன், மீண்டும் அச்செல்வம் கிடைக்கப் பெற்றால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவானோ, அவ்வளவு மகிழ்ச்சியடைந்தான். மனத்தில் இன்பவெள்ளம் கடலளவுக்குப் பெருகியது. தாய்க்குச் சமமான கடவுளின் அருள் பெறவேண்டும் என்று பணிந்து, அன்புடன் போற்றி, துதித்து, விரதம் பூண்டு இருந்தான். 94

ஆகத் திருவிருத்தம் – 660

# 6. ஆலயம்காண் படலம்

மனுபதி வனிதை யோடு மருதினில் எய்தி வைகி,
முனிவன்சொற் படிஎங் கோனைப் பூசனை முடித்தல் ஈதாம்
இனிஅவன் தனக்கு நாதன் இலிங்கத்து நின்று தோன்றி,
நனிவரம் உதவப் பெற்றுப் பணிசெய்த நலம்உ ரைப்பாம்.

*'ஆதிமனு, தன்மனைவியாகிய சாரங்கவல்லியுடன் திருப்புடைமருதூருக்கு வந்துதங்கி, அகத்தியமுனிவர் பொதிகையில் சொன்ன வாக்குப்படி, இறைவனைப் பூசைசெய்ததைச் சொன்னேன். இலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு, இறைவன் ஆதிமனுவுக்குப் பிள்ளைப் பாக்கியத்துக்கான வரம் கொடுத்ததையும், ஆதிமனு கோயில் திருப்பணிகள் செய்ததையும் இனிமேல் சொல்கிறேன்' என்றார் சூதமுனிவர்.* 1

## ஆதிமனுவின் பூசையும் துதியும்

ஆதிமா மனுத்தான் பின்னர் அரன்அருட் செயலை நோக்கி,
நீதியால் துதிகள் கூறி, நிருமலன் தாளை உன்னிச்
சோதியாற் கால யந்தான் செய்திடச் சூழ்ந்து பார்த்தே,
கோதிலாப் பணிகள் செய்யக் கருதியே குறித்துத் தேர்வான்.

*ஆதிமனு, சிவனின் அருட்செயல்களை எண்ணி வியந்து, துதிகள் சொல்லி, அவன் திருவடிகளினை நினைத்து, சோதி வடிவமான சிவனுக்கு ஆலயம் செய்ய ஏற்ற இடங்களாய்ப் பார்த்தான். குறைவு வராமல் பணிகள் செய்வது எப்படி எனத் திட்டமிட்டான்.* 2

புடைமரு துற்றார் மற்றைப் புடையெலாம் நதியாய் ஓங்கி,
இடையெலாம் சரிவாய் உற்ற திவ்விடைப் பணிசெய் தாலும்,
உடையவற் குறுவி மானம் செய்திடல் உறாதென் றுன்னி,
விடையவன் அருள்எவ் வண்ணம் விதிக்குவ பெறுதும் என்னா,

*அப்பொழுது புடைமருதூரைச் சுற்றி நதி பெருகி ஓடியதால், ஊர், சரிவாக இருந்தது, இந்த இடத்தில் பணி செய்தாலும், உடையவர் கோயிலுக்குப் பெரிய கோபுரம் கட்டுவது இயலாதே; இறைவன் அருள் எப்படி ஆணையிடுமோ அறியேனே எனக்கருதினான்.* 3

கருதினன் கதிகொ டுக்கும் ககநிழல் உற்று நோற்பான்
திரிபத கையில் மூழ்கித் திருவெண்ணீ றணிந்து தெய்வ
விரைமலர் முதல வான வேண்டுவ வருத்தி வேந்தன்
மருதினான் தனைப்பூ சித்து வணங்கினான் வழுத்தி வாழ்த்தி.

கதிகொடுக்கக்கூடிய மருதமர நிழலில் இருந்து தியானம் செய்ய எண்ணினான். திருமுக்கூடலில் குளித்தான். திருவெண்ணீறு அணிந்துகொண்டான். தெய்வத்திற்கான வாசனை மலர்களை வருவித்தான். மருதநாயகரைப் பூசித்தான். வணங்கினான்; புகழ்ந்தான்; வாழ்த்தினான். 4

வந்தனை செய்து தாழ்ந்து,
வானவர் தலைவா! போற்றி!
இந்திரன் பழிதீர்த்து ஆண்ட
ஏறு உயர்த்தவனே! போற்றி!
கொந்துஅலர் இதழி வேய்ந்த
கோமளை பாகா! போற்றி!
பொந்துசேர் மருதம் மேவும்
புண்ணிய! புராண! போற்றி!

[வானவர் — தேவர்; ஏறு உயர்த்தவனே — காளையை வரைந்த கொடியை உயர்த்திப் பிடித்தவரே; கொந்து — கொத்து; அலர் — மலர்; இதழி—கொன்றை; பாகா — இடப்பாகத்தில் கொண்டவரே! புராண — பழைமையானவரே!] 5

அருத்திசேர்ந் தையம் நீங்கும் அடியவர் வேண்டு கின்ற
கருத்தினை முடிக்க வல்ல காரணா போற்றி! உன்றன்
உருத்தெளி வித்துக் காட்டி மறைந்ததற் கொறுக்க உன்னும்
வருத்தம்அ தகற்றி என்னை ஆண்டருள் மருதா போற்றி.

சந்தேகமற்ற விருப்பம் கொண்ட அடியவர் வேண்டுகின்ற வற்றை எல்லாம் முடித்து வைக்கின்ற காரணரே! போற்றி! உம் உருவைத் தெளிவாக்கிக் காட்டி, நீர்மறைந்ததற்கு என்னைத் தண்டித்துக்கொள்ள நினைத்ததான துன்பத்தை நீக்கி, ஆண்டுகொண்ட மருதநாயகரே போற்றி! 6

எண்ணிய கருமம் முற்ற யான்உனை எய்தி னேன்அவ்
வண்ணமே முடிக்க வந்து வரம்அளித் தருள வேண்டும்;
பண்ணவர் பரனே பானு, பாகவன், மதிஇம் மூன்று
கண்ணினால் உலகம் காக்கும் கருணையங் கடலே போற்றி!

நான் நினைத்த காரியம் நடக்கவேண்டும் என்பதற்காக, நான் உன்னை அடைந்துள்ளேன். அவ்வண்ணம் முடிய நீர்வந்து வரம்கொடுக்க வேண்டும். தேவர்தலைவரே! சூரியன்,

அக்கினி, சந்திரன், என்னும் இம்மூன்று கண்களால் உலகம் காக்கும் கருணைக்கடலே! போற்றி! 7

## ஆதிமனுவின் தியான விரதங்களும் இறைவன் அருளும்

சரதநா யகனே போற்றி எனத்துதி சாற்றிப் பின்னும்
விரதமாய் வேந்தன் அங்ஙன் சாந்திரா யணம்வி தித்துக்
குருவச னத்தின் மேவிக் குசநுனி அனம்பு சித்துப்
பரவியே தவம்இ யற்றும் பரிவுகண் டகத்தில் உன்னி,

'சத்திய நாயகரே! போற்றி!' என்று துதிகள் சொல்லி, வேந்தன் தியானவிரதம் மேற்கொண்டான். சாந்திராயண விரதம் மேற்கொண்டான். [இது மாத விரதம். பௌர்ணமியில் தொடங்குவது] குருவின் உபதேசத்தின்படியாகத் தருப்பை நுனியளவு அன்னம் உண்டு [ஒருபிடி அன்னம் உண்டு, பதினைந்து நாட்களும் இரண்டு பிடி அன்னம் உண்டு, பின் பதினைந்த நாட்களும் இவ்விரதம் மேற்கொள்ளவேண்டும் என்று பெரியோர் கூறுவர்] இறைவனைப் பரவி விரதம் இருந்தான். 8

ஆடல்ஏ றழகன் தானே அரசனுக் கருள்வான் ஆகக்
கோடரத் தமர்ந்த சோதி இலிங்கத்தில் அங்கு ரித்தே,
தேடிய இருவர் காணாத் திருவளர் கமலப் பாதம்
சூடிடச் சமயம் என்று சுருதிபா துகையாய்த் தாங்க,

ஆதிமனுவின் சாந்திராயணவிரதம் செய்யும் அன்பை மனத்திற்கொண்டு, ஆடல் அழகரும் காளையில் அமர்ந்த அழகரும் ஆகிய சிவன், அவனுக்கு அருள்செய்ய மருதமரப் பொந்தில் சோதி இலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு, பிரமனும் திருமாலும் காணாத மலர்ப்பாதத்தை ஆதிமனுவுக்குச் சூட்ட இதுவே தருணம் என்று முடிவு செய்து, வேதங்களைப் பாதுகைகளாக அணிந்துகொண்டார். 9

செக்கர்அம் சடையும் காள கண்டமும் திகழ்முந் நூலும்,
முக்கணும் நான்கு தோளும் மொய்ஒளி விளங்கு நீறும்,
அக்கர வார்த்த வேங்கை அதளுடை அரையும் தேவி
பக்கமு மனுவை நோக்கும் பார்வையு மாகத் தோன்ற,

சிவந்த அழகிய சடையும், நீலகண்டமும், மார்பில் முப்புரிநூலும், மூன்று கண்களும், நான்கு தோள்களும் ஒளிமொய்த்து விளங்கும் திருநீறும், உருத்திராக்க மாலையும், பாம்புகளும், புலித்தோல்உடை அரையிலுமாகத் தேவியுடன் ஆதிமனுவை நோக்கியவாறு தோன்றினார். 10

அப்பொழு தமலன் தன்னை யாவரும் இறைஞ்சி அன்பாய்,
மெய்ப்புகழ் கூறித் தேகம் விம்மிதம் உற்றான் கீர்த்தி
செப்பியே மலரின் மாரி தேவர்கள் தூவி ஆர்த்தார்;
துப்புறு கண்ணீர் மாரி துளும்பிய வேந்தை நோக்கி,

அமலனாகிய சிவனை அப்பொழுது எல்லாரும் இறைஞ்சினார்கள். மன்னன் இறைவனின் மெய்ப்புகழ்களைக் கூறி, உடம்பு விம்மிதம் அடைந்தான். தேவர்கள் இறைவனின் கீர்த்திகளைச் சொல்லியபடி மலர்மாரி தூவிப் போரொலி செய்தார்கள். மனவலிமையால் கண்ணீர் மழைபொழிய நின்ற அரசனைப் பெருமான் பார்த்தார். 11

மருதினான் அருளிச் செய்வான் மனுவழி வந்த மன்னா
பரவிநீ நமக்கு வந்த பூசனை ஆற்றிப் பண்பாய்
விரதமும் ஆற்றி நம்மைத் துதித்தனை மிகம கிழ்ந்தேம்
புரவல நினக்கு வேண்டும் வரம்எவன் புகல்தி என்றான்.

புடைமருதப் பெருமான் அருள்வாக்குச் சொன்னார். 'மனுவம்சத்தில் வந்த அரசனே! எனக்கு விருப்பமான சாந்திராயணவிரத பூசையை என்னைப் புகழ்ந்து செய்தாய். உன் விரதம் பண்பானது. நன்றாகத் துதிசெய்தாய். மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. அரசனே! உனக்கு வேண்டும் வரம் என்ன? சொல்' என்றார். 12

## ஆதிமனு திருக்கோயில் கட்ட வரம்வேண்டுதல்

பணித்தலை உலக மன்னன் பணிவுடன் வணங்கிக் கேட்பான்
குணித்திவண் வந்து தோன்றும் குறிதனக் கால யந்தான்
கணித்திடும் படியே செய்யக் கருதினென் கருத்துக் கேற்ப,
இணக்கமாய் அருளவேண்டும் பரகதி எனக்கு வேண்டும்.

ஆதிசேஷன் என்னும் பாம்பின் தலையில் இருக்கும் உலகத்திற்கு மன்னனாகிய ஆதிமனு, இறைவனைப் பணிவுடன் வணங்கி, வரம்கேட்டான். 'இந்த இடத்தில் பொருந்தித் தோன்றுகின்ற சிவலிங்கக் குறிக்குத் திட்டமிட்டபடியே ஆலயம் கட்டவேண்டும் எனக் கருதியுள்ளேன். என் கருத்துக்கு இணக்கமாய் வரம் தரவேண்டும்; அப்புண்ணிய காரியத்தால், எனக்குப் பரகதி கிடைக்கவேண்டும். 13

புடைமரு துற்ற தாலே பொங்கிய கோயில் செய்ய,
இடமிகல் போதா என்செய் குதும்என ஈசன் சாற்றும்
தடநெடும் புயத்தாய் இந்தத் தண்மரு தின்கீழ்ச் சார்பாய்
நடுவுற இலிங்கம் தோன்றும் நலம்பெறக் காண்பாய் அங்ஙன்,

புடைமருதிற்கு நேரில்வந்து பார்த்ததால், ஒருண்மை அறிந்தேன். பொருநை சுற்றிப் போவதால் பெரிய கோயில் கட்ட இடம் போதாது. என்ன செய்வது' என்றான். 'மிகப் பெரிய தோளைக் கொண்டவனே! மருதமரத்தைச் சுற்றியுள்ள இடத்தில் கோயில் கட்டு. இலிங்கம் நடுவில் தோன்றும். அதைச்சுற்றிய அளவில் கட்டு. அதில் அழகு காண்பாய். 14

மயன்தனை அழைத்துச் சிற்ப நூலினில் வகுத்த வாறே,
இயல்புடன் ஆல யந்தான் இயற்றுதி பணிகள் எல்லாம்
முயலுதி முற்றும் வண்ணம் உன்னிஉன் கருத்துக் கேற்ற
செயல்வழிக் கூட்டு கேம்என் றருளினான் சீத ரேசன்.

மயன் என்னும் தேவதச்சனை அழைத்து, சிற்ப சாஸ்திரங் களில் கூறியுள்ளபடி, இயல்பான, நீ கருதிய அளவு பெரிதாக இல்லாமல் ஆலயத்தை ஏற்படுத்து. அதற்கான வேலை களுக்கு முயற்சிசெய். அது சிறப்பாக அமையும்படி நன்கு சிந்தித்து, உன் கருத்துக்கேற்ற செயல்வழி அமையச்செய்வேன்' என்று, சீதரனுக்கு அருள்செய்த ஈசன் கூறினார். 15

அனைக்குநே ரான எங்கோன் அம்பிகை பாகத் தண்ணல்
நினைத்திடற் கரிய நாதன் நின்றகோ லத்தி னோடே,
பனித்தவான் வழிம றைந்தான் பார்த்திபன் பணிந்து போற்றி,
மனத்துறு மகிழ்வால் அங்஭ன் வதிந்தினி திருக்கும் ஏல்வை,

தாய்க்குச் சமமான தலைவர் — அம்பிகையைப் பாகத்தில் கொண்ட அண்ணல் — நினைப்புக்கு அரியநாதர் — நின்ற கோலத்தில் அருள்வாக்குச் சொல்லி, குளிர்ந்த வானத்தின் வழியே மறைந்தார். மனமகிழ்வுடன் அரசன் பணிந்து போற்றி, திருப்பணி செய்யத் திருப்புடைமருதூரில் தங்கினான். 16

## கற்பனைகள், தற்குறிப்பேற்றங்கள்

அரசன்மெய் அன்புக் காக அரன்வெளிப் பட்ட செய்கை,
தரையெலாம் தெரியும் வண்ணம் மேருவைச் சார்ந்து சூழ்ந்து,
முரசறை விப்பான் போல முளரியை அலர்த்தும் செங்கேழ்
இரவியோன் எழுந்து மேலைத் திசைவழி ஏகி னானே.

அரசன் கொண்ட அன்புக்காக அரன் மருத மரத்தி லிருந்து வெளிப்பட்டு, வரமளித்த நிகழ்ச்சியை உலகிற் கெல்லாம் வெளிச்சமிட்டுக் காட்டுவதைப்போலச் சிவப்புச் சூரியன் உதயமாகி, மேருமலையைச் சுற்றிவந்து முரசறைவது போலத் தாமரையை மலரச்செய்து, மேற்குத் திசைக்குச் சென்றான். 17

பகற்பொழு திறைவற் கீசன் பாலித்த கோலம் என்னும்
அகத்தினில் உவகை எய்தக் காட்டுதற் கணைவான் போல,
சிகைத்தனிப் பிறையும் தோன்றச் செக்கர்வான் மேனி தோன்ற
முகத்துடு முறுவல் தோன்ற வந்தது முளரி மாலை.

தன்னுடைய பொழுதாகிய இரவில் அருள் செய்யாமல் பகல் பொழுதில் அருள் செய்ததற்காக வானத்தைச் சிவப்பாக்கி, சிவன்தலையில் தானிருந்ததால் மனத்தில் மகிழ்ச்சியைக் காட்டுவது போல வெளிச்சம் காட்டி, தன் இனமாகிய நட்சத்திரங்களால் சிரிப்பைக் காட்டியது மாலை நிலா. 18

இருட்கலி துரந்த மன்னன் இகத்தவர்க் கின்பம் தோன்ற,
அருட்கணால் நோக்கிச் சீத மதிக்குடை யதனால் தானே
தெருட்பெறு புகழை மூன்று செகத்தினும் பரப்பல் போல,
மருட்படு மாலை நீங்கி மதியவன் உதயம் செய்தான்.

இந்த உலகினர்க்கு இருட்டாகிய வறுமையை நீக்குபவன் மன்னன். நானும் இருட்டை நீக்குகிறேன். அருட்கண்ணைக் கொண்ட ஆதிமனு, குளிர்ந்த என்னைப் போன்றதொரு வெண்கொற்றக் குடையின் கீழ் இருந்து, தெளிவான பெரிய புகழை மூன்றுலகிலும் பெற்றான். எனவே, எனக்கு ஒப்பான அவன்புகழை நான் பரப்புகிறேன் என்பது போலச் சந்திரன் மாலை மயக்கத்தை நீக்கி உதித்தான். 19

புண்ணிய மன்னன் கோயில் கண்டிடப் புடையி னின்றும்
வண்ணமெய் மருதின் கீழ்சார் வந்திடும் சுயம்பு தன்னைக்
கண்ணினால் இன்று யானும் கண்டருள் பெறுவேன் என்ன
எண்ணியே எழுந்தான் போலும் இரவிவந் துதயம் செய்தான்.

மன்னன் தான் செய்த புண்ணியத்தால், கோயில் கட்டு வதற்காக மருதமரத்தின் அடியிலிருந்து, கிழக்கில் சுயம்புவாக எழுந்தருளும் காட்சியை, இன்று நான் என் கண்களால் கண்டு அருள்பெறப்போகிறேன் என்று, எண்ணி எழுவதைப்போலச் சூரியன் எழுந்தான். 20

காசர்கள் உள்ளம் போன்ற கனைஇருள் அகன்று ஞான
நேசர்கள் உள்ளம் போல விளங்கின நேமி வையம்
தேசுடைப் பருதி தோன்றும் முன்அர செழுந்து செய்யும்
மாசுதீர் கடன்மு டித்து வந்திடும் போதில் அங்கண்,

குற்றவாளிகளின் உள்ளம்போன்ற இருட்டு நீங்கியது. ஞானமார்க்கத்தில் பேரன்பு வைத்தவர்களின் மனம்போல, சக்கரத்தால் ஒளிபெறும் உலகம் பிரகாசம் அடைந்தது. சூரியன் உதிக்கும்முன் அரசன் எழுந்தான். குற்றமற்ற கடமைகளாகிய

*நீராடல், நியமம், பூசை முதலியவற்றை முடித்துக்கொண்டு, மருதமரம் இருக்கும் இடத்திற்கு வந்தான்.* 21

## ஆலயம் கட்டுதல்

அருச்சுனப் புடையில் உற்ற இலிங்கத்தைக் காணா தன்பன்
வருத்தமாய் மயங்கி நிற்ப மற்றதன் கீழ்சார் பாகக்
கருத்தன்பொற் கோயில் ஊடே தோன்றிடக் கண்டா னந்த
நிருத்தம்ஆ டினன்பே ரின்ப நிறைகடல் மூழ்கி னானே.

*மருதமரத்தின் பக்கத்தில் இருந்த இலிங்கத்தைக் காண வில்லை. அன்புடைய அரசன் வருந்தி மயங்கினான். சற்றுக் கிழக்குப் பக்கமாகத் திரும்பினான். இறைவன் பொற்கோயிலில் சுயம்புவாகத் தோன்றி இருப்பதைப் பார்த்தான். ஆனந்தத்தால் நடனமாடினான். பேரின்பக் கடலில் மூழ்கினான்.* 22

மருதடி இருந்த வண்ணம் மற்றதன் கீழ்பால் கோயில்
கருதிய நூறு கெற்பக் காரணன் சுபேட்சை யாலே,
பருதிபோல் விளங்கி வைகப் பரமனைக் கண்டு போற்றிப்
புரவலன் மகிழ்ச்சி கூர்ந்து போற்றினன் புளகம் உற்றான்.

*நூறு கற்பக காலம் [ஆயிரம் கோடி ஆண்டுகள் நூறு முறை] மருதமரத்தின் கிழக்கில் கட்டப்படும் கோயிலில் இருக்கக் கருதிய சுயவிருப்பத்தால், சூரியப் பிரகாசத்துடன் தங்கிய பரமனை அரசன் போற்றினான். மகிழ்ச்சியுடன் வணங்கினான். புளகாங்கிதம் அடைந்தான்.* 23

நாயகற் குறையு ளான கோயில்நற் சூத்தி ரத்தால்,
வாய்மைசேர் சாத்தி ரத்தால் வகுத்திட மயனைக் கூவி,
தூய்நிலம் குறித்தி லங்க சோதனை வகையும் தூக்கி,
நேயமோ டுவந்து செய்ய நிருமித்தான் நிருபன் மன்னோ.

*ஆதிமனு, இறைவன் தங்கும் இடமான கோயிலை சிற்ப சாஸ்திரங்களின் சூத்திரப்படியும், உண்மை சேர்ந்த சாஸ்திரங்களின்படியும் வகுக்க மயன் என்னும் தேவதச்சனை அழைத்தான். இடத்தைத் தூய்மை செய்துகொண்டு எல்லையைக் குறித்தான். மண்சோதனை, நீர் சோதனை செய்யப் பட்டன. மற்ற மற்ற பணிகள் செய்வதற்குரியவர்களை அன்புடன் நியமனம் செய்தான்.* 24

ஓரைகொண் டனிக்கை செய்து சிற்பநூல் உரைத்த வாறே,
சீர்பெற மயன்வி தித்த ஏவலோர் சிவனைச் சூழ்ந்த

பாரினில் வாணங் கண்டு பணிசெய்வ தற்கு வேண்டுஞ்
சார்புக ளுடனே கூடச் சமைந்தனர் வினையின் தக்கோர்.

நல்ல ஓரை [நேரம்] பார்த்தான். அனுக்ஞை — தேவதைகளின் உத்தரவு பெறுதல் நிகழ்ந்தது. சிவன் சுயம்புவாக வந்த இடத்தைச் சுற்றி — சிற்ப சாஸ்திர நூல்கள் சொன்னபடி, மயனின் ஏவலாளர்கள், சிறப்புடன் தரையில் அஸ்திவாரம் எடுத்தார்கள். கோயில்கட்டும் பணி செய்வதற்குத் தேவையான சார்பானவற்றைத் தொழில் நுட்பம் தெரிந்தவர்கள் அமைத்தார்கள். *25*

பரைதரும் யோகா சத்தி பயோதரம் பதும பீட
நிரைதரும் மதலை போதி நிலவிய வட்டம் பட்டம்
மரைதிகழ் மேரு என்னும் மதில்கவு தகமே வாரி
உரைதரு பால்வி மான மாளிகை உஞற்றி னாரே.

பராசக்தியிலிருந்து வெளிப்பட்ட யோகசத்தியின் முலையே பத்மபீடம். வரிசையான மதலை, போதி அமைந்த வட்டம் [வட்டவடிவ விமானம்] உச்சிப்பட்டமாகும். மேரு என்னும் உச்சி, மதில், கதவம் உள்ளதாகப் புகழத்தக்க விமானம் [சுவாமிக்கு மேல் உள்ளது] அமைக்கப்பட்டது. *26*

கற்பம்நீ டியவி மானம் அடிமுதல் முடியின் காறும்
சிற்பநூல் இருபான் கோலால் செய்ததில் சிறப்ப தாகப்
பற்பல விதித்த ருத்த மண்டபம் பாங்கி னூடே,
விற்பொலி மாயன் வேதா விண்ணவன் முதல்விண் ணோரே.

கற்பகாலம் நிலவக்கூடிய இந்த விமானம் அடிமுதல் முடிவரை இருபதுகோல் அளவுள்ளதாகும். அதையொட்டி, அர்த்த மண்டபம் அமைக்கப்பட்டது. பக்கத்தில் வில்லேந்திய திருமால், பிரமன், இந்திரன், சிலைகள் அமைக்கப்பட்டன. *27*

அட்டதிக் கினும்இ யற்றி ஆமைமேல் பதுமம் ஆதி
பட்டம்எட் டெட்டின் கீழே பாணிவட் டத்தின் மேலே
எட்டிய நாகம் பூதம் இடையிடை விமான சிங்கம்
வட்டனை யாழி மேலே வானவர் வருக்கம் மல்க,

எட்டுப் பக்கங்களிலும் கடவுளர் உருவங்கள் அமைக்கப்பட்டன. விமானம் உட்கூடு ஆமை முதுகுபோல் வளைவாக அமைக்கப்பட்டது. அது எட்டுக்கோல் உயரம் உடையது. வெளிப்பக்கம் [பாணி வட்டத்தில் நாகம், பூதம், சிங்கம் ஆகியவை] இடையிடையே சுதைச்சிலைகளாக வைக்கப்பட்டன.

வானவர் மாலை வைத்திருக்கும் சுதைகளும் கதைகளும் வைக்கப்பட்டன. 28

நந்தியா வர்த்தம் வாணி பத்திர நாக பீடம்
விந்தைசேர் சிறியா வர்த்தம் விருத்தம்எண் பத்து நாலாம்
பந்திசேர் வீர பீடம் பத்திர பீடம் பாலிற்
கந்தரு வோர்சூழ் கின்ற காமரு பீடம் மாதோ,

நந்தியா வர்த்தம், சரஸ்வதி, பத்திரம், நாகம், சிறியா வர்த்தம், விருத்தம், எண்பத்துநான்கு பகுப்புடைய வீரம், கந்தர்வர் ஆகிய பீடங்கள் அமைக்கப்பட்டன. 29

இந்திர திசையில் பானு நந்திமா காளர் இந்து
வந்திடும் அனந்தர் நந்தி வளர்கின்ற பூத பீடம்
தந்ததென் பால்சீ கண்டர் சத்தமா தர்அங் காரன்
சிந்துர முகன்மேல் சிங்கன் தெண்டமுண் டியரே கந்தா,

மேற்கில் சூரியன், நந்தி, மாகாளர், சந்திரன், பருத்த நந்தி ஆகியவை உள்ள பூதபீடமும், தெற்குத் திசையில் ஸ்ரீகண்டர், சப்தமாதர்கள், அங்காரகன், சிங்கன், தெண்டமுண்டியர், கந்தன் உள்ள பீடங்களும் செய்தனர். 30

உத்தரம் பிருங்கி துர்க்கை விசையன்ஒண் திருக்கள் வாணி
சத்ததே சிகரே காளி கண்டிஈ சானம் காரி
மத்தியில் சாத்தன் இந்த வகைப்படி பரிவா ரத்தர்
மெய்த்தவர் பாணத் தின்பால் விதித்தனர் விதியி னாலே.

வடக்கில் பிருங்கிமுனிவர், துர்க்கை, விசயன், அஷ்டலட்சுமிகள், சரஸ்வதி, சப்த [ஏழு] ரிஷிகள், காளி, கண்டி ஆகியோர் பீடங்களும், கிழக்கில் சனி, சாத்தன், முதலிய பரிவார தேவதைகள் பீடங்களும் தவத்துடன் பாணத்தில் தாபித்தனர். 31

மாகமோ டுயர்ந்த மாமண் டபம்சபா மண்ட பம்சீர்
ஆகம பீடம் குண்ட மண்டபம் அடியார் போற்றும்
போகமண் டபம்உள் ளிட்ட ஒன்பது முகூர்த்தம் கொண்ட
ஏகமண் டபம்இ யற்றி நந்தியை எதிர்வி தித்தார்.

விமானம் கட்டியது போல, உயர்ந்த மண்டபங்களையும் கட்டினார்கள். மகாமண்டபம், சபாமண்டபம், சிறப்பான ஆகம பீடம், குண்டமண்டபம், அடியார்கள் வழிபடும் போக மண்டபம் உள்ளிட்ட ஒன்பது முகூர்த்த அளவுள்ள ஏகமண்டப

மும் கட்டி, நந்தி, சிவனைப் பார்த்து எதிரில் இருப்பதாக அமைத்தார்கள். 32

வாகுசேர் அறுகால் பீடம் மணிஅணி மண்ட பம்சொல்
தோகையர் நடன மாடம் சுரர்பயில் மண்ட பம்சீர்
யாகமண் டபம்பு ழைக்கை யாழித்தூண் நிறுவி ஓங்கு
மேகம்வந் துறுச பாமண் டபம்மடைப் பள்ளி வேறு,

வாகாக அமைக்கப்பட்ட மணிகள் அணிகள் வைக்கும் மண்டபம், ஊரார் புகழும் அழகிகள் நடனமாட உரிய நிருத்த மண்டபம், தேவர் வணங்கும் மண்டபம், யாக மண்டபம், ஆகியவற்றில் துளைக்கை யாளிகள் உள்ள தூண்களை அமைத்தார்கள். மேகம் தங்கும் அளவுக்கு உயர்ந்த சபாமண்டபம், மடைப்பள்ளி ஆகியவற்றையும் அமைத்தார்கள். 33

சுற்றுள தேவர் தான மதிற்புறஞ் சோதி யாடற்கு
உற்றஅம் பலம்உ யர்ந்த கோபுரம் இயங்க ளோங்கு
மற்றமண் டபம்து ளைத்த வரையிணை என்னும் வாய்தல்
நற்றவர் சுற்றும் வீதி கூபநான் கெல்லை வீதி,

கோயிலைச் சுற்றித் தேவதான இடம் — புறமதிலைச்சுற்றி, கோயிலுக்குச் சொந்தமான — வரியில்லாத இடம் அமைத்து மதில் அமைத்துச் சோதியாகிய இறைவன் திருவீதிஉலா மற்றும் ஆடலுக்காகப் பொதுஇடம் [அம்பலம்] அமைத்து, மதிலின் வாயிலில் உயரமான கோபுரம் அமைத்தார்கள். வாத்தியக் காரர்கள் நின்று இசைமுழக்கம் செய்வதற்காக மண்டபம் அமைத்தார்கள். இந்த அமைப்பு, பெரிய மலையைத் துளைத்து அமைக்கப்பட்டதுபோல் இருந்தது. நல்ல தவசிகள் சுற்றி வலம்வர நான்கு திருவீதிகள் அமைக்கப்பட்டன. குளங்கள் வெட்டப்பட்டன. 34

திருமதில் இவைகள் எல்லாம் சிறப்பதாய்ச் செய்து தேவி
உருவினை நிறுவ எண்ணி உதற்கரன் அருள்எவ் வண்ணம்
புரிவது தெரிய ஈசன் தனைஉள்கிப் போற்றி நின்றான்
பரைஉருக் காண எங்கோன் பார்த்திபன் தனக்கு நல்கும்.

திருமதில் அலங்காரம் சிறப்பாகச் செய்யப்பட்டது. உமையம்மையின் திருவுருவம் செய்ய எண்ணி, அதற்கு இறைவன் அருள் எப்படிப் புரியவேண்டும் என்பதைத் தெரிந்துக் கொள்ள, அரசன் இறைவனைத் துதித்தான். பராசக்தி உருவம் செய்ய, அரசனுக்கு இறைவன் வரம் நல்குவதற்கு உளம் கொண்டார். 35

## அம்பிகை திருக்கோயில் அமைந்த வரலாறு

மனுவின் செவிபெற மதிதங் கியமுடி
வானவா ணியினால் மனுவேநாம்
உனைஇவ் விடம்அதில் மிகவும் பணிகொள
உறும்அன் பொடுமிக வருபோதே
தனுவென் றிடுநுதல் உமைஉன் தனைநிகர்
தலம்ஆ கியபுடை மருதத்தை
இனமும் கண்டிட அடியே னுக்கருள்
என்றாள் பின்தொடர் கின்றாளே.

*ஆதிமனு கேட்கும்படியாக ஆகாசவாணி [அசரீரி ஒலியால்] 'மனுவே! நான் உன்னை இவ்விடத்தில் மிகவும் பணி கொள்ளக் காரணம், உன்னிடம் உள்ள அன்பேயாகும்.வில்லை வென்ற நெற்றியைக்கொண்ட உமையாள், 'தனக்குத் தானே நிகரான திருப்புடைமருதூரை, உன்னால் அமைக்கப்பட்ட தலத்தை இன்னமும் நான் பார்க்கவேண்டும். அதற்கு அருள்செய்க' என்று, என்னிடம் வேண்டி, என்னைத் தொடர்ந்து வருகிறாள்.* 36

அப்போ தவள்தனை அங்கண் நிறுத்தி,
அவட்கு மொழிந்த தருட்செய்தி
தப்பா தொன்றது மனுநாம் வதிவ
தனுக்கா கும்பணி தான்செய்தே,
துப்பா கும்இதழ் உன்னையும் நிறுவத்
தொழும் அப்பொழுதினில் நினைவோர்ந்தே,
இப்பால் வந்திட நந்திக் கருள்வோம்
என்றப் படிசொனம் இதுபோதே

*தொடர்ந்து வந்தவளை ஓரிடத்தில் நிறுத்தி, ஒரு செய்தி யைச் சொன்னோம். அது தப்பாத செய்தி. 'மனு மன்னன் நாம் தங்குவதற்குக் கோயில்பணி செய்தான். பவளம் போன்ற இதழ்உள்ள உன்னையும் நிறுவ வரம்வேண்டி என்னை நோக்கித் தொழுது வேண்டுகிறான். நீ அமரும் இடத்தைப் பார்க்க இடையூறு இல்லாதபடி, சற்றே இப்பால் நகர்ந்து வருமாறு நந்தியிடம் சொல்லியுள்ளேன்' என்று, உடையாளிடம் சொன்னோம்.* 37

சிமையக் கயிலையில் வளர்சத் திகள்பணி
திருவுரு அருளே திகழ்வான
உமையைத் தருகுவம் நிறுவக் கோயில்செய்
துய்வாய் எனஅரு ளினன்ஒல்லை

குமைவுற் றுளவொடு அரனைத் துதிசெய்து
கொண்டே வலமதில் அன்பாக
இமையப் பாவையும் உறையப் பணிசெய்
தியற்றுப் பரைவரும் எழில்சொல்வாம்.

'உயர்வான உச்சியைக் கொண்ட கயிலாய மலையில் வளரும் சக்திகள் [தோழிகள்] உமையாளுக்குப் பணிசெய்வார்கள். அப்பொழுது அவள் அழகான உருவுடன் மிகப்பெரிய அன்பாகிய அருளுடன் விளங்குவாள். அந்த அழகும் அருளும் நீ செய்யும் உமை உருவத்தில் அமையும்' என்று, சிவன் சொன்னவுடன், மிக விரைவாக மகிழ்ச்சிப் பெருமிதத்துடன் இறைவனைத் துதித்தபடி, வலப்பக்கம் இமயப்பாவை அமையுமாறு திருப்பணி தொடங்கினான். இனி உமை எழுந்தருளிய அழகைச் சொல்வேன். 38

முன்னவன் விசுவ கன்மனை உள்க,
முந்திவந் தடியிணை வணங்கிப்
பன்னகா பரணா எனைஅழைத் திட்ட
பணிஎவன் கூறெனப் பகர்வான்
மன்னவன் செய்யும் பணியினில் பரையை
வதிட்டைசெய் திடஅளித் திடவே,
தன்நிகர் இமயக் கோமதி என்னும்
கொடுமுடித் தானம்ஒன் றுளதால்.

சிவன் விஸ்வகன்மாவை நினைத்தார். அவன் விரைவாக வந்தான். திருவடியை வணங்கி, 'நாகாபரணா! என்னை அழைத்த வேலை என்ன? சொல்' என்றான். 'ஆதிமனு செய்யும் திருக் கோயில் பணியில், பராசக்தியைப் பிரதிட்டை செய்ய, இமயத்தை ஒத்த கோமதி என்னும் உயரமலையிலிருந்து கல்லெடுத் துவா' 39

அதனில்வாழ் சிலையால் நிகரிலா உருஒன்
றமைத்திவண் தருகென அவனும்
நதிஅணி பரன தருட்பணி தொழுது
நடாத்திடல் பேறென மகிழ்ந்து,
துதியுறு வகையால் தூயஅன்பு அருளும்
துலங்குவிஸ் வகன்மி யத்தில்
விதிபெற வரைந்த வாறதன் படியே
வியப்புற உமைஉரு அமைத்தான்.

'அதனால் ஒப்பில்லாத அம்பாள் சிலையைச் செய்' என்றார். விசுவகர்மா நதியணிந்த பெருமானை வணங்கி,

அந்த அருட்பணி செய்வது பேறு என மகிழ்ந்தான். எல்லாரும் துதித்து அருள்பெறும் வகையில், விசுவகன்மியம் எனத் தான் எழுதிய சிற்ப சாஸ்திரநூலில் கூறியுள்ள விதிகளின்படி, உலகம் வியக்குமாறு அருள்பொழியும் அம்பிகை உருவத்தை அமைத்தான். 40

திருவுரு இங்ஙன் உறுவது தெளிந்து,
தெண்ணிலா மதிநதி புனைந்த
மருமலர் வேணி வானவன் நந்தி,
வரதனைப் பார்த்துமை யவளைத்
தருகுவை அழைத்தி என்னலும் நந்தி,
சங்கரன் அடிதொழு தகிலம்
புரையிலா தோங்க விரைவினில் சென்றான்
புனையிழை வனிதைபோந் திடவே

உமைஉரு இவ்வாறு அமைவதை அறிந்த சிவன், தெளிந்த நிலாவையும் நதியையும் சடையில் அணிந்த மணம்மிகு கொன்றைமாலையை அணிந்த வானவன், நந்திதேவரை அழைத்து, ‘உமையவளை அழைத்துவா’ என்றார். நந்தி, சங்கரனை வணங்கி, உலகம் கவலை இல்லாமல் உயர்வதற்தாக, விரைவாக அம்பிகையை அழைக்கச் சென்றார். 41

கயிலையை அடைந்து கவுரிதாள் பணிந்து,
கங்கைநா யகன்பணித் தருளும்
செயலினை மொழியத் தேவியும் ஈசன்
முன்னருள் திறத்தினைத் தெளிந்து,
பயிலும்நன் மருதக் காவுயர் சோலைப்
பழம்பதி வளம்எவன் பகர்தி
தயவுள நந்தித் தவத்தனே என்னச்
சங்கரி தனைத்தொழு திறைஞ்சி,

நந்தி, கயிலாயத்தை அடைந்தார். உமையின் திருவடியைப் பணிந்தார். கங்கைநாயகனின் உத்தரவைச் சொன்னார். தேவியும், சிவனின் அருள்திறத்தைத் தெளிவாக அறிந்தாள். ‘மருதமரம் உள்ள காடுகளும் சோலைகளும் மிகுந்த அந்தப் பழையவூர் எங்கே உள்ளது? தவம் செய்த நந்தியே சொல்’ என்றாள் சங்கரி. 42

சாற்றினன் வேதப் புடைமரு தின்பால்
தவத்தர்வாழ் பதிகளும், சம்பு
மாற்றமில் வனமும் ஆம்பிர வனமும்,
மலர்த்திரு வாணிஇந்த் ராணி

போற்றிய தவமும் பொருனையின் வளமும்
புரந்தரன் பாவத்தைப் போக்க,
ஏற்றமாம் சிவனை வழிபடு தவமும்
இறையவர் இடங்களும் மற்றும்,

உமையை வணங்கியபடியே நந்திதேவர் பேசினார். 'தவத்தர்கள் வாழும் ஊர்; எலுமிச்சை, புளி முதலிய தோப்புகள் அதிகம் உள்ளவூர். இலட்சுமி, இந்திராணி தவம் செய்தவூர். பொருனையின் வளமும் இந்திரன் பாவம் போக்கச் செய்த தவமும் உள்ள ஊர். 43

உரைத்திடற் கரிய வளமெலாம் அங்குண்(டு)
உமையவ ளேஅவண் மனுவாம்
தரைக்கொரு வேந்தன் பணியெலாம் செய்தான்
சங்கரி உனக்கும்ஆ லயந்தான்
பரைக்குயர் நூலால் வகுத்தனன் அவனைப்
பரித்திடு தற்கும்அப் புவனம்
விரைத்திடு தற்கும் அருளிப்பா டென்று
விளம்பியே வேண்டினன் விடையோன்.

இறைவன் தங்கும் இடங்களும், மற்றும் சொல்லமுடியா வளங்கள் எல்லாம் அங்கே உண்டு. உலக அரசன் ஆதிமனு அங்கே கோயில் கட்டுகிறான். சங்கரியே! உமக்கும் ஓர் ஆலயம் எழுப்புகிறான். பராசக்தி கோயிலுக்கென்றே சிறப்பு விதிகள் உள்ள விஸ்கர்மியம் என்ற நூல்படி, உன் ஆலயம் அமைகிறது. மன்னனை ஆசிர்வதிப்பதற்கும், உலகம் செழிப்பதற்கும் அங்குவந்து அருள்செய்' என்று, நந்திதேவர் வேண்டிக்கொண்டார். 44

இமையவள் கயிலை நீங்கி இப்புவ னத்தை உன்னி,
நமையெலாம் புரக்க இங்கு நண்ணுவா ளாக நங்கை
உமைதனைச் சூழ்ந்து போதும் உருத்திர கன்னி மார்கள்,
அமையன தடந்தோள் ஓங்கும் கன்னியார் ஆரா தித்தார்.

உமாதேவி கயிலாயத்தை விட்டு நீங்கி, இந்த உலகிற்கு நம்மை எல்லாம் காப்பதற்காக வரப் புறப்பட்டாள். உருத்திர கன்னிமார்கள், மூங்கிலைப் போன்ற தோள்களை உடைய சப்த [ஏழு] கன்னியர்கள் ஆரவாரித்தார்கள். 45

பன்னியர் திசையின் பாலர் பன்னியர் பதுமம் மேவும்
கன்னியர் அரம்பை மாதர் கவின்பெற யாரு மேவல்
முன்னர்நின் றியற்றி மானஞ் செலுத்திட முதன்மை யோரும்
துன்னிய பேதை யோரும் சூழ்வர எழுந்தாள் மன்னோ.

அந்தப் பத்தினித்தெய்வங்கள் திசைப்பாலர்களின் மனைவிகள், தாமரைக்கன்னிகள், அரம்பைமாதர்கள் முதலிய யாவரும் குறிப்புப்படி ஏவல் செய்வதற்கும், விமானம் செலுத்துதற்கு முதன்மையான தரம் உள்ளவர்களும் ,நெருங்கிய தோழிகளும் சுற்றிவரப் புறப்பட்டாள்.

46

மரைகள்பிச் சங்கள் பீலி ஆலவட்டம் பணிகள் மாற
விரைமலர் விண்ணோர் தூற்ற வியங்களும் விம்மி ஆர்ப்பத்
தரையினில் இழிந்து போந்து தக்கண காசி மேவித்
திரைதரு கங்கை யாடித் திருப்புடை மருதம் எய்தி,

தாமரைகள், இறகு, பீலிக்குஞ்சம், விசிறி, சங்குகள் முதலிய மரியாதைப் பொருட்களைத் தோழிகள் முன்னே எடுத்துச் செல்ல, தேவர்கள் மணமுள்ள மலர்களைத் தூவ, வாத்தியங்கள் முழங்க, உலகத்துக்கு இறங்கி வந்து, தட்சிண காசியை அடைந்து, பொருனையில் நீராடி, திருக்கோயிலுக்கு உமை வந்தாள்.

47

வலங்கொடு மகிழ்ந்து வந்து மந்திரம் எய்திச் சூழ்ந்தே,
இலங்குநுண் ணிடையாள் ஈசன் முன்பெய்தி இறைஞ்சி ஏத்த,
நலங்கனிந் தருளும் எங்கோன் நாயகி தன்னை நோக்கிக்
குலந்தரும் இமய மாதே குவலயத் திந்தத் தானம்,

ஊரை வலம்வந்து, மகிழ்ந்து, தனியிடம் அடைந்து, உரையாடி, விளங்கும் நுணுக்கமான இடையை உடைய உமையாள், ஈசனின் எதிரில் வந்தாள். வணங்கித்துதித்தாள். நன்மைகளைக் கனிவுடன் வழங்கும் பெருமான், தன் நாயகியைப் பார்த்துப் பேசினார்.

48

சத்திபீ டங்கள் தம்மில் தாரக சத்தி பீடம்,
முத்திநன் னெறியைக் காட்டும் முதற்சத்தி பீடம் இந்த
உத்தம மருதம் ஆகும் யோகமா தர்களும் போற்ற,
நித்தியம் விளங்கும் மாதே நீஇந்தப் பீடத் தெய்தி,

'எல்லாக் குலங்களையும் காக்கும் இமயச்செல்வி! உலகத்தில் இந்த இடம், சக்திபீடங்களில் தாரகசக்தி பீடம் ஆகும். மோட்சமாகிய நல்லவழியைக் காட்டும் முதல் சக்திபீடம் இந்த உத்தமமான திருப்புடைமருதூர் ஆகும். யோகமாதர்கள் போற்ற, நித்தியமாக விளங்கும் பெண்ணே! நீ இந்தப் பீடத்தில் பொருந்துவாயாக!

49

வலதுபால் உற்றெந் நாளும் வதிந்திட மனுஅம் கோயில்
இலகவே செய்தான் இங்ஙன் விசுவனால் இயற்று நீலச்
சிலையுரு எய்தி வாழ்வாய் திருமகன் வதிட்டை செய்ய,
நலமுடன் உறுவாய் என்றும் நாதமுற் றிருப்பாய் என்றான்.

என் வலப்புறத்தில் கோயிலில் எப்பொழுதும் தங்குவாயாக! அதற்கேற்ப ஆதிமனு உனக்கு ஆலயம் அமைத்துள்ளான். இப்படி விசுவகர்மாவால் இயற்றப்பட்ட நீலமான சிலை உருவில் வாழ்வாய். ஆதிமனு பிரதிஷ்டை செய்ய, அழகு பெறுவாய்! என்றைக்கும் நாதத்துடன் இருப்பாயாக!' என்றார். 50

இன்னகர் கயிலை ஆகும் இறைவியே நீயும் நாமும்
இன்னகர் வதிவோர் சீவன் முத்தராய் இயற்றி வாழ்வோம்;
இன்னகர் சீவன் முத்தி புரம்இதில் எய்தப் பெற்றே,
இன்னல்தீர்ந் திடஇ றப்போர்க் கிறுதியில் அவர்பால் எய்தி,

'இந்த ஊர் கயிலை; இறைவியே! நீயும் நாமும் இந்த நகரில் வந்து தங்குவோரை, வாழ்பவரைச் சீவன் முக்தர்கள் ஆக ஆக்கி வாழ்வோம். இந்த நகரம் சீவன் முக்திபுரம். இந்த ஊரில் வாழ்ந்து இறப்பவர்கள், வந்து இறப்பவர்கள் ஆகியவர்களுக்கு, இறுதிநேரத்தில் நாம் அவரிடம் சென்று, 51

தாரக உபதே சத்தை மற்றவர் செவியில் சாற்றித்
தாரகம் கொடுத்து நம்பொன் உருவினைத் தருதல் செய்வோம்;
தாரணி மகுடம் சூட்டி நம்உல கதனைச் சாரத்
தாரகை ஒளிபோல் வைப்போம் தணந்திடா திருப்போம்
என்றான்.

அவர் செவியில், தாரக மந்திரத்தை உபதேசிப்போம். அத்துடன் கண்மூடும்போது நாமிருவரும் காட்சி கொடுப்போம். மாலைசூடிய மகுடத்தை அணிவித்து, நம் உலகத்தில் [சிவலோக — சக்தி லோகங்களில்] அவர்கள் சார்ந்திருக்க, நட்சத்திர ஒளியில் அவர்களை மாற்றிவைப்போம். அவர்கள் பாவம் செய்திருப்பினும், நாம் கோபம் அடையாமல், இவ்வுதவிகளைச் செய்வோம்' என்றார். 52

தேவியும் அரனை நோக்கிப் பணிந்துநின் றிதனைச் செப்பும்
தாவிலா விசுவன் செய்த உருவினில் சார்ந்தெந் நாளும்
மேவுவன் மனுவி தித்த கோயிலில் வியந்து வாழ்வேன்
ஆவிநீ அளித்த வாறே அல்லாதென் சுயம்வே றாமோ.

உமாதேவியும் சிவனைப் பணிந்து நோக்கிச் சொன்னாள். 'என்ஆவி நீ! நீ சொல்வதைக் கேட்பதைவிட எனக்குச் சுயமாக வேறில்லை. குற்றமில்லாமல் விஸ்வகர்மா செய்த உருவத்தில்

*சார்ந்து, எப்பொழுதும் தங்குவேன். மனு செய்த கோயிலில் வியப்புடன் வாழ்வேன்.* 53

ஆகிலும் உருத்தி ராதி யாவர்க்கும் அருளிச் செய்யும்
பாகம்அு தளிக்க வேண்டும் என்னஅப் படியே நல்கி,
ஏகனும் உருவை நோக்கி மயனுக்கும் முகமன் ஈந்து,
தாகம்உற் றிடும்உள் ளத்து மனுகனா சார்ந்து சாற்றும்.

*உருத்திராதி தேவர்கட்கு அவிர்ப்பாகம் அளிப்பதைப் போல இங்கு எனக்கும் அவிர்ப்பாகம் அளிக்கவேண்டும்' எனக் கேட்டுக்கொண்டாள். சிவனும் அப்படியே அருளினார். ஏகனாகிய சிவன், உமையம்மையின் சிலைஉருவை நோக்கினார். பிறகு விஸ்வகர்மாவைப் பாராட்டினார். மேலும் கோயில் கட்டும் தாகம் அடைந்த மனுவின் கனவில் தோன்றிப்பின்னரும் கூறினார்.* 54

## அம்பாள் பிரதிஷ்டை

வாரிசூழ் புவிக்கு மன்னன்நீ வகுத்த
வல்லிதன் கோயிலில் விசுவன்
ஆரிய உமையாள் சிலைவகுக் கெனவே,
அமைத்த அத் திருவுரு நமது
சீரிய சன்னிதா னத்திருப் பதனை,
தேவிதன் ஆகமப் படியே
ஏர்பெறக் கொடுபோய்ப் பிதிட்டைசெய் எனவே,
இசைத்தனன் கனவினில் எங்கோன்

*“கடல்சூழ்ந்த உலகத்திற்கு அரசனே! நீ கட்டிய அம்பாள் கோயிலில், விசுவகர்மா செய்த உமையாள்சிலையாம் திருவுருவைச் சிவ சன்னிதானத்து இருப்பில் அழகுற, தேவியாகமப் படி [சாக்த சம்பிரதாயப்படி] அழகாகப் பிரதிட்டைசெய்' என இறைவன், அரசன் கனவில் கூறினார்.* 55

அதுஉணர்ந் தரசன் அஞ்சலி முகிழ்த்தே,
அகமகிழ்ந் தமைச்சர்பால் இயம்பிக்
கதும்என எழுந்து கருணையம் கடலைக்
கருத்துடன் போற்றிஆ லயத்தில்,
பதுமமண் டபத்தில் சேர்ந்தருள் உருவைப்
பார்த்திலக் கணம்எலாம் பரவி,
மதிநிறை நூலோர் மறைவழி இமய
மாதுரு நன்றென வணங்கா,

அரசன் கண்விழித்தான். ஆண்டவனை அஞ்சலி செய்தான். அகம் மகிழ்ந்தான். அமைச்சர்களிடம் கனவுச்செய்தியைச் சொன்னான். விரைவாக எழுந்தான். கருணைக்கடலாகிய கடவுளைக் கருத்துடன் போற்றினான். சிவாலய பத்ம மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்த அம்பாள்உருவத்தைக் கவனமாக, சாக்தசாஸ்திரப்படி அறிவுசார்ந்த நூல்களில் வல்லவர்கள் சொல்லும் வேதவிதிப்படி, உலகவர் 'உமையின் உருவம் நன்றாக இருக்கிறது' என்று போற்றும்படி, பிரதிட்டை செய்யும் இடத்திற்கு எடுத்துவந்தான். 56

ஆகம முனிவோர் தம்மையும் வரித்தே
அயன்முடி விடவரை ஆய்ந்த,
யோகநாள் செய்த ஓரையில் உமையை
யோகபீ டத்தினில் உய்த்துத்
தோகைதன் நாமம் கோமதி வனிதை
சுந்தரி எனப்பெயர் சாற்றிப்
பாகநூல் அமைந்த வண்ணமும் சொன்ன
தானமும் யாகமும் பண்ணி,

தேவியாகம முனிவர்களையும் வரவழைத்தான். பிரமன் நன்றாக ஆராய்ந்துகொடுத்த யோகநாளில் சிறந்த ஓரையில் [நேரம்] உமையை யோகபீடத்தில் பதித்தான். அம்பாள் திருநாமம் கோமதிசுந்தரி, என வைக்கப்பட்டது. சொர்ண தானம், யாகம் முதலியன நடந்தன. 57

மனுமகிழ் வுற்றுக் கவுரியை அழைத்து,
வந்திடு நந்தியை வதிட்டை
முனம்நிறு வியபின் கயிலையைச் சூழ்ந்த
மூரிநந் திகளி நால்வர்களும்
மனைவிமா னத்தைச் சூழ்ந்துவந் தனரால்
வரையுமா னவிமா னஞ்சூழ்ந்து,
இனிதுஉடன் இருக்க இயற்றினன், இருந்தார்
யாவரும் போற்றிட என்றும்.

மனுமன்னன் மகிழ்ச்சியை அடைந்து, கயிலாயத்திலிருந்து உமையை அழைத்துவந்த நந்தியைப் பிரதிட்டை செய்தான். கயிலாயத்திருந்து வந்த மேலும் நான்கு எருதுகளாகிய நந்திகளைக் கோயில் விமானத்தின் நான்கு பக்கங்களிலும் அமைத்தான். யாவரும் போற்றினர். 58

பிரியா வுடையாள் தன்னையும் ஈசன்
தன்இடப் பாகத்தில் பிதிட்டை
மரிவாழ் கையான் அருளினால் அம்பொன்
மன்னிய திருவுரு அமைத்து,
முறையால் நிறுவி உருத்ரமா தர்களும்
மொய்ம்புடை யோகமா தர்களும்,
நறையார் மொழிஅப் சரவனி தையரும்
நயந்திட நிறுவினன் பணிந்தான்.

*இறைவனின் இடப்பாகத்தில் பிரியாவுடையாளைப் பிரதிட்டை செய்தான். மான்வாழும் கையன் அருளால், பொன்னால் அத்திருவுரு அமைக்கப்பட்டது. உருத்திரமாதர்கள், வலிமையுடைய யோகமாதர்கள், தேன்மொழி பேசும் அப்சர வனிதையர் உருவங்களையும் கோயிலில் அமைத்து வணங்கினான்.* 59

## ஆதிமனு கோமதியம்பிகையைத் துதித்தல்

கோமதிபாதத் துணைமலர் போற்றி!
கோமளக் கொவ்வைவாய்க் கோதாய்!
பூமகளுடனே பார்மகள் பரவும்
புண்ணியப் பொன்தொடிப் புனிதாய்!
வாம, மேகலையாய்! மதிமுக மானே!
மருதினில் வளர்மனோன் மணியே!
சேம, தாரணியே! திவ்யபூ ரணியே!
தேவி, நின் திருவடிக்கு அபயம்

*[துணை — இரண்டு; கொவ்வை — கோவைப்பழம்; தொடி — வளையல்; வாமம் — அழகு; சேமதாரணி — நலம்தருபவள்; திவ்யபூரணி — மங்களகரமான நிறைவானவள்]* 60

பூரணி! புனிதை புண்ணிய வனிதை!
புங்கவர் பரவுபொற் பாத
நாரணி அகில காரணி! இமய
நங்கைஅஞ் சுகமொழி நாரி!
வார்அணி தனத்தி ! வாதி! ஆவுடைய
வல்லியே கோமதி மாதே!
ஆரணி அமிர்த ரூபிஆ னந்தி!
அம்பிகை நான்உனது அபயம்.

*[புங்கவர் — வானோர்; நாரணி — நாராயணனின் தங்கை; காரணி — காரணமானவள்; அஞ்சுகம் — கிளி; நாரி — பெண்ணே;*

வாரணி தனத்தி — கச்சுக்கட்டிய முலைகளை உடையவளே; வாதி — கர்வம் உள்ளவளே; ஆவுடைய வல்லி — சக்திபீடம் உடைய கொடி போன்றவளே; ஆரணி — காட்டை உடையகாளி; ரூபி —அழகு வடிவம் உள்ளவளே] 61

எனத்துதித் திறைஞ்சி இமயவள் பாகத்(து)
இறைவனை ஏறணி குடியாய்
தனுத்திகழ் மலையாய்! அருள்எனும் கடலே!
சங்கரா! தாணுவே! சதிவாழ்
புனல்சடை முடியாய்! பொங்கர வணிந்த
பூதநா யகபுராந் தகனே!
அனல்கண்நெற் றியினாய்! அருச்சுன வாணா!
அகிலகா ரணஉன தபயம்.

என்று அம்பிகையைத் துதித்தபின் இறைவனைத் துதித்தான். 'காளை இமயவளைப் பாகத்தில் கொண்ட இறைவனை, யின் மேல் அமர்ந்து, அதையே வாழ்விடமாகவும் அழகாகவும் கருதுபவரே! மேருமலையையே வில்லாகப் பெற்றவரே! அருட்கடலே! இன்பம் செய்பவரே! சிவலிங்கமே! நீராகிய மனைவி வாழும் சடைமுடியை உடையவரே! கோபம் கொண்ட பாம்பை அணிந்தவரே! திரிபுரங்களுக்குக் காலனே! அனலாகிய கண்ணை நெற்றியில் உடையவரே! புடார்ச்சுனத்தில் வாழ்பவரே! உலகங்களுக்குக் காரணமானவரே! நான் உன் அபயம்' எனத்துதித்தான். 62

## ஆதிமனுவின் பிற திருப்பணிகள்

மற்றும்இம் முறையால் மனுக்குல வேந்தன்
வணங்கிமா மதிலுடன், வசந்தம்
பெற்றமண் டலமும், இருபிறப் பாளர்
பெருமைசேர் வீதியும் பிறவும்,
நற்றவர் இருப்பும் நறுமலர் வனமும்,
நாற்பெரும் தெருவும், நானிலத்தோர்
உற்றஆ வணமும் சோலைஉய் யானமும்
உவகையால் சூழ்தர இயற்றா,

இப்படி வணங்கி, வசந்தமண்டபம், அந்தணர் வீதி, துறவிகள் தங்கும் மடம், மணப்பூக்கள் பயிரிட உரிய நந்தவனம், தேரோடும் தெருக்கள், பொதுஇடம், சோலை, உய்யான வனம்

[பொழுதுபோக்கு வனம்] முதலியவற்றையும் மகிழ்ச்சியுடன் ஏற்படுத்தினான்.

63
கீட்டிசைக் கரிய சாத்தனும் தென்பால்
கிஞ்சுக வில்வநாண் மலரின்
தோட்டிதழ் அன்னை வனிதையும் மேல்பால்
தும்பிமா முகத்தனும் வடபால்
பாட்டளி துதையும் பாடலங் கடம்சூழ்
பாலையின் கன்னியும் பணைசூழ்
நாட்டவர் பரவ நான்குவீ தியினும்
காவல ராகநாட் டினனால்.

வயல்சூழ்ந்த நாட்டவர் யாவரும் வந்து வணங்குமாறு, அவ்வூரின் நான்கு திசைகளுக்கும் நான்கு காவல்தெய்வக் கோயில்கள் அமைத்தான். கிழக்கில் சாத்தனார் கோயிலும், தெற்கில் கிளியைக்கொண்ட, வில்வமலர் இதழ்களை விரும்பும் அம்பாள் கோயிலும், மேற்கில் யானைமுகத்து விநாயகன் கோயிலும், வடக்கில் வண்டுகள் பாடும் காடுகள் சூழ்ந்தபாலை நிலத்துக்கரசியான காளிகோயிலும் அமைத்தான்.

64
ஆலையத் துறுப்பும் அணிஅலங் காரத்(து)
ஐவகைப் பொருள்உலோ கமும்பொன்
காலுயர் மணியால் அமைத்தஆ பரணம்
கவின்கிளர் சின்னம்எண் வகைய
நீலகண் டரைப்பூ சிப்பவர் முதலா
நிறுவியே நித்யநை மித்யம்
சீலநல் திருநாள் வாகனா திகள்தேர்
தீர்த்தமா மண்டபச் சிறப்பும்,

ஆலயத்துக்குத் தேவையான பிற உறுப்புகள் [கொடிக்கம்பம் முதலியன] அணியும் அலங்காரமும் உள்ளிட்ட பஞ்ச பூஜைக்குரியன, உலோகப் பாத்திரங்கள், பொன்னாபரணங்கள், நீரோட்டம் மிக்க மணிகள் பதித்த ஆபரணங்கள், அழகான எட்டுவகைச் சின்னங்கள்[ஊதும் கருவிகள்] ஆகியவற்றையும் கோயிலுக்குச் செய்துவைத்தான். நீலகண்டனைப் பூசிக்க அர்ச்சகர்களை நியமித்தான். நாள்பூசை, சிறப்புப்பூசை, பண்பாடுமிக்க திருநாள்பூசைகள் ஆகியவற்றுக்கு ஏற்பாடு செய்தான். வாகனங்கள், தேர் ஆகியவை செய்தான். தீர்த்தவாரிக்கு, மண்டபம் கட்டச் செய்தான்.

65
இவ்வகை பலவாம் பணிகளும் இயற்றி,
ஏறுயர்த் தவரையும் எதிர்வாழ்
கவ்வையாம் பதத்து நந்தியார் தமையும்,
கவிர்எனக் கவின்கொளும் அதரத்

திவ்விய சாயல் கௌரிஎம் அன்னை
தன்னையும் செழுமல ராலே,
பவ்விய முடனே பூசனை செய்து,
பத்திசேர் மனவழிப் பற்றால்,

இப்படிப் பணிகளையும் செய்து, ரிஷபக் கொடியுயர்த்தும் சிவனையும், எதிரில் கோயில்கொண்டுள்ள — ஒலிக்கும் திரு வடிகள் கொண்ட நந்தியையும், முள்முருக்க மலர்போன்ற சிவந்த உதடுகளை உடைய — திவ்வியமான சாயல்கொண்ட கவுரி யாகிய எம் அன்னையையும் நாள்தோறும் செழிப்பான மலர் களால் பவ்வியமாகப் பூசை செய்தான் மனுமன்னன். 66

சாரங்க வல்லி யானதன் தேவி
தன்னுடன் தரைபுகழ் மன்னன்
நேரங்கள் தோறும் பணிந்தெழுந் தன்பாய்
நேசனே போற்றிநின் மலனே
காரங்கொள் களத்தாய் கதிர்இளம் பிறையின்
கண்ணியும் பாம்புடன் அறுகும்
நாரமும் புணைந்த சடையனே மருத
நாதனே சரண்என நவின்றே,

மனத்து ஆசையால் பக்தியுடன் தான் மட்டுமன்றி, சாரங்க வல்லி என்னும் தன் மனைவியுடன் நேரந்தவறாமல் போற்றிகள் சொன்னான். 'நேசரே! போற்றி! மலமற்றவரே போற்றி! கருத்த கண்டத்தை உடையவரே! ஒளிவிடும் இளைய பிறையையும், பாம்பையும், புலித்தோலையும், நீரையும்[கங்கையையும்] அணிந்த சடையை உடையவரே! தலைவரே! சரண்' என்று, போற்றினான். 67

## வசிட்ட முனிவர் வருகை

நாடொறும் பூசித் தன்பாய் நலம்பெறு பணிகள் செய்து,
வீடுசேர் மன்னன் வாழ்வு பெற்றினி திருக்கும் போது,
சேடவர் பணியும் தெய்வ மனுவின்தே சிகர்வ சிட்டர்
கூடிய முனிவ ரோடும் கோவுறை மருதம் உற்றார்.

ஆதிமனு நாள்தோறும் கோயிலுக்குச் சென்று பூசித்து, பணிகள் செய்து வீட்டுக்குத் திரும்புவான். இப்படி இனிய வாழ்வு வாழ்ந்தான். காவலாளிகள் வணங்கும் தெய்வமனுவின் குலகுரு வசிட்டராவார். அவர் திருப்புடைமருதூரில் மனுமன்னன் வாழ்வதால், அவனைக்கண்டு, ஆசிசொல்ல முனிவர்பலருடன் புறப்பட்டுத் திருப்புடைமருதூருக்கு வந்தார். 68

மந்தா கினிஆ டிவளந் திகழும்
கொந்தார் மருதின் குவைமே வியசீர்
எந்தா யைவணங் கிஇணங் குநிலை
யந்தா னரனுக் கரசாற் றுபணி

*ஆதிமனு கங்கையில் குளித்துக் காசியிலிருந்து இங்குவந்த சிறப்பையும், கொத்தான மருதத்தின் குவியலான சிறப்பையும், எம் தாயாகிய கோமதியை வணங்கும் நிலையையும், அழகாகச் சிவனுக்குச் செய்யும் பணியையும்,* 69

கண்டே மனம்எய் துகளிப் பினொடும்
வண்டேய் மலர்மா லைவனைந் தநெடும்
திண்டோள் மனுவைச் செறியத் திருவார்
விண்டோய் வியமா ளிகைமே வினனே.

*பார்த்து மனத்தில் களிப்போடு வண்டு மொய்க்கும் மலர் மாலை புனைந்த, நெடிய திண்மையான தோள்களையுடைய மனுவிடம் சேரச் செல்வம் கொழிக்கும் விண்ணை முட்டும் வெற்றிமாளிகைக்கு வந்தார்.* 70

வசிட்டன் வருசெய் தியைவா யில்உளோர்
உசிதம் பெறுமன் னனிடத் துரையா
பசிக்கும் பொழுதில் பதம்உற் றதெனாக்
கசித்தன் போடெ திர்ந்துக லந்தனனே.

*வசிட்டர் வரும் செய்தியை, வாயில்காப்போர் அரசனிடம் உசிதம் [தக்கநேரம்] அறிந்து சொன்னார்கள். நன்றாகப் பசி எடுக்கும்போது, நல்ல உணவு கிடைத்தால் தோன்றும் மகிழ்ச்சியுடன், அன்பு கசிய வசிட்டரை, மன்னன் எதிர் கொண்டழைத்தான்.* 71

பாதங்கள் பரவி ஏத்திப் பரஞ்சுடர் அருளைப் பெற்ற
போதங்கொள் முனிவா நீஎன் புன்குடில் இனிதின்எய்த,
ஏதங்கள் தீர்ந்தின் புற்றேன் இங்கிருந் தருள்க என்னா
மாதங்க மன்னன் போற்றி மகிழ்ந்திட முனிவன் சாற்றும்.

*மன்னன் வசிட்டரின் பாதங்களில் விழுந்து வணங்கி, பரஞ்சுடராம் சிவனின் அருள்பெற்ற ஞான முனிவரே! நீர் என்னுடைய அற்பக் குடிசைக்கு, இனிமையுடன் வந்ததால், நான் துன்பங்கள் நீங்கி இன்பம் அடைந்தேன். இங்கே அமர்ந்து, அருள்செய்க என்றான். அவர் இருக்கையில் அமர்ந்ததும், யானைகளை உடைய அரசன், போற்றிசெய்து மகிழ்ந்தான்.* 72

எழில்செறி வளங்கள் ஓங்கும் இப்புடை மருதின் சீர்கள்
அழிவிலான் அருளிச் செய்ய அனைத்தையும் அறிந்தாய்

அன்றோ!
பழியுறு மகவான் போற்றிப் பவம்தவிர்த் தனன்பின் வேண்டிக்
கழிவிலாப் பதம்அ டைந்து கடவுளர்க் கரசன் ஆனான்.

*முனிவன் அரசனைப் பார்த்துச் சொன்னான்: 'அழகுமிக்க வளங்கள் ஓங்கும் இந்தத் திருப்புடைமருதூரின் சிறப்புகளை, அழியாத பரமனே உனக்குச் சொல்ல, அறிந்துகொண்டுள்ளாய். விருத்திராசுரனைக் கொன்ற பழியை, இந்திரன் இங்கு வந்து, இறைவனைப் போற்றி நீக்கிக்கொண்டான். அவன் நீங்காத நற்கதி பெற்றான். தேவர்கட்கு மீண்டும் அரசன் ஆனான்.* 73

இப்பதி போல்மற் றெங்கும் இலைஎன இயம்பி எந்தை,
செப்புதற் கரிய சீர்த்தி செப்பியே அளவ ளாய்மீ
விப்பிர முனிவன் மன்ன னுடன்எழீஇ விமலற் போற்றத்
துப்புறழ் வேணி அண்ணல் ஆலயம் சூழ்ந்து போந்து,

*'இந்தத் தலம்போல் சொல்லமுடியாப் பல சிறப்புகளைக் கொண்ட தலம், வேறெதுவும் இல்லை என்று சொல்லிப் பல செய்திகளை, இருவரும் பேசி மகிழ்ந்தார்கள். மிகவிரைவாக முனிவனும் மன்னனும் எழுந்தனர். பவளச்சடையானாம் விமலனைப் போற்றி வணங்க, இருவரும் புறப்பட்டுத் திருவீதி வலம்வந்து, கோயிலுக்குள் சென்றார்கள்.* 74

## வசிட்டருடன் வழிபாடு

துதித்தடி பணிந்து போற்றிச் சோதியான் தனைப்பூ சிக்க,
விதிப்படி வேண்டும் எல்லாம் அமைத்துமெய் விமலற் கன்பால்
ததிப்படி அபிடே கத்தால் சந்தனக் குழம்பால் ஆட்டி,
நதிப்புனல் ஆட்டி நன்பட் டாடையும் நகைத்தண் போதும்,

*வசிட்டரும் ஆதிமனுவுமாகக் கோயிலில் இறைவனைத் துதித்து, விழுந்து வணங்கினார்கள். இறைவனைப் பூசிக்க, விதிப்படி வேண்டும்பொருள்களை எல்லாம் அமைத்துக் கொண்டார்கள். பால், சந்தனக்குழம்பு, தயிர், நதிநீர் முதலியவற்றால் அபிஷேகம் செய்தார்கள். பட்டாடை, மலர்ந்துகொண்டிருப்பதான மொட்டுகள் சாத்தினார்கள்.* 75

சாத்திச்சந் தனம்கர்ப் பூரம் தகரம்குங் குமமே கோட்டம்
சேர்த்திமான் மதம்உள் ளிட்ட சிறந்தலே பனத்தால் மட்டித்து
ஆத்திதா ரோனை நோக்கி அழகிதென் றமலர் தம்மை
ஏத்திலே பனமா தேவ சுந்தரா எனத்து தித்தார்.

*சந்தனம், கர்ப்பூரம், தகரம் [பஞ்சமணப்பொருள்களில் ஒன்று அல்லது மயிர்ச்சாந்து குங்குமம்] சார்த்தினார்கள். கஸ்தூரி*

முதலிய வாசனைப் பொருள்களால் செய்த 'இலேபனம்' இறைவனின் திருமேனியில் தடவினார்கள். ஆத்திமாலை அணிந்த சிவனைப்பார்த்து அரசன் 'அழகாக, இருக்கிறது' என்றான். இருவரும் இறைவனைப் போற்றினார்கள். 'இலேபன மகாதேவா! சுந்தரா' எனத்துதித்தார்கள். 76

சங்கரா! சரணம்; மூலச்
சம்புவே! சரணம்; பாதித்
திங்களும் புனலும் வேய்ந்த
தேவனே! சரணம்; மாலும்
பங்கயத் தவனும் காணப்
பருப்பதச் சுடராய் நீண்ட
பொங்குஅழல் உருவம் ஆன
புண்ணியா! சரணம் போற்றி!

[சங்கரா — இன்பம் செய்பவரே; மூலச்சம்புவே — மூல முதலே; பாதித்திங்கள் — பிறை ; பங்கயத்தரன் — பிரமன்; பருப்பதம் — மலை; அழல் — நெருப்பு] 77

எனத்துதித் திறைஞ்சி நின்ற இருவருக் கெதிரே ஈசன்
சினப்பொரு விடைமேல் தேவி பக்கமும் திங்கள் வேய்ந்த
தனிச்சடை முடியும் காள கண்டமும் தவள நூலும்
அனல்கணும் புயங்கள் நான்கும் அபயம்செய் கரமும் ஆக,

என்று வசிட்டரும் ஆதிமனுவும் துதித்தனர். இருவருக்கும் எதிரில் கோபமுடைய விடையின்மேல், தேவியுடன் ஈசன் திங்கள் சடையுடன் நீலகண்டனாக, நீறுபூசிய வெள்ளை நெற்றியுடனும் நெருப்புக்கண்ணுடனும், நான்கு அபய கரங்களுடனும் தோன்றினார். 78

தோன்றினன் செயலற் றங்ஙன் துதித்தனர் கண்டு போற்ற
ஈன்றஆன் கன்றை நோக்கும் இயல்பென மனுவை நோக்கி,
வான்தவம் நீசெய் கின்ற மந்திரப்பணிக்கு வந்தோம்
சான்றவ ருடன்நீ சாற்றும் இலேபன சவுந்த ரப்பேர்,

செயலற்று இருவரும் துதித்தனர். பெற்ற கன்றைப் பார்க்கும் தாய்ப்பசுவைப்போல, மனுவைப் பார்த்து, நீ செய்த வானளவுயர்ந்த பூசைப்பணிக்கு மகிழ்ந்து வந்தோம். சான்றோராகிய வசிட்டருடன் இலேபனம் சார்த்தி அழகு செய்தீர்கள். இதனால் 'இலேபன சுந்தரன்' என்ற பெயர் எமக்கு வாய்த்தது. 79

நண்ணின நினக்கும் அப்பேர் நாட்டினம் நாடாள் கீர்த்திப்
புண்ணியப் புதல்வன் ஈந்தோம் புவிதனில் இன்னும் பன்னாள்

**எண்ணிய போகம் மூழ்கி எம்உல கடைவாய் உன்பேர்த்**
**தண்ணளித் தீர்த்தம் தோய்வோர் சந்ததிப் பேறும் சார்வார்.**

*நீயும் இலேபன சுந்தரன் எனப் பெயர்பெறுவாய். புகழ் வாய்ந்த புண்ணியப் புதல்வன் பிறக்க, வரம் அளித்தோம். உலகில் பலகாலம் — வாழ்த்த, நினைத்த சுகங்களில் மூழ்கி, அதன் பின் சிவலோகம் அடைவாய். உன்பேரில் அமைந்த மனுதீர்த்தத் தில் குளிப்பவர்கள், பிள்ளைப் பேறுகள் அடைவார்கள். 80*

திரம்என விடையோன் கூறத் தேவர்கள் ஆக்கங் கூறத்
தரைபுகழ் மன்னன் போற்றித் தாழ்ந்தனன் எங்கோன் அங்ஙன்
பரம்அதாம் சிவலிங் கத்தில் புகுந்தனன் பண்பு சான்ற
அரையன்மெய்ப் புளகம் உற்றே அளவிலா மகிழ்சி றந்தான்.

*'இது உறுதி!' என்று விடையவன் கூறினார். தேவர்கள் ஆமோதித்தார்கள். நாடு புகழும் மனுமன்னன், இறைவனைத் தாழ்ந்து போற்றினான். இறைவன் பரம்பொருளாம் சிவலிங்கத்தில் புகுந்தார். பண்புமிக்க அரசன், புளகாங்கிதம் அடைந்தான். அளவிலாத இன்பத்தை அடைந்தான். 81.*

## ஆதிமனு, வரத்தால் மகனைப் பெறுதல்

அண்ணல் எதிர்ந்தருள் நல்கிய தன்மை அகத்துவ
கைக்கிணையாய்
எண்ணியே ஏற்றனம் என்ன மகிழ்ந்தியல் பான விழிக்குருடன்
கண்ணை விழித்திடல் பெற்றன போலும் இலோன்மிகு
கைப்பொருளை
மண்ணிடைப் பெற்றனன் போலும் வியந்தனன் மாதி
னுடன்பணியா.

*சிவன் எதிர்வந்து வரம் அருளியதை, மனத்தில் நினைத் தற்கு ஒப்ப வரம் தந்ததை நினைத்து மகிழ்ந்தான். பிறவிக்குருடன் கண்விழித்ததுபோல—கண் பெற்றதுபோல—தரித்திரன் மிகுந்த செல்வத்தை இவ்வுலகில் பெற்றது போல வியந்து மகிழ்ந்து, சாரங்கவல்லி என்னும் தன்மனைவியுடன் வணங்கினான்.82*

பெற்றம் உவந்தருள் நாய கனைப்பணி வுற்றருள் பெற்றபினும்
நற்றவ நீத வசிட்டரும் மன்னவ னுக்குயர் ஆசிநலம்
உற்றிட நல்கி உவப்பொடும் ஏகிட உண்மை யுடன்பணியா
அற்றவர் ஆசி அடுத்தனம் என்றகம் எய்தினன் அவ்வளவே.

*காளையை மகிழ்ந்தேற்கும் தலைவனின் அருள்பெற்ற பிறகு நல்ல தவஒழுக்கம் உடைய வசிட்டர், அருள்பெற்ற அரசனுக்கு*

உயர்ந்த ஆசிகளை வழங்கினார். மகிழ்ச்சியுடன் சென்றார். உண்மையுடன் வணங்கித் துறவியின் ஆசியும் கிடைத்து என மனம் மகிழ்ந்து, அரசன் வீட்டிற்குச் சென்றான். 83

மலர்முக மன்ன வன்தரன் மண்பதை காத்து வாய்மை
மலர்மகள் என்ன வாய்ந்த அணங்கினோ டளவு நீடி
நலம்மலி வுற்றி ருக்கும் நாளினி லங்கை யால
இலையெனும் வயின்க ருப்பம் எய்தினள் மதிஈ ரைந்தில்.

மலர்போன்ற முகம்கொண்ட அரசன் வாய்மையுடன் உலகத்தைக் காத்து, திருமகள் போன்ற தெய்வ அழகுடைய சாரங்கவல்லியுடன் பலகால் நிலையாக இன்பம் துய்த்திருக்கும் நாள்களில், உள்ளங்கை போலவும், ஆலஇலை போலவும் இருக்கும் இடத்தில் [அல்குலில்] கருப்பம் நுழைந்தது. 84

ஆன்றவ ளக்கும் நாளில் அமைந்திடு மோனந் தன்னில்,
தோன்றுபுத் திரற்கு நாமம் சுந்தர மனுஎன் றிட்டுச்
சான்றநன் மைந்த னுக்குத் தன்முடி தரித்து வையம்
மூன்றையும் புரக்கும் கீர்த்தி முறைபுரிந் திருந்தான் மன்னோ.

பத்து மாதங்களில் மேலோர் நல்ல நாளாகச் சொல்லிய நாளில், நிசப்தமான நேரத்தில் ஓர் ஆண்மகன் பிறந்தான். அவனுக்குச் சுந்தரமனு எனப் பெயரிட்டார்கள். அவன் வளர்ந்ததும், அவனுக்கு அரசன் தன் அரசாட்சியை அளித்து முடிசூட்டினான். உலகம் மூன்றையும் காக்கும் புகழையும் நீதியையும் அவனுக்கு ஏற்படுத்தினான். 85

## ஆதிமனு இறைவனடி அடைதல்

தருசிவ தருமன் தண்மரு துற்றோன்
தானகா ரியமே சார்வாய்
இரவும்நண் பகலும் இடைவிடா தியற்றி
இம்மையில் பெற்றவன் இனிய
கரைஇலா இன்ப பூரண ஞானக்
கதிஅடைந் தான்கழல் பாத
விரைகமழ் மலரின் வண்டெனப் பொருந்தி
விரவினன் மனுகுல வேந்தன்.

சிவதருமங்கள் செய்தவனும், திருப்புடைமருதூருக்கு வந்தவனும், இரவிலும் பகலிலும் இடைவிடாமல் தானங்கள் செய்து தருமத்தின் பலத்தில் வாழ்ந்தவனும் ஆகிய ஆதிமனு,

எல்லையில்லாத முழுமையான ஞானக்கதி அடைந்தான். இறைவன் பாதம் அடைந்தான். இறைவன் திருவடிகளாகிய மலரில், வண்டுபோலச் சென்று பொருந்திக் கலந்தான். 86

## கோமதி அம்பிகையின் நிறம் மாறியது

மைநிகர் கூந்தல் அன்னைகோ மதித்தாய்
வதிந்திட மயன்அளித் திட்ட
மெய்யர்வாழ் மருதில் இந்திர நீலம்
விளங்கிய திருவுரு இன்னாள்
பொய்யுகத் தவர்க்குத் தக்கதாம் நிறமாய்ப்
பொலிந்தினி திருந்தனள் புனிதை
துய்யகோ மதிஅக் குவடதா யினதால்
சுந்தரிக் கப்பெயர் சொற்றான்.

மயன் உருவாக்கிய புடைமருதில், மைபோன்ற நிறமுடைய கூந்தலைக் கொண்ட கோமதி அன்னை வதிய, அமைத்த கோயிலில் இந்திரநீல நிறத்தில், அன்னையின் உருவம் அமைந்திருந்தது [நீலச்சிலை உரு — பாடல் எண் 50] இந்த நாளில் பொய்விரும்புபவர்க்கு ஏற்ற நிறமாகிய கருநிறம் கொண்டுள்ளது. கருநிறம் ஏற்ற புனிதையாகிய தூய்மையான கோமதிக்கு — கோமதிமலையின் கல்லால் உருவானமையால், அப்பெயரால் அழைக்க அப்பெயரை, இறைவன் சொன்னார். 87

## இறைவன் தழும்புடனும் ஆவுடையாளொடும் இருத்தல்

மருதினான் மேனி மன்னன்வேல் எறிந்த
வடுவினால் வலப்புறம் வழும்பாய்க்
கருதிட இன்றும் என்றும்யா வர்க்கும்
காட்டியே இருந்தனன் கசிவாய்ப்
பரவிடு வோர்க்குப் பங்கயன் முதலோர்
தங்கட்கும் இரங்கியே பரிவால்
அருள்திரு உருவே ஆவுடை மாதாய்
அரன்தர உமையவள் அமர்ந்தாள்.

ஆதிமனு வேலால் எறிந்த புண்ணின் தழும்பை, வலப்புறத்தில், யாவரும் என்றும் காணுமாறு இறைவன் காட்சி தருகிறார். கசிவுடன் போற்றுபவர்களுக்கும், பிரமன் முதலியவர்களுக்கும் இரக்கப்பட்டுப் பரிவுடன் அருள்திருஉருவாக ஆவுடைய மாதாக அரன் அருள்செய்ய உமையவள் உள்ளாள். 88

## பயன்

துகள்இலா வசிட்ட முனியுடன் மன்னன்
தூரியாம் நானமும் புழுகும்
அகம்மகிழ் வுடனே சந்தன களபம்
அணிந்ததால் அருச்சுனன் தனக்குத்
திகழிலே பனசுந் தரன்என என்றும்
திருப்பெயர் சிறந்தன செல்வம்
நிகழும்நா யகன்பேர் துதிப்பவர் என்றும்
நித்யகல் யாணர்ஆ குவரே.

*குற்றமில்லாத வசிட்ட முனிவருடன் ஆதிமனு இறைவனைப் பூசித்த பொழுது, தூரி எனப்படும் நானம் [கஸ்தூரி], புனுகு, சந்தனம், சாந்து என்னும் மணப்பொருள்களை மனமகிழ்ச்சி யுடன் தடவினார்கள். அந்த மணப்பொருள்களை அணிந்ததால், இறைவனுக்கு இலேபன சுந்தரன் [வாசனைத்தைலம் பூசிய அழகன்] என்ற திருப்பெயர் சிறப்பாக அமைந்தது. செல்வம் கொழிக்கும் நாயகனின் இப்பெயரைச் சொல்லித் துதிப்பவர்கள், என்றும் மங்களகரமானவர்களாக — நித்திய கலியாணர்களாகத் திகழ்வார்கள்.* 89

ஆகத் திருவிருத்தம் – 749

# 7. சதுர்முகன் படலம்

புனிதவத் திரன்பூ பாலன் புடைமரு தீசர் வைக
நனிய ஆலயம்செய் வித்து நன்பொருள் பெற்றல் சொற்றாய்
இனிஅம்போ ருகனார் எய்தக் காசிஇத் தலமே என்று,
மனியசோ தனையால் கங்கை வழித்தண்டம் வருதல் சொல்வாம்.

'புனிதமான ஆடை அணிந்தவனும், அரசனுமாகிய ஆதிமனு, புடைமருதீசர் தங்குவதற்குப் பெரிய ஆலயம் செய்து, நல்லவரங்கள் பெற்றதைச் சொன்னோம். இனிப் பிரமன் காசிக்குச் சென்று, திருப்புடைமருதூர் சிறந்ததலம் என்பதை அறியச் செய்த சோதனை காரணமாகப் பிரமதண்டம் கங்கையிலிடப் பட்டு, அது பொருனையில் வந்த கதையைச் சொல்வேன்' என்றார் சூத முனிவர். 1

## காசியில் நான்முகன்பூசை

அத்திசூழ் புவிகள் எட்டும் அவனிசூழ் கரிகள் எட்டும்
துத்திசேர் நாகம் எட்டும் சொல்லிய வரைகள் எட்டும்
இத்தெலாம் பிரள யத்தில் இறந்திடும் காலத் தேயும்
நித்தியன் ஒருவன் போல நின்றிடும் காசி என்றே.

யானைகள் சூழ்ந்த உலகங்கள் எட்டும், உலகைத்தாங்கும் யானைகள் எட்டும், படமெடுக்கும் நாகங்கள் எட்டும், மலைகள் எட்டும் பிரளயகாலத்தில் அழியும். அக்காலத்திலும், இறைவனைப் போல அழியாமல் நிலைத்திருப்பது காசி மட்டுமே ஆகும்.2

முத்தொழில் புரியா நின்ற மூவரில் முன்னூல் வேதன்
அத்தனைப் பரிவி யாகம் செய்திட அத்தலத்தில்
மெய்த்தவ வழியால் போந்து விமலனைப் பூசித் தேத்த,
நத்துறு கங்கை ஆடி நதிக்கரை ஏறி அங்஧ன்,

எனவே, படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் களைச் செய்யும் மும்மூர்த்திகளில் ஒருவராகிய பிரமன், தவத்தினால் இறைவனைப் போற்றி, யாகம் செய்யக் காசிக்குச் சென்றார். விருப்பத்துடன் கங்கையில் நீராடிக் கரை ஏறினார். 3

தன்பெயர் இலிங்கம் ஒன்று தாபித்துத் தனக்கு வேண்டும்
இன்பம்எய் திடவே பூசை இயற்றியே தவம்பு ரிந்தான்;
அன்பினுக் கிரங்கி எங்கோன் அவ்விலிங் கத்தி னின்று,
மின்புரி சடையும் காள கண்டமும் விளங்கு நீறும்.

காசியில் தன்பெயரில் பிரமலிங்கத்தை அமைத்தார். தனக்கு வேண்டிய இன்பங்களை அடைவதற்காகப் பிரமலிங்கத்தைப் பூசித்தார். தவம் செய்தார். இறைவன் பிரமனின் அன்புக்கு இரக்கப்பட்டு, இலிங்கத்திலிருந்து மின்னுகின்ற செஞ்சடையும், நீலகண்டமும், திருநீறும் கொண்டு வெளிப்பட்டார். 4

முக்கணும் நான்கு தோளும் மூரிஏ றதனில் தேவி
பக்கமும் ஆகித் தோன்றிப் பங்கய நீசெய் கின்ற,
மிக்கநல் தவம்வி யந்தோம் வேண்டிய வரம்கேள் என்றான்;
நக்கபொன் முளரி பூத்த நான்முகன் தொழுது நின்றே,

மூன்றுகண்களும், நான்கு தோள்களும் கொண்டு, வலிமையான ரிஷபவாகனத்தில் உமாதேவியைப் பக்கத்தில் கொண்டு, இறைவன் வெளிப்பட்டார். 'தாமரையில் அமர்ந்த பிரமனே! நீ செய்கின்ற பெரிய நல்ல தவத்தைப் பார்த்து, ஆச்சரியப்பட்டோம். உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்!' என்றார். பூத்த தங்கத்தாமரையில் உள்ள நான்முகனும், எழுந்து நின்று, சிவனை வணங்கினார். 5

## சிவனார் அருள்

உன்னைப்பூ சிக்க வேண்டும் உனதுசூ லத்தால் தாங்கும்
இன்னக ரத்தில் யாகம் செய்திட வேண்டும் என்றான்;
அன்னது கேட்டு நாதன் அதிகம்இத் தலத்தி லேயும்
நன்னல முத்தி நல்கும் நகர்ஒன்று நவிலக் கேண்மோ!

'உன்சூலம் தாங்கும் இந்தத் தலத்தில் உன்னைப் பூசிக்க வேண்டும். இங்கே யாகம் செய்யவேண்டும்!' எனப்பிரமன் சிவனிடம் வரம் கேட்டார். 'இந்தத் தலத்தைவிட அதிகமான தலம், முத்தித்தலம் ஒன்றிருக்கிறது. அதைப்பற்றிச் சொல்கிறேன் கேள்' என்றார் சிவன். 6

தெய்வதா ருவிற்சி றந்த பூதரம் என்ன ஓங்கி,
ஐவரில் முதலாம் சோதி ஆரண வடிவ மான
திவ்வியப் புடைசேர் கின்ற அருச்சுனம் சிறந்து வாழும்
உய்பவர்க் கதுபோல் வேறே உலகினில் இல்லை மாதோ!

"தெய்வ மரமாகிய கற்பகத்தருவைவிடச் சிறந்த கொடை வழங்கும் மரமாகிய மருதமரம் அங்கே உள்ளது. ஐவரிலும்

முதலாகிய சோதியாக, வேதவடிவமாக உள்ள பரம்பொருள் பக்கத்தில் அம்மருதமரம் உள்ளது. எல்லாக் கடைத்தேற்றங்களையும் தருவதற்கு, அதைப்போல் வேறொன்றும் இல்லை'. 7

பொதிகையின் சார்பில் ஓங்கும் புண்ணிய புவனம் தன்னில்,
அதிகம்ஆ கியத லங்கள் அனந்தம்உண் டதனில் கங்கை
நதியெனும் பொருனை சூழ்ந்த நகர்புடை மருதம் ஆகும்;
துதிபெறும் அதனில் வாழும் உயிரெலாம் சுரர்கள் ஆவர்.

'பொதிகை மலையைச் சார்ந்த புண்ணியப் பகுதியில், உயர்வான தலங்கள் பல உள்ளன. அவற்றில் கங்கை நதி எனத்தக்க பொருனைநதி சூழ்ந்த நகர் திருப்புடைமருதூர். அங்கே வாழும் எல்லா உயிர்களும் தேவர்களே ஆவர். 8

சிவகண நாதர் வாழும் தெய்வதத் தலத்தில் நம்பால்
தவமுடன் பூசை செய்து யாகமும் செய்து வந்தால்,
நவமலர் அயனே போற்ற நலம்பெறு வரங்கள் ஈவோம்;
புவனியில் கயிலை அந்தப் புடைமரு தினில்ஏ கென்றான்.

சிவகணநாதர்கள் அத்தலத்தில் வாழ்கிறார்கள். தெய்விகம் பொருந்திய அந்தத் தலத்தில் தவம் செய்து, பூசை செய்து, யாகங்கள் செய்து போற்றினால், நன்மை பெறத் தக்க வரங்களைத் தருவோம். புதுமையான மலரினை உடைய பிரமனே! பூலோகக் கயிலாயமாகிய திருப்புடைமருதூருக்குப் புறப்படு' என்று, சிவன் கூறினார். 9

போதகன் பணிந்து ரைப்பான் புண்ணியம் செறிஇக் கங்கை
நாதனே அங்குண் டோதான் நயந்தருள் செய்வாய் என்னச்
சீதநீர் வேணி இந்தத் திரிவேணி அதனில் உன்தன்
காதையை அமிழ்த்தல் செய்வாய் காட்டுதும் சோத கந்தான்.

ஞானியாகிய பிரமன் சிவனைப் பணிந்து, 'தலைவரே! இந்தக் கங்கைநதி திருப்புடைமருதூரில் உண்டா? கோபிக்காமல் பதில் சொல்லுங்கள்' என்றார். 'குளிர்ச்சியான இந்தத் திரிவேணியில், உன் பிரமதண்டத்தை அமிழ்த்து; இது ஒரு பரிசோதனைதான். 10

கங்கையின் சோத கந்தான் கண்டிட உன்கைத் தண்டம்
இங்குயர் திரிப தாகைச் சங்கமம் இதனில் தானே,
முங்கிட அமிழ்த்தின் தண்டம் முளைக்கும்அ தெவ்வி டந்தான்
அங்கது தென்பால் காசி ஆகுமாம் அந்தத் தண்டம்,

*கங்கையின் புனிதத்தன்மையை அங்கே காண இங்கே திரிவேணியில் அமிழ்த்தினால், தெற்குக்காசியாகிய திருப்புடை மருதூரில் முளைத்தெழும்.* 11

அமிழ்த்திடில் அதுபா தாள கங்கைஆ றாகச் சென்று,
தமிழ்த்திசை யினில்உ ரைத்த கடனைசேர் சங்க மத்தில்,
இமைப்பிலார் ஆடும் தாம்ப்ர நதியினில் எழும்பும் ஆங்கே;
அமைக்கென தண்டம் தன்னை எனஅரு ளினன்ம றைந்தான்.

*பாதாள கங்கை வழியாகச் சென்று, தமிழ்த்திசையில் கடனைநதி பொருனையுடன் கலக்கும் சங்கமத்தில், தேவர்கள் நீராடும் தாமிரவர்ணியில் எழும். அதை எடுத்து அங்கே பிரதிட்டை செய்க' என்று சிவன், பிரமனுக்குக் கூறி மறைந்தார்.* 12

## நான்முகனின் தலயாத்திரை

ஈசனைப் பணிந்து வேதன் இணையிலாத் தண்டம் தன்னைக்
காசிவே ணியில்அ மிழ்த்திப் படிந்தவன் கரையில் உள்ள
நேசனைப் போற்றி அன்பால் நெகிழ்திருச் சயிலம் போற்றி,
வாசவன் மாயன் போற்றி வழிபடும் கோயில் வாழ்த்தி,

*பிரமன் இறைவனைப் பிரார்த்தித்துப் பிரமதண்டத்தைத் திரிவேணியில் அமிழ்த்தினார். கங்கையில் நீராடினார். கரையில் உள்ள சிவனை வழிபட்டார். தலயாத்திரை புறப் பட்டார். ஸ்ரீசயிலத்தைத் தரிசித்தார். திருமால் இறைவனை வழிபட்ட தலங்களை எல்லாம் தரிசித்தார்.* 13

வாயுலிங் கம்பூ சித்து மாவின்கீழ் இருந்த கோவைத்
தாயுமை பூசை செய்த தளியையும் தாழ்ந்து போற்றித்
தேயுவாம் மலையைப் போற்றித் திருக்கழுக் குன்றம் போற்றிப்
பாயுமுத் தாறு சூழ்ந்த பழமலைப் பதியைப் போற்றி,

*வாயுலிங்கத்தலத்தை வணங்கினார். மாமரத்தின் கீழிருந்த தலைவனை — தாயாம் உமையம்மை பூசித்த காஞ்சித் தலத்தைத் தரிசித்தார். தேயுலிங்கத் தலத்தை வணங்கினார். திருக் கழுக்குன்றத்தைத் தரிசித்தார். மணிமுத்தாறு பாயும் திருமுது குன்றத்தைத் தரிசித்தார்.* 14

அந்தர லிங்கம் போற்றி, ஆழியி லானைப் போற்றிச்
சிந்துர முகவன் போற்றும் திருப்பதி போற்றித் தெய்வப்
பந்தணை நல்லூர் முன்னம் குடந்தைஆ ரூர்ப ணிந்து,
சந்திரன் போற்றும் கோயில் ஐயாறு தனைப்ப ணிந்தே,

*கடலோரம் உள்ள விநாயகரை வணங்கினார். விநாயகர் சிவனை வணங்கும் ஊரைத் தரிசித்தார். தெய்வத்தன்மை*

வாய்ந்த பந்தணைநல்லூர், திருச்சத்திமுற்றம், குடந்தை, திருவாரூர் ஆகிய தலங்களுங்களுக்குச் சென்று, வழிபாடு செய்தார். சந்திரன் போற்றும் கோயில் உள்ள திருவையாற்றில் தரிசனம் செய்தார். 15

மற்றுள தலங்கள் போற்றி ஆனைக்கா வணங்கி மூன்று
நற்றவர் பரவும் வெற்பை நண்ணியே பூசித் தேத்திக்
கற்றவர் மதுரை போற்றிக் கடல்இரா மேசம் மற்றும்
முற்றுற வணங்கி வேழம் முளைத்தவன் தன்னை முன்னர்,

மற்றுமுள்ள சிவத்தலங்களிலும் வழிபாடு செய்து, திருவானைக்காவை வணங்கி, நல்ல துறவிகள் துதிக்கும் சிராப்பள்ளி மலையில் வழிபாடுசெய்து, கற்றவர்கள் வாழும் மதுரையை வணங்கி, கடல் உள்ள இராமேசம், மற்றுமுள்ள தலங்களை முழுதுமாக வணங்கினார். யானை முகத்தவனை முன்னதாக வணங்கினார். 16

வணங்கியே குற்றா லத்து வன்பலா இறைஞ்சி மற்றும்
அணங்கர வசைத்தோன் வாழும் பதிபணிந் தடவி சூழும்
மணந்திகழ் மருதை மேவி வணங்கியே பொருனை ஆடி,
இணங்கிய கடனை கூடும் சங்கமம் எய்தி அங்கண்,

திருக்குற்றாலத்தில், பலாமரத்தின் கீழுள்ள பெருமானை இறைஞ்சினார். அச்சம் தரும் பாம்புகளை அணியாகக் கொண்ட இறைவனின் பதிகளை எல்லாம் பணிந்தார். காடுகள் சூழும் — மணம் திகழும் திருப்புடைமருதூரை அடைந்தார். கோபுரத்தை வணங்கினார். பொருனையில் நீராடினார். கடனையாறு சங்கமிக்கும் இடத்தை அடைந்தார். 17

## பிரமதண்டம் எழுதல்

வந்திடும் போதில் தண்டம் எழுந்தது கண்டு மாயோன்,
தந்திடும் புதல்வன் உள்ளத் ததிசயம் எய்திச் சார்ந்தான்;
அந்தரத் தமரர் போற்ற அரவிந்தன் தண்ட தீர்த்தம்
இந்தமுக் கூடல் என்றே இறைஞ்சினார் ஏத்தி னாரே.

சங்கமத்திற்கு வந்தபோது காசியில் திரிவேணியில் கங்கையில் அமிழ்த்திய பிரமதண்டம் எழுந்தது. திருமாலின் புதல்வராகிய பிரமன் அதிசயப்பட்டார். மேலிருந்து தேவர்கள் போற்றினார்கள். பொருனை — கடனை — கங்கை கலக்கும் இந்த முக்கூடலுக்குப் பிரமதண்டதீர்த்தம் எனப்பெயரிட்டுப் போற்றினார்கள். 18

போதினான் நதிஇ ரண்டும் பொழிந்தமத் தியினில் கங்கை,
சோதனை யாகத் தோன்றும் வேணியில் தோய்ந்தான் அங்கண்
மேதினி மணாளன் தோன்றச் சாட்சியாய் விதிதண் டத்தை
நீதமாய் எடுத்துக் கொண்டு நிகர்இலா மகிழ்சி றந்தான்.

பொருனை கடனை நதிக்கு மத்தியில், கங்கையில் சோதனைக் காக இட்ட பிரமதண்டத்துடன், கங்கைநதி தோன்றியது. அத்தீர்த்தத்தைப் பிரமன், தலையில் தெளித்துக்கொண்டார். பிறகு பிரமதண்டத்தை எடுத்துக்கொண்டு, மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். 19

தண்டசோ தனையால் கங்கை சார்ந்தது கண்டோம் என்றே,
அண்டர்கோன் மோட்ச தீர்த்தத் தருகினில் ஆடி ஏறிப்
புண்டரி கத்தோன் சென்று புழைக்கைமா முகனைப் போற்றி,
முண்டகப் பதம்ப ணிந்து முன்னவன் தன்னை உள்கி,

பிரமன், தண்டத்தைச் சோதனைக்காகக் கங்கையில் போட்டதால், இங்கே கங்காநதியே வந்தது என்று மகிழ்ந்து, இந்திர தீர்த்தம், மோட்ச தீர்த்தங்களில் நீராடி, யானைமுகனை வணங்கி, அவனின் தாமரைப் பாதங்களைத் துதித்து, இறையருளை நினைந்து கசிந்தார். 20

பிரமமாய் நின்ற வேத விருக்கமாய்ப் பிறைசேர் கின்ற
மருதமும் அதன்பால் வாழும் மாதவர் வதியும் பண்பும்
சுருதிகூ றியபுள் வாழும் சோலையு மாலை நீடும்
திருவளர் சிறப்பும் தெய்வத் தானமும் திசையோர் வாழ்வும்,

பிரமவடிவாய், வேதவடிவாய், சந்திரன் தங்கும் அளவுக்கு உயரிய மாடங்கள் உள்ளதான புடைமருதூரையும், அங்கே துறவிகள் தங்கியுள்ள சிறப்பையும், வேதங்களைப் பேசும் கிளிகள், வேதங்களைப் பாடும் நாகணவாய்ப் பறவைகள் வாழும் சோலைகளையும், மாலைகள் தொங்கும் மாடங்களின் சிறப்பையும், தெய்விக இடங்களையும், பலநாட்டினர் வாழும் இடங்களையும் கண்டு, பெருமிதம் அடைந்தார். 21

கண்டிறும் பூது கொண்டே கடவுளர் பரவும் தெய்வ
விண்டலத் தருவின் மேலாம் விடையவன் மருதைச் சூழ்ந்து,
தண்டலை சூழும் கோயில் மருந்தினைத் தாழ்ந்துள் எய்தி,
வண்டலர் கொன்றை வேணி வரதனை வணங்கி நின்றே,

தேவர்கள் பரவும் தெய்வத்தன்மை பொருந்திய தெய்வ லோகத்துக் கற்பகத் தருவுக்கும் மேலான சிறப்புடைய சிவமருதமரத்தை வலம்வந்தார். குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த கோயிலை வலம் வந்து வணங்கினார். கோயிலுக்குள்

சென்று வண்டுமொய்க்கும் கொன்றை அணிந்த சிவனை வணங்கினார். 22

பூசனை இயற்ற வேண்டும் பொருள்களும் அமைத்து வல்லே
ஈசனுக் குவப்ப தாக எண்கணன் தீர்த்தம் ஆடி,
ஆசிலாக் கடன்மு டித்துச் சங்கற்ப மாற்றி யக்கு
மாசிலா நீறு தாங்கி அன்பொரு வடிவம் ஆகி,

இறைவனைப் பூசிக்கத் தேவையான பொருள்களை எல்லாம் சேகரித்து வைத்துக்கொண்டார். சிவனுக்கு விருப்பமானபடி, 'எண்கண்ணன்' தீர்த்தத்தில் நீராடினார். குற்றமில்லாத படிக்கு நீர்க்கடன்களை முடித்தார். சங்கல்பம் செய்துகொண்டார். உருத்திராக்கமாலை அணிந்துகொண்டார். குற்றமற்ற திருநீறு பூசிக்கொண்டார். அன்பே வடிவமாக ஆனார். 23

கங்கைமஞ் சனத்தி னாலும், காமதே னுவின்ஐந் தாலும்,
ஐங்கனி அமுதத் தாலும், அளவிலா வருக்கத் தாலும்,
சங்கரர்க் குவந்த சந்த னாதியால் அபிடே கித்து,
மங்கல உபசா ரத்தால் வான்பரி வட்டம் சார்த்தி,

இறைவனுக்குக் கங்கைநீர், காமதேனுவின் பஞ்சகவ்யம், அழகிய பழங்களின் சாறுகள், அளவற்ற அபிஷேகப் பொருட்கள், இறைவனுக்குப் பிடித்த சந்தனக் குழம்பு ஆகியவற்றால் அபிஷேகம் செய்தார். மங்களகரமான உபசாரங்களுடன் ஆடைகள் அணிவித்தார். 24

கற்பக மலரால் கன்னி களபம்சேர் சந்த னாதி,
அற்புத மான தொங்கல் ஆபர ணாதி யங்கம்
பொற்பணி மணிக ளாலே புனைந்தலங் காரம் செய்து,
பற்பல மனுவால் ஏத்திப் பாத்தியா சமனம் ஆற்றி,

கற்பக மலர்கள், மணச்சாந்து குழைத்த சந்தனம், அழகாகக் கட்டப்பட்ட மாலைகள், பொன், ரத்தின ஆபரணங்கள் ஆகியவற்றால், பொருத்தமாக அலங்காரம் செய்தார். மனு மந்திரங்களைச் சொன்னபடி பாதம் அலம்பும் நீர் [பாத்தியம்] தெளித்தார். உட்கொள்ள [ஆசமனம்]நீர் அளித்தார். 25

வானுயர் அமுதம் கன்னல் வளம்படு கனிவர்க் கம்பால்
தேனெய்பண் ணியம்அ டைக்காய் திருமுன்நை வேதித் தன்பாய்
ஏனைய தூப தீபம் இனியசோ டசம்இ யற்றி,
கோனமார் வில்வம் சாத்திக் கடவுளுக் குவப்ப தாக,

இறைவனை மகிழ்விக்கும் வகையில் வான உலகில், உயர்வானதாகிய அமுதத்தையும், செழிப்பான பழவகைகளையும்,

தேன், நெய், பலகாரங்கள், வெற்றிலை, பாக்கு இவற்றையும் இறைவனின் திருமுன்னிலையில் வைத்து, அன்புடன் நிவேதனம் செய்து, தூபம், தீபம் சோடச உபசாரங்கள் செய்தார். தங்கச் சத்துப் பொருந்திய வில்வத்தைச் சார்த்தினார். 26

மந்திர புட்பம் சாத்தி, அரன்எழில் நோக்கி நின்று,
புந்தியால் இறையைப் போற்றப் புரிந்ததெத் தவமோ என்று,
சுந்தரன் தன்னைச் சூழ்ந்து, பணிந்துநா ஆரும் சொல்லால்
சிந்தனை செய்து, முன்பு சேவையால் பணிந்து நின்றே,

மந்திரங்கள் கூறி, உதிரி மலர்கள் சமர்ப்பித்தார். இறைவன் அழகைப் பார்த்து ரசித்தார். புத்தியைச் செலுத்தி, இறைவனைப் போற்றி வழிபடநேர்ந்தது, தவத்தின் பயனே என்று கூறி மகிழ்ந்து, இறைவனைச் சுற்றிவந்து விழுந்து வணங்கி, நாக்கு மகிழச் சிந்தனைகலந்த நல்லவார்த்தைகளால் புகழ்ந்தார். சேவார்த்தியாகப் பணிவுடன் நின்றார். 27

## பிரமனின் துதி

சங்கரா சரணம்; மூல சம்புவே சரணம்; மங்கை
பங்கனே சரணம்; நீற்றுப் பரமனே சரணம்; நெற்றிச்
செங்கணா சரணம்; எங்கள் தேவனே சரணம்; செங்கைப்
புங்கவ சரணம்; பூத நாயக சரணம் போற்றி.

[சங்கரன் — இன்பம் செய்பவர்; மூலசம்பு — மூலக் கடவுள்; பரமன் — யாவுக்கும் மேலானவர்; நெற்றிச் செங்கணன் — நெற்றியில் சிவந்த அக்கினியைக் கண்ணாகக் கொண்டவர்; செங்கைப்புங்கவன் — கொடுத்துச் சிவந்த கரம்கொண்ட முனிவர்] 28

சரணம் மாமரு தீசனே நின்அடி சரணம்;
சரணம் ஆவுடை அம்மைதன் மணாளனே சரணம்;
சரணம் மால்அயற் கரியதீச் சயிலனே சரணம்;
சரணம் மங்கலம் ஆகிய தனிமுதல் சரணம்.

[ஆவுடையம்மை — கோமதிஅம்மன்; அயற்கரிய — அயனுக்கு அரிய; தீச்சயிலம் — நெருப்புமலை] 29

தெக்கண காசி காட்டித் திரிவேணி இதனில் தானே,
முக்கணா பிரம தண்டம் முளைத்திடக் காட்டும் மூவேல்
மிக்கவ சரணம் வெள்ளை விடையவ சரணம் என்று,
செக்கர்முண் டகத்தோன் போற்றி செய்தனன் திளைத்து
நின்றான்.

'மூன்று கண்களை உடையவரே! தட்சிணகாசி என்ற இத்தலத்தை எனக்கு அடையாளம் காட்டி, இங்குள்ள திரிவேணியில், பிரமதண்டம் முளைத்தெழும் அற்புதம் காட்டிய திரிசூலத்தை ஏந்தியவரே! வெள்ளையாகிய காளையின்மேல் ஏறியவரே! சரணம்' என்று, சிவந்த தாமரையில் அமர்ந்த பிரமன், சிவனைப் போற்றினார். மகிழ்ச்சியில் திளைத்து நின்றார். 30

## இறைவன் வரம் அருளுதல்

அப்பொழு தமலன் அந்த இலிங்கத்தில் அங்கு ரித்தே,
எப்பெருந் தேவும் போற்ற இமையவ ளுடனே தோன்றிச்
சுப்பிர மடந்தை பாகர் சுருதிமா மனுவால் நம்பால்
ஒப்பிலா தியற்றும் பூசைக் குவந்தனம் உனக்கு வேண்டும்

அந்த நேரத்தில், சிவன் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டுக் காட்சிகொடுத்தார். எல்லாப் பெருந்தெய்வங்களும் போற்றும்படி, இமையவளாகிய உமாதேவியுடன் காட்சி கொடுத்தார். தூய்மையான உமையின் பாகன், பிரமனிடம் 'மந்திரத்தால் — வேதத்தால் நம்மை நோக்கி, ஒப்புச்சொல்ல முடியாத பூசை செய்தாய். அதற்கு மகிழ்ந்தோம். 31

உத்தம வரம்கேள் என்றான் உந்தியில் உதித்தோன் போற்றிப்
பத்தியாய்ப் பணிந்து காசிப் பதிஇதன் சோத கந்தான்,
மெய்த்ததண் டத்தால் காட்டு வித்தனை வேணிக் கங்கை
மத்தியில் தண்ட தீர்த்தம் இதுஎன வழங்க வேண்டும்.

உனக்கு வேண்டும் வரத்தைக்கேள்' என்றார். திருமாலின் கொப்பூழில் தோன்றிய பிரமன், பக்தியுடன் பணிந்து போற்றி, 'காசிப்பதி இதுதான் என்பதைப் பிரமதண்டச் சோதனையால் காட்டுமாறு செய்தீர். எனவே, உம்தலையிலுள்ள கங்கை இங்கு வந்த இடத்தை — தீர்த்தத்தை — 'தண்ட தீர்த்தம்' என்று உலகோர் கூறவேண்டும். 32

இத்தலத் துன்னை என்றும் பூசிக்க வேண்டும் இந்த
முத்தியாம் பதிக்கும் இந்த மூர்த்திக்கும் தீர்த்தத் துக்கும்
நித்தம்என் பெயர்து லங்க நின்அருள் செய்ய வேண்டும்;
மத்தநின் பதவி வேண்டும் என்றடி பணியும் போதில்,

'நான் இந்தத்தலத்தில் என்றைக்கும் பூசிக்கவேண்டும்; இந்த முத்தித்தலத்திலும், மூர்த்தியிலும், தீர்த்தத்திலும், என்றைக்கும் என்பெயர் விளங்கவேண்டும்; ஊமத்தைப் பூ அணிந்தவரே! நீர் பணிசெய்யத் தகும் பதவிவேண்டும்' என்று, வரம்வேண்டித் திருவடிகளைப் பணிந்தார். 33

இன்னன தந்தோம்; யாவும் படைத்திடும் இயல்பு தந்தோம்;
மன்னுதண் டத்தை இங்கு வதிட்டைசெய் ததைப்பூ சிப்பாய்;
பின்னும்உன் தனக்கு வேண்டும் பதவியும் பெறுவாய் என்று,
மின்அவிர் சடையான் கூறி, இன்னொன்று விளம்பு மாலோ.

'கேட்டவரங்களை — இவைபோன்ற வரங்களைத் தந்தோம். மேலும், படைப்புத் தொழில் செய்வதற்கும் வரம்தந்தோம். நிலைபெற்ற தண்டத்தை இங்கே பிரதிட்டை செய்து, அதற்குப் பூசனை செய்; மேலும் உனக்கு எப்பதவி வேண்டுமோ, அந்தப் பதவியும் பெறுவாய்' என்று, ஒளிவிடும் சடையைக் கொண்ட சிவன் வரமளித்தார். இன்னொன்றையும் சொல்கிறேன். 34

அம்போ ருகநீ செய்திடும் பூசைக் குவந்தோமால்
வம்பாம் நாம்மிகு வானவர் தாம்உண் ணுதற்கினிய
நம்பூ தரவட மேல்திசை நாடித் திகழ்யாகம்
எம்பால் உறச்செய் வாய்என இசைத்தான் அரவசைத்தான்.

'தாமரையோனே! நீ தொடர்ந்து பூசிக்க விரும்புவதற்கு மகிழ்கிறோம். இந்த நம் ஊரில் வடமேற்குத் திசைக்குச்செல். புதுமை யான வேறுவேறான தேவர்களும் நினைத்து மகிழ்வதற்குரிய யாகங்களை எம்மை நோக்கிச் செய்' என்று, பாம்பணிந்த பரமன் கூறினார். 35

## பிரமன் செய்த பெருவேள்வி

நாட்டம் திகழ்நுத லான்அருள்நாட்டம் கொடுமறைந்தான்;
ஏட்டம் மலரோன் போற்றினன் இறைஈந் திடுமொழியைக்
கேட்டன் பொடுவட மேல்திசை தனிலே கிளர்யாகம்
வேட்டன் பொடுவிரை வில்செய எழுந்தே அவண்விதித்தான்.

கண்பொருந்திய நெற்றியை உடைய கடவுள், அருள் பார்வை செலுத்தி மறைந்தார். ஏடுபொருந்திய தாமரை மலரோன் ஆகிய பிரமன், துதித்தார். இறைவன் சொன்ன வார்த்தை யைக் கேட்டு, அன்புடன் வடமேற்குத் திசையில், வேட்கை யோடும் அன்போடும் விரிவான யாகம் செய்வதற்காக அவ்விடத் தில் ஏற்பாடுகள் செய்தார். 36

மகம்செயும் சாலை கோலி அசுவமா மேத யாகம்
சகம்தனில் இன்பம் எய்தத் தாருநாட் டவர்க ளோடும்,
உகந்திறை யவனுக் கன்பாய் உஞற்றியே உதவு நீரால்
அகந்தவா நெறியி னாலே ஆற்றிஅந் தரர்கட் கீந்தான்.

யாகசாலை அமைத்தார். உலகினர் இன்பம் அடையக் கற்பகத்தரு உள்ள தேவலோகத்தவர்களுடன் இறைவனுக்கு, அன்புடன் அஸ்வமேத மகாயாகம் செய்தார். நெறிமாறாமல் யாக சேஷங்களைத் தேவர்களுக்குக் கொடுத்தார். 37

## பிரமதண்டப் பிரதிட்டை

சந்நிதி யின்கீழ் சார்பில் தண்டமும் பதிட்டை செய்து,
பன்னரும் பூசை ஆற்றிப் பண்புறச் சாறும் ஆற்றிக்
கன்னலை நிகர்த்த சோதிக் கடவுளைப் பரவிப் போற்றி,
இந்நிலத் தின்பம் பெற்றுத் தன்அர செய்தி னானே.

சன்னதியின் கிழக்கில் தண்டத்தைப் பிரதிட்டை செய்தார். அதற்கு அளவற்ற பூசைகள் செய்தார். பண்புடன் விழா எடுத்தார். கரும்பை ஒத்திருக்கும் இனிமையான ஜோதிக் கடவுளைத் துதித்துப் போற்றினார். மண்ணுலகில் பெறவேண்டிய பக்தி மார்க்க இன்பங்களை எல்லாம் அடைந்து, தன் உலகமாகிய சத்தியலோகத்தை அடைந்து, அரசாட்சி செய்தார்,. 38

## பயன்கள்

அழியாப் பதிநிதிச் சங்கம தீர்த்தத் தவதரித்தே,
தெளிவெய் திடத்தண் டந்தரு திரிவேணி சங்கமமா
மொழியிற் பலன்ஒன் பான்கிறுச் சனமூழ் கிடஎய்தும்
எளிதில் பலன்பெறு வார்,எம தண்டங் களும்இலரே.

எப்பொழுதும் அழியாத பதி, புடைமருதூர். பத்மநிதியை வழங்கும் சங்கமத்தில், பிரமன் தெளிவு அடைவதற்காகப் பிரமதண்டம் தோன்றியது. அந்தத் திரிவேணி சங்கமத்தில், ஒன்பதுமுறை மூழ்கினால், நினைத்த பயன்கள் எளிமையாகக் கிடைக்கும். அப்படி மூழ்கியவர்களுக்கு, யமனின் தண்டனைகள் எவையும் கிடையா. 39

வெம்பரி யாகம் செய்த சாலையில் மேவும் தீர்த்தம்
இம்பரில் சாலா தீர்த்தம் இதில்படி வோர்கள் மேலை
உம்பர்வாழ் பதவி சேர்வார் உடன்உறை சாலை நாதன்
அம்பகம் போற்று வார்கள் அரன்பதம் அடைவ ரன்றே.

பிரமன் அஸ்வமேத யாகம் செய்த இடத்தில் உள்ள தீர்த்தம் 'சாலா தீர்த்தம்' எனப்படும். இதில் குளிப்பவர்கள், தேவலோகப் பதவி அடைவார்கள். இங்கே உள்ள சாலைநாதனை, எழுச்சியுடன் தொழுபவர்கள், சிவனின் திருவடிகளை அடைவார்கள். 40

பொன்பாய் புடைமா மருதமிதைப்
பூவில் உறைவோன் சோதத்தால்,
தென்பால் காசி இதுஎன்று
திகழ்கைத் தண்டம் கங்கைவழி
அன்பாய் எய்த அதற்கென்றும்
சாட்சி யாக அச்சுதன்தான்
இன்ப மாக என்றும்இருந்(து)
இசைப்போர்க் கினிதாய் எய்தினனால்.

*பரமன், பொன்வளம் கொழிக்கும் புடைமருது என்னும் இத்தலம், தட்சிண காசி என்பதைத் தண்டத்தால் சோதித்து, அதன் வழியே கங்கைவர அறிந்தார். இந்த நிகழ்ச்சிக்குச் சாட்சியாகத் திருமால் இங்கே இன்பமாகத் தங்கிப் புகழ்பவர்களுக்கு, இனிமைகளை வழங்குகிறார்.* *47*

ஆகத் திருவிருத்தம் – 796

# 8. பதிஅத்தி தீர்ந்த படலம்

தலமதில் தென்பால் காசி தண்டசோ தனையால் கண்ட,
அலரவன் வழிபட் டேத்திப் பெற்றதை அறைந்தாம் ஆங்கே,
மலடியாம் பெயரை மாற்றி மகவளித் திடும்தீர்த் தத்தில்,
குலடிசெய் பாவம் போக்கிக் கதிபெற்ற குணன்உ ரைப்பாம்.

திருப்புடைமருதூரே தென்காசி என்பதைத் தண்டத்தினால் சோதனை செய்து, பிரமன் அறிந்தார். பிரமன் சிவனை வழிப்பட்டுப் புகழ்ந்த கதையைச் சொன்னேன். பெண்களுக்கு 'மலடி' என்ற அவப்பெயரை மாற்றி, குழந்தைப் பேறு தரவல்ல தீரத்தத்தில் 'குலடி' என்பவள், தான் செய்த பாவத்தைப் போக்கிக்கொண்டு, நற்கதி பெற்ற வரலாற்றைச் சொல்கிறேன் என்றார் சூத முனிவர். 1

## குலம்

சீர்திகழ் கண்டல் சூழ்ந்த வாரிசேர் தீரம் தன்னில்,
ஏர்திகழ் பதியில் வாழ்வோன் இருபிறப் பாளன் எஞ்சா
நீர்திகழ் மதியோன் இல்வாழ் நேரிழை இரதி போல்வாள்
கூர்திகழ் வேற்கண் மங்கை குலடிஎன் றுரைக்கும் பேராள்.

வளமான தாழை சூழ்ந்த கடல் பகுதியில், அழகான ஓர் ஊரில் ஓர் அந்தணன் இருந்தான். நல்லறிவு வாய்ந்த அவனின் வீட்டில் மனைவியாகக் 'குலடி' என்பவள் இருந்தாள். அவள் இரதியைப் போன்ற அழகுடையவள். அவள் கூர்மையான வேல்போன்ற கண்ணைக் கொண்டவள். 2

கண்டபேர்க் கணங்கொப் பாவாள் கணவனுக் குரிமை இல்லாள்
உண்டியும் உதவாள் கள்ளக் காதலற் குள்ளம் வைத்து,
மண்டியே பூசல் செய்து, மணந்தவற் றணந்தெந் நாளும்
கொண்டவற் கிடரே செய்யும் கருத்துடைக் கொடிய பாவி,

அவளைக் கண்டால், கவ்விக்கொள்ளும் சூர்த்தெய்வம் போல இருப்பாள். கணவனுக்கு உரிமை இல்லாள். கணவனுக்கு உணவும் இடமாட்டாள். அவளுக்கு ஒரு கள்ளக் காதலன் உள்ளான். அவனையே நினைத்துக்கொண்டு, கணவனிடம் சண்டையிடுவாள். ஒரே வீட்டில் இருந்தாலும், கணவனைப்

பிரிந்தே இருப்பாள். அவனுக்கு இடையூறு செய்துகொண்டே இருப்பாள். அவள் கொடிய பாவி. 3

உள்ளக்கா தலினால் காமம் துய்த்திட உன்னி வந்த,
கள்ளக்கா தலன்பால் சேர்ந்து கலக்கும்நாள் ஒருநாள் தன்னில்,
எள்ளத்தாம் அளவும் குற்றம் இலாதவர் கணவன் கண்டு,
விள்ளத்தான் இழிபென் றெண்ணி, மெள்ளத்தான் ஒதுங்கிப்
போனான்.

உள்ளக் காதலால், காமசுகம் அனுபவிக்கக் கள்ளக் காதலன் வருவான். அவனுடன் புணர்ச்சி செய்வாள். ஒருநாள் இருவரும் புணர்ச்சி செய்வதைக் குற்றம் இல்லாத அவளின் கணவன் கண்களால் பார்த்துவிட்டான். இதை வெளியில் சொன்னால் அவமானம் என்று கருதி, மெள்ள ஒதுங்கிப் போனான். 4

## கொடுஞ்செயல்

பொறுமையால் மனத்துள் கொண்டு புகன்றிடா நின்ற வேத
அறுதொழில் ஆட்சி யானை அழிதகை யவளும் கண்டு,
மறுமணத் தவனைத் தான்சேர் வகையினை அறிந்தான் என்று,
கறுவுறு வானை யன்னாட் கொன்றிடக் கருதி வந்தாள்.

அவன் பொறுமை காத்தான். வேதவிதிப்படி ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், வேள்விசெய்வித்தல், தானம் செய்தல், தானம்ஏற்றல் என்ற ஆறு தொழில்களையும் முறைப்படியே செய்யும் அவன், தன்மனைவி கள்ளக் காதலனுடன் கலவி செய்வதைப் பார்த்தபோது, அவளும் அவனைப் பார்த்துவிட்டாள். மறு மணத்தவனைத் தான் புணர்ந்த விதங்களை அவன் அறிந்துவிட்டான் என்று, அவன் மேல் கறுவினாள்; அவனைக் கொன்று விடவேண்டும் எனக் கருதினாள். 5

அரையிருள் அற்றம் பார்த்தே குலடிஈ தமையம் என்றே,
உறுதியில் கொள்ளும் போதில் ஒங்குகூன் வாளி னாலே,
மறுஇலான் தனைஅ ரிந்து வதைத்தனள் மனம்வே றாகி;
இறைவனாம் பிணம்ஒ ளித்தே இல்அகன் றேக உன்னி,

அரைஇருட்டு. குலடி இதுதான் சமயம் என்று நினைத்தாள். தகுந்த நேரத்தை எதிர்பார்த்தாள். அவன் நன்கு தூங்கிக் கொண்டிருந்தான். குலடி, வளைந்த அரிவாளை எடுத்தாள்;

குற்றமில்லாதவனை அரிந்தாள்; வதைத்தாள். இறைவனுக்கு ஒப்பான அவனைப் பிணமாக்கி ஒளித்து வைத்தாள். மனம் திரிந்தது. வீட்டைவிட்டு வெளியேறினாள். 6

அழிதகை அவளுக் கான அன்புளான் தன்பால் கூடி,
வழிகொடு வேற்றூர் போக மனத்தினில் எண்ணி வந்து,
மொழிதடு மாறி வேண்டும் பொருள்களும் முகந்து கொண்டு,
பழிதனக் கஞ்சா வேதப் பன்னிஅப் படியே சென்றாள்.

கெடுமதி கொண்ட அவள், அன்புகொண்டவனிடம் கூடினாள். இருவரும் இரவோடிரவாக வேற்றூருக்குப் போக எண்ணினார்கள். மீண்டும் குலடி கள்ளக் காதலனுடன் தன் வீட்டுக்கு வந்தாள். பேச்சுத் தடுமாறியது. வீட்டிலிருந்த பொருள் களில் தங்களுக்கு வேண்டிய விலை உயர்ந்த பொருள்களை இருவருமாக வாரிக்கொண்டார்கள். வேதமரபில் பிறந்தும் பழிக்கு அஞ்சாத பத்தினி [பன்னி] அங்கிருந்தவாறே புறப்பட்டாள். 7

## காட்டில் நிகழ்ந்தது

இல்அகன் றிருள்யா மத்தில் ஏதிலா னுடனே வேற்றூர்
செல்லும்கான் அதனில் வேடர் செயிர்த்திடச் சேர்ந்தான் ஓட
வல்லிசேர் இடையாள் கையிற் பொருளினை வலிந்து கொண்டு,
கல்லிடைச் சோரர் ஓடக் காரிகை தனித்தாள் மன்னோ.

நடு இரவில், அயலானுடன், வீட்டைவிட்டுக் காட்டு வழியே வேற்றூருக்குப் புறப்பட்டாள். காட்டுவழியில் செல்லும்போது, வேடர்கள் சுற்றி வளைத்தார்கள். அவர்கள் கொலைக்கு அஞ்சாதவர்கள். அவர்களைக் கண்டவுடன், கள்ளக் காதலன் பயந்து ஓட்டம் பிடித்தான், வல்லிக்கொடி போன்ற இடையை உடைய குலடியிடம் இருந்த எல்லாப் பொருள்களையும் பிடுங்கிக்கொண்டு மலைப்பக்கமாகத் திருடர்கள் ஓடிவிட்டார்கள். குலடி தனித்திருந்தாள். 8

## பிரமகத்தி

துணைஇன்றி வனத்தில் எய்த்து நின்றிடும் துணைவி சோர்வைக்
கணவனாம் மறையோன் பார்த்துக் காரிகை தனைச்சேர்ந் தென்ன,
மணமகன் பிரம கத்தி வடிவமாய் மனையைப் பற்றிப்
பிணியுறும் வங்கைச் சேர்ந்த உடும்பெனப் பிடித்த தன்றே.

ஆண்துணையில்லாமல் காட்டில் தரித்திரமடைந்து நிற்கின்ற மனைவியைக் கணவன் பிரமஹத்தியாக வந்து பார்த்தான். அவளைச் சேர்த்துப் பிடித்துக்கொண்டான். கற்புழையைப் பிடிக்கும் உடும்புப்பிடியாக, அவளைப் பிரமஹத்தி பிடித்தது. 9

பதிஅத்தி பிடித்த லைப்பப் பங்கமாய்ப் பேய்கோள் பட்டு,
நதிஉள்ள வரையும் கானும் நகரியும் இடங்கள் எங்கும்
கதிஅற்ற மதியால் சூறைக் காற்றுழல் காசை வீப்போல்
கொதிஉற்ற உலைபோல் வெம்பிக் குலடியும் அலைவ தானாள்.

பதி [கணவன்] ஹத்தி என்னும் பேய் பிடிக்கப்பட்டு, அருவி விழும் மலைகள், காடுகள், நகர்கள் முதலிய இடங்களிலெல்லாம் பைத்தியம் பிடித்து, சூறைக்காற்றில் அகப்பட்ட, நாணற்புல்லின் பூவிதழ்போல — கொதிக்கும் உலையைப்போல, வெம்பிக் குலடி அலைந்தாள். 10

கொன்றிலான் தனைஒ ழித்துக் கைக்குள பொருளும் கொண்டு,
சென்றய லுடன்வேற் றூர்போய்ச் சேர்குதும் என்னும் செய்கை
ஒன்றுதான் நினைக்கத் தெய்வம் வேறொன்றை உதவும் என்பது,
இன்றிவள் தன்னால் காணப் பெற்றனர் இறும்பூ தெய்தா.

கணவனைக் கொன்றுஒழித்து, வீட்டுப்பொருள்களை எடுத்துக்கொண்டு, அயலானுடன் வேற்றூருக்குப் போய்ச் சேர்வோம் என்று, ஒரு செயலை நினைக்கத் தெய்வம் வேறொன்றாக நினைத்தது. 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்' என்ற பழமொழியை, இவளால் அறிந்தவர்கள் மகிழ்ந்தார்கள். 11

## 'சிவதா'

பூவினில் பொன்னே போல்வாள் பொங்கழல் படும்பூப் போலாய்
ஆவென அலறும் சோரும் அழும்விழும் அந்தோ அச்சோ
பாவமோ சிவதா என்கும் தாகத்தால் பாணி தேடும்
நோவுறும் விம்மும் வல்லே விழித்திடும் நொய்யும் சோரும்.

ஒரு காலத்தில் தங்கப் பூவைப் போல இருந்தவள், இப்பொழுது நெருப்பில் விழுந்த பூப்போலக் கருகி இருக்கிறாள்; 'ஆ' என்று அலறுகிறாள்; சோர்ந்து அழுகிறாள்; விழுகிறாள்; 'அந்தோ' 'அச்சோ! பாவமோ! சிவதா!' என்று கூவுகிறாள். தாகத்தால் தண்ணீர் தேடுகிறாள், வலியடைகிறாள்; விம்முகிறாள்; விரைவாக விழிக்கிறாள்; சுருங்குகிறாள்; சோர்கிறாள். 12

தனக்கன்பன் அந்த ணாளன் தனைக்கொன்று சோர இன்பம்
மனத்துறச் செய்கை யான பாவத்தின் வழக்கி னாலே,

சினத்துடன் செல்வார் எள்ளத் திரைத்துரும் பெனவே சென்று,
வனத்துறும் அலகை போல மாய்ந்திடா தெளியை ஆகி

தன்னிடம் அன்பாய் இருந்த அந்தணனைக் கொலை செய்து, திருட்டு இன்பத்தின் ஆசையால் செய்த செயல்களின் பாவ நடவடிக்கைகளால் இப்படி ஆனாள் என்று, இவளைக் கடந்து சென்றவர்கள், கோபத்துடன் கேலி செய்தனர். அலையில் பட்ட துரும்பாக, காட்டுப்பேய் போல, செத்தும் தொலையாமல் கேவலப்பட்டாள். 13

## பாவம் தொலைந்தது

அலைந்திடும் நாளில் மூப்பும் அணைத்திட அவலம் உற்றே
உலைத்திடக் குன்மம் குட்டம் உறுபிணி வருத்தத் தாலும்
அலைந்திடும் குலடி இந்த வனத்திடை வரும்அவ் வேளை
தொலைந்திடப் பாவம் நீங்கும் அதிசயம் சொல்லக் கேண்மின்.

அப்படி அலைந்தலைந்து, முதுமையும் அடைந்தாள். துன்பப்படும்படி வாதநோய், குஷ்டம் முதலிய வியாதிகள் வந்தன. அவற்றுடன் அலைந்த குலடி திருப்புடைமருதூரை ஒட்டிய காட்டுவழியில் வந்தாள். அவள் பாவம் தொலையும் படி, ஓர் அதிசயம் நடந்தது. அதைச் சொல்கிறேன். கேளுங்கள். 14

பிச்சைபுக் குழன்று வாடும் பேதையாள் கணவன் தன்னை,
நச்சவே கொன்ற பாவி எனஉரைத் திடந லிந்தே,
அச்சம்உற் றுழல்வாள் முன்னை அணுவின்நல் வினையால் இந்த
உச்சியிச் சிரவன் போற்றும் தலத்தினை உற்றாள் மன்னோ.

'பிச்சை எடுத்துத் தின்று திரிந்த இந்த அறிவிலி— கணவனை நெருங்கிக் கொன்ற இந்தப்பாவி' என உலகம் சொல்ல, இழிந்தவளாக — மனிதர்களைக் கண்டாலே சொல்லடிக்கும் கல்லடிக்கும் அச்சப்படுபவளாக அலைந்த குலடி, முற்பிறப்பில் அணுவளவு ஏதோ நல்வினை செய்திருந்தமையால், இந்திரனின் குதிரையாகிய 'உச்சைச் சிரவன்' என்ற குதிரை வழிபட்ட இந்தத் தலத்திற்கு வந்தாள். 15

வந்திடும் பொழுதில் புத்தி மயக்கமும் வினையும் நீங்க,
விந்தைநன் மருதைக் கண்டாள் இடர்களைந் திண்பம் உற்றாள்;
கந்தமார் பொருனை என்னும் கங்கையின் நீரைக் கண்டு,
முந்துதா கத்தால் ஓடி நீர்குடித் திடவே முன்னி,

வரும்போதே புத்தித்தடுமாற்றம், பாவம் குறைந்தது. புடைமருதக் கோபுரத்தைக் கண்டவுடன், அதிசயப் படும்படி

யாக நோய்த்துன்பங்கள் நீங்கின. மனத்தில் இன்பம் பிறந்தது. மணம்பொருந்திய பொருனை என்னும் கங்கையின் நீரைக் கண்டாள். அதிக தாகத்தால் தண்ணீர் குடித்திட நினைத்தாள். 16

திருமகள் வாக்கின் செல்வி தீர்த்தத்தின் அருகில் திங்கள்
மருவிய குடையால் காக்கும் மனுபதி தீர்த்தத் தென்பால்
பெருகிய நதிஇ டத்துப் பெட்புடன் நீரை மொண்டு,
பருகிடக் குனிந்த போதில் பெருவெள்ளம் பரப்பி ஓங்கி,

இலட்சுமி தீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம் ஆகியவற்றின் அருகில், சந்திரக்குடையால் உலகம் காக்கும் ஆதிமனுவின் தீர்த்தத்திற்குத் தெற்கில், பெருகிய நதியின் நீரை, விருப்பத்துடன் மொண்டு பருகக் குனிந்தாள். அப்பொழுது பெருவெள்ளம் வந்தது. 17

வந்திடச் சலத்தி ழுக்கிக் குலடியும் வனத்தில் வாழ்ந்தே,
உந்தவே சுழிப்பட் டூழின் சுழிப்படர் அகன்று ழுன்ற,
முந்திய பாவம் நீங்கச் சிவசிவ எனமொ ழிந்தே,
எந்தையைத் துதித்தி றந்தாள் மரணசந் தியினில் எங்கோன்,

குலடி வெள்ளத்தில் மூழ்கினாள். காட்டில் வாழ்ந்து, துன்பச் சுழிப்பட்டுப் பழகிய அவள், ஆற்றுவெள்ளச் சுழிப் பட்டாள். அதனால் முன்னே செய்த பாவங்கள் நீங்கின. 'சிவ சிவ' என்றாள். சிவனைத் துதித்து, மரணநிலை அடைந்தாள். 18

விடையின்மேல் உமையா ளோடும் விண்ணினில் காட்சி நல்கிப்
புடைமரு தீசன் இந்தப் புவியினில் யாரும் கேட்கக்
கடைகொள்பார்ப் பனிசெய் பாவம் கற்பங்கள் நரகுற் றாலும்,
விடும்அல இத்த லத்தை மேவிஇத் தீர்த்தம் தன்னில்,

மரண சந்நிதியில், இறைவன் விண்ணில் விடைமேல் உமையாளோடு காட்சிதந்தார். உலகில் உள்ளவர்கள் எல்லாரும் கேட்கும்படியாக, 'கீழ்த்தரமான இந்தப் பார்ப்பனி செய்த பாவம், பல ஆயிரம் கோடி ஆண்டுகள் நரகத்தில் கிடந்தாலும், தீரக்கூடிய பாவமன்று; இந்தத் தலத்துக்கு வந்து, இந்தத் தீர்த்தத்தில் முழ்கியதால், இவளின் பாவமெல்லாம் தீர்ந்தன' 19

## சிவைசாரூபம்

மேவிடப் பெற்ற தாலே வினைஎலாம் ஒழிந்தாள் இங்குப்
பாவங்கள் ஒழித லாலே பாபவி நாச தீர்த்தம்
பூவினில் இவைஎன் றெங்கோன் புகன்றுபோர் விடையி னின்றும்
தாவிப்பார்ப் பனிதன் காதில் தாரக மனுவை ஓதி,

'இங்கு இவள் பாவங்கள் ஒழிந்ததனால், இத்தீர்த்தம், 'பாவ விநாச தீர்த்தம்' எனப்பெறும் என்று கூறி, ரிஷபத்திலிருந்து இறங்கி, பார்ப்பனியின் காதில் தாரக மந்திரத்தை ஓதினார். 20

அறந்திகழ் தேவி யோடும் அமலைசா ரூபம் ஈந்தான்
கறங்கிசை நாதம் ஐந்தும் ஆர்த்திடக் ககன விண்ணோர்
நிறந்தரு மலர்கள் தூவ நிருமலன் இலிங்கத் துற்றான்
இறந்தபார்ப் பனியும் சாரூ பத்தினை எய்தி அங்கண்,

தருமம் திகழும் உமையுடன் 'அமலைசாரூபம்' [சிவை சாரூபம்] என்ற முத்தியைக் குலடிக்குக் கொடுத்தார். பஞ்ச வாத்தியங்களும் முழங்க, அந்தரத் தேவர்கள் வண்ண மலர்களைத் தூவ, இறைவன் இலிங்கத்தில் மறைந்தார். இறந்த பார்ப்பனி, சிவைவடிவம் அடைந்தாள். 21

நின்றிட விமானம் கொண்டு விண்ணவர் நிறைந்து நேர்ந்து,
பொன்திகழ் குலடி என்னும் புண்ணிய மனையாள் தன்னை,
மின்திகழ் விமானத் தேற்றி விடையவன் கயிலை மேவச்
சென்றிடக் கண்டார் யாரும் திளைத்தனர் இன்ப வெள்ளம்.

தேவர்கள் விமானம் கொண்டுவந்தனர். பொன்னிறப் பொலிவுடன் குலடி என்னும் புண்ணியம் கொண்டவளை, விமானத்தில் ஏற்றினார்கள். விமானம் இறைவனின் கயிலைக்குச் சென்றது. விமானம் புறப்பட்ட காட்சியை யாவரும் கண்டார்கள். இன்ப வெள்ளத்தில் திளைத்தார்கள். 22

வான்வழி விமான மீதில் வந்தபார்ப் பனிமின் னாளும்
கோன்உறை கயிலை எய்திக் கொண்டல்ஊர் இமய வல்லி
தேன்அலர் மலர்த்தாள் போற்றிச் சிலதியாய் ஏவல் செய்யும்
தூனலார் தம்மில் மேன்மை பெற்றனள் சுதினம் உற்றாள்.

வான்வழியே விமானத்தில் வந்த மின்னல் போன்ற பார்ப்பனியும், இறைவன் உறையும் கயிலையை அடைந்து, மேகம் தங்கும் இமயத்தில் உதித்த உமையின் தேன்மலர்த் திருத்தாள்களைப் போற்றி, அம்பிகையின் தோழிகளாகிய தூய பெண்களின் கூட்டத்தில் ஒருத்தியாக மேன்மை அடைந்தாள். அவளுக்கு எல்லா நாள்களும் நல்ல நாள்கள் ஆயின. 23

ஆகத் திருவிருத்தம் – 819

# 9. அவிர்த்தானன் படலம்

பதியத்தி குலடி தன்னைப் பற்றிய பாவம் தீர்த்த,
கதைமுற்ற உரைத்தாம் இன்னும் கல்யாண புரத்தில் தானே
விதிஉற்ற பிரம சாரி அவிர்த்தானன் வினையைத் தீர்த்து,
மதிபெற்ற கதியைத் தந்த வகையினை வகுத்து ரைப்பாம்.

*கணவனைக் கொன்று, பேய்பிடித்தலைந்த குலடி என்பவளின் பாவத்தைத் தீர்த்த கதையை முழுமையாகச் சொன்னேன். கலியாணபுரம் என்ற ஊரில் வாழ்ந்த, அவிர்த்தானன் [யாகத்தின் அவிர்ப்பாகத்தைத் தானம் செய்பவன்] என்ற பெயரைப் கொண்ட பிரமசாரி [வேதக்கல்வி படிப்பவன்; மணமாகாதவன்] விதியினால் அடைந்த வினையைத் தீர்த்து, அவன் அறிவுபெற்று நற்கதி அடையச்செய்த வகையை மனத்தில் முறை செய்துகொண்டு சொல்கிறேன் என்று, அழகிய முனிவர்களுக்குச் சூதமுனிவர் கதைசொல்லத் தொடங்கினார்.* 1

## அங்கணன் உத்தரவுப்படி அவிர்த்தானன் காட்டுக்குச் செல்லுதல்

சுந்தர முனிவர் கேட்பச் சூதமா முனிவன் சொல்லும்;
முந்திய கற்பம் தன்னில் மொய்த்தபா தவங்கள் சூழ்ந்த,
உந்திசூழ் புவனம் தன்னில் ஒருபதி உம்ப ரோடு,
நந்தியார் மருவு கின்ற நந்திமால் வரையின் பாங்கர்,

*முந்தைய கற்பகாலத்தில் [ஆயிரம்கோடி ஆண்டுகள் ஒரு கற்பகாலம்] பாவங்கள் உலகில் பெருகியது. தேவர்களுடன் நந்தியம்பெருமான் ஓரூரில் இருந்தார். அவரிருந்த நந்திமலை மகததேசத்தில் உள்ளது.* 2

புனந்திகழ் மகத தேசம் தனில்ஒரு புரத்தில் உள்ளான்;
வனைந்தபுண் டரிகத் தாமன் மறையவன் வயங்கு நூலான்,
கனந்தவ றாத நான்கு கலைமறை கற்று வல்லான்,
சினந்தவிர் புந்தி யான்அங் கணன்எனும் பெயர்சி றந்தோன்.

*அந்த மகத தேசத்தில், நந்திமலையின் பக்கத்தில், திருநீறு பூசியவன்; முப்புரிநூல் அணிந்த அந்தணன்; அவன் கனம்*

வரை வேதம் கற்ற [கனாந்த்ர அத்யயனம் செய்த] வல்லவன்; கோபமே வராத சாந்தமான அறிவாளி; அவன் பெயர் 'அங்கணன்' என்பதாகும். 3

நம்பனைத் துதித்தெந் நாளும் நலம்பெறு நன்மை உள்ளான்,
உம்பருக் கவிஅ ருத்தி உறுபலன் பெறுதும் என்றே,
இம்பரில் விதியால் யாகம் இயற்றுதற் கிசைவால் வேள்வித்
தம்பம்ஒன் றமைப்பான் எண்ணிச் சார்ந்திடும் சீடர் தம்முள்,

அங்கணன், சிவபெருமானை எந்நாளும் துதித்து அழகு பெறுவான்; அதனால் பல நன்மைகளை அடைந்தவன். தேவர்களுக்கு, வேள்வியின் அவிர்ப்பாகத்தை உண்ணக் கொடுத்து, அதனால் மிக்க பலனைப் பெறவேண்டும் எனக்கருதினான். விதிப்படி யாகம் செய்வதற்கு, 'யாகஸ்தம்பம்' [வேள்விஸ்தூபி] அமைக்க எண்ணினான். 4

அந்தணன் பிரம சாரி அவிர்த்தானன் தனைஅ ழைத்தே,
மந்திர யாகம் செய்யக் கருதினன் மகத்தி னுக்குத்
தந்திரப் படியே யூகம் சமைத்திடத் தருவாய் என்னப்
புந்தியில் உணர்ந்து மிக்கோன் விடைபெற்றுப் போதும் எல்லை,

தம் சீடர்களை அழைத்தான். அவர்களுடன் அந்தணனும் பிரமசாரியும் ஆகிய அவிர்த்தானன் என்பவனிடம், மந்திர யாகம் செய்யக் கருதியுள்ளேன். அதற்குத் தந்திரங் [சாஸ்திர நூல்] களில் கூறியுள்ள விதிப்படி யூகம் [வேள்விஸ்தூபி] வேண்டும். காட்டுக்குச் சென்று, அதற்குரிய மரம் வெட்டிக்கொண்டுவா என்றான். அவிர்த்தானனும், யாகஸ்தூபிக்கான விதிகளைப் புத்தியில் பதியவைத்துக்கொண்டு விடைபெற்றான். 5

வினைஞரோ டேகி ஆசான் விதித்திடும் பணிமேல் கொண்டு,
சினைசெறி காவு சூழ்ந்த செறிவனம் தன்னில் எய்திக்
கனைசெறி முகில்சூழ் கின்ற வரைகளும் கலந்து நாடி,
முனைவன்நூல் சொன்ன வாறே முயலுவார் முற்ற எண்ணி,

அவிர்த்தானன் மரம்வெட்டுதற்குச் சில வேலையாட்களையும் அழைத்துக்கொண்டு, ஆசான் விதித்த பணிமேற்கொண்டு, கிளைகள் செறிந்த சோலைகள் அடங்கிய காட்டுக்குள் சென்றான். நெருக்கமான, செறிந்த, மேகம் தங்கிய, இடையிடையே குன்றுகள் அமைந்த காட்டில், சாஸ்திரங்களின் மூலநூலில் உள்ளபடியான மரத்தைத் தேடினான். 6

விதிப்படி எக்ய தாரு வேண்டியே வனங்கள் தோறும்
மதிப்புடன் வினைஞர் போக மறையவன் தனித்தான் தாகம்

கொதிக்கநீர் வேட்கை உற்றே கொடுவெயில் சோகத் தாலே,
நதிப்புனல் தேடிக் காணா மூர்ச்சித்து நலிவான் அங்ஙன்.

விதிப்படியான யக்ஞதாரு [யாகஸ்தூபிக்கான மரம்]வுக்காகப் பல வனங்களில் சுற்றினான். கடும்பகல் நேரம் வந்துவிட்டது என்று, மரியாதையுடன் சொல்லிவிட்டு, வேலையாட்கள் போனார்கள். அவிர்த்தானன் திரும்பவில்லை. கோபத்துடன் தாகம் வந்தது. கொடுமையான வெயிலின் சோகத்தால், நீர்வேட்கையடைந்தான். நதியேதேனும் இருக்கிறதா என்று தேடிக் காணாமையால், தளர்ந்து மூர்ச்சையானான். சற்றுத் தெளிந்தான். 7

வள்ளியாம் புலைஞர் வாழும் வனம்என அறியா தேகிக்
கள்ளியின் சூழல் தன்னில் களைத்தனன் உற்றான் மேலோர்
எள்ளிய சாதிக் குண்டு அகேதுவா மீதா னின்ற
துள்ளிய கயல்போல் கண்ணாள் தோகைகந் தற்ப மானி,

வள்ளிக்கொடி படர்ந்த, பசுமாட்டின் புலால் உண்பவர்கள் வாழுகின்ற வனம் என்று தெரிந்துகொள்ளாமல் அங்கே சென்றான். கள்ளிச்செடிகள் உள்ள புதரின் பக்கத்தில் களைத்துப் போய் அமர்ந்தான். மேலோரால் இழிவு எனப்பட்ட பிரிவினருக்கு [பசுமாட்டைத் தின்பவர்களுக்கு] அகேதம் உண்டு. அதாவது காரணமில்லாமல் காரியம் செய்யும் பழக்கம் உண்டு. இதனால் ஒரு நிகழ்ச்சி நடந்தது. நிலைத்திருக்கும் கயல்மீன் திடீரெனப்பிறழுவது போன்ற கண்ணைக்கொண்ட மான்போன்ற சாயலையுடைய 'கந்தர்ப்பமானி' [காமன்மகள் அல்லது காமப்பெண்] என்ற தையல் அங்கே வந்தாள். 8

என்னும்ஓர் தையல் அங்ஙன் எய்தினள் இந்தச் சார்பில்,
துன்னிய பிரம சாரி சுந்தரன் மதனன் போல,
மன்னினோன் தன்னைக் கண்டாள் மாரனோ வானோர் தம்மில்
பொன்னின்நா டிழிந்து போந்த புனிதனோ இவன்தான் என்ன,

இந்தப் பகுதியில் கள்ளிச்செடிகளுக்குப் பக்கத்தில் அமர்ந்த பிரமசாரி, அழகாக மன்மதன்போல உள்ளான். அந்த அவிர்த்தானனை அவள் பார்த்தாள். 'இவன்தான் மன்மதனோ, பொன்னாலாகிய வான்உலகிலிருந்து இறங்கி வந்த புனிதனோ' என்று, அதிசயப்பட்டாள். 9

## கந்தர்ப்பமானியுடன் காமவாழ்க்கை

மின்னிடை யாள்கண் டாவி சோர்ந்தனள் விரகம் உற்றே;
என்னிவன் செயல்தான் என்னே என்றுநைந் திவனைச் சேர,
முன்னியே அவன்பால் எய்தி முன்நின்றாள் அயர்ச்சி யானோன்;
இன்னல்தீர்ந்து அவளை நோக்கி யார்கொல்என் றெண்ணி இந்த,

மின்னல் போன்ற இடையைக் கொண்ட கந்தர்ப்பமானி அவிர்த்தானனைப் பார்த்து, ஆவிதளர்ந்தாள். விரகதாபம் அடைந்தாள். 'இவன் ஏன் இங்கு வந்தான்? இவனுக்கு இங்கென்ன வேலை?' என்று கவலைப்படவும் செய்தாள். அவனைப் புணர ஆசைப்பட்டாள். அவனிடம் நெருங்கினாள். அயர்ச்சியாக இருக்கிறான் என்று, தெரிந்துகொண்டாள். அவனின் சோர்வை நீக்கி, உற்சாகப்படுத்தினாள். அவளைப் பார்த்த அவிர்த்தானன், 'இவள் யார்?' என்று, மனத்தில் நினைத்தான். 10

வரைஅர மகளோ கானில் வழங்கிடும் தேவோ என்னப்
பிரமசா ரியில்மிக் கோனும் பிரமையால் இவளை நோக்க,
மருவுதற் கமைந்த நீராள் வனத்திடை வரும்நீ யார்என்று,
உரைசெய்தாள் தகையால் வாடி உற்றனன் என்று சொற்றான்.

மலைநிலத்துத் தெய்வப் பெண்ணா? காட்டுத் தெய்வமா? என்று, பிரமசர்யத்தில் மிக்கவனாகிய அவிர்த்தானன் பிரமித்து நோக்கினான். இவனைப் புணர்ச்சி செய்வதற்கு ஏற்றபடி இருந்தவள், 'காட்டுக்கு நடுவில் வந்த நீ யார்?' என்று கேட்டாள். 'தாகத்தால் வாட்டம் அடைந்து, இங்கே வந்தேன்' என்றான் அவிர்த்தானன். 11

பின்அவன் புலைஞன் மாதைப் பேதைநீ யார்இங் குற்ற(து)
என்னென ஐய னும்இங் குற்றபு லைஞர்க் கெல்லாம்
மன்னவன் ஈன்ற கன்னி யான்என்றாள் மறையின் வாய்மை
முன்னவன் அயர்ச்சி நோக்கித் தீர்ந்திட முன்னிச் சொல்வாள்.

அவிர்த்தானன், கந்தர்ப்ப மானியைப் பார்த்து, 'பேதையே! நீயார்? இங்கே வந்தது ஏன்?' எனக்கேட்டான். 'என் ஐயனும் [தகப்பனும்] இங்கே உள்ள புலைஞர்களுக்கெல்லாம் அரசன்; அவன் பெற்ற கன்னி நான்' என்றாள். வேதசத்தியத்தில் மிக்கவனாகிய அவிர்த்தானனின் அயர்ச்சியைப் பார்த்த அவள், அயர்ச்சி நீக்க முன்வந்தாள். 12

அரம்பையின் கனியும் தேனும் அளிக்குவன் அயின்ற யர்ச்சி
கரந்திடு வாய்என் றோதக் காளையாம் மறையோன் சொல்வான்,
வரம்பிலாப் புலைஞர் தம்பால் வாங்குதல் கூடா தென்றான்
விரும்பிஆ வத்து வேளைக் காம்என்றாள் விடாய்மிக் கானும்,

தி-19

*'வாழைப் பழங்களையும் தேனையும் கொண்டுவந்து தருவேன். அவற்றைச் சாப்பிட்டு அயர்ச்சியைப் போக்கிக் கொள்' என்றாள். காளையாகிய அவிர்த்தானன், 'உணவு முதலாகிய எந்தக் கட்டுப்பாடும் இல்லாப் புலைஞர்கள் கொடுப்பதை வாங்கக்கூடாது' என்றான். 'ஆபத்து வேளைக்கு, எல்லாம் ஆகும்; நான் விரும்பித் தருவது உங்களுக்காகும்' என்றாள்.* 13

வாங்கியே புசித்துக் காட்டு மடுவில்நீர் பருகி அங்ஙன்
தேங்கிய மயக்கம் தீர்ந்தான் தென்றலான் தெறும்அம் பாலே,
பாங்கினில் யாரும் இல்லாப் பதமும்ஒத் திருந்த பண்பால்,
கோங்கிள முலையாள் நின்ற குறிப்பினைக் குறித்து நோக்கா,

*வேட்கை மிகுந்ததால் வாங்கிக்கொண்டான். அவள் நீர் உள்ள மடு இருக்கும் இடத்தைக் காட்டினாள். அவன் பருகினான். மயக்கம் தீர்ந்தான். அவனும் அவளும் மட்டும் இருந்தார்கள். பக்கத்தில் யாரும் இல்லாத சாதகமான சூழ்நிலையாலும், மன்மதன் சூடாக அம்பு விட்டதாலும், கோங்கமொட்டுப் போன்ற குவிந்த முலைகளை உடையவள், ஒரு குறிப்போடு பார்த்தாள். அவனும் அதே குறிப்போடு பார்த்தான்.* 14

எந்தெழில் அமுதம் உமிழ்முலைப் பணைப்பும்,
ஈர்ங்கனித் தொண்டைஅம் துவர்வாய்ச்
சேந்திதழ்த் துடிப்பும், சிறந்தமென் குழலும்,
சேலெனக் கண்,தெழி சங்கார்
காந்தளம் கையும், கலைநெகிழ் இடையும்,
கண்மணி நகைஇளங் கதிரும்,
வாய்ந்திடு மயிலார் சாயலும் ஆக
நின்றிடும் வனிதையை மறையோன்,

*அவளின் முலைகள் — ஏந்திய, அழகான, அமுதத்தை உமிழ்கின்ற பருத்தமுலைகள். அவள்வாய் — கோவைப்பழத்தை வகிர்ந்து வைத்ததைப் போன்ற பவளவாய்; சிவந்த வாயிதழ்கள் துடித்தன; அவள் கூந்தல் — சிறந்த மென்மையான கூந்தல்; சேல்மீன் போன்ற கண்கள், இசையொலி எழுப்பும் சங்கு வளையல்கள் அணிந்த, காந்தள் மலர்போன்ற விரல்களை உடையகைகள்; ஆடையைக் கொஞ்சம் கொஞ்சமாக நழுவ விட்டுக் கொண்டிருக்கும் இடை; கண்ணின் பாவை சிரிக்கும் இளங் கதிர். இப்படியாக அமைந்த மயிலின் சாயல் கொண்ட வனிதையை மறையோன் கண்டான்.* 15

கண்டுளம் மயலால் கருகிவிள் ளாது,
வைதிகக் கருத்தினால் கவர்ச்சி
கொண்டிடும் இவளைக் கூடிட முயன்று,
கொம்பரின் அசைந்துகூர் விழியாம்
வண்டெனும் பகழி ஏவியே அவன்தன்
மனத்தினைக் கவர்ந்தனள்; வாய்ந்த
ஒண்தொடி சாடை உரையினால் மருவ,
ஒல்குவிட் டுடம்படல் உற்றான்.

*மையலால் மனம் கருகினான். வைதிக மார்க்கம் மேற்கொண்டவன் ஆகையால், காமத்தைச் சொல்லவில்லை. ஆனால், அவள் கவர்ச்சி அவனைப் புணரத்தூண்டியது. அவள் பூங்கொம்பு போல் அசைந்தாள். கூர்மையான விழிவண்டாகிய அம்பை ஏவினாள். அவன்மனத்தைக் கவர்ந்தாள். ஒளி பொருந்திய அணிகள் அணிந்தவள், சாதகமாகச் சாடை காட்டினாள். இவன் துவண்டிருந்த நிலையை விட்டு, புணர்ச்சிசெய்ய உடம்பட்டுப் பொருந்தினான். 16*

புலைஞன்மா துடனே புலைஞனாய்க் கூடிப்
போகம்உற் றுறவுடன் பொருந்தி,
நலங்கெட மூவரு டம்நண் ணியபின்
நாளில்நீ சத்துவம் மூடி,
அலந்தர மனம்வே றாகிஉள் இல்லா
ஆனைஉண் கனிஎன அயர்ந்து,
சலந்தரு குறைநோய் சயமுட னீழல்
சார்ந்திடப் புலைச்சியும் தள்ள,

*புலைஞர்மாதுடன் புலைஞர் புணர்வதைப் போலவே, புணர்ந்தான். போகம் அடைந்தார்கள். பிறகு உறவாகவும் ஆனார்கள். உடம்பு கெட்டுப்போகும் அளவுக்கு, மூன்று வருடங்கள் இப்படியே கூடினார்கள். அதனால் அவனை இழிதகைமை அடைந்தது. மனம் அலைய ஆரம்பித்தது. யானை உண்ட விளாம்பழத்தில் உள்ளீடற்றுப் போவதைப்போல, அவன், உடம்பைக் குறைக்கும் நீரிழிவு, குறைநோய் சளிநோய் ஆகிய நோய்கள் அடைந்தான். புலைச்சியும் அவனைத் தள்ளிவிட்டாள். 17*

## அவிர்த்தானன் திருப்புடைமருதூருக்கு வருதல்

சரத்தினால் வாடி அவ்விடம் பிரிந்தான்;
துயரம்உற் றுறுகண்நோய் துன்பம்
வருத்திட அரவம் வுளைந்திடு மதிபோல்,
மயங்கிவாய் குதட்டியே மாளாக்

கருத்துஅவ லம்அதாய் அலகைகோள் பட்ட
கவலனாய்ப் பசியுடன் காடும்
விருத்தமார் நாடும் நகரியும் கடந்தான்
வேர்வையும் தாகமும் மெலிவும்,

*நோயினால் வாடிய அவிர்த்தானன், அந்த இடத்தை விட்டுப் பிரிந்தான். துயரம் அடைந்தான். தரித்திரமும் நோயும் துன்பமும் வருத்த, பாம்பால் கவ்வப்பட்ட சந்திரனைப்போல மயங்கினான். வெறும்வாயைக் குதப்பினான். மிகக் கருத்துப் போனான். அவலம் அடைந்தான். பேய் பிடித்ததால் கவலை அடைபவனைப் போல ஆனான். பசியுடன் பழமையான நாடு நகரங்கள், காடுகள் ஆகியவற்றைக் கடந்து நடந்தான். வியர்வையால், தாகத்தால் மெலிந்தான்.* 18

கொண்டுசண் டாள வடிவமாய்க் கோஊன்
கொண்டிடும் கேடனை எதிரே
கண்டபேர் ஓட மதுவுடன் கள்ஊன்
அருந்திய கயவனைத் துயரம்
மிண்டுசெய் குணத்தால் யாவரும் இரங்க,
வெறியனாய்த் திரியும்நாள் இவற்குப்
பண்டைநல் தவம்ஓர் அணுஎனும் பயனால்,
பாதகம் நீங்கிடல் பகர்வாம்.

*புலைவடிவத்துடன் பசு இறைச்சி தின்ற குற்றமுடையவனை எதிரில் கண்டவர்கள் ஓடினார்கள். பல்வேறு மதுபானங்களையும், கள்ளையும், மாமிசத்தையும் அருந்திய கயவனைத் துயரம் திமிறி நெருங்குவதால், வெறியன்போல் திரிந்தான். தூரத்திலிருந்து பார்த்தவர்கள், இரக்கப்பட்டார்கள். இவன் முன்னே செய்த நல்லதவம், ஓர் அணு அளவு மிச்சப்பட்டிருந்தது. அதன் பயனாகப் பாதகம் நீங்கிய செய்தியை இனிச் சொல்கிறேன்.* 19

ஆறலைந் துற்றோன் வரும்பொழு திந்த
அருச்சுனப் பதியினில் கங்கை
மீறிய நதியில் தீர்த்தம்கொண் டாட,
விண்ணவர் மண்ணவர் விரவி,
ஏறதே றுகந்த இறையவன் கீர்த்தி
இயம்பியே ஏகுவா ருடனே,
மாறிலா துற்றான் வருபவர் தம்மை
வினவியே மருதினில் வருவான்.

*அவிர்த்தானன் வழிபலவற்றில் அலைந்து வந்து கொண்டிருந்தான். கங்கையைக் காட்டிலும் உயர்ந்த தாமிரபருணியில்*

நீராட, காளையின்மேல் ஏறுவதை விரும்பும் நாறும்பூ நாதரின் கீர்த்திகளைப் புகழ்ந்துகொண்டே, விண்ணவரும் மண்ணவருமாகக் கலந்து திருப்புடைமருதூருக்குச் சென்று கொண்டிருந்தனர். அவர்களுடன் அவிர்த்தானன் கலந்தான். அவர்களை எங்கு ஏன் என்ற கேள்விகளைக் கேட்டுக் கொண்டே, புடைமருதுக்கு வருவதற்காக நடந்தான். 20

மூவகைச் சிறப்பும் பொருந்தும்இவ் வெல்லை
காண்டலும் முனியும்நீ சத்வம்
தாவிடச் சற்றே மயக்கமும் தெளியத்
தன்அறி வெய்திடச் சம்போ
தேவனே சிவனே சிவசிவ என்று,
சிந்தனை செய்துதோத் தரித்தான்
பாவகன் இவன்செய் பாதகம் நீங்கப்
பரமனை நினைந்துகண் பனிக்கும்

மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றுவகைச் சிறப்புகளும் பொருந்திய திருப்புடைமருதூரின் எல்லையைக் கண்டவுடனேயே, கோபமான நீசத்துவம் தாவி ஓடியது; சற்றே மயக்கம் தெளிந்தான். தன்பழைய வேதக்கல்வி அறிவு வந்தது. 'சம்போ தேவனே! சிவனே! சிவசிவ!' என்று சொன்னபடியே சிவனைச் சிந்தித்துத் துதி தோத்திரங்கள் செய்தான். பாவியாகிய அவிர்த்தானன் தன் பாதகங்கள் நீங்கப் பரமனை நினைத்துக் கண்ணீர் வார்த்தான். 21

## இறைவன் யதியாக வந்து காட்சிதருதல்

வேறொரு கதியும் இன்றி வீழ்ந்திடக் கடவன் பாவம்,
மாறவே தீர வேண்டி வரதனும் இரங்கி வல்லே
ஏறின்றி உமையாள் இன்றி எதிஎன எழுந்து தோன்றி,
வீறுசெய் பாவம் தீர வேதியன் தனைவி ளித்தான்.

காளை வாகனம் இல்லாமல், உடன் உமையம்மை இல்லாமல் யதி [அந்தணத் துறவி] யாக இறைவன் வந்தார். வேறொரு கதியில்லாமல் அவர்த்தானன் அழிவான்; அவனுடைய பாவம் மாறவேண்டும் என்பதற்காக, இறைவன் விரைந்து இரங்கி யதியாக வந்தார். அவனைத் தனிமைப்படுத்தும் பாவம் தீர, அந்தணத்துறவியாக வந்து, 'அவிர்த்தானா!' என்று அழைத்தார். 22

பார்வையால் வசனப் பண்பால் பாதக வினைகள் நீங்க,
வேர்வைசேர் இவனை நோக்கி மெலிவுற இவண்நீ வந்த,

யார்என வரவே தென்ன அறைகுவான் அடியேன் கஞ்சத்
தாரவன் ஈன்ற மைந்தன் சார்ந்தனன் வனத்தில் ஓர்நாள்,

*யதியின் பார்வையால், பண்புடன் அழைத்தமையால், பாதக வினைகள் நீங்கின; அவிர்த்தானனின் உடல் வியர்த்தது. 'வருந்தாதே! திருப்புடைமருதூர்க்கு வந்த நீ யார்? வந்த காரணம் என்ன?' என் யதி ஏதும் அறியாதவர் போலக் கேட்க, 'அடியேன் தாமரை மலர்மாலை அணிந்த பிராமணனின் மகன்; ஒருநாள் காட்டுக்குப் போனேன்.'* 23

யூகம்கொள் வதற்காய் உற்ற பொழுதினில் ஒருத்தி நீச
தேகம்கொண் டவள்என் சிந்தை கவர்ந்திடத் தியக்கம் எய்தி,
மோகம்கொண் டாளைக் கூடி முயங்கியே நீசம் உற்றேன்;
ஆகையால் இனிமேல் இல்லா அவதியும் பட்டேன் ஐயா!

*'ஐயா! குருநாதரின் உத்தரவுப்படி யாகமரம் வெட்டிக் கொண்டு வருவதற்காகப் போனேன். அப்பொழுது நீசமான உடம்பு கொண்டவள் ஒருத்தி, என் மனத்தைக் கவரப் பசப்பு வேலைகள் செய்தாள். நானும் மயங்கினேன். மோகம் கொண்டேன்; அவளைப் புணர்ந்தேன்; முயங்கினேன்; அதனால் நீசத்துவம் அடைந்தேன். அதனால் உச்சபட்ச அவதிகளை அடைந்தேன்.'* 24

பொங்கரும் காடும் நாடும் பொருப்பினும் புகுந்த லைந்தேன்;
எங்கணும் திரிந்தேன் இப்போ திங்குற்றேன் எளியன் ஆகித்
துங்கமா மருதில் வந்தேன் என்றவன் உண்மை சொல்லி,
மங்கைபா கம்க ரந்த முனிவரை வணங்கிப் பின்னும்,

*'சோலை, காடு, நாடு, மலை முதலிய எல்லா இடங்களிலும் புகுந்து அலைந்தேன்; எல்லா இடங்களிலும் திரிந்தேன்; எளியன் ஆனேன்; உயர்வு பொருந்திய திருப்புடையமருதூருக்கு வந்தேன்' என்று யதியிடம் அவிர்த்தானன் உண்மைகளை ஒளிக்காமல் சொன்னான். பாகத்தில் இருக்கும் உமையை மறைத்து ஒளித்துவந்த முனிவரை வணங்கினான்.* 25

எய்ப்பிடத் தினிலே என்னை ஆளுதற் கெதிரே தோன்றி,
வைப்பென வந்தீர் என்பால் வலிசெயும் வாதை யான
மெய்ப்பிணி நீங்கும் வண்ணம் விளம்பிட வேண்டும் என்னப்
பைப்பணி கரந்த யோகர் பாதங்கள் பரவி நின்றான்.

*படமுள்ள பாம்பை மறைத்துக்கொண்டு யோக முனிவராய் வந்த முனிவரின் பாதங்களை வணங்கி, 'நிர்க்கதி*

யான காலத்தில் என்னைக் காப்பாற்றுவதற்காக வந்தீர். எனக்கு நோவையும் துன்பத்தையும் கொடுக்கும் சரீரப் பிணிகள் நீங்கும் படி வழிசொல்லவேண்டும்' என்று, அவிர்த்தானன் வேண்டிக் கொண்டான். 26

**இரங்கினன் திருவுள் ளத்தில் எம்பிரான் இவனை நோக்கி,**
**வரம்பிலா தியற்றும் நீஉன் வல்வினை மாய்வ தெங்ஙன்?**
**அரம்பையின் கனியால் வந்த அவதிஎன் றறைந்து நீயும்,**
**புரந்தருள் மருதம் எய்தப் பெற்றதால் புகல்வோம் கேண்மின்!**

எம்பிரான் திருவுள்ளத்தில் இரக்கம் கொண்டார். அவிர்த்தானனை நோக்கி, 'எல்லையில்லாப் பாவங்கள் செய்துள்ளாய். அவ்வளவு கொடிய பாவங்களை எப்படி நீக்கமுடியும்? இத்தனையும் கந்தர்ப்பமானியிடம் வாழைப்பழங்கள் வாங்கிச் சாப்பிட்டாயே, அதிலே இருந்து வந்தவை. நீயும் திருப்புடை மருதூருக்கு வந்துள்ளாய். இது காப்பாற்ற உள்ள தலம். எனவே, உன் வினைதீர, உபாயம் சொல்கிறேன் கேள்! 27

**கொலைசெயப் புரியும் தேறல் கொண்டிடச் செயும்கு லந்தான்**
**நலிதர இயற்றும் கேண்மை நன்றியைக் கொல்லும் நல்ல**
**புலன்அறி வினைக்கெ டுக்கும் புரிகள வுடன்பொய் புல்லும்**
**இலைஎனும் காமம் துய்ப்போர் எய்திடா நரகம் இல்லை.**

பசுவைத்தின்னும் குலத்தவர்கள் தேன் கொடுத்தே சொல்வார்கள்; அழிவதற்காக ஏற்படுத்திக்கொண்ட நட்பு, நன்றி இல்லாதது. அத்தகைய நட்பு, புலன்களின் அறிவை, நற்செயல்களைக் கெடுக்கும். களவு புரியச் செய்யும்; பொய் பேசுவதை வழக்கமாக்கிவிடும். இனிக்காமம் துய்க்க வாய்ப்பே இல்லை என்னும் அளவுக்குக் காமத்தை அனுபவிப்பவர்கள், எல்லா நகரலோகங்களுக்கும் சென்று, துன்பம் அடைந்தாக வேண்டும். 28

பலகற்பமும் பலமற்றிட பதைப்புற்றிடக் கொடிய
மலம்முற்றிய நரகத்திடை மன்னிக்கிடந் தாலும்,
கொலைமுற்றிட வேசெய்துறு கோஊனை அருந்தும்
புலைபற்றிய நீயும்கரை ஏறும்புகல் இலதால்.

ஆணவம் முதலிய மலங்கள் நிறைந்த நரகத்தில் பலமற்ற நிலையில் பல நூறாயிரம் கோடி ஆண்டுகள் பதைபதைத்து நிலையாகக் கிடந்தாலும், கொலைகளில் மிகமுற்றிய கொலையாகிய பசுக்கொலையால் வந்த மாமிசத்தை அருந்திய புலைத்தனம் கொண்ட நீ, கரையேறும் வழிஇல்லை. 29

நீசத்திதன் மோகத்துற நீசத்துவம் ஆனாய்
பேசிற்பிழை யாம்உன்பெயர் பிதற்றப்பிணி உற்றே,
பாசத்தொடு நரகெய்திய பதிசேருவர் பாப
நாசப்படும் உனைச்சேர்த்திட நரகங்களும் நடுங்கும்.

நீசமானவளின் மோகத்தால், நீசத்தனம் அடைந்தாய். இன்னும் சொன்னால், உன்பெயரை எவன் சொன்னாலும், அவன் கூட வியாதிகள் அடைந்து, நரகநகரில் பிணிக்கப்படுவான். இவ்வளவு இழந்தவனை அடைந்தோமே என்று, பாவமே துன்பப் படும். உன்னைச் சேர்த்துக்கொள்ள, நரகங்கள் கூட நடுங்கும். 30

பாதகத் துருவம் நீஇப் பதிவிசே டத்தி னாலே,
ஏதம்அ தகலும் வண்ணம் இயம்புதும் இன்னல் ஆன
வேதனை யாவும் தீர விதிதீர்த்தம் இதன்மேற் பாலில்
சீதநீர் ஆடில் உன்றன் தீவினை தீரும் கீழ்பால்,

நீ, பாதகங்களின் மொத்த வடிவம். என்றாலும், திருப்புடை மருதூர்த் தல விசேஷத்தால், உன் துன்பம் நீங்கும்படி வழி சொல்கிறேன். துன்பங்கள், வேதனைகள் யாவும் தீர, பிரம தீர்த்தத்தின் மேற்கில் குளிர்ந்த நீரில் குளித்தால், உன் தீவினை தீரும். இதன் கிழக்கே, 31

வான்கங்கை சூழும் இந்தத் திருப்பதி வணங்கி மன்னி,
நான்கெல்லைப் புறத்து நாளில் இருதரம் நசையில் சூழ்ந்து,
தேன்தங்கு மருதைப் போற்றிப் புறத்தொட்டித் தீர்த்தம் ஆடிக்
கோன்தங்கு கோயில் சுற்றுப் பணிசெய்து கொண்டு பின்னும்,

ஆகாய கங்கையே பொருனையாகச் சூழ்ந்துவரும் இந்தத் திருப்புடைமருதூர்த் திருப்பதியை வணங்கி, இங்கேதங்கி, ஒவ்வொரு நாளும் இரண்டு முறையாவது மிக்க விருப்பத்துடன் வலம்வந்து, தேன்துளிக்கும் மருதமரத்தைப் போற்றவேண்டும். நாள்தோறும் புறத்தொட்டித் தீர்த்தத்தில் குளித்து, இறைவன் திருக்கோயிலின் சுற்றுப்பணிகள் செய்யவேண்டும். 32

சிவன்அடி யார்கட் கேவல் செய்துதீ வினைஅ கற்றும்
அவன்கண்ணின் மணியும் நீறும் அணிந்தரன் தன்னை உள்கி,
இவண்உறில் வரும்தைப் பூசத் தினத்திந்தத் தீர்த்தம் ஆடில்,
பவம்அறும் வினைஅ கன்று பவித்திரம் எய்திப் பண்பால்,

மேலும், சிவன் அடியார்கள் கூப்பிட்ட குரலுக்குச் சென்று, அவர்கள் ஏவும் வேலைகளைச் செய்யவேண்டும். வினைகளைப் போக்கக் கூடியவை உருத்திராட்சமும் திருநீறும் ஆகும். சிவனின் கண்மணி எனப்போற்றப்படுவது உருத்திராட்சம்.

உருத்திராட்சம், திருநீறு அணிந்து இறைவனை மனத்தில் பதித்துக்கொள்ளவேண்டும். இப்படி இங்கே தங்கினால், வரும் தைப்பூசத் தினத்தில் இந்தத் தீர்த்தத்தில் நீராடினால், பிறப்பு நீங்கும்; வினை அகலும்; பவித்திரம் சேரும். 33

குருஉப தேசம் பெற்றுக் குலத்தில்உத் தமனும் ஆகிப்
பரனையும் வழிபட் டிந்தப் பதியினில் வதிவாய் பன்னாள்
மருவிய மணம்மு டித்து மனையுடன் மகங்கள் செய்தே,
இருநிலத் தின்பம் எய்தி இறுதியில் இங்குற் றாலே.

பண்புடன் குரு உபதேசம் பெற்று, உத்தம குலத்தவனாக ஆகிப் பரனை வழிபட்டுப் பல நாள்கள் இதே ஊரில் வாழ்வாயாக! பின்னை உன் ஊருக்குச்சென்று திருமணம் செய்து கொண்டு, மனைவியுடன் யாகங்கள் செய்து, இப்பெரிய உலகில் எல்லா நல்லின்பங்களையும் அடைவாய்! உன் இறுதிக் காலத்தில் மீண்டும் இங்கு வா. 34

கார்கெழு கூந்த லோடும் கறைக்கண்டன் எழுந்து காட்சி
நேர்தரப் போற்று வாய்நின் உயிர்உடல் தன்னை நீங்கிப்
பேர்தரும் போதில் இங்ஙன் பேசுநா யகன்உன் காதில்
தாரக மனுவை ஓதப் பெற்றுச்சா ரூபம் சேர்வாய்.

அப்பொழுது நீலகண்டப்பெருமான், மேகம்போன்ற கூந்தலையுடைய உமையம்மையுடன் காட்சி கொடுப்பார். உன்உயிர் உடலைவிட்டு நீங்கும்போது, பேசும் நாயகன் [நாறும் பூநாதர்] உன் காதில் தாரகமந்திரத்தை ஓதுவார். சிவவடிவமே ஆன சாரூப முத்தியை நீ அடைவாய்' 35

என்று சித்தர் இயம்பி மறைந்தனர்;
நன்றிங் குற்றவர் நாதன்என் றெண்ணியே,
கொன்றை வைத்தவர் என்னையும் ஆட்கொள
இன்றிங் குற்ற அதிசயம் என்கொலாம்.

என்று கூறித் துறவி மறைந்தார். இங்கே வந்தது தலைவனாகிய சிவனே என எண்ணிக் 'கொன்றைஅணிந்த பெருமான் என்னையும் ஆளாக்கிக்கொள்ள, இன்று இங்கே வந்தது அதிசயம்!' 36

பாத மும்முடி யும்பணி யப்பண்டு
வேத னும்திரு மாலும்விண் பாதலம்
மோதி எய்த்தனர் காண்பரு முன்னவன்
பேதை யேற்கெளி வந்ததெப் பெற்றியோ.

'சிவனின் திருவடியையும் திருமுடியையும் வணங்கத் திருமாலும் பிரமனும் முன்பு, பாதாளத்தையும் ஆகாயத்தையும் அடைந்து தேடியும், காண முடியவில்லை. பேதையாகிய எனக்கு, எளிமையாக வந்து காட்சி தந்த பாக்கியத்தை, எப்படிச் சொல்வேன்?' என்று, மலைத்தான். 37

## அவிர்த்தானனின் பணிகள்

தேன லங்கொன்றை திங்களும் சூடிய
வான நாயகன் மாமரு தத்தில்வாழ்
கோன் அவனெனை ஆளக் குறிப்புடன்
ஈன னுக்கெளி வந்ததெப் பெற்றியே.

'தேன்பில்கும் கொன்றையையும், பிறையையும் சூடிய தேவர் தலைவன் வாழும் பெரிய மருதமரத்தில், தலைவராகிய அவர் என்னை ஆண்டுகொள்வதற்காகத் திருக்குறிப்புக்காட்டுகிறார். குற்றம் புரிந்தவனாகிய எனக்கு, அவர் எளிமையாக அருள் செய்வது என்ன பாக்கியமோ' என்று, வியந்தான். 38

எனத் துதித்தி றைஞ்சியே
கனக்கு ழற்க ணிறைவனார்
தனக்கு ரைத்த தகைமைதான்
மனத்து றத்தண் மருதநீள்,

என்றிவ்வாறு துதிசெய்து பணிந்து, கனமான கூந்தலையும், நெற்றிக்கண்ணையும் கொண்ட இறைவன், எனக்கு உபதேசித்தவற்றை உயர்வாக மனத்தில் கொண்டு, குளிர்ந்த மருதமருதமரத்தின் அருகில், 39

கரையில் வந்து கம்பலைத்
திரைஅ லம்பு சிந்துபார்
பொருனை பொங்கு புனலினில்
விரைவில் மேவி மூழ்கியே,

பொருனைக் கரைக்கு வந்து, பேரோசையுடன் அலை மோதும் — நீர் சிந்தும் உலகுக்குரிய பொருனையின் பொங்கும் நீரில், விரைவாக அமிழ்ந்து மூழ்கி நீராடினான். 40

மாலை பெற்ற மருதையே
சால வும்ப ணிந்துசார்ந்து,
ஆல யத்துஅ ரன்பணிக்கு,
கோல வீதி குறுகியே,

மாலைபெற்ற மருதப்பெருமானைப் பலமுறை தொழுதான். அரன்பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டான். அடியவர் வாழும் வீதிகளைத் தூய்மைசெய்யச் சென்றான். 41

நித்தியம் இருபால் நன்கு நெறிவிதப் படியே சூழ்ந்து,
புத்தியும் வீடும் நல்கும் புறத்தொட்டித் தீர்த்தம் கொண்டு,
சுத்திசெய் தரசைச் சூழ்ந்து சுற்றுள பணியும் செய்து,
பத்தியால் அன்பர்க் கேவல் பரிவுடன் இயற்றிப் பண்பால்,

நாள்தோறும் இரண்டு வேளைகளிலும் முறைப்படி நன்கு இறைவனை வழிபாடு செய்தான். புத்தியும் மோட்சமும் தரும் புறத்தொட்டித் தீர்த்தம் கொண்டு, திருக்கோயிலைச் சுத்தி செய்தான். சிவனை வலம்வந்தான். சுற்றுப் பணிகள் செய்தான். பக்தியுடன் சிவனடியார்கள் ஏவியவேலைகளை எல்லாம் பரிவுடன் செய்தான். 42

புகழ்தரும் ஐயம் ஏற்றுப் புசித்திரு போது நீங்கா
அகம்நெகிழ் வுறச்செய் போதில் அணைதலும் மகர பூசத்
தகைமைசேர் நாள்வந் துற்ற தரணியோர் இமையோர் யாரும்
தொகைகொடு தீர்த்தம் ஆடத் தோன்றினார் சுதினத் தாலே.

பண்புடன், புகழத்தக்க வகையில் பிச்சை எடுத்து உண்டான். எல்லாரும் அகம் நெகிழ்ந்து மனத்தில் நீங்காமல், வாழ்த்தும்படி நடந்துகொண்டான். தைப்பூச நன்னாள் வந்தது. உலகத்தவர்கள், தேவர்கள் முதலியோர் கூட்டமாகச் சுபதினத்தில் தீர்த்தமாட வந்தனர். 43

மகவினை வேண்டி நன்கு மணம்விளை வதனை வேண்டிப்
புகழினை வேண்டி இன்ப புவனபாக் கியங்கள் வேண்டி,
நகைமண நகையா ரோடு நண்ணினோர் கதியை வேண்டி,
இகமகன் றவரும் யாரும் எய்திட இத்தி னத்தில்,

தத்தம் இருப்பிடங்களைவிட்டு அணிகள் அணிந்த துணைவியார்களுடன் சிரித்துக்கொண்டு பலர் வந்தனர். பிள்ளைப் பாக்கியத்துக்காகவும், திருமண பாக்கியத்துக்காகவும், புகழுக்காகவும், உலக இன்ப பாக்கியங்களுக்காகவும் இப்படிப் பலப்பல வேண்டுதல்களுடன் பலர்வந்தனர். 44

நாயகன் தீர்த்தம் நல்க ஞாலத்தோர் யாரும் நண்ணிப்
பாய்புனல் தீர்த்தம் ஆட அவருடன் பாவம் நீங்கும்
தூயவன் தானும் ஆடத் துகள்தரு நீச மெய்போய்த்
தோய்பவர் காணச் சொன்ன தேகமாய்த் தோன்றி னானே.

தீர்த்தவாரி நடந்தது. உலகத்தவர் யாவரும், பாயும் பொருனையில் நீராடினார்கள். அவர்களுடன் பாவத்தைப் போக்கிக்

கொள்ள அவிர்த்தானனும் நீராடினான். அழுக்கான நீசத்தனமான அவனின் அழகற்ற உடம்பு, தங்க நிறத்தில் தோன்றியது. இந்த அதிசயத்தை, அங்கு நீராடிய அனைவரும் பார்த்தார்கள். 45

யாரும்கண் டதிச யித்தார் யாவன்இம் மகன்தான் என்னாக்
காரடர் நிறத்த மெய்போய்க் கனகமாய்த் தோன்றக் கண்டு,
சீரவன் தன்னை உற்று வினவிடத் தெளிந்தார் கொன்றைத்
தாரவன் தீர்த்தம் இந்தத் தன்மைய தென்று போற்றி,

கருப்பான உடம்புடன் குளிக்கவந்தவன், கனகநிறத்தில் மாறினானே, இவன் யார்? இவன் சிறப்புகள் என்ன? என்று, யாவரும் அவனிடம் வந்து கேட்கத் தொடங்கினார்கள். அவன் விளக்கங்கள் சொன்னான். எல்லாம் கொன்றை அணிந்த பெருமானின் தீர்த்த விசேடம் என்று, தெளிந்து போற்றினார்கள். 46

## அவிர்த்தானனின் துதி

துதித்திட விடையின் மீது தோகைகோ மதிஓர் பாலாய்
மதிச்சடைக் கடவுள் தோன்றி காட்சிதந் தருள வானோர்
பதிப்பல குலத்தி னோரும் பரவிட அவிர்த்தா னன்தான்
கதிக்கடல் அனையான் தாளில் கம்பித்து வீழ்ந்தெ ழுந்து,

அப்பொழுது காளியின்மேல் மயில்போன்ற கோமதியம்மன் ஒரு பக்கம் இருக்க, பிறைசூடிய சடைக்கடவுள் தோன்றிக் காட்சி கொடுத்தார். தேவர் உலகத்தினருடன் பல பிரிவினரும் போற்றி செய்தார்கள். கதி நல்கும் கடல்போன்ற கருணை உடையவரை, அவிர்த்தானன் மகிழ்ச்சியால் ஏற்பட்ட நடுக்கத்துடன் விழுந்து வணங்கி எழுந்தான். 47

புரகரா சரணம்; வேதப்
புடைமருது அதனில் வாழும்
கர, மதா சலத்தோல் போர்த்த
கடவுளே சரணம்; கங்கா
தரசடா டவியில் திங்கள்
தரித்தவ சரணம்; சாய்ந்த
பரமனே சரணம்; தேவி
பாகனே சரணம் போற்றி!

[புரகரா — திரிபுரங்களை அழித்தவரே; கர, மதாசலத்தோல் — துதிக்கை உடைய மதம்பொருந்திய யானையின் தோல்; கங்காதர — கங்கையை அணிந்தவரே; சடாடவியில் — சடையாகிய காட்டில்; திங்கள் தரித்த—சந்திரனை அணிந்த] 48

நீசமாம் துடக்கில் எய்தும் என்னையும் நின்தாள் போற்றும்
பூசுர ருடன்சேர்த் தாண்ட புண்ணியா சரணம் பூவில்
வாசவற் கருளும் தெய்வ மருதநா யகமா தேவ
ஈசனே சரணம் என்றே இறைஞ்சினன் இருபி றப்பன்.

நீசத்தனமாகிய நடுக்கத்தில் மாட்டிக்கொண்ட என்னையும் தேவர்களுடன் சேர்த்து நின்தாள் காட்டி ஆண்ட புண்ணியரே! சரணம்; பிரமனுக்கும் திருமாலுக்கும் அருள்செய்யும் மருத நாயகரே! மகாதேவரே! ஈசரே! சரணம் என்று, இரு பிறப்பாளன் [அந்தணன்] துதித்தான். 49

விடையினில் காட்சி தந்த விமலனும் இலிங்கத் தெய்த
உடையநா யகனைப் போற்றி அவிர்த்தானன் உவந்து கோயில்
புடைவலம் கொண்டி றைஞ்சிப் புனிதநா யகனைப் போற்றிச்
சடையவன் அருளைப் பெற்றுத் தாபதன் இருந்த போதில்,

காளை வாகனத்தில் காட்சிதந்த கடவுள், இலிங்கத்தில் மறைந்தார். அவிர்த்தானன், உடையவராம் அந்தத் தலைவரைப் போற்றி மகிழ்ந்து, கோயிலை வலம் வந்தான். சடையவர் அருளுடன் அவரைப் போற்றித் துதித்து வணங்கித் தம்மூரில் இருந்தபோது, 50

இருபிறப் பாள னேல்நம் இருக்கினுக் குரியான் என்று,
மரபினாற் கெண்ணம் கொள்ள வாய்மையால் மறைநூல் ஓதக்
குரவனால் பெற்றுப் பூணல் நூல்கடி முடித்துக் கொண்டு,
பொருனைசூழ் மருதின் மேன்மை யாவையும் புகலக் கேட்டு,

இறைவன் அருள்பெற்ற இவன், இருக்கு வேதத்தினன், இருபிறப்பாளன் என்று அறிந்து அம்மரபினர், குருவின் வழியே வேதம் ஓதவும், உபநயனம் செய்துகொள்ளவும் செய்தார்கள். பொருனைநதியின் பெருமையால் நிகழ்ந்த அதிசயத்தை யாவரும் கேட்டனர். 51

சிறந்தபார்ப் பனவன் ஆனோன் திகழ்புடார்ச் சுனபு ரத்தின்
அறந்தரு மகிமை எண்ணி அரனருட் படியே இன்பம்
நிறைந்திட மணமும் செய்து நிலவிய யாகம் செய்தே,
உறைந்தனன் பன்னாள் பின்னாள் இறுதியில் உமையோர் பாகன்,

சிறந்த பார்ப்பனவனாக அவிர்த்தானன் மாறினான். புடார்ச்சுனத்தின் தருமத்தையும் மகிமையையும் எப்பொழு தும் நினைத்துக்கொண்டிருந்தான். திருமணம் செய்து கொண் டான். யாகங்கள் செய்தான். இறுதிக்காலத்தில் புடார்ச்சுனம் வந்தான். 52

அந்திய சந்தி யத்தில் அந்தர ருடன்எ ழுந்தே,
வந்தவிர்த் தானன் காதில் மனுவினை உபதே சிக்கப்
பந்தம்அ தகன்று மேலைப் பதவியை எய்தி னானால்
இந்தநன் மகிமை கேட்டோர் இன்பவீ டெய்து வாரே.

*உமைபாகன், மாலைநேரச் சந்தியாகாலத்தில், தேவர்களுடன் அந்தரத்தில் தோன்றி வந்து, அவிர்த்தானனின் காதில், தாரகமந்திரத்தை உபதேசித்தார். அவன் பந்தங்கள் நீங்கின. மேலுலகப் பதவி அடைந்தான். அவிர்த்தானனின் இந்த நல்ல கதையைக் கேட்டவர்கள், இன்பத்தையும் மோட்சத்தையும் அடைவார்.* *53*

திகழ்அவிர்த் தானன் பவத்தினை அகற்றும்
தீர்த்தத்தில் ஆடுவோர் செய்யும்
துகள்பெறு நீசத் துவம்முத லான
துன்பமும் தீருவார் துகள்தீர்
புகழ்பெறு முனிவர் சூதரை வணங்கிப்
புனிதநா யகன்கதை இன்னும்
மகிழ்வுடன் உரைப்பீர் என்றலும் முனிவன்
வழங்கிடும் செயலினை வகுப்போம்.

*அவிர்த்தானனின் பிறப்பை அகற்றிய புனித தீர்த்தத்தில் நீராடுவோர், அழுக்கான நீசத்துவம் முதலாகிய துன்பம் நீங்கி வாழ்வார்கள் என்று சூதர் சொன்னவுடன், முனிவர்கள், புகழ் பெற்ற சூதமுனிவரை வணங்கி, 'புடார்ச்சுனத்தில் உள்ள புனித நாயகனின் திருவிளையாடல்களை மகிழ்வுடன் இன்னமும் சொல்லுங்கள்' என வேண்டிக்கொண்டனர். அவரும் தொடர்ந்து சொல்லத் தொடங்கினார்.* *54*

ஆகத் திருவிருத்தம் – *873*

# 10. வால சதானந்தன் படலம்

மறைஅவிர்த் தானன் பாவம் மாற்றிய திதுமேல் வாச
நறைஇத ழியனைப் போற்றும் நாரதன் செய்கை யாலே,
பிறியமா தவன்சேய் வால சதானந்தன் பிழையை நீங்கி,
இறையருள் பெற்று வாழும் தன்மையை இசைக்கல் உற்றாம்.

'அந்தணன் ஆகிய அவிர்த்தானனின் பாவத்தை மாற்றி, அவனைப் புண்ணியவானாக்கிய கதையைச் சொன்னேன். இனி வாசனை பொருந்திய கொன்றை அணிந்த சிவனை நாரதர் போற்றியதும், அவர் இந்திரனிடம் செய்த கலகத்தால் பிறிய முனிவர் காமத்தால் கிறிதாசியிடம் வால சதானந்தனைப் பெற்றதும், வாலசதானந்தன் காமப்பிழை செய்ததும், இறைவன் அருளால் அப்பிழை நீங்கியதுமாகிய செய்திகளைச் சொல்லப் போகிறேன்' என்றார் சூதமுனிவர். 1

## நாரதருக்கு இந்திரன் புடைமருதப் பெருமை கூறுதல்

நாரத முனிவன் ஓர்கால் நாகலோ கத்தை நண்ணக்
கார்கெழு பரியோன் போற்றி வினவிடக் கங்கை நீத்தே,
சார்வதென் றுரைக்கக் காசி தனில்நிகழ் தன்மை கேட்கப்
பூரணன் தன்னைப் போற்றிக் கங்கையின் புகழைச் சொற்றான்.

முன் ஒரு சமயம் நாரதர் நாகலோகத்திற்குச் சென்றார். மேகத்தைக் குதிரையாக — வாகனமாகக் கொண்ட இந்திரன், நாரதரைப் போற்றினான். 'கங்கையை விட்டு இங்கே வந்தது ஏன்? காசியில் ஏதேனும் சிறப்புண்டா?' என்று கேட்டான். நாரதர் சிவனைப் போற்றிப் பிறகு கங்கையின் சிறப்புகளை இந்திரனுக்குச் சொன்னார். 2

அப்பொழுது அந்த ரத்தோர்க்கு அதிபன்நம் மகதி வீணை
விப்பிரன் தன்னை நோக்கி மேதினி உறுதி போலும்
இப்புவிக் கில்லை என்றான் இசைத்திடில் ஆண்டுக் கங்கை
மெய்ப்பதி தனிலும் மேன்மை உடையது வேறொன் றுண்டால்.

அப்பொழுது, தேவலோகத்திற்கு அதிபதியாகிய இந்திரன், வேகமாக மூன்றுலகுக்கும் சஞ்சரிக்கும் வீணை இசையில்

*வல்ல நாரதரைப் பார்த்து, 'உலகம் நன்றாக இக்கிறதா?' நாக லோகம்தான் நன்றாக இல்லை. பூலோகத்தில் கங்கை நகராகிய காசியைக் காட்டிலும் மேன்மையான தலம் ஒன்று இருக்கிறது.* 3

அதுபுடை மருதக் காசி ஆம்பிர வனம்சூழ் கங்கை
நதிவரு பொருனை அங்கண் நண்ணுவோர் புனித சீல
விதிஅவர்க் கிறுதிக் காலம் மேவிடில் விமலன் அந்தப்
பதியினில் தார கத்தை அருளியே பதவி நல்கும்.

*'அது புடைமருதமாகிய காசி. புளியங்காடு சூழ்ந்து ஓடுவதும், கங்கை நதி பிரமதண்டத்தால் வந்ததும் ஆகிய பொருனை அங்கே உள்ளது. வாழ்நாள் முடிவுறும் காலத்தில், அங்கே சென்றால், விமலன் தாரக உபதேசம் செய்து, மோட்சம் தருவார்,* 4

அதனிடை எனக்கு வந்த அரும்பழி தீர்ந்த தன்றோ
கதிதரும் கங்கை என்று சோதகம் காட்டக் கண்ட
விதிமுதல் ஆனோர் போற்றி வேண்டிய வரங்கள் பெற்றார்
மதிஎன மகிமை கேட்ட முனிவரன் வையம் எய்தி,

*நான் விருத்திராசுரனைக் கொன்றதால் எனக்கு வந்த கொடும்பழி அங்கேதான் தீர்ந்தது. பிரமன் முதலானவர்களும், அங்கே உள்ள கங்கையில் மூழ்கித் தங்கள் பாவங்கள் தூய்மையாக்கப்பட்டதைக் கண்டு, பின் இறைவனிடம் தங்களுக்கு வேண்டிய வரங்களைப் பெற்றுள்ளார்கள்' என்று, இந்திரன் சொன்னான். அதைக் கேட்ட நாரதமுனிவர், 'அங்கே செல்வதுதான் அறிவுடைமை' என்று கூறி, மண்ணுலகத்திற்கு வந்தார்.* 5

## நாரதர் வியாசருடன் புடைமருதூருக்கு வருதல்

சங்கரற் பரவி நைமி சாரணி யத்திற் கர்க்கன்
அங்கிரர் முதலோர் போற்ற அவ்விடை வதிந்த போதில்,
புங்கவன் சூத யோகன் புடைமரு ததனின் மேன்மை
உங்களுக்கு உரைத்த காதை உண்மையா தெனஉ ரைப்பார்.

*நாரதர், இறைவனை வணங்கி, 'நைமிசாரண்யம்' என்ற வனத்திற்கு வந்தார். அங்கே கார்க்க முனிவர், அங்கிர முனிவர் முதலாகிய முனிவர்கள், நாரதமுனிவரை வரவேற்றார்கள். நாரதர் அங்கே தங்கினார். 'புடைமருதத்தின் மேன்மையைச் சொல்லும் கதைகளை, உங்கள் குருவாகிய சூதமுனிவர் உங்களுக்குச் சொல்லியுள்ளார். அவர் சொன்ன கதைகளின் சாரம் யாது?' என நாரதர், அங்கிருந்த முனிவர்களைக் கேட்டார்.* 6

புவிக்கொரு திலகம் ஆகும் புடைமரு தின்சீர் சொல்லில்,
அவத்தநோய் வினைகள் தீர்க்கும் அவ்விடை வதியப் பேரும்
தவித்திடும் உயிர்கட் கந்திச் சந்தியில் அன்னை கூட,
நவிக்கரன் எழுந்து தார கத்தினை நவிலும் பின்னும்,

'திருப்புடைமருதூர், உலகத்திற்கே திலகம்போன்ற தல மாகும். அதன் சிறப்பு என்னவென்றால், அவத்தைகளை — நோய் களைத் தீர்க்கும் தலம் என்பதாகும். அங்கே சென்று தங்கி னால், வினைகள் பெயர்ந்துபோகும். மரணத்தில் தவிக்கும் உயிர் களுக்கு, அந்தச் சன்னதியில் மானைக் கையில் ஏந்திய பெருமான் அம்பிகையுடன் வந்து, தாரகமந்திரத்தை உபதேசம் செய்வார். 7

வேண்டிய வரம்கொ டுக்கும் விளம்பிடில் அத்த லத்தின்
காண்டகு மகிமை சொல்லக் கணக்கினில் அடங்கா தென்றார்;
மாண்டவி யாச ரோடு மகதிமா முனிவன் போந்தே,
ஈண்டுதென் மருதைக் காண வந்தனர் பொதிகை யின்பால்.

மேலும், அங்கே வழிபட்டால், இறைவன், வேண்டிய வரங் களை எல்லாம் கொடுப்பார். அத்தலப் பெருமைகள், கணக்கில் அடங்காதவை; சொல்லி முடியாதவை' என்றார்கள். அதைக் கேட்ட நாரதர், மாட்சிமை பொருந்திய வேதவியாசருடன் திருப்புடைமருதூருக்குப் புறப்பட்டார். வழியிடையில் பொதிகைமலைக்கு வந்தார். 8

முனிவனை வணங்கிக் கங்கை சூழ்புடார்ச் சுனத்து முன்னி,
மனுவினால் செய்த கோயில் மகத்துவம் கண்டு வானோர்,
தனிமுத லோனைப் பூசை செய்திடச் சங்கற் பித்தே,
கனிவுடன் பணிந்து சூழ்ந்து கதிதரும் பதியில் உற்றார்.

பொதிகைமலையில் அகத்திய முனிவரை வணங்கினார். கங்கை [பொருனை] சூழ்ந்த படார்ச்சனத்துக்கு இருவரும் வந்தனர். ஆதிமனு கட்டிய கோயிலின் அழகைக் கண்டனர். வானோர்களுக்குத் தனிப்பட்ட மூலதனம் ஆகிய சிவனைப் பூசிக்கச் சங்கற்பம் [உறுதிமொழி] செய்துகொண்டு, கனிவுடன் — பணிவுடன் கோயிலை வலம்வந்து, உயிர்களுக்கு நற்கதி வழங்கும் திருக்கோயிலின் பக்கம் அடைந்தனர். 9

## நாரதர் செய்த சிவபூசை

மன்னிய மருதை நோக்கும் போதினில் வளங்கொள் சோதி
துன்னிய தென்னத் தோன்ற அதிசயம் மனத்தில் தோன்றச்
சென்னியால் வணங்கிக் கங்கைத் திருநதி ஆடி ஏறிக்
கன்னிஓர் பாகன் முன்பு பணிந்தனர் காத லோடும்.

நிலைபெற்ற மருதமரத்தைக் கண்டார்கள்; வளமான ஜோதி பிரகாசிப்பது தெரிந்தது. மனத்தில் அதியப்பட்டார்கள். தலைதாழ்த்தி வணங்கினார்கள். கங்கையில் [பொருனையில்] குளித்தார்கள்; கரை ஏறினார்கள். கன்னியைப் பக்கத்தில் கொண்ட கடவுளைக் காதலோடு பணிந்தார்கள். 10

ஆலயம் எய்தித் தாழ்ந்தே ஆவர ணத்தில் உற்ற
வேலுடைக் கடவுள் கோட்டு வேழமா முகன்உள் ளிட்ட
பாலரை வணங்கி ஈசன் தனைப்பரி வுடனே பூசை
ஏலவார் குழலா ரோடும் செய்திட இயல்தீ பங்கள்,

ஆலயத்திற்குள் சென்று வணங்கினார்கள். பீடத்தில் உள்ள வேழமாமுகன் [விநாயகன்] வேலுடைக்கடவுள் [முருகன்] ஆகிய சிவனின் மகன்களை வணங்கினார்கள். 'ஏலம்' என்னும் தைலத்தின் வாசனை வீசும் கூந்தலையுடைய உமையுடன் சிவனுக்கு, நாரதர் பரிவோடு பூசை செய்யத் தொடங்கினர். 11

வேண்டிநின் றருளைப் பெற்று வேண்டிய மஞ்ச னாதி
ஆண்டவற் குவப்பச் சந்த னாதிசேர் தயிலக் காப்போ[டு]
ஈண்டிய பாலோ டைந்து கவ்வியம் இளநீர் கன்னல்
காண்டகும் அமுதம் இன்முக் கனிமது வருக்கத் தாலும்

இறைவனைத் தியானித்து அவரருளாலே அவருக்கு விருப்பமான திருமஞ்சனம் [அபிஷேகம்] செய்தார். அதற்கு முன் சந்தனம் கலந்த தைலக்காப்பு [இலேபனம்] செய்தான். பால், பஞ்சகவ்யம் [பசுவின் பால், தயிர், நெய், கோமயம், கோமூத்திரம்] இளநீர், கருப்பஞ்சாறு, காணத்தக்கதாக அமைந்த அமுதம், முக்கனிகளின் சாறு, தேன் ஆகியவற்றால் அபிஷேகம் செய்தார். 12

ஆட்டியே உதகம் சாந்தம் அருக்கியம் ஆடை வில்வம்
பூட்டும்ஆ பரணம் சாந்தம் சுகந்தத்தால் புனிதன் மெய்யில்
தோட்டிதழ் மலரால் இண்டை சுருக்கணி துதிக்கை மாலை
நீட்டிய பத்திக் கண்ணி தொத்தலர் நெருங்கு மாலை,

சிறிதளவு நீர் உட்கொள்ளக் கொடுத்து [உதகசாந்திசெய்து], மந்திரநீர் இறைத்து [அருக்கியம் கொடுத்து], ஆடை அணிவித்து, பில்வதளமாலை என்னும் பொன்னாபரணம் அணிவித்து, சாந்து, மணப்பொருள்களை இறைவன் திருமேனியில் பூசி, இலைகள், தளிர்கள் கொண்ட மலர்களால் தலைமாலை [இண்டை], கண்ணி [சுருக்கணி], துதிக்கை போல நீண்டு தொங்கும்மாலை [தொங்கல்], பூச்சரங்களை முடித்த சரமாலை

[பத்திக்கண்ணி] என நெருக்கிக்கட்டிய மாலைகளை வகைவகை யாகச் சார்த்தினார். 13

வகைவகை யாகச் சாத்தி வான்பெறும் அமுதம் மற்றால்
மிகுநைவே தனம்செய் திட்டம் வேண்டியே மகதி நாதன்,
அகமகிழ்ந் தரனை நோக்கி அழகிதென் றலரால் தோன்றும்
திகழுரு அற்பு தத்தைத் தரிசித்தான் சிந்தித் தானே.

தேவாமிர்தம் உள்ளிட்டவற்றை நைவேத்யம் செய்தார். விரும்பியவற்றை வேண்டிக்கொண்டார். மனமகிழ்ச்சியுடன் சிவனைப் பார்த்து, 'அழகாக இருக்கிறது' என்றார். மலர்களால் உருவத்தில் தோன்றிய அற்புதத்தைத் தரிசித்தார். தியானம் செய்தார். 14

## நாரதர் துதித்தல்

விடையவன்தன் மேனிஅலங் காரம் நோக்கி,
விளங்குநா றும்பூவின் விமலா என்று,
படர்ஒளிசேர் நாயகனைப் பழிச்சும் போதில்,
பண்ணவர்யா வரும்மகிழ்ந்து பரனுக் கிந்தத்
தொடையதனின் காரணமாய் உற்ற நாமம்
துகளில்லா மூவுலகும் துதிக்க என்றே,
கடவுளர்தோத் திரம்செய்தார் மகதி வீணைக்
கருணைமுனி பணிந்தெழுந்து கரங்கள் கூப்பி,

இறைவனின் திருமேனி அலங்காரத்தைப் பார்த்து, 'விளக்க மான நாறும்பூவின் நாதனே' என்று, ஒளிபடர்ந்த தலைவரைப் புகழும்போது, தேவர் யாவரும் மகிழ்ந்து, சிவனுக்கு இந்த மாலைகளின் காரணத்தால் பொருந்தும் 'நாறும்பூநாதர்' என்னும் திருப்பெயர், குற்றமில்லாத மூன்று உலகத்தவர்களும் துதிப்பதற்கு அமைந்த பெயராகட்டும் என்றுகூறித் தோத்திரம் செய்தார்கள். நாரதமுனி — வீணைகொண்ட கருணை முனிவர் பணிந்தெழுந்து, கரங்கள் கூப்பித் துதித்தார். 15

புரகர நாயக! போற்றி; பூத நாத!
புண்ணிய பூரண! போற்றி ; பொங்கு கங்கை
அரவுஇதழி ஆமைதும்பை அறுகு வேய்ந்த
அமலனே! போற்றி; அசலத்தை வில்லாய்
மருவிய காரண! போற்றி ; மருதம் மேவும்
வாரணத்தோல் போர்த்தவரைப் புயனே! போற்றி;
நரைவி டையின் மீதுஏறும் நங்கை பங்கா!
நாறும்பூ நாயகநின் நளினம் போற்றி.

*[புரகரன் — புரஹரன் — முப்புரங்களை அழித்தவர்; பூதநாத — பூதகணங்களின் தலைவரே; பூரண — முழு முதலானவரே; அரவு — பாம்பு ; இதழி — கொன்றை; அறுகு — புலித்தோல்; அமலன் — ஆணவம் கன்மம் மாயை என்னும் குற்றங்கள் இல்லாத வர்; அசலத்தை — [மகாமேரு] மலையை; மருவிய — பொருந்திய; வாரணத்தோல் — யானைத்தோல்; வரைப்புயன் — மலைபோன்ற தோள்களை உடையவர்; நரை — வெள்ளை; விடை — காளை; நளினம் — அழகு]* 16

என்றுபணிந் திறைஞ்சுநா ரதன்தான் காண,
இறைமருத நாயகன்வெள் விடையின் மீதே,
மன்றலங்கொள் கூந்தல்ஆ வுடைத்தாய் கூட
மன்னிஎழுந் தருளிவா னவர்கள் சூழக்
கொன்றைஅணி வேணியும்முந் நூலின் மார்பும்
கொண்டல்அன கண்டமும்குண் டலம்சேர் காதும்
என்றுமுத லாயினமுக் கண்ணும் ஆக
எதிர்காட்சி கொடுத்தருள இறைஞ்சி னானால்.

*இப்படித் துதிசெய்த நாரதருக்கு, இறைவன் காட்சி கொடுத்தார். வெள்ளைக் காளையின்மேல் மலர்க்கூந்தல் ஆவுடைத்தாயுடன் வானவர்கள் சூழ, கொன்றைமாலை அணிந்துகொண்டு, பூணுநூல் அணிந்த மார்புடன், மேகம் போன்ற கருத்த கண்டத்துடன், குண்டலங்கள் அணிந்த காதுகளுடன், என்றும் முதலாக இருக்கும் சந்திரன், சூரியன், அக்கினி என்ற மூன்று கண்களுடன், நாரதரின் எதிரில் தோன்றிய இறைவனை நாரதர் போற்றினார்.* 17

## நாரத கானம்

**மெய்மயிர் சிலிர்த்துக் கண்ணீர் விள்ளவேர்த் தகம்நெ கிழ்ந்தே,**
**பைஅரா அசைத்தோன் தன்னைப் பணிந்தெழுந் தன்பி னாலே,**
**கைகொடு சிரமே கூப்பிக் கசிந்திடும் போதில் ஈசன்,**
**நைகருத் துடையோன் தன்னை நாரத முனிவன் என்றே,**

*நாரதரின் உடம்பு புல்லரித்தது. ஆனந்தக்கண்ணீர் வடிந்தது. படமெடுக்கும் பாம்பை இடுப்பில் கட்டிய பரமனைப் பணிந்து, அன்புடன் கைகளைத் தலைக்குமேலே தூக்கிக் கும்பிட்டார். இரக்கமனம் படைத்த நாரதரை, ஈசன், 'நாரத முனிவா!' என்று, அழைத்தார்.* 18

அருளினால் நோக்கி வேண்டும் அன்புதந் தனம்நீ இந்த
மருதிடத் திருந்து நம்பால் மகதியாழ்ப் பணிசெய் வாய்என்று
அரன்அளித் திடவே தாழ்ந்து வாய்புதைத் தடியேன் என்று,
புரையிலான் போற்ற ஈசன் இலிங்கத்தில் பொலிந்தான் மன்னோ.

அருளுடன் நாரதரைப் பார்த்து, 'நீ மனத்தில் வேண்டிக் கொண்ட அன்பான செய்தி நிறைவேற வரம் கொடுத்து விட்டோம். நீ இந்தப் புடைமருதூரில் எம் எதிரில் வீணை வாசிக்க வேண்டும்' என்றார். நாரதர் உடம்பை வளைத்துக் கொண்டு, கையால் வாயைப் பொத்திக்கொண்டு, 'அடியேன் உத்தரவுப்படியே செய்கிறேன்' என்றார். குற்றமற்ற நாரதர் போற்ற, இறைவன் இலிங்கத்தில் புகுந்துகொண்டார். 19

சங்கரன் அருளைப் பேணி நாரதன் வியந்து சார்ந்தே,
எங்கணும் கிடையா திந்தத் தலத்தினில் இறைவன் நல்க,
மங்கலம் பெற்றோம் என்றே மனமகிழ்ந் திருந்து வீணை
செங்கையால் தடவிப் பாடிச் சிவனுக்கற் புதம்அ தாக,

சங்கரன் செய்த அருளை நினைத்து நாரதர் ஆச்சரியப் பட்டார். 'இந்தத் தலத்தில் இறைவன் செய்யும் அருள், வேறு எங்கும் இல்லை; மங்கலமான அருள் கிடைத்தது' என்று, மனத்தில் நினைத்து மகிழ்ந்தார். வீணையை எடுத்துச் சிவந்த கையால் தடவி, அற்புதமாக வாசித்தார். 20

பணிசெய்து யோகத் தெய்திப் பரனைப்பூ சித்து நாளும்
மணிகண்டன் தன்னைப் போற்றி மருதமர்ந் திருக்கும் போதில்
அணுகிய முனிவர் இந்த அரன்தரு செயலை எல்லாம்
குணமுடன் மகிழ்ந்து கூறக் கேட்டுளம் கொண்டு கூர்ந்தே,

சிவனுக்குப் பிரியமாக வீணை வாசிக்கும் பணியைச் செய்து, பூசித்து நீலகண்டரைப் போற்றி, திருப்புடைமருதூரில் சிலகாலம் இருந்தார். சிவன் செய்த அருளையெல்லாம், தன்னை அடைந்த முனிவர்களுக்கு உற்சாகத்துடன் சொல்லி மகிழ்ந்தார். 21

## பிறியமகர் என்ற முனிவரை நாரதர் சந்தித்தல்

முன்பாய் உற்றோர் தமைநோக்கி,
முனிவன் உரைப்பான் மூலம்உறும்
தென்பால் தோன்றும் ஆச்சிரமம்
யாதென் றிடலும் செப்பிடுவார்

வன்பார் முனியே பிறியமகர்
ஆற்றும் இடம்என் றறைந்திடலும்,
தன்பால் எய்தா விதம்தெளியக்
கருத்தை உணர்வான் சார்கின்றார்.

'மூலப்பொருளாம் சிவனின் கோயிலுக்குத் தெற்கே இருக்கும் ஆசிரமம் யாருடையது?' என்று, தன்னிடம் வந்த முனிவர்களிடம் நாரதர் கேட்டார். 'கலகம் செய்யும் நாரதரே! பிறியமகர் என்ற முனிவர் தவம் செய்யும் ஆசிரமம்தான் அது' என்று, அவர்கள் சொன்னார்கள். பிறியமகரிடம் செல்வதெப்படி என்று சிந்தித்து, முடிவுசெய்தார். 22

சான்றோர் போற்ற மிகுசிறப்பின்
..........................
ஈன்ற பிறிய மகமுனிபால்
மகதி வீணை முனிஎய்தித்
தேன்தங் கியநன் மலர்தூவி,
முகமன் உரைத்தே திருமுனிவர்,
ஆன்ற தவத்தாய் எவணின்றும்
போந்த செயல்என் அறைந்திடலும்,

சான்றோர்கள் போற்றுகின்ற மிக்க சிறப்புகளை உடையவராகத் தோன்றுகின்ற பிறியமுனியிடம், வீணை கொண்ட நாரதர் சென்றார். தேனுள்ள மலர்களை அவர் திருவடிகளில் தூவினார். பிறியமகர், நாரதருக்கு உபசாரம் செய்தார். 'மிக்கதவம் செய்தவரே! எங்கிருந்து வருகிறீர்? இங்கே வந்த காரணம் என்ன?' எனக்கேட்டார். 23

## நாரதர், தேவர்உலகப் பெருமைகள் சொல்லி, ஆசையைத் தூண்டுதல்

மக்தி வீணை முனிஉரைப்பான்
வான்தங் கியகற் பகநிழலும்,
தொகைகொள் தேவ கன்னியரும்,
சுரர்கள் வாழ்வும் சொலற்கரிய
தகைமை உடைய சிவவாழ்வும்,
தவத்தோர்க் கெய்தும் அப்பதிபோல்,
மகிமை உளதோ எவ்வுலகும்
வான்நாட் டருமை வரம்புடைத்தோ.

[தேவர் உலகின் பெருமையை உமக்குச் சொல்ல, அங்கிருந்து வருகிறேன் என்று சொல்வது போலச் சொல்லி, இந்திரபதவி பெறும் ஆசையை, முனிவனுக்கு எழுப்பினார் நாரதர்.]

'மிகப்பெரிதாகிய கற்பகமரத்தின் நிழலின் அருமையும், கூட்டம் கூட்டமாக இருக்கும் தேவகன்னிகள், தேவர்களின் சுகவாழ்வும் சொல்லமுடியாத பெருமைஉடைய சிவவாழ்வும், தவசிகளுக்குக் கிடைக்கும் அந்த உலகம்போல, எவ்வுலகத்திலும் இல்லை. வான்நாட்டின் அருமை எல்லையற்றது. 24

பணியும் கலையும் அருள்புரியும்
பஞ்ச தாரு வின்பான்மை
உணவி னாறு வகைஉதவும்
உம்ப ராக்கள் உயர்செல்வம்
மணிகள் உதவும் வான்பரியும்
அயிரா பதமும் வானவளம்
நணிய களகந் தருநகரும்
நலங்கொள் மேனை உருவசியும்,

அங்கே உள்ள சுகமான வேலைகள், கலைகள், பஞ்சதாரு [ஐந்து] மரங்கள் அருள் செய்யும் தன்மை, அறுசுவை உணவு நாளும் எல்லாருக்கும் தரவல்ல தேவர்களின் செல்வவளம், மணிகள், பறந்துவந்து உதவிபுரியும் குதிரைகள், வெள்ளை யானை, அந்தரத்தில் சஞ்சாரம் செய்யும் கந்தர்வர்களின் நகர், மிக்க அழகிகளான மேனை, ஊர்வசியும்... 25

அணியார் கொங்கைத் திலோத்தமையும்
வாரி கடைந்து வரும்அமுதும்
தணிவில் பொருளும் முப்பான்முக்
கோடி தேவர் தாழ்ந்துநிதம்
பணியும் வகையும் சிவிகையினைச்
சத்த முனிவோர் பரிப்பதுவும்
அணியும் போக மடவாரும்
பயில்அந் தரநா டதுதன்னை,

ஆபரணங்களால் மூடிய முலைகளை உடைய திலோத்தமையும், திருப்பாற்கடலைக் கடைந்தெடுத்த தேவாமிர்தமும், எடுக்க எடுக்கக் குறையாச் செல்வங்களும், முப்பத்து முக்கோடி தேவர்கள் வணங்கும் வாழ்வும், பல்லக்கைச் சப்தரிஷிகள் தூக்கும் பெருமையும், இன்பம் அனுபவிக்கக் கணக்கில்லாத போகம்தரும் பெண்களும், ஆகிய இத்தனையும் கிடைக்கும் உலகம் இந்திரலோகம். 26

கண்டு மகிழ்ந்தோம் உமக்குரைக்கக்
கருதி வந்தோம் எனக்கழறிக்
கொண்டல் பயிலும் பொதியமலை
குறுகச் சென்றான் அதுநிற்க,

அண்டர் நாட்டுக் கதிபதிதான்
ஆகப் பிறிய மகற்காசை
மண்டத் தவங்கள் செய்துபெற,
மதித்தே தென்பால் வந்தனனால்.

*அதைப் பார்த்துவிட்டு வந்தேன். அதை உமக்குச் சொல்ல வந்தேன்' என்று கூறிப் பிறியமகருக்கு இந்திரன் ஆகவேண்டும் என்ற ஆசையைத் தூண்டிவிட்டுப் பிறகு, நாரதர் பொதிய மலைக்குப் புறப்பட்டுச் சென்றார். பிறியமகர் இந்திரன் ஆவதற் காகத் தவம்புரியத் தொடங்கினார். 27*

## நாரதர் கலகம்

புனிதன் முதல்எத் தேவர்களும் பொருந்தி முனிபால் போந்தவர்கள்
தனது குறைபா டதுதீர்க்கும் தவத்தைப் போலும் மகத்துவந்தான்
உனில்வே றுளதோ தனைநிறுத்தி அயர்ச்சி அகற்றி எளியதுக்கே,
கனியும் அவர்போல் பிறியமகர் கருதி யோகம் தனைச்செய்தார்.

*தவம்செய்யும் ஒரு முனிவரிடம், இந்திரன் முதலாக எல்லாத் தேவர்களும் வந்து தத்தம் குறைகளைச் சொல்லித் தீர்த்துக்கொள்வார்கள். எனவே, தவத்தைப்போல மகத்துவம் உள்ள செயல் வேறேதும்இல்லை. தவம் தன்னை நிலைநிறுத்தச்செய்வது, தளர்வை நீக்குவது, எளிமைக்குக் கனிவது. பிறியமகர் இவற்றையெல்லாம் சிந்தித்து [யாகத்தால் எய்துவதைவிட] யோகத்தால் அப்பதவியை அடைய எண்ணினார்; யோகம்புரியத் தொடங்கினார். 28*

பொதிகை அகன்று நாரதனும் பொன்னா டெய்திப் புனிதன்பால்
விதிசேர் மகத்தால் பொன்உலகம் வேண்டிப் பெற்றாய்
இவைவேண்டிப்
பதியிற் பிறிய மகமுனிவர் தவம்செய் கின்றார் எனப்பகர்ந்தான்
மதிவைத் திடுமா முனிவரனே உன்னால் அறிந்தேன் எனவாழ்த்தி.

*பொதிகை மலைக்குச் சென்ற நாரதர், அங்கிருந்து இந்திர லோகத்திற்குச் சென்றார். இந்திரனைச் சந்தித்தார். அவனிடத்தில், 'நீ யாகம் செய்து இந்திர பதவியை அடைந்தாய். பிறிய மக முனிவர் தவத்தினால் இந்தப் பதவியை அடைய முயற்சி செய்கிறார்' என்று சொன்னார். 'புத்தி கூர்மை உள்ள நாரதரே! உம்மால் இந்தச் செய்தியைத் தெரிந்துகொண்டேன்' என்று கூறி, நாரதரை இந்திரன் வாழ்த்தினான். 29*

தேவேந் திரன்இச் செயல்நினைந்து தேவ ராகி எம்பதவிக்கு
ஏவ ரேனும் முயன்றிடில்வந் தேதம் அவர்பால் இயற்றிமிகத்
தாவில் வேணித் தவமுனிவர் தவத்தர் ஆனாற்[கு] இதுதகுமோ
பாவு தவத்தை அழிப்பன்என எண்ணி இந்தப் படிசெய்வான்.

இந்திரன், பிறியமகரின் தவம்பற்றி யோசித்தான். தேவராகி இந்திரனாகும் உபாயம் தவம் என்பதறிந்தான். எவராக இருந்தாலும் சிவதவத்தைக் செய்பவருக்கு இது தகுமா? அவருக்குத் துன்பம் தரவேண்டும்; பரவும் தவத்தை அழிக்கவேண்டும் என எண்ணி, ஒரு சூழ்ச்சி செய்தான். 30

நறிய தாரு நிழல்பிரியா நலம்கொள் அரம்பை நாரியரில்,
கிறுதா சிப்பெண் தனைஅழைத்துக் கேதம் ஆன தவம்இயற்றும்
அறவோன் தவத்தைப் புவியினில்சென் றழித்து வாஎன்
றிடஅவளும்
பிறிய மகர்தம் தவச்சாலை சேர்ந்தாள் பீத நாடிழிந்து,

வாசனை பொருந்திய கற்பகமரம் இருக்கும் பகுதியில் வாழும் பெண்கள் அரம்பைப் பெண்கள். அவர்களில் கிறுதாசிப் பெண்ணை அழைத்தான். 'துன்பமான தவத்தைச் செய்கிறான் பிறியமகன். அந்தத் துறவியின் தவத்தை, மண்ணுலகத்துக்குச் சென்று அழித்துவிட்டுவா' என்று, கட்டளைஇட்டான். அவள் பொன்னாட்டைவிட்டு இறங்கி, பிறியமகரின் தவச்சாலைக்கு வந்தாள். 31

அணிபெறும் அரம்பை மாதும் அமுதயாழ்ப் பயிற்சி யாலும்,
மணிவளர் இடையைச் சூழ்ந்த வனத்துகிற் சாய லாலும்,
கணிகையின் பருவத் தாலும் காமப்பார் வைக ளாலும்,
பணிகொள்பந் தென்னும் கொங்கைப் பணைப்பிறு மார்பி னாலும்,

அலங்காரங்களுடன் வந்த கிறிதாசிப்பெண், வீணையை அமுதம்போல இசைக்கும் திறமையாலும், மணிகள் தொங்கும் இடையைச் சுற்றிக்கட்டிய உள்தெரியும் துணியின் அழகாலும், மயக்கும் பருவத்தாலும், காமப் பார்வைகளாலும், மாலைதவழும் பந்துபோன்ற பெருத்த இரண்டு முலைகளின் விம்மிதத்தாலும்... 32

இவ்வுலகோர் உயிர்உண்ண ஏமனுரு மாறாடிச்
செவ்வியஅம் புயமலரின் தேன்உண்ணும் தேன்எனவே,
நவ்விவிழி யால்முனிவன் நல்லகருத் தைக்கவர்ந்தாள்;
மைவிழியார் மயல்உற்றார் தமக்கும்ஒரு மதிஉண்டோ.

*இந்த உலகில் உள்ளவர்களின் உயிர்களை உண்பதற்காக எமன் பெண்ணுரு எடுத்து வந்ததுபோல, வண்டுகளை உண்ணும் தேன்போல [பெண் — தேன்; ஆண் — வண்டு; வண்டு தேனை உண்ணும்; இங்கே தேன், வண்டை உண்ண வந்திருக்கிறது] மான்விழி மங்கை முனிவனின் நல்ல மனத்தைக் கவர்ந்தாள். மைவிழியார்மையலில் விழுந்தவர்களுக்குச் சுயபுத்தி என்பது உண்டோ?* 33

காமவலை யிற்கலந்து கருத்துவே றுற்றிடவே,
தேமொழிஇங் கிதத்தாலும் சோமரச வகையாலும்,
தாமவள்கொங் கைக்குவடே சார்வாகத் தவம்செய்தான்
மாமன்னு தவத்தோனும் மயங்கில்எவர் மயங்காரே.

*கிறிதாசியின் காமவலையில் பிறியமகர் சிக்கினார். அவர் தவக்கருத்து மாறிவிட்டது. தேன்மொழி செய்த இதமான செயல்களால், அவள் கொடுத்த சோமரசத்தாலும், அவள் முலைகளாகிய மலைகளின் மேலேயே தங்கிக் காமத்தவம் செய்தார். பெண் மயக்கினால், பெரிய நிலையான தவசிகள் ஆனாலும், மயங்காமல் இருக்கமுடியாது.* 34

கன்மம்விடு மோயார்க்கும் ககனபுவ னம்போந்த
பொன்அனைய கிறுதாசிப் பூசையுட னேபொருந்தி,
நன்னாலங்கொண் டேசிலநாள் கழிந்ததன்பின் னால்நினைந்த
தன்மையதொன் றேநடந்த தகைமையதொன் றெனத்தணந்தார்.

*கர்மவினை என்பது யாரையும் விடாது. விண்ணுலகத்திலிருந்து வந்த, பெண்போன்ற கிறுதாசிப் பெண்ணைப் பூசிப்பதிலேயே, முனிவர் பொருந்தி இருந்தார். நல்ல காமசுகங்களை அடைந்தார். சிலநாள்கள் இப்படிக் கழிந்த பிறகு, 'ஐயோ நாம் நினைத்தது ஒன்று; நடந்தது வேறொன்றாகிவிட்டதே' என்று புலம்பி, அவளைப் பிரிந்தார்.* 35

பிறர்பால் பொருளுக் காசையுறின் பேணும் பொருள்போம்
எனப்பெரியோர்
உறவே உரைப்பார் அதுதவறோ உம்பர் அரசற் குடையதெலாம்,
திறமாய் எய்த இயற்றுதவம் திறம்பத் தவம்போய்த் தேவரசன்
உறவும்போன புல்அறிவென் றோர்ந்து மலய மலைஉற்றார்.

*மற்றவரின் செல்வத்துக்கு ஆசைப்பட்டால், நம்மிடம் இருக்கும் செல்வமும் போய்விடும் என்று, பெரியவர்கள் மனத்தில் படும்படியாகச் சொல்வார்கள். அந்த வார்த்தை பொய் யில்லை. இந்திரனுக்கு உள்ளதெல்லாம் வேண்டும் என்ற பேராசையுடன், தவம் செய்யத் தொடங்கியதால், ஏற்கெனவே*

என்னிடம் இருந்த தவமும் போய்விட்டது. இது அற்ப அறிவினால் நேர்ந்தது என ஆராய்ந்தறிந்து, பிறியமகர் பொதிகைமலைக்குப் போனார். 36

## வால சதானந்தன் பிறப்பும் வளர்ப்பும்

பிரிய மகர்தம் பிழைநினைந்து பிரிந்த பின்பு தெய்வப்பெண்,
பிரிய மாட்டா உளத்துடனே பிறைசேர் இமய வரைநண்ணிப்
பிரிய முடனே தவர்அளித்த பிள்ளை தனையும் பெற்றதனைப்
பிரியக் குவட்டின் புடைவைத்துப் பேதை வான நாடுற்றாள்.

பிறியமகர், தன்னுடைய பிழையை நினைத்துப் பிரிந்த பிறகு தெய்வப்பெண்ணாகிய கிறிதாசி, அவரைப் பிரிய மனமில்லாத நிலையில், இமயமலைக்குச் சென்றாள். பிரியத்துடன் புணர்ச்சிசெய்து, தவசிகொடுத்த பிள்ளையைப் பெற்றெடுத்தாள். இமயமலையின் ஒரு பாறையில் வைத்துவிட்டு, வானுலகிற்குச் சென்றாள். 37

மாகம் உயர்ந்த பொதிகைமலை மன்னு கின்ற முனிசெய்யும்
யாகம் தனக்கப் பொழுதினிலே யாரும் முனிவர் செல்லுனரில்,
மோகம் முனிந்த கவுதமரும் முனிவன் பன்னி அகலிகையும்,
தாகம் ஆக வருமார்க்கத் திமய வரையின் சார்வுற்றார்.

மரங்கள் உயர்ந்த பொதிகைமலையில் நிலைபெற்று வாழும் அகத்தியர், ஒரு பெரிய யாகம் செய்வாரானார். அந்த யாகத்திற்கு, எல்லா முனிவர்களும் அழைக்கப்பட்டார்கள். ஆசைகளை நீக்கிய கௌதமமுனிவரும், அவரின் பத்தினி அகலிகையும், அகத்தியர் செய்யும் யாகத்தைக் காணும் ஆவலுடன் வரும்போது, இமயமலைப்பக்கம் வந்தார்கள். 38

உமையாள் உதிக்கப் பெற்றதவத் துயர்ந்த கனகத் துறுகின்ற
இமய மலையின் கற்புடைக்குள் இளஞ்சேய் இரங்கும் குரல்கேட்டு
நமைஆ ளுடையாள் உதித்ததுபோல் நலங்கொள் குழவிக் குரல்என்னத்
தமைஆ தரிக்கும் தவத்தோர்கள் தாம்அங் குற்றார் தாம்கண்டார்.

உமையவள் உதிக்கும் பாக்கியம் பெற்ற மலை இமயமலை. அதன் ஒருகல்லில் அழும் குரலைக்கேட்டு, 'நம்மை ஆளும் உமாதேவி இந்த மலையில்தான் குழந்தையாகப் பிறந்து பேசினாள். அவள் குரல் கேட்பதுபோல் இருக்கிறதே' என்று, கௌதமரும் அகலிகையும், குழந்தை அழுகுரல் கேட்ட திசைக்குச் சென்றார்கள். குழந்தையைப் பார்த்தார்கள். 39

உதய காலத் தெழும்கதிர்போல் உற்ற சிறுவன் தனைஎடுத்துக்
கதம்நீங் கியமெய்க் கவுதமரும் கருதி இரங்கி மகிழ்ந்திந்த
விதம்ஏ திவண்மே விடும்செய்தான் வேறன் றோதி விழைவாலே,
பொதிகைக் கேகும் பிறியமகர் புதல்வன் இவன்தான் எனஓர்ந்து,

உதய காலத்துச் சூரிய ஒளிபோல் இருந்த குழந்தையைக் கோபத்தை நீக்கிய கௌதமர் எடுத்தார்; இரக்கப்பட்டார்; மகிழ்ந்தார். 'இந்த இடத்தில் இந்த விதத்தில் குழந்தை இருப்பதில் ஏதோ மர்மம் இருக்கிறது.' என்று சொல்லியபடி யோசித்தார். நாம் பொதிகைமலைக்குச் செல்கிறோம்; பொதிகை மலைக்கு வந்திருக்கும் பிறியமகரின் மகன்தான் இவன் என்று, ஞானத்தால் அறிந்துகொண்டார். 40

பாலகன் தன்னைப் புல்லிப் பன்னிகை யில்கொ டுத்து,
வாலராய் இவனை உன்தன் மகவதாய் வளர்த்தி என்ன,
நீலம்நேர் விழியி னாளும் நேசமோ டிச்சேய் தன்னைக்
கோலமாய் வளர்த்து வந்தாள் கோதமன் மகிழ்ச்சி கூர்ந்து,

குழந்தையை மார்போடு அணைத்துக்கொண்டார். பத்தினியாம் அகலிகையின் கையில் கொடுத்தார். 'இவன் வாலிபப் பருவம் அடையும்வரை, உன்பிள்ளையாகவே நினைத்து இவனை நீ வளர்க்கவேண்டும்' என்றார். நீல மலர்போன்ற கண்களைக்கொண்ட அகலிகையும், அன்புடன் அந்தக் குழந்தையை அழகாக வளர்த்தாள். 41

வாலராய் வளர்க்க இந்த மைந்தனைக் கண்டா னந்தம்
சாலஎய் திடவே வால சதானந்தன் எனப்பேர் சாற்றிச்
சீலமாய் இவர்க ளோடும் தென்தமிழ்ப் பொதிகை சேர்ந்தான்,
மேலவர்க் கமுதம் ஊட்டும் யாகத்தின் விழவு நோக்கா.

கௌதமர் மிக மகிழ்ந்து வாலிபப்பருவம் வரை வளர்க்க எடுத்துக்கொண்ட குழந்தை ஆகையால், வாலசதானந்தன் [இவர்கள் வளர்க்கும் வாலிபப்பருவம் வரை எப்பொழுதும் ஆனந்தத்துடன் இருக்கவேண்டியவன்] என்ற பெயர்வைத்தார். தேவர்களுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கின்ற யாகத்தில், பங்கு கொள்ள ஒழுங்கான பாதையில், தென்தமிழ்ப் பொதிகைக்கு வந்தார். 42

## பிறியமகர் தன் மகனைக் காணுதல்

முனிவரன் கூட்டம் தன்னில் முயங்கிய பொழுதில் அங்கண்,
நனிவரும் தவத்தின் மிக்கார் யாவரும் கலந்து கங்கைத்

தனிமுதல் ஈசன் கீர்த்தி சாற்றுவா ராகச் சாய்ந்த
புனிதன்தன் மகத்து வங்கள் பேசிடப் புளகம் உற்றே,

பொதிகைமலைக்கு வந்திருந்த முனிவர்கள் கூட்டத்துடன், கௌதமரும் கலந்துகொண்டார். மிக்க தவம்புரிந்த பெரியவர்கள் எல்லாம், கங்கை [பொருனை] யின் சீர்த்திகளைப் பேசும்போதெல்லாம் சாய்ந்த புனிதன் ஆகிய திருப்புடைமருதூர் இறைவனின் கீர்த்திகளையும் சொல்வதைக் கேட்டுக் கௌதமர் புளகாங்கிதம் அடைந்தார். 43

கேட்டவன் மருதை ஓர்ந்து கௌதமன் கிடைத்தல் எண்ணி,
வாட்டமில் முனிவ ரோடும் மலயவெற் பதனி னின்றும்
தேட்டவர் பரவும் சாய்ந்த சிவபரஞ் சுடரைப் போற்றப்
பாட்டளி முரலும் தெய்வ மருதமா பதியை நோக்கி,

கௌதமர் திருப்புடைமருதப் பெருமைகளை மனத்தால் ஆராய்ந்தார். துடிப்பான முனிவர்களுடன் பொதிகை மலையிலிருந்து புறப்பட்டு, தெளிவானவர்கள் போற்றி வணங்கும் சிவபரஞ்சுடரைப் போற்ற எண்ணினார். வண்டுகள் இசை பாடும் தெய்வத்தன்மை வாய்ந்த திருப்புடை மருதூரை மனத்தால் நோக்கினார். 44

எழுந்ததா வம்பொழு தெதிர்ந்தவரை எய்தித்
தொழும்பிறிய மகரும்மிகு துதிசெய மகிழ்ந்தே,
செழும்புதல்வன் உம்முடைய சேயும்இது என்னத்
தழைந்தமன தாய்எனது தனையன்அவன் என்றார்.

அன்று பொழுது புலர்ந்தபொழுது. எதிரில் வந்து ஒரு முனிவர் வணங்கினார். அவர் துதிசெய்தது கேட்டு மகிழ்ந்த கௌதமர், வந்தவர் பிறியமகரே என அறிந்துகொண்டார். 'செழிப்பாக உள்ள இவன் உம் மகன்' என்றார். ஆனந்த மனோபாவத்துடன், பிறியமகர் 'இவன் உம் மகன்' என்று கூறினார். 45

கோதமனும் அன்னபடி கொண்டுகும ரற்கு
வேதமுத லாயின விளம்பிவிரை யார்தண்
சூதமலி வாழைபுடை சூழ்மருதம் ஓங்கும்
பூதலம்அ துற்றுவரு போதில்அவண் உற்றார்.

கௌதமன் பிறியமகர் சொன்னபடி வாலசதானந்தனைத் தன் மகனாகவே கருதி, வேதம் முதலாயினவற்றைச் சொல்லிக் கொடுத்தார். [மண்ணுலகிற்கு வந்தபோது கௌதமர்] புளிய மரங்கள், வாழைகள், அடியில் பருத்திருக்கும் மருதமரங்கள் ஆகியவை ஓங்கியுள்ள ஊருக்கு வந்தார். 46

மாதவர்கள் யாவரும் வந்தடி வணங்கக்
கோதமனும் மங்கலம் மிகும்குல நதிக்கண்
நீதமுடன் ஆடிநிய மங்களும் முடித்து,
வேதம்நிறை மாமருதை மெய்யுற வணங்கி,

அப்பொழுது பெரிய தவசிகள் எல்லாம் வந்து, கௌதமரின் திருவடிகளை வணங்கினார்கள். மங்கலம் மிகுந்த குலநதியாகிய பொருனையில் பாக்கியத்தினால் நீராடினார். நியமங்களை முடித்துக்கொண்டார். வேதம் நிறைந்த பெரிய மருதமரத்தை நிலம்தோய வணங்கினார். 47

## கௌதமரைக் கந்தருவர் தடுத்தல்

மந்திரம் அணைந்துகுட வாயிலில் வரும்போது,
எந்தைதிரு ஆணைகொடு நின்றிரு புறத்தும்
சந்தம்நிறை வீணைகொடு சார்ந்துபணி வாசல்
கந்தருவர் கண்டுதடை செய்தனர் கணத்தோர்.

மந்திரம் சொல்லிக்கொண்டே, கோயிலின் மேற்குத்திசை நோக்கிய வாசலுக்கு வரும்போது, இறைவனின் ஆணைப்படி வாசலின் இருபக்கங்களில் இனிய இசைதரும் வீணையைக் கையிலேந்தியபடி, இரண்டு கந்தருவர்கள், கௌதமனைத் தடுத்து நிறுத்திவிட்டார்கள். 48

கோதமர் வரும்செயல் குறித்தவனி கொண்ட
நாதர்அறி யும்படி நவிற்றஉயர் நந்தி
நீதனிடம் உற்றவர் நிகழ்த்தநிம லன்பால்
போதம்உணர் நந்திஇறை பொற்பதம் வணங்கி,

தேவகணத்தவர்கள், 'கௌதமர் என்ற செய்தியைச் சிவனிடம் சொல்லுங்கள்' என்று, நந்தியிடம் தெரிவித்தார்கள். அவன் நீதிமான். இறைவன் சொல்லியே கௌதமரைக் கந்தருவர் தடுத்தார்கள் என்றாலும், ஞானம் மிகுந்த நந்தி இறைவனிடம் சென்று, திருவடிகளை வணங்கிக் கௌதமர் வந்துள்ள செய்தியை வேகமாகச் சொன்னார். 49

முனிவர்இவண் உற்றசெயல் முந்திமொழி கின்றான்
பனிமதி முடிக்கடவுள் பாலரில்முன் வந்த
கனிபெறு களிற்றுமுக னைக்கருத வந்தான்
தனிமகவை நோக்கிமுனி யைத்தருதி என்றான்.

குளிர்ந்த சந்திரனைத் தலையில் அணிந்த சிவன், தன் பிள்ளைகளில் முதற்பிள்ளையும், ஞானப்பழத்தைப் பெற்றவருமாகிய யானைமுகனை நினைத்தார். யானைமுக விநாயகர்

வந்தார். தனித்தன்மை வாய்ந்த அவரைப் பார்த்துக் 'கௌதம முனிவரை அழைத்துவா' என்றார். 50

அன்னபடி மாமுகவன் ஆதியடி பேணித்
தன்உருவை மாறிஒரு தன்பிரம சாரி,
என்னவடி வாகிவரு கோதமனை எய்தி,
முன்னவன் அருட்படி முடிக்கஇது முன்னி,

யானைமுகன், ஆதியாம் சிவனின் அடியை வணங்கி, தன் உவத்தை ஒரு பிரமசாரியின் உருவமாக மாற்றிக்கொண்டு, முன்னவனாம் சிவனின் ஆணையை நிறைவேற்றக் கௌதமரிடம் வந்தார். 51

## கந்தருவர் தடுத்தது ஏன்எனக் கௌதமர் உணர்த்தல்

வந்தமுனி வன்தனை வரும்செயல் வினாவக்
கந்தருவர் செய்ததடை கவுதமர் கிளத்த
இந்தஇடர் வந்தவகை இபமுகனை ஏத்தாப்
பந்தம்உறு குற்றம்என முனிவரிடம் பன்னும்.

பிரமசாரி (விநாயகர்) 'இங்கே என்ன நடந்தது?' என்று கௌதமரைக் கேட்டார். 'கோயிலுக்குள் போகக் கூடாது என்று, இரண்டு கந்தருவர் தடுத்தார்கள்' என்று, கௌதமர் சொன்னார். பிரமசாரியாக வந்த விநாயகர், 'விநாயகரை வணங்காமல் சென்றதால், உமக்கு இந்தத் துன்பம் வந்தது' என்று சொன்னார். 52

முந்தைவரும் ஆச்சிரம முனிவரனும் நோக்கி,
எந்தையை வழுத்தமுனம் இபமுகனை ஏத்தும்
அந்தவய னத்தினை அறைந்திடுவை என்ன,
இந்தமரு தப்புடையில் எய்திடுதி அங்கே,

பழைய ஆச்சிரம முனிவராகிய கௌதமர், 'சிவனை வணங்கும் முன்பு, யானைமுகனை வணங்கும், அந்தப் பொருத்தமான முறையை எனக்குச் சொல்லிக் கொடுங்கள்' என்றார். 53

நிருதிஉறை ஐங்கரனை நீவழி படற்கே,
மருதடியில் மேல்புறம்அ தில்திகழ்வ ளம்சேர்
பொருனையினில் ஆடிநிய மம்செய்து புரக்கும்
கரிமுகனை எய்திவிதி யின்படி கருத்தால்,

'இதோ இருக்கிறதே மருதமரம். இதன்பக்கத்தில் தென்மேற்குத் திசைநோக்கி ஐங்கரர் உள்ளார். வளம்மிகுந்த பொருனைநதியில் குளித்து, நியமங்கள் செய்து, யாவரையும்

காப்பாற்றவல்ல யானைமுகனிடம் சென்று, கருத்து ஒன்றி, விதிப்படி, பூசித்து வணங்கவேண்டும். 54

பூசித்து வழிபா டாற்றப் புழைக்கைமா முகவன் தோன்றி,
நேசித்த பேறு நல்கி நிருமலற் போற்ற ஏகும்
வாசல்பின் தடையும் தீர்த்து வரங்களும் அருளும் என்று,
பேசித்தாம் எய்த அங்ஙன் பெட்புறு முனிவன் தானே.

அப்படிச் செய்தால், பொத்தல் உள்ள கையைக்கொண்ட யானைமுகன் தோன்றுவார். நேசித்த பாக்கியங்களைக் கொடுப்பார். சிவனை வழிபடச் செல்லும் வாசலில் தடை இருக்காது. கேட்கும் வரங்களை, யானைமுகன் கொடுப்பார்' என்றார். 55

விரதசா ரியின்சொல் போற்றி மெய்என்று கருதி இந்தக்
கரிமுகன் தீர்த்தம் ஆடிக் கடன்முடித் தனுக்கை பெற்று,
நிருதிஐங் கரனை வேத விதியினால் நிகழப் பூசித்(து)
அருளுடன் பலவர்க் கங்கள் பண்ணியம் அமைய ஏற்றி,

கௌதமர் பிரமசாரி சொன்னதைப் பாராட்டி ஏற்றுக் கொண்டார். அவர் சொன்ன செய்திகள், முற்றிலும் உண்மை என்பதைத் தன் நூலறிவால் உறுதிசெய்து கொண்டார். யானை முகன் தீர்த்தத்தில் குளித்தார். நியமங்கள் செய்துகொண் டார். தீர்த்தத்திடம் விடைபெற்று (கரையேறி) தென்மேற்கு நோக்கி, விநாயகரை வேதவிதிப்படி பூசித்து, அருளுடன் பழங்கள், பலகாரங்கள் நிவேதனம் செய்தார். 56

அருச்சனை புரிந்து நின்றே அடிதொழு தன்பி னாலே,
கருத்தனைக் குறித்து வேண்டக் கருணையாய் நின்ற வேதச்
சிரத்துறு பிரம சாரி திருவுரு மறைந்து தெய்வ
மருக்கிளர் கொன்றை யண்ணல் மகவென வடிவு கொண்டான்.

அர்ச்சனை செய்தார். திருவடி தொழுதார். கர்த்தாவாகிய விநாயகரை, அன்போடு வேண்டினார். வேதச்சிரத்தில் உள்ள விநாயகர், தான் எடுத்த பிரமசாரி உருவத்தை மறைத்து, தெய்வ மணம் கமழும் விநாயக வடிவாக — கொன்றையணிந்த பெருமானின் மகன் வடிவாக மாறினார். 57

அரவிந்த மலர்போல் தாளும் ஆனைமா முகமும் பேழைத்
தரமுந்து வயிறும் அங்கை தாங்குமோ தகமும் நூலும்
பருமம்சேர் கரம்ஓர் ஐந்து பந்தியும் படர்முன் கொம்பும்
வரமுந்து கருணை நோக்கும் வளிதரு முறம்சேர் காதும்,

தாமரைமலர் போன்ற திருவடிகளும், யானைமுகமும், பேழைபோன்ற வயிறும், மோதகக்கையும், முப்புரிநூலும்,

பருத்துள்ள ஐந்து கைகளும், முன்னே நீண்ட தந்தமும், வரம்தரும் கருணைக்கண்களும் அசைவதால், காற்றை உண்டாக்கும் முறம்போன்ற காதுகளும், 58

ஆகுவா கனமும் தோன்ற முனிவன்கண் டதிச யித்துத்
தாகமோ டடியேற் காகத் தான்ஒரு பிரம சாரித்
தேகம்அ தெடுத்து வந்த செயலினை அறிந்தேன் அல்லேன்;
சோகம்அ தகற்றி ஆளத் தோன்றுசுந் தரனே போற்றி.

பெருச்சாளி வாகனமும் உடையவராக விநாயகர் காட்சி கொடுத்தார். கௌதமர் அதிசயப்பட்டார். 'எனக்காகப் பேரானந்தத்துடன் ஒரு பிரமசாரியாக வடிவெடுத்து வந்த செயலை, இதுவரை அறியாமற் போனேனே! என் சோகத்தை நீக்கி, என்னை ஆட்கொள்ளத் தோன்றிய அழகனே! போற்றி. 59

ஐந்தொரு கரனே! போற்றி;
அரவணி சடையோன் ஈன்ற,
சிந்துர முகனே! போற்றி;
தெய்வ நாயகனே! போற்றி;
வந்துஎனைத் தடுத்துஆட் கொள்ள,
மலர்அடி காட்டி என்உள்
புந்தியைத் திருத்த வல்ல
புனிதனே! போற்றி என்று,

*(ஐந்துஒரு—ஓரைந்து; அரவு—பாம்பு; சிந்துரமுகனே—யானைமுகனே; மலர்அடி—தாமரைபோன்ற திருவடி; உள் புத்தி—சித்தம்)* 60

வணங்கிய முனிக்கன் பாக வரங்களும் நல்கிக் கோயிற்கு
இணங்கிய வாயில் காவல் எய்தினோர் தடையும் நீக்கி,
அணங்குடன் நிமலன் மேவும் ஆவர ணத்தைச் சூழ்ந்து,
குணங்குறி கடந்த சோதிக் குழகன்முன் விடுத்தான் அன்றே.

என்று தோத்திரம் செய்து வணங்கிய கௌதம முனிவருக்கு, விநாயகர் அன்பாக வரங்களை நல்கினார். கௌதமர் கோயிலுள் புகாதபடி, தடுத்த கந்தர்வர்களை அனுப்பி வைத்தார். உமையுடன் சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயிலின் திருச்சுற்றை வலம் வந்து, குணம், அடையாளம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்ட பெருமானிடம், கௌதமரை விட்டார். 61

அண்ணலைப் பணிந்தெ ழுந்தே அன்புறு முனிவன் போற்றிப்
பண்ணவன் தனைப்பூ சிக்கப் பரமதீர்த் தத்தில் ஆடி,
உண்ணிறை அருளி னாலே உதகத்தால் மலரால் சாந்தால்
விண்ணுறை அமுதால் பூசை விதிப்படி செய்து பின்னும்,

*அன்பான கௌதமர் சிவனைப் பணிந்து எழுந்தார். இறைவனைப் பூசிக்கப் பரமதீர்த்தத்தைத் தலையில் தெளித்துக் கொண்டார். உள்ளே அருள் பொங்க, நீர், மலர், சந்தனம், தேவாமிர்தம் ஆகியவற்றால், விதிப்படி பூசை செய்தார். 62*

**அண்ணலைப் பணிந்தெ ழுந்தே ஆயிரம் மனுவி னாலே,**
**எண்ணிய வில்வம் சாத்தி இறைவனைத் துதிசெய் கின்றான்;**
**உண்ணிறை அன்பி னாலே உமைஒரு பாகா போற்றி;**
**தண்ணிலா முடித்த ருட்கோல் நடத்திடும் தலைவா போற்றி.**

*ஆயிரம் திருநாம மந்திரங்களைச் சொல்லி, வில்வத்தைச் சார்த்தினார் (அருச்சனை செய்தார்) உள்ளம் நிறைந்த அன்பால், 'உமை ஒரு பாகா' போற்றி; குளிர்ந்த நிலவைச் சூடி, அருட்செங்கோல் நடத்தும் தலைவனே! போற்றி; வானவா! போற்றி' என்று, துதித்து வணங்கினார். 63*

**வானவா போற்றி என்று வணங்கிடும் போதில் அங்ஙன்**
**கூனல்அம் பிறைத ரித்த கோமளை பாகன் எய்தி,**
**மோனமா முனிவன் காண முன்நின்றான் முனிவா நீசெய்**
**மேன்மைஅர்ச் சனைக்கு வந்தோம் மிகுதியும் என்று கூறி,**

*வளைந்த அழகிய பிறையைத் தரித்துக்கொண்டுள்ள உமையொரு பாகன் மோனத்தில் வல்ல கௌதமரின் எதிரில் வந்தார். 'முனிவா! நீ செய்த மேன்மையான அர்ச்சனைக்கு, மிகவும் மகிழ்ந்தோம்!' என்றார். 64*

**திசைவளர் ஈசா னத்தில் திருமூல தீர்த்தம் ஆடி,**
**நசையுடன் பிரம தண்டம் நாடிட நதிகள் கூடி,**
**அசைவுறும் மடுவின் கீழ்பால் ஆகிய தீர்த்தம் கொண்டு,**
**கசிவுடன் ஆட்டி நாளும் பூசிக்கக் கடவாய் என்று,**

*'கௌசிக! வளர்ச்சி கொடுக்கும் திசையாகிய வடகிழக்குத் திசையில், திருமூலதீர்த்தம் உள்ளது. அது நீ குளிக்க வேண்டிய தீர்த்தம். எனக்கு நீ ஆசையுடன் — கனிவுடன் அபிஷேகிக்க வேண்டிய தீர்த்தம் பிரமதண்ட தீர்த்தம் ஆகும். அது (கங்கை, பொருனை, கடனை) நதிகள் கூடுகிற கிழக்குப் பக்கம் உள்ளது. நாளும் என்னைப் பூசிப்பாயாக' என்று, சிவன் அருளினார். 65*

**புகன்றுதம் வலப்பால் வாழும் புளிவிருக் கத்தில் மேவி,**
**இகந்தனைக் கடந்தோய் யோகம் புரிதிஎன் றியம்பி ஈசன்,**
**உகந்தவா விலிங்கத் தெய்தக் கவுதமன் உவந்து போற்றி,**
**அகந்தவா நெறியால் எங்கோன் அருளிய படியே வங்கு.**

பின்னர்ச் சிவன் வலப்பக்கம் உள்ள புளியமரத்தை அடைந்து, 'இகவாழ்வைக் கடந்த கௌசிகனே! நீ யோகம் செய்!' என்றார். பிறகு தனக்கு விருப்பமான இலிங்கத்தை அடைந்தார். மனத்தில் நன்னெறி மாறாத கௌதமர், சிவன் அருளியபடியே செய்தார். 66

மூலதீர்த் தத்தில் ஆடி முளரியோன் தண்ட தீர்த்தம்
சாலவே கடத்தில் ஏந்திச் சங்கரற் காட்ட வேண்டிக்
காலங்கள் தோறும் மேல்பால் கணபதி தனைஇ றைஞ்சி,
சீலமோ டனுக்கை பெற்றுச் சிவனுக்கற் புதம்அ தாக.

மூலதீர்த்தத்தில் குளித்து, பிரமதண்டதீர்த்தத்தைக் குடம் நிறைய நிரப்பிக்கொண்டுவந்து, சிவனுக்கு அபிஷேகம் செய்து, ஆறு காலங்களிலும் அற்புதமாகப் பூசை செய்தார். முன்னதாகக் கணபதியை வணங்கிச் சிவபூசைக்கு உத்தரவு பெறுவதை வழக்கமாகக் கொண்டார். 67

சந்தனம் சுகந்த மாலை சார்ந்தஆ பரணம் தூசு
கந்தமார் பள்ளித் தாமம் கனிவர்க்கம் பஞ்ச கவ்யம்
இந்துவார் அமுதம் பால்தேன் இனியநை வேத னங்கள்
முந்துதூ பாதி மற்றும் உதவிய உபசா ரத்தால்.

சந்தனம், மணம்பொருந்திய மாலை, பொன்அணிகள், ஆடை, மணமுள்ள தொங்குமாலை, பழவகைகள், ஆவின் ஐந்து, சந்திரனுடன் தோன்றிய தேவாமிர்தம், பால், தேன், நைவேத்தியம், தூபம் முதலியவற்றால், உபசாரங்கள் செய்து பூசித்தார். 68

பூசித்துப் பணிந்து போற்றிப் புடைவலங் கொண்டு புள்ளித்
தூசற்குப் பூசைக் கான துகள்இலாப் பணிகள் செய்யும்
மாசற்ற சீட ரோடும் ஆம்பிர வனத்தில் எய்தித்
தேசுற்ற யோகம் செய்து முனிவரன் திகழும் நாளில்,

பணிந்து, போற்றி, பிரதட்சணம் செய்தார். புலித் தோலாடை அணிந்த, சிவனுக்கு இப்படிப் பூசை செய்ய உதவும், குற்றமற்ற சீடர்களுடன் புளியந்தோப்புக்குச் சென்று, யோகம் செய்தார். 69

## வசந்தகால வருகை

மண்ணுளோர்க் கின்பம் நல்கும் வாவியும் சோலை மாடம்
தண்ணிலா முத்து மாதர் தனங்களும் சந்த்ர காந்தக்

கண்ணகல் இடமும் தென்றல் காலும்பன் னீரும் சாந்தும்
உண்ணயந் திடவே சேரக் கோடைவந் துற்ற தன்றே.

*குளம், சோலை, மாடங்கள், குளிர்ந்த நிலவு, பெண்களின் முலைகள், சந்திரகாந்தக் கற்கள் பதித்த இடமகன்ற மாளிகை கள், தென்றல் காற்று, பன்னீர், சந்தனக் குழம்பு இவையெல்லாம் மண்ணுலகத்தவர்களுக்கு இன்பம் தரக்கூடிய கோடைக்காலம் (இளவேனில் காலம் — கோடையின் முன் பகுதி) வந்தது.* 70

இளவேனலில் ஆகம்தனம் எய்தும்பொதி யசலத்
தளவார்படர் மருமாதவித் தண்பந்தரும் சார்ந்த
வளமார்இளந் தென்றல்செறி வனகாலம கிழ்ந்தே,
அளியார்தடம் காஎய்திஅப் பதியோர்உருப் பகலார்

*பொதிகைமலை, இளவேனிலின் தனம் ஆகும். முல்லை படர்ந்த குளிர்ந்த மணமான மாதவிப் பந்தலைச் சார்ந்த, வளமான தென்றல் காற்று செறிவாக வீசும்; வசந்த காலத்திற்கு மகிழ்ந்த, மலர்களில் வண்டு மொய்ப்பதான குளங்கள் சோலைகள் ஆகிய இடங்களுக்கு, ஊரிலுள்ளோர் சென்று, பொழுது போக்குவார்கள்.* 71

வண்ணமென் கோவில் மாதர் மைந்தரம் மனம்அள் ளூற,
அண்ணல்வேள் பகழி ஏவ அதிவிர கங்கள் மேவப்
பண்ணயம் தருவார் வீணை பயிலமாந் தளிர்கள் கோதிக்
கண்ணயந் தளிகள் பாடக் கோகிலம் கழறும் மாதோ.

*அழகிய நிறம்கொண்ட கோயில் பெண்கள் (தேவதாசி கள்), வலிமையான ஆண்களின் மனங்களில் ஆசை ஊறும் படியாகவும், அவர்கள்மேல் மன்மதன் அம்பு விடும்படியாகவும், விரகதாபங்கள் ஏற்படும்படியாகவும் வீணையில் இராக நயங்களை இசைப்பார்கள். மாமரம் இளம் தளிர்களை உண்டுபண்ணும்; வண்டுகள் தேன் உண்ண விரும்பிப்பாடும்; குயில்கள் கூவும்.* 72

மாதர்கள், துயிலைத் தென்கால் மறைத்தலை ஒழிக்கக் கொங்கை
தூதராய் மைந்தர் உள்ளம் சோர்தரக் கொண்டு சூதிற்
போதினில் உய்ப்ப அன்னார் புணையினால் சிக்க ஆர்ப்ப,
வாதையால் மீட்கல் காணார் தென்றலை வந்திப் பாரே.

*பெண்களின் முலைகளை ஆடை மூடிக் கொண்டிருந்தது. ஆடவரின் தூதராகச் சென்ற தென்றல், மூடியிருந்ததை நீக்கிவிட்டது. ஆண்கள் காமத்தால் தளர்ந்தார்கள். முலைகள் வட்டாடு கருவிகள் போல, சிறிது மலர்ந்த தாமரை*

மொட்டுகள் போல இருந்தன. பெண்கள் தென்றலால் நேர்ந்த நிலையால் கத்தினார்கள். வேதனை அடைந்த ஆண்கள், தென்றலை வாழ்த்தினார்கள். 73

வசந்தம் எய்திய முருக்கிதழ் புரசலர் மாவின்
அசைந்தி டும்தளிர் தழல்என அகலிட மயில்கள்
பசந்த காவினில் குயில்அழைத் திடக்கிளி பரிமேல்
இசைந்த காமனுக் கியற்றிய தீபம்போல் இசையும்.

பெரிய உலகில், மயில்களும், பசுஞ்சோலைக் குயில்களும் வசந்தத்தை அழைத்தன. கிளியாகிய குதிரையின்மேல் காமனும் அழைப்பை ஏற்று வந்தான். வசந்தத்துக்கும் காமனுக்கும், முள்முருக்க இதழ்களும், புரசமலர்களும், மாமரத்தில் அசையும் தளிர்களும் தீபம் ஏற்றியதுபோல அமைந்தன. 74

தேடியே கணவன் தன்னை விழைமினார் முகங்கள் செம்மல்
ஊடிட அலர்கள் தூற்றல் உலவையால் அலர்கள் தூற்றல்
கூடல்தேன் மலரிற் கூடல் கூட்டுதல் மதன்அம் பென்று,
நீடிய மலர்கள் பூத்து நிறைந்தன நெடிய சோலை.

மின்னல் போன்ற பெண்கள், கணவனைத் தேடி அழைத்து வந்து, தலைவன் சிறுகோபம் கொள்ளும்படி அவனைக் குறை கூறுவார்கள் (அலர் தூற்றுவார்கள்); வசந்தத்தில் செடிகளில் உள்ள மலர்கள், காற்றால் உதிரும் (அலர் தூற்றும்); ஊடலுக்குப் பிறகு கூடுதல் (புணர்தல்) நடக்கும். வசந்தத்தில், மலர்களின் தேன் கூடுதல் ஆகும். நெடிய சோலையில், 'மன்மதனின் அம்புகள் நாங்கள்' என்ற பெருமிதத்துடன், நிறைய மலர்கள் மலர்ந்தன. 75

ஆடவர் உற்ற இன்ப துன்பமும் அன்னார் கற்பின்
நீடிய மாதர் எய்தும் நெறிஎன நின்ற காவில்,
கோடையால் இலைஉ திர்ந்தே கொழுவிய கொடியும் அங்ஙன்
வாடிடத் தழைந்த போதில் வல்லியும் தழைந்த தன்றே.

"கற்பு மனைவியின் நெறியினாலேயே ஆண்கள் இன்பத் துன்பங்களை அடைகிறார்" என்பதைச் சோலைகள் விளக்கின. கோடையில் இலைகள் உதிர்ந்தன. (மனைவி ஊடல் கொள்ளும் போது, கணவன் துன்பம் அடைவது) பின்னர்ப் புதுத்தளிர்கள் கொடிகளில் தழைத்தன. (கூடல் காலத்தில் கணவன் இன்பம் அடைவது) 76

காந்தள்கை கழைகள் மென்தோள் கண்கரு விளம்சொல் கன்னல்
சேந்திதழ் இலவம் நாசி குமிழ்களம் சிறந்த பூகம்

கூந்தல்நீள் கூந்தல் கோங்கம் கொங்கையாம் குறங்கு வாழை
மாந்தளிர் மேனி மென்கா மாண்இழை மடவார் போலும்.

வசந்தகாலச் சோலை வனிதையைப் போன்றது. காந்தள் மலர் அவள் கை; மூங்கில் அவள் தோள்; கருவிளம்பூ அவள் கண்; கரும்பு அவளின் இனிப்பான பேச்சு; காட்டு இலவம்பூ அவளின் சிவப்பான உதடுகள்; குமிழம்பூ அவள் மூக்கு; பாக்கு மரம் அவள் வரிக்கழுத்து; பனைக்கூந்தல் அவள் கூந்தல்; கோங்க மொட்டு அவள் முலை; வாழை அவள் தொடை; மாந்தளிர் நிறம் அவளின் உடம்பின் நிறம். மொத்தத்தில், விலையுயர்ந்த அணிகள் அணிந்த பெண்ணைப் போன்றது வசந்தகாலச் சோலை.

*77*

இவ்வகைத் தாய சோலை எய்திடக் கோடை என்னும்
அவ்வியம் அகற்றச் செல்வார் அணிஅலங் காரத் தாலே,
செவ்விய திருஒப் பான தெரிவைய ருடன்செய் கோலம்,
கவ்விய பரித்தேர் ஊர்தி ஏறியும் காவிற் செல்வார்.

கோடையின் வெப்பத்தைத் தணித்துக் கொள்வதற்காக, இப்படிப்பட்ட சோலைகளுக்கு அவ்வூரார் செல்வார்கள். சிவந்த இலக்குமி போன்ற பெண்கள் அணி அலங்காரங்கள் செய்துகொண்டு தத்தம் கணவருடன், குதிரை பூட்டிய தேர்களிலும், மற்ற ஊர்திகளிலும் ஏறிச் சோலைகளுக்குச் செல்வார்கள்.

*78*

மாதவி சாதிமா மதுகம் மாதுளம்
தாதகி வேங்கைமந் தாரம் சந்துசூழ்
போதணி பாடலம் வகுளம் பூகம்நீள்
கோதைசேர் காவினில் குறுகல் மேயினார்.

மாதவிக் கொடிகள், சாதிமல்லிக் கொடிகள், மாமரங்கள், இருப்பை மரங்கள், மாதுளஞ் செடிகள், ஆத்தி மரங்கள், வேங்கை மரங்கள், மந்தாரச் செடிகள், சந்தன மரங்கள், பாதியாக மலரும் மொட்டுகள் கொண்ட பாதிரி மரங்கள், வகுள மரங்கள், பாக்கு மரங்கள், தாழைச் செடிகள் ஆகியவை கலந்து சோலையாகவும், காடாகவும் கணிக்கத்தக்க இடத்தில் மக்கள் கூடினார்கள்.

*79*

## வசந்தக் களிப்பு

இலைஉதிர் கொம்பில் எய்தி இரங்கியே பேடைப் புள்ளின்
மெலிவகன் றிடமேல் ஆலும் சேவலை வியந்துள் ஊறிக்
கலைவளர் மாத ரோடும் கலந்துறும் கணவர் தென்கால்
உலவிய நீழல் கூடி உவந்துகண் களிப்பர் மன்னோ.

வளர்ந்த கலைகளை அறிந்த மனைவியருடன் கணவன்மார்கள், தென்றல் உலாவும் மரநிழலில் அமர்ந்தார்கள். எதிரில் இலை உதிர்ந்த மரமிருந்தது. அங்கே பெண்பறவை அமர்ந்தது. அதன் மேல்கிளையில் சிறகை விரித்தபடி ஆண் பறவை அமர்ந்து, பெண்பறவை வெயிலில் வாடாமல் காத்தது. அந்தச் சேவலைத் தம்பதிகள், மகிழ்ச்சியுடன் பார்த்து இரசித்தார்கள். 80

நாறிய தளிரைக் கோதிக் கோகிலம் நவிற்றக் காமன்
மீறிய கன்னல் கோட்டித் தும்பிநாண் விரையப் பூட்டி,
ஊறிய விரகர் தங்கள் உள்ளம்ஊ டுருவ ஏவும்
தேறிய மலரை மூட்டிச் செயம்பெறும் தென்றல் காலம்.

மணமுள்ள தளிர்களைக் குயில்கள் கோதியவாறு பாடின. மன்மதன் கரும்புவில்லை வளைத்தான். விரைவாக வண்டுகளாகிய நாணினைப் பூட்டினான். மலர்க்கணைகளை (தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம்) விரகதாபம் அடைந்தவர்களின் உள்ளத்தில் ஊடுருவுமாறு ஏவினான். இப்படித் தென்றல்காலம் வெற்றிகரமாக நிகழ்ந்தது. 81

மங்கைய ருடன்க லந்து மகிழ்ந்துகை கோத்துக் கொங்கை
பங்கயம் என்ற போதில் பரிந்தும்அன் னவர்பால் ஊடிச்
செங்கயல் இனங்கள் சேப்பச் செய்பிழை பொறுப்பீர் என்று,
தங்கரம் கொண்டு மேனி தைவரத் தழுவிச் சார்வார்.

ஆண்கள் மங்கையருடன் கலந்தார்கள்; கைகோத்தார்கள்; 'முலைகள் தாமரை மொட்டுகள்' என்று புகழ்ந்தார்கள்; அதனால் பெண்கள் சிணுங்கினார்கள். செழுமையான கயல்மீன்கள் போன்ற கண்கள் சிவந்தன. 'பெண்களே மன்னிப்பீர்' என ஆடவர் கெஞ்சினர். ஆடவரின் கரங்களைப் பிடித்துத் தம் உடம்பெல்லாம் தடவுமாறு செய்து, பிறகு தழுவிக் கொண்டார்கள். 82

பிடிஎனச் செல்வர் மாதர் பின்தொடர் வேழம் போலக்
கடகளி றனையார் கூடிக் கலந்திட இந்த நீழல்
இடம்எனக் குயில்அ னார்கா எய்திய கனியை நோக்கக்
கொடிவளர் கனியை நோக்கும் குமரரை மருவல் செய்வார்.

'பிடி' எனப்படும் பெண்யானையைப் போலப் பெண்கள் செல்ல, வேழம் எனப்படும் ஆண்யானைகளைப் போல ஆண்கள் பின்தொடர்ந்து சென்று கூடினார்கள். இந்த மரநிழல், 'அதற்கு' ஏற்ற இடம் என ஆடவர் சொல்ல, குயில்போன்ற குரல்கொண்ட பெண்கள், மரத்தில்மேல் பழுத்த பழுத்தைப்

*பார்த்தார்கள். ஆண்கள் கொடியில் (இடையின்மேல்) வளர்ந்த கனிகளை (முலைகளைப்) பார்த்தார்கள். மரநிழலிலேயே தழுவிக்கொண்டார்கள்.* 83

நறுந்தண்கா அதனில் மைந்தர் நயந்தமென் கனியை நாட்ட,
மறிந்தசை மாதர்க் கீவர் வாசமெல் இலைஅ ருத்தி,
நிறந்தமா மலரை நோக்கி நிறைமலர்க் காவு லாவிச்
சிறந்தபண் தருக்கள் பாடிச் செருந்தியின் நீழல் சேர்வார்.

*மணமுள்ள குளிர்ந்த சோலையில், ஆடவர் விரும்பிப் பறித்த மென்மையான கனிகளை, புரண்டுபடுத்த பெண்களுக்கு ஊட்டுவார்கள். வாசனையான மெல்லிய இலைகளைப் பறித்து, ஆண்கள் சாப்பிடுவார்கள். நல்ல நிறமுள்ள பூக்களை வேடிக்கை பார்த்தபடியும், சோலையில் உலாவியபடியும், சிறந்த பண்ணுள்ள சுருதியும், சந்தமும் உள்ள பாடல்களைப் பாடியவாறும் மகிழ்ந்து, செருந்தி நிழலுக்கு வருவார்கள்.* 84

இந்த ணிந்த எழில்வளர் சோலைசூழ்
கந்த நன்மரு தம்கமழ் காஎலாம்
கொந்து சேர்குழல் வல்லியர் கொய்மலர்ச்
சந்த மாலிகை மோந்து தரிப்பரால்.

*சந்திரன் மேலே தங்கியுள்ள, பெருகிய அழகு வாய்ந்த, சோலைகள் சூழ்ந்த, மணம்கமழும் மருதமரங்கள் உள்ள காடுகளில், மலர்க்கொத்துகளை அணிந்த கூந்தலை உடைய பெண்கள் எல்லாம், பூக்களைக் கொய்வார்கள். நிறம் பொருந்திய அவற்றின் தேனை மோந்து பார்ப்பார்கள்; தலையில் சூடிக்கொள்வார்கள்.* 85

மின்ன னார்விரும் பும்மலர்க் கொம்பரை
மன்னர் கண்டு வளைத்த ளிக்கமணந்து,
அன்ன லார்களித் தைங்கணை யான்பொர
முன்னர் வந்திதழ் முத்தம் அருந்துவார்.

*மின்னல் போன்ற இளம்பெண்கள் மரக்கிளைகளில் பூத்திருக்கும் பூக்களை, ஆசையுடன் பார்ப்பார்கள். காதல் மன்னர்கள் அந்தக் கிளைகளை வளைத்து, பூங்கொத்துகளைப், பறித்து, காதலுடன் அவர்களிடம் கொடுப்பார்கள். ஐந்து கணை களை (தாமரைக்கணை, மாம்பூக்கணை, அசோக மலர்க்கணை, முல்லைமலர்க்கணை, நீலோற்பல மலர்க்கணை) விடும் மன்மதன் போரிடுவான். அதனால் அக்காதலர்கள், முத்தங் களைச் சுவைப்பார்கள்.* 86

சோலை வாணர்கள் சொல்வளம் காட்டலும்
காலும் தென்றலில் கம்பிதம் உற்றுவார்
சேலும் நீலமும் சேர்மதர்க் கண்ணினார்
மாலும் நேச மவுனரை மன்னுவார்.

சோலைவளங்களைக் காதல்கொண்ட ஆடவர்கள், சொல்லிக்காட்டிக்கொண்டு வரும்போது, தென்றல்காற்று குளிரேற்றும். சேல்மீன் போலவும், நீலமலர் போலவும் உள்ள பெரிய கண்களைக்கொண்ட காதலியர், தென்றலின் குளிரால் நேசமும் மயக்கமும் காரணமாக மௌனமாகிவிட்ட காதலரைக் கட்டிக்கொள்வார்கள். 87

குழைத்த கொம்பரின் மலர்கொய் யாதின் னொருகொம்பை
விழைந்து நோக்குவர் பிழையுண்டோ வெனவன் பன்திகைக்கக்
கழையார் வாகைபற்றிப் பின்னொரு காவினில் உள்ளதாம்
தழைத்த கொம்பரின் மலரினைத் தாஎனத் தளர்வார்.

தளிர்கள் நிறைந்த மரத்தில் ஏறிய காதலன், அங்குள்ள மலர் களைக் கொய்யும் முன்பாகக் காதலி, இன்னொரு மரத்தில் உள்ள பூக்களை ஆசையுடன் பார்ப்பாள். 'இதைப் பறிப்பது தவறா?' என்று, காதலன் கேட்பான்; 'வாகைக்கிளை வழியாகச் சென்று, மூங்கிலைப் பிடித்து, வளைத்து, அடுத்த காட்டிற்குத் தாவி, அங்கிருக்கும் செழிப்பான மரத்தின் பூக்களைக் கொய்துதா' என்று, இறைப்புடன் கத்திக் கூறுவார் காதலி. 88

கின்னரிக் குரல்வி ளைத்தும் கிளைக்குழ வீணை கேட்டும்
மன்னரும் மாதர் தாமும் மகிழ்ந்திட ஏவல் மாக்கள்
பன்மலர் நல்க வாங்கிப் பரிந்துமோந் தளக பாரம்
தன்இடை அணிந்து தோழி மாதர்க்கும் தழைய ஈவார்.

வீணையில் சட்சமத்தை மீட்டியும், வீணைநரம்புகளில் ஒலித்த குழைந்த ஓசையைக் கேட்டும் காதலரும், காதலியரும் மகிழ்ந்தார்கள். பேரிளம்பெண்கள், வேலைக்காரர்கள் கொய்து வந்த பலவிதமான பூக்களை வாங்கி, ஆசையுடன் மோந்து பார்த்து, கற்றையான மயிரிடையில் செறுகிக் கொண்டார்கள். அவர்கள் தத்தம் தோழிகளுக்கும் நிறையக் கொடுத்தார்கள். 89

வாழைமேல் தேன்கூ டென்பார் காணில்வாய் ஊறு வார்என்
தோழிஎன் கணவற் கன்றித் துய்த்திடல் பிறர்க்கெட்டாதென்(று)
ஏழையார் மொழிதல் நோக்கி இறையவர் மதன்அம் பாலே,
காழ்மணித் தனத்தா ரோடும் கலந்துகண் களிப்பர் மன்னோ.

*காமவயப்பட்ட பெண், 'தோழியே! வாழைக்குமேல் தேன்கூடு இருக்கிறது. அதைப் பார்ப்பவர்களுக்கு, வாயில் எச்சில் ஊறும். என் கணவனுக்குத் தவிர வேறுயாருக்கும் அந்தத் தேன்கூடு எட்டாது' என்று, சூட்சமமாகத் தன் தோழியிடம் பேசியதை, அவள் கணவன் கேட்டுவிட்டான். அப்போது மன்மதன் அம்புவிட்டான். ரேகை பொருந்திய மணிகள் அணிந்த முலையை உடையவளோடு அவன் புணர்ந்தான். தேன்கூட்டைப் பார்த்து மகிழ்ந்தாள்.* *90*

இலைஉதிர் மரத்தை நோக்கார் இயல்புளோர் இல்லோர் தம்மை,
நலம்உறப் பாரார் போலும் செல்வரை நயப்பர் அன்ன,
பலநற்காய் இலைபூ மொய்த்த பாதவந் தன்னைக் கூடிக்
கலமுற்று தனத்தார் கேள்வர் காணவே னலைக்க ளிப்பார்.

*'மக்கள் இலைஉதிர்ந்த மரத்தை யோசித்துப் பார்ப்பதில்லை; நல்ல குணங்களைக் கொண்டவர்களுக்கு, ஆதரவு கொடுப்பதில்லை; வறுமை உள்ளவர்களைக் கருணையுடன் பார்ப்பதில்லை; செல்வம் உள்ளவர்களையே விரும்புகிறார்கள் (செல்வம் — தனம்) அதைப்போலக் காட்டில், வேனில்காலத்தில் வரும் கணவன்மார்கள், அமுதகலசம் போன்ற பெருத்த தனத்தையே (முலைகளையே) விரும்பிக்களித்தார்கள்.* *91*

## நீர் விளையாட்டு

உளத்தினை முருக்கும் காலம் முருக்கலர் இவைஎன் றுன்னார்;
கிளைக்கனி வகையி னாலே கேள்வரைக் கடைக்க ணித்து,
விளைக்குமே சோகம் என்றுஅ சோகத்தை வியவார் மேவி,
வளைக்கையார் காவை நீங்கி வாவியில் சேரு வாரே.

*வளையல்போன்ற கையைக்கொண்ட பெண்கள் உள்ளத்தை முருக்கும் (கிலேசப்படவைக்கும்) காலம் என்பதால், முருக்கமலர்களை (முள்முருங்கைமலர்களை)ப் பார்க்கவில்லை. பழமரக் கிளையில் பழுத்த பழங்களால், கணவரை உபசரித்தார்கள். சோகம் விளைவிக்கும் என்பதால், அசோகமரங்களின் அழகை வியந்து பாராட்டாமல், சோலையை விட்டுநீங்கிக் குளங்களை அடைந்தார்கள்.* *92*

வாச மாமலர் வாவிநீர் படிந்திட வளையும்
நேச மாதர்கள் மவுணர்கள் நேர்ந்திட மொய்த்த,
பாசி மேல்அனம் குரண்டம்நீர்ப் பறவைகள் இரியல்
தூசி மேல்அவர் துரந்திட ஓடல்ஒத் துளவே.

வாசனை பொருந்திய பெரிய மலர்கள் உள்ள குளத்து நீரில் விளையாட வட்டமிட்டு வந்தபெண்கள், கணவர்தம் கைகளைப் பிடித்துக்கொண்டு மொய்த்தார்கள். அப்பொழுது பாசிகளின்மேல் இருந்த அன்னம், கொக்கு முதலிய நீர்ப் பறவைகள் பறந்தன. அக்காட்சி, பெண்கள் மேலாடைகளைக் குளிப்பதற்காகக் கழற்றியதைப் பார்க்கக் கூடாது என, அவை ஓடியன போன்றிருந்தது. 93

பகைஞர் மேலிடப் புறகிடா வீரர்போல் பயத்தால்
துகைஞர் மெய்நடுங் குவதெனச் சுழல்மரை நீலம்
தகைந்து மேவலர் சரத்தினால் கேடகத் தடங்கும்
வகைஞர் போலவன் கைதையுள் வாளைமொய்ப் பனவே.

பெண்களின் முகங்கள் தாமரைகள்; கண்கள் நீலமலர்கள். எனவே, தாமரைக்கும் நீலத்துக்கும் பெண்கள் பகை. பகைவர் கள் எதிர்த்து நெருங்கி வந்தால், புறமுதுகுகாட்டா வீரர்கள், பயத்தால் நடுங்குவார்கள். அதைப்போல, இந்தப் பெண்கள் குளத்தில் இறங்கியதும், தாமரையும் நீலமும் ஆடி நடுங்கின. பெண்களின் கண்கள் வாளை மீன் போன்றவை. ஆக மீன்களும் பெண்களுக்குப் பகையே. பகைவர்கள் அம்பெய்யும்போது பயப்படும் வீரர்கள், கேடயத்தில் ஒளிவார்கள். அதைப்போல மீன்கள் துள்ளிப் பாய்ந்து, தாழைகளில் விழுந்து ஒளிந்தன. 94

நேரிசை வண்டு மொய்த்த அரவிந்தம் நீலம் ஆம்பல்
வார்கலை என்னும் போலே வளைந்தலம் பிடுநீர் வாவி
காரிளஞ் சோலை மொய்த்த கரைஉலாம் கவின்கொள் பொய்கை
நாரியர் கணவர் கூடி நல்விளை யாடல் செய்வார்.

நெருக்கமாக வளர்ந்துள்ள செடிகளால், இருட்டாக உள்ள சோலைகள், சுற்றிலும் மொய்த்துள்ள கரைகளைக் கொண்ட பெருமை பொருந்திய குளம். அக்குளத்தில், சுருதி பிசகா இசை பாடும் வண்டுகள் மொய்க்கும் தாமரை, நீலோற்பலம், ஆம்பல் என்னும் மலர்களே ஆடைகள் ஆகுமாறு பெண்கள் புடைவைகள் மிதக்கக் கணவருடன் குளித்தார்கள். அதனால் நீர் சுழன்றது. அலைகள் எழும்பின. 95

வாவியில் அடைந்த மாதர் தங்களில் மகிழ்ந்த ளாவி,
மேவுறும் விரகம் பொங்க வேணிழை சிவிறி வீசிக்
காவிஅம் கண்கள் சேப்பக் கலந்தவர் ஒத்து நின்றே,
ஆவியின் அரிய கேள்வர்க் ககம்நெக ஆடல் செய்வார்.

குளத்தில் அடைந்த பெண்கள், தங்களுக்குள் மகிழ்ந்து அளவளாவினர். விரகம் அதிகமாகிப் பொங்க, உடல் சூடேறியது. அவர்களின் நீரில் மிதந்து விரிந்திருந்த சடை, கவரி வீசிச் சூட்டைத் தணிப்பதுபோல் காட்சி தந்தது. நீலமலர் போன்ற கண்கள், அதிக நேரம் தண்ணீரில் இருந்ததால், சிவந்தன. அதிக நேரம் புணர்ச்சி செய்தால் கண் சிவப்பது போலக் கண்கள் சிவந்தன. உயிரைக் காட்டிலும் சிறந்த தத்தம் கணவன்மார்கள் பார்க்கும்படியாக மனம் மகிழும் படியாக, அவர்கள் நீரிலேயே ஆடிக்காட்டினார்கள். 96

மாணிழை மடநல் லாரும் மவுணரும் வரிசை யாக
வேணிகை சிவிறி வீசி மெய்புழுக் குற்ற தன்மை,
கோணிலை திரியா ஏல்வை மின்னுடன் கொண்மூ ஓங்கிப்
பாணமும் சிலையும் வீசும் சாரலைப் பகர லாமே.

அழகிய அணிகளை உடைய பெண்களின் கணவர்கள் வரிசையாக நின்று கூந்தலைப் புலர்த்தியது, மனைவிக்குக் கணவன் விசிறி வீசுவது போல் இருந்தது. உடம்பு புழுக்கம் அடைந்த தன்மை கோள் நிலை (கோடை) மாறா நிலையில், பெண்கள் மின்னலாக, கூந்தல் மேகமாக அமைந்து, கூந்தல் விசிறிக் காற்று வீசியமை, ஒரு சாரல் காலம் போலத் தோற்றம் கொடுத்தது. 97

வதனமும் கமலமும் வாயும் ஆம்பலும்
சிதர்விழி நீலமும் செப்பில் ஒன்றின
விதம்அறி யாதுதேன் வீழ்ந்து மொய்ப்பன
மதிமுக வனிதையர் மேய வாவியே.

மதிமுகமங்கையர் அடைந்த குளத்தில், முகம் தாமரையை ஒத்த விதமும், வாய் ஆம்பலை ஒத்த விதமும், செவ்விதழ் பரந்த விழி நீலமலரை ஒத்த விதமும் அறியாமல், வண்டுகள் தடுமாறிப் போய் முகத்திலும், வாயிலும் விழியிலும் மொய்த்தன. 98

அரிசனம் சாந்தமை அளிகொள் காசறை
வரிதரு மல்லிகை மாலை மற்றெலாம்
விரிதிரை வாவிகட் கீந்து மின்அனார்
உரியவர் கைபிடித் துதகம் நீந்துவார்.

மின்னலைப்போன்ற பெண்கள், தம்உடலில் பூசியிருந்த மஞ்சள், சந்தனம், குளிர்ந்த கஸ்தூரி, வண்டுகள் வாய்திறக்க வைத்த முல்லைகளாலாகிய மாலைகள் முதலியவற்றையெல்லாம் குளத்திற்குக் கொடுத்துவிட்டு, உரிமையாளனைக் கைப்பிடித்தபடி நீச்சலடித்தார்கள். 99

கரையினில் ஏறிமெய் புலர்த்திக் கண்கவர்
அரவுரிப் பண்பினை அனைய வைவனத்
தரையினில் அரியதூ சணிவர் தன்கலை
நிரைதரப் பூட்டுவார் வஞ்சி நீவுவார்.

*பின்னர்க் கரையில் ஏறிய பெண்கள், சோலைக்குள் சென்று தரைதெரியும் பகுதியில் உடம்பைப் புலர்த்திக் கொண்டு, பாம்பின் சட்டைபோன்ற மென்மையான துணிகளை உடுத்திக் கொள்வார்கள். தங்களின் நகைகளை நிரம்ப அணிந்து கொள்வார்கள்.* 100

## கரையேறிய பெண்களும் கரைமீறிய காமமும்

அழகுறத் தலைப்பணி ஆற்றி மல்லிகை
குழலினுக் கணிந்துதம் கொழுநன் மெய்யெலாம்
புளகம்உற் றிடத்தன பாரம் போர்த்திடக்
களபமும் பூசுவார் கலன்கள் பூண்பரால்.

*அழகாகத் தலையைவாரிப் பின்னிக்கொண்டார்கள். மல்லிகைச் சரத்தைக் கூந்தலுக்கு அணிந்துகொண்டார்கள். கணவர் உடம்பெல்லாம் புளகாங்கிதம் அடையும் கனமான முலைகளை மூடுவதற்கு முன்பாக, அவற்றில் சந்தனக் குழம்பைப் பூசி, அவற்றிற்குரிய அணிகளை அணிந்து, பிறகு போர்த்தி மூடினார்கள்.* 101

அரைதரு கலைநெகிழ்த் தணிவர் அன்பர்மெய்
விரகமுற் றிடத்தனம் காட்டி வேலைநேர்
விரிவிழித் தொழிலுடன் மவுணர்க் கூடியே
உரைசிறந் திடமகிழ் வூட்டி ஒல்குவார்.

*அடிக்கடி இடுப்புவரை மேலாடையை நெகிழ்த்தி, முலைகளைக் காட்டி, அன்பரின் உடலெல்லாம் விரகதாபம் அடையுமாறு செய்வார்கள். செவ்வரி பரந்த விழிகளின் ஜாடையால், கணவரை அருகில் வரச்செய்து, கட்டித் தழுவிக் கொள்வார்கள். அப்போது இன்பம்தூண்டும் வார்த்தைகளைப் பேசி நெளிவார்கள்.* 102

## வேசியர் செயல்கள்

கரையினில் அம்மனை கழங்கு பந்துகை
விரைதரு காந்தளால் விளைத்து விந்தையாய்
அருவிஒத் திடுமணி ஊசல் ஆடியே
மருவிய மாதர்கள் நறவும் மாந்துவார்.

குளக்கரையில் மாலையில் வந்த வேசியர்கள், அம்மானை, கழங்கு, பந்துகளைக் காந்தள் மலர்போன்ற கைகளால் ஆடினார்கள். அருவி விழுவதுபோல, மரங்களில் கட்டிய மணிவூசல்களில் ஆடினார்கள். மதுக்குடித்தார்கள். 103

பாசனத் தடல்வாள் ஊன்றும் தன்மைபோல் பருக வாக்கும்
வாசமுற் றியதேன் கொள்ள வாய்ப்பெய்தந் நிழலில் தோன்றும்
காசறைக் குழலும் கண்ணும் முகமும்நாக் கவரக் கண்டிவ்
வேசையர் யார்என் றுன்னி மின்அனார் வெகுண்டு நோக்கா.

நெருப்பிலே, போர்செய்யும் வாளை ஊன்றினால் எப்படியோ, அப்படிப் பருக ஊற்றிய மது சிவப்பாக இருந்தது. அதை வாயில் ஊற்றிக்கொண்டார்கள். கஸ்தூரி பூசிய கூந்தல் அவிழ்ந்தது. முகம் மாறியது. நாக்குப் பிறழ்ந்தது. அவர்களைக் கண்ட கணவருடன் வந்த பெண்கள், 'இந்த வேசியர்கள் யார்?' என்று நினைத்துக் கோபத்துடன் பார்த்தார்கள். 104

மிச்சில்என் றகல்வார் ஊற்றும் வேறுகா ணாதொ ழிக்கும்
இச்சிறி யவள்எங் கென்னாக் காண்கிலா தின்னும் நோக்க,
வச்சுவாய் அருந்தும் போதில் வதனவான் மதியும் தோன்ற,
இச்சசி யினைத்தா என்ன அன்பனை இரப்பர் பின்னும்.

'பலரின் எச்சில் பட்டவர்கள்' என்று இகழ்ந்தார்கள். அதிகம் இருந்ததால், வேசியருக்கு ஆதரவு இல்லை. கணவருடன் வந்த பெண்கள், வேறிடத்துக்குப் போய்விட்டார்கள். 'என்னை இகழ்ந்த அந்தச் சிறுமி விவரம் அறியாதவள் எங்கே?' என்று, பல இடங்களில் தேடும்போது, கணவருடன் வந்தவர்கள், வேறு இடத்தில் வாயோடு வாயைப் பொருத்தி, காமமுத்தம் அருந்திக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அந்நேரம் முகம்போன்ற சந்திரன் தோன்றினான். கணவரை மனைவியர், 'இந்தச் சந்திரனைப் பிடித்துத்தா' என்று கேட்டார்கள். 105

இன்னமும் மதிநீ தேறல் எய்துபா சனத்தில் எய்தில்,
மன்னனெற் பிரிந்த போது வருத்துநீ அல்லை யோமான்
தன்னிடத் திருத்து நாதன் தலைக்கணி என்றும் பாரேன்
கொன்றிடல் செய்வேன் வாவா எனக்குறித் துரைப்பர் மாதோ.

அப்போது வேசியர், 'சந்திரனே! நீ எங்கள் மதுக் கிண்ணத்தில் வந்துவிட்டால், அந்த அவள் கணவன் என்னிடத்தில் வரும் போது, அவளை மிகவும் துன்புறுத்து வாயல்லவா?' முயற்கறை என்னும் மானை உன்னிடத்தில் கொண்டு, அந்த மானிடத்தில் போனால், 'சிவன் தலையில் இருப்பவன் நீ என்றுகூடப்

பார்க்கமாட்டேன்; கொன்றுவிடுவேன்' என்று, வேசியர் அப்பெண்களைக் குத்திக்காட்டிப் பேசினார்கள். 106

ஏடிவா தோழி என்னைத் தேடித்தா என்னைத் தேடும்
ஆடவன் தன்னைத் தேடி அளித்திஎன் றறைவர் அன்பால்
பாடியே மகிழ்வர் வண்டைப் பதுமத்தின் கையால் ஒச்ச
நாடியே கழலிற் பாயப் பார்த்தவர் நலிகு வாரே.

ஏடி! தோழி! என்னைத்தேடு. என்னைத் தேடும் ஆடவன் தன்னைத் தேடி என்னிடம் கொடு! என்று, சவால்விட்டுப் பேசினார்கள். அவன்மேல் அன்பால் பாடி மகிழ்ந்தாள். அப்போது முகத்தில் மொய்த்த வண்டை (கண்களை)க் கையால் (இமைகளாகிய கைகளால்) ஒச்சினார்கள் (கண்ணடித்தார்கள்). கணவர்கள் அவர்களிடம் காற்றைப் போலப் பாய்ந்தார்கள். பெண்கள் நலிந்தார்கள். 107

இளையையாய் ஏடி நானே அல்லனோ என்னைத் தேடி,
விளைவுறும் அன்பன் தன்னை வெறுத்திலேன் எனவி ழித்தே,
அளவளாய் அன்பால் கூடி ஆனனம் இணைத்தே அங்ஙன்
வளமுறு மதுவை நோக்க யாரவள் உடன்எம் மன்னன்

'காம விவரம் அறியா இளைய பெண்களே! ஏடீ! நான் நான்தான். என்னைத்தேடி, என்னால் எவ்வளவு சரியான சுகம் கிடைக்கும் என்ற விளைவை அறிந்து வந்த உன் அன்பனை, நான் வெறுத்துத் திருப்பியனுப்ப மாட்டேன்.' என்று, வேசி சொல்லி, விழிப்புணர்ச்சியுடன் சூசக வார்த்தைகளால் அவனிடம் பேசினாள். அன்பால் தழுவிக் கொண்டாள். முகத்தோடு முகம் சேர்த்தாள். அடுத்த கட்டச் செயலுக்காக மதுவை நோக்கினாள். 108

பொருந்துவ கெட்டேன் என்னப் பூசலால் ஊடி நீடி,
விருந்தினர் ஊற்றம் காணாள் விரைநற வுணும யக்கால்,
பருந்தெனச் சுழல்வர் வேர்ப்பர் பாகர்மேல் வீழ்வர் பண்பில்
கருந்தடம் கண்கள் சேப்பக் கலந்தவர்க் காட்டுங் கள்ஊண்.

மனைவிக்குக் கோபம் வந்தது. 'யாரடி? என் மன்னனுடன் புணர்வது? கெட்டேன்.' என்று, சண்டையிட்டாள். கணவனுடன் ஊடினாள். புதியவனிடம் உண்மையான ஊற்றம் (அன்பு) இல்லாத வேசி, 'நிறையக் குடித்ததால் இப்படி விபரீதம் நடந்தது' எனக்கூறி, பருந்தைப்போல் சுழன்று பறந்தாள். பயத்தால் வேர்த்தாள். தேர் ஏறினாள். பண்பில்லாமல் தடுமாறிப் பாகன்மேல் வீழ்ந்தாள். மிகவும் புணர்ச்சி செய்தவர்கள் போல, அவள் கண்கள் சிவந்தன. 109

மதுக்களிப் பகன்று தென்றல் மருவிய சந்த்ர காந்தப்
புதுப்புனல் பொழிய வானம் பொருந்துதண் சுடர்மேல் தோன்றப்
பதிக்கணில் உலவி வீணை பயின்றிடப் பந்தர் மேவித்
ததிப்பதம் அருந்திப் பாகம் சார்ந்தசீ தளநீர் மாந்தி,

*கள் உண்டு, ஊன்தின்ற போதை அகன்றது. வேசியர்கள், ஊருக்குள் உலாவினார்கள். தென்றல் வீசுகிற சந்திரகாந்தப் புது வெள்ளம் பரவிய, பொருத்தமான மதி, மேலே தோன்ற வீட்டின் மேல்மாடத்தில் முத்துப்பந்தலின் கீழே, வீணைவாசிப்பதற்குச் சென்றார்கள். அங்கேயே தயிர்ச்சோறு சாப்பிட்டார்கள். பக்குவமான இளநீர் குடித்தார்கள்.* 110

சந்தனக் களபம் பூசித் தைவரு தென்றல் காலக்
கொந்தலர் சுகந்தம் வேய்ந்து குங்குமம் பன்னீர் வீசி,
ஐந்தெனும் விடயம் நீக்கும் அவர்களும் மயங்க அன்பால்,
மைந்தர்க ளுடனே மாதர் மகிழ்ந்திடும் வசந்த காலம்.

*சந்தனம், மணச்சாந்து பூசிக்கொண்டார்கள். பூங்கொத்துகளைத் தடவிக்கொடுக்கும் தென்றல் வீசியது. குங்குமம் வைத்துக் கொண்டார்கள். ஆடவர் மயங்கப் பன்னீர் தெளித்தார்கள். ஐந்து விஷயங்களை நீக்கினார்கள். அவர்களும் மகிழ்ந்தார்கள். இப்படிப்பட்டதே வசந்தகாலம்.* 111

## பிரபாவதிமேல் காதல்

இவ்வகை வசந்த காலத் தினியசிந் துரத்தில் எய்தி,
அவ்வியம் அகன்ற சிந்தைக் கவுதமன் அரிய யோக
நவ்விசேர் கரனை உள்கிச் செய்துநா யகன்பூ சைக்குச்
சைவவே டத்து வால சதானந்தர் தவிசுக் கேற்ப,

*இப்படிப்பட்ட வசந்த காலத்தில், மயக்கமற்ற மனத்தை உடைய கௌதமர், அரிய யோகத்தில் மான்கொண்ட கரத்தை உடைய சிவனை நினைத்து, நாயகனைப் பூசிக்கத் தேவையான பொருள்களைத் திரட்டச் சிறந்த யானை மேல் ஏறிச் சிவ வேடத்துடன் வாலசதானந்தன் சோலைக்கு வந்தான்.* 112

பணிசெயும் போதில் ஓர்நாள் பன்மலர் வனத்தில் எய்தி,
நணியபூக் கொய்யும் போதில் நலந்திகழ் ஏக யோகத்
தணிவுடை உளத்தர் ஈன்ற தையலாள் பிரபா பத்தி
மணிமுகத் தனத்தாள் தோழி மாருடன் வனத்தில் வந்தாள்.

*பிறியமகரின் புதல்வன் என்ற தகுதிக்கு ஏற்ப, ஒரு நிகழ்ச்சி நடந்தது. வாலசதானந்தன் பழங்கள், மலர்களைக்*

கொய்து பணி செய்யும்போது, ஏக யோகம் (ததேகத்தியானம்) தணிவான மனம்கொண்ட கேதகரிஷி ஈன்ற பிரபாவதி என்பவள் அங்கு வந்தாள். கருமணிகள் இரண்டு மேலே பதித்ததைப்போன்ற காம்புகள் உள்ள முலைகளைக் கொண்ட அவள், தோழிமாருடன் வனத்திற்கு வந்தாள். 113

வந்துபூக் கொய்து கானில் வசந்தவீ ணைகண் டாத்தி
இந்தெனும் முகத்தார் பாட இளையவர் தளவம் கோத்துத்
தந்திட வாங்கி மோந்து சார்ந்தவர்க் குதவித் தாழ்ந்தே,
கொந்தளம் அதனில் சூடிக் கொம்பனார் விளையாட் டெய்தி,

வந்தவள் பூக்கொய்தாள். வசந்த மண்டபத்தில் இருந்த வீணையை மீட்டினாள். சந்திரமுகம் கொண்ட தோழியர் பாட்டுப் பாடினர். இளைய தோழிகள், முல்லை மலர்களைக் கோத்துக் கொடுக்க, மோந்து பார்த்துப் பங்கிட்டு, எல்லாத் தோழிகளுக்கும் கொடுத்தாள். கூந்தலில் யாவரும் சூடிக்கொண்டனர். சோலையின் பல பக்கங்களில், தோழிகள் விளையாடப் போனார்கள். 114

வரும்பொழு தகலிகை மைந்தன் மாதினை
ஒருங்குற நோக்கியே உள்ம யங்கியே
கருந்தடங் கண்ணியை எய்திக் காமம்உற்று
அருந்தினன் கண்களால் அளவில் ஆசையால்.

அந்த நேரத்தில் அகலிகையால் வளர்க்கப்பட்ட வலியவனாகிய வாலசதானந்தன், பிரபாவதியை ஒன்று சேரும் விருப்புடன் பார்த்தான். உள்ளத்தால் மயங்கினான். கரிய பெரிய கண்களை உடைய பிரபாவதியை, நெருங்கிச் சென்றான். காமம் அடைந்து, அளவில்லாத ஆசைகொண்டு, கண்களால் தின்றான். 115

நின்றிடும் மைந்தனை நெளிகொள் கூந்தலும்
துன்றிய விரகத்தால் சோகம் முற்றியே,
மின்திகழ் வளைஉக வேனி லான்பொர
மன்றல்செய் திடவுனும் மையல்பொ றாமலே,

எதிரில் நின்ற பலசாலியை, நெளிவுகள் கொண்ட கூந்தலை உடைய பிரபாவதி, அமுக்கிய விரகத்தால் சோகம் முற்றிப் பார்த்தாள். மினுமினுக்கும் அவள் வளையல்கள், காம இணைப்பால் கழன்றன. வேனில் காலத்துக்குரிய மன்மதன், போர்தொடுத்தான். கந்தர்வமணம் செய்துகொண்டார்கள். அப்பொழுதும் மையல் அடங்கவில்லை. 116

மாதவிச் சூழலும் வல்லி மல்லிகைப்
போதுலாம் பந்தரும் பொருந்தி மேவிய
சீதள நீழலில் சேர்ந்து புல்லியே,
ஆதர வுடன்அவண் அகன்று போயினார்.

*மாதவிச்செடிகள் அடர்ந்த, வல்லிக்கொடியும், மல்லிகையும் படர்ந்த பந்தருக்குக் கீழே போனார்கள். பொருத்தமான குளிர்ந்த நிழலில் இருவரும் சேர்ந்து புணர்ச்சி செய்தார்கள். அந்தப் புணர்ச்சி, ஒருவருக்கு ஒருவர் நல்ல ஒத்துழைப்புடன் இருந்தது. பிறகு அங்கிருந்து பிரிந்தார்கள்.* *117*

மனத்தினில் பயத்துடன் மாதை நீங்கியே,
திதிப்படி நியதிபோல் சிறுவன் தண்டலை
வனத்துள பலங்களும் குசையும் மாமலர்
இனத்துடன் கூடையில் எடுத்துச் சென்றனன்.

*வாலசதானந்தன் மனத்தில் பயம்கொண்டான். மாதைப் புணர்ந்ததற்கும், பூசைப்பொருள்கள் சேகரிக்கும் நேரத்தில் இப்படிப் புணர்ச்சி செய்தோமே என்பதற்கும் அவன் பயந்தான். தினப்படி செய்யும் செயல்போலச் சோலைவனத்தில் பழங்களையும், தருப்பைகளையும், மலர்ந்த பூக்களையும், இவற்றின் இனமான சிலகாய்கள், வில்வம் முதலானவற்றையும், கூடையில் வைத்து எடுத்துச் சென்றான்.* *118*

சாலையில் எய்தினான் தவம்இ யற்றிய
சீலமா தவனிடம் சேர்ந்த போதினில்,
காலம்மூன் றையும்உளம் கருதும் கோதமன்
வாலச தானந்தை மதித்துக் கூறுவான்.

*வேள்விச்சாலையை அடைந்தான்; ஒழுக்கம் நிறைந்த கௌதமரை நெருங்கினான். முக்காலமும் உணர்ந்த கௌதமர், வாலசதானந்தத்தின் செயலைக் கணிப்புச்செய்து கூறினார்.* *119*

## கௌதமரின் கோபமும் சாபமும்

வனத்திடை வேட்கை உற்று மாதினைக் கலந்து மாய
வினைத்தொழிற் குரியை நீயும் கொடுவந்த வேண்டும் எல்லாம்
அனைத்தையும் களைக மிச்சில் ஆனதென் றறைந்து மிக்க
சினத்துடன் எழுந்து கண்தீச் சிதறிடச் சீறிச் சொல்வான்.

*'யாக, பூசைகளுக்குப் பொருள் கொண்டுவரச் சென்ற நீ, வேட்கையால் பெண்ணைக் கலவிசெய்து, அப்படியே*

வேண்டும்பொருள்களைக் கொண்டுவந்துள்ளாய். அனைத்தையும் எடு. எல்லாம் எச்சில் (அபவித்ரம்) ஆனவை' என்று கூறி, மிக்க கோபத்துடன் எழுந்து, கண்களில் நெருப்புச் சிதறச் சீறினார். 120

கேகத மாமுனிவன் ஈன்றபிரபா பதிபால்
சோகம்உறு நீயும்அவள் சோர்வினால் உனைமருவ,
ஆகஇரு வரும்பிழைக்கும் காமம்எனும் அவத்தையினால்
தாகம்உற வேஅலகை ஆகஎனச் சபித்தனனால்.

'நீ, கேகத முனிவனின் மகள் பிரபாவதியிடம் சோகம் (புணர்ச்சி முடிவில் வரும் தளர்ச்சி) அடைந்தாய். அவள் மனத்தின் பலஹீனத்தால் உன்னைத் தழுவினாள். ஆக இருவரும் காம அவத்தையினால் பிழை செய்தீர்கள். அதே காம அவத்தையில் அலையும் பேய்களாக ஆகவும்' எனக் கௌதமர் சாபமிட்டார். 121

அப்பொழுது புகல்காணா தழுங்கிஅடி வீழ்கின்ற
விப்பிரனை மடவரலை வெகுளிதீர்ந் தரியமுனி
செப்புவான் முகம்நோக்கித் தென்பொதிய முனியாலே,
இப்பிழைநீங் கிடும்அஞ்சேல் என்றருள இடர்ஒழிவார்.

வேறுவழியற்ற வாலசதானந்தன் அழுதான். (காட்டிலிருந்து அவனைப் பின்தொடர்ந்து வந்த) பிரபாவதியும் அழுதாள். இருவரும் கௌசிகனின் காலில் விழுந்தார்கள். கௌசிகனின் கோபம் தீர்ந்தது. அவர்களின் முகம் நோக்கி, 'தென்பொதிகை முனிவர் அகத்தியரால் சாபவிமோசனம் கிடைக்கும்' என்றார். அவர்களின் மனத்துன்பம் நீங்கியது. 122

சபித்தமுனி சாபத்தால் பேயுருவே உதித்திடத் தணந்து,
கவித்தபுதற் காடெலாம் கரைந்துகரைந் துலவைஇடைத்
துவைத்துனை பஞ்சுபோல் சுழன்றுவினை யின்துடக்கால்,
அவித்தயாக் கையர்இவர்கள் அலம்வரும்அந் நாள்தன்னில்.

சாபம், அனுபவித்தேயாக வேண்டும். ஆகையால், பேயுரு எடுத்தார்கள். மூடிய புதர்கள், காடுகள் ஆகிய இடங்களெல்லாம் தங்கினார்கள். கூவிக் கூவிப் பேயோசை எழுப்பினார்கள். கட்டையால் அடிக்கப்பட்டுப் பறக்கும் பஞ்சுபோலச் சுழன்றார்கள். வினையால் நல்ல உடலை இழந்த இருவரும் அலைந்தார்கள். 123

## நாரதர் – அகத்தியர் சந்திப்பு

நாரதன் எழுந்து பொதிகையில் அடைந்து,
நலந்திகழ் குறுமுனி தன்னை
வாரமாய்ப் பணிந்து கவுதமர் பூசை
மருநா யகர்க்கியற் றியதோர்
சீரையும் புகழ்ந்து தாரவன் கேதக
சுதமுனி ஈன்றசெந் திருவாம்
தார்கெழு கூந்தல் தன்னுடன் வால
சதானந்தர் சாபகா ரணத்தால்,

*தவ அழகுடன் விளங்கும் குறுமுனியை அன்பு உரிமையுடன், பொதிகைக்கு வந்து நாரதர் வணங்கினார். அப்போது மருத நாயகருக்குத் திருப்புடைமருதூரில் கௌதமன் செய்த பூசையின் சிறப்பையும் புகழ்ந்து, மாலையணிந்த கேதகன் என்ற குளிர்ந்த மொழி பேசும் முனிவர் பெற்ற திருமகள் போன்றவளும், கருங்கூந்தல் அழகியும் ஆகிய பிரபாவதியுடன் வாலசதானந்தனும், கௌதமர் சாபத்தால் பேயானார்கள் என்றார்.* 124

அலகைஆ யினர்என் றறைந்தநா ரதனோ(டு),
ஆரம்மே வியமலை அன்பன்
பலகலை உணர்ந்தோர் தம்மொடும் போந்து,
மருதமா பதியில்வந் தெய்தி,
மலம்அகற் றியதீர்த் தம்குடைந் தன்பால்
வலங்கொடு மந்திரம் அடைந்து,
கலைமதி வேணிக் கடவுளைப் போற்றிக்
கவுதமர் தம்மையும் கலந்தே,

*ஆத்திமரங்கள் நிறைந்த பொதிகைமலையின் முனிவர் நாரதருடனும், பல ஞானக்கலைகளை உணர்ந்த துறவிகளோடும் திருப்புடைமருதூருக்கு வந்தார். ஆணவ, கன்ம, மாயைகளை நீக்கும் தீர்த்தங்களில் குளித்தனர். அன்புடன் வலம்வந்து, கோயிலுக்குள் புகுந்தனர். முயற்கறைஉடைய சந்திரனைத் தலையில் சூடிய கடவுளைப் போற்றினர்.* 125

அளவளாய்ப் போற்றி முத்திமண் டபத்தில்
அருச்சுன நீழலில் அமர்ந்தே,
இளமதி முடியில் இழிந்தவன் னியின்நீர்
இருங்கரை மேவிய இயல்பாம்

வளம்உலா வியமெய்த் தலவளம் பேசி,
மாண்டவி யாசமா முனியும்
விளைவினை முனியும் சுதரும்இங் கலகை
ஆயினோர் வினைஅகன் றிடவே.

*அங்கிருந்த கௌதமமுனிவரைக் கண்டு அளவளாவினர். முத்திமண்டபத்தில் அனைவரும் கூடினார்கள். அது மருதமர நிழலில் உள்ள இடம். இளம்பிறையைச் சூடிய தலையிலிருந்து வந்த கங்கை தாமிரபரணியாகி, வளம் உலாவும் பல தலங் களைச் சூழ்ந்துவரும் சிறப்புகளை எல்லாம் பேசினார்கள். மாட்சிமையுள்ள வியாசர் என்ற மகாமுனிவரும், எது, எப்பொழுது நடக்கும் என அறிவதில் வல்லவராகிய சுதரும், பேயாகிப்போன இருவரின் வினை நீக்குவதைப் பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தார்கள். 126*

## சித்திரகேது வரலாறு

கருதிடும் பொழுதில் சுருள்மயிர்ப் பகுவாய்க்
கறைஉரு அரக்கியின் வடிவாய்
உரும்என வெடித்த உரையொடும் உரோமம்
உலவிய உளியம்அ தென்ன
வரைஎன ஓங்கி வனத்திடை உயிரை
வாயிடைப் பருகிநெட் டுயிர்ப்போ(டு),
எரிதவழ் சூர நகையுடன் விரைவால்
எய்தினாள் இங்ஙனம் இருந்தோர்,

*அப்பொழுது சுருண்டமயிர், பிளந்தவாய், கருத்த உருவம் கொண்ட அரக்கிவடிவில் ஒருத்தி அங்குவந்தாள். அவள் பேச்சு இடிபோல இருந்தது; வெடித்தது. கரடிபோல உடம்பெல் லாம் மயிர். மலைபோன்ற உருவம். காட்டில் விலங்கு களின் உயிர்குடித்துக் குருதிபருகிப் பெருமூச்சுவிட்டவாறு நெருப்புக்கக்கும் அசுரச் சிரிப்புடன் விரைந்து வந்தாள். 127*

யாவரும் வெருவி இதுஎன்கொல் என்னா
ஏகமா சுதமுனி இயம்பும்
பாவைதான் இவள்இ ராட்சதை முந்தைப்
பாவத்தின் வலியினால் பட்டுச்
சாவதா னதுமே அங்கிரா முனிவன்
சாபத்தால் வேந்தன்மா திவள்இப்
பூவினில் இந்தப் புன்மைநீங் கிடவே
போந்தனள் என்றனன் போதன்.

யாவரும் அஞ்சினார்கள். 'இது என்ன?' என்றார்கள். ஏககூத முனிவர், விளக்கம் சொன்னார் 'இவள் பெண்தான். இராட்சசப் பெண். முன்பு செய்த பாவத்தினால் செத்தாள். அரசன் மகளான இவள் அங்கிரா முனிவன் சாபத்தால், இவ்வுலகில் இந்த இழிந்தநிலையை அடைந்தாள். பாபம் முடியும் நேரம் இது. எனவே, இங்கு வந்திருக்கிறாள்' என்று, ஞானத்தால் உணர்ந்துசொன்னார். 128

## சித்திரகேது பேயான கதை

விரியவே உரைப்பீர் என்றலும் விளம்பும்
மேகமார் சோலைசூழ் விந்த
வரையினுக் கருகோர் புவிபுரந் திடுவோன்
மனுகுல வண்மையான் வாய்ந்த
பருதிபோல் வருமி ரட்சரா சன்கோல்
பரிந்திடும் சித்திர கேது
முருகலர் தாரான் மகள்தராப் பதிப்பெண்
முன்ஒரு காலமாம் தன்னில்,

விரிவாகச் சொல்லுங்கள் என்று, எல்லாரும் கேட்டார்கள். அவர் சொல்லத் தொடங்கினார். விந்தியமலை, மேகம் தங்கும் சோலைகள் சூழ்ந்த மலை ஆகும். அதனருகில் மனுதர்ம வேந்தன் ஒருவன், சூரியன்போல் நெறி தவிராமல் ஆண்டான். அவன் யட்சராசன். அவன் மகள் சித்திரகேது. மணம்கமழ் மாலையை உடைய அரசனின் ஆட்சியை ஆளும் உரிமை உள்ளவள். 129

அளவிலாச் செல்வ அமுதெனும் திருவாள்,
அந்தரத் தோர்களும் புகழும்
இளமைசேர் பருவத் தெழிலுடை மடந்தை,
இருங்கணை விழியினால் பட்டோர்
உளம்மிக உருகி உடைந்தவர் மிக்கோர்,
உழையரோ டாடிட அணைவாள்
வளமிகு வனத்தில் மலர்கள்கொய் துலாவி,
வரும்பொழு தங்ஙன மல்கும்,

அவள் அளவில்லாத செல்வம் உள்ளவள்; அமுதம் போன்றவள்; திருமகள் போன்றவள். அவள் அழகை, இளமையை, பருவத்தைத் தேவர்களும் புகழ்வார்கள். அவளின் இரண்டு அம்பு விழிகளில் பட்டவர்கள் மனம் உடைவர். அதிகமான தோழிகளுடன் வளம்மிகுந்த சோலையில் விளையாடவும், பூக்கொய்யவும், உலாவவும் வந்தாள். 130

மங்குலார் சோலை சூழ்ந்திடும் வனத்தில்
மவுனயோ கத்தினில் வதியும்
அங்கிரா இயற்றும் மலர்வனத் தெய்தி,
அவர்சிவார்ச் சனைக்குறு மலரைச்
செங்கையால் எடுத்தே மோந்தனள் குழலிற்
கோத்தனள் அதுகண்டு சீடர்
புங்கவ முனிபால் உரைத்திட வெகுண்ட
போதினில் அவளும்அங் குற்றாள்.

*மேகம் தங்கும் சோலை சூழ்ந்த காட்டில், மௌன யோகத்தில் தங்கிய அங்கிரா முனிவரின் இடத்தில் அவள் வந்தாள். அவர் அர்ச்சனை புரிய வைத்திருந்த மலரைச் சிவந்த கரத்தால் எடுத்தாள். மோந்து பார்த்தாள். கூந்தலில் வைத்துக் கொண்டாள். அதைப் பார்த்த சீடர்கள், முனிவரிடம் சொன்னார்கள். அவர் கோபம் கொண்டார். சித்திரகேதுவும் முனிவரிடம் சென்றாள்.* *131*

அங்கிரா முனிவன் அரிவையை நோக்கி,
அர்ச்சனை மலர்பெய்தாய் அதனால்
தங்கிராப் பகலும் தனிமையாய்ச் சுழலும்
அரக்கிய தாகெனச் சபித்தான்
திங்கள்சேர் முகத்தாள் நடுங்கிஉள் உடைந்து
திருவடி பணிந்திவை தீரப்
புங்கவ நினது திருவுளம் இரங்கிப்
பொறுக்கெனப் பரவிடப் புகலும்.

*'அர்ச்சனைமலரைத் தலையில் சூடிக்கொண்டதால், இரவும்பகலும் தனித்து அலையும் அரக்கி ஆவாய்' என முனிவர் சாபமிட்டார். சந்திரனைப்போன்ற முகம்கொண்ட அவள் பயந்தாள். மனம் உடைந்தாள். அவர் திருவடியில் விழுந்தாள். இச்சாபம் தீர, முனிபுங்கவரே! மனம் இரங்கிப் பொறுத்து, அருள் செய்க என்றாள்.* *132*

உருளழில் நீங்கும் அரக்கியின் உருவம்
ஒருபதொன் பான்பதம் ஒழிந்தால்,
மருதிடை முனிவோர் வதிந்திடும் வனத்தில்
வந்திடும் வேளைமா தவத்தோர்,
திருவிழிப் படுவாய் மோசனம் ஆகும்
என்றனன் திருந்திழை நீங்கக்
கருஉரு அடைந்தே அரக்கியாய்த் திரிந்தாள்
கவலைநீங் கிடவரும் வேளை,

*'அழகற்ற அரக்கிஉருவம் மாறப் பத்தொன்பதாண்டுகள் ஆகும். திருப்புடைமருதூரில் முனிவர்பலர் வந்திருக்கும் போது, அவர்களின் திருவிழிகளில் படுவாய்; அப்போது சாபம் நீங்கும்' என்றார். திருந்திய அணிகளை அணிந்த சித்திரகேது, கருத்த வடிவமானாள் — அரக்கியானாள்.* 133

இத்தலத் துற்றாள் இருள்என முனிவன்
இசைத்திட யாவரும் இரங்க,
மைத்தவழ் கண்ணாள் பொருனையில் எய்த,
வளர்அருட் கண்அளித் தருளிப்
பைத்தலை அரவப் பரமனைப் போற்றும்
பருப்பதப் பொதியமா முனிவன்
வித்தக முனிவோர் தம்முடன் எழுந்து,
விமலன்தன் மந்திரம் விளம்பி,

*'அவள் கவலை நீங்கும் வேளை இது. எனவே, அவள் இங்கு வந்துள்ளாள்;' என்றார் ஏகசுத முனிவர். யாவரும் இரக்கப் பட்டனர். சித்திரகேது அரக்கி, பொருனைக்குச் சென்றாள். அகத்தியர் அவளைக் கருணையுடன் பார்த்தார். பாம்பணிந்த பரமனைப் போற்ற அவர் எல்லா முனிவர் களுடனும் எழுந்து, சிவமந்திரத்தைச் செபித்தார்.* 134

திருத்தம தான சித்ததீர்த் தத்தின்
தென்புற மடுவினில் அறலை
அரக்கியின் உருவம் அகன்றிடக் கையால்
அள்ளியே தெளித்தனன் அந்த
உருக்கெட முன்னை உருவுவந் தெய்த,
உணர்வுடன் முனிவனைப் பணிந்தாள்;
பெருக்குளோர் யாரும் அதிசயம் அடைந்தார்;
பேசுவோன் பதியில்வந் துற்றார்.

*சித்த தீர்த்தத்தின் தென்புற மடுவில் திருத்தமாக அறல் மணலை அள்ளி, அரக்கியின்மேல் தெளித்தார். அவள் அரக்கி உருமாறி, அழகியானாள். அகத்தியரைப் பணிந்தாள். கூட்டமாக இருந்த எல்லாரும் அதிசயப் பட்டார்கள். பேசுநாயகர் தலமாகிய கோயிலுக்கு வந்தார்கள்.* 135

## பேய்களின் சாபம் நீங்கியது

மோசனம் ஆன கன்னியும் எங்கோன்
முன்பணிந் தருளினை அடைந்தாள்;
மாசக லாத மோசன தீர்த்தம்
ஈதென வழுத்தினர் வானோர்

ஆசைவல் வினையால் அலகைஆ யினரும்
உய்ந்திட அமையம்ஈ தென்றே,
நேசமாய் ஏக சுதமுனி வன்தான்
நினைந்திது தீரஇந் நேரம்,

சாபம் நீங்கிய கன்னியும், இறைவனின் முன்னே விழுந்து பணிந்து அருள் பெற்றாள். பெரிய — எல்லா நற்கதிகளையும் இந்த மோசன (சாபம் நீக்கும்) தீர்த்தம் தரும் என்று, தேவர்கள் வாழ்த்தினர். ஆசையால் பற்றிக்கொண்ட கொடிய வினையால் பேயாகிப்போன வாலசதானந்தன், பிரபாவதி ஆகியோர் சாபம் நீங்கவும் இதுவே தருணம் என, ஏகசுத முனிவர் நினைத்தார். 136

ஆகிரு சனத்தால் அலகைஆ யினரை
அழைக்குவம் எனநொடித் தழைக்க,
வேகமாய் அலகைச் சத்தம்ஒன் றெய்த
மிக்கவர் யாதென வினவ,
ஏகமா சுதரும் இருவர்தம் செயலை
இசைத்திடக் குறுமுனி இரங்கி,
வாகுசேர் கின்ற கோதமர் தம்மை
வணங்கியே அருள்என மகிழ்ந்து,

பேயானவர்களை அழைத்தார். பேரோசையுடன் பேய்கள் வந்தன. துறவிகள், 'என்ன?' எனக் கேட்டனர். ஏகசுதர் விவரம் கூறினார். அகத்தியர் இரக்கப்பட்டார். கௌதமரை வணங்கி, 'இரக்கம் காட்டுங்கள்' என்றார். 137

பார்த்திட அலகை நீங்கியே பழைய
படிஉரு எய்தினார் அவரைத்
தீர்த்தம்ஈ தாடி வரஅருள் செய்யச்
செப்பும்அத் திறம்முடித் தடியில்
சேர்த்துறப் பணித்தார் முனிவர்கள் இறும்பூ
தெய்தினார் திகழ்குறு முனியைத்
தோத்திரம் உரைத்துப் பரவினார் மேலைச்
சுரர்களும் பூமழை தூர்த்தார்.

கௌதமர் மகிழ்ச்சியுடன் பார்த்தார். பேய்கள் பழைய உருவம் அடைந்தன. அவர்களை, 'இந்தத் தீர்த்தத்தில் குளித்து வாருங்கள்' என்றார். அவர்களும் குளித்துவிட்டு வந்து வணங்கினார்கள். முனிவர்கள் பெருமிதம் அடைந்தார்கள். குறுமுனியைத் தோத்திரம் செய்தார்கள். தேவர்களும் பூமாரி பொழிந்தார்கள். 138

## பிரபாவதி கலியாணம்

புகலரிய தீர்த்ததலம் மூர்த்திஇது போலும்
அகிலதலம் மீதரிது அளக்கில்அதன் உண்மை
சகம்உதவு வோனும்அறி யாதசய குய்யம்
திகழுவதெ னக்கழறி மலயமுனி செப்பும்.

'சொல்லமுடியாத பெருமையுடைய மூர்த்தி தலம் தீர்த்தம்' இதைப்போல உலகத்தலம் எதிலும் அரிதாகும். இதன் உண்மையை அளக்கப் புகுந்தால், உலகம் தந்த பிரமன்கூட அறியமுடியாத வெற்றி இரகசியம் ஆகும்' என்றார் அகத்தியர்.

*139*

ஏகசுத மாமுனிவ னேஇவர் தமக்கே,
யாகபலன் இங்ஙனம் இயற்றுகென யாவும்
யோகம்அத னால்அறியும் உதிப உனக்கே,
தாகம்உறு காரியம் எனக்குமகிழ் தானே.

'ஏககேதக முனிவரே! வாலசதானந்தனுக்கும் பிரபாவதிக்கும் யாகம் செய்யும் பயனைக் கொடுங்கள்' (திருமணம் நடத்துங்கள்) என்றார். அகத்தியர் இப்படிச் சொன்னவுடன், 'யோகம்தான். உனக்கே இது விருப்பமான காரியம். எனக்கும் மகிழ்ச்சிதான்' என்றார் ஏகசுதர்.

*140*

என்னஇரு வோர்களுடன் ஏகசுத யோகர்
தன்நிகரில் கோதமர் தமிழ்க்குறு தவத்தோர்
மின்னுசடை வேதியர்கள் யாரும்விம லன்தன்
சந்நிதி அடைந்திறைவன் தாள்பரவி நின்றே,

மணமக்கள் இருவரும், ஏகசுதரும், கௌதமரும், அகத்தியரும், ஒளிவிடும் சடைகொண்ட முனிவர்களும், யாவரும், இறைவன் சன்னிதானத்தை அடைந்து, திருவடிகளை வணங்கினார்கள்.

*141*

போற்றினர் அரன்புகழ் புகன்றனர்தம் முன்னே
ஏற்றுடைய நாயகர் எழுந்தருளி இங்ஙன்
நோற்றமுனி கோதமுனி குறுமுனியை நோக்கிச்
சாற்றும்உயர் மாமுனிவ என்றருள் தரித்தே,

போற்றினார்கள். சிவனின் புகழைப் பேசினார்கள். ரிஷப நாயகர் எழுந்தருளினார். இவ்வகையில் தவம் செய்த கௌதமர் மற்றும் அகத்தியரைப் பார்த்து, 'புகழத்தக்க பெரிய முனிவர்களே!' என்று குரல் கொடுத்தார்.

*142*

அரக்கிஉரு வோடலகை ஆயினர்கள் பாவம்
கரக்கஅவர் மேல்புனல் தெளித்தனிர் களைந்தீர்;

சுருக்கும்இவர் ஆசைதொலை யச்சுதர்கள் தங்கட்(கு)
இரக்கம்உள தண்புளியில் இவர்மணம் முடிக்க,

'ஒருத்தி அரக்கியாக, இருவர் பேயாகப் பாவத்தால் அலைந்தார்கள். அவர்கள்மேல் நீர்தெளித்துப் பாவம் போக்கினீர் கள். ஊறும் ஆசை தொலையும்படி, வாலசதாநந்தனுக்கும் பிரபாவதிக்கும் இரக்கம் உள்ள புளிய மரத்தடியில் திருமணம் செய்திடுங்கள். 143

சாலைதுரு விச்சகல ரோடணிகள் செய்தே,
ஆலயம் இதற்கழகு றும்படிகல் யாண
மாலைபுனை வித்துவது வைப்பணி முடிப்பீர்
சீலம்உற என்றனர் பினும்சிறி துரைப்பார்.

வழிசெய்யுங்கள். எல்லாரையும் அழையுங்கள். ஆபரணங் கள் செய்யுங்கள். கோயிலை அழகுபடுத்துங்கள். கலியாண மாலை அணிவித்து, ஒழுக்கமுடன் நற்காரியம் செய்யுங்கள்' என்று, இறைவன் அருள்வாக்குக் கூறினார். 144

## இறைவன் அருள்

வாலசதா னந்தருக்கும் மாதுபிரபா வதிக்கும்
சாலும்அல கையும்தடிந்த இந்தமடு வில்படிவோர்
சீலராய்ச் செல்வம்உறும் அலகைபோம் சீறரக்கி
கோலமோ சனதீர்த்தம் ஆடினும்இக் குணம்பெறுவார்.

வாலசதானந்தரும், பிரபாவதியும் பேய் உருமாறிய இந்தத் தீர்த்தத்தில், யார் குளித்தாலும் ஒழுக்கம் பெருகும்; செல்வம் வரும்; பேய் பிடித்தவர்க்குப் பேய் நீங்கும். சாபம் உள்ளவர்களுக்குச் சாபம் நீங்கும். குலடிமோசன தீர்த்தத்தில் குளித்தாலும், இப்பலன்களைப் பெறலாம். 145

கோதமர் படிந்ததிரு மூலதீர்த்தம் குடைவோர்,
பாதகம் அகன்றுபர மானந்த பதம்பெற்று,
நீதம்உற வேவாழ்வர் எனநிகழ்த்தி நிமலன்தான்,
போதம்உறு சிவலிங்கத் திடைப்புகுந்து பொலிந்தனனால்.

'கௌதமர் குளித்த திருமூல தீர்த்தத்தில் குளிப்பவர்கள், பாதகம் நீங்கிப் பரமானந்தம் அடைவர்; சிவபதம் அடைந்து சிறப்பர்' என்று இறைவன் கூறி, ஞானமயமான சிவலிங்கத்திற்குள் புகுந்து பொலிந்தார். 146

ஈசன்அரு ளின்படியே ஏகசுதர் முதலான
ஆசகன்ற முனிவருடன் அகத்தியரும் கவுதமரும்
வாசமுறும் ஆம்ப்ரவனம் மகிழ்ந்தெய்தி மைந்தனுக்கும்
மாசில் பிரபா பதிக்கும் மணம்நேர்ந்து மதித்தனரால்.

இறைவன் கட்டளைப்படி அனைவரும் புளிய வனத்திற்குச் சென்று, வாலசதானந்தருக்கும், குற்றமற்ற பிரபாவதிக்கும் திருமண ஏற்பாடுகள் செய்தனர். 147

மணவினை கோலி ஈசன் மகிழும்ஆ லயம்வி ளக்கி,
அணிஅலங் கார முற்ற அம்பொனால் அழகுசெய்தே,
பணிதிகழ் வேள்விப் பந்தர் பாலிகை விதானப் பந்தி
தணிவுளத் துடையோர் கூட்டம் சார்ந்துமங் கலத்தர் ஆகி,

கோயிலைத் தூய்மை செய்தார்கள்; நிறைய அலங்காரம் செய்தார்கள். பொன்னாபரணங்கள் செய்தார்கள். வேள்வி செய்யப் பந்தல் அமைத்தார்கள். விமானம் செய்தார்கள். முளைப் பாலிகை விதைத்தார்கள். துணிவுள்ள பெண்கள் கூட்டத்தினர் மங்கலப் பணிகள் செய்தனர். 148

விதிவழி மணம்செய் வித்தார் வேட்டமா தவர்மென் சாயல்
மதிநுத லோடு தென்பால் ஆச்ரமம் எய்த வாய்ந்த
பதிமணம் உற்ற தாலே மணநகர் புகைவ ரைந்தே
கதியுடன் உறங்காப் பண்பால் புளிப்பெயர் கழறு வாரே.

வேத விதிப்படி திருமணம் செய்துவைத்தார்கள். திருமணம் செய்துகொண்ட பிரபாவதி, தெற்கில் உள்ள ஆசிரமத்தில், கணவருடன் தங்கினாள். உறங்கா இலைகளை உடைய புளியமரக் காட்டில் திருமணம் நிகழ்ந்ததால், இவ்வூருக்கு 'மணநகர்' என்ற பெயரும் ஆம்பிரவனம் என்ற பெயரும் உண்டாயிற்று. 149

என்றும்இப் படியதான எகினமா வனத்தில் எய்தி,
மன்றல்செய் மைந்தர் மாதர் கவுதமர் மலய வாசர்
கொன்றைவே ணியனைப் போற்றி இருந்தனர் குடபால் எய்திச்
சென்றுதீர்த் தம்கு டைந்து திருவல்லீச் சரத்தைப் போற்றி,

மேலும், பலகாலம் இம்முனிவர்கள் இவ்வூரில் இருந்தனர். இறைவனைப் போற்றினர். வாலசதானந்தரும், பிரபாவதியும் கௌதமரும், அகத்தியரும் மேற்கே உள்ள திருவல்லீச்சரம் என்ற தலத்துக்குச் சென்று, தீர்த்தம் ஆடி வழிபட்டார்கள். 150

பணிவொடு கும்ப யோகன் பொதிகையில் படர்ந்தான் இப்பால்
கணபதி தீர்த்தம் ஆடிக் கயமுகன் தன்னைப் போற்றிக்
குணபதி முனிவன் ஆன கோதமன் புளியில் மேவி,
இணைஇலா தினிய யோகம் புரிந்தென்றும் இருக்கின் றானால்.

அகத்தியர், பணிவுடன் பொதிகைமலைக்குச் சென்றார். கௌதமர், கணபதி தீர்த்தத்தில் குளித்துக் கணபதியை

வழிபாடு செய்து, புளியமரத்தடியில் ஒப்பற்ற தவம் செய்து கொண்டிருக்கிறார். என்றும் இருக்கிறார். *151*

சதானந்தர் கதையைச் சாற்றும் சூதமா முனியைத் தாழ்ந்து,
பதானந்தம் பரவி இந்தப் பதிமகத் துவத்தில் இன்னும்
கதானந்தம் உரைப்பீர் என்று முனிவர்கள் கழறப் பாண்டிச்
சுதானந்தப் பிழையை நீங்கி அருள்பெறு தன்மை சொல்வான்.

வாலசதானந்தர் கதையை, இவ்வாறு சூதர் சொன்னார். அவரின் பாதங்களை வணங்கி, 'இந்தப் பதியின் கதை ஆனந்தம் அளிக்கிறது; இன்னும் சொல்லுங்கள்' என்று, முனிவர் கள் வேண்டினர். பாண்டியன் செய்த பிழையை நீக்கி, இறைவன் அருள்செய்த தன்மையைச் சூதர் சொல்லத் தொடங்கி னார். *152*

ஆகத் திருவிருத்தம் - *1025*

# 11. புறமதம் தீர்ந்த படலம்

பரமதா ரகநல் லூரில் அலகைமோ சனத்தின் பான்மை
உரைசெய்தீர் இன்னும் இந்த உத்தமத் தலத்தில் தானே
அரவணி நாதன் செய்த சரித்திரம் அறைவீர் என்ன
புரிசடை முனிவர் கேட்பச் சூதர்தாம் புகலல் உற்றார்.

'பரமதாரக நல்லூரில் (தாரக உபதேசம் அனைவருக்கும் கிடைக்கும் நல்ல திருப்புடைமருதூரில்) பேய்கள் சாபம் நீங்கிய தன்மையைச் சொன்னீர்கள். இன்னும் இந்த உத்தமத்தலத்தில் பாம்பணிந்த பரமன் செய்த திருவிளையாடல்களைச் சொல்லவேண்டும்' என்று, திரிந்த சடையுடைய முனிவர்கள் கேட்டார்கள். சூதர் அவற்றைச் சொல்லத் தொடங்கினார். 1

## சுசேடணனின் ஆட்சி

பிறைவளர் வேணிப் பிஞ்ஞகன் அருளால்
பேய்உரு அகன்றலர் மணத்தால்
நிறைவரம் பெற்ற தறைந்தனம் பாண்டி
நிருபன்ஓர் கன்னிகை மயக்கால்
புறமதம் சேர்ந்து தமரினை வெல்லப்
புந்திசெய் திவ்விடை வரும்போ(து)
இறைஅருள் வரத்தால் அவன்மனம் திருத்திச்
சைவராய் உய்த்தவா றிசைப்பாம்.

'பிறைவளரும் சடையை உடைய பெருமானின் அருளால் பேய்உருவம் நீங்கியவர்கள், திருமணம் செய்துகொண்டு, நிறைவான வரங்களைப் பெற்றதைச் சொன்னேன். பாண்டிய மன்னன், ஒரு பெண்ணின்மேல் வைத்த மயக்கத்தால், வேற்று மதத்தைச் சார்ந்து, தம் மதத்தவர்களை வெல்ல நினைத்து, இங்கு வரும்போது, இறைவன் அருளால் அவன் மனம்திருந்திச் சைவனாக மாறிப் பிழைத்த கதையைச் சொல்கிறேன். 2

திருந்து வார்பொழில் சூழ்மண வூரினில் செல்வம்
பொருந்தி வாரிசூழ் புவிகளும் பாண்டியும் புரப்போன்

பருந்து பந்தர்செய் வேலினான் பஞ்சவர் மரபில்
வரும்சு ருக்கொடிச் சித்திர சாபமா றன்தான்.

அழகிய பெரிய சோலைகள் சூழ்ந்த மணவூர் என்ற ஊரில், செல்வம் பொருந்தி, கடல் சூழ்ந்த உலகங்களையும், பாண்டிய நாட்டையும் ஆள்பவன்; பருந்துகள் பறந்து பந்தலாக வர அவன் வேலெடுப்பான்; பஞ்ச பாண்டியர் மரபில் வந்தவன். சுருக்கொடி (வண்டுக்கொடி) உடையவன். சித்திர சாபமாறன் என்பது அவன் பெயராகும். 3

நாளும் பலவளம் படுத்தியே பாண்டிநா டதனை
ஆளும் மன்னவன் அதிபல தானையால் அடல்செய்
தோளி னால்வளர் சென்னிசேர் நாட்டின்மேல் சூழ்ந்து,
வாளி னால்அமர் பொருதுகைக் கொண்டிட மதித்தான்.

பாண்டி நாட்டில் நாளும் பலவளங்கள் பெருகச் செய்வான். அதிக பலம் பொருந்திய படைகளுடன் போர் செய்யும் தோள்களை உடையவன். சோழநாட்டின் மேல் படையெடுத்து வாட்போர் செய்து, சோழநாட்டைக் கைப்பற்ற வேண்டுமென்பது அவன் ஆசையாகும். 4

தானை சூழ்வர எழுந்தவர்க் கொற்றரால் சாற்றி,
யானை தேர்பரி வீரர்ஆ யுதம்அணி வகுத்து,
மான மேல்கொடு காஞ்சிமா நகரினில் வாழும்
கோன்மை சேர்இட பத்துசன் மேல்அமர் குறித்தே.

ஆனால், காஞ்சிமாநகரை ஆண்ட இடபத்துவசன் (காளைக் கொடி கொண்டவன்) என்பவன்மேல் போர் தொடுத்துப் புறப்பட்டான். சேனைசூழப் புறப்பட்டான். ஒற்றர்கள் வழியாகச் செய்தி அனுப்பினான். யானை, தேர், குதிரை, ஆயுத வீரர்கள் அணிவகுத்துக் கோபத்துடன் புறப்பட்டான். 5

வந்த போதிட பத்துசன் வழுதியோ டமர்செய்து,
அந்தி இல்லனாய்த் தான்ஒரு புள்ளுவந் தனையே
புந்தி செய்தனன் போலுமே செழியன்பால் பொருந்திச்
சிந்தை யாய்க்கலந் திடஒன்று மனத்தினில் தெளிந்தான்.

இடபத்துவசன் பாண்டியனுடன் போர்செய்தான். முடிவு ஏற்படவில்லை. ஒரு சூழ்ச்சியை எண்ணினான். பாண்டியனிடம் மனத்தால் கலந்து சமாதானமாக முடிவெடுதான். 6

தன்மகள்சந் திரபதியைத் தமிழ்வேந்தன் மணந்திடவே,
நன்முதிய ரால்இயற்றி நாள்வரைந்து மணம்புணர்த்திப்
பின்வரிசை பெறச்செய்தான் பெட்புறும்அந் நாள்தன்னில்,
இன்னலங்கொண் டிடச்செழியற் கெழில்புதல்வர்
தமைஈன்றாள்.

தன்மகள் சந்திரபதியைப் பாண்டியன் மணந்துகொள்ள நல்ல பெரியவர்களிடம் சொல்லியனுப்பி இசைவுபெற்று, நாள் குறித்து மணம் நடத்தி, வரிசைகள் கொடுத்தான். சித்திரமாறன் சந்திரபதியுடன் அன்புடன் வாழும் நாள்களில், அழகான ஆண்பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள். 7

வழுதிமைந் தரில்முன் வந்த சுசேடணன் மவுலி தாங்கிப்
பழுதிலாப் புவனம் மல்கப் பரிக்கும்நாள் சித்ர சாப
விழுமியன் இமய வல்லி பங்கில்வாழ் விமலன் தன்னைத்
தொழுதுபூ சித்து நாதன் துணைஅடி நீழல் சேர்ந்தான்.

சித்திரமாறன் பிள்ளைகளில் மூத்தவனாகிய சுசேடணன் ,அரசனாகிப் பழுதில்லாமல் பாண்டியநாட்டை ஆளத் தொடங்கினான். சித்திரமாறன் உமையொருபாகனைத் தொழுது பூசித்து, அவன் திருவடி நிழலை அடைந்தான். 8

## துளுவக் கரஞ்சகன் வருகை

பன்னு கீர்த்திச் சுசேடணன் பாண்டியன்,
நன்னி லம்புரக் கின்றஅந் நாளிலே,
துன்னு கின்ற வடதுளு வத்திலே
மன்னு கின்ற மிலேச்ச மதத்துளான்.

நல்ல பாண்டியநாட்டை மிக்க புகழுடன் சுசேடணன் ஆளுகின்ற நாளில், நிலைபெற்ற வடதுளுவ நாட்டை மிலேச்ச மதம் சார்ந்த மன்னன் ஆண்டு வந்தான். (மிலேச்ச மதம் — சரஸ்வதி ஆற்றின் வடக்கில் இருந்த மதம்.)

இன்னி லத்திறை வன்முதல் யாரையும்
தன்ம தத்துறச் செய்திடும் சால்புதான்
என்னெ னக்கரு தியிது வேசெய
உன்னி யேநவ மாமணி உய்த்தனன்.

'இந்த நாட்டில் வாழும் அரசர் முதல் யாரையும் என் மதத்தைச் சார்ந்தவர்களாக மாற்றுவதுதான் சிறப்பு; அதுவே கடமை' என்று கருதுபவன் அவன். அவனிடம் நிறைய நவமணிகள் இருந்தன. அவற்றால் அவ்வெண்ணத்தை நிறைவேற்றி வந்தான். 10

தான்பெ றுங்காந்தி யான தரங்கனி
மான்த னக்கணி மாமணி யால்பொதிந்(து)
ஊன்த தும்பிய வேலன் உளத்தையே
நான்க வர்ந்திடு வேன்என நண்ணினான்.

*அவன்மகள் ஒளிவிடும் தரங்கனி (காந்தரங்கனி) 'அந்த மானுக்கு உயர்ந்த மணிகளில் அலங்காரம் செய்து, தசை ததும்பும் வேலை உடைய சுசேடணனின் உள்ளத்தைக் கவர்வேன்' என்றுகூறிப் புறப்பட்டான்.* 11

**கருதிப் போந்தகரஞ் சகன் கன்னியும்**
**பிருது விக்கண் எழுந்து பிறைக்குலத்து**
**ஒருவன் தன்மண வூரினில் உற்றனன்**
**வரும்அச் செய்தியை மன்னற் குரைக்கவே,**

**மாம ணிப்பொதி கொண்டுவந் தோம்எனக்**
**கோம கற்குரைப் பீர்எனக் கோன்கடைக்**
**காமர் வாயிலர் காவலர்க் கோதிடத்**
**தாமிங் குத்தரு வாய்எனச் சாற்றவே.**

*சந்திர குலத்தவனாக உலகில் தோன்றிய சுடேணனின் மண வூருக்கு, காந்தரக்கனியுடன் வந்தான். வரும் செய்தியை வாயிற் காவலரின் வழியாக, 'பெரிய மணிகள் கொண்டு வந்துள்ளேன்; அரசனுக்குச் சொல்லுங்கள்' எனச் சொல்லியனுப்பினான். வாயிற்காவலர்கள் உள்ளே சென்று, அரசனிடம் சொன்னார் கள். 'இங்கே அழைத்துவா' என்றான் அரசன்.* 12, 13

**ஏவ லாளர் இவனை அழைத்திடக்**
**காவ லன்முன் வரும்அக் கரஞ்சகன்,**
**மேவு நன்மணி மிக்க வெறுக்கையும்**
**தூவி டும்படி வந்து துதித்தனன்.**

*ஏவலாளர், மிலேச்சனை அழைத்தார்கள். கரஞ்சகன், அரசன் எதிரில் வந்தான். நல்ல மணிகளான செல்வங்களை எதிரில் பரப்பினான். வணங்கினான்.* 14

**வேந்தன் நோக்கினன் மிக்க வெறுக்கையால்,**
**வாய்ந் திடும்அள காபுரி மன்னனோ,**
**வாய்ந்த நன்மணி யத்தன்என் றுன்னினான்;**
**காந்த ரங்கனி தன்னையும் கண்டனன்.**

*அரசன் பார்த்தான். 'மிக்க செல்வம் வாய்த்த அளகாபுரிக் குபேரனோ இவன்; நல்ல அணிகள் பெற்றுள்ள தலைவனோ?' என்று சிந்தித்தான். காந்தரங்கனியையும் பார்த்தான்.* 15

## காந்தரங்கனி – வருணனை

**உலகில் இல்லதோர் ஓவிய மேஇவள்**
**கலைத ரும்பிறை காட்டிய மேகமே,**

இலகு கூந்தல் ளிமணிச் சுட் டிதான்
நிலவைக் கவ்விய கேது நிகர்க்குமே.

'இவள் உலகில் இல்லாத ஓவியம்; ஆடைகட்டிய பிறை; மேகமே கூந்தல்; முகம் நிலவு; நெற்றிச்சுட்டி நிலவைக் கவ்விய கேது (பாம்பு). 16

தோற்றந்தரு நீலஞ்சுழல் புரியுமுனைத் தொழிலால்
கூற்றங்கொலை பயிலச்செயுங் குழைகூர்ந்து நடக்கும்
மாற்றமில வரிஓடிய வண்டேவலின் மதனை
ஆற்றங்கயல் போல்துள்ளரி அமர்ந்தம்புறழ் விழியே.

எடுப்பான தோற்றம் உடைய — நீலமலர் போன்ற சுழல்கின்ற — போர்த்தொழிலால் யமனுக்கும் கொலையைக் கற்பிக்கும்; காதில் உள்ள குண்டலம் வரை நடக்கும்; மாறாத செவ்வரி, கருவரி ஓடும் — இந்த வண்டுகளின் ஏவல்படி மன்மதன் அடங்குவான்; கயல்மீன்போல் துள்ளும்; பெருத்திருக்கும்; அம்பு போன்றவை — இந்த விழிகள். 17

எள்ள ரும்பிய மூக்கணி இந்துவின் அழகை,
மெள்ள வந்துமுன் நோக்குறு மீனையே அனைய,
கள்ள ரும்பிய முல்லைசெங் கயிரவத் திடையே
விள்ளும் தன்மைய தென்னும்வாய் மென்மொழி அமுதே.

எள்பூப்போல மூக்கின் அழகு. அது சந்திரனின் அழகை மெள்ள வந்துபார்க்கும். மீனைப் போன்றதும் (கண்ணும்) சந்திரனை (முகத்தைப்) பார்க்கும்; கள் ஊறும் முல்லை (பல்) செவ்வலரிக்கு நடுவில் (உதட்டின் நடுவில்) தெரியும். வாயிலிருந்து வரும் மெல்லிய சொற்கள் அமிர்தமாகும். 18

சுரிவளை கந்தரம் தோள்ப சுங்கழை
சரிவளை முன்கையாழ் காந்தள் தாமரை
வரைபயில் அங்கையாம் மாந்த ளிர்க்கும்நேர்
விரல்பவ ளங்களாம் உகிர்வெண் முத்தமே.

கழுத்து, வரியுள்ள சங்காகும்; தோள், பச்சைமூங்கில்; வளையல் சரியும் முன்கை, யாழ், தாமரை; மலையின் மாமர இதழ், நிறம்; விரல், பவளங்கள்; நகங்கள், வெண்முத்துகள். 19

கோங்கிள முகையோ குரும்பையோ செப்போ,
கோகன கம்திகழ் அரும்போ
பாங்குயர் சூதோ பலவளம் சிறந்த
பருப்பத மோசெழும் பந்தோ,

மாங்கணை வசந்தன் மணிஅணி முடியோ
வார்திகழ்ந் தாரம்மேல் தாங்கி,
நீங்கிடா திறுகிப் பணைத்திறு மாந்த
நேரிழை இவள்இரு தனமே.

*நேர்த்தியான ஆபரணங்களை அணிந்துள்ள இவளின் இரண்டு முலைகளும், இளமையான கோங்கமொட்டுகளா? தென்னங் குரும்பைகளா? செப்புகளா? தங்கத்தில் செய்த அரும்பு களா? அடிப்பகுதி பருத்த சூதாடு கருவிகளா? பல வளங்கள் செழித்த மலைகளா? செழுமையான பந்துகளா? மாமலர் அம்பு தொடுக்கும் வசந்தனின் மணிகள் பதித்த கிரீடங்களா? கச்சுக்கட்டி மேலே முத்துமாலையை அணிந்து, அசையாதபடி இறுகி, பெருத்து, திமிர்ந்து, இருக்கின்றனவே?* 20

வண்டணி ஒழுங்கோ வல்லியோ வரைசேர்
வயிற்றணி ஆலமோ உந்தி
தெண்டிரைச் சுழியோ சிங்கம்நேர் முழையோ
சேர்ந்துள பிடிக்கடங் கிடையோ
தண்டர ளம்சேர் மேகலை புனைந்த
தானைசூழ் அரவமோ நிதம்பம்
கண்டகு கதலி குறங்குகால் காளங்
கந்தரு குறிகம டம்தான்.

*மலையடிவாரம் தொடங்கிட முலையடியிலிருந்து வயிற்றில் கீழ் நோக்கிப் போகும் மெல்லிய மயிர்க்கோடு வண்டுகளின் வரிசையா? வல்லிக்கொடியா? கொப்பூழ், கடலா? அலையின் சுழி யலா? சிங்கம் நுழையும் குகையா? சேர்ந்த பெண்யானை அடங்கும் முழையா? முத்துகளாலாகிய மேகலாபரணம் மூடிய அல்குல் பாம்பின் படமா? கண்பதிக்கத் தகுந்த தொடை வாழைத்தண்டுதான்; அல்குலின் இருபக்க மேடுகள் கந்தர்வ உலகத்து ஆமைகளின் முதுகுகள்; கருப்பானவை.* 21

## மொழிமாற்று

அரிபெயும் சதங்கை நூபுரம் அசைந்த
ஐவளை இலங்கவே ஆற்றும்
பரிபுரம் அணிந்த பாதமெல் விரல்தான்
பவளத்தின் சூழல்பங் கயந்தான்

விரிதளிர் மேனி சாதியின் போது
விழைபவர் மனம்கவர் சாயல்
கருவுலாம் தோகை அனநடைக் கிவளைக்
கருதியே கமலியைத் தாங்கும்.

*சதங்கை அணிந்த கால், நூபுரம் அணிந்த இடை, சங்கு வளையல் அணிந்த கை, மாணிக்கப் பரல் உள்ள சிலம்பு அணிந்த கணுக்கால், பவளம் போன்றவாய், கருங்கூந்தல், தளிர் மேனி, பங்கய நிறம், தோகையின் சாயல், அன்னநடை கொண்ட இவள், ஸ்ரீதேவி போன்றவள்.* 22

## நவமணி வரலாறு (வலாசுரன் கதை)

இவ்வகை உருவின் தரங்கனி மானாள்
இவன்பினே தோற்றிட இறைவன்
செவ்வியின் நோக்கக் காஞ்சகன் உரைப்பான்
செந்திரு மார்பனே சிறந்த
நவ்விநேர் விழிஎன் மகள்இவள் நின்பால்
நவமணி நான்கொடு வந்தேன்
அவ்வியம் அகற்றும் இம்மணி புனைவோர்க்
கவைவர லாறுகேள் என்றான்.

*இவ்வகை உருவம் கொண்ட காந்தரங்கனி என்னும் மானை, தான்தோற்கும்படியாகக் காலமறிந்து அரசன் நோக்கி னான். கரஞ்சகன் பேசினான். 'திருமகள் தங்கும் மார்பைக் கொண்ட அரசனே! மான் போன்ற விழியைக் கொண்ட இவள் என்மகள். நான் உன்னிடம் நவமணிகளைக் கொண்டு வந்துள்ளேன். துயர்நீக்கும் இம்மணிகளின் வரலாறு கூறுவேன் கேள்' என்றான்.* 23

திங்கள்அம் குலத்து மன்னவன் வியந்து
திருமணி யாவையும் நோக்கி,
எங்குள இவைதான் என்றலும் மிலைச்சன்
இயம்புவான் இந்திர திசைபார்த்து
அங்கமோ டிருந்து கருந்துகில் பரப்பி,
அதில்நவக் கிரகமாய் வைத்துப்
புங்கவர் வியப்ப வலன்உரு அதனில்
போந்திடும் மணிஎனப் புகன்றான்.

*சந்திரகுலப் பாண்டியன், 'இந்த மணிகள் எல்லாம் எங்குள் ளவை?' என்றான். கரஞ்சகன் கிழக்குப் பார்த்து உட்கார்ந்து,*

கருப்புத் துணியைப் பரப்பி, அதில் நவக்கிரகக் கற்களை அந்தந்தத் திசைக்கு வைத்து, நல்லோர் வியக்குமாறு 'வலாசுரன் உருவத்தி லிருந்து வந்த மணிகள் இவை' என்றான். 24

யாதெனில் முன்னாள் வலன்புரி தவத்தால்
யாவையும் ஈன்றளித் தழித்த
பூதநா யகன்பால் அழிவிலா வரங்கள்
புரிந்திடப் பெறும்அவன் புகல்வான்
ஏதமேல் அளவும் புகுந்திடா என்பால்
இன்னல்எய் திடினும்இவ் வுடல்தான்
நீதம்எய் திடவே நவமணி யாக
நின்அருள் செய்என் நிமலன்,

எல்லா உலகங்களையும், உண்டாக்கிக் காத்து அழித்தவன் பூதநாயகன். அந்த இறைவனை நோக்கி வலாசுரன் தவம் செய்து, அழிவிலா வரங்கள் பெற்றான். 'இயன்றவரை எனக்கு அழிவு வராது. அப்படி வந்தாலும், இவ்வடம்பு இழிவு படாமல் நவமணிகளாகுமாறு அருள்செய்ய வேண்டும்' என, இறைவனிடம் கேட்டான். 25

தந்திடப் பெற்ற தவத்தினால் புனிதன்
தன்னுடன் பொரவெகு சமரில்
இந்திரன் ஆற்றா தோடினான் பின்வந்
திறைவலா தரனிடத் தெய்திப்
புந்திவஞ் சனையால் வென்றிடப் புகழ்ந்து,
பொருவிலா வரந்தர வல்லே
வந்தனன் என்றான் புறகிடு நீயோ
வழங்குவை உனக்குநான் வகுப்பேன்.

அப்படியே இறைவன் வரம் தந்தான். இந்திரன் வலாசுரனு டன் பலமுறை போர்செய்தான்; தோற்றோடினான். இந்திரன் வலாசுரனிடம் வந்து, 'உனக்கு ஒப்பில்லா வரம் தர வந்தேன்' என்று வஞ்சனையால், வெல்லும் நோக்கத்துடன், பேசினான். 'புறமுதுகிட்டோடும் நீயா எனக்கு வரம் தருவது; உனக்கு நான் வரம் தருகிறேன்' என்றான் வலாசுரன். 26

தருகிலேன் ஆகில் அமர்க்குடைந் தோடும்
சமத்தனே யான்எனச் சபதம்
விரையவே புகலப் புனிதனும் யான்செய்
வேள்வி யுற்று அவையினில், 'ஆ'ஆய்

**வருகென உரைத்தான் வழங்கினான் அந்தப்**
**படிவலா சுரன்எனும் வள்ளல்**
**பொருவிலா தியற்றும் மகத்தினில் ஆவாய்ப்**
**போந்தனன் யூகத்தில் யாத்தே.**

*'நீ கேட்கும் வரத்தை உனக்கு நான் தரவில்லை என்றால், நான் போரில் தோற்றோடும் கீழானவன் ஆவேன்' என்று, வலாசுரன் சபதம் கூறினான். இந்திரன் மிக வேகமாக, 'யான் செய்யவுள்ள யாகத்தில் யாகப்பசுவாக நீ வரவேண்டும்' என வரம் கேட்டான். வலாசுரன், 'சரி' என்றான். அதன்படி வலாசுரன் என்ற வள்ளல், ஒப்பில்லாத யாகத்தில் பசுவாக வந்தான். இந்திரன் யாகப்பசுவை யூகத்தில் (யாகப் பசுவைக் கட்டும் கல்தூணில்) கட்டினான்.* 27

வாய்புதைத் தலையை வாங்கினார் வலனும்
மந்தர மலர்பொழிந் திடவே,
பாய்கதிர் விமானம் உற்றுமேல் எய்தப்
பசுவின துருஎலாம் பாரித்
தூமணி யாகத் தோன்றின அவையிற்
சோரிமா ணிக்கம்பல் முத்தம்
சேய்நிறப் பவளம் தசைவயி டூர்யம்
செம்மல்தன் பித்தைகண் நீலம்.

வச்சிரம் என்பு புருடரா கம்தான்
வலனவை நிணங்கள்கோ மேதம்
பச்சையே பித்தம் எனநவ மணியும்
பாரியாத் திரகிரி முதலா
மெச்சவே தோன்றும் சார்விடம் பிறப்பு
வியந்திடும் ஒளிநிறம் சாதி
நச்சிய குற்றம் சோதனை தெய்வ
நவமணி அணிபலன் நவில்வாம்.

*வலாசுரனைக் கொன்றனர். மந்திரமலர்கள் பொழிந்தனர். சூரிய விமானத்தில் வலனின் ஆவி மேலே போயிற்று. பசுவின் உருவமெல்லாம், தூய மணிகளாக மாறின.*

| | | |
|---|---|---|
| *1. இரத்தம்* | — | *மாணிக்கம்* |
| *2. பல்* | — | *முத்து* |
| *3. சிவப்புத்தசை* | — | *பவளம்* |
| *4. ஆணின் மயிர்* | — | *வைடூர்யம்* |

5. கண் — நீலம்
6. எலும்பு — வச்சிரம் (வைரம்)
7. கோழை — புருஷராகம்
8. வெள்நிணம் — கோமேதகம்
9. பித்தம் — பச்சை (மரகதப் பச்சை)

என்று உண்டாகி, ஸ்திரகிரி முதலாக மெச்சுமாறு தோன்றியது. சாரும் இடம், பிறப்பு, வியப்புத்தரும் ஒளி, நிறம், சாதி, குற்றம், சோதனை செய்தல், அணிவதால் ஏற்படும் பலன்கள் ஆகியவற்றை இனிமேல் சொல்கிறேன். 28, 29

## நவரத்தினங்கள் பற்றிய செய்திகள்

சிங்கள மக்கந் தும்புரு காளஞ்
சிறந்தநால் யுகத்தினும் தோன்றித்
தங்குசா தரங்கங் குருவிந்தஞ் சௌகந்
திகத்துடன் சார்ந்தகோ வாங்கம்
பங்கய ராகம் பத்துடன் இருநான்
காறுடன் பகர்ந்தநா லாகும்
பொங்குசா தரங்கம் மாதுளம் பூவித்
தழல்கல் லாரம்புண் டரிகம்,

மாணிக்கம், கிருத யுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களிலும் முறையே, மக்கம், காளபுரம், தும்புரம், சிங்களம் என்னும் நான்கு தேசங்களிலும் உற்பத்தியாகும். இது சாதரங்கள் (பதுமராகம்) குருவிந்தம் (இரத்த விந்து) சௌகந்திகம் (நீலகந்தி), கோவாங்கம் (படிதம்) என்ற பெயர்களைப் பெறும். பதுமராகம் பத்துவகை நிறங் களில் ஒன்றைக் கொண்டதாகும். குருவிந்தம் எட்டுவகை நிறங் களுள் ஒன்றைக் கொண்டது. நீலகந்தி ஆறுவகை நிறங்களில் ஒன்றைக் கொண்டது. படிதம் நான்குவகை நிறங்களில் ஒன்றைக் கொண்டது. 30

இரவிகச் சூலம் தீபமே கோபம்
எழிலியா மிறைகுரு விந்த
குருவளர் அரத்தம் பொன்முயற் குருதி
குன்றிசெங் காந்தள்தி லோத்தம்
தருவளர் திலதம் பலசலர் சௌகந்
திகம்அசோ கந்தளிர் குயிற்கண்
மருவளர் இலவம் ஐவணம் வஞ்சி
மாழைகோ வாங்கொளி குரவே.

| 10 | 8 | 6 | 4 |
|---|---|---|---|
| தாமரை | குன்றிமணி | இலவமலர் | குராமலர் |
| கருநெய்தல் | முயல் ரத்தம் | குயில்கண் | குசும்பை மலர் |
| இந்திரகோபப்பூச்சி | விளாமலர் | அசோகம்தளிர் | செங்கல் |
| கதிரொளி | பலாமலர் | செம்பஞ்சு | கொவ்வைக்கனி |
| நெருப்பு | மஞ்சாடிமலர் | பொன் | |
| மின்மினி | முள்இலவமலர் | மருத்தோற்றி | |
| மாதுளம்பூ | செவ்வரத்தமலர் | | |
| மாதுளைவித்து | பொன் | | |
| மேகம் | | | |
| தீபம் | | | |

31

குதம்பையின் மலர்கொவ் வைக்கனி செங்கற்
குணிதமாஞ் சோதனை திண்மை
நிதம்பெற மீகீழ் சூழ்சுடர் ஆகி,
நிலவிய துத்தமம் புனைவோர்
சதம்அரி யாகங் கன்னிகை யன்னந்
தரைபசுத் தானமோ டைந்தும்
விதம்பெற எய்திப் பகையினை வெல்வர்
வெறுக்கைமே விடுவர்கள் பின்னும்,

*பதுமராகம் திண்மையாக — மேல்புறம் ஒளிவீசினால் உத்தமம். (கீழ்ப்புறம் ஒளிவீசினால் மத்திமம்; பக்கங்களில் ஒளிவீசினால் அதமம்) இதனை அணிபவர்கள் அரியாகம் (அசுவமேதயாகம்) செய்த பலனையும், கல்வி, கன்னி, பசு, உணவு தானம் செய்த பலனையும் அடைவர். மற்ற மணிகள் அணிவோர் முறையே பகைநீங்குதல், செல்வம் பெருகுதல், மக்கட்பேறு ஆகிய பலன்களைப் பெறுவர்.* 32

பெறுவர்கள் மக்கள் பேறுடன் பின்பு,
பேசிய மணிஉறு குற்றம்
புறநிறம் கீற்றுப் புள்ளடி புள்ளி
புரைமணி தனக்கெலாம் பொதுவாம்
மறையவர் முத்தம் வயிரம்மன் னவர்மா
ணிக்கமே துப்புடன் வணிகர்
நிறவயி டூர்யம் புருட விராகம்
நெறிதரு கின்றகோ மேதம்.

*மணிகளின் பொதுவான குற்றங்கள்: அந்தந்த மணிக்கு இருக்கவேண்டிய நிறம் அல்லாத வேறு நிறம், புள்ளி, கீற்று, காகபாதம் (புள்ளடி), தராசம் (புழை) என்பன.*

| | | |
|---|---|---|
| *அந்தணர் மணி* | — | *முத்து, வைரம்* |
| *அரசர் மணி* | — | *பவளம், மாணிக்கம்* |
| *வணிகர் மணி* | — | *புஷ்பராகம், வைடூர்யம், கோமேதகம்* |
| *வேளாளர் மணி* | — | *நீலம், மரகதம்* 33 |

மரகதம் நீலம் பின்னவர் முத்தம்
மன்னிய தலசமே சலசம்
உரியன பதின்மூ வகைப்படும் சங்கம்
ஒள்ளிய இப்பியாம் ஏனம்
கருமுகி லால மருணமாங் காண்டம்
கழைகன்னல் மீன்தலை பசுமை
பொருகரி யாழி சாலிளென் றெய்வம்
புனலிறை தீயமன் புனிதன்

*முத்து, தலசம் (தரையில் தோன்றுவது) சலசம் (நீரில் தோன்றுவது) முதலிய தோற்றங்களில் பதின்மூன்று வகைப்படும். 1. சங்கு, 2. மேகம், 3. மூங்கில், 4. பாம்பின் தலை, 5. பன்றிக்கொம்பு, 6. வெண்ணெல், 7. சிப்பி, 8. மீன்தலை, 9. கரும்பு, 10. யானைக்கொம்பு, 11. சிங்கத்தின்கை, 12. பெண்ணின் கழுத்து, 13. கொக்கின் கண்டம்.* 34

கற்புடை மடவார் கண்டமும் ஆகும்;
கவின்புறா முட்டையின் திரட்சி
பொற்புலை உடுவொத் திடும்ஒளி நன்றாம்
பலன்தவிர் முனிவரன் என்பும்
மற்புயன் என்பும் வயிரமா மணிகள்
தனக்கெலா மகிமையாம் பச்சை
அற்புதன் பித்தம் பறவைகொண் டேர்ந்தண்
டதனிடைச் சிதறிடத் தோன்றும்.

*மாடப்புறாவின் வெண்மையான முட்டையின் வடிவம் கொண்ட, திரண்ட மேகமுத்துகள் உயர்ந்தவையாகும். ததீசி முனிவரின் எலும்பிலிருந்து வந்தவையும், வலாசுரனின் எலும்பிலிருந்து வந்தவையுமாகிய வைரங்கள் உயர்ந்தவை யாகும். வலாசுரனின் பித்தத்தைக் கருடன் கௌவிப் பறந்ததில் சிதறிய பச்சை (மரகதம்) சிறந்ததாகும்.* 35

இன்னமும் வினதை அருணன்உற் பவித்த
முட்டைஒட் டினைஎழில் கருடன்
தன்அரை யினில்யாத் திடஅது தப்பிச்
சாகர வைப்பினில் உதித்த

பின்னும்மோ கினியோ டிறையவன் தொடரப்
பிறந்திடும் அரிகரன் கருடன்
உன்னி இந்தியத்தைக் கவ்விஒத் ததுவும்
துலுக்கிலும் உதறஉற் பவித்தே,

*தக்கன் மகள் வினிதை. அவள் காசிப முனிவரின் மனைவி. அவள் முட்டையிட்டாள். அதில் அருணன் பிறந்தான். முட்டை ஓட்டினைக் கருடனின் அரையில் கட்டினாள். அது கடல் சூழ்ந்த ஒரு தீவில் தவறி விழுந்தது. அங்கே ஒருவகை மரகதம் தோன்றியது. திருமால் மோகினி அவதாரம் எடுத்தார். சிவன்பின் தொடர்ந்தார். காமத்தால் விந்து வந்தது. அது ஒரு மலையில் விழுந்தது. அந்த விந்துவில் வந்தவரே அரிஹரன் (ஐயனார்). மிச்சப்பட்ட விந்துவைக் கருடன் கவ்விச் சென்று, கடலிலும் துருக்க நாட்டிலும் சிந்தியது. அதில் தோன்றியது ஒருவகை மரகதம் (கருடப்பச்சை)* 36

காடம்சுப் பிரமே காளம்மூ வகைய
கலுழனில் பச்சையாம் காடம்
பீடுயர் சாதி சகுணச தோடம்
சகுணத்தில் பிறந்திடு மாறு
காடம்உல் லசிதம் பேசலம் முத்தம்
கவின்பெறு பிதுகம்முத் தகமாம்
தோடலே சாஞ்சிதம் துட்டமே தோடம்
மூற்சித மேமந்த தோடம்.

*கருடப் பச்சை காடம், சுப்பிரம், காளம் என்ற மூன்று வகைப்படும். இதில் காடம், சகுணம் (குணசம்பந்தமுள்ளது) சதோடம் (தோஷசம்பந்தமுள்ளது) என இருவகைப்படும். குணம் — காடம், வல்லசிதம், பேசலம், பித்தம், முத்தம், பிதுகம் என ஆறுவகைப்படும். சதோடம் — தோடலே சாஞ் சிதம், துட்டம், தோட மூர்ச்சிதம், தோடலேசம், மந்ததோடம் என ஐந்து வகைப்படும்.* 37

தோடம்என் றின்ன நிறம்கிளி மயிலின்
தோகைபுற் குல்லைதா மரைநெல்
ஏடதாம் முன்னை விதியினால் வலன்கண்
இந்திர நீலமா நீலம்
ஆடல்விச் சுவனை முடித்திடும் பழிநீர்
அரும்பரி யாகத்தின் புகையால்
சாடுமா விழியில் ஒழுகிய பூளை
ஒன்றுதன் கண்ணுடல் தாங்கா.

| சகுணப் பெயர் | நிறங்கள் நிறம், தன்மை |
|---|---|
| காடம் | பசும்புல் |
| உல்லசிதம் | மென்மை |
| வேசலம் | நெல்லின் அரிசிக்குமுன் நிலை |
| பித்தம் (பித்தகம்) | கிளியின் சிறகு |
| முத்தம் | துளசி நிறம் |
| பிதுகம் | தாமரை இலையின்நிறம் |
| தோடலே சாஞ்சிதம் | எலுமிச்சை |
| துட்டம் | அலரிஇலை |
| தோடமூர்ச்சிதம் | புல் |
| தோடலேசம் | தாமரை இலை |
| மந்ததோடம் | மயிலிறகு |

(இவை குறிப்பாகவும், முறை பற்றியும் கூறப்பட்டுள்ளன) நீலம், இந்திர நீலம், மாநீலம் என இருவகைப்படும். இந்திரன் விசுவரூபனைக்கொன்ற பழியைப் போக்கச் செய்த யாகப் புகை குதிரையின் கண்ணுள் பட்டுப் பூளையைச் சிந்தியது. 38
அதில் தோன்றியது இந்திர நீலம்.

பருதிதன் தேவி வனமதிற் பேடைப்
பரியதாய் நோற்றிடப் பானு,
கருதியே தானும் குரகத வடிவாய்க்
கலந்திடச் சிதறிய தாது,
இருவகை நீலம் நிணங்கள்கோ மேதம்
எழில்நிற நெய்த்துளிகோ டீர,
புருடவி ராகம் வலன்கப மசுரைப்
பொருந்திடும் என்மர்வா ரத்தே,

சூரியனின் மனைவி சஞ்சை. சூரியன் அவளைப் புணரும் போது, அவளால் சூட்டைத் தாங்க முடியவில்லை. எனவே, தன் உடலின் நிழலை (சாயையாக) சூரியன் கலவி செய்யும் போது சூடுதாங்குவதற்காக வனத்தில் பெண் குதிரை உருவில் தவம் செய்தாள். சூரியன் அந்தப் பெண் குதிரையைப் புணர்ந்து பார்க்கக் கருதினான். தான் ஆண் குதிரை வடிவம் எடுத்தான். சூரியனின் விந்து சிதறியது. அதுவே மாநீலம். வலாசுரனின் நிணங்கள், கோமேதகம் ஆகும். அது நெய்த்துணி, தேன்துளி, பசுமூத்திரம் ஆகிய நிறங்களில் இருக்கும். புஷ்பராகம், வலனின் கபம் ஆகும். 39

கக்கும்இம் மணியால் அந்தர நாடு
கண்டனர் மந்தர வரையின்
பக்கம்இம் மணியாய் இருப்பது; பரமன்
அருளினால் பெற்றவன் உரோமம்
மிக்கவை டூர்யம் இளாவிர தத்து
விரவின கோரக்கம் மகதம்
மக்கம்சிங் களமாம் மலையபா ரிசமும்
வந்திடும் நிறங்களை மயிலே.

*இரணியர்களின் உயிர்குடித்த திருமாலாகிய வெள்ளைப் பன்றி வாய் திறந்து நகைத்துக் கத்தியதால் சிதறிவிழுந்த கபமும் புருடராகம் எனப்படும். இது பாரியாத்திர மலையின் சிகரமாக உள்ளது. இறைவனின் அருளால், வலாசுரனின் உரோமம் வைடூர்யமாயிற்று. அது கோரக்கம், மகதம், சிங்களம், பாரசீகம், பொதிகை, திரிகூடம் முதலிய இடங்களில் கிடைக்கும்.* 40

வலன்தசை துவர்தென் புலத்தவர் இடத்தும்,
மதுகயி டவர்வ சத்தும்
விலங்கலை மகவான் குறைத்திடும் போதும்,
விளங்கின நிறம்கிளி மூக்கோ(டு)
அலர்முருக் கம்பூ வாகும்இம் மணிக்குத்
தெய்வதம் அருக்கனே முதலாம்
மலர்வல்லி சாதி மந்தரம் கழுநீர்
வனசம்உற் பலம்நந்தி மவ்வல்.

*வலனின் தசை பவளமாகும்; பிதுரரில், மது கயிடவர்களைத் திருமால் வதைத்தான். அவர்களின் இரத்தத்தில் — இந்திரன் மலைகளின் சிறகுகளை வெட்டினான்; அந்த இரத்தத்தில் — பவளம் தோன்றின. பவளத்தின் நிறம் கிளிமூக்கு, முருக்கு மலர், செவ்வரத்தமலர் ஆகியவை. இதற்குத் தெய்வம், சூரியன் ஆவான்.* 41

இவ்வலர் சாத்தி இறைஞ்சியே தரிப்போர்
இருங்கடல் சூழ்புவிக் கரசாய்
நவ்விசேர் விழியார் போகமும் பவிசும்
நாற்கரு விப்படை முதலாம்
செவ்விதின் பெறுவார் அலகைநோய் செறுநர்
ஊற்றமும் எய்திடா சிறந்த
கவ்வொளி சூழ்ந்த மணிஇவை என்று,
கரஞ்சகன் கவுரியற் கீந்தான்.

செந்தாமரை, சிறுசண்பகமலர், செவ்வல்லி (மந்தாரம்) செங்கழுநீர், வெண்தாமரை, மல்லிகை முதலிய மலர்களைச் சாத்தி வழிபட்டு, மணிகளை அணியவேண்டும். இப்படிச் செய்தால், பெரிய கடல்சூழ்ந்த உலகுக்கு அரசராவர். மான் விழி மங்கையைப் புணர்ச்சிசெய்யும் வாய்ப்பு வரும். பெருமை கிடைக்கும். நான்கு படைகள், கருவிகள் கிடைக்கும். பேய்ப் பிணி தீரும். பகைவரின் பலம், பலிக்காது. சிறப்பான, கவ்வும் ஒளிகள் சூழ்ந்த மணிகள் இவை என்று, கரஞ்சகன் பாண்டியனுக்கு விளக்கம் சொல்லிக் கொடுத்தான். 42

## கரஞ்சகனின் நிபந்தனை

இன்னமும் ஒன்று புகலுவேன் உன்நோக்
கெய்திய இவள்பிறக் கும்கால்
சொன்னஆ காய வாணிஒன் றுளது
தொடைபுனைந் திடும்இவள் கணவன்
இன்னிலம் முதலா என்னிலத் தினுக்கும்
இறைஎன இறைவரம் அளித்தான்
மன்னவ இவண்நீ மணப்பதற் கிசைவேன்
வாய்மைஒன் றீகுவை யானால்.

இன்னமும் ஒன்றைச் சொல்கிறேன். உன் பார்வை பட்ட இந்தக் காந்தரங்கனி பிறக்கும்போது, ஓர் அசரீரி — ஆகாச வாணியின் ஒலி கேட்டது. அது, இவளுக்கு மாலை அணி விக்கும் கணவன், எல்லா உலகுக்கும் அரசனாவான் என்ப தாகும். அரசனே நீ இவளை மணந்துகொள்ள நான் சம்மதிக் கிறேன். ஆனால், அதற்கு நீ எனக்கு ஒரு சத்தியம் செய்து கொடுக்க வேண்டும். 43

என்னை உளத்தில் உன்னிய படியே
இவன்மொழிந் தனன்என இறைவன்,
மின்நகு மூர லுடன்காரஞ் சகனை
வியந்துநீ வேட்டவை என்னே
நின்உளம் வியப்ப ஈகுவன் வாய்மை
நிறைமையும் ஈகுவன் என்றான்;
என்னது மதத்தைப் பொருந்துவை ஆகில்
இவளைநீ மணப்பதற்கு இசைவேன்.

இப்படிக் கரஞ்சகன் சொன்னவுடன், அது என்னவாக இருக்கும்? எனப் பாண்டியன் சுசேடணன் யோசித்தான். புன்முறு வல் செய்தான். 'நீ விரும்புவது என்ன? உன் மனம் வியப்படையு மாறு தருகிறேன். நிறைவான சத்தியமும் செய்து கொடுப்பேன்'

என்றான். 'என் மதத்திற்கு நீ மாறவேண்டும்; அப்படி மாறினால், இவளை நீ மணப்பதற்குச் சம்மதிப்பேன்.' 44

உன்னது கிளைஞர் யாரும்எம் மதத்தை
உற்றிட உறுதிவேண் டுகிலோம்
மின்இடை மயிலைத் தருகுவன் என்றான்
வேந்தனும் அதற்கிசை வுற்று,
தன்உடன் பிறந்த வீரசே னனையும்,
தகைமைசேர் மந்திரர் தமையும்,
துன்னிய கிளைஞர் தம்மையும் நாட்டோர்
தம்மையும் தொகுத்திவை நிகழ்த்தும்.

'உன் உறவினர் எல்லாரும் என் மதத்தைச் சேரவேண்டும் என உறுதிமொழி கேட்கவில்லை. மின்னல்போன்ற இடையை உடைய மயிலை உனக்கு மணமுடித்துத் தருகிறேன்' என்றான். அரசன் அதற்குச் சம்மதித்தான். தன் சகோதரன் வீர சேனனையும், தகைமை உள்ள மந்திரிகளையும், நெருங்கிய உறவினர்களையும், நாட்டு மக்களில் நெருக்கமானவர்களையும் கூட்டமாகக் கூட்டினான். 45

## வீரசேனனும் போதேந்திரனும் விரோதம் கொள்ளுதல்

காந்தரங் கனியை வேட்பக் கரஞ்சகன் மதத்தைச் சேர்ந்து,
பாந்தமாய் இருக்க வேண்டும் என்றனன் பன்னூல் வல்ல
மாந்தரும் மதிவல் லோரும் மற்றுளார் யாரும் சொல்வார்,
வேந்தர்தம் மேவ லாறே அன்றிவே றெமர்கட் குண்டோ.

சுசேடணன் பேசினான். 'நான் காந்தரங்கனியைத் திருமணம் செய்துகொண்டு, கரஞ்சகனின் மதத்திற்கு மாறிப் பொருத்தமாக இருக்க விரும்புகிறேன்' என்றான். நூல்களைப் படித்தவர்களும், அறிஞர்களும் மற்றுமுள்ள யாவரும், 'அரசன் எதை விரும்புகிறானோ அதைத் தவிர, நாங்கள் வேறென்ன சொல்லமுடியும்?' என்றார்கள். 46

என்றுரை செய்து பின்னும் இயம்புவார் இளைய மன்னும்
மன்றுணை யான போதேந் திரியும்வந் தரசை வாழ்த்தி,
நன்றுரை செய்தாய் நீதி நியாயமோ நலமோ நாடும்
பொன்றுமே புன்ம தத்தைப் பொருந்துதல் புந்தி யாமோ?

அதன் பிறகு, இளவரசன் வீரசேனனும், அமைச்சர் போதேந்திரனும் வந்து, அரசனுக்குச் சம்பிரதாயமான வாழ்த்துச் சொல்லிப் பேசினார்கள். 'அரசே! நீ சொல்வது நீதியா? நியாயமா? நன்றாகச் சொன்னாய். உன் எண்ணம் நாட்டுக்கு

நல்லதா? இழிந்த மதத்தை நாட்டில் பொருத்துவதால் நாடு அழியும்; அறிவு அழியும்.' 47

மோகத்தால் நியாயம் விட்டு முன்பினில் லாத முன்னும்
சோகத்தை ஒழிநீ வேண்டில் சுவர்க்கத்து மடவார் தாமும்
வேகத்தால் வருவர் இந்த விதிஇலாக் குலத்து வந்த
போகப்பூண் முலையி னாளைப் பொருந்துதல் கூடா தென்றார்.

'காம மயக்கத்தால் நியாயத்தை விட்டு, முன்பின் இல்லாத சோகத்தை ஏற்படுத்தாதே. இந்த எண்ணத்தை ஒழித்துவிடு. நீ வேண்டினால், சொர்க்கலோகத்து அழகிகள்கூட வேகமாக ஓடி வருவார்கள். இந்த விதிகெட்ட குலத்தில் வந்த போகம் தரும் அணியணிந்த முலையினாளை நீ முயங்கக் கூடாது' என்றார்கள். 48

இவ்வுரை கேட்ட வேந்தன் இருவரை முனிந்து சொல்லப்
பவ்வியம் இன்றி நீவிர் பகர்ந்தனிர் பண்பாம் என்றே;
அவ்விய நெஞ்சி னான்இவ் அறிஞரைச் செயிக்க எண்ணி,
வெவ்வுரை புகன்றான் இந்த விதத்தினை இளைய வேந்தன்,

இதனைக் கேட்ட அரசன் பணிவில்லாமல் 'என்னை எதிர்த்துப் பேசுகிறீர்கள். இதுதான் பண்பா?' என்று கூறி, வறிய மனத்துடன் இந்த அறிவாளிகளை வெல்ல வல்ல உபாயமாகக் கடுமையான வார்த்தைகளைக் கூறினான். 49

மந்திரி யுடன்அ மைந்து வாய்மைசேர் தானை யோரில்,
வந்தவர் சிலரை ஈட்டி மறைந்துபோய் முனிசேர் கின்ற
சந்தன வரையில் நண்ணித் தவத்தரைத் தாழ்ந்து போற்றிச்
சிந்தைசெய் திருந்தார் இப்பால் செழியன்பின் னவளை வேட்டான்.

அரசனின் இந்த இழிவுரைகளை, இளவரசன் வீரசேனன், மந்திரி போதேந்திரி, நேர்மையான படைவீரர்கள் சிலர் ஆகியோருடன் தனிமையில் கூடி ஆலோசித்தான். முனிவர்கள் தங்கும் பொதிகைக்கு இவர்கள் சென்றனர். துறவிகளைப் பணிந்து வணங்கினர். மேற்கொண்டு என்ன செய்வது எனக் கூடிப் பேசினர். 50

கரஞ்சகன் மதத்தை உற்றுக் கவல்உறக் கன்னி தேயம்
இருந்தனன் ஓடிச் சென்ற இருவரும் எதிரி யாகப்
பொருந்துவ கினர்என் றெண்ணிப் புந்திசெய் தமைச்சர் தம்மில்
பெரும்படை உக்ரன் தன்னைப் பெட்புற நோக்கிச் சொல்வான்.

பாண்டியன் சுசேடணன் காந்தரங்கனியை மணந்து கொண்டான். கரஞ்சகன் மதத்திற்கு மாறினான். கன்னிநாடாம் பாண்டியநாடு கவலை அடைந்தது. பாண்டியன், 'ஓடிப்போன

*இருவரும் எதிரியாகி விட்டார்கள்' என, முடிவெடுத்தான். அதனால் அமைச்சர்களில் போரில் வல்ல உக்கிரன் என்பவனை அழைத்து, அன்புடன் பார்த்து, ஓர் அறிவிப்பைச் சொன்னான்.* *51*

வீரசே னன்போ தேந்திரி இவர்தலை விரைவிற் கொண்டு
சாருவீர் என்னத் தாழ்ந்து தானைசூழ் வரஎ ழுந்து
சேரவே துருவுஞ் செய்தி தெரிந்துதென் குன்றத் துற்றோர்
ஏரணி முனியைப் போற்றி இச்செயல் இயம்பி னாரே.

*'வீரசேனன், போதேந்திரி என்னும் இருவரின் தலைகளை விரைவாக வெட்டிக் கொண்டுவா' என்பது, அரசனின் அறிவிப்பு. உக்கிரன், படைவீரர்களுடன் அந்த இருவரையும் தேடப் புறப்பட்டான். பொதிகை மலையிலிருந்த இருவரும் இச்செய்தி யறிந்து, அழகான தவம் செய்யும் அகத்தியனிடம் தகவல் சொன்னார்கள்.* *52*

## அகத்தியர் வழிகாட்டுதல்

அச்சமோ டுரைக்கும் செய்தி முனிஉ ணர்ந் தபயம் தந்து,
மெச்சவே அருள்நோக் கீந்து மெய்ச்சிவ கவசம் தன்னை
இச்சையால் உபதே சித்துப் புடைமரு ததனில் எய்தி,
நச்சர வணிந்தோன் தன்னைப் போற்றுவீர் நாதன் அங்கண்,

*பயத்துடன் சொன்னவர்களுக்கு முனிவர் அபயகரம் காட்டினார். மெச்சும்படி அருள்பார்வை பார்த்தார். ஆசையுடன் சிவ கவசத்தை உபதேசித்தார். 'திருப்புடை மருதூருக்குச் சென்று, விஷப்பாம்பை அணிந்த சிவனை வழிபடுங்கள்' என்றார்.* *53*

வந்துமைக் காத்து வேண்டும் வரங்களும் வழங்கும் என்று,
செந்தமிழ் முனிவன் கூறிச் செயம்பெறு வீர்செல் கென்றான்;
சுந்தர முனியைப் போற்றித் தென்புடை மருதை நோக்கப்
புந்தியில் கவலை நீங்கப் புரத்தினில் வந்து சேர்ந்து,

*'நாதன் உம்மைக் காப்பாற்றுவார்; தேவையான வரங்களையும் தருவார்' என்று, செந்தமிழ் முனிவர் கூறினார். 'செயம் பெறுவீர்; செல்லுங்கள்!' என்றார். அழகான அகத்தியனைப் போற்றித் தென்புடை மருதூரை நோக்க, அறிவில் கவலை நீங்கியது.* *54*

## சித்தராகிய சிவன் செயல்

தஞ்சம்என் றரனை உள்கிச் சம்புசங் கரமா தேவ
நஞ்சணி கண்ட என்று துதித்தனர் நந்தி தன்னைச்

செஞ்சடை முடியோன் கூவிச் செழியனோ டமைச்சைச் சேர்ந்தே
அஞ்சலன் றுவகை கூறி அழைத்துவா எனஅப் போதில்,

வீரசேனனும் போதேந்திரனும், 'தஞ்சம் அடைந்தோம்' என்று, சிவனைப் போற்றினார்கள். 'சம்போ சங்கர மகா தேவா நஞ்சணி கண்டனே' என்று, துதித்தார்கள். சிவன் நந்தியை அழைத்தார். இறைவன் முன்பு நந்திதேவர் வந்தார். 'வீரசேன னையும் அமைச்சனையும், 'பயப்படாதீர்கள்' என்று கூறி, அழைத்து வா' என்றார். 55

நந்திவே தியன்போல் தோன்றி நரபதி தம்பால் எய்திச்
சிந்தையில் மகிழ்ச்சி பொங்கச் சிவன்உமைக் காப்பான் என்று
முந்துற மொழிந்த ழைத்து முன்னவன் முன்னர் உய்த்தார்
அந்தணர் தம்மைக் காணார் அருச்சுனே சுரனைக் கண்டார்.

நந்திதேவர் அந்தணர் போல உருவம்எடுத்து, வீரசேன னின் எதிரில் வந்தார். 'மனமகிழ்ச்சியுடன் சிவன் உங்களைக் காப்பார்' என்று சொல்லி, இறைவன் எதிரில் அழைத்துவந்து நிறுத்தினார். அந்தணர் மறைந்தார்; சிவனைக் கண்டனர். 56

தொழுதனர் அடியில் வீழ்ந்து துதித்தனர் துணைவன் செய்த
பழுதெலாம் உரைத்தார் இன்னும் பழியினுக் கஞ்சா தெம்மை
விழிதரச் சென்னி கொய்து வீழ்த்திட உக்ர வீரன்
வழுதிதன் ஆணை யாலே வருகின்றான் என்று நைந்தார்.

அடிதொழுதனர்; துதித்தனர். சுசேடணன் செய்த பிழை களையெல்லாம் சொல்லி முறையிட்டனர். 'பழிக்கு அஞ்சாமல் எங்கள் தலையை வெட்ட அரசன் ஆணையுடன் உக்கிரன் விழிப்புடன் தேடிவருகிறான்' என்று சொல்லிப் புலம்பி னார்கள். 57

அமையம்ஈ தெம்மைக் காக்க அருச்சுன வாணா என்று,
குமையும்சோர் வுள்ளத் தோடும் குவித்தகை யவராய் நின்றார்;
இமையவள் கணவன் அங்கோர் சித்தர்போல் எய்தி எங்கோன்
உமைஇங்குப் பாது காப்பான் உடன்வர வென்ற ழைத்து,

அருச்சுனவாணா! எங்களை இந்தச் சமயத்தில் காப்பாற்ற வேண்டும் என்று, குமைந்த மனத்துடன் கரம் கூப்பி வேண்டி னார்கள். இமையவள் கணவன் சித்தர் வேடத்தில் வந்து, 'எங்கள் ஈசன் உங்களைப் பாதுகாப்பான் என்னுடன் வாருங்கள்' என்றார். 58

கூட்டிவந் துறுதென் கீழ்பால் குகையதன் வாயில் தன்னில்,
மூட்டிய அழலாய்த் தோன்ற முன்புவந் ததைவ குந்து

காட்டியே குகையில் உய்க்கக் கவுரியன் அமைச்சன் மற்றும்
ஈட்டிய சேனைக் கெல்லாம் இடம்தர இருக்கின் றார்கள்.

தெற்கில் உள்ள மலைக்குகைக்கு அழைத்துவந்தார். குகை வாயிலில் நெருப்பு எரிந்துகொண்டிருந்தது. நெருப்பை வழி விடச் செய்து, குகைக்குள் அவர்களைப் புகுத்தினார். இளவரசனும் மந்திரியும் உடன்வந்த வீரர்களும் குகையில் இடம் பெற்றார்கள். 59

எதியதாய் வந்த நாதன் இக்குகை தனில்இ ருப்பீர்
மதியவன் குலத்தோன் ஏவ வருபவர் தாமும் காணாப்
பதியிது வாயி லுக்குள் படர்எரி கதவ தாகும்
அதுவன்றிக் காவல் நாமே அஞ்சல்என் றருளி னானே.

சித்தராக வந்த சிவன், 'இக்குகையில் இருங்கள். சந்திர வம்சப் பாண்டியன் ஏவியவர்கள் காணமுடியாத இடம் இது. இதன் வாயிற்கதவே நெருப்பாகும். நாமே காவல் காப்போம்; அஞ்சாதீர்கள்' என்று உரைத்தருளினார். 60

பொய்மதம் தீரும் உங்கள் புந்தியின் கவலும் நீங்கும்;
மெய்மகிழ் வுடன்இ ருப்பீர் என்றுரை விளம்பக் கேட்டு,
நைமனம் உடையர் தம்மை நாதனைப் பணிய நல்கிக்
கைமறி கரந்த மெய்யர் கரந்தபின் எதிவே டத்தால்.

'பொய்மதம் நீங்கும்; உங்கள் மனக்கவலையும் தீரும்; உண்மையான மகிழ்ச்சியுடன் இருங்கள்' என்று, சித்தச்சிவன் அசரீரியாகச் சொன்னதைக் கேட்டு, நைந்துபோன மனம் கொண்ட நம்மை, இறைவனைப் பணியுமாறு செய்தார். அவர், கையில் மானை மறைத்துவந்த கடவுளே ஆவார் என அறிந்தனர். 61

வந்தவர் அவரே இந்தக் குகையிடம் வாயில் காட்டி,
உய்ந்திடு வீர்என் றோதும் உடையவர் அவரே என்னாப்
புந்தியில் புகழ்ந்து நாதன் பொன்அடிக் கன்பு பூண்டு,
தந்தமில் மகிழ்ந்து கொண்டு தகைமையின் இருக்கும் போது,

வந்தவர் அவரே; குகைவாயிலைக் காட்டிப் பிழைக்க வைத்தவர் அவரே; உடையவர் அவரே என்று, அறிவுடைமையுடன் புகழ்ந்து, இறைவன் திருவடிகளுக்கு அன்பு செலுத்தித் தங்களுக்குள் மகிழ்ச்சியடைந்தார்கள். 62

## உக்கிரன் பிணி நீங்கியது

காவலாய் இருந்தார் அந்தக் கனலில்யோ கம்பு ரிந்த,
தாவிலா விரதர் போலத் தவத்தராய் ஓங்கும் சித்தர்

**மேவினி துற்றபோதில் உக்கிர வீரன் எங்கும்**
**ஏவல ருடனே தேடி எய்த்தனன் இங்குற் றானே.**

*சித்தர், குகைக்குக் காவலாய் இருந்தார். குகைவாயிலில் நெருப்பில் குற்றமில்லாத் துறவுக்கோலத்தில் யோகம் புரிந்தார். அப்பொழுது உக்கிரவீரன் தன் படையாட்களுடன் திருப்புடைமருதூருக்கு வந்தான்.* 63

**யாகம் நீடுபு டார்ச்சுனப் பதியினில் யாரும்**
**வேக மாய்வர மதிமயக் கெய்தியே மிகுந்த**
**தாகம் மேவுஅ மகோதரப் பிணிவந்து சாரத்**
**தேகம் ஈனராய் உக்கிரன் முதலினோர் திகைத்தார்.**

*யாகங்கள் நடக்கும் புடார்ச்சுனப்பதியில் எல்லாரும் அவன் வரும் வேகத்தைக் கண்டு மதிமயங்கினார்கள். ஊருக்குள் நுழைந்ததும், உக்கிரனுக்கும் அவன்உடன் வந்தவர்களுக்கும், மகோதரம் (வயிறு பெருக்கும் வியாதி) வந்தது. உடம்பு இளைத்தது; அவர்கள் திகைப்படைந்தார்கள்.* 64

**ஆகி மாஉள கரிஉள ஞமலிமற் றியாவும்**
**பாகு நீங்கிடப் பதைப்புடன் இறந்தஅப் பதத்தில்,**
**தாக மாய்ச்சிலர் வெளிப்பட இருந்தசந் நியாசி**
**யோகர் பால்வந்து தகைக்குநீர் வேணும்என் றுரைத்தார்.**

*அவர்களுடன் வந்த குதிரை, யானை, நாய் முதலியன, பக்குவம் தவறி இறந்தன. யாவரும் தாகத்தால் தவித்தார்கள். சன்யாசி யோகராக — சித்தராக இருந்தவரிடம் வந்து, 'தண்ணீர் வேண்டும்' எனக் கேட்டார்கள்.* 65

**நீவிர் யார்என உக்கிரன் தூதுவர் யாம்நீர்**
**ஆவி தந்தெமக் கருளுவீர் என்றலும் அவர்பால்**
**தேவி நீங்கிய சித்தர்தாம் திருவுளம் இரங்கித்**
**தாவி லாதும திடர்கெடத் தருதும்என் றபயம்,**

*சித்தர், 'நீங்கள் யார்?' என்றார்; 'உக்கிரனின் தூதுவர்கள் நாங்கள்; நீர் கொடுங்கள்; உயிரைக் காப்பாற்றுங்கள்' என்றார் கள். உமாதேவியைப் பிரிந்து வந்திருக்கும் சித்தர், இரக்கம் அடைந்தார். 'தாமதம் இல்லாமல் உங்கள் துயர் கெடும்படியாகத் தருகிறேன்' என்றார்.* 66

**தந்து பூதிஈந் திடப்பணிந் தேந்தியே தரித்தார்,**
**கந்த நீறதாய் அஞ்சினார் கவலையும் நோயும்**
**சிந்த வேமகிழ்ந் ததிசயம் எய்தினார் சென்றே;**
**இந்த நன்மையை உக்கிரன் தன்னிடத் திசைத்தார்.**

*அபயம் தந்தார். விபூதி கொடுத்தார். அவர்கள் அணிந்து கொண்டார்கள். வேற்றுமதம் சார்ந்ததால் மணம் பொருந்திய திருநீறு அணிந்துகொண்டமைக்காகப் பயந்தார்கள். ஆனால், அதை அணிந்தவுடன் கவலையும், மகோதரநோயும் நீங்கி விட்டது. அதனால் அதிசயம் அடைந்தார்கள். உடனே சென்று, உக்கிரனிடம் நிகழ்ந்ததைச் சொன்னார்கள்.* 67

**இன்னல் எய்தினோன் உண்மைஎன் றிசைந்துமெய்ச் சித்தர்**
**தன்னி டத்தில்வந் தடிபணிந் தான்தகை தீர**
**மன்னு பூதிஈந் தனன்சித்த தீர்த்தத்தின் வடகீழ்த்**
**துன்னு ஞானதீர்த் தம்குடைந் தாடிவா சொல்வோம்.**

*மகோதரத்தால் துன்பப்பட்டுக் கொண்டிருந்த உக்கிரன், நிகழ்ந்த உண்மையை நம்பி, சித்தரிடம் வந்து அடி பணிந்தான். நிலைபெற்ற பெருமைகொண்ட விபூதியைச் சித்தர் அவனுக்கு அளித்தார். 'சித்த தீர்த்தத்தின் வடகீழ்த் திசையில் ஞானதீர்த்தம் உள்ளது; அதில் குளித்துவிட்டுவா; விவரம் சொல்கிறோம்' என்றார் யோகி.* 68

**என்றயோ கரைத்தாழ்ந் திந்தத் தீர்த்தத்தில் எய்தித் தானும்,**
**துன்றிய சேனை யோரும் தோய்ந்தனர் தோய்ந்த போதில்,**
**கன்றிய ரோகம் தீர்ந்து கவின்கொள எழுதல் கண்டு,**
**கொன்றையம் சடையார் ஆடல் இதுஎன மகிழ்ச்சி கூர்ந்தார்.**

*அவனும் அவனுடன் வந்தவர்களும், ஞானதீர்த்தத்திற்கு வந்து குளித்தனர். அவர்களின் ரோகம் முழுதும் தீர்ந்தது; அழகான சரீரத்துடன் எழுந்தார்கள். 'கொன்றை அணிந்த சடையவனின் திருவிளையாடல் இது என்று, மகிழ்ச்சியடந்தார்கள்.* 69

**சேனையோ டெழுந்து தென்கீழ்த் திசையினில் வாயில் காவல்**
**மோனரைப் பணிந்து சூழ்ந்து முன்னர்வந் தழலை நோக்கப்**
**பானலம் கண்டர் நோக்கால் பரிசத்தால் வசனப் பண்பால்**
**தான்இடர் நீங்கக் கண்டார் குகையினில் தானை யோடும்.**

*சேனையுடன் தென்கிழக்குத் திசையில் உள்ள குகையின் வாயிலுக்கு வந்தார்கள். மௌனமாக இருந்த சித்தரைச் சுற்றி வந்து நெருப்பைக் கண்டார்கள். நெருப்புக்குள் இருந்தயோகி — நீலகண்டர். பார்வையால், ஸ்பரிசத்தால் — பேச்சால் இடரெல்லாம் நீங்கியதை அறிந்தனர்.* 70

**வீரசே னனையும் கண்டார் மிகுந்தஎம் குற்றம் எல்லாம்**
**தீரவே பொறுக்க வேண்டும் என்றடி பணிந்தார்; சேர்ந்தார்**
**நீருலாம் சடையார் நோக்கு மந்திரத் திருந்தார்; இப்பால்**
**பாரெல்லாம் பரிக்கும் மன்னன் இச்செயல் பகரக் கேட்டான்.**

குகைக்குள்ளே வீரசேனன், மந்திரி, வீரர்கள் இருப்பதைப் பார்த்தார்கள். அவர்களைப் பார்த்து, 'அதிகப் படியாகக் குற்றங்கள் செய்துவிட்டோம்; அவற்றை முற்றிலுமாகப் பொறுத்துக் கொள்ளவேண்டும்' என்று, விழுந்து வணங்கினார்கள். கங்கைச்சடையார், கோயிலுக்குச் சென்றார். உலகம் காக்கும் சுசேடணமன்னன் இந்த அதிசயச் செய்திகளைத் தம்மிடம் வந்தவர்கள் சொல்லக் கேட்டான். 71

## திருந்தினான் சுசேடணன்

எரிதுள்ளி எழுந்தால் என்ன வெகுண்டனன் இருகண் சேப்பப்
பரிவெள்ளம் பரித்தேர் வெள்ளம் பல்படைக் கலத்தின் வெள்ளம்
கரிவெள்ளம் காலாள் வெள்ளம் கரைஇலாக் கடல்அ னீகம்
விரவியே விரைந்தெ ழுந்து சூழ்வர எழுந்தான் போந்தான்.

இருகண்களும் சிவக்க நெருப்புத் துள்ளிஎழுந்தது போலச் சுசேடணன் கோபம்கொண்டான். குதிரைவெள்ளம், குதிரை பூட்டிய தேர்வெள்ளம், பல படைக்கலன்கள்வெள்ளம், யானை வெள்ளம், காலாள்வெள்ளம், கரைஇல்லாக் கடல்போன்ற வெள்ளங்களுடன் விரைவாக எழுந்து புறப்பட்டான். 72

சென்றுநாம் செயித்து மீள்வோம் என்றுதென் பூமி நோக்கிக்
குன்றுடன் கானி யாறும் பின்தள்ளிக் குமரிச் சேர்ப்பன்
தன்துணை மதிஅ மைச்சன் உக்கிரன் முதலோர் சார்ந்த
பொன்திகழ் பொருனை சூழ்ந்து புரைஅருச் சுனத்தில் போந்தான்.

'ஜெயித்து மீள்வோம்' என்ற சபதத்துடன், தெற்குநோக்கிப் புறப்பட்டான். குன்றுகள், காட்டாறுகளைக் கடந்துசென்றான். அவனுடன் குமரிஅரசன், துணைவனான மதியமைச்சன், தக்கிணன் முதலியவர்கள், சார்ந்தவர்கள் வந்தனர். பொன் மயமான பொருனைசூழ்ந்த புடைமருதூருக்கு வந்தான். 73

காந்தரங் கனியாம் தேவி கரஞ்சக னான மாமன்
பாந்தமாய் உளர்அ னேகர் யாரும்இப் பதியில் எய்தப்
போந்தையாம் புணர்ப்பு நீங்கிப் புண்ணியன் அருளி னாலே,
வேந்துளத் தெண்ணி வந்த வினைமறந் தின்பம் உற்றான்.

காந்தரங்கனி என்னும் மனைவியும், மாமனாகிய கரஞ்சகனும், உறவினர்கள் பலரும் இப்பதிக்கு வந்தார்கள். அன்று அநுஷநட்சத்திர நாள் ஆகையால், காந்தரங்கனியை அவன் புணர்ச்சி செய்யவில்லை என்றாலும், சிவன்அருளால் இன்பமான உணர்வில் இருந்தான். எனவே, எதற்காக இவ்வூருக்குப் படைசூழ வந்தோம் என்பதையே மறந்தான். 74

கீட்டிசை கழிந்து தென்பால் வந்தனன் அடைந்தான் சித்தர்
காட்டம்செய் நெருப்பின் மேலே கதிர்எனத் தோன்றக் கண்டான்;
நாட்டம்அங் கவர்மேல் வைத்துப் பணிந்தனன் நாதன் அங்கண்,
கோட்டம்தீர் இறையைக் கூவிப் பூதிஈந் திடக்கு னிந்தே,

*கிழக்குத்திசையை விட்டுத் தெற்குப்பக்கம் வந்து, நெருப்பின் மேலே சூரியன்போலத் தோற்றமளித்த சித்தரைக் கண்டான். அவரைப் பார்த்துக்கொண்டே, கீழே விழுந்து வணங்கினான். மனவளைவு தீர்ந்த அரசனை அழைத்துச் சித்தர் விபூதியை எடுத்தார்.* 75

வாய்புதைத் திடஅ ணிந்தான் மற்றுளோர் தமக்கும் ஈந்தார்;
வேய்அன தோளி யோடு காஞ்சகன் வீழக் கண்டு,
தூயநீ றளித்து வந்தே ஞானதீர்த் தத்தின் கீழ்பால்,
பாய்புனல் சைவ தீர்த்தம் படிந்திவண் வருவீர் என்றார்.

*குனிந்து வாய்புதைத்து நின்ற அரசனுக்குச் சித்தர் நீறு பூசினார். மற்றவர்களுக்கும் கொடுத்தார். மூங்கில்போன்ற தோள் களைக்கொண்ட காந்தரங்கனியுடன், கரஞ்சனனும் சித்தர் காலில் விழுந்து வணங்கினார்கள். சித்தர் அவர்களையும் தூய்மை யாக்கும் திருநீறு தந்து மகிழ்ந்தார். 'எல்லாரும் ஞான தீர்த்தத்தின் கிழக்கே உள்ள நீர் மிகவும் பாயும் சைவதீர்த்தத் தில் குளித்துவிட்டு இங்கே வாருங்கள்' என்றார் சித்தர்.* 76

என்றஅப் படியே செய்ய எதியினைப் போற்றி ஏந்தல்,
சென்றகா ரணம்ம றந்து சித்தத்தில் மகிழ்ச்சி கூர்ந்தே,
நன்றெனத் தானை யோரும் சைவதீர்த் தத்தில் ஆட,
அன்றிறை அளித்த வாறே அனைவரும் ஆடல் உற்றார்.

*சித்தரின் உத்தரவுப்படியே செய்ய, முதலில் அவரைப் போற்றினர்; வந்தவேலையை மறந்தனர். மனத்தில் மகிழ்ச்சி யடைந்தனர். சேனையுடன் சைவதீர்த்தத்தில் குளித்தார் கள்.* 77

நதியினில் ஆடி மீண்டு ஞானமோ னியர்பால் உற்றார்;
துதிசெய நெருப்புக் குண்டம் தோய்குண்டம் அதுவாய்த் தோன்ற,
இதனிலும் படிவீர் என்றான் காஞ்சகன் இறையோன் தேவி
முதலினோர் ஆடி ஏற முன்புபோல் கனவாய்த் தோன்ற,

*நதியில் நீராடி மீண்டு, ஞானமௌன யோகியிடம் வந்தனர். துதித்தார்கள். நெருப்புக்குண்டம், குளிக்கும் குளம் போலத் தெரிந்தது. சித்தயோகி, 'இதிலும் குளியுங்கள்' என்று, மாற்று மதத்தினராக வந்த கரஞ்சகன், காந்தாரக்கனி ஆகியோரைப் பார்த்துச் சொன்னார். அவர்கள் குளித்தார்*

கள். அங்கே குளித்தது உண்மையான குளியலன்று; கனவாக அமைந்தது. 78

கண்டதி சயித்தார் ஞானக் கண்ணர்தம் கருணை யாலே,
தொண்டராய்ச் சைவர் ஆகித் தொல்வினை மதம்ம றந்தார்;
அண்டர்நா யகர்தாம் சித்தர் எனநின்றார் அழைக்கப் பின்னே,
மண்டியே செல்வம் உற்ற மந்திரம் அதினில் எய்தா.

அதைப் பார்த்தவர்கள் அதிசயப்பட்டார்கள். ஞானக் கண்ணினராகிய சித்தரின் கருணையினால், எல்லாரும் சைவராகிச் சிவனடியார்கள் ஆனார்கள். பழைய வினையினால் அவர்கள் மேற்கொண்டிருந்த மதத்தை மறந்தார்கள். தேவர் தலைவனும் சித்தருமாகிய சிவனின் அழைப்பின் பேரில், எல்லாரும் குவிந்த ஞானச் செல்வம் மிகுந்த திருப்புடை மருதூர்த் திருக்கோயிலுக்கு வந்தார்கள். 79

## இறைவனின் அருளுரை

ஈசனைப் பணிவீர் என்ன இறைஞ்சினார் இன்னும் சித்தர்
நேசமோ டரசை நோக்கி நிகழ்த்துநீ புறம தத்தான்
மாசிடைத் தானாய்த் தீர்த்தோன் மந்திரி வீர சேனன்,
தூசுடைத் தானை யோடும் இவண்வந்து துதிக்கின் றாரே.

சித்தர், 'ஈசனைப் பணிவீர்' என்றார். எல்லாரும் இறைஞ்சினார்கள். பின்பு அரனை நோக்கி 'நீ புறமதத்தவனாக, குற்றம் உள்ளவனாக ஆனாய்; மந்திரியாகிய போதேந்திரி, இளவல் வீரசேனன் ஆகியோர் உன் குற்றம் தீர்த்தார்கள். தூசு கிளப்பும் சேனையுடன் அவர்கள் இங்கே வந்து துதிக்கிறார்கள். 80

அவரையும் பாது காப்பாய் அவர்க்கொல நினைத்த தோடம்
பவநறிக் கேது வாய்ப்புன் மதம்பற்றும் பாவம் இந்தப்
புவனியில் தீரும் காலம் இத்தலம் போந்தாய் பின்னும்
கவலைதீர் தீர்த்தம் ஆடிக் களங்கம்அற் றிடுத லாலே.

அவர்களை நீ பாதுகாக்க வேண்டும். அவர்களை நீ கொல்லநினைத்த பாவமும், இவ்வுலகில் பிறப்புக்குக் காரண மான இழிந்தமதத்தைப் பின்பற்றிய பாவமும் தீர்க்கின்ற நற்காலம் வந்ததால், நீ இந்தத் தலத்திற்கு வந்தாய். 81

இந்நகர் சீவன் முத்தி இகத்தவர்க் கின்பம் நல்கும்;
நன்னெறி காட்டும் இந்த நதிமூர்த்தி மகிமை எல்லாம்,
தன்நிக ராம்வி சேடம் சாற்றிட அடங்கா தென்றார்;
மன்னனுக் கிளையான் உக்ரன் மந்திரி தமைவ ரித்தே.

கவலைகளைப் போக்கும் சிவதீர்த்தம் ஆடியதாலே, உன் களங்கங்கள் நீங்கின. இது சீவன்முத்தித் தலமாகும். இங்கே வந்தவர்களுக்கு இன்பம் கொடுக்கும்; நல்லவழிகளைக் காட்டும்; இந்த நதியின் மகிமை, மூர்த்தியின் மகிமை ஆகியவற்றிற்கு நிகரில்லை. அம்மகிமைகளைச் சொல்லி முடியாது' என்றார். 82

கலந்திடச் செய்தார் நின்ற கருணைகூர்ந் திடுமெய்ச் சித்தர்,
இலங்கொளி போல இந்தச் சிவலிங்கத் தெய்தக் கண்டார்;
அலங்கலம் கொன்றை வேயா அரன்எமக் கருள நாம்செய்
பலம்தரு தவம்தான் என்னோ எனப்பர வசத்தன் ஆனான்.

உக்கிரனைக் கொண்டு வீரசேனனையும், போதேந்திரியை யும் அழைத்து வருமாறு செய்து, மன்னனோடு கலந்திருக்குமாறு செய்தார். கருணைகூர்ந்த உண்மைச் சித்தர் ஒளியானார். சிவலிங்கத்தில் ஐக்கியமானார். 'கொன்றை மலர்மாலையை அணிந்தவனே! அரனே! நீயே வந்து எங்களுக்கு அருள் செய்யும் அளவுக்கு, நாங்கள் செய்த பலமான தவம் எதுவோ? அறியோமே!' என்று, அரசன் பரவசமடைந்தான். 83

## சுசேடணன்துதி

சிவனருள் மகிமை எண்ணிச் சிவன்அரு ளியதென் கீழ்சார்
நவைதவிர் பூதிக் குண்டம் ஆகவே கண்டு நாதன்
தவர்என வந்தார் செய்த நீறெனத் தான்எ டுத்துப்
பவம்அறத் தரித்துக் கொண்டு பாங்குளோர் தமக்கும் ஈந்தான்.

சுசேடணன் சிவனின் அருள்மகிமையை நினைத்துப் பார்த்தான். சிவன் சித்தராக நெருப்பில் காட்சியளித்த அக்கினி குண்டம், விபூதிக்குண்டமாக மாறியதைக் கண்டான். நாதன் தவசியாக வந்தார். அவர் செய்த திருநீறு இது என்று, தான் எடுத்த பிறவி நீங்குமாறு அணிந்துகொண்டான். மற்றவர் களுக்கும் விபூதிக் குண்டத்திலிருந்து, திருநீறு எடுத்துக் கொடுத்தான். 84

இச்செயல் யாரும் கண்டார் இவைஅதி சயம்என் றுன்னி,
நச்சர வணிந்தோன் தன்னைப் பூசித்து நாவால் போற்றி,
நிச்சரைப் பணிந்து பூதி நீற்றர்என் றார்கள் அன்று,
மெச்சவே இன்றும் என்றும் விளங்கின பூதிக் குண்டம்.

இதை யாவரும் பார்த்தார்கள். இவை அதிசயம் என்று நினைத்தார்கள். விஷப்பாம்பை அணிந்த சிவனைப் பூசித்து, நாவாரப் போற்றினார்கள். நித்தியமான சிவனடி வணங்கி, 'பூதி

நீற்றார்' என்று பெயரிட்டு வாழ்த்தினார்கள். விபூதிக்குண்டம் அன்றும் இன்றும் என்றும் அங்கே விளங்கிக் கொண்டுள் ளது. 85

வருசுசே டணனும் தம்பி மந்திரி முதலோர் யாரும்,
பருவரை மருத வாணன் பாதங்கள் பணிந்து போற்றி,
நரைவிடை உடையோன் தன்பால் வந்தது நாதன் சித்தாய்
ஒருகுகை தன்னில் வைத்துக் காத்ததும் உக்ரன் மேற்சேர்,

சுசேடணனும், அவன் தம்பியும், மந்திரிகளும் பிறரும் பெருத்தமலையாகிய கயிலாயத்துக்கு உரிய மருதவாணனின் பாதங்களில் விழுந்துவணங்கினார்கள். போற்றினார்கள். வெள்ளைக்காளையை உடைய சிவன், தம்மிடம் வந்து — ஒரு குகையில் வைத்ததையும், உக்கிரனுக்கு மகோதரப் பிணியைக் கொடுத்ததையும், 86

பருவர லான ரோகம் பற்றிய செயலும் தீர்ந்த
பொருவிலா மகிமை யாவும் இளையவன் புகலக் கேட்டுப்
பெருவரை மார்பன் இந்தப் பேசுநா யகனைப் போற்றி,
உருகிஇம் மகிமை எண்ணி உவப்புடன் துதிக்கின் றானால்.

அந்தப் பிணியைத் தீர்த்ததையும், இப்படி இறைவன் செய்த ஒப்பில்லா மகிமைகளையும் வீரசேனன் அண்ணனிடம் விவரமாகச் சொன்னான். அதைக்கேட்ட மலைபோன்ற திண்மை யான மார்பைக்கொண்ட சுசேடணன், பேசு நாயகனாம் பெருமானைப் போற்றி உருகி, மகிமைகளை எண்ணி, மகிழ்ச்சியுடன் துதித்தான். 87

அறிவிலேன் செய்த பாவம்
அனைத்தையும் நீக்கி, என்னை
மறுஇலாது உன்தாள் போற்றி,
வரம்தந்த வரதா! போற்றி!
சிறுவனுக்கு ஆயுள் ஈந்த
செல்வனே! போற்றி! செங்கண்
பொறிஅரவு உடையாய் போற்றி!
புடைமருது அரனே! போற்றி.

(மறு—குற்றம்; சிறுவன்—தம்பி—வீரசேனன்; செங்கண்— சிவந்தகண்; பொறி—புள்ளி; அரவு—பாம்பு; அரன்—சிவன்) 88

மங்கைதன் மோகத் தாலே
புறமதம் மருவி நின்ற,
எங்களைப் பாது காத்த
தன்றி,இச் செயல்பு ரிந்த
பங்கனும் சைவம் ஆக்கி,
பவுத்தம்தீர்த்து அறிந்த ஞானப்
புங்கவ! போற்றி! பூதி
தந்தஅருள் புனிதா போற்றி.

*(மங்கைதன்மோகம்—பெண்மயக்கம்; புறமதம்—வேற்றுமதம்; மருவி—தழுவி; பாதுகாத்ததன்றி—பாதுகாத்ததோடு மட்டுமல்லாமல்; பங்கன்—சிதைவை ஏற்படுத்தியவன்; பவுத்தம்—புத்தமதம்; புங்கவ—குருவே; பூதி—விபூதி)* 89

வேடம்கொண் டென்பால் வந்தே மெலிவினை அகற்றி ஆண்ட,
ஆடல்ஏ றழகா போற்றி என்றடி பரவும் போதில்,
சேடுலாம் வசனம் ஒன்று செழியநீ இவண்இ ருந்து,
பீடுலாம் பணியும் செய்து பின்வந்த வீர சேனன்,

*சித்தர்வேடம் பூண்டு என்னிடத்தில் வந்து, என்னுடைய மனத்தளர்ச்சியை நீக்கி, உன்னுடைய ஆளாக என்னை ஆக்கிக்கொண்ட ஆடல் அழகரே!' என்று துதித்துப் போற்றி னான். அப்பொழுது வெகுதூரத்திலிருந்து ஒரு வசனம் கேட்டது. 'பாண்டியனே நீ இவ்வூரிலேயே இரு. பெருமைதரும் திருப்பணிகளைச் செய்.'* 90

மந்திரி இவரைக் கண்போல் வைத்திவண் மேல்பால் வைகும்
கந்தடு கரட நால்வாய்க் கரிபரி முதல காத்துப்
பந்தமோ டுறுவாய் பாகப் புறமதம் தீர்ந்த பண்பால்,
கந்தமார் சைவ தீர்த்தம் ஆடுவோர் கவலை தீரும்.

*'உன் தம்பியாகிய வீரசேனன், மந்திரி இவர்களைக் கண்போல் கருது. மேற்குப்பக்கத்தில் கட்டுத்தறியில் கட்டும் — மதநீர் பொழியும் — தொங்கும் வாயையுடைய யானைகளையும், குதிரைகளையும் உனக்குக் கொடுக்கிறோம். அவற்றைக் காப்பாற்று. சுற்றம் சூழ வாழ். பிளவுசெய்யும் புறமதத்திலிருந்து நீங்கியதால், நீகுளித்த சைவதீர்த்தத்தில் இனிவரும் காலங்களில் குளிப்போரின் மனக்கவலைகள் தீரும்.* 91

பூதிதந் திடுவ தாலே பூதிமா புரம்என் றோதி,
மாதவர் பணிவார் என்ற அந்தரன் வசனம் கேட்டு,
நீதிசேர் மன்னன் இங்கு நிகழ்திருப் பணியும் செய்து,
காதலால் பணிந்து மேல்பால் காவலன் இருந்தான் மன்னோ.

'விபூதி அளித்த தலம் ஆகையால், இவ்வூர் பூதிபுரம் எனப் பெயர்பெறும். எல்லாத் துறவிகளும் இங்குவந்து வணங்கு வார்கள்' என்று, அந்த நல்ல வசனம் கேட்டது. நீதியரசன் இங்கே பல திருப்பணிகள் செய்தான். காதலால் பணிந்தான். இவ்வூரின் மேற்குப்பக்கத்தில் அரசனாக விளங்கினான். 92

வழுதிஉற் றிடவே செய்த வழுதிமா நகரம் ஆகும்;
பழுதிலாத் தீர்த்த மூர்த்திப் பதிஇதன் பண்பு தன்னை,
விழுமியோர் கேட்பச் சூதன் விளம்பினான் இதன்வி சேடம்
அழிவிலா தின்னும் சொல்வான் அருந்தவர்க் கருளி னாலே.

வழுதி (பாண்டியன்) தங்கி அரசாண்டமையால், திப்புடைமருதூர், 'வழுதிமாநகரம்' என்ற பெயரையும் பெற்றது. குற்றமில்லாத தீர்த்தம், மூர்த்தி, தலம்கொண்ட இதன் பண்புகளைச் சிறந்த துறவிகள் கேட்குமாறு சூதமுனிவர் கூறினார். இதன் சிறப்புகளை, அரிய தவசிகளுக்கு அருளுடன் குறைவில்லாமல் மேலும் தொடர்ந்து சொல்வார். 93

# 12. அலதந்தன் படலம்

மணவூர்இறை கருதும்பழி மாற்றிப்புற மதமும்
தணவாதவல் வினையும்தடிந் தேசைவம தாக்கிக்
குணம்நல்கிய திதுகொன்றையன் அருள்கொண் டலதந்தன்
இணையில்தவம் செயமற்றிவன் பரம்எய்தல்இ சைப்பாம்.

'மணவூர் என்ற ஊரைத் தலைநகராகக் கொண்டு, ஆட்சி செய்த சித்திரசாபமாறன் என்பவன் அடைய இருந்த பழியை மாற்றி, வேற்று மதத்தையும் கொடிய வினையையும் நீக்கி, சுசேடணனைச் சைவனாக ஆக்கிய பண்பான கதையைக் கேட்டீர்கள். அலதந்தன் என்பவன், கொன்றைசூடிய சிவனின் அருளை வேண்டி ஒப்பற்ற தவம் செய்து, பரகதி அடைந்த கதையை இனிச்சொல்கிறேன்' என்று, சூதமுனிவர் மற்ற முனிவர்களுக்குச் சொல்லத் தொடங்கினார். 1

## முசுவின் போர்

முசிஎன்றொரு வசுவேந்திரன் முன்ஓர்உகம் தன்னில்,
அசைவின்றிய நலம்தங்கிய அலதந்தனை ஈன்றான்;
வசையின்றிவர் வாழ்நாளினில் மகவான்தனைப் பொரவே,
விசைகொண்டரி கரிதேர்பரி வீரர்அணி வெள்ளம்,

வசுக்களுக்கு அரசன் முசு என்பவன். ஒரு யுகத்தில் அவன், குற்றமற்ற அலதந்தன் என்பவனை மகனாகப் பெற்றான். முசுஅரசன் தேவேந்திரனை வென்று, தேவர் உலகைக் கைப்பற்ற எண்ணி யானை, தேர், குதிரை, படைவீரர்களுடன் சொர்க்காபுரி என்னும் இடத்திற்குச் சென்றான். 2

## மகன் அலதந்தனின் கோபம்

தொகைசூழ்வர முசிஇந்திரன் தன்கைத்தலம் உற்றே,
மகவானுடன் தொகைநூறொரு வருடம்பொரு துடைந்தான்;
மிகைசெய்தனன் மகவான்என அலதந்தனும் வெகுண்டு,
பகைகொண்டவன் தனைவென்றிடப் பலம்இன்றிய பரிசால்,

*வெள்ளம் சேனை சூழ, இந்திரனுடன் நூற்றொரு வருஷங்கள் போர்செய்தான். தோற்றான்; இறந்தான். அலதந்தன், 'இந்திரன் செய்த கொலை தவறு' என்று, கோபம் கொண்டான். பகைவனாகிய இந்திரனை வென்றிட, அவனுக்குப் படைபலம் இல்லை. 3*

**மானம்பொரு திடநன்சுவை வகைஉண்டிபு சித்தும்**
**கானம்செவி உற்றும்சுக காயம்பெறுத்து யின்றும்,**
**நானம்கள பம்பூசியும் நல்இன்பம்மு யன்றும்**
**தானென்பயன் உயிர்தாங்கிஇ ருக்கின்றவை தன்னால்.**

*தன்மானம் போர்செய்யும்போது, சுவைமிகுந்த உணவைச் சாப்பிட்டும், இனிய இசை கேட்டும், உடம்புச் சுகத்திற்காகத் தூங்கியும், கஸ்தூரி, சந்தனம் முதலிய வாசனைப்பொருள்களைப் பூசிக்கொண்டும், நல்ல புணர்ச்சி இன்பங்களை அடைந்தும் வாழ்வதால் என்ன பயன்? உயிர்தாங்கி இருப்பதால் மட்டும் ஏது பயன்? 4*

## புகரின் அறிவுரை

**என்னும்பல கவல்உற்றனன் இணையில்புகர் தம்பால்**
**முன்நின்றுப ணிந்தேமுசி தனைஇந்திரன் வென்றே,**
**துன்னும்இயல் பினைச்சொற்றனன் சூழ்ச்சித்தொழில் சொல்லி,**
**மன்னும்பலகை வென்றேஉய வழிநல்குவை என்றான்.**

*என்றெல்லாம் கவலைப்பட்டான். 'புகர்' என்ற முனிவரிடம் சென்றான். அவரைப் பணிந்தான். முசியை இந்திரன் வென்று கொன்ற விவரங்களைச் சொன்னான். 'இந்திரனைச் சூழ்ச்சியாக வெல்ல — நிலையான அந்தப் பகையை வீழ்த்திப் பிழைக்க வழி சொல்க' என வேண்டினான். 5*

**குரவன்புகர் அலதந்தனைக் குணமாய்முகம் நோக்கி,**
**விரவும்தவம் புவிமீதினில் வேதப்புடை மருதில்,**
**நிருமித்தவண் புரிவாய்எனில் நேசித்தன முடியும்**
**கருமம்என விடைகொண்டுதென் கயிலைப்பதி உற்றான்.**

*குருவாகிய 'புகர்' என்பவர், அலதந்தனைக் கருணையுடன் பார்த்தார். 'வேதம் வாழும் புடைமருதில் தவம் புரிந்தால், நேசித்த சுகங்கள் கிடைக்கும். அதைச் சொல்வதே உன் கடமை' என்றார். அலதந்தன் விடைகொண்டு, தென்கயிலாயமாகிய திருப்புடைமருதூருக்கு வந்தான். 6*

## இமையோர் பிரமனிடம் முறையிடல்

புடைமாமரு துற்றேபுரி சடையோன்தனைப் போற்றி,
இடம்நன்றெனத் தவம்செய்தனன் இச்செய்தியை இமையோர்,
படிமன்னவன் அறிந்தேபடைத் திடும்வேதனை எய்தி,
அடிபோற்றிட வருசெய்தியை அலரோன்வின விடவே.

*புரிசடையோனாகிய இறைவனைப் போற்றினான். இதுவே தவம் செய்வதற்குத் தக்க இடம் — நல்ல இடம் என்று, தவத்தைத் தொடங்கினான். இந்தச் செய்தியை, இமையவர் உலக அரசனாகிய இந்திரன் அறிந்தான்; படைப்புக் கடவுளாகிய பிரமனிடம் சென்றான்; வணங்கினான். வந்த சேதி என்ன எனப் பிரமன் கேட்டார்.* 7

எம்மோடமர் செய்தான்முசி எனும்தானவன் அவனைத்
தம்ஆருயிர் அகலும்படி தானேதடிந் தனனால்,
அம்மாஅவன் சேய்ஆகிய அலதந்தனும் தவத்தால்,
கைமாபிலம் பெற்றெம்மொடு போர்செய்திடக் கருதி,

*'முசி என்னும் அரக்கன் என்னுடன் போர்செய்தான். நான் அவனைப் போரில் கொன்றேன். அம்மா! அவன் மகன் அலதந்தன், யானையின் பலம்பெற்று, என்னுடன் போர் செய்வதற்காகத் தவம்செய்கிறான்.* 8

தவமேபுரி கின்றான்புடை மருதத்தலம் அதனில்,
அவன்ஆற்றிய முறைகாண்என அலரோன்அதற் கிசைந்தே,
இவனோடிவண் உற்றேதவம் இயற்றும்செயல் ஆன
சிவபூசையின் தருயோகமே திறம்கண்டிது செய்யும்.

*திருப்புடைமருதூரில் அலதந்தன் தவம்செய்கின்றான். அவன் தவம்செய்யும் முறைகளைப் பார்' என்றான். பிரமன் ஞானக்கண்ணால் அலதந்தன் கடுந்தவம் செய்வதைப் பார்த்தார். 'இவனா, இந்தத் திருப்புடைமருதூரில் தவம் செய்யும் செயலில், சிவபூஜையும் உள்ளது' என்றார். அதன் திறத்தைக் கண்டார்.* 9

பூசனைக் கிடையூ றியற்றுதல் கூடா
திதற்கினிப் புணர்தரு சூழ்ச்சி
பேசிடில் வேறொன் றாம்எனில் தடிவாம்
பலத்தினால் அதுநிற்க பின்னும்,

**யோசனை யாதென் றுணர்ந்தனன் தவத்துக்**
**கூறுசெய் யாதுசெய் திடவே,**
**நேசமாய் அதனுக் குருவிலா மாயை**
**ஒன்றினை நிருமிதம் செய்தான்.**

*'பூசைக்கு இடையூறு செய்யக்கூடாது. எனவே, அலதந்தனின் சிவபூசையைக் கலைக்கக் கூடாது; வேறொரு வகையில் பலத்தினால் அவனை வீழ்த்தவேண்டும்' என்று கருதிய பிரமன் நன்கு சிந்தித்தார். உபாயம் கண்டார். தவத்தைக் கலைக்காமல், அதன் பலனைப் பெறாதபடி செய்யும் உபாயம் தோன்றியது. உருவம் இல்லாத மாயாசக்தி ஒன்றைப் படைத்தார்.* 10

## 'பிரமை ஞானம்'

ஏவுவான் செய்த ஏசனை யான
கஞ்சனை எய்தியே என்னை
மேவுவான் அழைத்த வினைஎவன் புகல,
வேண்டும்என் றுரைத்திட விதிதான்
ஆவலால் தவமே புரிஅல தந்தன்
அமையம்பார்த் தவன்இடத் தடைந்து,
நாவினில் இருந்து பிரமைஞா னம்தா
என்றிடும் சொலைநவின் றிடுவாய்.

*அந்த மாயையை அழைத்தார். பழிச்செயலுக்குரிய மாயை பிரமனை அடைந்து, 'எதற்காக என்னை அழைத்தீர்? நானென்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள்' என்றது. பிரமன், 'அலதந்தன் ஆவலுடன் தவம்செய்கிறான். சமையம் பார்த்து அவனிடம் சென்று, அவன் நாவில் நீ தங்கவேண்டும். 'பிரம ஞானம்தா' என், அவன் தவத்தில் வேண்டும் போதெல்லாம், 'பிரமை (பைத்தியம்) ஞானம் தா' எனத் தவறாக வேண்டும்படி நாக்கில் பிறழ்ச்சி ஏற்படுத்தவேண்டும்.* 11

இடைவிடா திந்தப் படிஉரை செய்ய,
இயற்றுவாய் இவன்பெற வேண்டி,
உடையவன் எய்தி உறுபலன் வினவும்
ஓதுநாத் தழும்புறும் வசனம்
படைஎனப் புகல்வாய் நடவென மாயை
படர்ந்தவன் பாலினில் எய்திச்
சடையவன் அருள்பெற் றிடத்தவம் செய்யும்
தகுவன்நா வுற்றிது சாற்றும்.

*இடைவிடாமல் இப்படியே செய்; இவன் சிவனிடம் பலன் கேட்கும் போதும் பிழையாகவே கேட்கும்படி, நாக்கில் தழும்பேறி, 'பிரமை ஞானம்தா' எனக் கேட்கும்படி செய். உடனே புறப்படு' எனப் பிரமன் மாயையிடம் கூற, மாயையும் புறப்பட்டு அலதந்தனை அடைந்தது. சிவனருள் பெறத் தவம் செய்யும் அவனின் நாக்கில் அமர்ந்தது.* 12

## இறைவன் காட்சிதருதல்

நெடியவன் பிரமன் தேடவும் காணா
நிருமலன் நிருதனைப் புரக்க,
வடிவுகொண் டிவண்இம் மாயையைக் கடந்து,
வல்லதாம் பதம்பெற வேண்டும்
கடன்உள தென்னக் கணங்களோ டெய்தி,
கால்உணும் கண்செவிப் பகுவாய்
விடஅர வசைத்தோன் எழுந்தல தந்தா
நீசெயும் பூசனை வியந்தோம்.

*திருமாலும் பிரமனும் அடிமுடி தேடியும் கிடைக்காத சிவபரம்பொருள் அலதந்தனைக்காக்க ஒரு வடிவெடுத்து வந்தார். மாயை அலதந்தன் நாவில் உள்ளது. அதன் சூழ்ச்சியைக் கடந்து, அலதந்தன் நன்மைபெறச் செய்யவேண்டும் என்ற முடிவுடன் சிவன் சிவகணங்களுடன் வந்தார். காற்றை உண்ணுகின்ற, கண்ணையே காதாகக் கொண்டபிளந்த வாயை உடைய, விடப்பாம்பை இடுப்பில் கட்டிய இறைவன், 'அலதந்தா நீ செய்த பூசனை எமக்கு வியப்பளித்தது. உனக்கு வேண்டிய வரம் கேள்' என்றார்.* 13

வேண்டிய வரம்கேள் என்றலும் அவனும்
தந்தையை விண்ணவன் வென்ற
காண்தகு பழியால் கடவுளர் வேந்தை
வென்றிடக் கருதியே இயற்றும்
மாண்தகு செயலை மறந்தனன்; மாயை
நாள்தொறும் வாயினில் இருந்தே
ஈண்டிய பிரமை ஞானம்தா என்னும்
இயற்றிடும் சொல்லும்ஏ கினவால்.

*தன்னுடைய தந்தையைத் தேவர்கள் வெற்றிகொண்ட — யாவரும் அறிந்த பழியை வெல்வதற்காக — இந்திரனை வெல்வதற்காகத் தவம்செய்ததை மறந்தான். நாள்தோறும் மாயை நாக்கில் அமர்ந்து, 'பிரமை ஞானம்தா' என்றே*

*சொல்லிப் பழக்கிய வார்த்தையையே இறைவனிடம் வரமாகக் கேட்காமல், 'பிரமஞானம்தா' என்றும் கேட்காமல், இறைவன் அருளால் 'பரமஞானம் தா' என்றே கேட்டான்.* 14

## பரமஞானம் தா

பணிந்தனன் அருளால் பரமஞா னம்தா
என்றனன் பனிமதிச் சடையோன்
அணக்குடன் எய்தி அளித்தனன் அவன்செய்
தவங்கள்ஒன்று அலதந்தன் துதியைக்
குணங்கவே வேதன் மாயையால் இயற்றிக்
குணித்ததொன் றிவன்குழ கற்கே
இணங்கியே பூசைத் தவம்அவம் போமோ
இறைபர ஞானம்எய் தினனால்.

*உமையுடன் வந்த இறைவன், 'அவ்வண்ணமே ஆகுக' என வரம் அளித்தார். அலதந்தன் துதியைப் பிரமன் மாயையால் வளைக்க முற்பட்டாலும், இறைவனை எண்ணிச் செய்யும் தவம், அவம் ஆகுமா? அலதந்தன் 'பரமஞானம்' அடைந்தான்.* 15

## அலதந்தான் தீர்த்தம்

இவ்வகை நடந்தும் பூசனை இயல்பென்(று)
இந்திரன் பிரமனே முதலோர்
நவ்விசேர் அத்தன் அருளையே நயந்து,
நலம்உறு மருதினில் எய்தி,
அவ்வியம் தீர்க்கு மாறுஅல தந்தன்
ஆடிய தீர்த்தத்தில் ஆடித்
திவ்விய மலரால் சீதரே சுரர்க்குச்
சிறப்புடன் பூசனை செய்து,

*இறைவன் அருள் இருக்குமானால், எந்த மாயையாலும் வெல்லமுடியாது என்பதை உணர்ந்து, மானைக் கையிலேந்திய இறைவனின் அருளை விரும்பி, நன்மை செய்யும் புடை மருதூருக்கு வந்து, பழிதீர்க்கும் தீர்த்தமாகிய, அலதந்தன் குளித்த தீர்த்தத்தில் குளித்து, நல்ல மலர்களினால் சீதரேஸ்வர ராகிய சிவனுக்குச் சிறப்புப் பூசைகள் செய்தார்கள்.* 16

சமரினில் முசியைத் தடிந்ததற் குவன்றன்
சந்ததி தவம்செய்து வெல்ல
அமைவுசெய் திடவே அவன்செயல் கடிய
அலரவன் மாயையை அமைக்க,

இமையவள் பாகா உனதருள் அதனால்
இருவர்தம் பழுதினை அகற்றிச்
சமவினை ஆக்கி முந்திவந் தனையால்
என்றிமை யவன்சரண் பணிந்தான்.

முசியை, இந்திரன் போரில் கொன்றான். அலதந்தன் இந்திரனை வெற்றிகொள்ளத் தவம்செய்தான். அவன் செயலை மாற்றப் பிரமன் மாயையை ஏவினான். 'இமையவரைப் பாகத்தில் கொண்ட சிவனே! நீர் இந்திரன், பிரமன் ஆகியவர்கள் செய்த பிழையான தடையை நீக்கி, மீண்டும் போர்வராமல் சமன்செய்ய முற்பட்டு வந்தீர்' என்று, இறைவன்செயலைத் தொகுத்துக்கூறிப் புகழ்ந்தனர். 17

இப்படிப் பிரமா வும்துதித் தனனால்,
இறைமரு தீசுரன் இயல்பை;
முப்படி யோரும் புகழ்ந்தனர் பணிந்தார்;
முறைமையில் முனிவுடன் வந்த
செப்பிய இருவோர் தம்பதி உற்றார்;
சித்தர்போற் றியசிவன் செய்யும்
ஒப்பிலா இயல்பை இன்னமும் கேட்க,
ஓதுவான் சூதயோ கியனே.

பிரமனும் துதித்தான். இறைவனாகிய மருதீசனின் நல்லியல்பை, மூன்று உலகத்தவர்களும் புகழ்ந்து வணங்கினார்கள். இந்திரனும் பிரமனும் முறையற்ற கோபம் கொண்டிருந்த நிலைமாறி, இந்திரன் தேவலோகத்துக்கும், பிரமன் சத்திய லோகத்துக்கும் சென்றனர் என்று, இக்கதையை முடித்த சூதயோகி, 'கருவூர்ச் சித்தர் போற்றிய சிவனின் ஒப்பற்ற இயல்பு களை இனிமேல் கேளுங்கள்' என்று கூறிக் கருவூர்ச்சித்தர், புடைமருதீசனை வழிபட்ட கதையைச் சொல்லத் தொடங்கினார். 18

ஆகத் திருவிருத்தம் – 1136

# 13. கருவூர்ச் சித்தர் படலம்

அலதந்தன் தவத்தி னாலே அயன்குய்யம் கடந்து முன்னை
மலபந்தம் கடந்து ஞான வழிபெற்ற திதுமேல் வள்ளல்
தலம்வந்த கருவூர்ச் சித்தர் அழைத்திடச் சாய்ந்தேன் என்றப்
புலன்வென்றோர் வந்து போற்றும் தன்மையைப் புகலல் உற்றாம்.

*'அலதந்தன் தன் தவத்தினால், பிரமன் ஏவிய மாயையின் சூழ்ச்சியை வென்று, ஆணவ கன்ம மாயைகளைத் தாண்டி, ஞானவழி பெற்ற கதையை அறிந்தோம். இனிமேல் திருப்புடைமருதூர் என்ற, வள்ளலின் தலத்துக்கு வந்த கருவூர்ச் சித்தர் அழைப்புக்கிணங்கி மெய்சாய்ந்து, 'மெய்சாய்ந்தோன்' எனப் பெயர் பெற்றதையும், புலன்களை வென்ற கருவூர்ச் சித்தர் போற்றிய தன்மையையும் சொல்கிறேன்' என்றார் சூதமுனிவர்.* 1

## சோமபுத்திரன் – தராபதி

சீர்வளர் கயிலை மேவும் சிவகண நாதர் தம்மில்,
பேர்வளர் தரும கேது எனஒரு பெரியோன் மேருச்
சாா்பில்வாழ் மணிகண் டேசன் தன்மகள் திலதை தன்னை
ஏர்பெற மணம்பு ரிந்தோன் இன்பம்உற் றிருக்கும் நாளில்,

*சிறப்புமிகுந்த கயிலையில், சிவகணநாதர்களில் புகழ்பெற்ற தருமகேது என ஒரு பெரியவர் இருந்தார். அவர் மேருமலைப் பகுதியில் வாழும் மணிகண்டேசனின் மகள் திலதை என்பவளைத் திருமணம் செய்துகொண்டு, இன்பமுடன் வாழ்ந்தார்.* 2

மகவொரு நூறு பெற்றான் மைந்தரில் முன்பி றந்த
தகைமைசால் சோம புத்ரன் கயிலையை அகன்று சம்பு
திகழ்தரு கனியின் சாறு சிறந்தநீத் தத்தில் சேல்கள்
உகள்தரு நதிசூழ் போக பூமியும் உடைய ஆகி,

*இவர்கள் நூறு பிள்ளைகளைப் பெற்றார்கள். முதல் பிள்ளை தகைமை மிக்க சோமபுத்திரன் ஆவான். அவன் கயிலாயத்தில் வசிக்காமல், போகபூமிக்கு வந்து இருந்தான். தேவர் உலகில் ஒன்றாகிய போகபூமி, கனிச்சாறு ஓடுவது; சேல்மீன்கள் பிறழுவது; நதிகள் மிகுந்தது.* 3

தலம்புகழ் எழுமான் தேரோன் சந்திரன் இவரைச் சார்ந்த
இலங்கிய நாளும் கோளும் எய்திய உடுக்கள் யாவும்
வலம்கொள வரைக்கு வேந்தாய்க் கனகத்தின் மயமாய் ஓங்கி,
நலம்கொளும் பூத ரத்தின் பாரிசம் நண்ணி னானே.

அவன் பூவுலகில் 'பாரிசம்' என்ற மலைப்பகுதிக்கு வந்து, அங்கு அரசன் ஆனான். உலகம் புகழும் ஏழு குதிரைகள் பூட்டப் பட்ட சூரியன், சந்திரன் இவர்களால் உண்டாகும் நாள்கள், இவர்களைச் சுற்றிய கிரகங்கள், நட்சத்திரங்கள் ஆகியன எல்லாம் பாரிசமலையைச் சுற்றிவரும். அம்மலை பொன்மயமாய் உயர்ந்திருக்கும். பல நன்மைகளைத் தரும். 4

பொன்மயம் ஆன கானப் புடவியின் சாரல் மீது
பன்மலர்ச் சோலைகண்டு மகிழ்ச்சியால் பயிலும் போதில்,
அன்னிலை வாழும் பானு மித்திர வேடன் அன்பாய்
நன்னலம் கூர்ந்து பெற்ற தராபதி எனும்நா மத்தாள்,

அவன் ஒருநாள் மலைசார்ந்த காட்டை ஒட்டிய சோலையில், மகிழ்ச்சியுடன் உலாவிக்கொண்டிருந்தான். அப்பகுதியில் வாழும் பானுமித்திர வேடனின் மகள் தராபதி என்பவள் தன்னைச் சிங்காரித்துக் கொண்டு, அன்புடன் அச்சோலைக்கு வந்தாள். 5

கன்னிநன் மலர்கள் கொய்து புதுமலர்க் காவில் எய்த,
அன்னிலை அடைந்த சோம புத்திரன் அவளைக் கண்டு,
மின்ஒரு வடிவம் கொண்ட விளங்கிழை யோ,மா மேரு
மன்னவன் மகளோ மாகத் தரம்பையோ அணங்கோ என்ன,

நல்ல பூக்களைக் கொய்து செல்வதற்காகப் புது வகையான மலர்கள் உள்ள அந்தச் சோலைக்குத் தராபதி என்னும் அந்தக் கன்னி வந்தாள். சோமபுத்திரனும் அந்த இடத்திற்கு வந்தான். அவளைப் பார்த்தான். 'மின்னலே ஒரு வடிவம் எடுத்து விளங்கும் ஆபரணங்களை அணிந்து வந்ததோ? மகாமேருவின் மகளோ? தேவர்உலகத்தின் அரம்பையோ? சூர்த் தெய்வமோ?' என்று எண்ணினான். 6

எண்ணினன் கண்டான் ஐயம் உற்றனன் இவள்தன் சாயை
கண்இமைப் பதனால் விண்ணோர் கன்னிகை அல்லள் காலோ,
மண்ணினில் பொருந்த லாலே மாகுல மகளாம் என்ன
உண்ணினைந் திவள்தன் நோக்கின் குறிப்புணர் வென்னே
என்னே.

இவ்வாறு எண்ணி, ஐயம் அடைந்து, இவள் சாயல், கண்ணிமைத்தல் ஆகியவற்றால் தேவலோகப் பெண்ணல்லள்

என முடிவெடுத்தான். கால்கள் மண்ணில் படுகின்றன. எனவே, இவள் உயர்ந்த மனிதகுலப் பெண்தான் என உள்ளத்தால் ஆராய்ந்து அறிந்தான். (தேவர்களுக்குக் கண் இமைக்காது; கால் மண்ணில் பதியாது). பின்னர் இவள் பார்க்கும் பார்வையின் குறிப்பு என்ன எனச் சிந்தித்தான். 7

காமுற்றான் மதன பாணம் கருத்தழிந் திடத்து ளைக்க
ஏமுற்றான் மயலால் நீடி இத்தரா பதிபால் எய்திச்
சோமுற்றான் மின்னே நின்பால் சுகம்உற்ற ஆசை கூர்ந்தேன்
தாமுத்தம் என்றான் சோம புத்திரன் தன்னை நோக்கி,

காமம் அடைந்தான். அவன் கருத்து அழியும்படி மன்மத பாணங்கள் துளைத்தன. இப்பொழுதைக்கு மயக்கம் என்பதே அவனுக்குப் பாதுகாப்பாக ஆயிற்று. தராபதியை நெருங்கினான். மனச்சலிப்படைந்தான். 'மின்னலே! நான் உன்னிடம் சுகம் முற்றும்படியாக ஆசை கொண்டேன். முத்தம் கொடு' என்றான். 8

கான்உற்ற வனிதை சொல்வாள் காமுற்ற செயலால் சேரத்
தான்உற்ற சாதி அல்ல தமர்கள்ஈ தறியில் என்னை
வான்உற்ற உன்னைக் கொல்வார் வல்லைநீங் கிப்போ கென்றாள்
தேன்உற்ற சொல்லைக் கேட்டுத் தெளிவுகொண் டேகி னானே.

கானகத்து வனிதை சோமபுத்திரனைப் பார்த்து, 'நீ காமம் அடைந்தாய் என்பதற்காக உன்னைப் புணரும் சாதியல்ல என் சாதி; என் உறவினர்கள் இச்செய்தி அறிந்தால், என்னையும், உயர்நிலையில் உள்ள உன்னையும் கொல்வர்; விரைவாக இங்கிருந்து போய்விடு' என்றாள். தேன்போன்ற அவளின் பேச்சைக் கேட்டுத் தெளிவடைந்து, சோமபுத்திரன் அவ்விடத்தை விட்டு நீங்கினான். 9

தவத்தினில் மிக்கோ ரேனும் தன்வினைச் சார்வந் துற்றால்,
பவத்தர்ஆ குவர்உய்த் தாலும் ஊழ்வினைப் பகுதி போமோ?
அவத்தம்உற் றதைவிட் டேக அரிவையும் அகன்றாள் இந்தக்
கவர்ப்படு செயலை வேடன் அறிந்தனன் கவலை உற்றான்.

"எவ்வளவுதான் தவவலிமையை ஏற்படுத்திக் கொண்டாலும், முன்வினைத் தொடர்ச்சியால் பிறப்புக்குக் காரணமாகிய செயலைச் சிலர் செய்துவிடுவார்கள். எவ்வளவு தள்ளினாலும், ஊழ்வினைப் பகுதி போகாது. முத்தம் கொடு என அரசன் கேட்டதால், மனஅவத்தைப் பட்டு அரிவை, சோலையை விட்டு நீங்கினாள். அவனுக்குக் காமமும், அவளுக்குக் காமமின்மையும் ஆகிய கவர்ப்படு செயலை (பிளவுபட்ட

*செயல்; இறுதி செய்யப்பட்ட செயல்) வேடன் அறிந்தான். கவலை அடைந்தான்.* 10

தான்பெற்ற தையல் தன்பால் சார்ந்தனன் சாற்று கின்றான்
வான்பெற்ற முனிவர் சொன்னால் வாமன பாகச் சார்பால்
ஊன்பெற்ற செயலை மேலோர்க் குதவிடா திகழ்ந்தாய் உன்பால்
மீன்பெற்ற விழியாய் குற்றம் விளைந்ததென் றுரைத்து மீண்டும்,

*தான்பெற்ற மகளாகிய தராபதியிடம், பானுமித்திர வேடன் சென்றான். 'சோமபுத்திரன் வான்பெற்ற முனிவன். அவன் சொன்னதை நீ செய்திருக்க வேண்டும். குட்டையான பிறப்பைச் சார்ந்ததால், நீ உதவவில்லை. மேலோர் கேட்டால் தசையினால் செய்யும் செயலுக்கு உதவவேண்டும். உதவாமை மட்டுமட்டுமின்றி, இகழவும் செய்தாய். மீன்போன்ற விழியாளே! தவறு நடந்துவிட்டது.* 11

அக்குற்றம் அதனால் கன்ம பூவனத் தவத ரித்தே,
தொக்குற்ற புருட வேட்கை இன்றியே சுழல்வாய் என்று,
மிக்குற்ற வேடன் சாபம் விளைத்தனன் வினை யினாலே
இக்குற்ற மொழியாள் செய்கை இத்திறம் நிற்க இப்பால்,

*நீ செய்த குற்றத்தால் கர்மபூமியில் நீ பிறக்க வேண்டும்; புருஷ வேட்கை முற்றிலும் இல்லாமல் சுழலவேண்டும்' என்று, மேன்மை உள்ள வேடன் தன்மகளுக்குச் சாபம் கொடுத்தான். கரும்புமொழி பேசும் அவள், முன்வினையினால் இந்த நிலை அடைந்தாள்.* 12

## சோமபுத்திரனுக்குத் தந்தைஇட்ட சாபமும், விமோசனமும்

சோமபுத் திரன்தான் சென்று கயிலையில் தொகுக ணத்தோர்
தாமுற்று சபையில் நாதன் சந்நிதி இருந்து சந்தப்
பாமுற்று வீணை பாடும் தந்தைபால் படரப் பார்த்தே,
ஏமுற்ற மாந்தர் போல இழிவுற்றாய் எனமு னிந்தான்.

*சோமபுத்திரன் கயிலைக்குச் சென்றான். அங்கே சிவ கணத்தோர் நிறைந்திருக்கும் சபைக்குச் சென்றான். அங்கே சிவ சன்னிதானத்தில் தருமகேது பக்திப்பாடல்களை வீணையில் இசைத்துக்கொண்டிருந்தார். அவரருகில் சோமபுத்திரன் சென்று நின்றான். 'கொழுப்புடைய மனிதர் போல, இழிவடைந்து விட்டாயே!' என்று, தந்தை மகனைப் பார்த்துக் கோபித்தார்.* 13

கானவர் கன்னிக் காசை பூண்டனை கருதும் சீரால்
மானிடப் பிறப்பில் எய்தி மான்விழி யார்மேல் ஆசை
தானிலா தெளிய னாகித் தரணியில் திரிவாய் பின்னர்த்
தேனுலாம் இதழி பூண்ட சிவத்தலத் தெய்திப் போற்றி,

*'கானவர் மங்கைக்கு ஆசை பூண்டாய்; இந்தக் கருத்தால் நீ மனிதனாகப் பிறக்கவேண்டும். எளியவனாகிப் பெண்களின் மேல் ஆசை இல்லாதவனாகத் திரியவேண்டும். பிறகு தேன் பொருந்திய கொன்றையணிந்த ஒரு தலத்துக்குச் சென்று வழிபடுவாய்.' 14*

வரும்பொழு திந்தத் தோடம் அறிந்துபின் கயிலை தன்னில்,
பொருந்துவாய் என்ன முன்னோன் புகன்றனன் அந்தோ காமம்
விரும்பினோர்க் குறுதி உண்டோ வெந்நர கென்பர் மேலோர்
தரும்பிற விக்கோர் வித்தாம் வினைசெறி கலம்அ தாமால்.

*'அப்பொழுது எந்தத் தோஷத்தினால் நீ மனிதனாகப் பிறந்தாய் என்பது உனக்குப் புலப்படும். பிறகு கயிலாயத்தில் வந்து பொருந்தி இரு' என்று தந்தையாகிய தருமகேது கூறினார். 'காமம் கொண்டவர்களுக்கு உறுதியில்லை; நரகுக் குப் போவார்கள் என்று, மேலோர் சொல்வார்கள். காமம் பிறப்புக்கு விதை; காமம் வினைகளைத் திரட்டி வைத்திருக்கும் பாத்திரம்' 15*

## மண்ணுலகப் பிறப்பு

விழுந்தடி பணிந்தான் சாப வினைவசத் தாகி வெற்பில்,
தொழும்பரி சகன்று பாரில் தொன்மைசால் இந்த்ர நீலச்
செழுங்கிரி சார்பில் வந்த சவுசம நதிதீ ரத்தில்,
முழுங்குகற் பேச்சு ரத்தில் முதல்வரு ணத்தில் வந்த,

*தந்தையாகிய தருமகேதுவைச் சோமபுத்திரன் திருவடிகளில் விழுந்து வணங்கினான். சாபம் ஏற்று வினை வசப்பட்டமையால், கயிலாய நாதனை வணங்கும் பாக்கியம் அவனுக்குக் கிடைக்க வில்லை. பழமையான இந்திர நீலம் (இந்திரகிரி — நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்றான திருப்போர்க்கு அருகில் உள்ளமலை) என்ற மலைக்கருகில், சவுசம நதிக்கரையில், ஆயிரத்தெட்டுச் சிவத்தலங்களில் ஒன்றான கர்ப்பேச்சுவரத்தில் — கருவூரில் முதல் வருணத்தில் (அந்தணர்) பூதியார் என்பவர் ஒருவர் இருந்தார். 16*

பூதியார் என்பார் முந்நூல் அணிந்திடும் புனிதர் வேதம்
ஓதிய இவர்தம் பாரி கலாபதி வயிற்றில் உற்ற

நீதியால் பிறந்தான் கற்பேச் சுரன்என நிகழும் காலை,
ஆதியில் அகன்ற வேடத் திரிதரா பதிஅவ் வூரில்,

பூதியார், முந்நூல் அணிந்திடும் புனிதர் ஆவார். வேதம் ஓதிய இவரின் மனைவி, கலாவதி என்பவர் ஆவார். இவர்கள் வயிற்றில் நீதிமானாகப் பிறந்தவன், கர்ப்பேசுவரன் எனப் பெயர் பெற்றான். 17

மறைதெளி வுற்ற பூதி பூடணன் மனைவி யான
பிறைநுதல் பவளச் செவ்வாய்ச் சவுந்தரி வயின்பி றந்தாள்
நறைதரு மொழியாள் காதம் பரிஎனும் நாமம் பெற்றுக்
குறைவிலாப் பருவம் எய்திக் கொம்பனார் குழுவி னோடு,

முற்பிறப்பில் வேடப்பெண்ணாக இருந்த தராபதி, அதே ஊரில் பிறந்தாள். வேதத்தெளிவுபெற்ற 'பூதிபூஷணன்' என்ற அந்தணனுக்கும், பிறை போன்ற நெற்றியும், பவளம் போன்ற செவ்வாயும் கொண்ட 'சௌந்தரி' என்பாளுக்கும் மகளாக அவள் பிறந்தாள். 'காதம்பரி' என்பது அவள் பெயராகும். நிறைவான வார்த்தைகளைப் பேசும் அவள், குறைவில்லாத பருவம் (பூப்பு) எய்தினாள். கொம்பு போன்ற — பற்றுக் கோடான — தோழிகளுடன் விளையாடினாள். 18

அம்மனை பயின்று பந்து கழங்குடன் ஆடி ஊசல்
தம்மனை மகிழ்ச்சி பொங்கத் தனக்கழ கியற்றிச் சார்ந்து,
கம்மனு தடங்கள் ஆடிக் காவினில் பூக்கள் கொய்து,
வெம்முலை பாவைக் கூட்டிச் சிற்றிலால் விளையாட் டெய்தி,

அம்மானை, பந்து, கழற்சிக்காய் (கழங்கு), ஊசல் முதலிய பெண்கள் ஆடும் விளையாட்டுகளைப் பயின்று, ஆடி, மகிழ்ச்சி பொங்கத் தன் வீட்டுக்கு அழகு சேர்த்தாள். நீர்உள்ள துணைக்குளங்களில் (பிறர்காணாதபடி, குளத்தின் நீரைச் சுரங்கவழியே கொண்டுவந்து, வீட்டுக்கொல்லையில் ஏற்படுத்திய குளம் அறுகுளம்; துணைக்குளம்) குளித்து, வீட்டுச் சோலையில் பூக்கள் கொய்து, கொடிய முலைகளைக் கொண்ட பொம்மைகளை வைத்து விளையாடி, சிற்றில் கட்டி, முறையாக வளர்ந்துவந்தாள். 19

## திருமண வெறுப்பு

வளரும்நாள் இவளை முன்னே வளர்வினைத் தொடர்பால் மற்றைக்
குளிர்நகர் தன்னில் வாழும் சிவபூதி குமர னுக்கு,
விளைவினால் இவளைப் பேசி விவாகம்செய் வதற்கு நேர்ந்து,
கிளைஉளோர் கூடி ஈசன் திருவுளம் கேட்ட போது,

காதம்பரிக்கு, போன பிறவியில் முத்தம் மறுத்த வினைத் தொடர்பு காரணமாக, குளிர்ந்த அந்த நகரில் வாழும் பூதிபூஷணன் மகனாகிய கர்ப்பேசுவரனை மணம் பேசினார்கள். இருவீட்டாரும் உடம்பட்டார்கள். சுற்றத்தினர் யாவரும் கூடி, ஈசனின் திருவுளக் குறிப்பைக் கேட்டார்கள். 20

தொடர்ச்சியால் வேட்கை இல்லை இவர்கட்குத் தொல்லைநாளில்
வடுப்படர் சாபத் தாலே மணம்இலை என்று பார்மேல்
திடப்படும் அறிஞர் கேட்கச் சிவனருட் செயலால் வானின்
இடைப்படும் அசர வாணி எழுந்தன இதனைக் கேளா.

'போன பிறவி, நிகழ்ச்சியால் இவர்கள் இருவருக்குமே திருமணஆசை இல்லை. சாபம் வடுவாக அமைந்துள்ளது. எனவே, திருமணம் இல்லை.' எனச் சிவனின் அருளால் அசரீரி வாணியின் வாக்கு எழுந்தது. திண்மை உள்ள அறிஞர்கள் இதனைக் கேட்டனர். 21

கேட்டலும் கடிம ணத்தைக் கடிந்தனன் பூதி மைந்தன்;
வாட்டம்ஒன் றின்றி யோகம் பூண்டுவான் செல்வோர்க் கேணி
நாட்டமாம் கோகன் னத்தில் நண்ணிநன் குற்றான் அன்பு
மூட்டஆன் செவிஇ லிங்க மூர்த்திசந் நிதியின் முன்னே,

பந்தமாக்கும் திருமணத்தைக் கர்ப்பேசுவரன் வெறுத்தான். அதனால் அவன் வருத்தப்படவில்லை. யோகம் செய்ய விரும்பினான். வானத்திற்கு (தேவராக) ஏணியாக அமைந்த திருக் கோகர்ணம் என்ற சிவத்தலத்திற்குச் சென்றான். (இராவணன் பற்றி இழுக்கமுடியாதபடி வழுக்குவதால்) பசுவின் செவிபோல் அமைந்த இலிங்கமூர்த்தியின் சன்னிதியை அடைந்தான். 22

## மல்லிகார்ச்சுனத்தில்

பணிந்தனன் வலம்கொண் டான்முன் பரவினன் பங்க யத்துக்(கு)
இணங்கிய பாத பூசை இயற்றியே ஒருசார் பெய்தி,
வணங்கியே தவம்பு ரிந்தான் மல்லிகார்ச் சுனத்து வள்ளல்;
அணங்கர வசைத்த சோதி அங்கெழுந் தவனை நோக்கி,

வலங்கொண்டு பணிந்தான். எதிரே நின்று பரவினான். தாமரைத் திருவடிகளுக்குப் பூசை செய்தான். ஓரத்தில் தங்கி, வணங்கினான். தவம்செய்தான். திருக்கோகர்ண நாதராகிய மல்லிகார்ச்சுன நாதர் — அஞ்சத்தகும் பாம்பை இடுப்பில் அணிந்த ஜோதி, அங்கே எழுந்தருளினார். 23

உறுதவம் புரிந்த செய்கைக் குவந்தனம் உனக்கு வேண்டும்
பெறுவரம் என்னே என்னக் கலாபதி பெற்ற மைந்தன்,
மறுஇலா வரங்கள் கேட்டபான் வணங்கியே வழுத்தி நின்றே,
அறுவகைச் சமய மூல அட்டமா சித்தி வேண்டும்,

மல்லிகார்ச்சுனப் பெருமான் கர்ப்பேசுவரனைப் பார்த்து, 'மிக்கதவம் செய்த உன் செய்கைக்கு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டும் வரம் என்ன? கேள்' என்றார். கலாவதி என்பவளுக்குப் பிறந்த கர்ப்பேசுவரன், குற்றமில்லா வரங்களைக் கேட்கத் தொடங்கினான். வணங்கினான்; வாழ்த்தினான். 24

நின்பதம் அடையும் வண்ணம் நான்செயும் நெடிய பாவத்
துன்பமும் கழிய வேண்டும் சுத்தசா யுச்யம் வேண்டும்;
என்பர வணிந்தோய் என்று துதித்தனன் இடைஅ றாத
அன்பனே தந்தோம் என்றான் இன்னம்ஒன் றருளிச் செய்வான்.

'எலும்பையும் பாம்பையும் அணிந்தவரே! ஆறுவகைச் சமயங்களுக்கும் [சைவம் (சிவம்), வைணவம் (திருமால்), சாக்தம் (பராசக்தி), காணாபத்யம் (கணபதி), கௌமாரம் (முருகன்), சௌரம் (சூரியன்)] மூலமான அட்டமா (பெரிய) சித்திகள் (நிறைவேற்றங்கள்) வேண்டும். உன் பதம் அடையும்படி வரம்வேண்டும். நான் செய்யும் நீண்ட பாவங்கள், அதனால் வரும் துன்பங்கள் கழியவேண்டும்; சுத்த சாயுச்சியம் (நான்காம் உயர்நிலை முத்தி. இறையடியில் இரண்டறக் கலப்பது) வேண்டும்' என்று, கர்ப்பேசுவரன் வரம் கேட்டான். 'இடையீடற்ற அன்பை உடையவனே! வரம் தந்தோம்' என்று, இறைவன் அருள்செய்தார். 25

அறிவுசேர் கருவூ ரானே என்றழைத் தன்பால் நோக்கித்
தறுகண்வே டத்திக் காசை கொண்டனை தரணி உற்றாய்;
தெறுகின்ற பாவ சேடம் தீர்ந்திடத் தெக்க ணத்தில்,
உறுபுடார்ச் சுனமாம் காசிச் சேத்திரம் ஒன்றுண் டாமால்,

இன்னமும் சிலவற்றை இறைவன் கூறினார். 'அறிவு சேர்ந்த கருவூரானே!' என்று அழைத்தார். அன்பாகப் பார்த்தார். வீரமுள்ள வேடர்குலத்துப் பெண்ணின்மேல் ஆசை வைத்தாய். அதனால் மண்ணுலகில் பிறந்தாய். சுடுகின்ற பாவத்தின் மிச்சம், தென்னாட்டில் உள்ள பெரிய, புடார்ச்சுனம் என்னும் தட்சிணகாசித் தலத்தில் நீங்கும். 26

அத்தலத் தெய்தி ஆங்கே மதுவுடன் ஊன்அ யின்றால்,
பொத்திய புசிப்பு நீங்கும் புடைமரு தன்பால் வேண்டும்
சித்தியும் பெறுவாய் பின்பு கயிலையைச் சேர்வாய் என்று,
நித்தனார் அருளிச் செய்தவ் இலிங்கத்துள் நிறைந்தார் அன்றே.

*அத்தலத்திற்குச் சென்று, அங்கே மது (தேன்), ஊன் (வன்னிக்காய்) தின்றால், உன்னைக்கவ்விய பாவத்தைத் துய்ப்பதிலிருந்து விடுபடலாம். புடார்ச்சுனநாதனிடம் நீ வேண்டும் சித்திகளையும் பெறலாம். பிறகு கயிலாயத்தை அடைவாய்' என்று, நித்தியமான பெருமான் அருளிச் செய்தார். பின்னர் இலிங்கத்துக்குள் நிறைந்தார். 27*

## கருவூர்ச்சித்தர், உரோமசித்தரைச் சந்தித்தல்

விடம்திகழ் கண்டன் பாலில் விடைபெற்று விலங்கல் சூழ்ந்த,
கடங்களும் கானி யாறும் கல்அதர் வனமும் நீந்திப்
படம்கிழித் தரவை நூக்கும் பச்சைமா மயிலோன் வாழும்,
தடம்திகழ் சயிலம் மேவும் சரவணன் தன்னைப் போற்றி,

*விஷம் திகழும் கண்டத்தை உடைய சிவனிடமிருந்து விடைபெற்று, மலைகள் சூழ்ந்த காடுகளும், காட்டாறுகளும் கல்வழியும், வனங்களும் கடந்து, பாம்பின் படத்தைக் கிழித்துத் தூக்கும் பச்சைமயிலை வாகனமாக உடைய முருகன் வாழும் மலையாகிய திருத்தணிகையில் சரவணனைப் போற்றினார். 28*

விடைபெற்ற சித்தர் அங்ஙன் விளங்கிய உரோமர் தம்பால்,
அடைவுற்றார் தமது பண்பும் அரன்அருட் செயலும் தென்பால்,
புடையுற்ற மருதிற் போகப் புகன்றதும் புகன்றார் யோகி,
நடைபெற்ற சித்தர் தம்மை நோக்கியே நவிலு கின்றார்.

*முருகனிடம் விடைபெற்றுக்கொண்டு, அம்மலையில் வாழ்ந்த உரோமசித்தரை அடைந்தார். தன்னுடைய பண்புகளைக் கூறினார். இறைவன் தனக்குச்செய்த அருளைக் கூறினார். தெற்குத்திசையில் புடைமருதிற்குச் செல்லுமாறு இறைவன் பணித்ததையும் கூறினார். நடந்துவந்த கருவூர்ச்சித்தரை நோக்கி, உரோமயோகி சில செய்திகளைக் கூறினார். 29*

உலகினில் அனேக தெய்வ தானம்உண் டதனில் உண்மை
இலகினோர்க் கெளிதில் நல்கும் இகபரம் எல்லாம் ஒன்றாய்
மலர்தரு மேல்ஆ தாரம் மருவிய மருதப் பொந்தில்,
அலர்தரும் பொருள்ஏ காந்தம் அப்பதி வகையைக் கேண்மோ.

*உலகத்தில் எத்தனையோ தெய்வத்திருத்தலங்கள் உள்ளன. இது உண்மை. அடைந்தவர்களுக்கு எளிமையாக இகபரசுகங் களைத் தரும்தலம் ஒன்றுதான். பல இதழ்கள் உள்ள*

*தாமரைமலரில் ஒரே ஒரு பொகுட்டுப் போல மருதமரத்துப் பொந்தில் விரிந்த — ஏகாந்தமானது அதுவேயாகும். அப்பதியின் தகைமைகளைச் செல்கிறேன்; கேளுங்கள். 30*

பூதமும் கலையும் பூத்த புடையில்வாழ் பூத நாத,
வேதனைப் பரவும் காலம் விதியுகம் பதினான் கிற்கு,
நாதனும் மனுவும் செங்கோல் நரபதி முதலோர் போற்றும்
சீதர நாதன் என்றார் அத்திறம் செப்ப வேண்டும்.

*பஞ்சபூதங்களும், அறுபத்துநான்கு கலைகளும் பூத்த இடம் அது. பூதகணங்களுக்குத் தலைவனாகிய வேதனை (சிவனை) விதிக்கப்பட்ட பதினான்கு யுகங்களிலும் (மனுவந்திரங்களிலும்) பரவலாம். பதினான்கு யுகங்களுக்கும் நாதர்களாகிய பதினான்கு மனுக்களும், அக்காலங்களில் ஆளும் மண்ணுலக மன்னர்களும் போற்றுகிற — ஸ்ரீதரனின் தலைவர் அங்குள்ளவரே என்றார். 31*

## உரோமர், திருப்புடைமருதப் பெருமை, வழிபட்டோர் பட்டியல் கூறுதல்

என்றுபணிந் தவர்க்குரைப்பார் அனந்தயுகம்
பதினான்கு கோடி ஈசன்
துன்றிறைவன் நாதன்நா ராயணனாம்
தொகைகொள்அற் புதங்க ளந்தம்
வென்றிபுடார்ச் சுனத்துடனே தாண்டவனாம்
வின்னசன விண்ணாம் மாகம்
மன்றுதரு மையுகமே யையுகமே
மணியாரன் மணிபி ராணன்

*'திருப்புடைமருதூரின் திறத்தைச் சொல்லுங்கள்' என்று, கருவூரார் பணிவுடன் கேட்டார். 'எண்ணற்ற யுகங்கள். அதில் பதினான்கு கோடி ஈசர்கள், நாதர்கள், நாரணர்கள் — இவர் செய்யும் அற்புதங்கள் — எண்ணிக்கை இல்லை. ஆனால், அழியாத வெற்றியுள்ள புடார்ச்சுனத்துத் தாண்டவமாடும் இறைவன் மட்டுமே அறியப்பட்டவன். (வின்னசன்) பத்து யுகங்களுக்கு இவருக்கு, ஆகாயமே நடனமாடும் மன்றாகும். 32*

திருவளரும் விசுவிசுவே விசுவாசன்
அலங்கிருதன் கிரேதா திரேதா
மருவளர்து வாபரமே கலியுகமே
இவைவகுத்த வருடம் சொன்ன

விரிவாகும் விமலனே சோமேசன்
சங்கரனே விசுவ நாதன்
பரைபாகன் மாதேவன் பசுபதிகங்
காதரனே பரசு பாணி,

*வருஷங்களை உடைய யுகங்கள் கிருத, திரேத, துவபார, கலி என்பனவாகும். இந்த யுகங்களிலும் இந்த விமலன், சோமேசன், சங்கரன், விசுவநாதன், பராசக்திபாகன் (அர்த்தநாரி) மாதேவன், பசுபதி, கங்காதரன், பரசுபாணி... 33*

பூதநா யகன்உருத்ரன் விரூபாட்சன்
சங்கரன் புவன நாதன்
ஆதிகா ரணன்திரி புராந்தகனே
ஆனந்தன் அசல மூர்த்தி
சோதிமூ வாறீசன் சொன்னயுக
மன்னவர்கள் மந்த்ர காளன்
காதுமோ கத்தம்பன் புராந்தகனே
கடல்வண்ணன் கலங்காக் கண்டன்,

*பூதநாயகன், உருத்திரன், விரூபாக்ஷன், சங்கரன், புவன நாதன், ஆதிகாரணன், திரிபுராந்தகன், ஆனந்தன், அசலமூர்த்தி (கயிலாயநாதன்), ஜோதி, மூன்றீசுவரன் எனும் பெயர்களில் விளங்குவார். இந்த நான்கு யுகங்களில் திருப்புடைமருதூர்ப் பெருமானைக் கீழ்க்கண்டவர்கள் பூசித்து வேண்டிய வரங்களைப் பெற்றார்கள். மந்திரகாளன், காது (கொலை) மோகஸ் தம்பன், புராந்தகன், கடல்வண்ணன், கலங்காக்கண்டன். 34*

அதிவீரன் தசரதனே வச்சிராங்கன்
வாகடகன் ஆதி வேதன்
நிதிவீர வல்லாளன் பூச்சக்ரன்
உருத்திரனே நீல லோசன்
மதிநேசன் அரிச்சந்த்ரன் இராமனே
பாண்டவனே வாலி ஆகும்
விதிமார்க்கத் திவர்எல்லாம் யுகம்தோறும்
பூசித்து வேண்டி னாரால்.

*அதிவீரன், தசரதன், வச்சிராங்கன், வாகடகன், ஆதிவேதன், வீரவல்லாளன், பூசக்ரன், உருத்திரராசன், நீலலோசன், மதிநேசன், அரிச்சந்திரன், இராமன், பஞ்சபாண்டவர்கள், வாலி இவர்கள் எல்லாம் விதிப்படியும், மார்க்கப்படியும் திருப்புடைமருதூருக்கு வந்து பூசைகள் செய்து, வேண்டுதல்கள் செய்தவர்கள் ஆவர். 35*

## சித்துகள் உபதேசிக்கப் பெற்றுத் தலயாத்திரை செய்தல்

அத்தலத்துக் கொப்பாக ஒருதலமும்
இல்லைஎன அறையும் வேத
மெய்த்தலத்தில் நீசென்றால் வினை நீங்கும்;
வேண்டும்வரம் பெறுவாய் என்றே,
உத்தமமா முனிகூறி உவகையுடன்
சித்துகளும் உபதே சித்தான்;
சித்தன்எனும் கருவூரன் திருப்புடார்ச்
சுனம்நோக்கிச் செல்கின் றானால்.

*திருப்புடைமருதூருக்கு ஒப்பான தலம் வேறு ஒரு தலமும் இல்லை. வேதவொலி கேட்டுக்கொண்டே இருக்கும் அந்த மெய்த்தலத்தில் நீ சென்றால், வினைநீங்கும்; வேண்டும் வரம் பெறுவாய்' என்று, உத்தமரான உரோமமுனி கூறினார். மகிழ்ச்சியோடு சித்துகளை உபதேசித்தார். கருவூர்ச்சித்தர், புடார்ச்சுனம் நோக்கித் தலயாத்திரை மேற்கொண்டார்.* 36

பணிந்துகா ளத்தி போற்றி பரைதவப் பயனால் மாவின்
கணம்கொளும் நீழல் தன்னில் கம்பைமா நதியில் பூசை
இணங்கவே செய்யும் கோயில் இறைஞ்சியே இருக்கு வேதம்
வணங்கிய பதியும் போற்றி மாற்பேறு வழிபட் டிப்பால்,

*திருக்காளத்தியைப் போற்றினார். கம்பைநதியில் பராசக்தி தவம் செய்ததன் — பூசை செய்ததன் பயனாய்ப் பெரிய மாமர நிழலில் அமைந்த கச்சி ஏகம்பர் கோயிலை இறைஞ்சினார். திருமறைக்காட்டையும் (வேதம் வழிபட்டதலம்) திருமாற்பேற்றையும் வழிபட்டார்.* 37

பின்உள தலமும் என்பு சாம்பர்பெய் கும்பம் தானும்,
கன்னிகை யான ஊரும் இருவர்கள் கழுகாய் வாழும்
தன்நிகர் குன்றும் நாதன் தாள்முடி காணா தார்க்கு
வன்னியூ கம்போல் நின்ற வரையையும் வணங்கிப் போந்து,

*அவற்றையொட்டிய தலங்களையும், பூம்பாவையின் எலும்புப்பானை கன்னியாக (ஞானசம்பந்தரால்)ஆன மயிலாப்பூர், இருவர் கழுகாய் வாழும் திருக்கழுக்குன்றம், திருவடியையும் திருமுடியையும் காணாத திருமாலுக்கும் பிரமனுக்கும் நெருப்பு ஸ்தம்பம்போல் காட்சி கொடுத்த திருவண்ணாமலை ஆகியவற்றையும் வணங்கினார்.* 38

பொதுவினில் நடனம் போற்றிப் பூந்தராய் வழிபட் டேத்தி,
முதுகிரி பணிந்து மூவர் முயங்கும்அப் பிலவூர் முன்னித்
துதிசெய்து மூன்று கோடி காவினைத் தொழுது சூழ்ந்து,
பதிபல பணிந்து சையப் பருப்பத வழிகொண் டெய்தி,

*சிதம்பரத்தில் ஸ்ரீமந் நடராசர் நடனமாடுவதைப் போற்றி னார். திருப்பூந்தராய்த்தலத்தை வழிபட்டார்; விருத்தாசலத்தைப் பணிந்தார். மும்மூர்த்திகளும் காட்சிதரும் பிலவூர்க்குச் சென்று, துதிசெய்தார். திருக்கோடிக்காவுக்குச் சென்று, வலம்வந்து தொழுதார். மேலும், பலபதிகளுக்கும் சென்று வணங்கினார். திருப்பருப்பதம் என்னும் தலத்தை வழிபட்டுப் புகழ்ந்தார்.* *39*

அய்யாற்றில் கயிலை போற்றி அமலனைச் சிலம்பி யானை
எய்யாமல் இகலிப் பூசை இயற்றும்ஊர் எறும்பி யூரும்
மைஆடு சோலை சூழ்ந்த திருச்சிரா மலையும் போற்றிப்
பைஅரா மலையும் தென்பால் பசுமலை பரவி வைகி,

*திருவையாற்றில் (திருநாவுக்கரசருக்கு இறைவன் தந்த) கயிலாயக் காட்சியைப் போற்றினார். சிவபெருமானைச் சிலந்தியும், யானையும் மாறுபாடு கொண்டு தவறாமல் பூசித்த திருஆனைக்கா, திருஎறும்பியூர், மேகம் சூழ்ந்த சோலை களை உடைய திருச்சிராமலை ஆகியவற்றைப் போற்றினார். நாக மலையையும், பசுமலையையும் வணங்கித் தங்கினார்.* *40*

கொடுங்குன்றம் பரங்குன் றேத்திக் குறும்பலாத் திரிகூ டத்தில்,
நெடுங்குன்றீ சுரனை ஏத்தி மற்றுள நியமம் போற்றிக்
கடுஞ்சலி லம்வாய் கின்ற சலிலமும் கடந்து வானம்
தொடுங்கிரிப் பொதிகை எய்தி முனிவனைத் துதித்து மீண்டு,

*கொடுங்குன்றம், திருப்பரங்குன்றம் ஆகியவற்றை வணங்கினார், தலவிருட்சமாகக் குறும்பலா உள்ள திரிகூட மலையில் (திருக்குற்றாலம்) நெடும்குன்றீசனை (குறும்பலா நாதரை) வணங்கினார். மற்றும் பல கோயில்களைத் தொழுதார். நீர் கடுமையாகச் சூழ்ந்த அம்பாசமுத்திரம் கடந்து, வான் தொடும் மலையாம் பொதிகைக்குச் சென்று, அகத்தியரைத் தொழுது மீண்டார்.* *41*

பாவநா சத்தில் வந்து பழமறை நாதற் போற்றிக்
காவுசூழ் வேளை மேவும் காசியே சுரனை ஏத்தி,
தாவிலாப் பொருனை சூழ்ந்த கண்ணுவத் தலத்தை வாழ்த்திப்
பூவையில் வணங்கிப் போந்து புடைஅருச் சுனத்து மேல்பால்,

*பாபநாசத்திற்கு வந்து பழமறைநாதரைப் போற்றினார். சோலைசூழ்ந்த அழகான தென்காசி விசுவநாதரை ஏத்தினார். குற்றமில்லாத பொருனைசூழ்ந்த கண்ணுவ முனிவரின் தலத்தை வாழ்த்தினார். திருப்பூவணத்தை வணங்கினார். திருப்புடைமருதூரின் மேற்குத்திசைக்கு வந்தார்.* *42*

## கருவூர்ச் சித்தர் அழைக்க இறைவன் திருமேனி சாய்ந்தமை

வந்திடும் கருவூர்ச் சித்தர் வெள்ளத்தால் வடபால் உற்றார்;
உந்திநீர் தணியக் காணா தோங்கியே மிகுதல் கண்டு,
பந்தம்அ தகற்றும் எங்கோன் தனைத்தென்பால் பதியில் போற்ற,
இந்தஆ றிடையூ றாக இருப்பதெவ் வாறென் றுன்னி,

*கருவூர்ச் சித்தர் பொருனைநதியின் வடக்கே வந்தார். பொருனைநதியில் வெள்ளம் பெருகியிருந்தது. தணியவில்லை. மேலும் மேலும் வெள்ளம் அதிகரித்ததேயன்றிக் குறைந்த பாடில்லை. 'பந்தங்களை அகற்றும் எங்கள் தலைவரைத் தெற்கே சென்று போற்ற, இந்தப் பொருனைநதி இடையூறாக இருக் கிறதே! இது எதனால்?' எனக் கருவூர்ச்சித்தர் நினைத்தார்.*

*43*

பசித்திடும் பதத்தில் உற்ற பதத்தினை ஊட்டும் கையைப்
புசிப்பதற் கூறாய்ப் பற்றிப் பிடித்திடும் புதுமை போல
வசித்திடற் கினிய தானம் கிடைப்பது வரத்தால் அன்றிச்
சுசிக்கொணா அன்ன தான சோதனைப் பயனாம் என்றே,

*'நன்றாகப் பசிக்கும் நேரத்தில் உணவை எடுத்து வாயில் ஊட்டும் கையைப் புசிப்பதற்கு முடியாதபடி பிடித்தி டும் இயந்திரப் பொம்மையின் செயல் போன்றது, பொருனை யாற்றின் செயல். இறைவனின் வரம் இருந்தால்தான் வசிப்ப தற்கு — வாழ்வதற்கு உரிய தானங்கள் கிடைக்கும். அன்ன தானம் கிடைத்தும் ருசித்துச் சாப்பிட முடியாத நிலை ஏற்படு மானால், அது இறைவன் கொடுக்கும் சோதனையின் பயனே ஆகும்.*

*44*

உந்திநீர்ப் பெருக்கை நோக்கி உமைநாதன் தன்னை உள்கிச்
சிந்துவா னியாறால் தோன்றும் சிவனைநா றும்பூ என்றே,
தந்தழைத் தனன்அன் பாகத் திருச்செவி மாந்திச் சாய்ந்தே,
எந்தைஏன் என்று கேட்டு வாஎன இசைக்கின் றாரால்.

*சுழித்தோடும் நீர்ப்பெருக்கைப் பார்த்து, உமைநாதனை நினைத்தபடியே சிந்தித்தார். இந்த வெள்ளம் சிவன்தலையில் உள்ள வான்யாறாக (கங்கையாக) அவருக்குத் தெரிந்தது. 'நாறும்பூ..........' என்று, உரக்க அழைத்தார். சிவன் அன்புடன் தம் திருச்செவிகளால் கேட்டு ரசித்தார். இறைவன் தலையைச்*

*சாய்த்து, 'ஏன் அழைக்கிறாய்! வா!' என்று, இனிமையாகப் பதில்குரல் கொடுத்தார்.* 45

**ஏனெனக் கேட்டு நாதன் வாஎன இசைத்த லாலே,**
**நானருள் பெற்றேன் என்று, சித்தர்தாம் நயந்து பின்னும்**
**வானநா யகனைப் போற்றி வரநதி கடந்து வந்து,**
**மான்அணி கரத்தாய் உன்றன் மலரடி வணங்க வேண்டும்,**

*'ஏன் அழைக்கிறாய் வா!' என்று, தலைவரே நயமாகப் பதில் கொடுத்ததால், 'நான் அருள்பெற்றேன்' என்று, கருவூர்ச் சித்தர் குழைந்தார். வானநாயகரைப் போற்றினார். 'மானை அணிந்திருக்கும் கரத்தைக் கொண்டவரே! நான் தங்களின் மலர்போன்ற திருவடிகளை வணங்கவேண்டும்; அதற்கு இந்த வரநதியாம் (கங்கையாம்) நதியைக் கடந்து வரவேண்டும். கிருபை தந்து அருள்வாய்' என்று, இறைவனின் கேள்விக்குப் பதில் சொன்னார் கருவூரார்.* 46

**கிருபைதந் தருள்வாய் என்றான் கேதம்அு தகற்றி ஆளும்**
**மறிபுனை கரத்தான் பின்னும் வரநதி பின்நோக் காதே,**
**நெறிகொடு முன்பு நோக்கி நேர்வரக் கண்டாய் என்றான்;**
**அறிவரன் அச்சொல் கேட்டே அப்படி வரும்அவ் வேளை,**

*மானை அணிந்த கரத்தவனாகிய சிவன், 'ஆற்றின் நீரில்மேல் நடந்துவா! அப்படி வரும்போது, திரும்பிப் பார்க்கக் கூடாது. முன்பக்கமாகவே பார்க்கவேண்டும்' என்றார். அறிவார்ந்த சிவனின் அச்சொல்லைக் கேட்டுக் கருவூரார் ஆற்றின்மேல் நடக்கலானார்.* 47

## நாககன்னியர்

**பொதுவியர் எழுவர் வந்து புண்ணியா உன்பின் னாலே,**
**நதிகடந் திடுவோம் என்றார் திரும்பிநீர் நதிநோக் காமல்,**
**மதியுடன் வருவீர் என்றான் வரும்வனி தையர்பின் நோக்க,**
**விதியுடன் எழுவர் ஆகி வீற்றினி திருக்கின் றாரால்.**

*பொதுமகளிர் ஏழுபேர் வந்து, 'புண்ணியனே! உன் பின்னாலே வந்து நாங்களும் நதியைக் கடக்கிறோம்' என்றார்கள். 'நதியைத் திரும்பிப் பார்க்காமல் புத்திசாலித்தனமாக வாருங்கள்' என்றார் கருவூரார். அவர்களும் ஆற்றின்மேல் நடக்கலானார்கள். சிறிது நடந்தவுடனேயே ஆற்றைத் திரும்பிப் பார்த்துவிட்டார்கள். அது கெட்டவிதி. அப்படியே நின்றுவிட்டார்கள். நடக்கமுடியவில்லை. (முன்னும் வரமுடியாமல், பின்னும் போக முடியாமல் நின்றார்கள்).* 48

## கவிக்கூற்று

இவைவகுத் துரைக்க வேண்டும் எனும்முனி வரர்க்குச் சூதன்
அவைவிரித் தருள்வான் நாக லோகத்தில் அரிவை யின்னார்
புவனமுற் றெழில்காண் பாராய்ப் போந்தனர் ஒருவ னத்தில்
தவன்ஒரு வனைக்கண் டாங்கே வினோதமாய்ச் சார்ந்தார் அன்றே.

*இதுவரை சூதமுனிவர் கதையைச் சொன்னவுடனே முனிவர்கள், 'இப்பகுதியைக் கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்கள்' என்று கேட்டார்கள். சூதமுனிவர், விரிவு செய்து சொன்னார். நாகலோகத்துப் பெண்கள் ஏழுபேர் இவ்வுலகத்து அழகைப் பார்க்க வந்தார்கள். ஒரு காட்டில் ஒரு துறவியைப் பார்த்தார்கள். வினோதமாய் (காமத்தைத் தூண்டும் வகையில்) அவரை நெருங்கினார்கள்.* 49

அவ்வனத் திடையில் யோகம் புரிந்திடும் அருந்த வத்தோன்,
இவ்விடை முறுவல் காட்டித் தவத்தினுக் கிடையூ றுற்று,
நவ்விஅம் கண்ணார் முல்லைப் பொதுவியர் நாரி மாராய்க்
கவ்வியம் சுமந்து மாறும் கன்னியர் ஆவீர் என்றான்.

*அவர் அந்தக் காட்டில் யோகம்புரியும் பெரிய தவசியாவார். அவர் கோபம்கொண்டார். 'இங்கே உங்களின் இடையை, காமப் புன்முறுவலைக்காட்டி, என் தவத்துக்கு இடையூறு செய்தீர்கள். முல்லைநிலத்தில் (காடும் காடு சார்ந்த பகுதி. வேசியர்க்கு உரிய இடம்) மான்போன்ற கண்களையுடைய பொதுமகளிராகிக் கோரோசனை விற்பனை செய்து (பொது மகளிரே பிறந்த குழந்தைக்குக் கோரோசனை கொடுப்பர்) மாறும் (பல ஆண்களிடம் மாறும்) கன்னியர் ஆவீர்' என்று, சாபமிட்டார்.* 50

பொதுவியர் ஆகும் மாதர் புந்தியில் கவலை கூர்ந்தே,
இதுகழிந் திடப் பணிந்தார் எழப்புகன் றிரங்கிக் கூறும்
அதிதிநீர் பொதுவி மாதர் ஆகியே ததிகொண் டங்ஙன்
நதிகடந் திடவே செல்வீர் பெருகிடும் நதியின் பாங்கர்.

*அந்தப் பெண்கள் மனத்தால் கவலை அடைந்தார்கள். இந்தச் சாபம் கழிய வரம்வேண்டி, அந்தத் துறவியைப் பணிந்தனர். காலில் விழுந்தார்கள். 'எழுந்திருங்கள்' என்றார் முனிவர். இரக்கம் அடைந்தார். நீங்கள் அதிதிகள் (விருந்தினர்கள்). பொதுமகளிராக இருந்து, பருவஇன்பம் துய்த்து, பிறகு திருப்புடைமருதூரில் நதிகடக்கச் செல்வீர்கள்; நதியில் வெள்ளம் பெருகும்.* 51

கருநகர்ச் சித்தர் அங்஑ன் கடநதி கடந்து தென்பால்,
மருதமர் அமுதைப் போற்ற வந்திடும் அந்த வேளை,
பொருனைநீர் கடக்க நீவிர் போதனைத் தொடர்வீர் அங்஑ன்
பருவரல் ஒழிந்து நாக பன்னியர் ஆவீர் என்றான்.

அப்போது அங்குக் கருவூர்ச்சித்தர் வருவார். அவர் நதியைக் கடந்து, அதன் தெற்கே உள்ள மருதின்கீழ் அமர்ந்துள்ள அமுதத்தை (சிவனை) வழிபட வருவார். அப்பொழுது பொருனை நீரைக் கடந்துசெல்ல, அந்த ஞானியைத் தொடர்ந்து செல் லுங்கள். அவ்வகையில் பொது மகளிராக இருந்து அடையும் துன்பம் நீங்கி, நாக கன்னியர் ஆவீர்' என்றார். 52

அவ்வியல் பதனால் அன்னார் அருட்சித்தர் தம்பால் எய்திப்
பவ்விய மாகத் தானே முனிபகர் வசனம் கொண்டு,
கவ்வைகொள் தரங்க நீரில் கதியுற வந்தார் இந்தத்
திவ்வியச் சித்தர் சொல்லைச் சோதனை செய்வான் எண்ணி,

இந்த நிகழ்ச்சியால்தான் அப்பெண்கள் அருட்சித்தராகிய கருவூராரை அடைந்து, பவ்வியமாக அவர்சொல் கேட்டு, ஒலியும் அலைகளும் கொண்ட நீரில், நற்கதி அடையவந்தனர். கருவூர்ச் சித்தரின் சொல்லைச் சோதனை செய்வதற்காகவே, நீரில் நடக்கும்போது, திரும்பிப் பார்த்தார்கள். 53

மறித்துநீர் வாரி நோக்க வரநதி இழுக்கக் கண்டு,
செறித்திடு முல்லை மாதர் சித்தரை அழைத்தார் இந்தத்
திறத்தினைக் கரையில் சேர்ந்த சித்தர்தாம் நோக்கத் தீர்த்தம்
நிறைந்திடும் புனலில் தானே நின்றனர் எழுவர் ஆகி.

அதனால் வரநதி (பொருனைநீர்) அவர்களை இழுத்தது. செறிந்த உடலுடைய முல்லைமாதர் (பொது மகளிர்), சித்தரை அழைத்தார்கள். அவர்தாம் கரையில் சேரும் வரையில் திரும்பிப் பார்க்காமல் துறையை அடைந்த பிறகு பார்த்தார். எழுவரும் சித்தர் பார்த்த பார்வை விசேஷத்தால், அமுங்கிப் போகாமல், நிறைந்த நீரின்மேலே அப்படியே நின்றார்கள். 54

## கருவூர்ச் சித்தர்துதி

என்றருள் செயத்தெ ளிந்தார் எய்திய சித்தர் தாமே.
கொன்றையன் அருளை உன்னிக் கோயிலை நோக்கிக் கோல
மன்றலாம் மருதம் எய்தி வானவன் பரவு கின்ற,
வென்றிவெள் விடையார் தம்மை வழுத்திட விரைவி னோடும்,

இப்படிச் சூதர் ஏழு பெண்கள் பற்றிய செய்தியைக் கூறிய பிறகு, தெளிவுபெற்றார்கள். கருவூர்ச் சித்தர், கொன்றையான் (சிவன்) அருளை நினைத்தார். கோயிலை நோக்கினார்.

*அழகான பொது இடங்களிலெல்லாம் மருத மரம் இருப்பதைப் பார்த்தார். இந்திரன் வழிபட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார். வெற்றிபொருந்திய வெள்ளை ரிஷபத்தை உடையவரை வணங்க, விரைவாகச் சென்றார்.* 55

பொருனையில் ஆடித் தெய்வப் புடைமரு ததனில் எய்திப்
பரவிநா றும்பூ நாதர் பதமலர் பணிந்து போற்றிக்
கருதிநான் அழைக்கப் பேசும் கருணைவா ருதியே போற்றி!
பரைஒரு பாகா போற்றி பைங்கண்ஏ றுடையாய் போற்றி!

*கருவூர்ச்சித்தர் பொருனையில் நீராடினார். புடை மருதத்திற்குச் சென்றார். நாறும்பூதநாதரின் பாதமலர்களைப் பரவிப் பணிந்து போற்றினார். 'நான் உன்னை நினைத்து அழைக்க என்னுடன் பேசிய கருணைக்கடலே! போற்றி! பராசக்தியைப் பாகமாய்க் கொண்டவனே! போற்றி! பசிய கண்ணைக்கொண்ட ரிஷபத்தை உடையவரே! போற்றி!* 56

தேவவிப் பிரனே! போற்றி!
திங்கள்சேர் சடையாய்! போற்றி!
மூவர்கள் முதல்வா! போற்றி!
முப்புரம் எரித்தாய்! போற்றி!
சேஉயர் கொடியோய்! போற்றி!
தெய்வநா யகனே! போற்றி!
ஆவுடை மாது பங்கா!
அமலனே! போற்றி! போற்றி!

*(விப்பிரனே—அழகனே; திங்கள்—சந்திரன்; மூவர்கள்—சிவன், திருமால், பிரமன்; முப்புரம்—திரிபுரம்; சே—ரிஷபம், காளை; சேஉயர்கொடி — ரிஷபக்கொடி; ஆவுடைமாது—கோமதி அம்பிகை; அமலனே — ஆணவ கன்ம மாயைகள் அற்றவரே)* 57

பொங்கர வணிந்தாய் போற்றி! புண்ணியா புனிதா போற்றி!
கங்கையோ டிதழி வேய்ந்த காரணா போற்றி! வன்னித்
துங்கமா மலையாய் நின்ற சோதிநா யகனே போற்றி!
சங்கரா போற்றி! என்னச் சாய்ந்தவன் தோன்றி னானே.

*கோபம் கொண்ட பாம்பை அணிந்தவரே! போற்றி! புண்ணியரே! புனிதரே! போற்றி! கங்கையையும் கொன்றை யையும் அணிந்த, மூலகாரணமானவரே! போற்றி! வன்னி எனப்படும் வலிமைபொருந்திய மலையாய் — திருவண்ணா மலையாய் நின்றவரே! போற்றி! ஜோதி நாயகரே! போற்றி! இன்பம் செய்பவரே! போற்றி! என்றெல்லாம் போற்றி சொல்லியவுடன், சாய்ந்த பெருமான் அவரெதிரில் தோன்றினார்.* 58

செய்தநின் துதிக்கு வந்தோம் சித்தனே என்று மற்றைத்
துய்யனை நோக்கி வேண்டும் வரம்எவன் சொல்வாய் என்னச்
சைவஇ லிங்கம் நின்றும் சார்ந்தசிற் பரனைப் போற்றி,
ஐயனே கயிலை எய்திப் பணிசெய அமைக்க வேண்டும்.

*'சித்தனே! நீ செய்த துதியை மெச்சி வந்தோம். நீ வேண்டும் வரங்கள் யாவை' என்று, தூயவனாகிய கருவூர்ச் சித்தரை நோக்கி, இறைவன் கேட்டார். சைவலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிற்பரனாம் சிவனைப் போற்றி, 'ஐயனே! கயிலாயத்தை அடைந்து, அங்கு நான் சிவப்பணி செய்ய ஆணையிட வேண்டும்'* 59

அய்யனே நான்அ ழைக்க அருங்குறி சாய்ந்த கோலம்
மெய்யனே என்பேர் தோன்ற என்றும்இப் படிவி ளங்கி,
வையகம் புரக்க வேண்டும் என்றடி வழுத்தும் போதில்,
தெய்வகா ரணன்இ சைந்தே சித்தருக் கருளிச் செய்வான்.

*'நான் அழைத்தவுடன் அருமையான குறி, சாய்ந்து காட்சி தந்ததே, என்பெயர் நிலைக்கும்படி என்றும் இப்படியே சாய்ந்த மெய்யனாக உலகத்தைக் காக்கவேண்டும்!' என்று வேண்டிக் கருவூர்ச்சித்தர், இறைவன் திருவடிகளை வணங்கினார். தெய்வங்கள் எல்லாம் தோன்றுவதற்குக் காரணனாகிய சிவன் அதற்குச் சம்மதித்தார்.* 60

## முல்லேசுவரத்தில் சித்தர் மதுவும் மாமிசமும் உண்ணுதல்

மையலில் வேடச் சாதி வனிதைபால் நீம யங்கி,
நைதலின் பாவம் தீர்ந்தாய் நமதருள் வாய்மை யாலே;
உய்தவ யோகம் பெற்றாய் உனக்கருள் வரத்தி னாலே,
எய்தியே இத்த லத்தை இறைஞ்சிடப் பெற்றாய் இங்கே,

*இறைவன் கருவூர்ச்சித்தரிடம் மேலும் பேசினார்: 'காதல் காரணமாக வேடச்சாதிப் பெண்ணிடம் நீ மயக்கம் கொண்டு துயரடைந்தாய்; அந்தப் பாவத்தைத் தீர்த்துக் கொண்டாய். நம்முடைய சத்தியமான அருளால் உய்தி தரும் தவயோகத்தை யும் பெற்றாய்; மல்லிகார்ச்சுனத்தில் நாம் கொடுத்த வரத்தி னாலே இத்தலத்தை அடைந்து, இறைஞ்சி நின்றாய்.* 61

வசிக்குவை பாவ சேட வாசனை தீர வேடர்
புசிப்புநீ புசித்த வன்றிப் புவியினில் வினைகள் போகாக்
கசிப்புறு சாத்தன் வந்து காளியை ஏவிக் கள்ளும்
பசிக்குண வான ஊனும் பாலிப்பன் பருகி உண்டு,

*இங்கே சிலகாலம் வசிப்பாயாக! விருப்பமில்லாத வேடப் பெண்ணை விரும்பியதால், அவர் புசிக்கும் சிலவற்றை நீ*

*புசித்தாக வேண்டும். அதனால்தான் அந்த ஒருதலைக் காமவினை போகும். அன்புள்ள சாத்தனார் வந்து, காளியை அழைத்து, உன்பசிக்கு உணவாகக் கள்ளும் மாமிசமும் கொடுப்பான். கள்ளைப் பருகு; ஊனை உண். 62*

வினைகழிந் தின்ப முற்றி விளங்கிய தலங்கள் போற்றிப்
பனிமதிக் கடவுள் வாழும் பருப்பதம் எய்திப் பண்பால்,
கனிதரு வீணை பாடும் பணிசெய்து கணங்க ளோடு,
மனிஇனி துறைவாய் என்று வழங்கினான் வரங்க ளோடு.

*உன் வினையை நீக்கிக்கொண்டு இன்பம் அடைந்து, மண்ணுலகில் விளங்கும் தலங்களைப் போற்றி, பனிமதிக் கடவுள் வாழும் கயிலாய மலையை அடைந்து, பண்புடன் வீணைமீட்டிப் பாடும் பணியைச்செய்து, தேவ கணங்களுடன் நிலைபெற்று, இனிமையாக வாழ்வாயாக!' என்று, வரங்களை இறைவன் வழங்கினார். 63*

காட்சிதந் திலிங்கத் தூற்றான் கருநகர்ச் சித்தன் இப்பால்,
மாட்சிமை யாகத் தானே மருதனை வணங்கி மற்றோன்
ஆட்சியால் ஐயன் பாலில் அடைந்தனன் அவனும் அன்பால்
நாட்சிறு முல்லை மூரற் காளியாம் நங்கை தன்னை,

*கருவூர்ச்சித்தருக்குக் காட்சிகொடுத்த இறைவன், இலிங்கத் தில் மறைந்தார். கருவூர்ச் சித்தர் பெருமையுடன் வணங்கி னார். அதிகார தேவதையாகிய ஐயனாரிடம் (சாத்தனாரிடம்) கருவூர்ச்சித்தர் சென்றார். ஐயனார் காலையில் சிறிது மலர்ந்தி ருக்கும் மொட்டுப் போலப் புன்முறுவல் செய்து, காளியாகிய பெண்ணை (துவாரபாலகிப் பெண்) அழைத்து, 'ஊனும் மதுவும் இவனுக்குக் கொடு' என்றார். 64*

ஊன்மது இவற்கீ வாய்என் றுரைத்தகன் றனன்ஊர்ச் சித்தன்
மான்அணி கரத்தர் ஈன்ற வரதன்சொல் வகையால் வந்த
தேன்நிகர் மொழியாள் கூடச் சிறந்தமு லேச்ச ரத்தில்,
கான்உறும் வன்னி யின்பால் உற்றனர் கருத்தி னாலே.

*மானை அணிந்த கரத்தை உடைவன் கொடுத்த வரத்தின்படி வகையாக வந்த, தேன்போலும் மொழி பேசும் காளியுடன் கருவூர்ச் சித்தர் திருமுல்லேஸ்வரத்திற்கு (திருக்கருவூர் ஆநிலை) வந்தனர். காடாக மண்டியிருந்த வன்னிமரத்தடிக்கு வந்தனர். 65*

கன்னியும் சித்தர் தாமும் கருணைவன் னியில்வாழ் கின்ற,
பன்னகா பரணற் போற்றப் பரமனும் மாதை நோக்கி,
வன்னியின் காயும் தேனும் மதுவுடன் ஊன்அு தாகத்
துன்னுசித் தனுக்கீ வாய்என் றுரைத்தனன் தோடம் நீங்கி,

*கன்னி (காளி)யும் சித்தரும் கருணைமிகுந்த வன்னி மரத்தடியில் கோயில்கொண்ட — பாம்பணி கொண்ட பெருமானைப் போற்றினார்கள். இறைவன் காளியை நோக்கி, 'மதுவுடன் ஊனைச் சித்தனுக்குக் கொடு' என்றார்.* 66

குமரியும் இறைவன் சாற்றும் கொள்கையின் படியே அந்த
அமையமே வன்னிக் காயைத் தேனினை அளிக்கச் சித்தர்
விமலன்தன் தாளை உன்னி வாங்கியே புசித்தார் மேவும்
தமலமும் அகன்று பின்பு நாதனைத் தாழ்ந்து போற்றி,

*இறைவனின் உத்தரவுப்படியே கருவூர்ச் சித்தரின் தோஷம் நீங்க, அந்த வினாடியே வன்னிக்காயை (மாமிசத்துக்குச் சமம்) தேனை (கள்ளுக்குச் சமம்) அளித்தாள். கருவூர்ச்சித்தர், விமலனின் திருவடிகளை நினைத்து வாங்கிப் புசித்தார். அவரை அடைந்திருந்த ஆணவ கன்ம மாயைகளும் நீங்கின. மீண்டும் சித்தர், இறைவன் திருவடிகளில் விழுந்து வணங்கினார்.* 67

## கருவூர்ச்சித்தரின் கோபமும் சாபமும்

புடையுற்ற மருதில் எய்திப் புண்ணியன் தன்னைப் போற்றி,
விடைபெற்று வெளியில் ஐயன் பாலில்நீர் வேட்கை என்றான்;
தடமுற்றிப் புசிப்பாய் என்று சாத்தனும் உரைப்ப உன்பால்
மடுவற்றக் கடவ தென்று சித்தனும் வழங்கிக் கீழ்பால்,

*திருக்கருவூர் ஆநிலையிலிருந்து கருவூர்ச் சித்தர் மீண்டும் திருப்புடைமருதூருக்கு வந்தார். புடைமருதில் உள்ள புண்ணியனைப் போற்றி விடைபெற்றார். வெளியில் வரும்போது ஐயனாரிடத்தில், 'தாகமாக இருக்கிறது' என்றார். 'குளம் நிறையத் தண்ணீர் இருக்கிறது; குடியுங்கள்' என்றார் ஐயனார் (சாத்தனார்). 'உன்னுடைய குளம் வற்றக்கடவது' என்று, கருவூரார் சாபமிட்டார்.* 68

வளர்கின்ற வாலை மாதர் கோட்டத்தில் வந்து நோக்கி,
உளம்மன்னு தாக வேட்கை ஒழித்திடு வீர்கள் என்றான்;
களம்வைத்த கண்ணார் கூடி இகழ்ந்தனர் கருத்தில் கொண்டு,
தளமுற்று சிலைஆ கென்னச் சபித்தனன் கீழ்பால் சார்ந்தான்.

*வளருகின்ற வாலைப்பெண்கள் கோயிலில் வந்து பார்த்து, 'உளம்காயும் அளவுக்குத் தாகம் வந்தது. தாகத்தைத் தண்ணீர் தந்து தீருங்கள்' என்று, கருவூர்ச்சித்தர் கேட்டார். களாம்பழம் போன்ற கருத்த கண்களைக் கொண்ட அப்பெண்கள், ஒன்றாகக் கூடி இகழ்ந்தார்கள். அதை மனத்தில் நிறுத்தி, 'கெட்டியான சிலையாக நீங்கள் ஆகக்கடவீர்!' என்று, சாபமிட்டார் கருவூர்ச்சித்தர்.* 69

## சித்தர் கயிலாயம் அடைதல்

மணிகண்டர் கானை எங்கோ ணரிகையில் வணங்கித்தென்பால்
நணிஉற்ற தவவ னத்தில் பூமிநா யகரைப் போற்றி,
அணிபெற்ற நதியின் பாங்கர் மூலநா யகரை அன்பால்
பணிவுற்றுச் சோம நாதர் தம்மையும் பரவி னாரே.

*புடைமருதின் கிழக்குப்பக்கம் சென்று, அரியநாயக புரத்தில் மணிகண்டனை (சிவனை) வணங்கி, தென்திசையில் சென்று, திருப்பூவணத்தில் பூமிநாயகரைப் போற்றி, அழகான பொருனையின் பக்கத்தில் உள்ள திருமூல நாயகரை வணங்கி, அன்புடன் பணிந்து சோமநாதரையும் கருவூர்ச்சித்தர் பரவினார்.* 70

வாமைபோற் றியரோ மேசர் மகிழம்மை நாதம் போற்றி,
பாமன்னு கோட தேசர் கோடகேச் சுரம்ப ணிந்து,
தேமன்னு சோலை சூழ்ந்த திருநெல்லை வேய்முத் தீசர்
காமன்னு குசைக்காட் டீசர் காந்தீசர் கழல்ப ணிந்தார்.

*அபிராமி போற்றிய ரோமேசர், மகிழம்மை நாதர், பாவால் புகழப்படும் கோடதேசர் உள்ள கோடகேச்சுரம் பணிந்து, தேன்நிலைக்கும் சோலைகள் சூழ்ந்த திருநெல்வேலியின் வேய் முத்தீசர், சோலை சூழ்ந்த தர்ப்பாரண்யேஸ்வரர், காந்தீசர் ஆகிய திருமூர்த்தங்களின் திருவடிகளைப் பணிந்தார்.* 71

அதிக மேன்மைய தாம்பிர வன்னி
அகன்க ரைப்பதி எங்கணும்
துதிசெய் துத்தர கோச மங்கை
துதித்தி றைஞ்சிய சித்தர்தாம்
கதிகொள் யாறொடு கல்லும் வெம்பரல்
அத்தமும் கடந்தெய்தியே,
நதிஉ லாவிய பதிஉ லாம்கயி
லைப்பருப்பதம் நண்ணினார்.

*அதிக சிறப்புகளையுடைய தாமிரபரணியின் அகலமான கரையில் உள்ள சிவப்பதிகள் எல்லாவற்றையும் துதிசெய்து, இறைஞ்சிய கருவூர்ச்சித்தர், தாம் நற்கதி கொள்வதற்காக ஆறுகள், கற்கள், பரல்கள், காடுகள் எல்லாவற்றையும் கடந்து, நதி உலாவுகிற பசுபதி இயங்கும் கயிலாய மலையை அடைந்தார்.* 72

ஆகத் திருவிருத்தம் – *2108*

# 14. அகத்தியர் படலம்

கருவூரர் அழைக்கப் பூதிக் கடவுளார் அவர்க்கே நின்று,
திருமேனி வளைந்து காட்டித் திருச்செவி மாந்தி வாஎன்(று),
அருளுடன் அழைக்க வந்து பூசித்த தறைந்தோம் அன்பால்
சிரகமா முனிவன் போற்றும் திறத்தினைச் செப்பல் உற்றாம்.

விபூதிக்கடவுள், கருவூரார் நதிக்கரையிலிருந்து அழைத்த போது, அவருக்காகவே திருமேனியை வளைத்துக்காட்டி, அவருடைய அழைப்பைத் திருச்செவி ஏற்று, அவருடன் ‘வா’ என்று அழைக்க, அவரும் வந்து பூசித்த கதையைச் சொன்னோம். இனிப் பொதிகை முனிவர் திருப்புடை மருதூருக்கு வந்து, இறைவனைப் போற்றிய திறத்தைச் சொல்வோம்’ என்றார் சூதமுனிவர். 1

பாசமும் வினையும் நீங்கிப் பழுதறத் தம்மைச் சேர்வார்,
ஆசுகள் ஆன எல்லாம் அகற்றிஐ முகன்தன் பாதம்
நேசமாய் அகத்தில் கொண்டு நித்தமும் வழிபா டாற்றும்
தேசுசேர் முனிவர் கேட்கச் சூதமா முனிவன் செப்பும்.

பாசங்களையும் வினைகளையும் நீக்கிய முனிவர்கள், குற்றமில்லாமல் இருப்பார்கள். தம்மைச் சேர்ந்தவர்களின் குற்றங்களையும் நீக்குவார்கள். ஐந்து முகங்களுடைய சிவனின் பாதங்களை அன்புடன் மனத்தில் வைத்து, நாள்தோறும் வழிபாடுசெய்து, அதனால் ஒளிபெற்றிருப்பார்கள். அத்தகைய முனிவர்களுக்குச் சூதர் கதை சொன்னார். 2

## அகத்தியரின் விருப்பம்

முன்உ ரைத்திடும் கதையினில் அகத்திய முனிவன்
பொன்உ ரைத்திடும் இமகிரிப் பூதரம் தன்னில்,
மின்அன் னாளுடன் மேருவில் லோன்மணக் கோலம்
தென்வ ரைக்கணே தரிசிக்கச் சிவன்அருள் செய்தான்.

முன்னே சொல்லப்பட்ட ஆதிமனுவின் கதையில் அகத்திய முனிவருக்குப் பொன்னாலாகிய இமயமலையில் — மேருவைவில்லாக வளைத்த சிவன் மின்னல்போன்ற

இடையை உடைய உமையம்மையைத் திருமணம் செய்து கொண்ட காட்சியைப் பொதிகைமலையில் தரிசிக்க அருள் செய்த செய்தி உள்ளது. 3

அன்ன தன்மையால் அகிலம்நேர் நிற்கஆர் அணைந்தோன்
முன்ன ருட்படி முனிவரன் பொதிகையில் முன்னி,
மன்னு காரணம் கண்டனன் வதியும்அந் நாளில்,
தென்பு டார்ச்சுனம் தரிசிக்கச் சிந்தையில் நினைந்தான்.

கொன்றை அணிந்தவனின் அருளின்படி, உலகு சமமாக அகத்தியர் பொதிகை மலைக்கு வந்ததும், நிலையான காரணம் (சத்ய ஞானம்) அறிந்து வாழ்ந்தார். அந்நாளில் தென்புடார்ச்சுனத்தைத் தரிசிக்க நினைத்தார். 4

## அகத்தியர் தலயாத்திரையாகப் புடைமருதுக்கு வருதல்

முக்களா வனத்தைப் போற்றி முத்தலை சிந்தும் வேணி
நக்கபங் கயத்த டம்சூழ் வடதரு முதலில் நண்ணித்
தெக்கணா மூர்த்தம் கொண்ட சின்மயன் தனைவ ணங்கி
மிக்கதீர்த் தம்ப டிந்து முனிவரன் விருப்பால் வைகி.

முக்களா வனத்துக்குச் சென்று போற்றினார். அலைகளில் முத்துகள் வரும் கங்கையைத் தலையில் சூடிய சிவபங்கய தீர்த்தம் உள்ள 'வடதரு'வுக்கு முதலில் சென்றார். தீர்த்தத்தில் குளித்தார். தட்சிணாமூர்த்தியாக இருந்து, சின்முத்திரை காட்டும் இறைவனை வணங்கினார். அங்கே தங்கினார். 5

அவைகடந்து பாதாள கங்கை மேவி,
அகத்திருமூ லத்தானம் போற்றி, அப்பால்
நவைகடந்த காசிபர்போற் றியதென் வேளை
நாயகனைப் பரவியே நதிசேர் வேணி
உவமைஇலாக் கண்ணுவமா முனிதீர்த் தத்தில்
உவந்தாடிக் கண்ணுவசங் கரனை உள்கிப்
பவன்அடிபோற் றிக்கீழ்பால் பொருனை மீதில்,
பகர்ந்தவலஞ் சுழித்தீர்த்தம் படிந்து மேல்பால்,

அங்கிருந்து புறப்பட்டு, பாதாள கங்கையில் குளித்து, அகத்தீஸ்வரம், திருமூலட்டானம் ஆகிய தலங்களில் வழிபட்டார். தென்வேளூர் (தென்வேளை) இறைவனைத் துதித்தார். கண்ணுவமுனிவர் தீர்த்தத்தில் குளித்து, நதியைத் தலையில் கொண்ட உவமை சொல்ல முடியாத கண்ணுவ சங்கரரை நினைந்து, தானாய் உண்டான (பவன்) சிவனின் திருவடிகளை

*வணங்கினார். அத்தலத்தின் கிழக்கே, பொருனையின் வலஞ் சுழி தீர்த்தத்தில் நீராடினார்.* 6

பழமறை பரவும் பூவைப் பதியினில் பரனைப் பூசை
விழைவுறச் செய்வான் எண்ணி மணலினால் விதித்தான் எங்கோன்
குழைவினால் கோட்டி செய்யக் கோட்டிநா யகர்என் றோதி,
மழவிடை யோனைப் போற்றி முனிவரன் வதிந்த பின்பு,

*பழைய வேதங்கள் துதிக்கும் பூவைப்பதியில் (திருப் பூவணத்தில்) ஆசையுடன் பூசைசெய்ய மணலால் சிவலிங்கத்தை அமைத்தார். இறைவன் குறும்பு (கோட்டி) செய்தார். அதனால் அந்த மூர்த்தத்திற்குக் கோட்டிநாயகர் என்று பெயரிட்டார். (இதன் விவரம் திருப்பூவணத் தலபுராணத்தில் காண்க) இளைய ரிஷபத்தில் ஏறிய இறைவனை வணங்கி, அங்கே தங்கினார்.* 7

வழிகொடு தலங்கள் போற்றி வழிபட்டு வடபால் ஏகி,
அழகிய பொருனை சூழ்ந்த காசியை அடுக்கும் போதில்,
தழைவுறு மருதச் சோலை சம்புவின் தாரு மிக்க
குழைமிகும் ஆம்பி ரம்சூழ் கோனகர் கண்ணுற் றானால்.

*வழியிலிருந்த சிவத்தலங்களிலெல்லாம் வழிபாடு செய்தார். வடக்கே வந்தார். அழகான பொருனை சூழ்ந்த தட்சிண காசியை நெருங்கினார். தழைத்திருந்த மருத மரத்தோப்பு, நாவல்மரங்கள் சூழ்ந்த புளியந்தோப்பு அமைந்த தலைமையான நகரம் கண்ணுக்குத் தெரிந்தது.* 8

ஆனந்தக் காவி தென்றே அளவிலா மகிழ்ச்சி எய்தி,
கான்உந்து மதுக ரங்கள் இசைப்பது கன்னம் மாந்தத்
தேன்உந்து சுகந்த வாசம் நாசிகை திளைப்பத் தெய்வ
வான்உந்து மருதன் கீர்த்தி நாவினில் வாணி ஊட்ட,

*இது ஆனந்தம் தரும் சோலை என்று, மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். காட்டில் உந்தி எழுந்த வண்டுகளின் இசையைக் காதுகள் சுவைத்தன. தேன் கொப்பளிக்கும் நல்ல வாசனையை மூக்குச் சுவைத்தது. தெய்வலோகத்தில் உலாவும் புடைமருதனின் கீர்த்தியை, சரஸ்வதி நாவில் ஊட்டினாள். இவர் இறைவன் புகழைப் பாடினார்.* 9

தென்றலம் பயிற்சி தேகம் புளகிதம் தேக்கச் செல்வ
மன்றலந் தருவை மான வளங்கள்கண் டுவட்ட வான
மின்தயங் கிளையார் ஆட விருந்தென ஐவர் மேவ,
நன்றென இமைய மீதில் மன்றலை நயக்கு மாலோ.

*தென்றல் உலாவியதால் உடம்பு புளகாங்கிதம் அடைந்தது. செல்வம் தரும் மணம்மிக்க கற்பகத்தருவைப் போன்ற தருக்களைக் கண்டு, கண்கள் மகிழ்ந்தன. இமயமலையில் தலைவரின் திருமணத்தில் இளையார் ஆட, நன்றாக நடந்த திருமணத்தினைக் காணும் மகிழ்வு ஏற்பட்டது.* 10

இவைஎன இறும்பூ தெய்தி ஏகிடில் ஆற்றின் கீழ்பால்,
தவமுனி ஈசன் கோயில் தான்கடந் தப்பால் சென்றே,
அவண்வன்னி தீர்த்தத் தின்பால் ஆடிடும் போதில் வானில்,
சிவன்விடை தன்னில் எய்தித் திருக்குழை மணியும் சிந்தி,

*அவற்றை ரசித்துப் பொருனை ஆற்றின் கிழக்கே சென்றார். முனீஸ்வரர் கோயிலைக் கடந்து, அப்பால் சென்றார். அங்கே வன்னி தீர்த்தத்தில் நீராடினார். அப்பொழுது வானத்தில் சிவபெருமான் ரிஷப வாகனத்தில் எழுந்தருளிக் காட்சி கொடுத்தார். தாம் காதில் அணிந்த குழையிலிருந்து மணியை உதிர்த்து, அகத்தியரை ஆசீர்வதித்தார்.* 11

அமிழ்தெனும் செவிக்கின் பூற அந்தர வாணி யாலே,
தமிழ்அருள் முனியே தென்பால் சம்புவைத் தொழுதே கென்றே,
உமிழ்தரு வசனம் கேட்டே உள்ளம்நெக் குருதி அன்பாய்க்
கமழ்தரு நதியை ஆடிக் கடன்முடித் தருளை உன்னி,

*அமுதத்தை உட்கொண்ட இன்பம் செவிக்கு ஏற்படும் படியாக, அந்தரவாணி (அசரீரி) கேட்டது. 'தமிழ்முனியே! அருள் முனியே! தமிழை அருளிய முனியே! தெற்கே உள்ள நாவல் மரத்தை வணங்கிச்செல்' என்றது அசரீரி. உள்ளம் நெகிழ்ந்து உருகி அன்புடன் பொருனையில் நீராடி, நீர்க்கடன்களைச் செய்து, இறைவனின் அருளை நினைந்தார்.* 12

கொன்றையஞ் சடையான் கோயில் எய்தியே கும்பிட் டேத்தி,
நின்றிடும் போதில் அங்ஙன் நிமலன்மூன் றுருவாய்த் தோன்ற,
நன்றெனப் போற்றி இந்த நலம்என்ன அருள வேண்டும்
என்றருந் தவங்கள் செய்தான் எந்தையும் இரங்கித் தோன்றி,

*கொன்றைச் சடையானாம் சிவனின் கோயிலுக்குச் சென்றார். நின்று கும்பிட்டார். ஏத்தினார். இறைவன் மூன்று உருவங்களாகக் காட்சி கொடுத்தார். 'அழகு' என்று போற்றினார். 'இந்த அழகு எதனால் — எப்படி — ஏன் என்று, தாங்களே விளக்கியருள வேண்டும்' என்று, தவம் செய்து — செபித்து வேண்டினார். இறைவனும் இரக்கத்துடன் விளங்கினார்.* 13

மூவரும் ஒன்றாய் நின்ற மூர்த்தமீ தாகும் முன்னம்
ஆவலால் உன்பால் வந்தெம் மணிக்குழை முத்தம் சிந்திக்
கூவினோம் என்ன லோடும் குழைந்துநின் றிறைஞ்சி ஏத்தித்
தாவில்மூன் றுருஒன் றாகத் தழுவினான் தாப தன்தான்.

'உனக்கு மூன்றாகத் தெரிந்த உருவம் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரும் ஒன்றாய் நின்ற மூர்த்தமாகும். ஆசையுடன் உன்னிடம் வந்தோம். காதில் அணிந்த குழையிலிருந்த மணியை உதிர்த்து, உன்னை அழைத்தோம்' என்றார். அகத்தியர் மகிழ்ச்சியால் குழைந்தார்; புகழ்ந்தார். தவசியாகிய அகத்தியர், மூன்று உருவங்களான மூர்த்தத்தைத் தழுவிக் கொண்டார். 14

சகத்தில்மூன் றீசர் என்றே சாற்றியே விடைபெற் றிப்பால்,
மகத்துவ நதியில் சிந்து மணிகன்னி தீர்த்தம் என்றே,
உகத்தவர் புகழ்வ தாக உகந்தருள் நாமம் சாத்தி,
அகத்திய முனிவன் அன்போ(டு) அருச்சுன நகரில் போந்தான்.

'மூன்றீசர்' என்று அம்மூர்த்தத்திற்குத் திருப்பெயரிட்டார். விடைபெற்றார். மகத்துவமான நதியில், இறைவனின் குழைமணி சிந்திய தீர்த்தத்திற்கு, 'மணிகர்ணிதீர்த்தம்' என்று, பெயரிட்டார். அன்புடன் திருப்புடைமருதூருக்கு வந்தார். 15

## சாபங்கள் நீக்கிய சரித்திரம்

புடைமரு துற்று வாழும் புண்ணிய முனிவ ராகும்
விடயம்அ தகன்ற சிந்தைக் கவுதமர் மித்ரர் வெண்மைச்
சுடர்தரு சம்பு மேவும் ஏகமா சுதநல் யோகர்
மிடைதரு தேவ ரோடும் எதிர்கொள விருப்பி னோடும்,

புடைமருதுக்கு வந்து தங்கியிருக்கும் புண்ணிய முனிவர்களாகிய — ஆசை நீங்கிய சிந்தனை கொண்ட கௌதமர், மித்திரர், வெண்ணாவல் மரத்தின்கீழ்த் தவம்செய்யும் ஏகசுதர்யோகி (கேதகமுனிவர்) மற்றும் தேவர்கள் யாவரும் அகத்தியரை எதிர்கொண்டு, விரும்பி வரவேற்றார்கள். 16

முத்திமண் டபமாம் தொன்மை அருச்சுனம் முதலில் எய்திப்
பத்தியாய் இறைவன் கீர்த்தி பகர்ந்தினி திருக்கும் போதில்,
அத்தலை அரக்கி தோன்ற அவள்வர லாறு கேட்டே,
உத்தம நதியில் சாபம் ஒழித்தனன் உவந்து பின்னும்,

அகத்தியர் பழமையான புடார்ச்சுனத்தில் உள்ள முத்தி மண்டபத்திற்குச் சென்று, பக்தியுடன் சிவனின் சிறப்புகளைப் புகழ்ந்து, இனிமையாக இருந்தார். அப்பொழுது அரக்கி ஒருத்தி

தோன்றினாள். சித்திரகேதுவின் மகளாகிய தராபதி அரக்கியான வரலாற்றை ஏகசுதர் கூறக் கேட்டார். *(வால சதானந்தப் படலம் பாடல் 128—135)* பொருனையில், அரக்கியை நீராடி வரச்செய்து, அவளுடைய சாபத்தை ஒழித்து மகிழ்ந்தார். 17

அந்தரத் ததிரும் சத்தத் துடன்அல கையர்கள் எய்த,
இந்தவல் வினையர் யார்என் றிசைத்திட ஏக யோகர்,
முந்துகா ரணம்உ ரைத்தார் முனிகவு தமர்முன் பாக
வந்திடும் அலகை தீர்த்து மூழ்கிவந் திடவ ழுங்க,

வானத்தில் அதிரும் சத்தத்துடன் பேய்கள் வந்தன. இவர்கள் யார் எனக்கேட்டார். ஏகசுதயோகி, அவர்கள் பேயான காரணத்தை உரைத்தார். கௌதம முனிவர் முன்பாகப் பேய்களை வாலசதானந்தராகவும் பிரபாவதியாகவும் தீர்த்தாடனம் செய்யச் செய்து மாற்றினார். *(வாலசதானந்தப் படலம் பாடல் 136—137)* 18

அலகையின் வடிவம் நீக்கி அப்பணி முற்றி அங்ஙன்
உலவினர் இரதி கூட வேள்உவந் தென்னக் கண்டு,
நலமிகு மணம்பு ணர்த்தி நல்கிட நவின்றார் கேட்டே;
இலகுமா தவர்கள் போற்றி முனிவரை இறைஞ்சி னாரால்.

பேய் வடிவங்களை நீக்கி, இரதிதேவியும் மன்மதனும் போல அவர்கள் கூடி மகிழத் திருமணம் செய்துகொண்ட காட்சியைப் பார்த்து ஆசீர்வதித்தார். உடனிருந்த முனிவர் களெல்லாம் அகத்தியரைப் போற்றினார்கள். 19

சடைமுடி முனிவர் போற்ற அகத்திய முனிவன் சார்ந்து,
விடையவன் தன்னை உள்கி விரிபுனல் ஆடி ஏறிக்
கடன்முடித் தனுக்கை பெற்றுக் கயமுகன் தனைப்பூ சித்துத்
தடமதில் சூழ்ந்து கீழ்பால் சந்நிதி பணிந்தெ ழுந்து,

சடைமுடியைக் கொண்ட முனிவர்கள் துதிக்க இறைவனை நினைத்து, விரிவாக வந்த பொருனைநீரில் குளித்துக் கரையேறி, நீர்க்கடன்கள் செய்து, அனுக்ஞை (உத்தரவு) பெற்று, விநாயகருக்குப் பூசை செய்தார். பெரிய மதில்கள் சூழ்ந்த கிழக்குச் சன்னதியில் சென்று, சிவனை வணங்கினார். 20

## அகத்தியர், முனிவர்களுக்கு அருளுரை சொல்லுதல்

மேவிய போதில் உற்ற மெய்த்தவர் முனியைப் போற்றி,
மூவகை மண்ட பத்தில் அருச்சுன முத்தித் தானம்
தாவிலா நடனம் கொண்ட சபைஒரு சேவை அன்றித்
தேவமண் டபம்ஈ தென்றார் தேவர்கட் கருளும் தானம்.

*உண்மையான, தவசிகள் அகத்தியரை வணங்கினார்கள். 'புடார்ச்சுனத்தில் மூன்று மண்டபங்கள் உள்ளன. முத்தி மண்டபம் ஒன்று, குற்றமின்றி நடன சேவை கொடுத்த சபாமண்டபம் ஒன்று, தேவர்களுக்கு அருளுரை சொல்லு தற்கான தேவமண்டபம் ஒன்று' என்றனர். 21*

சந்நிதித் துசத்தம் பத்தின் சார்ந்ததென் அருகில் ஓங்கும்
பொன்நகர் மண்ட பத்தில் பொதியமா முனிவன் எய்தத்
துன்னுமா தவர்கள் எல்லாம் சூழ்ந்துடன் போற்றி செய்து,
நன்னெறி அருளிச் செய்து நலம்தர வேண்டும் என்றார்.

*சிவ சன்னிதானத்தில் துவஜஸ்தம்பத்தின் (கொடி மரம்) தெற்கே—அருகில், உள்ள மண்டபத்திற்குப் பொதிய முனிவர் வந்தார். நெருக்கமாக முனிவர்களும் போற்றி சொல்லிக் கொண்டு வந்தனர். 'அகத்தியரே! இந்த மண்டபத்தில் அமர்ந்து, எங்களுக்கு நல்ல செய்திகளை அருளுரையாகச் சொல்லி நன்மை செய்யவேண்டும்' என, முனிவர்கள் கேட்டுக் கொண்டார்கள். 22*

நன்னெறி அருளும் நாதன் நவிற்றிடும் கீர்த்தி ஐந்தாம்
புன்னெறி அகற்றும் பஞ்சாக் கரமணி பூதி பூசை
மன்னுபு ராண மேன்மை மகத்துவம் அருள்வாய் என்னத்
தன்னுளம் கருணை பொங்கித் தமிழ்முனி அருளிச் செய்வான்.

*'நன்னெறி தரத்தக்க சிவசம்பந்தமான புகழ் தருபவை ஐந்து. 1. தீய வழிகளை நீக்கும் பஞ்சாட்சரம் — திருவைந் தெழுத்து, 2. விபூதி, 3. உருத்திராட்சமணி, 4. சிவபூசை 5. புராணம் ஆகியவை பற்றிய மகத்துவம், மேன்மை பற்றி, எங்களுக் குச் சொல்லுங்கள்' எனக்கேட்டார்கள். தமிழ் முனிவர், கருணையுடன் சொல்லத் தொடங்கினார். 23*

## பஞ்சாட்சரம்

அக்கரம் ஐந்தே ஐந்தில் ஐம்பத்தொன்று ஐஐந் தாகும்
தக்கதாம் வகைகள் ஐந்து சாற்றிடில் ஆதி மூலம்
மிக்கநல் தூலம் சூக்கம் மேன்மைய சுத்த மாகச்
சக்கரத் தடைவே அங்கம் தரித்தல்உச் சரித்தல் சொல்வாம்.

*எழுத்து ஐந்து. அதில் ஐம்பத்தொரு பேதங்களும், இருபத்தைந்து பேதங்களும் உள்ளன. ஆதி பஞ்சாட்சரம், மூல பஞ்சாட்சரம், ஸ்தூல பஞ்சாட்சரம், சூட்சம பஞ்சாட்சரம், சுத்த பஞ்சாட்சரம் என, அதன் வகைகள் ஐந்தாக உள்ளன. பஞ்சாட்சர சக்கரம் அமைத்து வழிபடுதல், பஞ்சாட்சரம்*

பிரதிட்டை செய்தல், பஞ்சாட்சர ஜபம் என, மூவகைச் செயல்கள் உள்ளன. 24

ஈரிரண் டொன்ப தைந்தில் ஏழுடன் ஏழும் ஆறும்
சீரதாம் எட்டி ரண்டும் சேர்வது திரியா றெட்டாம்
நேரெழுத் தைந்தும் ஒன்றே நின்மயம் ஆமை ஊமை
பேரெழுத் தாறும் ஒன்றே பிதற்றிடில் ஆறு பேதம்.

அ. இ. உ. சேர்ந்தது ஓம். 'அ' எட்டைக்குறிக்கும்; 'உ' இரண்டைக் குறிக்கும். நாற்சதுரத்தில் சக்கரம் அமைத்தால், எட்டும் இரண்டும் சேர்ந்து சக்கரத்தில் வரும். ஒன்பதெழுத்துப் பஞ்சாட்சரசக்கரம் ஐந்தில் அடங்கும். ஓம் சிவாய நமஹ ஏழெழுத்து. பிரணவபஞ்சாட்சரம் ஓம் சிவாய நம என்பது. எல்லாப் பஞ்சாட்சரங்களிலும் அ என்பதிருக்கும். அது மாறாது. பஞ்சாட்சரம் என்பது, எடுத்த வடிவுக்கே உள்ள பெயர். அதன் எண்கள் பலவாயினும் பெயர் அதுவே. ஒலி ஒன்றேயாகும். பிரணவபஞ்சாட்சரம் நின்மயமான, வாசனையுள்ள ஒலியற்றதாகும் (மௌனத்துக்குரியது). மேலே கூறியபடி ஒன்றான ஆறாகத் தெரிவது, பிரணவபஞ்சாட்சரமாகும். 25

முந்திய காலை மத்தி அந்திய முறையே ஓத
உந்திநேர் இதயம் நாவே உருச்செய உச்சரிக்கும்
மந்திர மவனம் தீர்க்கம் புலுதம்மாத் திரைவ சிக்கச்
சந்தனம் கடுக்கை வில்வம் சாய்கையிற் சரும முற்றே.

காலைச் சந்தி (காலை 6 மணிக்கு) நண்பகல் சந்தி (பகல் 12 மணிக்கு) மாலைச் சந்தி (சாயுங்காலம் 6 மணிக்கு) ஜபம் செய்யவேண்டும். உந்தியிலிருந்து ஒலி எழுப்பி, இருதயத்துக்குக் கொண்டுவந்து, நாவில் உச்சரிக்க வேண்டும். உரு ஏற்ற வேண்டும். (நிர்ணய எண்ணிக்கை வரை சொல்லுதல், பேரிலக்கை எட்ட மிகுதியாகச் சொல்லுதல்) மந்திரமவனம், தீர்க்கம், புலுதம் என்பனவான மாத்திரை நீட்சிகளின்படி உச்சரிக்கலாம். பஞ் சாட்சர ஜபம் செய்யும்போது, உடலில் சந்தனம், கொன்றை, வில்வம் ஆகியவற்றை முறையே காலை, பகல், மாலையில் தரித்துக்கொள்ள வேண்டும். 26

இவ்வகை கணிக்க முத்துப்ப வளமே முதல்இ ரத்னம்
உய்வகை ஆகும் கோடி மடங்கதாம் உருத்தி ராக்கம்
திவ்விய கலன்செப் பாமே மற்றவர் தெரிசி யாமே
அவ்வகை அறிவோர் செய்வோர் அவர்செப யோகர் ஆமே.

எண்ணிக்கையைக் கணிக்கும் ஜபமாலை, முத்து பவளத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். உருத்திராக்க ஜபமாலை, கோடி

*மடங்கு உத்தமமாகும். திவ்வியமான தீர்த்த பாத்திரம், செப்பால் செய்ததாக இருக்கவேண்டும். மற்றவர் பார்க்காதபடி ஜபிப்போர் ஜபயோகர் எனப்படுவர். (மறைத்துச் செய்யும் ஜபம், யோகபலன் தரும்) இவை பஞ்சாட்சர விதிகள் ஆகும்.* 27

## உருத்திராக்கம்

அக்கர விதிஈ தாகும்; அண்ணல்தன் கண்ணில் தோன்றும்
அக்கமா மணிவி சேடம் விளம்புதும் மேன்மை யான
தக்கதோர் முகம ணிக்குச் சாற்றிடும் ஒருவன் தெய்வம்
தொக்கும்ஏ காட்ச ரத்தால் துதிப்பவர் துகள்இலாரே.

*அக்கமணி எனப்படும் உருத்திராக்ஷம் சிவன் கண்ணி லிருந்து தோன்றியதாகும். அதன் விசேஷத்தைச் சொல்கிறேன். மேன்மையான, தகுந்த ஏகமுக ருத்ராட்சத்திற்குத் தெய்வம் சிவனே ஆவார். இதை அணிந்து ஏகாட்சரத்தில் (ஏகாட்சரம்—பிரண வம் — ஓம்) இறைவனைத் துதித்தால், குற்றம் அனைத்தும் நீங்கும்; பிறவியும் நீங்கும்; உமைபாகனின் தாள் சேர்வார்கள்.* 28

பெறுபலன் பிறவி நீங்கும் பேதைபா கன்தாள் சேர்வர்
இறையவன் இருமு கம்தான் ஈரெழுத் தெண்ணும் காலை
குறைவிலா விந்து நாதம் கோதிலாப் பதத்தைச் சேர்வர்
திறிமுகம் மூன்றெ முத்தே சிவன்அழல் உருவம் சேர்வர்.

*இருமுக ருத்திராட்சத்திற்கும் சிவனே இறைவனாவார். அதற்குரிய எழுத்து இரண்டு (சிவ) அது விந்து நாத சக்திகள் உடையது. குறைவும் குற்றமுமில்லாதவராகிச் சிவபதம் சேர்வது, இதை அணிவதால் ஏற்படும் பயனாகும்.* 29

கறைஅணி கண்டன் மேவும் கயிலைவீற் றிருப்பர் கஞ்ச
மறையவன் தெய்வம் ஆகும் மன்னுநான் முகம ணிக்கே;
இறையவன் எழுத்து நான்கும் எண்ணியே இயற்று வோர்கள்,
நிறைதரு செல்வம் எய்தி நிலத்தினில் வாழ்வர் அன்றே.

*மூன்றுமுக உருத்திராட்சத்திற்குப் பிரமன் தெய்வமாவார். அதற்கு எழுத்துகள் மூன்றாகும் (சிவாய). அதை அணிபவர்கள் சிவரூபம் (சாரூபம்) அடைவர்; நீலகண்டனின் கயிலையை அடைவர். நான்குமுக உருத்திராட்சத்திற்கு இறைவன் சிவனே. எழுத்து, நான்கு (ஓம் சிவாய). இதை அணிந்து பணி செய்பவர்கள், நிறைந்த செல்வத்துடன், உலகில் நல்வாழ்வு வாழ்வார்.* 30

ஐமுகம் ஐமு கன்தான் அஞ்செழுத் ததனை வேண்ட,
உய்வகை அருளும் பாவம் ஒழித்திடும் உண்மை நல்கும்;

**தெய்வதம் கந்தன் ஆறு முகம்எழுத் தாறே சேர்ப்போர்**
**பைஅர வுலகம் போற்றப் பதவியும் சேரும் பாரே.**

*ஐந்து முகத்திற்கு ஐமுகக் கடவுள் சிவனே கடவுளாவார். அதனை அணிந்தவர் பஞ்சாட்சர ஜபம் செய்யவேண்டும். அணிந்தவர்அடையும் பயன்: உய்தி தரும்; பாவம் போகும். மெய்ப்பொருள் (தத்துவஞானம்) அறிவு வரும். ஆறுமுக உருத்திராட்சத்திற்குத் தெய்வம் ஆறுமுகக் கடவுள். எழுத்து ஆறு (ஓம் சிவாயநம). அணிந்தவர் அடையும் பயன்: பாம்பு தாங்கும் இவ்வுலகினர் போற்ற, நல்ல பதவிகளை அடைவர்.* 31

**இருவகை இன்பம் நல்கும் எழுமுகம் ஏழ்எ ழுத்தே**
**குருவின துருவம் ஆகும் குறைவிலாப் பேறு நல்கும்;**
**வரும்இரு நான்கெ ழுத்தே மாயவன் முகம்எட் டாகும்;**
**திருமிகு செல்வம் உண்டாம் தீவினை தீரும் அன்றே.**

*ஏழு முக உருத்திராட்சத்தின் தெய்வம் குருவாவார். எழுத்து, ஏழு (ஓம் சிவாய நமஹ). அணிந்தவர் அடையும் பயன்: இம்மை மறுமை இன்பங்கள் கிடைக்கும்; குறைவில்லாத பேறுகள் கிடைக்கும். எட்டுமுக ருத்திராட்சத்தின் தெய்வம் திருமாலாவார். எழுத்து, எட்டு (சிவ சிவாய நமஹ). அணிந்தவர் அடையும் பயன்: செல்வம் மிகப்பெருகும்; தீவினைகள் தீரும்.* 32

**நவம்தரு முகம்தான் ஆனை மாமுகன் அவ்எ ழுத்தே;**
**தவம்தரும் ஈரைந் தான முகம்அது சத்தி யாகும்;**
**பவம்தச எழுத்தே ஆகும் பரித்துளோர்க் கெண்ணி லாத**
**உவந்தருள் சருவ சித்தும் உண்டாக்கும் உண்மை யாமே.**

*ஒன்பது முக உருத்திராட்சத்தின் தெய்வம் விநாயகர். எழுத்து, ஒன்பது (ஓம் சிவ சிவாய நமஹ). அணிந்தவர் அடையும் பயன்: தவத்தைக் கொடுக்கும். பத்துமுக உருத்திராட்சத் தின் தெய்வம், சக்தி. எழுத்து, பத்து (ஓம் சிவ சிவாய நமஹ ஓம்). அணிந்தவர் அடையும் பயன்: எண்ணிக்கை இல்லாத சர்வசித்துகளையும் மகிழ்ச்சியுடன் உண்டாக்கும். இது உண்மை.* 33

**பதினொரு முகம்உ ருத்ரர் வருணமை எழுத்தே பார்க்கின்,**
**நிதிமுதல் கலைகள் நல்கும் நிச்சயம் ஈரா றான**
**கதிர்தரு முகம்ஆ தித்தர் அவர்மனுக் கணிக்க நல்கும்;**
**அதிகமாம் பேற ளிக்கும் அரும்பிணி யாவும் நீக்கும்.**

*பதினொரு முக உருத்திராட்சத்திற்கு ஏகாதச உருத்திரர் கள் தெய்வமாவார். எழுத்து, பதினொன்று (ஓம் சிவ ஓம் சிவாய நமஹ ஓம்). அணிந்தவர் அடையும் பயன்: நிதி கிடைக்கும்;*

*கலைகள் வரும்; இது உறுதி. பன்னிரண்டு முக உருத்திராட்சத் திற்குத் தெய்வம்; துவாதச ஆதித்யர் (எழுத்து இல்லை) அணி பவர் அடையும் பயன்: எவ்வளவு எண்ணிக்கை மந்திரத்தை ஜபிக்கிறார்களோ, அந்த அளவுக்கு அல்லாமல் மேலும் அதிக மாகப் பயன் கிடைக்கும். கடுமையான நோய்கள் அனைத்தும் நீங்கிவிடும்.* *34*

**மூன்றொரு பத்தும் கூடும் முகமணி தரிக்கில் முத்தி**
**ஈன்றிடும் எட்டைந் தாக எண்ணிய முகுர்த்தம் தெய்வம்**
**தோன்றும்அவ் எழுத்தை ஓதச் சுயம்பிர காசம் நல்கும்;**
**ஆன்றதோர் கவுரி சங்கம் அர்த்தநா ரீசம் ஆகும்.**

*முப்பது முக ருத்திராட்சத்தை அணிந்தால், முத்தி கிடைக்கும். நாற்பது முக ருத்ராட்சத்தை அணிந்தால், தெய்வம் எதிரில் வரும். பஞ்சாட்சரம் எட்டினை ஓர் ஆவர்த்தியாகக் கணக்கிட் டுச் செபித்தால், சரீரத்தில் சுயமாக ஓர் ஒளி தோன்றும். 'கவுரி சங்கம்' என்ற உருத்திராட்சம், 'அர்த்தநாரீச ஸ்வரூபம்' ஆகும்.* *35*

**திவ்விய ஞானப் பேறாம் திரிசங்கம் அணிவோர் சீவன்**
**மெய்வகை முத்தர் என்று விளம்பிடும் வேதம் எல்லாம்,**
**சைவமா மணிஒன் றேனும் தரிப்பவர் தரும சீலர்**
**நவ்வியன் பூசை கங்கை ஆடிடும் நலம்சேர் வாரே.**

*திவ்வியமான ஞானத்தின் பாக்கியமாகக் கிடைக்கக்கூடிய 'திரிசங்கம்' அணிந்தால், 'ஜீவன் முக்தர்' (உயிர் உள்ளபோதே முத்தி இன்பம் துய்ப்போர்) ஆவர் என்று, எல்லா வேதங்களும் (ஞானநூல் களும்) சொல்கின்றன. சைவமாமணி எனப்படும் உருத்திராட்சம் ஒன்றையாவது அணிபவர்கள், தரும சீலர்கள் ஆவர். அவர்கள் மானைக்கையிலேந்திய பெருமானைப் பூசித்த பயனையும், கங்கையில் குளித்த பயனையும் அடைவார்கள்.* *36*

**உருத்திர மணித ரிப்போர் உலகத்தில் உதயம் ஆன**
**திருத்திகழ் சிறப்பும் ஞானச் செல்வமும் திகழ்வர் அன்றித்**
**தருத்திகழ் மகவான் ஆகிப் பின்புசா யுச்யம் சார்வர்;**
**கருத்துடன் இவைஉ ரைத்தாம் பூதியின் காதை சொல்வாம்.**

*உருத்திராக்க மணியை அணிபவர்கள், புதிது புதிதாகத் தோன்றும் செல்வங்களைப் பெறுகின்ற சிறப்பையும், ஞானச் செல்வத்தையும் பெற்று வாழ்வார்கள். அது மட்டுமன்றிக் கற்பகத் தருவுள்ள தேவலோகத்து இந்திரனாக ஆகிப் பிறகு சாயுச்சிய முத்தி (இறையில் கலத்தல்) பெறுவர். ஆழ்ந்த கருத்துள்ள இச்செய்திகளைச் சொன்னேன். இனி விபூதி காதையைச் சொல்கிறேன்.* *37*

## விபூதி

அண்டங்கள் சமிதை யாக அழற்கணன் அன்றெ ழுந்து,
கொண்டவன் னியினில் கொண்ட சேடம்கோ பூழ்தி யாகும்;
எண்திசை உய்யு மாறும் ஈசனும் மனுவும் எல்லாம்
வெண்திரு நீறே என்பர் தன்விதி விளம்பல் பாற்றோ.

*அண்டங்கள் எல்லாம் யாக நெருப்பில் இடும் சமித்துகள் ஆக, நெருப்பிலிட்டுச் சுட்டெரித்தார் நெருப்புக் கண்ணை உடைய சிவன். அந்தச் சேஷம் (பொங்கிய மிகுதி), 'பூஷ்தி' (பூதி) எனப்பட்டது. ஈசனும், மந்திரங்களும் எல்லாம் எட்டுத் திசையும் பிழைக்க உள்ளதை விபூதி என்பர். எனவே, அதன் பெருமையை முழுவதுமாகச் சொல்லமுடியாது.* 38

மற்றுஅவை பலவாய்த் தோன்றும் மதிநிறப் பூதி வாய்மை,
சொற்றிட, கற்பந் தானே உவகற்ப மாமஞ் சூறு
நற்றவர்க் கொன்றே ஆகும் ஞானமே பூதி ஆகும்;
பெற்றகு லத்தால் பூதி அஞ்சனம் சாந்தம் பேணே.

*விபூதியில் பல வகைகள் உள்ளன. சந்திரன் நிறத்தைக் கொண்ட விபூதியின் உண்மை வகைகளைக் கற்பம், உபகற்பம் என இரண்டாகச் சொல்லலாம். திருவைந்தெழுத்தில் ஊறு கின்ற நல்ல துறவிகளுக்கெல்லாம் திருநீறு கற்பம் வகையே ஆகும். ஞானமே விபூதி ஆகும். தாம் தாம் பிறந்த குலமரபுப்படி விபூதி, சந்தனம், சாந்து ஆகியவற்றை அணியலாம்.* 39

சொன்னபூ தியினால் ஏவு சூலமுத் திரையால் சாத்த,
மன்னுபுண் டரஞ்சை வர்க்கு மாயற்கூர்த் துவம்வ குத்தான்,
முன்னுபுண் டரம்வ லப்பால் மூவர்முச் சுடர்இ டப்பால்
அன்னமத் தியில்ம யேசன் சதாசிவன் அனந்த னாமே.

*விபூதியைக் குழைத்துச் சூல முத்திரை செய்து, (ஆட்காட்டி விரல், நடுவிரல், மோதிர விரலில் கட்டை விரலால் தடவுவது) நெற்றியில் சார்த்திக்கொள்ள (இட்டுக்கொள்ள) வேண்டும். இது சைவர்களுக்கு விதி. இதைத் திரிபுண்டரம் என்பார்கள். திருமால் சமயத்தவர்க்கு ஊர்த்துவம் (மேலேறு மாறு) அணிதல் வகுக்கப்பட்டது (அது திருமண் இடுதல்), விபூதி திரிபுண்டரமாக அணிவதில், வல ஓரம் மும்மூர்த்திகள் (பிரமன் சிவன் திருமால்), இட ஓரம் மூன்று பட்டைகளில் மூன்று சுடர்கள் (சூரியன், சந்திரன், நெருப்பு), நடுமூன்று பட்டைகளில் மகேஸ்வரன், சதாசிவன், அனந்தன் என எழுந்தருளியிருப்பர்.* 40

புண்ணியர் இவர்தி யானம் போற்றிஆ கமத்தால் சாத்த,
எண்ணிய பலன்கொ டுக்கும் இருவினை நீக்கும் பூதி;
அண்ணல்தன் பூசை மூன்றாம் அவைசுத்த மேக மாகும்;
விண்ணவர் குழாம்தான் மிச்ரம் கேவலம் விமலை கூடல்.

*புண்ணியராக, தியானித்து, ஆகம விதிப்படி விபூதி அணிந்துகொள்ள, நினைத்த பயன்கள் கிடைக்கும். இருவினை நீங்கும். இனி இறைவனைப் பூசிப்பதைப் பற்றிச் சொல்கிறேன்.*

## சிவபூசை

*சிவபூசை, சுத்தம், ஏகம், தேவதா பிரதிட்டை என மூவகையின. இதில் சுத்தம் விநாயகர், முருகன், சிவன், அம்பிகை; ஏகம் — சிவன் மட்டும்; தேவதாபிரதிட்டை, அதிதேவதைகளை எல்லாம் ஆவாகனம் செய்து வழிபடுவது. மிஸ்ரம், கேவலம், விமலை (உமை), கூடல் என்றும் மூன்றாகச் சொல்வர். 4*

வாருணம் அருநீர்த் தானம் மன்னும்ஆ வின்றூழ் பூதி
சேருமா னதந்தான் ஐந்தும் தீர்த்தமாம் தேக சுத்தி
சாருறு கின்ற நியாசம் சமட்டிதத் துவம்வி யட்டி
ஆருறு மாதுர் நியாசம் ஆகமத் தடைவே செய்வார்.

*சிவபூசை செய்யத்தக்க இடங்கள் ஐந்து. 1. வாருணம் (கடலோரம்) 2. அருநீர்த்தானம் (நீர்நிலைக் கரைகள் — ஏரி, நதி, குளக்கரைகள்) 3. ஆவின்றூழ் (பசுமாட்டுத் தொழுவம் அருகில்) 4. பூதி (விபூதி தயாரித்த இடம்) 5. மானசம் (மனம்). சிவபூசைக்கு முன்பு தீர்த்தம், தேகசுத்தி, நியாசம் (அங்கநியாசம், கரநியாசம்) சமஷ்டி (இரண்டுவகை) வியஷ்டி, மாதுர் நியாசம் என்பன ஆகமங்களில் உள்ளவாறு செய்வர். 42*

அருமறை யதிதி யாகி ஆகும்;ஆ குதிகொள் வேள்வி
திருவளர் குருஇ லிங்கம் சிறந்தபொத் தகமே அக்கம்
இருள்வலி உடன்ஐந் தாகும் சிவபூசை இயற்று கின்ற,
கருமபூ சைகள்அ னேகம் கருத்துடன் இயற்று வோர்க்கே.

*சிவபூசையில் மனஇருட்டை நீக்கும் ஐந்து உள்ளன. முதலில் அருமையான வேதத்தை விருந்தினராகக் (அதிதியாகக்) கொள்ளவேண்டும். அதனடிப்படையில் ஆகுதிகள் உள்ள 1. வேள்வி 2. திருவளர் குரு 3. லிங்கம் 4. சிறந்த புத்தகம் 5. உருத்திராட்சம் என்பவை ஐந்தும் முக்கியப்பட வேண்டும். இப்படிச் சிவபூசை செய்வார்கள். கருத்துடன் செய்பவர்களுக்குக் கருமபூசைகள் பலவகைகளில் உள்ளன. 43*

சொன்னபூ சனைக்கு நாதன் சோடச வகைஇ லிங்கம்
என்எனில் இதய பூசை இயற்றிடு ஞான பூசை
பன்னுகூ விளம்க டுக்கை பதுமைஅம் புலிமி ருத்து
மன்னுசந் தனமாச் சித்ரம் இலைகிள்ளல் வன்னி பூதி,

சிவபூசைக்குச் சோடசோபசரப் பொருட்கள் வேண்டும். கூவிளம் (வில்வம்), கொன்றை, பதுமை (தாமரை), அம்புலி மிருத்து (சந்திர விரோதி — குமுதம்) சந்தனக்குழம்பு, கிள்ளுவதற்கான பத்திரம் (பன்னீரிலை) மருத இலை, பூ, விபூதி என்பவை சிவபூசைக்குத் தேவையானவை. 44

கன்னலின் கட்டி வெண்ணெய் கோமயம் இவைக ருத்தால்
பன்னமும் குடங்கை நீரும் பரிந்திடப் பலன ஊந்தம்
துன்னுபூ சனைஇ யற்றச் சொலும் அட்ட புட்பம் அன்றிப்
பொன்மலர் இரத்னம் காந்திப் போதுகாய் கனிநூ லக்கம்,

வெல்லக்கட்டி, வெண்ணெய் ஆகிய பொருட்கள் வேண்டும். கோமயத்தில் நீர்கலந்து தெளித்து, இடம் சரிசெய்துகொள்ள வேண்டும் (ஸ்தான சுத்தி). அஷ்டபுஷ்பம் வேண்டும். இதனால் பலன் பன்மடங்காகும். ஸ்வர்ண புஷ்பம் — பொன் (பணம்), இரத்தினம், ஒளிவிடும் காய் — தேங்காய், கனி, முப்பிரி நூல், உருத்திராக்கம் முதலியன வேண்டும். 45

செந்நெலின் அரிசி குல்லை செவ்வந்தி துருவை யன்றி
நன்மருக் கொழுந்து மாசி மல்லிகை இடுவோர் நல்லோர்;
மன்னிய திரவி லிங்கம் மற்றுள சலத்து லிங்கம்
இன்னதில் திரம்எட் டாகும் விதிவழி இயற்று வோர்க்கே.

செந்நெல் அரிசி, வெட்சிப்பூ, செவ்வந்தி, உதிரிகள் (துருவை), மருக்கொழுந்து, மாசில்லாத மல்லிகை இவற்றைச் சிவனின் திருவடியில் இடுபவர்கள், நல்லவர்கள் ஆவர். இரவிலிங்கம், அப்புலிங்கம் எனச் சிவபூசனைக்கு, எட்டுவகை லிங்கங்கள் உள்ளன. விதிப்படி அவற்றைச் செய்யவேண்டும். 46

## புராணம்

சூதர்சொல் லியபு ராணத் தொகையினைச் சூழ்ந்து கேட்போர்,
ஏதங்கள் அறப்ப டிப்போர் எழுதுவோர் இறைஞ்சி நிற்போர்,
பாதுகாத் திடும்பு ராணம் பூசிப்போர் பழுது தீர்ந்து,
நாதன்வாழ் கயிலை தன்னில் நண்ணிநற் கணத்தர் ஆவார்.

*புராணங்களைச் சொன்னவர் சூதமுனிவராவார். புராணங்களைக் கூட்டமாக உட்கார்ந்து கேட்பவர்கள், குற்றம் இல்லாமல் படிப்பவர்கள், எழுதுபவர்கள், வணங்கி நிற்போர், புராண நூல்களைப் பாதுகாத்து வைத்து மலரிட்டுப் பூசிப்போர், கயிலையில் வாழும் நாதனிடம் நெருங்கிச் சிவகணத்தர் ஆவார்கள்.* *47*

மன்னுபு ராணம் கேட்க மனவியா குலம்அ கற்றும்;
துன்னுமெய்ச் சரிதை கேட்கத் துகள்தவிர்த் தின்பம் நல்கும்;
பன்னும்ஆ கமங்கள் கேட்கப் பழவினை எல்லாம் பாறும்;
சொன்னஇச் சுருதி கேட்கச் சுபமிக அருளும் அன்றே.

*நிலைபெற்ற புராணங்களைக் கேட்க மனவியாகுலம் (மனக்கவலை) நீங்கும். அதிலுள்ள கதைகள் கேட்கக் குற்றங்கள் நீங்கி, இன்பம் உண்டாகும். பலவாகிய ஆகமங்களைக் கேட்டால், பழவினைகள் எல்லாம் ஓடிவிடும். வேதத்தைக் கேட்டால், சுபம் மிகுதியாகும்.* *48*

திருவளர் புராணம் ஓதச் செல்வங்கள் மிகவும் உண்டாம்;
வருமிருத் துகளும் நீங்கும் வாதைபோம் செனனம் மாறும்;
அருமையாம் மகப்பே றுண்டாம் அரும்பிணி யாவும் நீக்கும்;
பெருமையும் திருவும் நல்கும் பிஞ்ஞகன் பதவி சேர்க்கும்.

*செல்வம் தரும் புராணத்தை ஓதினால், செல்வங்கள் மிகவும் உண்டாகும். அகால மரணம் ஏற்படாது. வாதைகள் போகும். நற்பிறப்பு வரும். அருமையான பிள்ளைகள் பிறப்பார்கள். கடுமையான நோய்கள் எல்லாம் நீங்கும். பெருமையும் அழகும் ஏற்படும். இறையருளால் பதவிகள் கிடைக்கும்.* *49*

நவைஅறு புராணம் கேட்க ஞானமும் வீடும் நல்கும்;
சுவைதரும் அறிவு நல்கும் சுயம்பிர காசம் உண்டாம்;
சிவதரி சனம்கி டைக்கும் செகத்துளார்க் கருள்கொ டுக்கும்;
தவமிகும் தத்து வத்தின் சாரமும் தரிக்கும் அன்றே.

*குற்றமற்ற புராணங்களைக் கேட்டால், ஞானமும் மோட்சமும் கிடைக்கும். சுவையாகச் சொல்லக்கூடிய அறிவு ஏற்படும். சுயஒளி ஏற்படும். சிவதரிசனம் கிடைக்கும். உலகில் உள்ளவர்களுக்கு அருள் செய்யத்தக்க தவவலிமை ஏற்படும்; தத்துவ சாரங்கள் தன்னுள் தங்கும்.* *50*

அறம்பொருள் இன்பம் நல்கும் அருளிய சரிதை கேட்கப்
பிறங்கிய கீர்த்தி நல்கும் பேரழ கினைக்கொ டுக்கும்;
சிறந்திடும் உண்மை நல்கும் தெளிவுறும் சினம்த விர்க்கும்;
வறந்திடும் போதில் உற்ற மழையதாம் மன்னு யிர்க்கே.

புராணங்களில் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் இருக்கும். அந்த வரலாறுகளைக் கேட்டால், விசாலமான புகழ் கிடைக்கும். பேரழகு ஏற்படும், சிறப்பான உண்மைகளை அறியலாம். தெளிவு ஏற்படும். கோபம் போகும். வறட்சி ஏற்படும் போது மழை பெய்யும் பயன்போல, நிலைபெற்ற ஜீவப்பயிர் தழைக்கும்.
51

மண்ணினில் ஈயாச் செல்வர் வறுமையோ ரினினும் கீழோர்
பெண்ணினில் குணம்ஒன் றில்லாள் பேயதாம் பிதற்று கின்ற
விண்ணவன் சரிதை கேளார் இருஞ்செவி விறுதா அன்றிக்
கண்உளோர் முகத்தி ரண்டு புண்உளோர் கருதும் காலே.

உலகில் பிறருக்குக் கொடுக்காத செல்வத்தை வைத்திருப்போர், தரித்திரரைவிடக் கீழானவர்கள்; பெண்ணாகப் பிறந்து பெண்மைக்குணம் இல்லாதவள், பிதற்றுகின்ற பேயாவாள்; விண்ணவராம் இறைவனின் புராணத்தைக் கேட்காதவர்களின் இரண்டு செவிகள், விறுதா (பயனற்றவை). அவர்களின் கண்கள், உள்ளனபோல் தெரிந்தாலும், அவை முகத்தில் இரண்டு புண்களே ஆகும்.
52

முகம்அதனில் கண்இருக்க முன்இருக்கும் பொருள்தேடி
முயலு வாரும்,
அகம்அதனில் விளக்கிருக்க அழல்தேடித் திரிவாரும்,
அரையி லேதான்
மகவிருக்க அம்மகவைப் புறம்தேடும் மயக்கரும்போல்,
வளர்பு ராண
இகபரசா தனம்கொடுக்கும் நூல்இருக்க வேறுநூற்கு
இரங்கு வாரே.

முகத்தில் கண் இருக்க, எதிரே இருக்கும் பொருள் தெரியாமல் தேடி அலைபவர்களும், வீட்டில் விளக்கிருக்க, ஒளி எங்கே என்று தேடித் திரிபவர்களும், இடுப்பிலேயே குழந்தையை வைத்துக்கொண்டு, எங்கே குழந்தை என்று மயங்குபவர்களும் போல, இம்மை, மறுமைச் சாதனைகளைத் தரவல்ல வளர்ந்த புராணநூல் இருக்கும்போது, வேறு நூல்களுக்கு ஏங்குபவர்களின் செயல் உள்ளது.
53

பொருள்வகை இல்லா தார்க்குப் புவிதனில் புகழ்உண் டாமோ?
அருள்வழி இல்லா தார்கள் அறத்தின்பம் அறிகு வாரோ?
குருஅருள் ஞானம் இல்லார் கொன்றையன் அடிசேர் வாரோ?
திருவளர் புராணம் கேளார் செவிஇலார் செவிஇ லாரே.

பல வகையான செல்வம் இல்லாதவர்களுக்கு, உலகில் பெருமித வாழ்க்கையில்லை; அருள்வழி இல்லாதவர்கள்,

*அறத்தின் இன்பத்தை எப்படி அறியமுடியும்? குருவருளும் ஞான மும் இல்லாதவர்கள், இறைவன் அடிசேர முடியுமா? திருவளர் புராணம் கேளாதவர், செவி இல்லாதவர்களே; செவி இல்லாதவர்களே.* *54*

அண்ணலைப் பூசி யாருக் கரும்பொருள் கிடையா தன்றி,
எண்ணிய முற்றா முன்செய் தவத்தினால் அன்றி இல்லை
புண்ணியம் உடையோர்க் கன்றிப் புராணகேள் விகள்பொ ருந்தா
தண்அளி உடையோர்க் கன்றித் தருமமும் சாரா தன்றே.

*சிவனைப் பூசிக்காதவர்களுக்கு அரிய பொருள்கள் கிட்டுவ தில்லை. நினைத்தது நடப்பதில்லை. அதுபோல் முன்செய்த தவம் உடையவர்களுக்கும், புண்ணியம் உடையவர்களுக்கு மல்லாமல், புராணங்களைக் கேட்கும் பாக்கியம் கிட்டுவ தில்லை; தரும வாய்ப்பும் ஏற்படுவதில்லை.* *55*

பன்னுபு ராணக் கேள்வி இன்றிஓர் பலன்உண் டாமோ?
மின்னுல கத்தோர்க் கென்று முனிவர்க்கு விரித்துக் காட்டி,
இன்னன எல்லாம் செப்பி எழுந்திமை யவர்கள் போற்றும்
மன்னுமண் டபத்தை நீங்கி மலயமா முனிவன் வந்து,

*பலவகைப் புராணங்களை நல்லவர்கள் சொல்லக் கேட்காதவர்களுக்குப் பயன் உண்டாகுமா? என்று, உலகினர்க்கும் எதிரில் உள்ள முனிவர்களுக்குமாக இச்செய்திகளைச் சொல்லி, அகத்தியர் எழுந்தார். முத்தி மண்டபத்திலிருந்து புறப் பட்டார்.* *56*

## அகத்தியர் செய்த வழிபாடு

விதிவழி அரனைப் பூசை இயற்றிட விரதம் உற்றே,
மதிநிறம் ஆன கற்ப நீற்றினை வனைந்து ருத்ரன்
நுதல்விழி அதனில் தோன்றும் நுவல்கின்ற பன்மூன் றான
பதிமுக மணித ரித்தே பாவித்துப் பரவிப் பின்பு,

*அகத்தியர், விதிப்படியாக இறைவனைப் பூசிக்கச் சங்கல்பம் செய்துகொண்டார். சந்திரனின் வெள்ளை நிறத்தில் அமைந்த கற்பம் என்ற வகைத் திருநீற்றை அணிந்துகொண்டு, உருத்திரனின் நெற்றிக்கண்ணில் தோன்றியதான மூன்று முகங்கள் கொண்ட உருத்திராட்சத்தை அணிந்துகொண்டு, மனத்தில் இறைதிருமேனியையும் பாவித்துக்கொண்டு அதனைப் போற்றினார்.* *57*

பூதபி ராணா யாமம் போகபூ ரகம்நா லெட்டாம்
நாதகும் பகம்கும் பித்தல் விலகலை எட்டெட் டாகும்

மேதகு இரேச கம்தான் விடுதலீ ரெட்டாம் மார்க்கம்
சாதகத் தியற்றி அர்க்யம் தாபித்தா கமத்தின் சார்வே,

சரீரத்தில் பிராணாயாமம் செய்தார். அதில் போக பூரகம் முப்பத்திரண்டு முறையும், நாதகும்பம், கும்பித்தல், விலகலை ஆகியவற்றில் எட்டெட்டு முறையும், இரேசகம் விடுத்தல் பதினாறு முறையும், சாதகம் பண்ணிய வழியில் செய்தார். பிராணாயாமம் முடிந்தபிறகு ஆகம முறைப்படி மந்திர நீரிறைத்து (அருக்கியம்) ஸ்தல சுத்தி செய்தார். 58

கணபதி கலைமான் வாசக் கமலமான் கடவுள் நந்தி,
இணையிலா கங்கை காளா யமுனையத் திருத்து வாரா
துணைபுரி துவார பாலர் சூழ்திக்கில் எண்தி காந்தர்
கணைவிழிக் கன்னி கால வயிரவன் காவ லாளர்,

கணபதி, சரஸ்வதி, லட்சுமி, திருநந்திதேவர், கங்கை, காளிந்தி, யமுனை நதிகளின் வழியாகத் துணைபுரியும் துவார பாலகர்கள், திக்பாலகர்கள், காளி, காலபைரவர், பரிவார தேவதைகள் முதலியவர்களைப் பூசை தடையின்றி நடக்க வேண்டிக் கொண்டார். 59

முதலினோர் தம்மை வேண்டி முன்னவன் பணிக்கூ றின்றி,
அதனையும் தீர்த்துத் தன்னை அவனதாய் இயற்றி ஆறு
விதமதா சனங்கற் பித்து விமலனை நிறுவி வேண்டி,
நிதம்உற இலிங்க சுத்தி நேசத்தால் செய்து போற்றி,

அத்தெய்வ ஆவாகனங்களை உத்வாசனம் செய்தார். சிவார்ப் பணம் என்று தன்னைச் சிவனுக்கு அர்ப்பணித்தார். இறைவன் எழுந்தருள, ஆறு ஆசனம் சங்கல்பித்தார் (இருக்கையை ஆவாகனித்தார்). இறைவனை அங்கே பிராணப் பிரதிஷ்டை செய்தார் (எழுந்தருளச் செய்தார்). நித்தியம் ஏற்படும்படி அந்த மூர்த்தத்தை நேசத்துடன் மந்திர நீரால் சுத்தி செய்தார். 60

பஞ்சசுத்தி இதுவரையும் வடமேல் பாலில்
பதிதரும்ஐங் கரத்தனும்பைங் கடம்பி னானும்,
கஞ்சமக்கள் தனையும்பின் வடபால் சத்த
குருவினையும் நிறுவிக்கை தொழுது வேண்டி,
அஞ்சுமுகக் கரத்தர்ஆ சத்தி யாலும்
அர்ச்சித்த வகையங்க மாறி, பங்ய
மிஞ்சுவிர லானிசித்து வித்யா தேகம்
விமலனைப்பா வனைகொண்டு விதியால் சாத்தி,

ஐந்து தூய்மைகள் (பஞ்சசுத்தி) செய்தார். இந்தக் கிரியை வரை வடமேற்குத்திசை நோக்கிச் செய்தார். தல விநாயகர்,

கடம்பன் (முருகன்), பிரமன், திருமால், வடக்கில் சப்த குருமார்கள் ஆகியவர்களை நிறுவினார் (ஆவாகனம் செய்தார்); வணங்கினார்; வேண்டினார். அஞ்சு முகமும் ஐந்து அட்சரமும் ஆன சிவனின் விருப்பப்படி அத்தெய்வங்களுக்கு ஒவ்வோரங்கமாக அர்ச்சித்து, பங்கயம்போல் விரல்களை வைத்துக்கொண்டு கவிழ்த்துக்காட்டி, வித்யாதேக பாவனை செய்துகொண்டு, விதிப்படி, விமலனைச் சார்த்தினார். *61*

மந்திரத்தால் கிரிகைபா வனையால் மற்றும்
மதிக்கும்ஆ வாகனதா பனமார்க் கத்தில்,
முந்துசந்நி தானசந் திரோத ணங்கள்
முற்றியபின் முத்திரைஅஞ் சலியும் செய்து,
கந்தம்உறப் பணிமாறி அர்க்யம் ஈந்து,
கனித்ததுடை யினைத்தண்டிக் கடவுட் காக்கி,
விந்தைபெறும் அஞ்சனம்எள் தயிலக் காப்பு
விரைசேர்மா நெல்லிஅரி சனத்தின் காப்பு,

மந்திரம், கிரியை, பாவனை ஆகிய மூன்றாலும் பெருமானை மதிப்புடன் ஆவாகனம் — ஸ்தாபனம் செய்தார். கிரியைகளில் ஒன்றான சந்நிதான சந்திரோதனம் (திருமுன்னிலையில் வலக்கையின் ஆட்காட்டி விரல், நடுவிரல்களால் அஸ்த்ராயபட் எனக்கூறி, இட உள்ளங்கையில் தட்டுதல்) செய்தபின், திக்பந்தனம் முத்திரைகள் செய்துகொண்டு, மணப்பொருட்களால் சூழலை வாசனையாக்கி, மந்திரநீரிறைத்து, கனிவான உடையை அஸ்திரதேவருக்குச் சமர்ப்பித்து, சந்தனம், நல்லெண்ணெய், தைலக்காப்பு, மணமானமாவுகள், நெல்லிக் குழம்பு, மஞ்சள் காப்பு, *62*

பஞ்சகவ்வி யம்பஞ்சா முதமும் ஆட்டிப்
பால்தயிர்நெய் யெழுபன்னீர் பலத்தின் சாறு
மிஞ்சுதேன் கருப்புநீர் இளநீர் வில்வம்
மென்குழம்பு தாரையதா கையில் வேண்டித்
தஞ்சம்ஆ கியபதமந் திரத்தால் ஆட்டிச்
சந்தனச்சே றாட்டிசிவ கும்பஞ் சங்கம்
நஞ்சணிகண் டனுக்காட்டி இடையே உதகம்
நலம்பெறவே அட்டபுட்பம் அணிந்து மாறி,

பஞ்ச கவ்வியம், பஞ்சாமிர்தம் காப்புச்செய்து, ஒவ்வொன்றின் பின்னும் அபிஷேகம் செய்தார். பால், தயிர், நெய்,

*பன்னீர், பழச்சாறு, தேன், கருப்பஞ்சாறு, இளநீர், வில்வப்பழம், மணப்பொருள்குழம்பு ஆகியவற்றைக் கையாலே தாரை வார்ப்பதுபோல் அபிஷேகித்தார். பலமுறை வேண்டிக் கொண்ட பத மந்திரங்களால் அபிஷேகம் செய்தார். சந்தனம் கலந்த நீராட்டி, சிவகும்பத்தினாலும், சங்கின் வாயாலும் நீர்வார்த்து, இடையிடை உத்தரணி நீர்விட்டு, அஷ்டபுஷ்பம் சமர்ப்பித்தார்.* 63

அக்கியநீர் ஒற்றாடை பரிவட்டம் சாந்தம்
அறுகுவில்வம் துளவாதி அரிசிஅணி சுகந்தம்
மருக்கொழுந்து தொடைமாலை இண்டைமலர்க் கண்ணி
வகைசாற்றி மணிஇலங்கும் ஆபரண மாலை
குருக்கிளரும் முடிகுழைகள் முதலான சாற்றிக்
கோமளஞ்சேர் பொன்மலரால் அர்ச்சித்து வணங்கித்
திருக்கிளர்தத் துவத்திரயம் விதிப்படியே செய்து,
திகழவே பணிமாறித் திவ்வியல யாங்கம்,

*பின் மந்திரநீர் இறைத்தார். திருமேனியை ஆடையால் ஒற்றித்துடைத்தார். பரிவட்டம் (புதுத்துணி) சார்த்தினார். சந்தனம், அறுகு, வில்வம், அட்சதை, அணியக்கூடிய மணப் பொருட்கள், மருக்கொழுந்து கலந்த தொடையலாகிய மாலை, மலரால் கட்டிய தலைமாலை (இண்டை), மலர்மாலை கள் இவற்றை அணிவித்தார். மணிகள் பதித்த ஆபரண மாலை களை அணிவித்தார். ஒளிவிடும் குழை மற்றும் முடிமாலைகள் அணிவித்தார். அழகான பொன் மலர்களால் அர்ச்சனை செய்தார். அருட்செல்வம் மலிந்த 'தத்துவத்திரயம்' என்ற நூல்கூறிய விதிப்படி பூசித்தார்.* 64

போகாங்கம் அர்ச்சித்துப் பூசித்துப் பஞ்சரஆபரண
பூசைசெய்து புனிதை யையும்அர்ச் சித்து,
மோகாந்தம் பணிமாறி அமுதமது வருக்கம்
முதலான அறுசுவையும் பலவர்க்கம் பணியம்
வாகுபெறு கனிவர்க்கம் பானீயம் அடைக்காய்
மாறியே இட்டமுற வகுத்துபசா ரங்கள்
ஏகாந்த மந்த்ரபுட்பம் சகத்திர நாமம்
இயற்றிஇறை விழிக்குநிகர் கூவிளம்அர்ச் சித்தே,

*ஒவ்வோரங்கத்துக்கும் மந்திரம் சொல்லி மலரிட்டார். அது லயாங்கம், போகாங்கம் என இருவகைப்படும். பின் பஞ்சர்ராவரண பூசை செய்தார். புனிதையாகிய அம்பாளுக்கு அவ்வாறே பூசை செய்தார். இறைவனுக்கு மோகாங்கம் மலரிட்டார். பின்னர் அமுது படையல் (நைவேத்யம்) செய்தார்.*

*அறுசுவை உணவுகள், பழவர்க்கங்கள், பலகாரங்கள், தானே பழுத்த பழவகைகள், பருகும் உணவு வகைகள் (பானீயம்), வெற்றிலை பாக்கு முதலியன படைத்து, உபசாரங்கள் (சோடசோபசாரங்கள்) செய்து, ஏகாந்தமாக மந்திர புஷ்பம் (எழுந்து நின்று மந்திரம் சொல்லி மலரிடுதல்) சகஸ்ரநாமம் செய்தார் (அர்ச்சனையில் சகஸ்ரநாமம், இறுதியில் மந்திர புஷ்பம்) அர்ச்சனைக்கு விழிக்கு ஒப்பான வில்வத்தைப் பயன்படுத்தினார்.* *65*

## அகத்தியர் துதி

பரவசம்எய் திப்பரனே போற்றி! திங்கள்
பாம்புடனே அணிந்துபகை தீர்த்தாய் போற்றி!
கரமதா சலஉரிபோர்த் தருள்வாய் போற்றி!
கங்காள விடம்உண்ட கண்டா போற்றி!
புரதகண பூதநா யகமா தேவ
புண்ணியபுங் கவபுடார்ச் சுனத்தில் மேவும்,
வரதநா றும்பூநா யகனே போற்றி!
மாதுகோ மதிமான்ம ணாளா போற்றி!

*(கர, மத, அசலம் = கரமதாசலம் — துதிக்கையுடைய மதம் பொருந்திய மலைபோன்ற யானை; உரி — உரித்ததோல்; கங்காள — சிவனே; புரத—திரிபுர தகனம் செய்தவரே; கணபூத நாயகம் — பூதகணநாயகரே; புங்கவ — கடவுளே, குருவே; வரத—வரம் தருபவரே).* *66*

பூசனையைப் புரிவானும் நீயே; வேண்டும்
பூசனைகொண்டு அருள்வானும் நீயே; பூவில்
வாசமாய், நீரினுக்குத் தண்ஆய், தீய்க்கு
மன்னும் வெதுப்பாய், அழலாய், வளரும் சோதித்
தேசுஉருவாய், செய்வகையின் பொருளாய், வேதம்
செப்பிய உண்மைத் திறமாய்த், தெளிவார் உள்ளத்து,
ஆசுஅகல அமர்ந்திடும் அற்புதம் அதாகி,
அருள்கொழிக்கும் மெய்ஞ்ஞானத்து அமுதே போற்றி!

*(தண் — குளிர்ச்சி; வெதுப்பாய் — வெதுவெதுப்பாய்; அழலாய் — சூடாகி; தேசு—ஒளி; செய்வகையின் பொருளாய்—செயல்களின அர்த்தமாகி; தெளிவார்—உண்மை கண்டறிந்தவர்களின்; ஆசு—குற்றம்; அகல—நீங்க.)* *67*

அற்புதனே போற்றிஎனத் துதித்து நான்செய்
அரும்பிழைகள் பொறுத்தருள்என் றடியில் வீழ்ந்து,
தற்பரனை வளைந்துமனத் திட்பம் வேண்டித்
தகும்காலம் அர்ச்சித்துத் தழலை ஓம்பி,
நற்குசையால் சமித்துநறு நெய்யி னாலே,
நண்ணுமதைத் தகித்தவர்க்கா குதிசெய் திந்தப்
பொற்புறுபூ சனையைஅரன் தனக்குத் தத்தம்
பொருந்தவே செய்துநித மான பூசை,

*'அற்புதனே! போற்றி!' என்று துதித்து, 'பூசையில் நான் செய்த அரிதான பிழைகளைப் பொறுத்தருள்' என்று, திருவடியில் விழுந்து வணங்கி, தனக்குமேல் ஒரு பரம்பொருள் இல்லாத பரமனை வலம் வந்து, 'மனத்திட்பம் கொடு' என வேண்டிக்கொண்டு, தக்கதொரு காலத்தில் அக்கினி காரியம் தொடங்கி, தருப்பை, சமித்துகள், மணமுள்ள நெய் ஆகியவற்றால் நெருப்பாகத்தகிப்பவருக்கு (சிவனுக்கு) ஆகுதி செய்து, இந்தப் பெருமைமிகு பூசனைப்பயன் முழுவதையும் 'சிவார்ப்பணம்' என்று அவருக்கே தத்தம் செய்தார்.* 68

முடியாத தியற்றிபின் சாட்டாங்கம் போற்றி,
முனிவணங்க முன்னவனும் முனிகாண எழுந்து,
விடைஏறி உமையோடும் காட்சி நல்கி,
வேண்டும்வரம் கொடுத்தீசன் மெய்சாந்த மூர்த்தி,
இடைஎய்த அகத்தியரும் பூசித்து நாளும்,
இன்புற்றங் ஙனம்உறைந்தே இறைவிநிகர் பன்னி,
துடிஇடைஉ லோபாமுத் திரைமாதும் தாமும்
துதிகொண்டு பொதிகையினில் மேவினார் அன்றே.

*நாள்தோறும் செய்யும் நித்திய பூசைகளையும் செய்தார். சாஷ்டாங்க நமஸ்காரம் (எட்டு உறுப்புகள் மண்ணில்பட வணங்குவது) செய்தார். முன்னவனாகிய இறைவனும், முனிவர் காணுமாறு வெளிப்பட்டெழுந்து, விடையின்மேல் ஏறி, உமைய வளுடன் காட்சி கொடுத்து, அகத்தியருக்கு வேண்டிய வரங் களைக் கொடுத்து ஈசன் — மெய்சாய்ந்த பெருமான் — சிவ லிங்கத்தில் எய்தினார். அகத்தியரும் பலநாள்கள் தங்கி, நாளும் இறைவனைப் பூசித்து இன்புற்றார். உமாதேவி போன்ற — தன் மனைவியாகிய — துடி (உடுக்கை) போன்ற இடையை உடைய உலோபாமுத்திரையுடன் அகத்தியர் இறைவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, பொதிகை அடைந்தார்.* 69

# 15. தாரக உபதேசப் படலம்

## கவிச்சொல்

அகத்திய முனிபூ சித்த தறைந்தனம் அருந்த வத்தோர்க்(கு)
அகத்தரு ஈசன் காதை உரைத்தகா ரணர்தம் மோடும்
சகத்தினில் சீவன் முத்தித் தலம்எய்திச் சம்பு வின்பால்
மகத்துவ தார கத்தைப் பெற்றிடும் மகிமை சொல்வாம்.

*திருப்புடார்ச்சுனத்தில் அகத்தியர் பூசை செய்ததைச் சூதர் சொன்னார். அருமையான தவசிகளுக்கு மனத்தில் குறிப்பை உணர்த்தி அருள்செய்யும் சிவனின் — புடை மருதீசனின் திருவிளையாடல்களைச் சொன்ன சூதருடன், கேட்ட, முனிவர்களும் சீவன் முத்தித்தலமாகிய திருப்புடை மருதூருக்குச் சென்று, வெண்ணாவல் மரத்தின் கீழ் மகத்துவம் மிகுந்த தாரகமந்திர (ஓம்) உபதேசம்பெற்ற மகிமையைச் சொல்வோம்.* *1*

## காசியிலிருந்து முனிவர்கள் தலயாத்திரை மேற்கொள்ளுதல்

வாகுசேர் முனிவர் எல்லாம் சூதரை வணங்கி எங்கட்(கு)
ஓகையாய்ப் புடார்ச்சு னத்தின் உண்மையை யோக சொற்றாய்
ஆகமக் காட்சி யாலே அறிந்தனம் அதனால் அந்த
ஏகனைக் கண்டு போற்ற ஏகுவோம் எனஇ யைந்தே.

*வாகான முனிவர்கள் எல்லாரும் சூதரை வணங்கி, 'எங்களுக்கு மகிழ்ச்சியுடன் புடார்ச்சுனம் பற்றிய உண்மைகளைச் சொன்னீர்கள். இதுவரை அத்தலப் பெருமையை, நூல்களின் வாயிலாகத்தான் அறிந்திருக்கிறோம். ஆகையால், அந்த ஒருவரை — சிவனை நேரிலே சென்று தரிசிக்கப் புடார்ச்சுனத் திற்குச் செல்வோம்' என வேண்டினார்கள். சூதரும் இசைவு தெரிவித்தார்.* *2*

வாதரா யணர்மார்க் கண்டர் மரீசிவான் மிகர்வ சிட்டர்
சூதர்மற் றவர்பால் உள்ளார் சுகர்முதல் எழுந்து காசி

நாதனைப் பரவித் தங்கள் நன்மனக் குறிப்பை ஓதி,
வேதகா ரணனைப் போற்ற வேண்டியே விடைபெற் றார்கள்.

வாதராயணர், மார்க்கண்டர், மரீசி, வான்மிகர், வசிஷ்டர், சூதர் மற்றும் புராணம் கேட்ட முனிவர்கள், சுகர் ஆகியவர்கள், காசி விசுவநாதரை வணங்கி, தங்கள் மனவிருப்பத்தைத் தெரிவித்தார்கள். விடைபெற்றுக்கொண்டு வேதகாரணராம் திருப்புடைமருதூர் ஈசனைப் போற்றுவதற்குப் புறப் பட்டார்கள். 3

அங்குநின் றெழுந்து சத்த புரிகண்டார் அரன்பால் ஆறு
திங்களும் தேவர் போற்றும் சிலோச்சயம் தெரிசித் தாறு
மங்கல தினத்தில் முத்தி வழங்கினார் மலையைப் போற்றி,
நங்கைபூ சித்த மாவை நண்ணினார் நாதற் போற்றா,

சப்தபுரி க்ஷேத்திரத்திற்குச் சென்றார்கள். ஆறுமாதங்கள் சிவனைத் தேவர்களும் சந்திரனும் வழிபட்ட சிலோச்சயத்தைத் தரிசித்தார்கள். ஆறுநாள்கள் வழிபாடுசெய்த கண்ணப்பருக்கு மோட்சம் கொடுத்த இறைவனின் காளத்திமலையைப் போற்றினார்கள். மாவடியில் உமையம்மை சிவனைப் பூசித்த காஞ்சிக்குச் சென்று, ஏகம்பனைத் தரிசித்தார்கள். 4

பறவைசேர் வேதக் குன்றம் பரவியே பழையெ லும்பு
முறையினால் பாவைஆன முதுபதி போற்றி மூன்று
பொறைதொழ மலைமி தந்த புண்ணிய புரியைப் போற்றி,
மறைதொழு பதியும் வன்னி மலையையும் வணங்கி வந்து,

கழுகுகள் சேரும் திருக்கழுக்குன்றத்தை வணங்கினார்கள். பழைய எலும்பைப் பதிகம் பாடி, முறையாக வளர்ந்த பூம் பாவையை எழுப்பிய பழம்பதியாம் மயிலாப்பூரைப் போற்றினார் கள். வேதம் தொழுத மறைக்காட்டையும், ஜோதியாக இறை வன் நின்ற திருவண்ணாமலையையும் வணங்கினார்கள். 5

தில்லையில் எய்தி நாதன் திருநடம் போற்றி மாயை
எல்லையைக் கடந்தோர் சூழத் தபோவனத் தெய்த அங்ஙன்,
பல்பெருந் தவத்த ரோடு பதஞ்சலி வியாக்ர பாதர்
சொல்வளர் துதிகள் கூறி எதிர்கொடு சூழ்ந்து வந்து,

தில்லை அடைந்து இறைவனின் திருநடனத்தைப் போற்றினார்கள். மாயையாகிய எல்லையைக் கடந்தவர் சூழச் சிதம்பரத்தில் தபோவனத்துக்கு வந்து, அங்கே இருந்த பதஞ் சலி, வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்களுக்குத் துதிகளைச் சொல்லி, அவர்களின் வரவேற்பை ஏற்று, அங்கே பணிவுடன் தங்கினார்கள். 6

பணிந்திருக் கையினில் உய்த்துப் பரவியே பரவி னோர்கள்,
வணங்குத லொடும்வி னாவ வரவுரைத் தருள்வார் இந்த
அணங்கர வுலகில் தென்பால் ஆறுறை அருச்சு னத்தின்
குணங்களை ஆக மத்தால் கூறிய காட்சி கண்டோம்.

*பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் அனைவரையும் வணங்கி, யாத்திரை புறப்பட்ட காரணத்தை விசாரித்தார்கள். ஆதி சேடன் தாங்கும் இந்த உலகில் தெற்கே, பொருனையாறு பாயும் புடார்ச்சுனத்தின் சிறப்புகளை நூல்களில் கற்றறிந்தோம். அதைக் கண்களால் காணப் புறப்பட்டோம் என்றாரர்கள். 7*

மன்னிய பொறியால் காண வந்தனம் என்றார் தம்மைப்
பன்னக முனிவன் பாதன் முதலினோர் பணிந்து வேண்டித்
தென்னகர்க் காசி உண்மை எங்கட்குத் தெரிப்பீர் என்ன,
முன்னவன் ஆன வேத முனிவரன் மொழிகின் றானால்.

*அதைக்கேட்ட பதஞ்சலியும் வியாக்ரபாதரும் தெற்குக் காசியின் சிறப்பை எங்களுக்குத் தெரிவியுங்கள் என்று வேண்டி னர். வேதமுனிவனாகிய வியாசர் கூறத் தொடங்கினார். 8*

## வியாசர் சொன்ன புடைமருதப் பெருமை

திருமால் பிரமன் இந்திரனே முதலாம் தேவர் யாவர்களும்
ஒருகா லத்துக் கயிலைதனில் ஒருங்கு கூடி மருங்கெய்திப்
பெருமான் இடத்து வழிபட்டுப் பிரள யத்தும் அழியாத
இருமா நிலத்துச் சிவதலம்தான் எங்கட் கருள வேண்டும்என,

*திருமால், பிரமன், இந்திரன் முதலாகிய தேவர்கள் யாவரும் கயிலாயத்தில் கூட்டமாகக் கூடினார்கள். பெருமானை வழிபட்டார்கள். 'மிகப்பெரியதான மண்ணுலகத்தில் பிரளய காலத்திலும் அழியாத சிவத்தலம் எது? என்று எங்களுக்குச் சொல்லவேண்டும்' என, இறைவனை வேண்டினார்கள். 9*

பூசை புரிந்து தவம்இயற்றப் புனிதன் இவர்கள் முன்தோன்ற,
வாச மலரோன் முதலோரை நோக்கிப் புகல்வான் இவ்வரைநேர்
பேசில் பொதிகை யாம்நமது பிறைவே ணியில்வாழ் பயிரவிதான்
ஆசில் பொருந்தம் அவ்உலவும் பதிகள் யாவும் அமரர்பதி.

*இறைவனுக்குப் பூசைசெய்து தவம்செய்ததால் இறைவன் இவர்களின் முன்னே தோன்றினார். பிரமன் முதலியவர் களைப் பார்த்து, 'கயிலாய மலைக்குச் சமமான புகழுடைய மலை பொதிகைமலை. நம் தலையில் உலாவும் கங்கைதான் அங்கே தோன்றும் பொருனை. பொருனை உலாவும் பகுதியில்*

உள்ள ஊர்கள் எல்லாம், தேவலோகத்து ஊர்களுக்குச் சம மானவை. 10

சிவனைப் போற்றும் தவயோகர் சிறந்த பதிசூழ் சிவலோகம்
அவனி தனிலே இந்த்ரபுரி அங்ஙன் வாழும் அருச்சுனமே,
நவசத் திகளில் முதல்சத்தி நமக்கா தார சத்தியதாம்
உவமை உரைக்க அதற்குவமை அதுவே என்று
மறைஉரைக்கும்.

சிவனடியார்களாம் தவயோகிகள் மிகுந்தபதியாகிய சிவலோகம், இந்திரபுரி என்ற பெயர்களை உடைய புடார்ச்சுனமே, சிறந்ததலம் ஆகும். நவசக்திகளில் முதல் சக்தி நமக்கு ஆதாரசக்தி ஆவாள். உவமை சொல்லப் புகுந்தால், திருப்புடை மருதூருக்கு அதுவே உவமை என்று மறைநூல்கள் கூறும். 11

அந்தப் பதியின் மகத்துவங்கள் அறைதும் இன்னும் அகிலம்எலாம்
சிந்தப் பிரள யம்தோன்றும் காலம் தனிலும் சிதையாத
முந்தைப் பதிதென் பால்காசி மூரி வடகா சித்தலமும்
சந்தச் சூல நுதிதனிலே தரித்து வாழ்வோம் சாற்றுங்கால்,

அந்தப்பதியின் மகத்துவங்கள் இன்னும் பல உள்ளன. உலகமெல்லாம் அழியும்படியாகப் பிரளயம் தோன்றும் காலத்திலும் புடார்ச்சுனம் அழியாது. அதுபழைமையான திருத்தலம். ஒலிக்கும் நம் சூலாயுதத்தில் நுனியில் தெற்குக் காசியாம் அத்தலத்தையும் வடக்குக்காசியாம் வாரணாசி யையும் வைத்துள்ளோம். 12

முத்தி கொடுக்கும் அப்பதியில் வாழ்வோர் சீவன் முத்தர்களாம்
அத்த கைமைப் பதிசீவன் முத்தி புரம்எய் தில்விளங்கும்
சத்தி தார கத்துருவாம் சார்வோர்க் கந்தத் தாரகத்தைச்
சித்தி பெறவே வலக்காதில் உபதே சிப்போம் செப்புங்கால்,

முத்தித்தலமாம் அதில் வாழ்பவர்கள் ஜீவன் முத்தர்கள் ஆவர். அதனால் அது ஜீவன் முத்திபுரம் என்று கூறப்படும். அங்குச் சென்றால் இச்செய்தி விளங்கும். அங்குள்ள சக்தி (அம்பிகை) தாரக மந்திர உருவமானவள். அங்கே வாழ்பவர் களுக்குச் சித்தி பெறுவதற்காகத் தாரக மந்திரத்தை வலக்காதில் நாம் உபதேசிப்போம்' என்றார். 13

கிருமி முதலாம் உயிர்யாவும் கேதம் தீர்அவ் வெல்லைதனில்
மரணம் ஆகும் பொழுதினிலே மாதவ் வுயிரை மடிஏற்றிப்
பிரிவின் துன்பம் அதுநீங்கத் துயிலால் வீசப் பிரமமனுத்
தருதா ரகத்தை வலச்செவியில் தார கேசன் சாற்றும்என,

அந்த எல்லையில் கிருமிமுதலாக எல்லா உயிர்களும் வாழ்நாள் தீர்ந்து மரணம் அடையும் பொழுதில், உமையம்மை அவ்வுயிரைத் தம்மடியில் எடுத்து வைத்துக்கொண்டு, உயிர் பிரியும் துன்பம்( மரண அவஸ்தை) இல்லாதபடி உறக்கம் கொடுத்து, பிரம்ம மந்திரமாகிய தாரகத்தைத் தாரகேசன் (சிவன்) உபதேசிப்பான் என்ற செய்தியைக் கேட்டவுடன், எல்லாரும் கிளர்ச்சி அடைந்தார்கள். 14

கேட்ட மேலோர் எல்லாரும் கிளர்ந்து தேக புளகிதமாய்
நாட்டம் தழைத்த சிந்தையுடன் எழுந்து நாவால் துதிசெய்து,
தாட்டா மரைகள் மிகப்போற்றித் தழுங்கும் கங்கைச் சடைதனிலே,
தோட்டார் கொன்றைக் கண்ணிபுனை சோம சேக ராஎன்றே,

பிரம்மன் முதலானவர்களின் தேகம் புளகாங்கிதம் அடைந்தது. விருப்பம் மிகுந்த மனத்துடன் எழுந்து, நாவால் போற்றி, இறைவனின் பாததாமரைகளைத் துதித்து, கங்கை ஒலிக்கும் சடையில் கொன்றையிதழ்க் கண்ணிபுனைந்த 'சோமசேகரா' என்று துதித்தார்கள். 15

வழுத்தி வாழ்த்தி அப்பதியின் மகிமை கேட்ட மாண்பதனால்,
விழுப்பம் உடையேம் ஆயினமால் விமல மூர்த்தி அப்பதியை,
ஒழுக்க முடனே யாம்பணிய உறுதி நல்கி உயர்பிரமம்
பழுத்த தார கத்தினையும் பாலித் தருள வேண்டும்என,

வாழ்த்தினார்கள். புடார்ச்சுனமகிமையைக் கேட்ட மாண் பால் புனிதம் அடைந்தோம். விமலமூர்த்தியின் புடைமருதை ஒழுக்கமுடன் சென்று, நாங்கள் வணங்க மனஉறுதி தரவேண்டும். உயர்ந்த — பழுத்த பிரமதாரக மந்திரத்தை (பிரணவத்தை) எங்களுக்கும் உபதேசித்தருள வேண்டும். 16

துதித்த மேலோர் தமக்கருளிச் செய்தான் தூயோர் விடைபெற்று,
நதித்தண் துறைசார் பயிரவிசூழ் நவைதீர் தென்பால் காசிஎனும்
பதிக்கண் வந்து நேசமுடன் பரனைப் போற்றிப் பலன்பெற்றுக்
கதிக்கே இடம்ஆ கியபதியில் வதியல் உற்றார் காசினியில்.

என்று துதித்த அவர்களுக்கு இறைவன், அவ்வாறே செய்வோம் என அருள்செய்தார். தூயவர்கள் விடை பெற்றார் கள். தெற்குக்காசிக்கு வந்தார்கள். அன்புடன் பரனைப் போற்றினார்கள். பயன் பெற்றார்கள். உலகில் நற்கதியடைய இடமாகிய திருப்புடைமருதூரில் தங்கினார்கள். 17

## முனிவர்கள் புடைமருதூருக்கு வருதல்

என்ற யோகா திபரோடும் இனிய புடைமா மருதெய்த,
மன்றம் போற்றும் முனிவர்களும் வான்மார்க் கத்தால் தலங்கள்எலாம்

சென்று போற்றிக் காவேரித் தேசம் கடந்து திரிசிரமாம்
குன்றம் போற்றி நான்மாடக் கூடல் பரங்குன் றமும்பணிந்து,

யோகத்தில் சிறந்தவராகிய வேதவியாசர் கூறியவிவரம் கேட்டபின், பொது மன்றைப் போற்றும் பதஞ்சலி, வியாக்கிர பாதர் ஆகிய இருவருடன் முன்னேவந்த முனிவர்களுமாக யாவரும் ஆகாய வழியாகச் சிவத்தலங்கள் யாவற்றுக்கும் சென்று வழிபட்டுக் காவேரி தேசத்தை (சோழநாட்டைக்) கடந்து, திருச்சிராப்பள்ளி மலையை வணங்கி, நான் மாடக்கூடல் (மதுரை), திருப்பரங்குன்றம் பணிந்தார்கள். 18

மற்றும் உள்ள தலங்கள்எலாம் வணங்கித் திரிகூ டம்பணிந்து,
கற்றோர் சூழ்ம லையசலக் கடமா முனிவர் தம்மோடும்,
சுற்று பொருனைப் பதிகள்எலாம் தொழுது சுரர்கள் துதிக்கின்ற
கற்றை வேணிச் சிவன்அமர்ந்த கதிசேர் பதியின் கண்ணுற்றார்.

மற்றும் உள்ள தலங்களிலெல்லாம் வழிபாடு நிகழ்த்தினார் கள். திரிகூடமலையை வணங்கினார்கள். கற்றவர்கள் சூழ்ந்துள்ள பொதிகைமலைக்கு வந்து, அகத்தியரையும் அழைத்துக்கொண்டு பொருனைநதி சூழ்ந்த பதிகள் எல்லா வற்றையும் தொழுதார்கள். தேவர்கள் துதிக்கின்ற ஆற்றைச் சடையில் கொண்ட அண்ணல் சிவன் அமர்ந்து கதிகொடுக்கும் திருப்புடைமருதூர் பதியைப் பார்த்தார்கள். 19

முத்தி புரமே இதுஎன்று முன்னி ஆல யத்தெய்திச்
சித்த நாதன் தனைப்பரவிப் பூசை செய்து சிந்தித்துப்
பத்தி யுடனே துதிசெய்து பரம தார கப்பிரம
நித்த மனுவை எங்கள்செவி நிரம்ப நல்க வேண்டும்என,

ஜீவன் முத்திபுரம் இதுவே என்றறிந்து, ஆலயத்துக்குச் சென்று, சித்தர் நாதனாம் சிவனைப் பரவிப் பூசைசெய்து, தியானித்து, பக்தியுடன் துதி செய்து, 'நித்தியமான பரம தாரகப்பிரமமந்திரத்தை எங்கள் செவிநிரம்ப நல்கவேண்டும்' என வேண்டினார்கள். 20

தவமா முனிவர் யாவர்களும் சரணம் பணிந்து துதிசெய்தார்;
சிவநா யகனும் சிவலிங்கத் திடையே நின்றும் தேசுருவாய்ப்
பவன்ஆ காய வாணியினால் பகர்வான் மனுவைப் பாலிப்போம்;
சுவைஆர் மருதுற் றிடும்என்னச் சுருதி வழியால் சார்கின்றார்.

தவ்முனிவர்கள் யாவரும் இறைவனின் திருவடியில் விழுந்து வணங்கித் துதிசெய்தார்கள். சிவபெருமான், சிவலிங்கத்தி லிருந்து ஒளிவடிவமாகத் தோன்றினார். 'மந்திரத்தை உபதேசிப்

*போம்; சுவையான மருதமரத்தடிக்கு வாருங்கள்' என்று, தானாக உண்டாகிய தலைவன் (சிவன்), ஆகாயவாணி வழியாகக் கூறினார். அதை வேதவாக்காக ஏற்று, முனிவர்கள் மருத மரத்தடியை நோக்கி வந்தார்கள். 21*

## இறைவன், முனிவரின் உருவில் வந்து அருளுரை கூறுதல்

புடைசேர் மருதை வலம்கொண்டு புனிதன் பரவ அருள்கொடுத்த,
படிவ நாதன் தனைப்போற்றிப் பரம முத்தி மண்டபத்தில்,
கடிதில் வரும்அப் பொழுதினிலே கவுரி பாகன் கதிதாங்கிச்
சடையும் தாங்கி முனிபோலச் சார்ந்தான் சார்வோர் தமைநோக்கி,

*முனிவர்கள் மருதமரத்தை வலம்வந்து பரவுவதற்காக, அருள்கொடுத்த இறைவனைப் போற்றி முத்திமண்டபம் அருகில் வேகமாக வரும்போது, கவுரிபாகனாம் சிவன் முனிபோல வேடம் தாங்கி, சடைதாங்கி எதிரில் வந்து கொண்டிருந்த முனிவர்கள் கூட்டத்தை நோக்கினார். 22*

பாதி மதியம் மறைத்துவரும் பரமன் புகலும் பார்தனிலே,
நீதி தரும்இந் நகர்போல நேமி மூன்றி னும்கிடையாது;
ஓதில் அதிகம் எனநமர்கட் குறுதி நல்கி உதவவளர்
மாது பாகன் இவன்என்றே வணங்கி அருள வேண்டும்என,

*பாதிமதியை அணிந்த பரமன் அதையும் மறைத்து, முனிவர், களிடம் பேசினார். 'நீதி கொடுக்கும் இந்த நகரத்தைப் போல மூன்று உலகங்களிலும் வேறு நகரம் கிடையாது. உலகத்தில் உயர்ந்தது இதுவே என்று பேச்சைத் தொடங்கியவுடன், முனிவர்கள் வந்திருக்கும் இவரே மாதுபாகனாம் பரமன் என அறிந்துகொண்டனர். 'எங்களுக்கெல்லாம் உறுதிப் பொருள்களைச் சொல்லியருளவேண்டும்' என, வணங்கி வேண்டிக்கொண்டனர். 23*

சொற்றிடு நல்தவம் முன்வெகு காலம்
　　சோர்வற மாமலை கானகம் அன்றிப்
பெற்றி தரும்தலம் மேவி இழைக்கப்
　　பெறுபலன் இத்தலம் மேவிடல் செய்யும்
முற்றிய நல்வினை யாலும் முயன்றோர்
　　முன்உள மும்மையில் இத்தலம் முன்னிப்
பற்றினர் இத்தலம் மேவுவர் அன்றிப்
　　பாவக ருக்கிவை கூடுதல் இலையால்.

*பெரிய மலைமீதும், காட்டிலும், புகழ்மிக்க சிவத்தலத்திலும், வெகுகாலம் சோர்வில்லாமல் நல்லதவம் செய்தால் பெறுகின்ற பலன், இந்தத்தலத்துக்கு வந்தாலே கிடைக்கும். முன்னே மூன்று பிறப்புகளில் முற்றிய நல்வினை செய்திருந்தால் மட்டுமே இங்குவரும் வாய்ப்பு ஏற்படும். பாவிகளுக்கு இங்குவரும் வாய்ப்பு ஏற்படாது.* 24

உண்மைகொடு இத்தலம் மேவிட உன்னி,
ஓர்அடி வைத்திட ஓர்பரி யாகம்
திண்மை யுடன்புரி யும்பலன் நல்கும்
தேவரும் இத்தலம் மேவிடு தற்கே
கண்இமை யாது புரிந்துறை கின்றார்,
கடவுள ரும்இவண் எய்திட எளிதோ?
வண்மை தரும்கரி முகனொடு காரி
வயிரவர் கின்னரர் தடைபல மாதோ!

*இத்தலத்துக்கு வரவேண்டும் என்று உண்மையுடன் ஓர் அடி எடுத்து முன் வைத்தால், ஓர் அஸ்வமேத யாகத்தை முறைப்படி செய்த பயன்கிடைக்கும். தேவர்கள் கண் இமைக்காமல் இருப்பதற்கு இங்கு வரவேண்டும் என்ற விழிப்பே காரணமாகும். இங்கு வருவது அவ்வளவு எளிதா? கொடை தரும் யானைமுகன், சனிபகவான், பைரவர், கின்னரர் ஆகியோர் தடைகள் செய்வர்.* 25

இத்தகை மைப்பதி யைநினை வோரே,
எண்ணிய எய்துவர் இவண்வர வுன்னி,
வைத்திடு காலே வலம்வரு காலாம்
மற்றித னைத்தொழு கைக்கரம் ஆமால்
பத்தி யுடன்பணி சிரமே சிரமால்
பரவிடு நாவே நாஉளம் விழையத்
துய்த்திடும் விழியே விழிஎன வேதம்
சொல்வன இவைபோல் வேறிலை மாதோ!

*இந்தத் தலத்தைப் பற்றி நினைப்பவர்களே, நினைத்ததை அடைவார்கள். இங்கே வர நினைத்து எடுத்துவைக்கும் கால்தான் வலம்வரும் கால். இத்தலத்தைத் தொழும்கையே கை. இத்தலத்தைப் பக்தியுடன் பணியும்சிரமே சிரம். இத்தலத்தைப் புகழும்நாவே நாக்காகும். இத்தலத்தை, மனம் விரும்பி அனுபவித்துப் பார்க்கும் விழியே விழியாகும். என்று, வேதங்கள் (பக்திநூல்கள்) சொல்கின்றன. இவ்வுறுப்புகள் போல் புகழ் பெற்றவை வேறில்லை.* 26

உத்தம இத்தலம் மருவிட உறுவோர்
உலகினில் மிகுவெகு தவமொடு தானம்
வித்தக நல்வினை பத்திசெய் பாவனை
விழைவொடு செய்திடல் விதியுட னேபொன்
நித்தம் வழங்குதல் கோஉறு தானம்
நிலனொடு கன்னிகை அன்னம் நிலாவத்
துய்த்திடல் செய்வது வாவிகள் கூபம்
சுமைபெறு கல்லொடு சோலைகள் செய்தல்,

இத்தலத்துக்கு வந்து ஆரவாரம் இல்லாமல் புண்ணிய காரியங்கள் செய்ய நினைத்தாலே (பாட்டு—36), இறைநிழல் அடையலாம்.

## புண்ணியச் செயல்கள்

பொது. 5: 1. தவம், 2. தானம், 3. சிறப்பான நற்செயல், 4. பத்தி 5. பாவனை சிறப்பு, 1. விருப்பத்துடன் விதிப்படி பொன் (பணம்) தானம் செய்தல், 2. கோதானம், (3) பூதானம், (4) கன்னிகாதானம், (5) அன்னதானம் இவற்றை அனுபவிக்க உதவுதல், (6) குளம் வெட்டுதல், கிணறு வெட்டுதல், (7) சுமைதாங்கிக் கல் அமைப்பது, (8) சோலைகள் ஏற்படுத்துவது. 27

வேள்வி இயற்றுதல் சிவன்அடி யார்க்கே,
மெய்ப்பணி புரிகுதல் விழையும னத்தால்
வாள்விழி உமைகண வற்குறு பணிகள்,
மாண இயற்றதல் மறையவ ருக்கே
நீள்பதி ஈகுதல் நிறைமலர் மொய்த்த,
நிலவிய நால்வகை நந்தனம் வைத்தல்,
நாள்அலர் இண்டைதொ டைக்கணி சாத்தல்,
நவமணி நாயக னுக்கணி வித்தல்,

9. வேள்வி செய்தல், 10. சிவனடியார்களுக்குப் பணிவிடை செய்தல், 11. மனவிருப்பத்துடன் வாள்விழியாள் உமை கணவனுக்குப் பணி நிறையச் செய்தல் (இறைபணி), 12. அந்தணருக்கு ஊர் ஏற்படுத்தித் தருதல், 13. நானாவித மலர்கள் பூக்குமாறு திருக்கோயிலுக்கு நந்தவனம் அமைத்தல், 14. மாலை கட்டிக் கொடுத்தல் — அன்றலர்ந்த மலர்களால் தலைமாலை தோள்மாலை முதலியன கட்டிக் கொடுத்தல், 15. இறைவனுக்கு நவமணி மாலையாகச் செய்துதருதல், 28

சிவன்அடி யார்வரில் எதிர்கொடு சென்றே,
செம்மைய னோக்குறல் சிந்தைவி யந்தே
அவர்அடி போற்றுதல் முகமன்உ ரைத்தே,
ஆசனம் ஈகுதல் அலர்கொடு தூவித்
தவரைவ ழுத்துதல் சூழுதல் பாத
தண்புனல் ஆடுதல் தயவுடன் நம்மைப்
புவிதனில் ஆளவும் வருசிவன் என்றே
போற்றுதல் மனதிட் டப்படி புரிதல்,

*16. சிவனடியார் வந்தால் எதிர்சென்று அன்புடன் பார்த்தல், 17. மனம் வியந்து அவரின் திருவடிகளைப் போற்றுதல் (வணங்குதல்), 18. முகமன் (உபசார வார்த்தைகள்) சொல்லுதல், 19. அழைத்து வந்து இருக்கை கொடுத்து அமரச் செய்தல் 20. மலர்தூவி அத்துறவியை வாழ்த்துதல், 21. வலம் வருதல் 22. நெருங்கிஇருந்து பணிவிடை செய்தல், 23. பாதத்தைக் குளிர்ந்த நீரால் கழுவுதல், 24. உலகில் நம்மைச் சிவனே தயவுடன் ஆட்கொள்ள வந்தான் எனக்கருதிப் போற்றுதல், 25. அவர்மனம் விரும்பும் அளவுக்கு நலம் செய்வது. 29*

கோஅ ருந்தஅ றுகருத் திக்குளிர்
வாவி யில்பரு கச்செய்தல் மாண்புடன்
ஆஉ ரிஞ்சுகல் நாட்டல் அதர்ச்செல்வோர்
பாவு நீர்உணும் பந்தர் இயற்றுதல்,

*26. பசுமாடு உண்ணுவதற்கு அருகம்புல் கொடுத்துக் குளத்தில் நீர் அருந்தச்செய்தல், 27. நல்லவிதமாக ஆவுரிஞ்சுகல் (பசுமாடு உடம்பு அரிப்பைப் போக்கிக்கொள்ள வைக்கும் கல்) நடுதல், 28. வழிநடைப்போக்கர் தாகம் தணித்துக்கொள்ள நீர், பானகம் கொண்ட தண்ணீர்ப்பந்தல் வைத்தல், 30*

அதரி னுக்கணி சாலைஅ மைத்திடல்,
நிதமும் ஐவகை வேள்வி நிறுத்துதல்,
விதிம ணப்படி வேட்டல், வெகுள்விடல்,
மதியி னால்கடப் பாட்டில் மருவுதல்,

*29. நடந்து செல்வதற்கு அழகான சாலை அமைத்தல், 30. நாள்தோறும் ஐந்துவகையான வேள்விகள் (கடவுள் வேள்வி, பிரம்மவேள்வி, பூதவேள்வி, மானுடவேள்வி, தென்புலத்தார் வேள்வி) செய்தல், 31. விதிப்படி மணம்செய்து கொள்ளுதல், 32. கோபத்தை விடுவது, 33. அறிவுடைமையுடன் கடமைகள் செய்தல், 31*

எண்வ கைப்பத்தி செய்தல், இயல்பினால்
வண்மை யாய்மெய் உறுதி வழிநிற்றல்,
உண்மை நாளும் செலுத்தல், உறுதியே
நண்ண வைத்தல் நடுநிலை காத்திடல்,

*34. எண்வகைப் பத்திசெய்தல் (சரியை, கிரியை, யோக, ஞானம் மற்றும் சத்புத்திர மார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம்), 35. இயல்பாக, திண்மையாக, உறுதியாக மெய்பேசுதல், அதன்படி நிற்றல், 36. உண்மையில் பிறரையும் சொல்ல, நடக்கச்செய்தல், 37. உறுதிப் பொருள்களை (அறம் பொருள் இன்பம் வீடு) நெருங்குமாறு செய்தல், 38. நடுவு நிலைமை,* 32

இறைவன் கீர்த்தியை நாளும் இயம்புதல்,
பொறுமை பூத தயவு புரிகுதல்,
வறுமை எய்தினும் மாண்பால் ஒழுகுதல்,
அறுவகைக் குற்றம் முக்குற்ற மாறுதல்

*39. இறைவன் புகழை நாளும் சொல்லுதல், 40. பொறுமை, 41. உயிரினங்களிடம் அன்புசெய்தல், 42. வறுமை வரினும் செம்மையாக வாழ்தல், 43. ஆறுகுற்றங்கள் (பஞ்ச பாதகங்களுடன் கடுஞ்சொல்) நீக்குதல் — முக்குற்றம் (மனக்குற்றம், மொழிக்குற்றம், சரீரக்குற்றம்) நீக்குதல்.* 33

தருமத் தின்வழி நிற்றல், தவத்தினால்
அரிய நல்விர தங்களை ஆற்றுதல்,
மருவு தன்உயிர் போல்மன் உயிரையும்
பெருகப் போற்றிடல், பேணும் வரம்புறல்,

*44. தருமத்தின் வழிநிற்றல், 45. தவத்தால் அரிய விரதங்கள் மேற்கொள்ளுதல், 46. தன்னுயிர்போல் பிறவற்றின் உயிர்களையும் பேணுதல் — மிகவும் போற்றுதல், 47. தங்கள் தங்களுக்குள்ள வரம்புகளை — எல்லைகளைப் பேணுதல் — மீறாமல் நடந்து கொள்ளுதல்.* 34

மூவகை யாகம் செய்தல், முச்சகா யம்இ யற்றல்,
தேவென அறம்செய் வோரைத் தேர்குதல், புலனைச் செற்றல்,
ஊவினை நயந்தி டாதல், உடன்படா திருத்தல், ஓதல்,
ஆஉயர் கொடியாற் கான அருட்சிவப் பணிகள் ஆற்றல்,

*48. மூவகை யாகம் செய்வது (எண்5 இல் வேள்வி செய்தல் சிவார்ப்பணமாகச் செய்வது என்றும், எண் 30 இல் வருவது ஐவகை வேள்வி என்றும், இங்குக்குறிப்பிடுவது காலை, நண்பகல், மாலைகளில் செய்யக்கூடிய ஞானத்திற்கான நித்யகர்மா*

*என்றும் கொள்வது பொருந்தும்), 49. மூன்று சகாயங்கள் — உதவிகள் செய்தல் (செய்யாமல் செய்வது, காலத்தால் செய்வது, பயன் எதிர்பார்க்காமல் செய்வது, 50. தெய்வம் போல வந்து தர்மம் செய்பவர்களைத் தேர்வது — மதிப்பது, 51. புலன் அடக்கம், 52. புலாலை விரும்பாமை (ஊ — இறைச்சி), 53. தீச்செயல்களுக்கு உடன்படாமை, 54. கற்றல், 55. கோயிற்பணிகள் (எண் 11, 14இல் உள்ளவை, சரீரத்தால் கோயிலுக்குள் செய்யும் பணிகள் — இது செல்வத்தால் கோயில் கட்டுதல் முதலிய பணிகள்). 35*

இவ்வகை முதல வான புண்ணியம் இயற்றி நாளும்
செவ்விதின் நோற்க எய்தும் பலன்கள்இச் சேத்தி ரத்தைக்
கவ்வைநீங் கிடக்கொ டுக்கக் கருதிஇத் தலத்தைச் சேர்வார்,
நவ்விசேர் கரத்தர்க் கன்பர் ஆயிடும் நலம்சேர் வாரே.

*இவ்வகை அறச்செயல்களை நாளும் சிறப்புடன் செய்து பெறும் பயன்களை இத்தலத்தில் ஆரவாரம் இன்றி ஒன்றைக் கொடுப்பது என நினைத்து வந்தால் அடைய முடியும். மான் கரத்தராம் சிவனின், அடியார் ஆகும் நலம் சேர்வார். 36*

புண்ணியர் அன்றி மற்றோர் இந்நதி போதற் கெய்தாத்
தண்அளித் தருமத் தாறே தாம்பிர வன்னி தானம்
பண்ணின்முன் சொன்ன அந்தப் பலத்தினை நல்கும் அன்றி
நண்ணுமுக் கோடி தீர்த்தம் ஆடிய பலனும் நல்கும்.

*புண்ணியம் செய்தவர்களுக்கல்லாமல் இந்நதியில் மூழ்கும் பேறு வேறு யாருக்கும் கிடைக்காது. கருணை பொருந்திய தருமத்தின் வழி எதுவோ அதுவே பொருனையின் வழியாகும். இசையுடன் முன்புசொன்ன பயன்களைக் கொடுப்பதுடன், முக்கோடி தீர்த்தங்கள் ஆடிய பயனையும் பொருனையில் நீராடுகையில் பெறலாம். 37*

விரும்பின செயல்கொ டுக்கும் வினைப்பயன் தன்னை மாற்றும்
அரும்பிணி யாவும் நீக்கும் அரியபா வங்கள் போக்கும்
வரும்சன னங்கள் மாற்றும் வறுமையின் மயக்க றுக்கும்
பொரும்கவல் போக்கும் இந்தப் புண்ணிய தீர்த்தம் மாதோ!

*இந்தப் புண்ணிய தீர்த்தம், விரும்பிய செயலை வெற்றி யாக்கிக் கொடுக்கும்; வினைப்பயன் தீதாக இருக்குமானால், அதனை நல்லதாக மாற்றும்; கடுமையான பிணிகளையும் நீக்கும்; கடுமையான பாவங்களையும் போக்கும். பிறப்புகளை மாற்றும் (நற்பிறப்புகள் உண்டாக்கும்); வறுமையையும், அற்ப விஷயங்களில் ஏற்படும் மயக்கங்களையும் அறுக்கும். பெரிய கவலைகளைப் போக்கும். 38*

கன்னியில் கவுரி நோற்ற விரதம்அக் கன்னி வேட்ட
நன்மதி முப்பா னாள்கண் நவத்துடுத் தனுசு முப்பான்
இன்னதி ஆட நூறு மடங்குயர் பலனை ஈயும்
பொன்மதி மகர பூச மாமகன் புனிதன் பெற்ற,

இந்த நதிக்கரையில்தான் இந்திராணி, கேதாரகௌரி விரதம் கொண்டாள். அது புரட்டாசி மாதம் வளர்பிறை பதினைந்து நாள்கள்; தேய்பிறை பதினைந்து நாள்கள். இந்த நதியில் அந்த நாள்களில் நீராட, மேற்கூறிய பலன்கள் நூறு மடங்கு அதிகமாகக் கிடைக்கும். பொன்போலச் சந்திரன் தெரியும் தைப்பூச நன்னாளில் புனிதனுக்கு — 39

மேடநல் விடுநாள் ஆடில் விழைபலன் நூற்றுப் பத்தாம்
ஆடகம் அரிபால் அன்னம் ஆடைநல் கிடின்அந் நாளில்
பீடுசேர் அயுதம் நல்கும் பிதிர்க்களுக் கருத்தில் மேலாம்
வீடுசேர்ந் திடும்பு லத்தோர் விமலனைப் பூசித் தேத்த,

சிவனுக்கு உகந்த சித்திரா பௌர்ணமியில் நீராடினால், நூற்றுப்பத்துப் பங்கு பயன் கிடைக்கும். அக்காலங்களில் பொன், அரிசி, அன்னம், ஆடை ஆகியவற்றைத் தானம் செய்தால், பத்தாயிரம் மடங்கு பயன்கள் கிடைக்கும். அந்நாள்களில் பிதுரர்களுக்குச் சிரார்த்தம் செய்தால், அவர்கள் சொர்க்கத் திற்குச் சென்று, விமலனைச் பூசித்து ஏத்துவார்கள். 40

இவ்வகைப் பலனில் கோடி மடங்கதா வேவி லிங்கம்
அவ்வியம் அகன்றோர் உள்ளத் திருந்தருள் அறிவு ரூபன்
நவ்வியங் கரன்அன் னேசன் நவில்சிவ யோக போகன்
திவ்விய சிற்கு ணாளன் சிதம்பர தேசி னானே.

அதுவுமன்றி மேற்கூறிய பலன்கள் கோடி மடங்காகக் கிடைக்கும். இவ்வாறான செய்திகளை முனிவர்களுக்குத் துறவிக் கோலத்தில் வந்து சொன்னவன், இலிங்கத்தால் ஏவப்பட்டவன்; குற்றம் அற்றவர்களின் மனத்தில் இருந்தருள் செய்கின்ற அறிவு வடிவமானவன். மானைக் கரத்தில் கொண்டவராகிய சிவனின் நேசன்; கூறத்தக்க சிவயோகத்தை அனுபவிப்பவன். திவ்வியமான சித் குணங்களை உடையவன்ஆகிய நான் சிதம்பர தேசிகன். (நூலாசிரியர் பெயர் கர்த்தா முத்திரையாக வந்துள்ளது) கடவுள் வாழ்த்து 7ஆம் பாடலில் புண்டரீகபுரம் (சிதம்பரம்) புகழ்தேசிகன் கண்டகாதை என்பதையும் ஒப்புநோக்குக.) 41

மண்டலம் எல்லாம் மேதை வரைஎன்பு மாம்உ ரோமம்
தெண்டிரை உதிரம் ஆகும் திரிசுடர் கண்கள் ஆகும்;

கொண்டல்கள் போர்வை ஆகும் கோதைகள் கவசம்
கொண்டோன்;
அண்டம்ஆ பரணம் ஆகத் தாங்கும்அற் புதன்இ வன்தான்.

*மண்டலங்கள் எல்லாம் இவருக்குத் தசைகள்; மலைகள் எல்லாம் எலும்புகள்; ஆகாயம் உரோமம்; தெளிக்கும் கடலலைகள் உதிரம்; சந்திர சூரிய அக்கினியாகிய மூன்று சுடர்கள் கண்கள்; மேகங்கள் போர்வை; காடுகள் கவசம்; அண்டங்கள் ஆபரணங்கள் — இப்படியாக அமைந்த அற்புதன் இவர்தான்; சிவன்தான்.* *42*

அட்ட மூர்த்திதன் அன்பர்கட் காகவே
இட்ட மாம்அபி டேகத்தி லிங்கமே
சட்ட மானநை வேதனம் சங்கமம்
சிட்டனுக் கிரகம் தேசிக ரூபமே.

*தேசிக வடிவம் (குருவடிவம்) என்பது, அட்டமூர்த்தி (பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், உக்கிரன், மாதேவன், உருத்திரன்) தன் அன்பர்களுக்காக விருப்பத்துடன் அபிடேகத்தை ஏற்கும் இலிங்கம்; சீடனுக்கு இறைவன் படைக்கும் நிறைவான நிவேதனம்; சீடனுக்குச் செய்யும் அனுக்கிரகம்.* *43*

மூவகை தன்னில் சுத்த மாயையைக் கடந்த மூர்த்தி,
மூவகை யோர்க்கும் எட்டா மூலகா ரணனே ஆகும்;
மூவிரு நான்க தான காரிய முடிவா வோர்க்கு,
மூவகை யாக நின்று பொருள்தனைக் காட்டு முன்னோன்.

*குருவானவர் மூவகை மாயைகளுள் (சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகுர்திமாயை) சுத்தமாயையைக் கடந்தவர். மூவகையோர்க்கும் (சகலர், பிரளயகலர், விக்ஞானாகலர்) எட்டா மூலகாரணராம் மூவிருநான்கான காரிய (3 × 2= 6+4 =10 அதாவது தச காரியங்கள் ) முடிவானவர்களுக்கு (குருவாகவும், மந்திரமாகவும், சிவமாகவும்) மூவகையாக நின்று, தாரக மந்திரத் தத்துவத்தைச் சொல்லிக்காட்டினார்.* *44*

## தாரகமந்திரம் பற்றிய விவரங்கள்

மனுசாந்தம் உன்மனா தீதம்மனோ தீதம்
மருவுநிரா மயமான மயகுணப்பிர சாதம்
தனபரா பரசாந்தம் நிர்க்குணம்நின் மலமாம்
சாந்தம் நிரா தாரநிருவி நிச்சலம்நிட் களவ

உனுசாத அதுலம்நித்தம் நிராலம்பம் நிர்வம்
உதவியஅற் புதஞான பூரணா போக
அனுபவமெய் அசிந்திய சூக்கும சூன்னியம் ஆகும்
ஆனந்தா காரமதாம் கற்பாதிக் காலம்.

*மனு (மந்திரசாந்தம்) இதுவே. (ஓம் சாந்தி ; ஓம் = சாந்தி) உன்மனோதீதம்; மனோதீதம், நிராமயம், மயம், குணப்பிரசாதம், பராபரப் பிரசாந்தம், நிர்க்குணம், நிர்மலசாந்தம், நிராதாரம், நிர்விகல்பம், நித்சலம், நிஷ்களங்கம், சாதாதுலம், நித்யம் (சர்வநித்யம்) நிராலம்பம், நிர்வம் உதவிய அற்புத பூரண ஞானம், ஞானபோகம், ஞானானுபவம், சத்யம், கோடானுகோடி சூக்ஷமம், சூன்யம் ஆனந்த ஆகாரம் (பெருமகிழ்வு) ஆவது தாரகமே ஆகும்.* *45*

சின்மயகுண் டலினிபுக இலங்குநித்த மனுவாம்
தெளிவுயர்சோ டசகலையாம் தீபஒளி மின்சேர்
பொன்இரதம் இருசுடர்மா ணிக்கம்முத லாகும்
போந்தகலை மேதையருக் கீசகலை விந்தாம்
உன்னும்இட கலைஅருத்த சந்திரன்நி ரோதி
உற்பவித்த நாதநா தாந்தக்கலை சத்தி
மின்னும்வியா பினிசமனை உன்மனைஈ ராறாம்
வியோமரூ பிணிஅனந்தை அனாதைஅனா சிருதை.

*சின்மயம், குண்டலினி புக விளங்கும் மந்திரம், தெளிவாக உயர்ந்த சோடச கலை (சோடகம் 16) தீபஒளி, மின்னல் ஒளி, பொன்னொளி, ரசஒளி, சூரியஒளி, சந்திரஒளி, முதலிய ஒளிகள் தாரக ஒளியாகும். ஞானக்கலைகளை அப்யாசம் செய்து துறைபோகியோர்க்கு ஈசகலையாகவும் விந்து கலை ஆகவும் உள்ளது. இடகலையும் இதுவே. அர்த்த சந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்த கலையும் இதுவே. மின்னாகிய வியாபினி, சமனை, உந்மனை, வியோம ரூபிணி, அனந்தை, அநாதி, அநாசிருதை ஆகியன இதன் சக்திகளாகும்.* *46*

இவையாகும் மூலமுதல் அங்குலம்பத் தாறே
இசைத்திடுமாத் திரைகள்மூன் றாதிமனம் அந்தம்
சிவன்சதா சிவப்பரமே அதிதெய்வம் ஆகும்
திகழ்புரு டத்துவம்மூ எட்டாகும் இரண்டில்
தவமான் காலம்முதல் ஆறாகும் மாயை
தருசுத்த வித்தைஈ சுரம்சாதாக் கியமே
புவனசத்தி வகைக்கொன்றிந் திகைமுதலே ஆன
புவனம்அஞ்சு சிவதத்வம் புகலுமுப்பான் ஆறே.

மூலமுதல் மந்திரமாம் இதன்நீளம் பத்தாறு (60); ஒலிக்கும் மாத்திரை (ஒலியளவு) குறைவு மூன்று மாத்திரை; அதிகம், உச்சரிப்போரின் உள்ளக் கருத்தின் அளவு. இதன் அதிதெய்வம் சிவன்; சதாசிவப்பரம். இது நாற்பத்தெட்டாகும் (3×8 = 24×2 = 48) புருஷத்துவம் உள்ளது. இதன் சுத்த வித்யை, ஈஸ்வரம், சாதாக்யம். இதன் புவனசக்தி, ஒவ்வொரு புவனத்திலும் ஒவ்வொன்று; திசை முதலாக இதற்கு ஐந்து புவனங்கள் உரிமை உள்ளன. முப்பத்தாறு சிவதத்துவங்களும் தாரகத்திற்கே உரியன. 47

செந்தழல்இந்து இரவிவான் தீபம்மின்மா ணிக்கம்
　　தினகரனு ருயிர்முக்கால் நிறம்அு தாகும்
தந்திடுஞா னாகாயம் சாகரம்கண் ணாடி
　　தருமதியம் சூரியன்பின் அள்விலாச் சுடராம்
வந்தஒலி சூனியமென் குணம்விடுவ மேழாம்
　　வளர்பாதம் இரண்டாகும் சுமமா றாகும்
வந்தமல வாசனைதீர்த் திடும்முத்தி நல்கும்
　　பரிபூர ணானந்த பராபரமந் திரமே.

நெருப்பு, சந்திரன், சூரியன், வானம் இவை இதன் தீபம். மின்னல், மாணிக்கம், சூரியன் இவை இவற்றின் உயிர். இதன் குணம் மூன்று காற்றுகளாகும் (4 —1 = 3) ஞானாகாசம், கடல் ஆகியவை இதன் முகம் பார்க்கும் கண்ணாடி. இதனின் பின் சுடர்கள், சந்திரவட்டம், சூரியவட்டம் ஆகிய இரண்டாகும். சூன்ய மென்குணத்தையும் ஏழு ஒலிகளும் உடையது இது. இரண்டு பாதங்கள். சுமம் (மலர்கள்) ஆறு. பரிபூர்ணமான பராபர மந்திரமாகிய இதனை ஜபிக்க, ஆணவ கன்ம மாயைகள் தீரும்; முத்தி கிடைக்கும். 48

தாரகம் என்ப தொன்றே தாரகம் அனந்தம் ஆகும்
தாரகம் மூலம் ஆகும் தாரகம் முத்தி என்ப
தாரகம் உன்ம னோதீ தப்பொருள் முடிவு தானாம்
தாரகம் இவ்இ லிங்கத் தற்பர சிவமே சான்றாம்.

தாரகம் என்பது ஒரேழுத்தே. அது மிகப்பல எழுத்து களாகவும் விரிவடையும். தாரகம் மூலம். முத்தி, உன் மனோதீதப் பொருள். தாரகத்திற்கு இதோ இருக்கும் இலிங்கதற்பரமே சான்றாகும். 49

காரகக் கருவி தன்னை ஞாபகம் காட்டு மாபோல்
ஆரகத் துருவைக் கண்கள் ஆடியில் அறிவித் தால்போல்

தாரக உருஇ தென்று சாற்றினான் தார கம்சேர்
ஓர்அகஇலிங் கத்தின் பாற்பு லிங்கம்போல் எய்தி னானே.

*வினை முதற்காரணம் (ஞாபகம்) கருவிகர்த்தாக்களைக் (காரகம்) காட்டுவதைப் போல — அகத்தின் — மனத்தின் நிலைமை யைக் கண்கள் கண்ணாடிபோலக் காட்டுகிறதே அதைப் போலத் தாரகத்தின் உருவத்தை இது என்று குருமுனிவர் சொன்னார்; தாரக வடிவமான அகலிங்கத்தில் புலிங்கம்போல் சேர்ந்தார்.* 50

## தாரக உபதேசம்

மாதவர் யாரும் ஈசன் வழங்கிய மனுவைப் பெற்றுப்
போதமும் புலனும் ஒன்றாய்ப் புண்ணியா சரணம் என்றார்;
நாதனம் போல உற்று நல்கினான் எனம கிழ்ந்து,
பாதங்கள் பரவித் தாழ்ந்து பழிச்சியே போற்றும் போதில்,

*முனிவர்கள் யாவரும் தாரக மந்திரோபதேசம் பெற்றார்கள். சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம் ஆகியவற்றை ஞானத்துள் ஐக்கியப்படுத்தி, 'புண்ணியா சரணம்' என்றார்கள். அப்படிச் சொன்னதை நாக்குக்குக் கிடைத்த செல்வம்போலக் கருதினார் கள். இறைவன் தாரக உபதேசம் நல்கினான் என மகிழ்ந்தார்கள். இறையடிகளைப் பரவித் தாழ்ந்து, புகழ்ந்து போற்றினர்.* 51

## ஒரு நிகழ்ச்சி

ஒருமுனி பன்னி அங்கண் இறந்திட உமையோ டீசன்
விரைவுடன் வந்து தேவி வீய்ந்திடும் உயிரைக் கையால்
மருவியே மடியில் ஏற்றி மன்னுயிர்ப் பிரிவின் துன்பம்
இரியமுன் தானை யாலே விசிறிட இறைவன் எய்தி,

*அப்போது ஒரு முனிவரின் பத்தினி அங்கு இறந்து போனாள். உமையும் ஈசனும் விரைவாக வந்தனர். உயிரைக் கையால் பொத்தி உமை, தன் மடியில் சாய்த்துக் கொண்டாள். உயிர் பிரிவதால் வரும் துன்பம் அழியுமாறு முன்தானையால் விசிறினாள்.* 52

உடன்வலச் செவியில் தார கத்தினை உபதே சித்து
விடையினில் கவுரி யோடு விளங்கியே காட்சி நல்க,
மடல்அவிழ் பூவின் மாரி வானவர் பொழிய வானக்
குடமுழாம் பஞ்ச நாத வாத்தியம் குமுறி ஆர்ப்ப,

*உடனே இறைவன் முனிவரின் மனைவியினுடைய வலக்காதில் தாரக மந்திரத்தை உபதேசித்தார். ரிஷபத்தின் மேல் கௌரியுடன் எழுந்தருளி, ரிஷிபத்தினிக்குக் காட்சி*

*கொடுத்தார். இதழ் விரிந்த பூக்களைத் தேவர்கள் மழைபோல் பொழிந்தனர். வானத்தில் குடமுழா (மிருதங்க ஒலி) ஒலித்தது. பஞ்சநாத வாத்தியங்கள் குமுறி ஒலித்தன.* 53

சிவகணங்கள் அவ்வுயிரைத் தேவவிமா னத்தேற்றத்
தவநெறிமேல் செலக்கண்டு தவயோகர் யாவர்களும்
புவனியின்மேல் பணிந்தெழுந்து போற்றினார் புதுமைஎனப்
பவன்அருளின் திறம்கண்டு பரன்முன்பு பணிந்தெழுந்து,

*சிவகணங்கள் வந்து, அவ்வுயிரைத் தேவியின் விமானத்தில் ஏற்றினர். அதைக்கண்ட தவநெறியைக் தலைக்கொண்ட தவ யோகிகள் எல்லாரும் அதிசயமாக இருக்கிறதே என்று கூறிப் போற்றித் தரையில் விழுந்து வணங்கினார்கள். தானே தோன்றியவனின் திறம்கண்டு, அந்தப்பரனை மீண்டும் வணங்கினர்.* 54

## முனிவர்கள் துதி

அளவிலா மகிழ்வெய்தி ஆவுடையாள் தன்னோடும்
தளம்உலா வியகொன்றைத் தாரகே சுரன்தன்னை,
உளம்மெய்வாக் குறப்போற்றி உருகிஇவர் செயல்உன்னி
வளமிகுபூ சனைஆற்றி வணங்கியே துதிக்கின்றார்.

*அளவில்லாத மகிழ்ச்சியடைந்தனர். ஆவுடையாள் தன்னுடன் கொன்றை இதழ் பொருந்திய 'தாரகேஸ்வரன்' தன்னை உளத்தால், உடலால், வாக்கால் (மனம் மொழி மெய் களால்) வாழ்த்தி, உருகி அவரின் அருட்செயலை நினைந்து, வளமான பூசனைசெய்து, வணங்கித் துதித்தார்கள்.* 55

வேத காரண! சரணம்; மேதினியில் சிவலோக
நாத! கோமதி பாக! நம்பனே! சரணம்; நதி
சீத மாமதி அறுகு, சிறந்த வேணிய! சரணம்;
போத! அறிவானந்த! புடைமருது அற்புத! சரணம்.

*[வேதகாரண — வேதம் தோன்றக் காரணமானவரே; மேதினியில்— உலகில்; நம்பன்— நம்தலைவர்; கடவுள்; சீத — குளிர்ந்த; மா—பெரிய; அறுகு— அறுகம்புல்; வேணி— சடைமுடி; போத— ஞானவடிவானவரே; (போதம்—ஞானம்) அறிவானந்த —அறிவுக்கு ஆனந்தப்படுபவரே].* 56

திருவளர் தாமரை! சரணம்; தேவர் யாரும்
தரிசிக்க நடம்ஈந்த செல்வம்[1] போற்றி;
தருவில் உறை இந்திரன் தன் பழியை நீக்கித் [2]
தான்வேண்டும் வரம் ஈந்தாய்! [3] சரணம்; மாலுக்கு

அருள்அளித்த சுந்தரனே! [4] சரணம்; ஆதி
அரசனை[5] முன் பணிகொண்டாய்![6] சரணம்; நீதிப்
பிரமனுக்கு உயர்காசி இதுஎன்று ஈந்தாய்! [7]
பின்பு,பதி அத்திதவிர்த்து ஆண்டாய்! [8] போற்றி.

*[எண்கள், படலஎண்கள்; அந்தந்த எண்ணுள்ள படலங்களில் அவ்வச்செய்திகள் உள்ளன.] திருவளர்தாமரை — செல்வம் வளரும் தாமரைபோன்ற திருவடிகளே; செல்வம்— செல்வமே; தருவில்உறை— மருதமரத்தில் தங்கியிருந்த; ஈந்தாய்—கொடுத்தீர்; மாலுக்கு— திருமாலுக்கு; சுந்தரனே— அழகனே; பணிகொண்டாய்— வேலை வாங்கினீர்; ஆலயம் கட்டச்செய்தீர்; பிரமனுக்கு உயர்காசி இது என்று ஈந்தாய்— காசிநகரம் இதுதான் என்று தண்ட சோதனையால் மெய்ப்பித்துக்காட்டினீர்; பதியத்தி—கணவனைக் கொன்ற பேய்; (அத்தி)]* 57

தைப்பூசத்து அவிர்த்தானன் பாவம் போக்கி[9]
சதானந்தன் அலகை மோசனம் அதாக்கி[10]
மெய்ப்பாகத் தந்தவா! சரணம்; வேம்பன்
மிலேச்சமதம் தனைத்தவிர்த்தாய்[11] சரணம்; மேலோர்க்கு
ஒப்பாக, அலதந்தன் தனக்களித்த [12]
உமைபாகனே! சரணம்; கருவூர்ச் சித்தர்க்கு
இப்பால்,நல் திறம்அளித்தாய்[13] சரணம்; கும்ப
முனி,இறைஞ்ச ஈந்தவா,[14] சரணம் போற்றி.

*[எண், படல எண்கள்; அந்த அந்த எண்ணுள்ள படலங் களில் அவ்வச்செய்திகள் உள்ளன. இங்குக் குறிக்கப்பட்ட எண்கள், கஉ்த உள்ள நடம்புரி படலத்தை ஒன்று எனக் கொண்டு தயாரிக்கப்பட்டவை]*

*[அலகை—பேய்; மோசனம் அதாக்கி—தீர்த்து, மெய்ப் பாக—நிரூபணமாக; வேம்பன்—பாண்டியன்; மிலேச்சமதம்— புறமதம்; இப்பால்—பொருனைநதிக்கு இப்பால்; நல்திறம்— சித்து; கும்பமுனி—அகத்தியர்; இறைஞ்ச—வழிபட; ஈந்தவா— வரம் கொடுத்தவரே!]* 58

அரியமா தவம்புரிந்த வேடமகட் குண்மை
ஆகியதோர் பொருள்ஆனோன் அன்பும் ஆகித்
தருதார கத்தைஉப தேசம் செய்தாய்
தியானமன தம்போற்றும் தகைமை ஈந்தாய்

பிரியாத பதம்அளித்துக் காட்சி தந்த
பிஞ்ஞகனே சரணம்என்றும் பேசு நாதா
மருதம்மே வியவாணா சரணம் என்றே
வாழ்த்தினார் தோத்தரித்து வணங்கி னாரால்.

*அருமையான வேட்டுவக்குலப் பெண்ணாம் வள்ளி நாயகி தவம் செய்தார். அவருக்குச் சத்தியப் பொருளாகக் காட்சி கொடுத்த முருகப்பெருமான், அன்பு வடிவமாகித் தங்களுக்கு உபதேசித்த தாரகத்தைத் தாங்கள் எங்களுக்கு உபதேசம் செய்தீர். எங்கள் மனத்தைவிட்டுப் பிரியாத திருவடிகளைக் கொடுத்துத் திருக்காட்சியும் அளித்த பிஞ்ஞகரே! ( கொக்கின் இறக்கையை அணிந்தவரே!) சரணம்! என்றைக்கும் 'பேசும் நாதரே!' மருதம் மேவிய வாணரே! (வாழ்நரே!) சரணம் என்று, வாழ்த்தினார்கள்; தோத்தரித்து வணங்கினார்கள்.* *59*

பின்புமுனி வோர்எல்லாம் பேசு நாதன்
பீதமலர்த் தாள்போற்றிப் பிரிய மாட்டா(து)
இன்பம்உற விடைபெற்றுச் சூத ரோடும்
இத்தலத்தைப் போற்றியே விடைபெற் றேகிப்
பொன்புனையும் நைமிசா ரணியம் போந்தார்
பொருட்டினால் தெளிந்தஇந்தப் புகழைத் தானே
அன்புடனே உலகுளோர் துதித்து வாழ்க
அறைந்தஈ தறிவோர்க்கா னந்தம் ஆமே.

*அதன்பின்பு முனிவர்கள் எல்லாம் பேசுநாதனின் பொன்மலர்த் திருவடிகளை வணங்கி, பிரியமுடியாமல் — பிரிய மனம் இல்லாமல் விடைபெற்றுக் கொண்டார்கள். இறைவனிடம் தாரக உபதேசம் பெற்ற இன்பத்துடன், இந்தத் தலத்தைப் போற்றி விடைபெற்றுச் சென்று, பொன் அணிந்த நைமிசாரண்யம் அடைந்தார்கள். காரணத்தால் தெளிவடைந்த இந்தப் புகழை — புகழுள்ள நிகழ்ச்சியை உலகவர்கள் அன்புடன் சொல்லித்துதித்து வாழவேண்டும். நான் சொன்ன இக்கதையை நன்கு அறிந்து, மற்றவர்களுக்குச் சொல்பவர்களுக்குப் பெரிய இன்பம் கிடைக்கும்.* *60*

ஆகத் திருவிருத்தம் – *1337*

# 16. வீரமார்த்தாண்டன் படலம்

தாரணி மருதில் யோகா தியர்கட்குத் தார கத்தைத்
தார்அணி கொன்றை அண்ணல் சாற்றிய திதுமேல் இன்பம்
தார்அணி தனத்தாள் பாகன் வீரமார்த் தாண்டன் என்னும்
தாரணி வேந்தன் தன்னைப் பணிகொண்ட தன்மை சொல்வாம்.

*மாலைஅணிந்த மருதமரத்தடியில் யோகிகளுக்கு கொன்றை அணிந்த தலைவன் தாரக மந்திரத்தை உபதேசம் செய்த கதை இதுவாகும். இனி உயிர்களுக்கு இன்பம் தரும், மாலை அணிந்த, முலையை உடையவளாகிய அம்பிகையை இடப் பாகத்தில் கொண்ட அப்பரமன், வீரமார்த்தாண்டன் என்ற பெயருடைய மாலை அணிந்த வேந்தனைப் பணிகொண்ட தன்மையைச் சொல்வோம்.* 1

## கானகத்தில் இராமர்

தசரதன் ஈன்ற பாலன் திறல்அரி இராம தேவன்
அசைவிலா அயோத்தி நீங்கி அணங்குடன் வனங்கள் எய்தி,
நசைதரும் இளவ லோடும் நண்ணிநாள் கழிக்கும் காலை,
வசதிகொள் பொதிகைத் தென்பால் வயிரமா மலையில் எய்தா,

*தசரதன் ஈன்றபாலன் வலிமைமிக்க திருமாலாகிய இராமதேவன், நிலையான அயோத்தியைவிட்டு நீங்கி, அணங்கு போன்ற அழகிய சீதையுடன் காடுகளை அடைந்தார். விரும்பிப் பழகும் தம்பி இலக்குவனுடன் காட்டில் வாழும்போது, வசதியான பொதிகைமலைக்குத் தெற்கே வைரவமலை என்னும் பெரியமலைக்கு வந்தார். மலையழகை ரசித்தார்.* 2

விலங்கலின் வனப்பும் மேலை விண்ணவர் முனிவர் வாழும்
தலங்களும் காவும் தீர்த்தத் தடங்களும் சனகி யோடும்
பொலன்தரு குவடும் கண்டு பொருந்துசா மளவன் சான்ற
நலந்தரு கங்கை கொண்ட கோமதி நதியில் ஆடி,

*அங்கிருந்து, சானகியுடன் வானுலகத் தேவர்களும் முனிவர்களும் வாழ்கின்ற தலங்களையும், சோலைகளையும், புனித தீர்த்தக்குளங்களையும், பொற்குன்றத்தையும் சென்று கண்டார். சாமளவன் (சாமள நிறம்கொண்ட இராமர்) பொருத்தமாக*

*வெட்டிய, கங்கை ஓடுகிற (பொருனை ஓடுகிற) கோமதி ஆற்றில் புனித நீராடினார்.* 3

இரணமா முனிவன் வேண்ட ஈசன்முன் கங்கை ஈந்தான்
தரணியாம் வயிர வேந்தன் தான்அந்த நதியை வேண்டிச்
சரண்என முனியைப் போற்றத் தந்தனன் பாரி யாக
வரநதி வயிர யாறாய் வந்திடு நதியும் கண்டு,

*பகீரதன் வேண்டியதால் இறைவன் கங்கையை மண்ணுலகத்துக்குக் கொடுத்தார். உலகுக்கு வந்து அகத்தியரின் திருவடி போற்றி, இந்திரன் வேண்டிக்கொண்டதால் பொருனை தோன்றியது. அதன் மனைவி வரநதியாக 'வைரநதியாக' ஒருநதியும் (கிளைநதியும்) தோன்றியது. இவ்விரு நதிகளையும் கண்டு, இராமர் புனிதநீராடினார்.* 4

வதியும்நாள் அங்ஙன் ஒன்று நடந்திடும் வரவு சொல்வாம்
விதியினை யாவ ராலும் வெல்லுதற் கரிதே யார்க்கும்
மதியினால் கடத்தல் கூடா மற்றவை புசித்தல் வேண்டும்
எதியெனு மான தாலே இவ்விடை இவ்வ னத்தில்,

*இப்படிப் புண்ணியச்செயல்களுடன் தங்கியிருக்கும் நாள்களில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. அதைச்சொல்கிறேன். விதியினை எவராலும் வெல்ல முடியாது; மதியினாலும் அதைக் கடந்துபோக முடியாது. அதை அனுபவித்தே தீர்க்க வேண்டும். புதிதாக வந்த மானால் இங்கே இவ்வனத்தில் ஒரு நிகழ்ச்சி — ஓர் அசம்பாவிதம் நடந்தது.* 5

## சூர்ப்பனகையின் சூழ்ச்சி

மாதினை இளவல் காப்பாய் வைத்துமால் பிரிந்த போது,
பேதையை இளவல் தானே பிரிந்திடா தருகில் உற்ற
போதுகள் கொய்வான் நின்ற பொழுதில்ஓர் அரக்கி வந்து,
சீதையை உற்றாள் அங்ஙன் நடந்திடும் செய்கை சொல்வாம்.

*'தம்பியே! சீதையைப் பாதுகாப்பாய்' எனச் சொல்லித் திருமால் சென்றபோது, அண்ணியைக் கொழுந்தன் அறியாமல், அருகிலேயே மலர்கள் கொய்து கொண்டிருந்தான். அப்பொழுது ஓர் அரக்கி அங்கே வந்தாள். சீதையைப் பார்த்தாள். அப்போது நடந்ததைச் சொல்கிறேன்.* 6

அன்னவள் அரக்கர்க் கெல்லாம் அரசிரா வணன்பின் வந்தாள்
தன்நிகர் வீட ணன்முன் தகுகும்ப கருணன் சூர்ப்ப
மின்னகை துணைவ ரோடு மேம்படு தவங்கள் செய்தே,
முன்னவன் கொடுக்க வேண்டும் வரங்களும் பெற்றோன் முற்ற.

வந்த அரக்கி, அரக்கருக்கெல்லாம் அரசனாகிய இராவணனின் பின் பிறந்தவள்; சகோதரி. இராவணனுக்கு நிகரான பலசாலி விபீஷணன் முன்னே பிறந்த கும்பகர்ணன் ஒருவன். வீடணன், கும்பகர்ணன், ஒளிவிடும் சூர்ப்பனகை, இம்மூவருடன் பிறந்த இராவணன், மேம்பட்ட தவங்கள் செய்தவன். இறைவனிடம் முழுமையான வரங்களைப் பெற்றவன். 7.

இலங்கையில் இறைமை கொண்ட இராவணன் இமையோர்
தங்கள்
குலங்களுக் கேதம் செய்யும் கொடியகோல் உடையோன் தங்கை
நலம்தரு திருவை வவ்வ நாடியே இளவல் தோன்றி,
வலம்தரும் அரக்கி போலும் வந்ததிங் கபாயம் என்று,

இலங்கையில் அரசாண்டு கொண்டிருந்த இராவணன், தேவர் குலத்துக்கு ஏதம் — அழிவுசெய்யும் கொடுங்கோல் உடையவன். அவன் தங்கை, சீதையைச் சிறைப்பிடித்துச் செல்ல நெருங்கினாள். இராமன் தம்பி இலக்குவன் அங்கே தோன்றி, 'அரக்கியாலே இங்கே அபாயம் வந்ததோ' என்று வெற்றியை மனத்தில் கருதினான். (உறுதியாக மனத்தில் திட்டமிட்டான்). 8.

மனத்தினில் கொண்டு கையால் மயிரினை ஈர்த்துப் பற்றி,
முனையவாள் கொண்டு மூக்கை முலையினைச் செகுத்தான்
முன்னோன்
தனைஉறக் காமம் கொண்டு சார்ந்தசூர்ப் பனைஎ ழுந்து,
வினைதரு வீரம் கூறி ஏகினாள் விளைவு சொல்வாம்.

தன்கையால் சூர்ப்பனகையின் தலைமயிரைப் பிடித்து இழுத்தான். கூரான வாளால் அவளின் முலைகளையும் வெட்டினான். இராமன்மேல் காமம் கொண்டு அவனை நெருங்கிய சூர்ப்பனகை, செயல்வீரம் கொண்டவளாகச் சபதமெடுத்துச் சென்றாள். அதன் விளைவைச் சொல்கிறேன். 9.

கரன்திரி சிரன்பால் எய்திக் கரைந்தனள் அவரும் மேவிச்
சரந்தனால் இறந்தார் சூர்ப்ப னகைஇரா வணன்பால் சார்ந்து,
வருந்தினாள் புரண்டு வீழ மன்னனும் அவமா னம்கண்(டு)
உரந்தனில் நடுக்கு றாதே செய்தவர் உளர்யார் என்னா,

கரன், திரிசிரன் ஆகியவர்களிடம், தான் இலட்சுமணனிடம் பட்ட பாட்டைச் சொல்லிச் சூர்ப்பனகை புலம்பினாள். அவர்களும் போர்செய்து அம்பால் இறந்தார்கள். சூர்ப்பனகை, இராவணனிடம் சென்று புலம்பினாள். புரண்டு அழுதாள். இராவணன், அவள் அடைந்த அவமானத்தைக்

கண்டு, மனத்தில் நடுக்கம் அடையாமல், 'இப்படிச் செய்தவர்கள் யார்? அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?' என்றான். 10.

பார்த்தனன் அழுகை மாற்றிப் படைகளை எழுப்ப நோக்கி,
வேர்த்தனன் செயிர்த்தான் இந்த விளைவினைக் கேட்க அந்தச்
சூர்த்தனி அணங்கு சொல்வாள் தொடுகடல் அமுதால் செய்த
கார்க்குழல் அணங்கொன் றங்கே கண்டனன் கருத்தில் நேர்ந்தே,

சூர்ப்பனகையைப் பார்த்தான். சூர்ப்பனகையின் அழுகையை மாற்றினான். படைஎடுக்க நோக்கினான். உடல் வியர்த்தான். கோபித்தான். நடந்த நிகழ்வுபற்றி விசாரித்தான். காட்டுத் தெய்வம் போன்ற அவள், "பாற்கடல் அமுதத்தால் செய்த—கருங்கூந்தலையுடைய அழகியை அங்கே கண்டேன்; உன் காமத்திற்கு நன்றாக உதவுமே என்று மனத்தில் நினைத்தேன்". 11

உன்றனக் காகும் என்றே அவட்கொடு வரவே உன்னிச்
சென்றனன் அவள்தன் கேள்வற் கிளையவர் செயிர்த்து மேவிக்
கன்றிஇச் செயல்வி ளைத்தார் கரன்திரி சிரனைக் கோத்தார்
வென்றிவே லோய்என் றாள்பின் விளைவது கருதா வீரன்,

'வெற்றிவேலை உடையவனே! அவளை உன்னிடம் கொண்டு வருவதற்காகச் சென்றேன். அவளின் கணவனுக்குத் தம்பி ஆரவாரத்துடன் வந்து, கோபித்து இச்செயல் செய்துவிட்டான். கரனையும், திரிசிரனையும் கொன்றுவிட்டான்' என்றாள். 12

## மாரீச மான்

அருகரை நோக்கி மாரீ சன்தனை அழைமின் என்னத்
தருதலும் அவன்பால் உற்றுச் சாற்றுவான் தங்கை வந்தே,
உரைதரு செயலும் அன்னாட் குற்றதோர் உவமை இல்லாப்
பெரிதவ மானம் ஆன துயரமும் பிதற்றிப் பின்னும்,

பின்விளைவைக் கருதாத இராவணன், அருகில் இருந்தவர்களைப் பார்த்து, 'மாரீசனை அழைத்து வாருங்கள்' என்றான். அவர்கள் மாரீசனை அழைத்து வந்தார்கள். இராவணன் மாரீசனிடம், தங்கை தன்னிடம் வந்து சொன்னவற்றையும், அவள் அடைந்த — உவமை சொல்லமுடியாத பெரிய அவமானத்தையும் துன்பத்தையும் பிதற்றினான். 13.

உனக்கும்இம் மானம் உண்டேல் அவ்வரை எய்தி உற்று,
வனத்திவட் கிடர்செய் தாரை மாய்த்தவண் இருக்கும் தெய்வ
நனைப்பது மினியைக் கொண்டு நண்ணுவாய் என்றான் நின்ற
சினத்தவேல் மாரீ சன்தான் செப்புவான் உள்ளச் செய்தி,

'உனக்கும் மானமிருந்தால் அவர்களிடம் போ. காட்டில் இவளுக்குத் துன்பம் செய்தவர்களை அழித்து, அங்கே இருக்கும் தெய்வத்தன்மை வாய்ந்த 'பதுமினி' சாதிப்பெண் ணைக் கொண்டுவா' என்றான். எதிரில் நின்ற — சினம் பொருந்திய வேலைக்கொண்ட மாரீசன் மனத்தின் செய்தியைச் சொன்னான். 14.

இருபது புயப லத்தோய் இசைக்கின்ற வார்த்தை முற்றும்
துருவிட வேண்டும் அங்கே சொற்றவன் மாந்தர் அன்று,
பெருவிறல் இரணி யற்காய் பெரியமால் போலும் அன்னாள்
மரைமலர்த் திருவே யாதாய் முடியுமோ வலிதாய்ப் பின்னும்,

'வலிமை பொருந்திய இருபது தோள்களைக் கொண்ட வனே! நான் சொல்லப் போகின்ற வார்த்தைகளை முழுவது மாகத் துருவிப்பார்க்க வேண்டும். அங்கே உள்ளான் என்று உன்னால் சொல்லப்பட்டவன் மனிதனல்லன்; பெரிய வலிமை படைத்த இரணியனைக் கொன்ற பெரிய திருமாலே ஆவான். அந்தப்பெண்ணும் தாமரைமலரில் அமர்ந்த திருமகளே ஆவாள். எப்படி முடியப் போகிறதோ' என்றான். 15.

ரகுகுலத் துதித்தோன் ஆழிக் கரத்தினான் சனகன் செல்வ
மகள்தனை மணந்தோன் தாயர் வஞ்சனை வரத்தி னாலே,
அகிலம்அ தகன்று கானில் அனையர்மூ வரும்போய் ஆறும்
சிகரியும் முரம்பும் கானும் திரிந்தனர் அவரை எய்தி,

உரத்த குரலுடன் மேலும் பேசினான்! 'அவன் சூரிய குலத்தில் உதித்தவன். சங்கைக் கையிலே ஏந்தியவன். ஜனக னுடைய செல்வமகளை மணந்துகொண்டவன்; தாயாம் கைகேயி யின் வஞ்சனையான வரத்தினாலே, நாட்டைவிட்டுக் காட்டுக்கு மூவருமாகச் சென்று, ஆறு, மலை, பருக்கைக்கற்கள் உள்ளவழி, காடு ஆகியவற்றில் திரிந்துகொண்டுள்ளார்கள். 16.

செயிர்த்திடல் கருமம்அன்று; திருவைச்சேர்ந் திடுதற் கெண்ணல்
வியப்பல வினைகள் முற்றும் என்றுபுந் திகள்வி ளம்ப,
அயிற்படை அரக்கன் சீற அறிந்துடன் மாரீ சன்தான்
மயக்குறு துயரன் ஆகி வல்லைபோய் முடிப்பேம் என்றான்.

அவரிடம் கோபிப்பது நன்றாம் காரியமாகாது. திருமக ளையே அடைய நினைப்பது பெரிய கொடும் பலன்களை அனுபவிக்க வைத்துவிடும்' என்று, பல புத்திமதிகளைச் சொன் னான். வேற்படை கொண்ட அரக்கன் கோபித்துக் கொண்ட வுடன், நிலைமையை அறிந்து மாரீசன் கலக்கம் கொண்டான். 'விரைவில் சென்று, காரியத்தை முடிக்கிறேன்' என்று ஒப்புக் கொண்டான். 17

தான்நினைக் கின்ற தெய்த அரக்கனும் தறுகண் தானைச்
சேனைகள் சூழத் தேர்மேல் செல்லமா ரீசன் தானும்
மானினைப் பிடிக்கத் தான்ஓர் மான்என வடிவம் கொண்டு,
கானினைக் கடந்து தென்பால் கல்வரை எய்தி அங்கண்,

'தான் நினைத்ததைப் பெறவேண்டும்' என்ற எண்ணம் கொண்ட அரக்கன், கோபம்கொண்ட சேனைகள் சூழ அங்கிருந்து சென்றான். மாரீசன் பெண்மானைப் பிடிக்கத் தான் ஒரு பொன்மான் வடிவம் கொண்டான். கானகத்தைக் கடந்து, தமிழ் நாட்டின் தெற்கே உள்ள பொதிகை மலைக்கு வந்தான். 18

மரவுரி தரித்து மூன்றாம் ஒழுக்கினை ஆற்றும் மாயன்
விரதஆச் சிரமத் தோர்பால் உழையின்வெவ் வுருவு கொண்டான்
திருமகள் காண ஆடி நின்றனன் இதனைச் சென்று
தருகெனக் கணவற் கோதத் தலைவனும் சாற்று கின்றான்.

மரவுரியைத் தரித்துக்கொண்டு வானப்பிரஸ்தம் மேற்கொண்ட திருமாலின் விரத ஆச்சிரமத்தின் ஒரு பக்கத்தில் அந்த மான் உரு எடுத்தான்; திருமகள் காணுமாறு ஓடியாடினான். சீதை தன் கணவனிடத்தில், 'இந்த மானைப் பிடித்துத் தருக' என்று சொன்னாள். 19.

பிணைஅல அசுர மாயை என்றனன் பின்னும் இந்த
இணைஇலா மான்போல் கண்ட தில்லைஎவ் விதம்ஆ னாலும்,
குணமெலாம் மாயை உள்ளீர் கொடுவரத் தக்க தென்று,
கணைசெறி சிலையி னாரைப் பணிந்துபின் கழறும் போதில்,

இராமர் 'இது மான் அன்று; அசுரர்கள் செய்யும் மாய வித்தை!' என்றார். 'இணையில்லாத இந்த மான் போல நான் கண்டதில்லை; எந்த விதத்தினாலும் பிடித்துக்கொண்டு வரத் தக்கதே. தங்களின் குணமெல்லாமும் மாயைதானே' என்று, கணைகள் செறிந்த வீரனை, வீரக்கழலை உடையவரைப் பின்னும் பணிந்து வேண்டிக்கொண்டாள். 20

திருவுளத் தெய்திச் சென்று பிடித்திட அகன்று சேய்த்தாய்ச்
சரம்என ஓடும் மீளும் தன்மையைக் கண்டு மாயை
வரவது என்று தேர்ந்து சரத்தினை விடுத்தான் மான்தான்
ஒருகுரல் இட்டான் கேட்க ஒலித்தது மாண்ட தங்கண்.

இராமர் தன் திருவுள்ளத்தில், நடப்பதெல்லாம் அறிந்துகொண்டு மானைப் பிடிக்கச் சென்றார். வெகுதூரத்துக்குச் சென்றார். மானும் அம்பைப்போல வேகமாக ஓடும், மீளும், அந்தத் தன்மைகளைப் பார்த்து, மாயையின் வருகை எனத் தெளிவாக அறிந்து, அதன்மேல் அம்புவிட்டபின், மானாகிய

*மாரீசன் உரத்த குரலெழுப்பினான். சீதை கேட்குமாறு அக்குரல் ஒலித்தது. மான் இறந்தது.* 21.

சத்தம்ஒன் றெய்தக் கேட்டாள் இளவற்குச் சாற்று கின்றாள்
மத்தவெங் களிற்றாற் கென்னோ? துருவிவந் திடுவீர் என்ன,
மெய்த்தனி இளவல் நீர்இத் தனியிடை மேவ ஏகேன்
அத்தனுக் கூறொன் றுண்டோ என்றனன் வெகுளி ஆனாள்.

*சீதை, ஒரு சத்தம் வருவதைக் கேட்டாள். 'மதம் பொருந்திய யானை போன்றவருக்கு என்ன ஆயிற்றோ? என்று சென்றுபார்த்து வாருங்கள்' என்று, இலக்குவனிடம் கூறினாள். மெய்ம்மையும் தனிக்குணங்களையும் கொண்ட இலக்குவன், 'நீர் இங்கே தனியே இருக்கையில், நான் போகமாட்டேன்; தலைவனுக்கு இடையூறு வருமோ என்ன?' என்றான். சீதை கோபம் கொண்டாள்.* 22.

கண்ணனைப் பெற்றா ளேனும் கண்மல ரவள்ஆ னாலும்,
பெண்மதி என்ப தெல்லாம் பேதைமை அன்றோ போலும்
நண்ணலக் குமணன் தன்னை நசைஇலா துரைத்துப் பின்னும்
துண்ணெனச் செல்வாய் என்றாள் துயரினால் பிரிந்தான் பின்பு,

*கண்ணனைப் பெற்ற யசோதையானாலும், கண்போன்ற திருமகளேயானாலும் பெண்ணறிவு என்பது பேதைமை உடையது அன்றோ? சீதை இலக்குமணனை அன்பில்லாத வார்த்தைகளால் கடிந்துரைத்தாள். மீண்டும் 'விரைவாகப் போ' என்றாள். துயரத்துடன் இலக்குவன் போனான்.* 23.

## சோரக்காடு

இதுபொழு தற்றம் பார்த்தே இரவியின் நிழல்போல் நின்ற
விதிஇலா அரக்கன் தேர்மேல் மின்னைமின் சாலை யோடும்
மதியைவான் அமுதை நாகம் வவ்வுறு செயலே போலப்
பதியினில் கவர்ந்து சென்றான் களவுசெய் பரிசி னானே.

*இந்த நேரத்தில் சமயம் பார்த்து, சூரியனின் நிழல் போல் நின்ற — நல்விதி இல்லாத அரக்கன், சீதையைப் பர்ணசாலை யோடு தூக்கித் தேர்மேல் வைத்துக்கொண்டு, சந்திரனை வான் அமுதத்தை நாகம் கவ்வுவது போலக் கவர்ந்து, இலங்கைக்குச் சென் றான். அவன் திருட்டுக் குணம் உள்ளவனே ஆவான்* 24.

சோரக் காடென்று சொல்லுவர் மேலையோர்
ஆர வேமிகு பட்டினம் ஆயினும்,
பாரின் மீதப் பெயரே பரித்தது
சார்வு பெற்றிடும் சத்திய மாநகர்.

*இந்தகு சோரம் நிகழ்ந்த இடத்தைக் 'சோரக்காடு' என்று, முன்னோர்கள் சொல்வார்கள். இது பட்டினமாக ஆனாலும், 'சோரக்காடு' என்ற பெயரே நிலைத்துவிட்டது. இந்த ஊரின் பக்கத்தில் 'சத்யநகர்' என்று ஊர் உள்ளது.* 25.

அன்ன கானில் அருணம்வென் றோன்பின்பு
துன்னு தம்பியைக் கண்டு துயர்உற்றான்
பன்ன சாலையும் பங்கய மாதையும்
அன்ன வன்கவர்ந் தேகினன் அவ்வழி,

*பர்ணசாலையுடன் சீதையை இராவணன் கவர்ந்தான். சூரியனை வெல்லும் ஒளிபடைத்த இராமர், அந்தக் காட்டில் தம்பியைக் கண்டு துயரம் அடைந்தார்.* 26.

சென்று தேடித் திகைப்புற் றளவிலா(து)
ஒன்றும் இன்ன லுடன்அயர் வெய்தியே,
துன்று போதில் வெண்ணாவல் பொதும்பர்சூழ்
கின்ற தங்ஙன் கிடைத்தனன் கேடிலான்.

*சீதையைப் பல இடங்களுக்கும் சென்று தேடினர். திகைப் படைந்தனர். அளவில்லாத துன்பத்துடன் தளர்ச்சியடைந்தார் கள். தேடிவரும் வழியில் வெண்ணாவல் மரம் மண்டிய இடத்தில், அழிவற்ற இறைவனைப் பார்த்தனர்.* 27.

புரம்எ ரித்த புனைவன நாயகர்
இரவி என்ன இருந்த குறியினை,
அரியும் தம்பியும் கண்டளுர் நீங்கியே
பரவி யேபணிந் தார்துதித் தார்அரோ.

*திரிபுரம் எறித்த புன்னைவன நாயகர், சூரியனைப் போல ஒளியுடன் இருந்த சிவலிங்க வடிவை, திருமாலும் தம்பியும் கண்டு துன்பம் நீங்கிப் பரவிப்பணிந்து துதித்தார்கள்.* 28.

## இராமர்துதி

கருணை நாயகனே! போற்றி!
காரணா! போற்றி! இந்தத்
தருணம்நான் காணக் காட்சி
தந்தருள் சதுரா! போற்றி!
அருண, நாள்மலர்இட்டு ஏத்தும்
அடியவர்க்கு அமுதே! போற்றி!
வருண! நீர் நஞ்சம் உண்ட
வரதனே, போற்றி! போற்றி!

*[காரணா — முழுமுதற்காரணமாக உள்ளவரே!; தருணம் — நேரம்; சதுரா — பேரருளாற்றல் உள்ளவரே!; அருண — சிவந்தவரே!; வருண— கங்கையை உடையவரே; நீர்— தாங்கள்; வரதனே— வரம் தருபவரே ஆவீர்.] 29*

சவலமாய் ஆற லைந்தே சாற்றிட முடியாத் துன்பக்
கவல்கொடு வந்தேன் சோகக் கடலினைக் கடத்திக் காப்பாய்
சிவபரஞ் சுடரே என்று சிந்திக்கும் போதில் அய்யன்,
பவம்அற வாணி யாலே பாதுகாத் திடுவான் எங்கோன்,

*'சிவபரஞ்சுடரே! சீதை கிடைக்கமாட்டாளா என்ற சபலத்துடன் அலைந்து வருகிறேன். சொல்ல முடியாத துன்பத்தையும் அதனால் கவலையையும் கொண்டு வந்துள்ளேன். சோகக் கடலிலிருந்து என்னைக் கரையேற்ற வேண்டும்!' என்று, இராமர் சிந்திக்கும் நேரத்தில், தலைவராகிய சிவபெருமான், பாதுகாத்திடுதலுக்காக ஆகாசவாணி ஒலியால் ஐயம் இன்றித் தெரிவித்தார்: 30.*

துயர்அகன் றிடுவீர் இந்தத் துன்பினைச் செய்தோன் தன்னை
செயமுடன் வென்று சீதை தன்னையும் சேர்வாய் என்று,
நயமுடன் அருளிச் செய்தான் படியந்த நாய கன்தான்
செயமுடன் கிடைத்த தாலே சிறந்தவர் வரதர் என்றார்.

*'உங்கள் துன்பம் நீங்கிவிடும்; இந்தத் துன்பத்தை உங்களுக்கு ஏற்படுத்தியவனைக் காரிய சித்தியுடன் வெற்றி பெற்றுச் சீதையை அடைவாய்' என்று, இறைவன் அருளிச் செய்தார். 'இறைவனின் வரம் கிடைத்ததால் இது வெற்றி. வரம் கொடுத்ததால் இவர் வரதர்' என்று, சிறந்தவர்களாகிய இராமனும் இலக்குமணனும் கூறினர். 31*

## வீரமார்த்தாண்டன்

இன்னநா யகன்இ ருக்கும் வனத்தைஇந் நகர மாக,
மன்னவன் மருமான் வீர மார்த்தாண்ட வன்மன் என்போன்,
தன்நிகர் தவத்தான் அன்பாம் புண்ணியத் தடத்தான் சீல
நன்னயன் முகில்போல் காக்கும் நளிர்மலர்க் கையி னானே.

*சோரவனத்தை நகரமாக ஆக்கியவன் வீரமார்த்தாண்ட வர்மன் என்பவனாவான். அவன் பாண்டிய மன்னனின் மருமான் ஆவான். ஒப்பற்ற தவம் செய்தவன். அன்புக்குளமாக, புண்ணியக் குளமாக விளங்குபவன்; ஒழுக்கம் உடையவன். பிறருக்கு நல்ல உபகாரங்கள் செய்பவன். குளிர்ந்த மலர் போன்ற கைகளால், மேகம் போலக் கொடுத்து மக்களைக் காப்பவன். 32.*

உறுதிநூல் கற்ற மேலோன் உயர்சிவ ஞான சீலன்;
கறுவகல் உண்மை யுள்ளான் அருள்பெறு கருத்து வாய்ந்தோன்;
நறியுபூந் தாரான் சோரா டவியில்நா யகற்கு வேண்டும்
திறமிகு பணிகள் செய்து திருவொடும் பொலியும் நாளில்,

*அவன், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகை உறுதிப் பொருள்களைக் கூறும் நூல்களைக் கற்ற மேலானவன்; உயர்ந்த சிவஞான ஒழுக்கமுள்ளவன்; திமிரற்ற உண்மையாளன்; இறைவனின் அருளைப் பெறவேண்டும் என்ற நோக்கம் கொண்டவன்; மணமுள்ள பூமாலை அணிந்தவன். சோராடவியில் (சோரக்காட்டில்) உள்ள இறைவனுக்கு வேண்டிய பணிகளைத் திறமையுடன் செய்து, செல்வத்துடன் வாழ்ந்து வந்தான்.* *33.*

காசியில் ஏகி வானின் கங்கைநீ ராடல் வேண்டி,
நேசன்பால் விடைபெற் றேகி நெடும்புடை மருதில் உற்றான்;
வாசவன் பரவும் திங்கள் வனைஇந்த்ர வரதன் தன்னைப்
பாசவல் வினைகள் தீரப் பரவிடும் பான்மை பூண்டான்.

*காசிக்குச் சென்று, ஆகாசத்திலிருந்து மண்ணுலகுக்கு வந்த கங்கையில் நீராட வேண்டும் என அவன் விரும்பினான். சோரக்காட்டு இறைவனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப் பட்டான். வழியில் நீண்ட நகரான திருப்புடை மருதூருக்கு வந்தான்.* *34.*

பொருனை ஆடிப் புனற்கரை ஏறியே,
தருமம் நல்கித் தனது கடன்முடித்(து)
அருள்நயந்து சங்கற்பித்(து) அனுக்கைபெற்(று)
ஒருமையாய் முத்தி மண்டபத்(து) உற்றனன்.

*பொருனை நீரில் குளித்துக் கரையேறி, தருமங்கள் செய்தான். (தீர்த்தாடனத்தானம்) தன் கடன்களைச் (அனுஷ்டானங்களைச்) செய்தான். இறைவனின் அருள் கிடைக்கவேண்டும் என்று, சங்கல்பம் செய்துகொண்டான். (சங்கல்பம் — உறுதி மேற்கொள்ளுதல்). அனுக்கை (விடை) பெற்றான். ஒருமை உணர் வுடன் (ததேகத்தியானத்துடன்) முத்திமண்டபத்துக்கு வந்தான்.* *35.*

வெற்றி யானை முகனை விதியினால்
பற்று பூசனை ஆற்றிப் பரவியே,
சுற்று மாமதில் சூழ்ந்து சுரர்பணி
முற்றம் எய்தி முறையினால் பணிந்துபோய்,

யானை முகனை, வெற்றியைப் பற்றுகின்ற பூசனை செய்து வணங்கினான். பெரிய மதிலை வலம் வந்து, தேவர்கள் வணங்கும் முற்றத்திற்கு வந்து, முறைப்படி வணங்கினான். 36.

திருமுன் பெய்திச் சிவக்கொழுந் தீசனைப்
பரவும் போதில் பரமன் கிருபையும்
நிருபன் அன்பும் நிரம்பின போலுமா
வரனைப் போற்றிமெய் ஆனந்தம் ஆகியே,

இறைவன் சன்னிதானத்தை அடைந்தான். சிவக்கொழுந் தாம் ஈசனைப் பரவினான். அப்பொழுது பரமனின் அருளும், அரசனாகிய வீரமார்த்தாண்டவர்மனின் அன்பும் நிரம்பி இருந்தனபோலும். பெரிய வரம் தரும் இறைவனைப் போற்றிய உண்மையான ஆனந்தத்தில் அரசன் திளைத்தான். 37.

தோத்தி ரம்செய்து சொல்அள வில்லதோர்
சீர்த்தி ஆகத் தயிலம் முதல்திகழ்
ஆத்த னுக்கபி டேகம் அருங்கலம்
சாத்து மாலைபட் டாடைசந் தங்களும்,

தோத்திரம் செய்தான். அளவில்லாத ஒப்பற்ற புகழுடன் தைலம் முதலாகிய பொருள்களைக்கொண்டு, அத்தனுக்கு அபிஷேகம் செய்து, சந்தனம் பூசிப் பட்டாடைகள் அணிவித்து, மாலையிட்டு, அரிய நகைகளை அணிவித்தான். 38.

அணிசெய் தனன்மு தற்பல ஆற்றியே,
கணிதம் இல்உப சாரமும் செய்துகார்
மணிவி ளங்கு களனையும் மாதையும்
பணிவி னோடு பரவுதல் செய்கின்றான்.

அலங்காரத்திற்குப் பிறகு செய்யவேண்டிய அர்ச்சனை முதலியன செய்தான். எண்ணிக்கையற்ற உபசாரங்கள் செய்தான். மேகம் போன்ற மணிகொண்ட நீலகண்டனையும் உமையம்மையையும் பணிவுடன் தோத்திரம் செய்தான். 39.

## வீரமார்த்தாண்டன் தோத்திரம்

பத்தி வலையில் படும்மணியே!
பரனே! போற்றி! பாகம்நின்ற
சத்தி உமை கோமதி மேவும்
சாய்ந்த நாதா! போற்றி! உயர்

சித்தி தருவாய்; போற்றி! தென்பால்
திகழும் காசி தனில்மேவும்
முத்தி தந்து பணித்து ஆள்வாய்;
போற்றி; போற்றி! முன்னவனே!

*[பத்தி—பக்தி; படும்—சிக்குகின்ற; மணியே—மாணிக்கமே; பாகம்நின்ற சத்தி — உம்மில் பாதியாக உள்ள சக்தி உமை; உயர்வுசித்தி— உயர்ந்த காரிய சித்தி, காரியவெற்றி தென்பால்; காசிதனில் மேவும் முத்தி — புடைமருதூரில் கிடைக்கக் கூடிய தாரக மந்திர உபதேசத்துடன் கிடைக்கும் முத்தி; பணித்து— நல்ல செயல்கள் செய்ய உத்தரவிட்டு; முன்னவனே— யாவருக்கும் முற்பட்ட அநாதிப்பொருளே.]* *40.*

விரைஆர் சாந்தம் விரும்பி,அணி
விகிர்தா! போற்றி! விதிபரவும்
பரை, கோமதி பாகம் கலந்த
பரனே! போற்றி! பாம்பினுடன்
திரைஆர் கங்கை புனைந்த சடைத்
தேவே! போற்றி! சிறியேன்தன்
புரைசேர் பாவம் போக்கும்மருது
ஈசா! போற்றி! புண்ணியனே!

*[விரை— வாசனை; ஆர்— பொருந்திய; சாந்தம்— மணப் பொருள்களின் கலவை, இலேபனம்; விகிர்தா— வித்தியாச மான குணநலன்கள் கொண்டவரே; விதி— பிரமன்; பரை— பராசக்தி, உமை; திரை— அலை; புரை—குற்றம்.]* *41.*

வாசம் தொடர்ந்துஆர் இதழிபுனை
மணியே! போற்றி! மருதில்உறை
ஈசா! போற்றி! மெய்சாய்ந்த
இறைவா! போற்றி! ஏறுஉயர்த்த
நேசா! போற்றி! ஆவுடைய
நிமலை பாகா! சித்தனுக்காய்ப்
பேசு நாதா! போற்றி! பிறை
அணியும் பெருமானே! போற்றி!

*[வாசம்தொடர்ந்துஆர்—தொடர்ச்சியாக வாசனை பொருந்திய; இதழி — கொன்றை; புனை— அணிந்த; உறை— தங்கிய; ஏறு—ரிஷபம்; உயர்த்த— (கொடியாக) ஏந்திப்பிடித்த; நேசா— அன்புள்ளவரே!; நிமலை— ஆணவ கன்ம மாயைகள் அற்றவள்; பாகா— (உமையின் வலப்) பாகத்தில் உள்ளவரே; சித்தனுக்காய்— கருவூர்ச்சித்தருக்காக]* *42.*

## கனவில் முனிவர்

போற்றிஎன மிகப்பரவிப் பணிந்தேத்திப் புறம்போந்தே,
ஏற்றுடையோன் நகரில்இறை எய்தியே துயில்கொள்ளச்
சாற்றும்இர வினில்எங்கோன் தார்வேந்தன் துயில்உணர்த்தி,
மாற்றம்இலாக் கனவில்எழுந் தருளியே வகுத்துரைப்பான்.

*போற்றி என்று சொல்லி மிகவும் பணிந்து வணங்கி, ரிஷபத்தை உடையவரின் புடைமருது நகரில் வீரமார்த்தாண டன் தங்கினான். அன்று இரவு இறைவன் அவனை நன்றாகத் தூங்கவைத்து, அவன் தூங்கும்போது, கனவில், மாறுதல் இல்லாத (விழித்தபின் நினைவுக்கு வரக்கூடிய) மின்னல்போன்ற சடையை உடைய முனிவர்போல எழுந்தருளி, ஆசையுடன் கீழ்வருமாறு காட்சிகளைக் காட்டிப் பேசினார். 43*

மின்னுசடை முனிபோல முன்எய்தி விழைவினுடன்
மன்னகேள் காசிஇவை மலரோன்சோ தனைகண்டது
இன்னதலம் மேருகிரி மந்தரம்எங் கோன்கயிலை
பொன்னுலகம் முதல்ஆகும் மகத்வமுள; புவிதன்னில்,

*'அரசனே! புரவலனே! கேட்பாயாக! இந்தத் தலத்தில் பிரமன் காசியிலிட்ட தண்டம் பொருனையில் வெளிவந்த நிகழ்ச்சி நடந்த தலம். இக்கோயிலே மேருமலை; இக்கோயிலின் இறைவனுக்கு இதுவே கயிலாயம்; இத்தலமே பொன்னுலகம். இவை தொடக்க மான மகத்துவங்கள் எல்லாம் இங்கே உள்ளன.' 44.*

புடைமருதின் சிறப்பெல்லாம் புகலமுடி யாதேனும்,
கடையுகத்தும் தட்சணா காசியே முத்திபுரம்
விடையவன்தா ரகமனுவை விதிப்பன்இறு தியில்அறிவை
உடையவர்இத் தலம்நீங்கார் உண்மைஇது அன்றியே.

*உலகத்தில் புடைமருதின் சிறப்பை எல்லாம் முழுவதும் சொல்வது என்பது முடியாத காரியம். என்றாலும், ஓர் உண்மையைச் சொல்கிறேன். இது தட்சிணகாசி; முத்தி தரும் தலம். யுகம் முடிந்தாலும் இருக்கும் தலம். விடையவன் தாரக மந்திரத்தை அந்திய காலத்தில் உபதேசிக்கும் தலம். அறிவுடையவர்கள் யாரும் இத்தலத்தைவிட்டு நீங்க மாட்டார்கள். இது சத்தியம். 45*

புவியில்இது மோட்சபுரி புரவலவா எனஅழைத்துத்
தவயோகர் சாலைஇவை சதவேள்வி யோன்போதன்
உவணம்உயர்த் தோன்முதலாய் உள்ளதே வர்கள்இவரால்
சிவமுதலாய் அறிவித்துச் சித்தம்எலாம் குடிகொள்ள,

இச்சிறப்புகள் மட்டுமல்லாமல் இதுவே சொர்க்கலோகம்! என்று கூறி, நான்கு காட்சிகளை வீரமார்த்தாண்ட வர்மனுக்குக் காட்டினார். (1) இவ்வூரில் உள்ள தவயோகிகளுடைய தவச்சாலைகள் இவை (2) இதோ இவன் நூறு யாகங்கள் செய்த இந்திரன் (3) இவன் பிரம்மன் (4) இவர்கள் கருடக் கொடியை உயர்த்திப்பிடித்த திருமால் முதலாகிய தேவர்கள் என்று, நான்கு காட்சிகளைக் காட்டிச் சிவதத்துவம் முதலாகிய செய்திகளை அறிவித்து, சித்தத்தில் குடிகொள்ளச் செய்தார். 46.

காட்சிஅறி வித்தெங்கோன் கரந்தனனால் காவலனும்
நீட்டுபுள கிதம்உற்றுத் துயில்விழித்து நிருமலன்தாள்
நாட்டிமனத் தறிவித்த நன்மைநினைந்(து) இறும்பூதால்
வாட்டம்இலா அமைச்சர்க்கும் மற்றோர்க்கும் வகுத்துரைப்பான்.

வீரமார்த்தாண்டவர்மன் கனவில், முனிவராக வந்த இறைவன் மறைந்தார். வீரமார்த்தாண்டவர்மன், தூக்கம் கலைந்து விழித்தான்; மிகவும் புளகாங்கிதம் அடைந்தான். நிர்மலனாகிய சிவனின் திருவடிகளை மனத்தில் பதித்தான். முனிவர் வடிவல் வந்து, இறைவன் அறிவித்த நல்ல செய்திகளை எல்லாம் நினைத்துப் பார்த்தான். இறும்பூதடைத்தான். உற்சாகத்துடன் அமைச்சர்களுக்கும், மற்றவர்களுக்கும் கனவுச் செய்திகளை வகைவகையாகச் சொன்னான். 47.

யாவர்களும் அதிசயித்தார் யாம்கண்ட நால்வகையாம்
மேவவரும் காட்சிஇனி மேதினியில் இவைபோல,
மூவுலகத் தினும்இல்லை மூவர்க்கும் தெரியாத
தேவுலகம் இதுஎன்று சித்தம்மகிழ் சிறந்தனரால்.

எல்லாரும் அதிசயம் அடைந்தார்கள். 'நான் பார்த்த ஒருவகையான பொருத்தமான காட்சிகள் உலகத்தில் — ஏன் — மூன்று உலகங்களிலும் யாருக்கும் காணக்கிடைக்காது; பிரமன் முதலாகிய மூவராலும் ஆராய்ந்து, முழுதும் அறிய முடியாத பெருமை உடையது இத்தலம்' என்றுகூறச் சித்தம் மகிழ்ந்தான். 48.

## பூசனை, திருப்பணி, வேண்டுகோள்

மிக்கபூ சனைஆற்றி வேண்டியே பணிந்தேத்திச்
செக்கர்வா னவன்கோயில் பணிசெய்து திருப்பணிக்கும்
தக்கபூ சனைவிழாத் தருமம்முதல் எவற்றினுக்கும்
திக்குநிகழ் வகைஇயற்றி ஒக்கலுடன் சிறந்திருந்தான்.

*வீரமார்த்தாண்டன் இறைவனுக்கு மிக விரிவான பூசை செய்தான். அருளை வேண்டினான். விழுந்து வணங்கினான். புகழ்ந்தான். சிவந்த மேனியையுடைய இறைவனின் திருக்கோயில் பணிகள் செய்தான். திருக்கோயிலைப் புனரமைப்புச் செய்தான். தக்கபடி நித்திய பூசைகள் செய்யவும், விழாநாட்களில் சிறப்புப் பூசைகள் செய்யவும், சிவதருமங்கள் செய்யவும், கோவிலுக்குத் தேவையான மற்ற எல்லாவற்றுக்கும், எல்லாத் திசையைச் சேர்ந்தவர்களும் புகழும்படியாக வழிவகைகள்(நிபந்தங்கள்) ஏற்படுத்தினான். தன் உறவினர்களுடன் அவ்வூரிலேயே மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான். 49.*

தென்பால்கங் கையில்ஆடித் திரிவேணி பிரயாகை
பொன்பாயும் நதிசூழ்ந்த புடைமருதின் சிறப்பெல்லாம்
இன்பால்கண் டிவைகாசி தனில்அதிகம் என்பதனை
அன்பால்கண் டாதரித்தே அன்பருடன் அமர்ந்தங்ஙன்,

*தெற்குக்கங்கையாகிய பொருனையில் நாள்தோறும் நீராடினான். திரிவேணி பிரயாகை கலந்த பொன்மயமான நதி சூழ்ந்த புடைமருதின் சிறப்புகளை எல்லாம் இனிமையாக அனுபவத்தில் அறிந்து, இது காசியைக் காட்டிலும் அதிகச் சிறப்புள்ள தலம் என்ற கருத்தை அன்புடனே கண்டுகொண்டு, இத்தலத்தில் உள்ளவர்களுக்கு ஆதரவு கொடுத்து, நல்ல அன்பர்களுடன் இருந்தான். 50.*

பல்ஆண்டிப் படிஎய்தும் பருவத்தில் பார்வேந்தன்
வில்ஆண்ட சிலையானை மெய்சாய்ந்த விடையானைச்
சொல்ஆண்ட துதியாலே துதிசெய்து சோரவனத்
தில்ஆண்டு பரவிவரும் ஈசனையும் எண்ணினனால்.

*பலஆண்டுகள் இப்படிப் பணிசெய்துகொண்டு, சிவனின் அன்பர்களாகிய அடியார்களுடன் கூடியிருந்தான். பார்வேந்தனாம் வீரமார்த்தாண்ட மன்னவன், மகாமேருவாகியவில்லைப் பயன்படுத்திய சிவனை, மெய்சாய்ந்த ரிஷப வாகனப் பெருமானை, உயர்ந்த சொற்களால் துதிசெய்து, வணக்கம் செய்துவந்தான். தன்வூராகிய சோரவனத்தை ஆண்டுவருபவரும், தன்னால் வணங்கப்பட்டவருமாகிய ஈசனையும் நினைத்தான். 51.*

எண்ணும்மனத் தின்படியே இறையவனை வேண்டியே,
அண்ணலே கருவூரான் அழைத்தருள மெய்சாய்ந்த
வண்ணமாய் இருந்ததனை வையகத்தோர் அறிந்தேத்த,
நண்ணினீர் அவைபோலும் நாயேற்கும் நல்குவீர்.

தி-30

மனத்தில் எண்ணிய எண்ணப்படி ஈசனை வேண்டினான். 'அண்ணலே! கருவூர்ச்சித்தர் அழைக்க, அவருக்கு அருள்செய்ய வேண்டும் என்பதற்காக, மெய்சாய்ந்த நிலையை உலகத்தவர்கள் எக்காலத்திலும் அறிந்து ஏத்தவேண்டும் என்பதற்காக, அந்தச் சாய்ந்த கோலத்திலேயே இருக்கின்றீர். கருவூர்ச்சித்தரின் வேண்டுகோளை ஏற்றது போல, நாய்போன்றவனாகிய என் வேண்டுகோளையும் ஏற்றருளவேண்டும். 52.

இக்கோலம் அத்தலத்தில் எய்திடவே அருள்செய்ய,
முக்கணா வேண்டும்என நாள்தோறும் முயன்றேத்திப்
பக்கமாய் ஆலயத்தில் பஞ்சலிங்கம் சிறந்திடவே,
முக்கியமாய்ப் பதிஇயற்றி மூர்த்திகளை வதிட்டித்தே.

தங்களின் இந்தச் சாய்ந்த திருக்கோலம் சோரவனமாகிய அத்தலத்திலும் எய்தவேண்டும்' என்ற வேண்டுகோளை நாள் தோறும் வழிபாட்டின்போது வேண்டினான். திருப்புடை மருதூர் இறைவனின் பக்கமாக ஆலயத்தில் பஞ்சலிங்கங்களை ஸ்தாபித்து, அதில் முக்கியமாகத் தலைவரை எழுந்தருளச் செய்தான்— பிரதிஷ்டை செய்தான். ஊரை அழகு செய்தான். 53.

சிறந்தபூ சனைஆற்றி ஆதிரைமண் டபம்செய்தே,
உறைந்தநா ளினில்எங்கோன் ஒருகாலம் தெரிசனத்தில்
அறம்தவா மன்னாஉன் அரியநகர்க் கேகுதியால்
கறங்கிலா உளத்தின்வழி வருதும்நாம் கழறக்கேள்.

பஞ்சலிங்கங்களுக்குச் சிறப்பாகப் பூசைசெய்தான். ஆதிரை மண்டபம் என்ற மண்டபத்தைக் கட்டினான். இறைவனுக்குச் செய்யும் (ஆறுகால பூசைகளையும் தரிசிக்கும்போது) ஒருகால தரிசனத்தில், 'தருமம் தவிராத மன்னா! உன்னுடைய அருமையான நகராகிய சோரவனத்திற்குச்செல். சுழலாமல் நிலையான உன் மனக்கருத்தின்படியே நாம் அங்கு வருவோம். நான் சொல்வதை நன்றாகக் கேள். 54.

சோரவனப் புரகரன்பால் துகள்இலாய் நீகாண,
வாரமாய் இக்கோலம் வழங்குதும்யாம் வணங்குவாய்
ஆரநாம் சத்தியவா சகம்உரைத்தோம் ஆதலால்,
பார்உளோர் உய்யநீ இப்பெயரே பரித்திடுவாய்.

நீ காணும்படி சோரவனத்தில் உள்ள, திரிபுரத்தை எரித்த சிவன் நிலையாக, இந்தச் சாய்ந்த திருக்கோலத்தில் இருக்கும் படி யாம் அருள்வழங்குவோம். குற்றமற்றவனே! முழுவதுமாக நாம் சத்தியவாசகம் சொல்லியுள்ளோம். எனவே, சோரவனப்

*பெருமானுக்கு, நீ சத்தியவாசகன் என்னும் பெயரையே இட்டழைப்பாயாக' என்று, இறைவன் அருள்செய்தார். 55.*

என்றிறைவன் அருள்செய்ய இறைவனும்எங் கோன்அருளை
நின்றுமனத் தினில்நேர்ந்தே நிறைஅன்பால் போற்றியே,
கன்றும்ஆ வும்போலக் கசிந்துவிடை பெற்றகன்று
சென்றனனால் அவன்முன்பு சேர்ந்தனனால் தேவேசன்.

*அரசனும் இறைவன் அருள்செய்ததை நிலையாக மனத்தில் பதித்துக்கொண்டான். நிறைந்த அன்புடன் போற்றினான். பசுவும் கன்றும் பிரிவதைப்போன்ற உணர்வுடன் விடை பெற்றான். கன்று போன்றவன் கோயிலைவிட்டு வந்தான். ஊரைவிட்டுச் சென்றான். அவன் சோரவனத்துக்குச் செல்வதற்கு முன், தேவர்கள் அனைவராலும் நேசிக்கப்படும் பெருமான், சோரவனத்துத் திருக்கோயிலில் மெய்சாய்ந்த பெருமானாக எழுந்தருளினார். 56.*

## சோரமா நகரில் வீரமார்த்தாண்டன்

மன்னவனும் அந்நகரில் மங்கலவாழ்த் துடன்ஏகிப்
பின்னகனைச் சென்றேத்தப் பேசுநா யகன்கோலம்
முன்அருளின் படிசாய்ந்த முதல்வனாய்க் காட்டுதலும்
தன்னைமறந் தானந்தம் தலைக்கொள்ளத் தார்வேந்தன்,

*மங்கல வாழ்த்துகளுடன் வீரமார்த்தாண்டன் சோரமா நகரை அடைந்தான். முடியழகனாம் ( பிஞ்ஞகனாம்) சிவனைக் கோயில் சென்று வணங்கினான். இறைவன் திருப்புடை மருதூரில் சொன்ன சத்தியவாசகத்தின்படி, பேசுநாயகன் கோலம் — மெய்சாய்ந்த திருக்கோலம் கண்டு, தன்னை மறந்து ஆனந்தம் தலைக்கேற, அரசன் ஆடினான்; பாடினான். 57.*

ஆடினான் பாடினான் அற்புதனால் அகம்மகிழ்ந்தான்;
நீடினான் இறைஅன்பால் நித்தனுக்கா தரவுமிக
நாடுபூ சனைஆற்றி நாறும்பூ நாயகன்தாள்
சூடியே சத்தியவா கீசுரா எனத்துதித்தான்.

*அற்புதனால் அகம்மகிழ்ந்தான். அவனின் இறையன்பு நீண்டது. நித்தியமானவனுக்கு மிகுந்த ஆதரவுத் திருப்பணி செய்தான். விரும்பிப் பூசனை செய்தான். நாறும்பூநாதனின் திருவடிகளை மனத்தில் பதித்துச் சோரவனப் பெருமானுக்குச் 'சத்திய வாகீசன்' எனத்திருநாமமிட்டுச் 'சத்திய வாகீசா' என அழைத்துத் துதித்தான். 58.*

சத்தியவாக் கின்வழியே சார்ந்ததால் சங்கரற்கு,
நித்தியம்ஆ கியபெயராய் நிகழ்ந்ததால் நீடுலகில்,
அத்தனைப்பூ சித்துவரம் அலகிலா தவர்பெற்றார்;
உத்தமனுக் கானபணி செய்தனன்வேந் துரவோனே.

*தாம் சொன்ன சத்தியவாக்கின்படி மெய்சாய்ந்த திருக்கோலம் கொண்டமையால், சங்கரனுக்கு நிலையாக இப்பெயர் ஏற்பட்டது. பெரிய உலகில் எண்ணற்றவர்கள், இப்பெருமானைப் பூசித்து வரம்பெற்றார்கள். அறிவிற் சிறந்த வீரமார்த்தாண்டன், உத்தமனாகிய சோரவனத்துச் சத்தியவாகீசப் பெருமானுக்கான திருப்பணிகள் பலவும் செய்தான்.* *59.*

பின்புபல நாள்போற்றிப் பேரின்பம் உற்றனனால்
அன்புடைய வீரமார்த் தாண்டநிதி அரசானோன்
பொன்பதும மாதுவளர் புடைமருதீ சுரன்கீர்த்தி
என்சிறிய புந்தியால் இயம்பலாம் தகைமைத்தோ.

*பிறகு பலகாலம், செல்வம்மிக்க — அன்புடைய வீரமார்த்தாண்ட மன்னன், சோரவனத்துச் சத்தியவாகீசரைப் போற்றிப் பேரின்பம் அடைந்து வாழ்ந்தான். பொன்தாமரைச் செல்வியாம் திருமகள் வாழுகின்ற திருப்புடைமருதூரில் உள்ள இறைவனின் கீர்த்தி, என்னுடைய சிற்றறிவில் சொல்லக் கூடியதன்று.* *60.*

அன்புடைய அடியவர் தம்கருத்தின் வழிஆற்றும்
இன்புடையார் அருள்தன்னை எவர்அறிவார் அறிவுடையார்
தன்புடையார் அவர்அடிஎன் தலைமீது தரித்திடுவேன்
பொன்புடைமா மருதீசர் புகழ்விளங்கப் பூவெல்லாம்.

*அன்புள்ள அடியவர் கேட்டதற்காக, அவன் கருத்துப் படியே செய்யும் இன்புடைய பெருமானின் அருளை யாரால் அறியமுடியும்? அறிவுடையவர்களின் புடைமருதீசனின் திருவடிகளை என் தலையின்மேல் தரித்துக்கொள்வேன். பொன்மயமான புடைமருதீசரின் புகழ், பூவுலகமெல்லாம் விளங்கட்டும்.* *61.*

வாழ்க தட்சிண காசிவளம்பதி;
தாழ்விலாத புடார்ச்சுனம் சார்ந்து,அருள்
சூழ், இலேபன சுந்தரன் தொல்கதை
ஏழ் பெரும்புவி எங்கும் விளங்கவே.

*ஆகத் திருவிருத்தம் – 1398*

# காண்டம் மூன்று

## 1. தாம்பிரவன்னிப்படலம்

### கவிச்சொல்

மங்கள கல்யா ணத்தின் மகிமையை மலயம் தன்னில்,
செங்கையார் காட்டக் காணும் திருமுனி கரகம்உற்ற
நங்கைஆர் அணிநா தற்கு நல்கிய மாலை என்னும்
பொங்கிய கங்கை யான பொருனையின் வரவு ரைப்பாம்.

சிவபெருமானுக்கும், இமவான் மகளுக்கும் நடந்த மங்களகரமான திருக்கலியாணக்கோலம், அகத்திய முனிவர் காணுமாறு அனலேந்திச் சிவந்த கையை உடைய சிவன் பொதிகையில் காட்டினார். அகத்தியரின் கமண்டலத்தில், உமை சிவனுக்கு அளித்த தாமரைமாலை அழகாக இருந்தது. அதிலிருந்து கங்கை பொங்கிப் பொருனை நதியாக வருகிறது. அவ்வரலாற்றை இங்கே சொல்கிறேன். 1.

### நைமிசாரண்யம் (வனம்) தோன்றியது

ஆதியில் ஒருகா லத்தில் அளவிலா மகத்வம் எய்தும்
போதமா முனிவர் யாரும் பூமனை வணங்கி எங்கட்கு,
ஆதரம் பெருக நல்கும் அசைவிலா அழிவற் றோங்கும்
மாதவம் புரியத் தக்க வனம்எங்கட் கருள்வாய் என்றார்.

ஞானம் பொருந்திய பெரிய முனிவர்கள் எல்லாரும் ஆதிகாலத்தில் பிரமனை வணங்கி, ‘எங்களுக்கு நீங்கள் மிகவும் ஆதரவு தரவேண்டும். நாங்கள் பெரியதவம் செய்வதற்கு

அசைவில்லாத — அழிவில்லாத ஓங்கிய வனம் ஒன்றை ஏற்படுத்தித் தந்தருளவேண்டும்' என வேண்டினார்கள். 2.

பூமனும் இசைந்து காசைப் புல்லினால் சக்க ரம்போல்
தாம்விட அதுசென் றெங்கே சார்ந்திடும் அவ்வ னம்தான்
நேமிசா ரணியம் ஆகும் நீங்கள்இச் சக்க ரம்சேர்
காமனும் இடத்தில் எய்தக் கருதிய நல்கும் என்றான்.

பிரமன் அதற்குச் சம்மதித்தார். தருப்பைப் புல்லினால் சக்கரம்போல் செய்து, அதைக் சுழற்றி எறிந்தார். இந்தச் சக்கரம் எங்கே சென்று சேர்கிறதோ, அந்த வனம்தான் 'நைமிசாரண்யம்' எனப்படும். நீங்கள் இந்தச் சக்கரம் சென்று சேர்கின்ற சோலைவனத்துக்குச் செல்லுங்கள். நீங்கள் நினைக்கும் நன்மைகள் எல்லாம் கிடைக்கும் என்றார். 3.

மாதவர் யாரும் நேமி வதிந்திடும் வனத்தில் எய்திக்
கோதமர் முதலாய் உள்ளோர் இருந்தனர் குழுமி அங்கண்
வேதகா ரணராய் உள்ள விழுமியர் ஐவர்வந்தார்
ஓதிடில் தலைமை பெற்ற சவுநகர் இடத்து தித்தோர்.

தருப்பைச் சக்கரம் வந்த இடத்திற்கு, முனிவர்கள் வந்தார்கள். கௌதமர் முதலியவர்கள் அங்கே குழுமினார்கள். அம்முனிவர்களில் வேதத்திற்குக் காரணமானவர்களாகிய ஐவரும் வந்திருந்தனர். அவர்கள், ஐவரும் சௌநகரில் (ஐஸ்வர்ய நகரில்) பிறந்தவர்கள்ஆவர். 4.

வாதரா யணர்பால் கற்ற சாமந்தமுனிவர் வாய்ந்த
வேதம்நான் கினையும்கற்ற வைசம்பா யனர்வி ளங்கும்
பேதம்இல் சயில வாசர் சுமந்துமா முனிபின் வந்த
நேசமாம் சூத ரோடும் ஐவரும் நிலவு கின்றார்.

(1) வாதநாராயணரிடம் கற்ற சாமந்தமுனிவர் (2) நான்கு வேதங்களையும் முற்றக்கற்ற வைசம்பாயனர் (3) பேதம் பார்க்காது விளங்கும் சயிலவாசர் (4) சுமந்து மகரிஷி (5) சுமந்து ரிஷியின் சீடராக நேசமுடன் வந்த சூதமுனிவர் — இந்த ஐவரும் நைமிசாரண்யத்துக்கு வந்தார்கள். 5.

காசிபர் மகதி யோகர் கர்க்கர்கண் ணுவர்வ சிட்டர்
பேசிய இவர்க ளோடும் பெட்புடன் உவந்த போதில்,
ஆசிலா வெதிரி காராச் சிரமத்தோர் அணைந்தோர் அங்ஙன்
கூசிநின் றெதிர்கொண் டேத்திக் குணமுடன் முகமன் கூறி,

காசிபர், மகதியோகர், கர்க்கர், கண்ணுவர், வசிட்டர் என்னும் இவர்களோடு, மேற்கூறிய ஐவரும் அன்புடன் பேசி மகிழ்ந்தார்கள். இவர்கள் எல்லாம் வந்ததை அறிந்து,

*மூங்கில் ஆஸ்ரமங்களில் இருந்தவர் எதிரில்வந்து கூசி நின்றார்கள். இவர்களை எதிர்கொண்டு வரவேற்று, குணமான வார்த்தைகளால் உபசாரம் சொன்னார்கள். 6.*

அவருடன் எய்திச் சூதர் அடிபணிந் தரிய தீர்த்தம்
இவண்ளன உரைக்க வேண்டும் எனப்பர விடஇ யம்பும்
புவனியில் கங்கை தென்பால் பொதிகையே பூத நாதன்
பவனது முடியில் போந்த தாம்பி பன்னியாகும்.

*அந்தத்துறவிகள் சூதரின் கால்களில் விழுந்து வணங்கி, 'அருமை மிகுந்த தீர்த்தம் எது என்பதுபற்றி இங்கே எங்களுக்குச் சொல்லுங்கள்'என்று, கேட்டுக்கொண்டார்கள். சூதர், 'சொல்கிறேன்' என்றார். 'உலகில் தெற்குப் பொதிகையில் தோன்றும் கங்கையே அரிய தீர்த்தம். பூதநாதனாகிய சிவனின் முடியிலிருந்து வந்த தாமிரபரணி என்பது அது' என்றார். 7.*

## தட்சயாகம் அழிப்பு

அந்நதி மகிமை தன்னை உரைத்திடற் கரிய தாகும்;
முன்எமக் குரைத்த ஆசான் மொழிவழி மொழியல் உற்றாம்;
தன்னிக ரருமை தேர்வாய்ச் சார்ந்திடும் தக்கன் ஓர்கால்
துன்மகம் செய்தான் காணத் தோகையும் நினைந்து நாதன்,

*தாமிரபரணியின் மகிமையை முழுதும் சொல்வது கடுமையான காரியம். என்னுடைய குருநாதர் சுமந்துமுனிவர் எனக்குச் சொன்னபடி நான் உங்களுக்குச் சொல்வேன். தனக்குத்தானே ஒப்பான தேர் உடையவன் தக்கன். அவன் கொடிய செயல் ஒன்றைச் செய்தான். அது ஒரு யாகம். அந்த யாகத்தைக்காணத் தக்கன் மகளாகிய தாட்சாயணி (உமை) விரும்பினாள். 8.*

தன்னடி பணிந்து சார்ந்தனள் தையல் தன்னை,
மன்னவன் நோக்கல் இன்றி வரதனை அன்றி மற்றோர்
இன்னயா கத்தி னுக்கே இறைஎன உணர்ந்து செய்தான்;
அன்னதைக் கண்டு தேவி அவ்விடம் அகன்றாள் போந்தாள்.

*அதற்காக அனுமதிகேட்கச் சிவனின் திருவடிகளை வணங்கி வேண்டினாள். யாகத்திற்கு வந்தாள். மகளைத் தக்கன் வரவேற்கவில்லை. யாகத்தின் அவிர்ப்பாகத்துக்குச் சிவனையல்லாமல் வேறொரு தெய்வத்தைக் கருதிச்செய்தான். தேவி அந்த இடத்தைவிட்டு நீங்கினாள். சிவனிடம் வந்தாள். 9*

நிந்தனை புகன்ற தெல்லாம் நிமலன்பால் நிகழ்த்த நீல
சுந்தரன் மனத்தில் கண்டு வீரபத் திரனைச் சென்று,

அந்தவெந் தழலை அங்கே அமைந்தவர்க் கமையும் தண்டம்
சிந்திடச் சிதைத்து மீள்வாய் என்னஅச் செல்வன் எய்தி,

*தந்தையாகிய தக்கன், மருகனாராகிய சிவனை நிந்தனை செய்ததை எல்லாம், தாட்சாயணி சிவனிடம் கூறினாள். நீலகண்டன் அவற்றை மனத்தில்கொண்டு, வீரபத்திரரை அழைத்து, 'தட்சயாகத்திற்குச் சென்று, அந்த யாகம் வளர்த்தவர்களுக்குத் தண்டனை கொடுத்து, யாகத்தை அழித்துச் சிதைத்து மீண்டுவா' என்று உத்தரவிட்டார்.* 10.

அழித்துமீண் டனனால் அந்த அறிவிலாத் தக்கன் ஈன்ற
மழைக்குழல் என்ற பேரை மாற்றிட வேண்டி எங்கோன்
தழைத்திடும் அமையம் நோக்கிச் சாற்றினாள் அதற்கி சைந்து,
கழைக்கையாய் இமய ராசன் தவம்மகக் கருதிச் செய்தான்.

*வீரபத்திரர் தட்சயாகத்திற்குச் சென்று போரிட்டு, யாகத்தை அழித்து மீண்டார். தட்சன்மகள் என்பது, தாட்சாயணி என்ற சொல்லுக்குப் பொருளாகும். அறிவில்லாத தக்கனின் மகள் என்ற பெயர் உமைக்கு இருக்கக்கூடாது; அதைமாற்ற வேண்டும் என்று கருதினார் இறைவன். உமை சரியான சமயம் பார்த்து இறைவனை நோக்கி ஓர் உபாயம் சொன்னாள். இறைவனும் அதற்குச் சம்மதித்தார். மூங்கில் கரங்களை உடைய இமயராசன், பிள்ளைப்பேறு வேண்டித் தவம் செய்தான்.* 11

## இமவான்மகள் திருமணம்

அவற்குநீ மகவ தாக அவதரித் திடுவாய் அன்னோன்
உவப்பநீ வளரும் எல்லை உன்னைநாம் வேட்ப தற்கே,
தவத்தினைப் புரிவாய் அந்தப் படிமணம் தகவிற் செய்து,
பவப்பெயர் தனைம றைப்போம் என்னவே பகர்ந்தான் எங்கோன்.

*சிவன் உமையை நோக்கி, 'இமயராசனுக்கு நீ மகளாக அவதரிக்கவேண்டும்; அவன் மகிழ்ச்சியடையுமாறு நீ வளரும் போது, உன்னை நாம் திருமணம் செய்துகொள்ளுவதற்குத் தவம்செய். அப்படியே நாம் உன்னை மணக்கிறோம். இதனால் நீ தாட்சாயணி எனப் பிறப்பினால் பெற்றபெயர் (பவப்பெயர்) மறையும்' என்றார்.* 12

திருவுளப் படியே தேவி இமயமன் செல்வி யாக
உருவுகொ டெய்தி மேனை உதவிய முலைப்பால் உண்டு,
வருமதிப் பிறைஒப் பாக வளரும்நாள் பரன்பால் அன்பு
பெருகிடத் தவமேற் செல்லும் பேதைதன் கரத்தை நோக்கா.

ஈசனின் திருவுளக்கருத்தின்படி, இமவானின் மகளாக உமையம்மை அவதரித்தார். மேனகை, உமையம்மைக்கு முலைப்பால் கொடுத்தாள். வளர்பிறைபோல அம்பிகை வளர்த்தாள். சிவனிடம் காதல் பெருகியது. அதற்காகத் தவம் செய்ய நினைத்த கருத்தை இமவான் அறிந்தான். 13

மன்னன்அவ் வரையில் சாலை வகுத்திட வனிதை எய்திப்
பன்னரும் தவங்கள் செய்தாள் பரமன்அங் கெழுந்து காட்சி
மின்னிடைக் கருளிப் பின்பு வேள்விமண் டபம்செய் வேந்தன்
பொன்னணி இமயக் கோயில் போதுவான் போதில் அங்ஙன்,

இமயமலையில் தவச்சாலையை ஏற்படுத்தினான். அம்பிகை அந்தத் தவச்சாலையில் தங்கி, நினைத்தற்கரிய தவங்களைச் செய்தாள். மின்னல் போன்ற இடையைக் கொண்ட அம்பிகையின் முன், பரமன் எழுந்தருளிக் காட்சி கொடுத்தார். திருமண வேள்விமண்டபத்தை இமவான் செய்தான். இமயமலை, பொற்கோயிலாக அலங்கரிக்கப்பட்டது. இறைவன் இமவான் மகளை மணம் செய்துகொள்ள எழுந்தருளினார். 14

## அகத்தியரைப் பொதிகைமலைக்கு அனுப்புதல்

இறைதரும் இலக்கம் எண்பான் நான்குயிர் அடங்கும் ஈரேழ்
பொறையினிற் கலையைப் பூதம் காலங்கள் பூமன் மாயன்
கறைஅணி கண்டன் புத்தேள் காக்கும்ஓர் அண்டம் இவ்வா(று)
அறைதரு பலவாம் அண்டத் தனைவரும் இமயத் தானார்.

எண்பத்து நூறாயிரம் கோடி உயிர்களும், பதினான்கு உலகத்தவர்களும் கலைகள், பூதங்கள், காலங்கள், சத்தியலோகம், ஸ்ரீவைகுண்டம், சிவலோகம், பிரமன் காக்கும் அண்டங்கள் இப்படி எல்லா அண்டத்து எல்லா உயிர்களும் இறைவனின் திருமணம் காண இமயத்திற்கு வந்தார்கள். 15

அவ்வரை இவரை எல்லாம் பொறுத்திட அமையும் என்னில்,
தெவ்வரைப் பொடித்து நாதன் திருவிளை யாடல் செய்வான்
இவ்வரை தாங்கி டாது சாய்வபோல் இயற்ற யாரும்
கவ்வைகொள் மனத்தர் ஆனார் கடவுளர் யாரும் எய்தி,

அந்தமலை, அத்தனை பேரையும் தாங்கக்கூடியதுதான். என்றாலும், பகைவரை அழிக்கும் பரமன் ஒரு திருவிளையாடலைச் செய்தார். இமயமலை தாங்காமல் சாய்வதுபோல் ஒரு பாவனையைச் செய்தார். எல்லாரும் ஆரவாரிக்கும் மனத்தினர் ஆனார்கள். 16

நமைஆள் உடைய நாயகன்பால் நண்ணி இந்த நல்புவனம்
சமையா கிடச்செய் தருள்வேண்டும் என்று சரணம் பணிந்திடவே
இமையோர்க் கிரங்கி இத்திருநாட் கெய்தும் கும்ப முனிவனைப்
பார்த்(து)
உமைபால் மணக்கோ லம்காண்பாய் பொதிகைக் கேகென்
றுரைத்தனரால்.

கடவுளர்கள் எல்லாரும் நம்மை ஆளும் இறைவனிடத்தில் வந்து, இந்த மலையுலகம் சமம் ஆகிடச் செய்தருளவேண்டும் என்று வேண்டித் திருவடிகளைப் பணிந்தார்கள். அந்த இமையவர்களாகிய கடவுளர்களிடம், இறைவன் இரக்கம் காட்டினார். இந்தத் திருநாளை — மணத்தை — காண வந்த கும்ப முனிவனைப் (அகத்தியரைப்) பார்த்துப் 'பொதிகை மலைக்குச் செல். அங்கே உமையம்மையின் திருமணக்கோலத்தைக் காணலாம்' என்றார். 17

பின்னும் உரைப்பான் தேவிதவப் பெருமை நோக்கி முத்தாரம்
தன்னை ஈந்தோம் பரைஎம்பால் தரித்த கஞ்சத் தார்இதுவாம்
முன்னில் இவைதாம் பிரவேணித் தீர்த்தம் முனியே எனஈந்தான்
மன்னு கடத்தில் தரித்தணைந்தே கிடுபோ தெல்லாம்
வான்நதியாய்

'தேவியின் தவப்பெருமையை நோக்கி முத்தாரத்தைக் கொடுத்தோம். (ஆதிமனுப்படலம் பா. 49) 'பராசக்தி எமக்கு அணிவித்த தாமரைமாலை இது. தாமரைமாலையை உன்னிடம் கொடுக்கிறோம். உன் கமண்டலத்தில் வைத்துக்கொள். இது கங்கா தீர்த்தமாகும்.' என்று கூறித் தாமரை மாலையை இறைவன் அகத்தியரிடம் கொடுத்தார். 18

வரும்என் றுரைத்தே ஈந்ததொடை வாங்கி வரதன் அருள்படியே
விரதக் கடத்தி லேதாங்கி வேள்விக் கோலம் தென்வரையில்
தருவோம் என்ற படிநினைந்தே சார்ந்த தமது பன்னியுடன்
கருதிப் பொதியா சலம்எய்த எழுந்தான் கருணை முனிவரனே.

தாமரைமாலையை வாங்கிக்கொண்டு இறைவனின் அருளாணையின்படி விரதக்கடத்தில் (கமண்டலத்தில்) வைத்துக் கொண்டு, 'கலியாணக் காட்சியைப் பொதிகையில் காட்டுவோம்' என்ற இறைவனின் அருள்வாக்கை மகிழ்ச்சியுடன் எண்ணித் தனது பத்தினியாகிய உலோபமுத்திரையுடன் கருணை முனிவராகிய அகத்தியர் பொதிகை நோக்கிப் புறப்பட்டார். [பொதிகைக்கு வரும் வழியில் புலத்தியன் மகளார் உலோபா

*முத்திரையை அகத்தியர் மணந்துகொண்டார் என்பார் நச்சினார்க்கினியர். தொல்.எழுத்து. பாயிரம். [நச்.உரை] 19*

## அகத்தியர் பொதிகைக்கு வந்த வழி

துங்க பத்ரி கேதாரம் தோன்றும் ஏமகூ டம்கடந்து,
கங்கை படிந்து வாரணாசி கயைக லந்து காந்தாரப்
பொங்கு கிரிபோந் தரவிந்தப் பூமான் உறையும் திருச்சயிலம்
அங்கண் அகன்று வில்வலன்வா தாவி விந்த மதம்அடக்கி,

*துங்கபத்திரா, கேதாரம், ஏமகூடம், ஆகியவற்றைக் கடந்து, கங்கையில் குளித்து, வாரணாசி, கயா ஆகிய தலங்களில் வழிபாடு செய்து, காந்தாரமலைக்கு வந்து, பரமன் தங்கியுள்ளதான திருச்சயிலம் (ஸ்ரீசயிலம்) தரிசித்து, வில்வலன், வாதாபி ஆகிய அரக்கர்களை அழித்து, விந்தியமலையின் செறுக்கை அடக்கிப் பயணம் தொடர்ந்தார். 20*

காஞ்சி கழுக்குன் றம்கன்னம் திருக்கா ளத்தி வீரட்டம்
வாஞ்சி திருஅம் பலம்ஆரூர் மன்னு சைய வரைஎய்தி
பூஞ்சோ லைக்கிந் திரன்வேண்டப் பொன்னி நதியும் உண்டாக்கி,
மாஞ்சோ லைகள்சூழ் பள்ளிமலை மதுரை பரங்குன்
றினைவணங்கி,

*காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், திருக்கோகர்ணம், திருக்காளத்தி, அட்டவீரட்டத்தலங்கள், தரிசிக்கும் ஆசையை மிகுதிப் படுத்தும் தில்லைப் பொன்னம்பலம், திருவாரூர், நிலை பெற்ற சையமலை ஆகிய தலங்களைச் தரிசித்தார். இந்திரன் வேண்டக் குடகுமலையில் காவிரியை உண்டாக்கினார். மாஞ் சோலைகள் சூழ்ந்த திருச்சிராப்பள்ளிக்கு வந்தார். மதுரை, திருப்பரங்குன்றம் ஆகிய தலங்களில் வழிபாடு செய்தார். 21*

கருவை திரிகூ டம்பணிந்து கலைக்கோட் டுவன்பூ சித்ததலம்
மருவும் சயிலம் பணிந்தேத்தி மலையார் சாரல் முக்காவைப்
பரவிப் புருடன் பூசித்த பரனைப் பணிந்து பாங்கான
அருவி கொழிக்கும் முத்தலைசூழ் ஆர மலையை
அடைந்தனனால்.

*திருக்கருவூர், திரிகூடமலை, ஆகியவற்றை வணங்கினார். கலைக்கோட்டு முனிவன் பூசித்த தலம், மலை, திருமுக்கா ஆகியவற்றைப் பணிந்தார். பாங்கான முத்தலை சூழ்ந்த ஆரமலையை — பொதிகையை அடைந்தார். 22*

## பொருனை தோன்றுதல்

பொதிகை தன்னில் முனிவர்குழாத் துடனே மணக்கோ லம்போற்றி,
மதிமத் ததர்ஈந் திடக்கொணர்ந்த வனசத் தாரை மலயம்அதில்
நதியாய்ப் பெருகிப் போற்றிசெய நம்பன் முடியே நாகமுடி
அதனில் பெருகி அறல்பொங்கி அருவி யாக ஆர்த்ததுவே.

*பொதிகையில், மற்ற முனிவர்களுடன் இணைந்து, இறைவனின் திருமணக்கோலத்தைக் கண்டு தரிசித்தார். மதிமத்த ராகிய சிவன் அளித்த தாமரைமாலையைப் பொதிகைமலை உச்சியில் சூட்டி, அது நதியாய்ப் பெருகி வருமாறு செய்து, அதனை வழிபட்டார். அப்படிச் சூட்டிய உச்சியே, இறைவனின் திருமுடியாகிய நாகமுடியாகும். நாகமுடியிலிருந்து பெருகி, அறல் மணலுடன் அருவி விழுந்தது.* 23

நஞ்ச ணிந்த கண்டரன் றுரைத்த நாக எல்லைதான்
அஞ்சு யோச னைப்பரப்ப தகன்ற நாப்பண் ஓர்கிரிதாம்
விஞ்சி டாத சாய்கையது மேவும் வெஞ்சு டர்க்கரந்தொடா
தஞ்சி ஒதுங்கும் உச்சியே ஆர நீழல் அங்ஙனே.

*நாகமலை என்பது, பொதிகை. இறைவன் முன்பொரு காலத்தில் அகத்தியனிடம் குறிப்பிட்டமலை. ஐந்து யோசனைப் பரப்பளவு (500 கல் தொலைவு என்பர்; 100 கி.மீக்கு உட்பட்டது என்பதே பொருத்தம்) உடைய நிலத்தின் நடுவில் உள்ளது. சந்தன மரங்கள் (ஆரம் — சந்தனம்) நிறைந்ததால், அதை ஆரமலை என்றும் கூறுவர். மிக உயரமானதால், கோபிக்கும் சூரியனும் அதன் மேற்செல்லமுடியாமல் ஒதுங்கியே போகும்.* 24

விசுவனால் விதித்த சாலை மேவும் யோகி வெற்புறும்
உசிதம் ஆன நதியைநீ உவர்செ றிந்த ஓதநீர்
வசைஅு றச்செல் வாய்உ கத்தர் வான்உ ளோர்ப டிந்திட,
விசையை எய்தி அவர்ப வங்கள் ஏக வுஞ்செய் வையென,

*அம்மலையில் சந்தன மரநிழலில் விசுவகர்மாவால் கட்டப் பட்ட தவச்சாலையில் அகத்தியர் தங்கினார். அவர் அருவி யாய்ப் புறப்பட்ட பொருனையைப் பார்த்து, 'மலையிலிருந்து தக்கபடியே கிளம்பியுள்ள நீ, உப்புச் செறிந்த, ஒலிக்கும் கடல் வரையில் குற்றம் இன்றிச் செல்வாயாக. உலகத்தவர்களும் உன்னில் நீராடிட வேகமாகச் செல். உன்னில் நீராடுவோரின் பாவங்கள் போகுமாறு செய்' என்று கூறினார்.* 25

என்று ரைத்த வாச கத்தெ ழுந்தவேணி இருவிசும்
பொன்றி எங்கும் மருவி ஓடும் அருவிஓடும் உவரிபோல்

மன்ற லந்த ருப்ப றித்து மலயம்ஊடு வழிகொடு
சென்ற லம்பி டும்த ரங்கம் முத்தொடும்சி றந்ததே.

*இந்த வாசகப்படியே புறப்பட்ட பொருனை நதி, பெரிய ஆகாயத்து நீரைப்பெற்று, எங்கும் பரந்து, அருவியாக விழுந்து, கடலளவுக்கு அதிகமான நீருடன், மணமுள்ள மரங்களை உருட்டிக்கொண்டு மலையில்வந்து இறங்கி, அலைகளை வீசி, முத்துகளைக் கரையோரம் சிதறிக்கொண்டு சென்றது. 26*

அறல்இ யங்கு மலர்கள் ஓதி அம்பகம்த ரும்கயல்
பிறழ முத்த ரும்பு மூரல் பெய்வளைத்த ரங்கமே
உறழ்க ரங்கள் குமிழி ஆரம் ஓங்கு கங்கை நுரைஎனும்
நிறையு மேக லம்பு னைந்த வரந திப்பெண் நிலவுமால்.

*அறல்மணல் கூந்தலாக, அதில் சோலைமலர்களைச் செறுகிக்கொண்டு, கயல்மீன்கள் கண்களாகப் பிறழ, முத்துகள் புன்முறுவலாகத் தவழ, அலைக்கரங்களில் சங்குவளையல் களை அணிந்து வீசி நடந்து, நீர்க்குமிழிகளே மாலைகளாக நுரை என்கின்ற மேகலாபரணம் புனைந்துகொண்டு, கங்கை (பொருனை) என்னும் வரநதிப்பெண் உலவுகிறாள். 27*

## அகத்தியர் நீராடிய தீர்த்தங்களும், தலங்களும்

ஈசன் முன்அ ளித்தி டும்ப டிக்கிந்நீர் செலுங்கரை
வாசம் ஆன தலம்அ னந்தம் அதனில்வாத ராயணன்
பேசு தானம் அறுப தோடி ரண்டிரட்டி ஒன்றுநீர்த்
தூசின் மல்கு பதின லாம்து தித்திடத் தொடங்கியே,

*ஈசன் அளித்த வரத்தால் உதித்த பொருனைநீர் செல்லும் நதிக்கரையில், புகழ்மிகுந்த தலங்கள் பல உள்ளன. அவற்றில் வரதராயணர் (திருத்தலங்கள் பற்றிய நூல் வடமொழியில் செய்தவர். சூத் முனிவரின் பரமகுரு) சொன்ன தலங்களில், 64 தீர்த்த விசேடங்கள் உள்ளன. (அறுபதோடு , இரண்டிரட்டு 2+2 = 4 + ஒன்று = 65) அறுபத்தாறு தீர்த்தங்கள் உள்ள தலங்களுக் கும் சென்று நீராடி, அத்தலங்களையெல்லாம் வழிபட, அகத்தியர் யாத்திரை மேற்கொண்டார். 28*

ஓரை கொண்டெ முந்த பேரி யுடன்எழுந்த முனிவரன்
சார எய்த முன்உ ரைத்த சங்கரேசர் தானமே
ஆர மா்ம லைக்க ணேஅ னந்தம்உண் டதன்கணே
நீர்பு னைந்த பொதிகை நாதர் பத்திரேசர் நிலவுமால்.

*பேரிகை முழங்க நல்ல ஓரையில் முனிவர் யாத்திரை புறப்பட்டார். சிவத்தலங்கள் பல பொதிகையை ஒட்டி உள்ளன.*

அங்கேயும் தீர்த்தங்கள் விசேடமேயாகும். 1. பொதிகை நாதர் தீர்த்தம், 2. பத்திரேசர் தீர்த்தம். 29

முன்னவன் தீர்த்தம் முனிகட தீர்த்தம்
மூலநா யகர்கயி லேசர்
மன்னிய பொதிகை மாதவன் தீர்த்தம்
மானத தீர்த்தம்வான் உள்ளோர்
பன்மலர் பொழியும் பயிரவி தீர்த்தம்
பால்மழை நிலவிய தீர்த்தம்
சின்மய தீர்த்தம் வரப்பிர காசர்
செந்திரு வார்படி தீர்த்தம்,

3. முன்னவன் தீர்த்தம், 4. முனிகட தீர்த்தம், 5. மூலநாயகர் ஆகிய கயிலேசர் நிலைபெற்றதான பொதிகை மாதவன் தீர்த்தம், 6. மானச தீர்த்தம், 7. வானவர் பலமலர்களைப் பொழியும் பயிரவி தீர்த்தம், 8. பால்மழைத் தீர்த்தம், 9. சின்மய தீர்த்தம், 10. வரப்பிரகாச தீர்த்தம், 11. லட்சுமி தீர்த்தம், 30

* பொருனைநதி பாயும் அனைத்து ஊர்களிலும் உள்ள படித்துறைகளின் பெயர்களும் கலந்துள்ளன எனக்கொள்ளலாம்.

சிலையுடன் அம்பு சேர்ந்திடும் தீர்த்தம்
சிவன்உருச் சிலைகொளும் படியே
தலைவன்நல் வரங்கள் பெற்றிடும் வாணன்
தன்பெயர் தீர்த்தம்அவ் விலிங்கம்
அலைபொரும் விராட்டு புருஷ தீர்த்தம்
அங்ஙனம் பரசுரு அடுக்கல்
கலைமகள் ஆறு காளிந்தி ஆறு
கலந்தமுக் கூடலாம் கங்கை.

12. வில்லம்பு தீர்த்தம், 13. சிவனை எண்ணித் தவம் செய்து பாசுபதாஸ்திரம் பெற்ற அர்ச்சுனனின் பெயரால் அமைந்த அர்ச்சுன தீர்த்தம், 14. இலிங்கத்தின் மேல் நீரலை மோதுவதான விராட்புருஷ தீர்த்தம், 15. வணங்கத் தகுந்த அடுக்கல் மகள் (மலைமகள்) ஆறு, கலைமகள் ஆறு, காளிந்தி ஆறு மூன்றும் கலக்கும் திருமுக்கூடல் தீர்த்தம். 31

நிலைதரு கின்ற பாண்டவ தீர்த்தம்
நிலவிய இருநதி கூடும்
மலையில்முக் கூடல் பரதர்வான் மீகர்
வாருண நதிஅதன் கீழ்பால்

பலர்புகழ் கின்ற கேசவ நாதர்
பாங்கினில் கேசவ தீர்த்தம்
கலைதரும் ஊர்திக் காரிதன் தீர்த்தம்
காதலித் தனதரும் கமலம்,

*16. நிலைபேற்றைக் கொடுக்கின்ற பாண்டவ தீர்த்தம், 17. இரண்டு நதிகள் கூடும் மலைமுக்கூடல் தீர்த்தம், 18. பரதர் தீர்த்தம் 19. வான்மீகர் தீர்த்தம் 20. வருணாநதி தீர்த்தம், 21. அதற்குக் கிழக்கே உள்ள கேசவ நாதர் பக்கத்தில் கேசவ தீர்த்தம், 22. கலைநயம் மிக்க காக ஊர்தியானாகிய காரி (சனிபகவான்) தீர்த்தம், 23. விரும்பியதைத் தரும் கமல தீர்த்தம்.* 32

கன்னியர் தீர்த்தம் காசிப தீர்த்தம்
கங்கைவந் தாடிய தீர்த்தம்
மன்னிய துர்க்கா தீர்த்தம்மேல் தடங்கீழ்
வருநதி மலைமக ளுடனே
பன்னகா பரணன் தருமணக் கோலம்
முனிவரன் பரவிய தீர்த்தம்
துன்னுகல் யாண நாயகர் தம்கீழ்
சுயம்பிர காசநல் தீர்த்தம்,

*24. கன்னிமார் தீர்த்தம், 25. காசிப தீர்த்தம், 26. கங்கை வந்து குளித்த கங்காதேவி தீர்த்தம், 27. நிலைபெற்ற துர்க்காதேவி தீர்த்தம், 28. இமயமலையிலிருந்து கங்கையுடனும் இமவான் மகளுடனும் வந்து, பாம்பணிந்த சிவன் அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்ட, அகத்தியன் மகிழ்ந்து நீராடிய தீர்த்தம் — அகத்திய தீர்த்தம், 29. கலியாண நாயகர் கோயிலின் கீழ்ப்பக்கம் உள்ள சுயம்பிரகாச தீர்த்தம்,* 33

சக்கர தீர்த்தம் சாயம்பு தீர்த்தம்
தழைத்தமுன் பாபவி நாசம்
முக்களா வனத்தில் முளைத்தமா இலிங்கம்
உண்டிந்த மூர்த்திசந் நிதியில்
சுக்கில தீர்த்தம் வணிகன்செய் பாவம்
தொலைந்திட ஆக்குவ திறம்எண்
திக்கிலும் ஆடத் தீர்கிலா திந்தத்
தீர்த்தத்தில் தீர்ந்திடும் இயல்பால்,

*30. சக்கர தீர்த்தம், 31. சாயம்பு தீர்த்தம், 32. பெருகிய பழமையான பாப விநாச தீர்த்தம், 33. முக்களா வனத்தில் சுயம்புலிங்க சன்னதியில் சுக்கில தீர்த்தம், 34. எட்டுத் திக்கிலும் உள்ள*

*தீர்த்தங்களில் ஆடினும் தீர்க்க முடியாதவனின் பாவம் தீர்ப்பதற்காக* 34

பாவவி நாச தீர்த்தம்அவ் வாணி
பதம்பெறு தீர்த்தத்தின் வடபால்
மூவுல கோரும் படிந்திடு சாலா
தீர்த்தம்முக் கூடலாம் தீர்த்தம்
தேவர்கள் தேவன் நாவில்வாழ் தீர்த்தம்
திகழ்தரும் உரோமச தீர்த்தம்
தாவிலா விசுவ நாயகன் அங்கே
தழைத்திடும் சனகமா தீர்த்தம்,

*இறைவன் ஏற்படுத்திய பாவவிநாச தீர்த்தத்தின் வடக்கே உள்ளதான மூவுலகோரும் வந்து நீராடும் சாலா தீர்த்தம். 35. முக்கூடல் தீர்த்தம் 36. தேவர்கள் தேவன் நாவில் வாழ் தீர்த்தம், (மகாதேவப் பிரசாத தீர்த்தம்) 37. விளங்கும் உரோமச தீர்த்தம் 38. குற்றமில்லாத விசுவநாயகர் கோயிலில் பெருகியுள்ள சனகமகாராசன் தீர்த்தம்.* 35

பொருவிலாக் கங்கை பொங்கிய தீர்த்தம்
போகவ தீர்த்தத்தின் கீழ்பால்
வருதிரு மூல லிங்கம்உண் டிப்பால்
வளர்திரு மூலதீர்த் தத்தின்
அருகினில் தீப தீர்த்தத்தின் கீழ்பால்
அரும்புழு மாறிய தீர்த்தம்
மரகதம் மேவும் காசிப நாதர்
தீர்த்தமே வடகயி லேசர்,

*39. ஒப்பில்லாத கங்கை பொங்கிய தீர்த்தம் (கங்காப் பிரவாக தீர்த்தம்) 40. போகவ தீர்த்தம் 41. அதன்கிழக்கே திருமூல லிங்கேசர் கோயிலின் திருமூலதீர்த்தம் 42. அதன் அருகில் தீப தீர்த்தம் 43. அதற்குக் கிழக்கே உள்ள புழு மாறிய தீர்த்தம் 44. மரகத லிங்கமாகிய காசிபநாதர் கோயிலின் காசிப தீர்த்தம் 45. வடகயிலேசர் தீர்த்தம்.* 36

கண்ணுவ தீர்த்தம் கோமதி மேவும்
கண்ணுவ நாயகர் இப்பால்
எண்ணிய நல்கும் பூரண யாறு
இயன்றபா லாறுசிந் தாறு

தண்ணதி நாக நதிகலி யாறு
சாவியா றுடன்சர நதியே
மண்ணதி கோரை யாறுடன் மணிமுத்
தாறுவா ருணநதி யாக,

46. கண்ணுவ தீர்த்தம் — இது கோமதி உடனாய கண்ணுவ நாயகர் திருக்கோயில் தீர்த்தம் ஆகும். 47. நினைத்த வற்றைக் கொடுக்கும் பூரண ஆறு (பூர்ணா நதி — பூரணைநதி) 48. பாலாறு (பொருனையின் கிளை) 49. சிந்தாறு 50. குளிர்ந்த நதி யாகிய நாகநதி 51. கலியாறு 52 சாவியாறு 53. சரநதி 54. மண் ணாறு 55. கோரையாறு 56. மணிமுத்தாறு 57. வாருண நதி. 37

இந்நதி எல்லாம் தாம்பிர வேணிக்
கிணைஇலாச் சேடியர் இதன்கீழ்
மன்னுசக் கரமே வலஞ்சுழி மேல்பால்
கோடிநா யகர்அவண் வதியும்
சின்மய தீர்த்தம் ஆனந்த நாதர்
செப்பிடும் அங்ஙனம் வடபால்
தன்நிகர் ஆகும் மங்கல நாதர்
மங்கல தீர்த்தத்தின் சார்மே,

இந்த நதிகள் (47—57எண்ணுள்ள 11 நதிகள்) தாமிர வர்ணிக்கு ஒப்பில்லாத் தோழிகள் ஆவர். (தாமிரவர்ணியின் கிளைநதிகள் ஆகும்) வருணாநதிக்குக் கிழக்கே பொருனைநதி வலப்பக்கமாகச் சுழித்தோடுகிறது. அங்கே மேற்கே கோடி நாயகர் திருக்கோயில் உள்ளது. 58. கோடிநாயகர்கோயிலில் சின்மய தீர்த்தம் 59. ஆனந்த நாதர் என்பவர் எனக்குச் சொன்னபடி, சின்மய தீர்த்தத்தின் வடக்கே தனக்குத்தானே இணையாகிய மங்கல நாயகர் திருக்கோயில் உள்ளது. அங்கே மங்கல தீர்த்தம் உள்ளது. 38

எல்லை தென்பால் காசிஅதன் எல்லை தென்பால் கசமோட்சம்
சொல்லும் மூன்றீ சுரதீர்த்தம் மூன்றீ சுரர்தென் புத்தீசர்
வில்லி நாதர் இதன்கீழ்பால் விடைஆர் கும்ப முனிதீர்த்தம்
நல்ல முனிவோர் பணிதீர்த்தம் கடனா நதிசங் கமதீர்த்தம்,

60. மங்கல தீர்த்தத்தின் எல்லையில், தெற்கே காசி தீர்த்தம் 61. அதன் எல்லையில் தெற்கே கஜமோட்ச தீர்த்தம் 62. புகழ்மிகுந்த மூன்றீசுர தீர்த்தம் 63. மூன்றீசர் வல்லிநாதர் தென்புத்தீசர் சன்னதிகளுக்குக் கிழக்கே சிவனாரின் கும்பமுனி தீர்த்தம் 64. நல்ல முனிவர்கள் நீராடும் கடனா நதி சங்கம தீர்த்தம். 39

இதற்கு வடபால் சந்நிதியில் இந்திர மோட்ச தீர்த்தம்இவை
கதிக்க அழியா மயிலாடக் கடவு ளோர்க்கும் எண்பதுடன்
விதித்த நான்கு கிறுச்சனத்தின் பலனை நல்கும் வேதமுடன்
மதிக்கொம் புடைய கெசமுகனும் வானோர் கோவும்
அவண்வதியும்,

65. கடனாநதி சங்கம தீர்த்தத்தின் வடக்குச் சன்னதியில், இந்திர மோட்ச தீர்த்தம். இந்தத் தீர்த்தங்களில் குளித்தால், கடவுள்களுக்கும் பிரம்மா விதித்த எண்பத்து நான்கு கிறிச்சனப் பயன் கிடைக்கும். இத்தீர்த்தக்கரைகளில் வேதமும் மதிபோன்ற கொம்பும் உடைய விநாயகப்பெருமான் உள்ளார். தீர்த்தங்களில் நீருக்கு அதிபதியாகிய இந்திரன் உள்ளான். 40

## மேலும் அகத்தியர் நீராடிய தீர்த்தங்களும் வழிபட்ட மூர்த்தங்களும்

நாறும் பூநா யகர்அங்கண் நதியின் பாங்கர் ஆலயம்கொண்(டு)
ஈறில் செல்வம் அளித்தருளும் இந்தப் பதிதென் பால்காசி
மாறில் மந்தா கினிதீர்த்தம் மறையோன் கண்ட சோதனையால்
பேறு தரும்தண் டாதீர்த்தம் பின்னும் சித்த தீர்த்தம்அரோ,

இடமகன்ற பொருனைநதியின் பக்கத்தில் நாறும்பூநாதர் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ளார். முடிவில்லாத முத்திச்செல்வத்தை அளித்து அருள்செய்யும் இந்தப் பதி தட்சிணகாசி ஆகும். (இங்கு வந்த அகத்தியர் தொடர்ந்து தீர்த்த யாத்திரை தலயாத்திரை மேற்கொண்டு, பல தீர்த்தங்களில் நீராடிப் பல மூர்த்தங்களை வழிபட்டார். அவை வருமாறு.)

41ஆம் செய்யுளின் பின்னிரண்டடிகள் முதல் 57ஆம் செய்யுள் வரை உள்ள தீர்த்தங்களும் மூர்த்திகளும்:

1. (மாற்றமில்லாத) மந்தாகினி தீர்த்தம்
2. (பிரமன் தண்டசோதனையில் பேறு பெற்ற) தண்டா தீர்த்தம்
3. சித்த தீர்த்தம் 41

அதன்கீழ்ப் பரம தீர்த்தமுடன் ஞான தீர்த்தம் புறமதம்தீர்
நிதமாம் சைவ தீர்த்தம்இவை நெடியோன் தீர்த்தம் முதலாக
நதிஉத் தரவா கினிஎல்கை நாற்ப துடனை நதித்தீர்த்தம்
விதிநா யகர்க பாலீசர் கடுக்கை நாதர் வேதீசர்

4. (அதன் கிழக்கே) பரம தீர்த்தம்
5. ஞான தீர்த்தம்

1. விதிநாயகர் (பிரமன்)
2. கபாலீசர்

6. (புறமதம் தீர்ந்த) சைவதீர்த்தம்
7. (விஷ்ணு தீர்த்தம்) நெடியோன் தீர்த்தம்
8. (உத்திர வாகினி எல்லையில்) உடனா தீர்த்தம்

3. கடுக்கை நாதர் (உருத்திராட்ச நாதர்)
4. வேதீசர்

42

இடப தீர்த்தம் இடபேசர் பூவ ணேசர் புட்பவனம்
சுடரோன் தீர்த்தம் அருணேசர் சொல்லும் அதன்பால் எழுதீர்த்தம்
கடக தீர்த்தம் பூமிசார் அரிகை நாதர் கறைக்கண்டர்
வடபால் அரிஅர்ச் சனைநாதர் வன்னி ஈசர் வயித்தீசர்

10. இடப தீர்த்தம்
11. சூர்ய தீர்த்தம் (சுடரோன்தீர்த்தம்)
12. எழு தீர்த்தம் (பொங்குதீர்த்தம்)
13. கடக தீர்த்தம்

5. இடபேசர்
6. பூவணேசர்
7. புட்பவனம்
8. அருணேசர்
9. அரிகைநாதர்
10. கறைக்கண்டர்
11. மும்மூர்த்தத்தின் வடக்கே அரி அர்ச்சனை நாதர்
12. வன்னி ஈசர்
13. வைத்தீசர்

43

வடபால் சத்தீ சுரர்திரிபு ராந்த ரேசர் வயிரேசர்
குடபால் வளரும் மணிக்கிரீசர் ஆத்தி நாதர் கும்பேசர்
விடையார் தீர்த்தம் ஈரைந்தா மேவு கயிலை நாயகரே
தடம்ஆர் கின்ற சயிலேசர் தென்பால் சயில தீர்த்தம்அரோ

14. (சைலேசர் கோயிலின் தெற்கே) சைலதீர்த்தம்

14. வைத்தீசர் கோயிலுக்கு வடக்கே சக்தீஸ்வரர்
15. திரிபுராந்தரேசர்
16. வயிரேசர் (பைரவேசர்)
17. (மேற்கே உள்ள) மணிக்கிரீசர்
18. ஆத்திநாதர்
19. கும்பேசர்
20. (பத்துத் தீர்த்தங்கள் உள்ள கோயிலின்) கயிலை நாயகர்

*21. (குளங்கள் பொருந்திய ஊரின்) சைலேசர்* *44*

சோம நாதர் அத்தீர்த்தம் சுதின விதிபா தப்பிரியர்
தாம்மே வியதீர்த் தம்சகல பாவம் போக்கும் சத்திபுரி
வாமை தொழும்உ ரோமேசர் மேக நாதர் மதிநாதர்
கோம தீசர் கும்பீசர் கோட கேச ரத்தீர்த்தம்,

*15. சோமநாததீர்த்தம்*
*16. (சுதினவிதியுடைய) பாதப்பிரியர் தீர்த்தம்*
*17. கோடகேஸ்வரதீர்த்தம்*

*22. சோமநாதர்*
*23. சக்திபுரி அம்பிகை வணங்கும் உரோமேசர்*
*24. மேகநாதர்*
*25. மதிநாதர்*
*26. கோமதீசர்*
*27. கும்பேசர்* *45*

காமே வியதென் வில்வவனர் சவுந்த ரேசர் கடனாத
மாமே வியஇ ராமீசர் காளத் தீசர் மார்க்கண்டர்
சோம நாதர் சொக்கேசர் சோதி வனத்தில் சோதீசர்
பூமே வியவங் குண்டீசர் மேகநாதர் புவனேசர்,

*28. இன்பம் பொருந்திய வில்வவனர்*
*29. சவுந்தரேசர்*
*30. பெருமைபொருந்திய இராமேசர்*
*31. காளத்தீசர்*
*32. மார்க்கண்டீசர்*
*33. சோமநாதர்*
*34. சொக்கேசர்*
*35. சோதிவனத்தில் உள்ள சோமேசர்*
*36. பூக்கள் மேவிய மேகநாதர்*
*37. புவனேசர்* *46*

அப்பு லிங்கர் அமுதீசர் கயிலை நாதர் அகிலேசர்
செப்பு சஞ்சீ வினிதீர்த்தம் திருமூ லேசர் செகநாதர்
முப்பார் போற்றும் முனிநாதர் முகில்சேர் வேங்க டாசலரே
அப்பால் சாம ளாநதியந் தியசங் கமத்தில் மந்த்ரேசர்,

*18. சஞ்சீவினிதீர்த்தம்*
*19. சாமளாநதி*

*38. அப்புலிங்கர்*
*39. அமுதீசர்*
*40. கயிலைநாதர்*
*41. அகிலேசர்*
*42. திருமூலேசர்*

43. ஜகநாதர்

44. மூன்றுலகும் போற்றும் முனிநாதர்

45. மேகம் தங்கும் மலையின் வேங்கடாசலர்

46. அந்திய சங்கமத்தில் மந்திரேசர் 47

அக்கி னீசர் வடதளியார் அமலர்சிந்து பூந்துறையில்
முக்கண் உடையார் சத்தபுரி முனிவர் போற்றும் மூலநதி
மிக்க தீர்த்த மூலேசர் வேய்முத் தீசர் பாதாள
தக்க கங்கை தனில்என்பு தான்பூ ஆன தன்மையினால்,

47. அக்னீசர்

48. வடதளியார்

49. சிந்துபூந்துறையின் அமலர், முக்கண்ணுடையார்

19. சப்தபுரியில் முனிவர் போற்றிய மூலநதி

50. மூலேசர்

20. பாதாளகங்கையில் எலும்பு, பூஆன முத்திதீர்த்தம்

51. வேய்முத்தீசர் 48

முத்தி தீர்த்தம் கோடீசர் அகிலாண் டீசர் முருகேசர்
சத்தி தீர்த்தம் சத்தமுனி சடாயு தீர்த்தம் சடையுடையார்
அத்தர் நடனம் தருதீர்த்தம் அருண நாதர் அகத்தீசர்
நித்திய மான உருத்ரேசர் உருத்ர பந்த நெறிதீர்த்தம்,

21. முத்திதீர்த்தம்

22. சத்திதீர்த்தம்

23. சப்தமுனிதீர்த்தம்

24. சடாயுதீர்த்தம்

25. சிவநடனதீர்த்தம்

27. உருத்திரபந்தநெறிதீர்த்தம்

52. கோடீசர்

53. அகிலாண்டேசர்

54. முருகேசர்

55. அருணநாதர்

56. அகத்தீசர்

57. நித்யஉருத்திரேசர் 49

சித்தி தீர்த்தம் சத்ததலம் திரிபு ராந்த கேசுரரே
பத்தர் சூலை தீர்த்தருளும் பரம தீர்த்தம் பால்வண்ணர்
அத்தி முகவன் அருள்தீர்த்தம் அண்டா பரணர் அகத்தீசர்
சுத்த கங்கை படிதீர்த்தம் சொக்க நாதர் சோதீசர்,

*28. சித்தி தீர்த்தம்*

*29. பக்தர்களின் சூலைநோய் தீர்க்கும் பரமதீர்த்தம்*

*30. விநாயக தீர்த்தம்*

*31. சுத்தகங்கை குளித்த கங்காதீர்த்தம்*

*58. சப்ததல திரிபுராந்தகேஸ்வரர்*

*59. பால்வண்ணர்*

*60. அண்டங்களை ஆபரணமாகக் கொண்ட அகத்தீசர்*

*61. சொக்கநாதர்*

*62. சோதீசர்* *50*

கேசவ தீர்த்தம் கந்திரு தீர்த்தம்
கருட தீர்த்தம் கிளர்நந்தி
வாசவ தீர்த்தம் மங்கள நாதர்
வருண நாயகர் வழுதீசர்
பாசுருப் பகவன் பரவிய கயிலைப்
பரனுடன் காரி நாயகனே
ஆசிலா நதியில் அமரும்நா கீசர்
ஆனந்தர் வீர பாண்டீசர்,

*32. கேசவதீர்த்தம்*

*33. கந்தர்வதீர்த்தம்*

*34. கருடதீர்த்தம்*

*35. நந்தி தீர்த்தம்*

*36. வாசவன்தீர்த்தம்*

*63. மங்களநாதர்*

*64. வருணநாயகர்*

*65. வழுதீசர்*

*66. பாசுருப் பகவன் பரவிய கயிலைப்பரன்*

*67. காரிநாயகன்*

*68. குற்றமில்லாநதியில் அமர்ந்தநாகேசர்*

*69. ஆனந்தீசர்*

*70. வீரபாண்டீசர்* *51*

முந்தை முதலைக் கருள்தீர்த்தம்
மூன்றீ சுரமே முக்கூடல்
எந்தை கயிலைக் கிறைதீர்த்தம்
குசையார் வனத்தில் ஏறுடையார்
வந்த மூலர் சித்தேசர்
வழுதி நாதர் கயிலேசர்
உந்தி மீதில் வீரேசர்
உக்கி ரேசர் ருத்திரேசர்,

37. முதலைக்கு அருளியதீர்த்தம்
38. மூன்றீசுர தீர்த்தம்
39. முக்கூடல் தீர்த்தம்
40. கயிலாய நாதர்தீர்த்தம்

71. தர்ப்பவனேஸ்வரர்
72. மூலர்
73. சித்தீசர்
74. வழுதிநாதர்
75. கயிலேசர்
76. வீரேசர்
77. உக்கிரேசர்
78. ருத்திரேசர் 52

அதற்கப் பால்தென் பாண்டீசர்
சொக்க நாதர் அருள்தீர்த்தம்
உதிக்கும் உக்ர பாண்டீசர்
வரகு ணேசர் உமைதீர்த்தம்
நதித்தண் துறைசார் வைகுந்தை
நாதர் கயிலை நாயகரே
நிதிக்கோன் பரவும் அளகேசர்
நீலகண்டர் சிவதீர்த்தம்,

41. சொக்கநாத தீர்த்தம்
42. உமைதீர்த்தம்
43. சிவதீர்த்தம்

79. தென்பாண்டீசர்
80. உக்கிரபாண்டீசர்
81. வரகுணேசர்
82. நதியோரம் எழுந்தருளிய வைகுண்டநாதர்
83. கயிலை நாயகர்
84. குபேரன்வணங்கிய அளகேசர்
85. நீலகண்டர் 53

சங்கர தீர்த்தம் காந்தீசர் தரும தீர்த்தம் தருமேசர்
மங்கல மேனி ஆதீசர் வளரும் தீர்த்தம் பதினைந்தாம்
பொங்கு நவலிங் கப்பதிகள் புவன தீர்த்தம் புவனேசர்
பங்க யாச னன்தீர்த்தம் பரவு மனவத் தமர்நதியே,

44. சங்கரதீர்த்தம்
45. தருமதீர்த்தம்
46. ஆதீசதீர்த்தம்
47. புவனதீர்த்தம்
48. பங்கயாசனன் தீர்த்தம்(பிரமதீர்த்தம்)
50. மானசநதி

86. காந்தீசர்
87. தருமேசர்
88. மங்கலமேனி ஆதீசர்
89. நவலிங்கப்பதிகளின் 9 சிவமூர்த்திகள்
90. புவனேசர் 54

சத்த தீர்த்தம் கயிலேசர் தழங்கு கங்கை பொழிதீர்த்தம்
மத்தர் காசி நாயகரே அத்தி ரீசர் அகிலேசர்
மத்த யானை பூசித்த வார ணேசர் மதிநாதர்
நத்தார் தீர்த்தம் சுந்தரரே விசுவ நாதர் நாகீசர்,

| | |
|---|---|
| 51. சப்த தீர்த்தம் | 91. கயிலேசர் |
| 52. கங்கைபொழிதீர்த்தம் (கங்காவர்ஷிணி) | 92. காசிநாயகர் |
| 53. சங்குதீர்த்தம் | 93. அத்திரீசர் |
| | 94. அகிலேசர் |
| | 95. யானைபூசித்த வாரணேசர் |
| | 96. மதிநாதர் |
| | 97. சுந்தரேசர் |
| | 100. விசுவநாதர் |
| | 101. நாகீசர் |

55

பூமான் தீர்த்தம் சரசநதி புவனதீர்த்தம் புவனேசர்
கோமான் வாயு லிங்கேசர் குலசே கரர்கோ மளதீர்த்தம்
வாம னேசர் வன்னீசர் வருண தீர்த்தம் வருணேசர்
சோம லிங்கர் மதிதீர்த்தம் சுக்கி லேச ரத்தீர்த்தம்,

| | |
|---|---|
| 54 பூமான்தீர்த்தம் | 102. புவனேசர் |
| 55. சரசநிதி | 103. வாயுலிங்கம் |
| 56 புவனதீர்த்தம் | 104. குலசேகரர் |
| 57 கோமளதீர்த்தம் | 105. வாமனேசர் |
| 58 வருணதீர்த்தம் | 106. வன்னீசர் |
| 59 மதிதீர்த்தம் | 107. வருணேசர் |
| 60 சுக்கிலதீர்த்தம் | 108. சோமலிங்கர் |
| | 109. சுக்கிலேசர் |

56

நார சிங்க ரத்தீர்த்தம் நன்மை கொடுக்கும் நவைநீக்கும்
வாரி தீர்த்தம் சங்கமத்தில் வருண தீர்த்தம் வருணேசர்
சூர்சாய்த் திட்ட வடிவேலர் சுலவும் வதனா ரம்ப முதல்
ஆரோ டிதழி அணிந்தருளும் அமல தீர்த்தம் அளவிலவோர்

| | |
|---|---|
| 52. நரசிங்கத்தீர்த்தம் | 110. நரசிங்கேஸ்வரர் |
| 53. தீமைபோக்கி நலம் தரும்வாரிதீர்த்தம் | 111. வருணேசர் |
| 54. வருணதீர்த்தம் | |
| 55. அமலதீர்த்தம் (இதுசூரனைத் தடிந்த முருகனின் வேலலம்பியது; கொன்றை அணிந்தது) | |

57

## அகத்தியர் பொதிகை அடைதல்

இவைஎ லாம்தென் குறுமுனிவன் படிந்தே போற்றிஏறுயர்த்தோன்
சிவையோ டிருந்த தானங்கள் யாவும் பரவித் திரும்பிவரும்
புவனம் தனிலும் சேயுள்ள பூத நாதன் பதிபோற்றி
உவமை இல்லா மலயம்அதில் உற்றான் பதிமுக் கியம்உரைப்பாம்.

*மேலேகண்ட தீர்த்தங்களிலெல்லாம் குறுமுனிவராம் அகத்தியர் குளித்தார். 'சிவை' எனப்படும் அம்பிகையுடன் இடபக் கொடியுடைய சிவனை, எல்லாத் தலங்களிலும் சென்று வழி பட்டார். தலயாத்திரை முடித்துத் திரும்பி வரும்போதும், பூதநாதனாம் இறைவன் தலங்கள் பலவற்றில் வழிபாடு செய்தார். உவமை சொல்ல முடியாத பொதிகைமலைக்கு மீண்டும் வந்துசேர்ந்தார். இனிச் சிவத்தலங்களில் முக்கியமானவை எவை என்று, எண்ணிக்கையைச் சொல்கிறேன்.* 58

## முக்கியத்தலங்கள்

மூலம் ஏழும் முனிஏழும் மொய்த்த கயிலே சுரர்ஒன்பான்
சீல முனிவோர் பதிஏழோ டைந்து தேவேந் திரன்போற்றும்
நீல கண்டர் பதிஏழு நீடும் சுடர்கள் ஈரைந்தாம்
பாலர் போற்றல் பன்னிரண்டாம் பதிகள் அறுபான் ஒருநான்கே.

*மூலத்தலங்கள் (மூலட்டானம்) 7; சப்தரிஷித்தலங்கள் 7; கயிலாயத் தலங்கள் 9; முனிவர்களின் தலங்கள் (முனீஸ்வரங்கள்) 12; தேவேந்திரன் போற்றிய நீலகண்டனின் தலங்கள் (இந்திரே ஸ்வரம்) 7; சந்திர சூரிய ஸ்தலங்கள் 10; திக்பாலர் (பாலேஸ் வரங்கள்) 12 (7+7+9 ; 12+7+10+12); ஆக மொத்தம் 64.*

*வாதராயணர் தம் வாதராயண சூத்திரத்தில் 1008 ஈஸ்வரங்கள் (சிவத்தலங்கள்) கூறினார். வாதராயணரின் சீடர் சாமந்த ரிஷி. இவரின் சீடர், தலபுராணங்கள் சொன்ன சூதமா முனிவர்.* 59

வடபால் கங்கை தென்பானல் தாம்பிர வேணி மற்றும்உள
தடமா நதிகள் அவைகூடும் சலதி தீர்த்தம் தனக்கொப்பாய்
இடுமா தீர்த்தம் வேறில்லை உலகில் என்றே இசைத்துப்பின்
கடனா நதிச்சங் கமதீர்த்தம் கருதப் படியக் காசினியில்,

*வடக்கே உள்ள கங்கை, தெற்கே உள்ள பொருனை இவற்றிற்கு இடைப்பட்ட பெரிய நதிகள் எல்லாம் ஒன்றாகச் சங்கமிக்கும் சலதி தீர்த்தத்திற்கு ஒப்பிடுமாறு உலகில் வேறொரு தீர்த்தமில்லை என்று, புகழ்வலிமை கொண்ட 'கடனாநதி சங்கம தீர்த்தத்தை' வழிபட்டு நீராடினால், வேறு மகத்துவம் உலகில் இதுபோல் ஏது?* 60

## பொருனையின் பெருமை

வேறொன் றில்லை இதுபோலும் விளம்பில் மகத்வம் மேலான
பேறு கொடுக்கும் பொருனைநதி வந்து பலனைத் தந்திடுமால்
கூறும் அடியார் மேனியினில் குறைகள் போக்கிப் புண்ணியமாம்
நீறு புனைந்தோர் முடிக்கணியாம் தீர்த்த மகிமை நிகழ்த்துவாம்.

*பொருனைநதி பேறுகளையும் பயன்களையும் கொடுக்கும். அடியார்களின் உடம்பில் உள்ள பிணி முதலாகிய குறைகளைப் போக்கும். புண்ணியம் உண்டாக்கும். திருநீறணிந்த சிவனின் முடிக்கு அணியான கங்கை இதுவேயாகும்.* 61

## பொருனையின் இருபத்தாறு பெயர்கள்

இறைஞ்சியே படிவோர் இருவினைப் பவமாம்
கடிலினைக் கடப்பவர்க் கிந்த
அறந்தரு நதியே ஓடமாம் மற்ற
அவனிவாழ் தீர்த்தமாம் படைக்குச்
சிறந்திடும் தலைமை பெற்றிடும் பொருனைத்
தீர்த்தத்தின் இயற்பெயர் செப்ப
நிறந்தரு தாம்ப்ர பன்னிமா லேயின்
இடகலை உருத்திர கலையே,

*நல்வினை தீவினைகளால் ஏற்படும் பிறவியாகிய கடலைக் கடக்க விரும்புபவர்கள், இந்நதியை வழிபட்டு நீராடுவார்கள். அவர்களுக்குத் தருமத்தைத் தரும் நதியே பிறவிக்கடல் கடக்க உதவும் ஓடமாகும். தீர்த்தங்கள் யாவற்றையும் படைகள் என்றால், பொருனையே தளபதியாகும். பொருனைநதியின் இயற்பெயர் 1. தாம்பிரபர்ணி என்பது. இது நிறத்தால் பெற்ற பெயர். 2. மாலேயி 3. இடகலை 4. உருத்திரகலை* 62

அகன்மிசை தன்மாத் திரைமருத் துவதி
யாம்பிர பதிமணி மாதர்ப்
பகவதி அமிர்த ரூபிஆ னந்தி
பராபரை மங்களா லையையே
திகழ்மகா தயையே முத்திமுத் திரையே
திரிபத காந்மிகை பொருனை
தகைமைசேர் மாலா ரூபினி பிரம
நாதையே தாபநா சினியே,

*5. தன்மாத்திரை 6 மருத்துவதி 7 பிரபதை 8 மணி மாதர் 9. பகவதி 10 அமிர்தம் 11 ரூபி 12 ஆனந்தி 13 பராபரை 14 மங்களாலயை 15 மகாதயை 16 முத்திமுத்திரை 17 திரிபதை 18 கான்மிகை 19 பொருனை 29 மாலா 21 ரூபினி 22 பிரம்மநாதை 23 தாபநாசினி* 63

திரைதரு கருணா சினிநரா யணியே
திவ்வியப் பொருந்தம்என் றின்ன
உரைதரும் இருபத் தாறெனத் தவத்தால்
உமையவள் கணவனுக்குக் குதவும்
அருமைய வான தாம்பிர நிறத்த
அரவிந்த மாலைஎன் றுரைக்கும்
பொருனையின் நாமம் புகன்றிட வல்லார்
புண்ணியன் பதம்பொருந் துவரே.

*24 கருணாசினி 25 நாராயணி 26* திவ்யப் பொருந்தம் — (பொருந்தம்—நீர் ) திவ்யதீர்த்தம் என்று புகழ்மிக்க இருபத்தாறு பெயர்களைக்கொண்ட இந்நதியின் திருப்பெயர்களைச் சொல்ல வல்லவர்கள், இறைவனின் திருவடிகளை அடைவர். தன் தவத்தால் கணவன் தரத்தக்க முத்துமாலையை இறைவனிடம் பெற்ற உமையம்மை, மனைவி கணவனுக்குச் சூட்டத்தக்க தாமரை மாலையை இறைவனுக்குச் சூட்டினாள். அது தாம்பிர உலோக நிறமுள்ளது. அந்த நிறமுள்ள அந்த மாலையே இந்த நதியாகும். *64*

## வருணனுக்கு இறைவன் கூறிய தீர்த்த வரலாறு

வருணனும் ஒருகால் கயிலையை அடைந்து,
மாதொரு பாகனை வாழ்த்தித்
தருணநா யகனே பூதலம் அதனில்,
சகலபா வங்களும் போக்கிக்
கருதிய நல்கும் தீர்த்தஉத் தமங்கள்
இவைஎனக் கருணைசெய் தடியேற்(கு)
அருள்தர வேண்டும் என்றலும் எங்கோன்
ஆழிநா யகற்கிவை புகல்வான்.

வருணபகவான் கயிலாயத்துக்குச் சென்று, உமையொரு பாகனை வணங்கி, 'முத்தி நாயகனே! பூவுலகில் சகல பாவங்களையும் போக்கி, நினைத்தவற்றை வரமாக வழங்கும் உத்தம தீர்த்தங்கள் எவையெவை என்று, அடியேனுக்கு அருள்கூர்ந்து சொல்லவேண்டும்' என்று கேட்டார். எங்கள் தலைவராகிய இறைவன், கடல்களுக்குத் தலைவனாகிய வருணனுக்கு விளக்கம் கூறினார். *65*

கோமகன் வேண்ட நமதுயர் வேணிக்
கொண்டலை அளித்தனம் அன்றிச்
சோமன்வங் கிசத்தில் வருபகீ ரதன்செய்
சொலற்கருந் தவத்தினால் சூடும்

தேமொழி மந்தா கினிதனை அளித்தோம்
தென்பொதி யாசலம் செல்லும்
மாமுனி வேண்டப் பின்னும்அந் நீரை
மாலிகை எனவழுங் கினமால்.

'இந்திரன் வேண்டிக்கொண்டதால் நம் தலை உச்சியிலிருந்து கங்கைநீர் தோய்ந்த மேகங்களைக் கொடுத்தோம். (இந்திரன் மேகங்களின் அதிபதி). சோமனின் வம்சத்தில் வந்த பகீரதன், சொல்ல முடியாத கடுமையான தவம் செய்தான். அதனால் நாம் தலையில் சூடும் கங்கையை (மந்தாகினியை) க் கொடுத்தோம். மகாமுனிவராகிய அகத்தியர் வேண்டியதால், தாமரைமாலையாகக் கங்கையைக் கொடுத்தோம். 66

சிரகநீர் அதனை வரநதி யாகத்
தெய்வலோ கத்தினுக் கிறையோன்
விரைமலர் வனத்தில் பெருகுதல் வேண்ட,
வேழமா முகத்தவன் காக
உருவதாய்ச் சென்று கரகநீர் கவிழ்த்தான்;
உதுவரும் காவிரித் தென்பால்
பொருனையாய் முனிவன் தருகமண் டலநீர்
போந்ததென் றுரைத்தனன் பின்னும்,

தெய்வ உலகிற்கு அரசனாகிய இந்திரன், அகத்தியரின் கமண்டலநீர் வரநதியாகப் பூவுலகில் பெருகவேண்டும் என யானைமுகக் கடவுளை வேண்டினார். விநாயகர் காகமாக வடிவெடுத்துச் சென்று, அகத்தியரின் கரகத்தைக் (கமண்டலத்தைக்) கவிழ்த்தார். அது காவிரியாகப் பெருக்கெடுத்தது. தெற்கில், பொருனையாகக் கமண்டலநீர் (தாமரை) வந்தது. 67

இம்பருள் அதிகம் பொருனையே எமது
வேணியில் இழிந்தவை அதனால்,
தம்பிரான் வேணித் தீர்த்தமே தாம்பிர
வேணியாய்ச் சாற்றுவர் சாற்றல்
அம்புவி தனிலே இடவகை செய்யுள்
வழியினால் அமைப்பதும் அன்றிச்
செம்புநேர் ஒக்கும் செயலினால் பின்னும்
செப்புவர் என்றுசெப் பினனால்.

தம்பிரான் வேணித்தீர்த்தம் = தாம்பிரவேணி.
பெயர்க்காரணம்

இந்த உலகில் (மேகமான நம் திருமுடி நீரைக் காட்டிலும், பகீரதனுக்குத் தந்த கங்கையைக் காட்டிலும், அகத்தியன் கமண்டலத்திற்குத் தந்து, அது பெருகிய காவிரியைக் காட்டிலும்) எம் தலையிலிருந்து அதிகமாக அளிக்கப்பட்ட நீர், பொருனை

நதி நீரே ஆகும். ஆகையால்தான் அதனைத் தம்பிரான் (சிவன்) வேணித் (தலைத்) தீர்த்தம் என்பர். அப்பெயரைத்தான் தாம்பிரவேணி என்று சொல்கிறார்கள். உலகில் (தென்னாட்டில்) பல தலங்களுக்கும் செலுமிது, வயல்களை விளைவித்து, மக்கள் வாழ வழி அமைப்பது மட்டுமின்றி, செம்பு என்னும் உலோகத்தை ஒத்திருக்கும் செயலாலும் தாமிரவேணி என்று சொல்கிறார்கள்' என்று, இறைவன் இந்திரனுக்கு விளக்கினார். *68*

வணங்கியே கேட்ட வருணனும் இசைந்து,
மாமுனிக் கரகத்தால் வந்த
அணங்கெனும் பொருனை அன்னையை வேண்டி,
ஆடியே யாகம்ஒன் றியற்றிக்
குணம்குறி கடந்த பூவணே சுரன்தன்
குரைகழல் வணங்கியே வேண்டும்
இணங்கிய வரமும் பெற்றனன் புட்ப
வனத்திடை எய்திஅங் கிருந்தான்.

இறைவனை வணங்கி இச்செய்திகளைக் கேட்டறிந்த வருணன், அகத்திய முனிவரின் கரகத்திலிருந்து (கமண்டலத்திலிருந்து) வந்த தெய்வமாகிய பொருனைஅன்னையை வணங்கி, வேண்டி, நீராடி, பொருனைக்கரையில் ஒரு வேள்வி செய்தான். குணமும் குறியும் கடந்த பூவணேசுவரரின் இணக்கமான திருவடிகளை வணங்கி வரம்பெற்றான்; புட்ப வனத்திற்குச் சென்று தங்கினான். *69*

## நீராடும் பயன்

பூறுவம் சென்ற வாகினி ஆடும்
புண்ணியம் தனில்பதின் மடங்காம்;
கூறும்உத் தரவா கினிதனில் ஆடக்
கூடிய நதிஇரு மடங்காம்;
தேறுவோர்க் களிக்கும் முத்தியை நல்கும்
தேன்அலர் கொன்றையான் திருமுன்,
மாறிலா நதியாய் இருக்கும்அத் தானம்
படிந்திட வரும்பலன் அனந்தம்.

நதி பூருவவாகினியாக (கிழக்கு நோக்கிச் செல்லும் நதியாக) இருந்தால் (இதற்கு நதம் என்று பெயர்) — பூருவ வாகினியில் நீராடினால், பதின்மடங்கு பயன் கிடைக்கும். நதி உத்திரவாகினியாக ( வடக்கு நோக்கிச் செல்லும் நதியாக) இருந்தால், அதில் குளித்தால் அதைவிடக் கூடுதலாக இரண்டு மடங்கு (முப்பது மடங்கு) பலன் அதிகம். முற்றியவர்களுக்குக் கிடைக்கும் முத்தி நிலை பொருனை பூருவ வாகினியாக, உத்திர வாகினியாகச்

செல்லும் பகுதிகளில் நீராடுபவர்களுக்குக் கிடைக்கும். தேன்சிந்தும் கொன்றைமலர் மாலையை அணிந்த சிவனின் திருமுன்னிலையில் மாற்றமில்லா நதியாக இருக்கும் இடத்தில் குளித்தால், எண்ணற்ற பயன்களை அடையலாம். 70

பொருனைநீர் தன்னால் விளைபொருள் புசிக்கக்
கிடைக்குனர் யாவரே எனினும்,
மருவுவர் பொருனைப் பதிதனில் இந்நீர்
மன்னியே புசித்திடப் பெற்றோர்,
திருமிகப் பெறுவர் குடத்தினில் எடுத்துச்
சேண்வரு டங்கள்சென் றிடினும்,
விரைதரும் குறையா மேன்மையும் உளதாம்
மிகுவெள்ளம் பெருகிய காலம்,

பொருனைநதி நீரினால் விளைந்த விளைபொருட்களை உண்ணும் வாய்ப்புக் கிடைக்கப்பெற்றவர் யாரானாலும், பொருனை நதிக்கரையூர் ஒன்றிற்கு வந்து தங்கி, இதன் நீரை உண்ணுகின்ற வாய்ப்புக் கிடைக்கப் பெற்றவர் யாரானாலும் அளவிலாச் செல்வங்கள் அடைவார்கள். பொருனைநீரைக் குடத்தில் எடுத்துச்சென்று வைத்துக்கொண்டால், மிகப்பல ஆண்டுகள் கழிந்தபிறகும் அந்தநீர் மணமாக இருக்கும்; வற்றாது. மேலும், மேன்மையாகவே இருக்கும். 71

பூசனை இயற்றப் புண்ணியம் அனந்தம்
பொங்கிய தானஇந் நீரைப்
பாசனத் தெடுத்து விரதம்அ தாகிப்
பரன்உறை மிக்கநல் பதிகள்
ஈசனுக் கியற்ற எண்ணிலாப் பலனாம்
எந்தத்தீர்த் தங்களும் தங்கள்
மாசுகள் தீர மாசியில் ஆடும்
வந்தியும் மகப்பெறும் அன்றே.

பொருனையில் வெள்ளம் பெருக்கெடுத்தோடும்போது இந்த நதிக்கு (மலர்கள் தூவி, விளக்கேற்றி வணங்கிப்) பூசித்தால், அளவற்ற புண்ணியம் கிடைக்கும். பாசனம் எனப்படும் மண் கலத்தில் (மண்குடத்தில்) எடுத்து, விரதத்துடன் சிவத்தலங் களுக்கு எடுத்துச்சென்று, சிவனுக்கு அபிஷேகம் செய்தால், எண்ணிக்கை இல்லாப் பயன்கள் கிடைக்கும். புனித தீர்த்தங் களில் மக்கள் தங்கள் பாவங்களைக் கரைக்கிறார்கள். தன்மேல் கரைக்கப்பட்ட பாவங்களை நீக்கிக்கொள்ள அந்தப் புனித தீர்த்தங்கள் மாசி மாதத்தில் பொருனையில் வந்து நீராடும். மாசி மாதத்தில் (மகத்தில்) பொருனையில் நீராடினால், மலடிக்கும் பிள்ளை பிறக்கும். 72

தரணியில் தீர்ந்தோர் பவத்தைஆ டாது
தண்ணதி கடந்தவர் களுக்கும்
வருபுனல் இதனை ஆடிடார் மறந்தார்
வழிபடார் நிந்தனை வசனம்
உரைசெய்வோர் உறுவோர் உத்தம நதியில்
உமிழ்பவர் உழையினில் மலநீர்
விரவினர் இவர்கள் வெந்நர குறுவார்
என்றுதான் விளம்புவ வேதம்.

பொருனை ஓடும் நதிக்கரை ஊர் ஒன்றுக்கு வந்து, பொருனையாகிய இந்தக் குளிர்ந்த நதியைப் புறக்கணித்துச் சென்றவர்களுக்கும், இதில் வரும் நீரில் குளிக்காது சென்றவர்கட்கும், குளிக்க நினைத்து மறந்து சென்றவர்கட்கும், பொருனையை வணங்காதவர்களுக்கும், பொருனைநதியைப் பழித்தும் இழித்தும் வசனம் பேசுபவர்களுக்கும், இத்தகையவர்களைச் சார்ந்தவர்களுக்கும், இந்த உத்தமமான நதியில் எச்சில் உமிழ்பவர்களுக்கும், இந்நதிக்கரையில் மலம், சிறுநீர் கழிப்பவர்களுக்கும் கொடுமையான நரகம் கிடைக்கும். வேதம் (தீர்த்த விசேடம் சொல்லும் அருள்நூல்கள்) இப்படிக் கூறுகின்றன. 73

தாம்பிர வேணி தன்னைச் சந்திக்கத் துதிக்கத் தானம்
ஆம்பரி வுடனே செய்ய அருகினில் அன்னம் சொன்னம்
காம்பன தோளி பங்கன் பூசனை கருதிச் செய்ய,
வாம்பரி மகத்தின் பேறாம் வருபலன் அனந்தம் ஆமால்.

தாம்பிர வேணியைச் சந்திக்க, வணங்க, மிக்க பரிவுடன் இந்நதிக்கரையில் தானங்கள் செய்ய, அருகில் உள்ள ஊர்களில் இருந்து அன்னதானம், சொர்ண (தங்கம் அல்லது பணம்) தானம் செய்ய, அஸ்வமேத யாகம் செய்வதால் வரும் பலனைக் காட்டிலும் எண்ணற்ற பலன்கள் கிடைக்கும். 74

இவ்வகைத் தாய வேணி மகத்துவம் இயம்பக் கேட்கப்
பவ்விய முடன்சிந் திக்க எழுதிடப் படிக்கப் பெற்றோர்,
அவ்விய வினையின் நீங்கி அரும்பெறல் செல்வம் பெற்றுத்
தெவ்வினைக் கடந்தின் பம்சேர் சிவன்அடி நீழல் சேர்வார்.

இப்படியாகத் தாம்பிரவர்ணியின் சிறப்புகளைச் சொல்பவர்கள், கேட்பவர்கள், பவ்யமாகச் சிந்திப்பவர்கள், எழுதுபவர்கள், படிப்பவர்கள் ஆகிய அனைவரும் தீவினைகளைக் கடந்து, பெறுதற்கரிய செல்வம்பெற்று, பகையை வெற்றிகொண்டு, இன்பமுடன் சிவபெருமான் திருவடிநிழலை அடைவார்கள். 75

ஆகத் திருவிருத்தம் – 1473

# 2. ஆத்திவனப் படலம்

## விநாயகர் துதி

பார்த்திவர்போற் றிய,வீர பாண்டி நாதர்
பழமறைநா யகர்பதிசேர் மணிக்கி ரீபர்
சேத்திரநா யகர்சிறந்த தேவி பாகர்,
திங்கள்முடி யார்கதையைச் செப்ப வேண்டிக்
காத்திரம்சேர் ஐங்கரத்து நால்வாய் முக்கண்
களபமணி இருகோட்டுஒர் வதனம் காட்டி,
ஆத்திஅதாய் ஆதாரப் பொருளைக் காட்டும்
ஆத்திவிநா யகர்பாதம் அகத்துள் வைப்பாம்.

*வீரபாண்டி நாயகர், பழமறை (வேத) நாயகர், மணிக்கிரீபர், க்ஷேத்ரநாயகர், தேவிபாகர் என்ற திருநாமங்களைக் கொண்டு, ஆத்திவனத்தில் திங்களை முடியில் அணிந்து எழுந்தருளிய பெருமானின் திருவிளையாடல்களைச் சொல்வதற்கு, கனமான ஐந்து கரங்களையும் தொங்கும் வாயையும், மூன்று கண்களையும், சந்தனம் பூசிய இரண்டு கொம்புகளையும், ஒப்பற்ற திருமுகத்தைக் காட்டிச் செல்வமாக (ஆத்தி — ஆஸ்தி) விளங்கி, வாழ்வாதாரப் பொருளை நாம் துய்க்கக் காட்டி அளிக்கின்ற ஆத்தி மரத்தடியில் அமர்ந்த விநாயகப்பெருமானின் திருவடிகளை மனத்தில் பதித்து வைப்போமாக.* 1

## கயிலாய நாயகர் துதி

ஐவகைய தொழில்இயற்றி, அந்தந்தத் தொழில்தோறும்
அவையாய் நின்று
செய்வகையும் செய்வானும் தினகரனும் சந்திரனும்
தேசம் ஆன
வையகம், நீர், தீ, காற்று, வானம், இய மானன், இரு
நான்காய், ஒன்றாய்க்
கையில், அப யம்புனைந்த கயிலாய நாயகன், தாள்
கருத்துள் வைப்பாம்.

ஆக்குதல், அழித்தல், காத்தல், மறைத்தல், அருளுதல் என்ற ஐந்து வகையான தொழில்களை மேற்கொண்டு, அத்தொழில் களைச் செய்கின்ற பிரம்மாவாகவும், சிவனாகவும், விஷ்ணுவாக வும், மகேஸ்வரனாகவும், சதாசிவராகவும் விளங்கி, செயல் வகை களாகவும், தாமே செய்பவராகவும் அமைந்து, சூரிய மண்டல சந்திர மண்டலங்கள் ஆகி, மண், நீர், தீ, காற்று, வானம் எனப் பஞ்சபூதங்கள் ஆகி, எட்டுக் கைகளுடன், அதில் ஒன்றான அபய(வரம் கொடுக்கும்) கையுடன் விளங்கும் கயிலாய நாயகரின் திருவடிகளைக் கருத்தில் பதிப்போமாக. 2

## அரியநாயகி துதி

பையரவரம் பரித்தருளும் பாரெல்லாம் பயந்தகொடி
பரிவாய் உன்னி,
நையுமனத் திருத்தொண்டர் நளினஉளக் கோயில்கொள்
நாத ரூபி
உய்யும்வகை எனக்கருளி உதவிபுரிந்துஆண்ட திரு
உமையாள் பாண்டி
வையமிதில் வளர்வதன மதிஅரிய நாயகிதாள்
வணங்கி உய்வாம்.

படமெடுக்கும் பாம்பாகிய ஆதிசேடனின் தலைமேல் உள்ள உலகத்தை ஈன்ற கொடி போன்றவள்; பரிவுடன் நினைத்து உருகும் திருத்தொண்டர்களின் தாமரை போன்ற உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டுள்ள நாத வடிவமானவள்; கடைத் தேறும் மார்க்கத்தை எனக்குக் கொடுத்து உதவி செய்து ஆட் கொண்ட உமையவள்; பாண்டிய நாட்டில் பூரணசந்திர முகத்து டன் அருள்பாலிக்கும் அரியநாயகி ஆவாள். அப்பெருமாட்டி யின் திருவடிகளை வணங்கி உய்தி பெறுவோமாக. 3

ஆம்பிர வனத்தின் பாங்குயர் வனத்தில்
ஆத்திசேர் நாயகன் தனக்குத்
தாம்பரி வியற்றும் தோழமை புரிவோன்
சந்ததி போற்றிய தலைவன்
காம்பன தோளி கவுரியோ டுறையும்
கங்கைசேர் காரணன் பாண்டி
வேம்பன தாராற் கருளிய கயிலை
வேதியன் காதையை விரிப்பாம்.

ஆம்பிர (புளிய) வனத்தின் பக்கத்தில் ஆத்திவனத்தின் நாயகனாகிய சிவனுக்குப் பரிவுடன் தோழமையுள்ளவன் குபேரன். அவனின் சந்ததியினனாகிய — மகனாகிய மணிக்

கிரீபன் போற்றிய பெருமானும், மூங்கிலைப் போன்ற தோள்களைக்கொண்ட கவுரியுடன் உறைபவரும், கங்கையைத் தலையில் கொண்டவரும், மூலமுதற்காரணரும், வேப்ப மாலையை அணிந்த பாண்டிய மன்னருக்கு அருள் செய்தவருமாகிய ஆத்திவனக் கயிலைநாயகர் கதையை இனிச் சொல்வோம். 4

அருந்தவர் கேட்பச் சூதமா முனிவன்
அருளிய தீர்த்தவை பவத்தின்
பரந்தசேத் திரத்தின் மகிமையில் ஒன்பான்
பதியில்இப் பதிவளம் கேட்க,
விருந்தென வந்த வீரசே னற்கு
விளம்பினான் மிகுதவம் ஓங்கு
மருந்தென வந்த சங்கமா யோகி
மனம்உறக் கற்றதை மகிழ்ந்தே.

சூத முனிவர், துறவிகள் கேட்பதற்காகத் தீர்த்தங்களின் சிறப்பையும், க்ஷேத்திரங்களின் மகிமைகளையும் சொன்னார். (தாம்பிரவன்னிப் படலம்) அதில் ஒன்பது கயிலைப் பதிகள் எனக் குறிப்பிட்டார். (தாம்பிர வன்னிப் படலம். பாட்டு 59) அந்த ஒன்பதில் இந்தத் தலமும் ஒன்றாகும். கயிலேஸ்வரங்கள் ஒன்பதில் ஒன்றான இத்தலப் பெருமையைப் புதிதாக வீரசேனருக்கு, தாம் உயர்ந்த மருந்தாகக் கற்ற செய்திகளைச் சங்கமாயோகி மகிழ்ச்சியுடன் சொன்னார். 5

முன்ஒரு யுகத்தில் மறைகள்பூ சித்த
முன்னவன் கோயில்கொண் டருளும்
பன்மலர் ஆத்தி வனத்திடை உவந்த
பழமறை நாயகன் பரையோ(டு)
இன்னிலம் மகிழ இருக்கும்நாள் தனில்இவ்
இறைவனைத் தோழனாம் இயக்கர்
மன்னவன் பயந்த மணிக்கிரீ பன்தான்
வழிபடு மகிமையை வகுப்பாம்.

முன்பொரு காலத்தில் வேதங்கள், இறைவன் கோயில் கொண்டுள்ள மலர்களின் அழகு மிகுந்த ஆத்திவனத்திற்கு வந்தன. வேதநாயகன் பரையுடன் (உமையுடன்) இருந்த கோலத்தைப் பூசித்தன; இறைவனின் தோழனாகிய குபேர வேந்தனுக்குப் பிறந்த மணிக்கிரீபன் இங்கு வந்து பூசித்தான். அந்த மகிமையை இப்பொழுது சொல்கிறேன். 6

## மணிக்கிரீபன் சோலைக்கு வருதல்

சாபன்னி மனுகா லத்தில் தழைத்தபத் ராத்ரி என்னும்
தூபம்நீள் அகில்இட் டோங்கும் சுந்தர வரையின் பாங்கர்
நீபம்நீள் கின்ற பத்ரா டவிஎனும் நிகழ்ந்த காவில்
பூபதி அளகை வாழும் புரவலன் ஈன்ற மைந்தன்.

சாபன்னி என்னும் அரசனின் காலத்தில், தூபமாக நீண்ட அகில் மரங்கள் தழைத்தோங்கிய அழகான பத்ராத்ரி மலையின் பக்கத்தில், வெண்கடம்பு மரங்கள் நிறைந்த பத்ராடவி என்னும் பெயரில் ஒரு காடு இருந்தது. அந்தக் காட்டை ஒட்டிச் சண்பகம் நிறைந்த ஒரு சோலை இருந்தது. 7

சண்பகம் நிறைந்த சோலை ஆடிடச் சார்ந்த போது,
விண்புகு கோட்டுச் சாதி வேங்கைவேய் விரையார் புன்னை
பண்படும் அளிகள் பாடும் பனசம்மந் தாரம் கோங்கம்
நண்பகற் பிரபை தோன்றா நலம்தரு கானந் தன்னில்,

அளகாபுரியின் தலைவனாகிய குபேரனின் மகன் அங்கே ஆடிட — உலாவ வந்தான். விண்ணை முட்டும் மரவர்க்கங்கள், வேங்கை, மூங்கில், வாசனையான சுரபுன்னை, பாடுவதில் வல்ல வண்டுகள் ஒலிக்கும் பலா, மந்தாரம், கோங்கம் ஆகிய மரங்களின் செறிவால் அங்கே பட்டப்பகலிலும் சூரிய ஒளி தோன்றாது. 8

சோகமே அகற்ற லால்அ சோகம்என் றொருபேர் சாற்றும்
மாகம்ஆர் தருவு மற்று மதமயல் அடங்கா வண்ணம்
போகம்மே லிட்ட போன்ற புளகம்பூந் தளிரே ஆன
மேகம்ஆர் சோலை தங்கு வளங்களை வியந்தான் அங்ஙன்,

சோகத்தை அகற்றுவதால் (அ + சோகம்) அசோகம் என்று பேர்பெற்ற விண்முட்டும் மரமும், பூந்தளிர் மிக்க புளகமரமும் இடைவிடாது தழுவிக்கொண்டே இருந்த காட்சி, காமமதத்தின் மையல் அடங்காமல் போகம் மேலிட்டது போல அமைந்தது. மேகம் தங்கும் சோலையில் இவ்வளங்களை மணிக்கிரீபன் இரசித்துப்பார்த்தான். 9

கருப்புவில் வளைத்துக் காத லாருடன் பொருதல் காட்டும்
சுருப்புநாண் பூட்டி முல்லைச் சூதப்பூ மலர்அ சோகோ(டு)
அருப்புறு வனசம் நீலம் ஐவகைப் பாணம் மேவி,
மருப்புறு கைதை வாளால் வீசிய மதனே போலும்.

அச்சோலையே மன்மதனாக விளங்கியது. கரும்புகள் வளர்ந்து வளைந்து மன்மத வில்லாகக் காட்சி தந்தன. அங்கே வண்டுகள் மொய்த்து நாணாகக் காட்சி தந்தன. முல்லை,

மாம்பூ, அசோகம், அழகுத்தாமரை, நீலம் ஆகிய மன் மத பாணங்கள் ஐந்தும் அங்கு மலர்ந்திருந்தன. காதலருடன் காமப் போர் செய்ய அனைத்தும் அங்கிருந்தன. கிளைகள் உள்ள தாழைகளில், தாழம்பூப் பூத்து, மன்மத வாளாகக் காட்சி தந்தது. 10

காவெலாம் வசந்தம் எய்தக் கார்படு காலத் துற்ற
மேவிய மதர்ப்பி னோடு விதிர்ப்பெலாம் அகன்று வெம்மை
பாவிய காலம் தன்னில் பாதலம் முதலாய் உள்ளே
தாவில்எவ் வுயிர்க்கும் கோடை தழல்கண்ட மெழுகே என்ன,

குற்றமில்லாத எல்லா உலக ஜீவராசிகளும் கோடையினால் நெருப்பைக்கண்ட மெழுகைப்போல உருகிக் கொண்டிருந்தன. கார்காலத்தின் மதமதப்பு, நீர்த்துளிச் சிதறல் முதலியன நீங்கி, தரைவழியான சூட்டால் அச்சோலையில் வெம்மை பரவி வசந்தம் வந்தது. 11

வசந்தமும் காவில் எய்தி மாதர்கள் அடைப்பை தாங்க,
பசந்தபூம் பந்தர் நாப்பண் பண்ணயத் திசைப்ப ஓர்ந்தே,
இசைந்தவில் மதனும் போதா தெழில்இவன் என்ன வாய்ந்த
நிசம்தவ றாத தோழன் நிதிமைந்தன் நிலவும் ஏல்வை,

இறைவனிடம் சத்தியம் தவறாத தோழனாக விளங்கும் குபேரனின் மகன், மன்மதனைவிடப் பேரெழில் படைத்தவன். அவன் வசந்தம் பொருந்திய சோலையில் பச்சைப் பூப்பந்தலின் கீழே அமர்ந்து இசையின்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான். பெண்கள், 'அடைப்பை' (வெற்றிலை, பாக்கு, மணப்பொருள் அடங்கிய பை) ஏந்தி இருந்தார்கள். 12

## லீலாவதி, சித்திரலேகை சோலைக்கு வருதல்

மூவகை மலர்க ளான முளரிசெங் குமுதம் நீலக்
காவிகள் அலர்ந்து மொய்த்த கடிமலர் வாவி ஆட,
மேவிய கவின்கொள் சாயல் மின்உருத் திரிந்து வேறு
பூவியல் மாலை போலும் பொலிந்துயர் பொன்னே போலும்.

கோட்டுப்பூ (மரம் செடிகளின் கிளைகளில் உள்ளவை) கொடிப்பூ, குளப்பூ, ஆகியவற்றில் குளத்தின் மூவகை மலர்கள் என்று சிறப்பிக்கப் பெறும், தாமரை, செங்குமுதம், (ஆம்பல்) நீலோற்பலம் (நீலக்காவி — கருங்குவளை) ஆகிய மலர்கள் குளத்தில் அடர்த்தியாகப் பூத்திருந்தன. மணமுள்ள மலர்கள் நிறைந்த குளத்தில் நீராடப் பெண்கள் வந்தனர். அவர்கள் அழகு பொருந்திய சாயல் உள்ள, மின்னல் உருவம் மாறிப் பூமாலை

யானது போன்றவர்கள். உயரமாகப் பொன் வடிவெடுத்தாற் போன்றவர்கள். 13

அந்தர தேயம் நின்றும் ககனம்ஆர் வழியே போந்து,
வந்தனர் காவின் ஊடு மாதர்கள் சித்ர சேனக்
கந்திரு அன்னான் பெற்ற கன்னிகை கவிர்கொள் செவ்வாய்
அந்தளிர் மேனி லீலா வதிஎனும் அணங்கி னோடும்,

மேலுலகத்திலிருந்து ஆகாய வழியாக இந்தச் சோலைக்கு வந்தார்கள். கந்தர்வனாகிய சித்ரசேனனின் மகள் லீலாவதி என்பவள் ஒருத்தி. அவள் முள்முருக்குப் (கவிர்) போன்ற சிவந்த வாயை உடையவள்; மாந்தளிர் போன்ற மேனியை உடையவள்; தெய்வ அழகுடையவள். 14

கும்பநா தன்தான் பெற்ற கொம்பாம்மென் சித்ர லேகை
அம்புய முகத்தாள் இன்னோர் அணிஅலங் காரத் தோடும்,
வம்புயர் தனத்துத் தோழி மாதர்கள் சேடி மானார்
விம்பவாய் கனிந்துள் ஊறிச் சூழ்வர மேவினாரே.

இன்னொருத்தி கந்தர்வனாகிய கும்பநாதனின் மகள், பூங்கொம்புபோன்ற — தாமரைபோன்ற முகங்கொண்ட சித்திர லேகை என்பவளாவாள். இவ்விருவரும் அணிகளுடன் அலங் காரம் செய்துகொண்டு வந்தார்கள். கச்சைத் தாண்டிப் பிதுக்கிக்கொண்டு வரும் முலைகளை உடைய தோழிப்பெண்கள் இவர்களுடன் வந்தனர். அழகான வாய் அசைந்தாட, உரையாடியபடியே தோழிகளுடன் இருவரும் வந்தனர். 15

காவினில் இழிந்து சோலைக் கவின்எலாம் கண்டு கண்டு,
பூஅலர் கொய்து பொங்கர் எங்கணும் புல்லிப் பின்பு,
வாவியில் படிவோம் என்ன வனிதையர் மலரை நோக்கி,
ஆவியின் இனிய தோழி அம்மலர் தருக என்ன,

அப்பெண்கள் சோலையில் இரங்கி, சோலையின் அழகை யெல்லாம் ரசித்து, பூக்களைக் கொய்து, எல்லா இடங்களுக்கும் சென்று, பிறகு குளத்தில் குளிக்க எண்ணினார்கள். சித்திரலே கையும், லீலாவதியும், உயிருக்கு நிகரான தோழிகளை நோக்கி, மலர்களைக் கொய்து குளத்தில் இறங்கி நீராட, இடம் ஏற்படுத்துங்கள் என்று கூறினார்கள். 16

இப்படிப் பயிலும் போதில் இருவரும் பிரிந்து வேறோர்
மைப்படி காவுள் ஆடிச் சேடியர் வளங்கள் காட்ட,
துப்பிதழ்ச் சித்ர லேகை தோழியோ டொருபால் ஏகி,
அப்புறம் அணையும் போதில் அங்கொரு சோலை கண்டாள்.

தோழிகளும் அவ்வாறே செய்ய, வேறு சோலைகளில் உள்ள வேறுவேறு குளங்களில் இருவரும் தனித்தனியே குளித்தார்கள். அந்தந்தச் சோலையைத் தோழியர்கள் காட்டிய வகையில் இருவரும் பிரிந்தனர். பவள இதழ்ப்பாவை சித்திரலேகை, தோழிகளுடன் வேறொரு திசையில் சென்றாள். அதன்பின் வேறொரு சோலைக்குள் புகுந்தாள். *17*

## மணக்கிரீபன், சித்திரலேகையைக் கண்டு காமுற்று உரையாடுதல்

இவைமிகு வளங்க ளாம்என் றெண்ணியே எய்தும் போதில்,
சுவைதரு கன்னல் கோட்டுச் சுந்தர மதனன் போல,
நவைஇலா மணிக்கி ரீபன் நாதயாழ்ப் பாடல் சூழக்
கவைதரும் கோட்டுத் தாருக் காவினான் இருத்தல் போல,

இந்தச் சோலை, மற்ற எல்லாச் சோலைகளைக் காட்டிலும் வளங்கள் கொண்டதாக இருக்கிறது என்று, அச்சோலையை அடைந்தாள். சுவை கொடுக்கும் கரும்புவில்லைக் கொண்ட அழகான மன்மதனைப் போல, குற்றமில்லாத மணிக்கிரீபன், யாழில் இனிமையான பாடல்கள் இசைப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தான். இலைகளை உடைய கற்பக மரத்துக்குரிய இந்திரன், அரசவையில் வீற்றிருப்பது போல, அவன் கம்பீரமாக அமர்ந்திருந்தான். *18*

கடிமலர்ப் பந்தர் நாப்பண் கவின்கொள்ஆ சனத்தை நீங்கி,
படியினில் பயிலா நின்றான் பைந்தொடி கண்டு பாரில்
வடிமதுத் தாரு நாட்டில் மன்னனோ வேளில் வாய்ந்த
முடிவிலா அழகன் யார்என் றுன்னியே முயக்கம் உற்றாள்.

வாசனை மலர்கள் கொண்ட பந்தலின் கீழே, அழகான ஆசனத்திலிருந்து எழுந்து, உலாவத் தொடங்கினாள். சிறிது தூரம் வந்தவுடன் சித்திரலேகை அவனைக் கண்டாள். 'தேன் வழியும் கற்பக நாட்டு இந்திரனோ? மன்மதனைப்போல வரும் முடிவற்ற அழகன் யாரோ?' என்று பிரமித்து, மோகத் தடுமாற்றம் அடைந்தாள். *19*

இவனைநாம் முயங்கா விட்டால் இவ்வுடல் முடிவேன் என்னும்
கவனமாய் எய்திப் போந்து காமனை நிகர்த்தோன் காலில்,
புவனியில் தாழ்ந்து நின்று புரவல நின்மேல் ஆசைக்
கவலல்உற் றேன்காண் என்று காமுற்றாள் கழறும் போதில்,

இவனைப் புணர்ச்சி செய்யாவிட்டால், இந்த உடம்பை மாய்த்துக்கொள்வேன் என்ற சிந்தனை வந்தது. காமனைப்

போன்றவரின் காலில் விழுந்து வணங்கினாள். 'காப்பாற்று பவனே! உன்மேல் ஆசையாகிய கவலை அடைந்தேன்' என்று, 20
காமுற்றுப் பலமுறை கூறினாள்.

மன்னனும் இவளை நோக்கி வாரியில் வந்த மின்னோ
கன்னலின் சுவையோ தெய்வக் கற்பகக் கனியோ காமன்
பன்னிய பருவம் கற்கும் பவளத்தின் கொடியோ பாரில்
துன்னிஇங் கெய்திப் போற்றும் சுந்தரி இவள்யார் என்னா,

மணிக்கிரீபனும் சித்திரலேகையைப் பார்த்து, 'இவள் மின்னலோ? கரும்பின் இனிப்போ? தெய்வக் கற்பகக் கனியோ? காமன் பருவசுகத்தைக் கற்கும் பவளக்கொடியோ? உலகில் — என்னெதிரில் வந்து என்னைப் போற்றும் இந்த அழகி 21
யாரோ?' எனக் கருதினான்.

மனமயக் குற்று நின்று மாதரைக் களவில் சேர்கை
கனம்அல வரைதல் செய்தே கலப்பது கற்பதாகும்
எனமொழிந் தெமது மாதே எங்குளாய் இவண்வந் தெய்தும்
நனவென்கொல் யார்பெண் நீதான் என்றனன் நகைத்து நின்றாள்.

மனத்தில் மயக்கம் ஏற்பட்டது. 'பெண்ணைக் களவுக் காலத்தில் புணர்வது பெருந்தன்மை ஆகாது. திருமணம் செய்து கொண்டு புணர்வதே கற்பாகும்' என்று சொல்லி, "எனக்குரிய பெண்ணே! நீ எங்கு உள்ளவள்? இங்கே வந்தது ஏன்? இந்த நனவுக் காட்சி எதற்கு? நீ யாருடைய மகள்?" என்றான். சித்திரலேகை 22
சிரித்தாள்.

மாதர்க்குச் சுயம்ஒன் றுண்டோ மதலையாம் பருவம் தன்னில்,
தாதைகீழ் அடங்க வேண்டும் தனப்பரு வத்தி னாலே,
மேதகு கணவன் கீழாம் மின்னிகழ் விழைவி னாலே,
ஓதிடின் மைந்தர்க் கீழாம் எனவிதி உரைத்தாள் பின்னர்,

'பெண்ணுக்குச் 'சுயம்' என்பது எப்பொழுதுமே இல்லை; குழந்தைப் பருவத்தில் தந்தைக்கு அடங்கியிருக்க வேண்டும்; முலைபெருத்த பருவத்தில், மேதகு கணவனுக்குக் கீழே இருக்க வேண்டும்; அதன் விளைவாக வரும் பிள்ளைகளுக்காகப் பிற்காலத்தைக் கழிக்கவேண்டும் இதுதான் விதி!' என்று 23
சொன்னாள்.

சாயுலும் நகையும் கண்டு தன்குலம் என்று கண்டு,
வேய்உறு தோளி நீயார் வினவிட விள்ளாய் என்றார்;
தாய்தந்தை சுற்றம் இன்னார் தத்துவம் என்றாள் இங்஖ன்
தோய்வுறல் கூடா துந்தன் தமரினைத் தொகுத்தி ஆகில்,

சித்திரலேகையின் சாயலையும் சிரிப்பையும் பார்த்து, இவள் தன்னுடைய தேவகுலத்தவள்தான் என்று மணிக்கிரீபன் அறிந்துகொண்டான். 'மூங்கிலைப் போன்ற தோளைக் கொண்டவனே! நீ யார் என்று நான் கேட்ட வினாவிற்கு விடை சொல்லவில்லையே' என்றான். பின்னர்ச் சித்திரலேகை, தன்தாய் தந்தை, சுற்றம் யார் யார் என்பதையும், இங்கு வந்த காரணத்தையும் முழுமையாகச் சொன்னாள். 'இப்படி உடனே சேருதல் (தோய்தல்) கூடாது. உன் பெற்றோரிடம் கூடிப்பேச, 24

அவர்களை உசாவி யானே அவர்களால் உதக தானம்
தவர்கள்முன் வேள்வி முன்பு சாட்சியால் தளிர்க்கை பற்றித்
துவைகுதும் என்றான் இந்தச் சித்திர லேகை சென்றே,
இவைஇரு குரவற் கோதி எய்துதும் என்ன நீங்கும்.

நானும் உன் பெற்றோர்களிடம் பேசி, அவர்களே விரும்பி உன்னை எனக்கு உதகத்தால் (நீரால்) தானம் தர, தவசிகள் யாகம் செய்ய, அந்த வேள்வி அக்னி சாட்சியாக, உன் தளிர்போன்ற கைகளை நான் பிடிக்கிறேன். நாம் ஒன்று சேர்வோம்' என்றான். 'இருமுது குரவரிடம் (பெற்றோரிடம்) சொல்லி நாம் சேர்வோம்' என்று, சித்திரலேகையும் ஒருமித்துச் சொல்லிச் சென்றாள். 25

## பெற்றோர் இசைவு

பதிபுகுந் தினைய செய்தி பகருதற் கன்னை பாலில்
விதிதனைப் புகல்வாள் சோலை மேவியே விளையாட் டெய்தி,
புதியநாண் மலர்கள் கொய்யும் போதிலே புத்திக் கேற்ற
மதிநிகர் கணவன் தன்னைக் கண்டது மற்றும் எல்லாம்,

சித்திரலேகை கந்தரவப்பகுதிக்குச் சென்று, அன்னையிடம் நடந்ததைச் சொன்னாள். சோலைக்குச் சென்று விளையாடிப் புதிய மலர்களைக் கொய்தபோது, புத்திக்கேற்ற கணவனைக் கண்டதையும், மற்ற எல்லாவற்றையும், அவனுடன் பேசிய பேச்சுகளையும் சொன்னாள். 26

உரைத்தனள் அவன்தன் மேன்மை உண்மையும் உறுதி நல்லோன்
புரைக்கிடன் இன்றிச் சொற்ற புதுமையும் புகலக் கேட்டு,
விரைத்தளிர் அன்ன மேனி அன்னைதன் மேலோர்க் கோத
வரைப்பதம் என்னச் சுற்றத் தாருடன் வரைவு கூற,

மணிக்கிரீபன், சித்திரலேகையிடம் பேசிய பேச்சுகளில் இருந்த உண்மை, உறுதி, ஐயத்திற்கு இடமற்ற தன்மை, சொன்ன முறையின் புதுமை ஆகியவற்றைக் கேட்ட, மணம்

கொண்ட தளிர்போன்ற மேனியைக் கொண்ட தாய், வியந்து கணவன் உள்ளிட்ட பெரியவர்கட்கு அப்படியே சொன்னாள். விளைச்சலை மலைபோல ஓரிடத்தில் குவித்ததைப் போலச் சுற்றத்தார்கள் கூடினார்கள். அவர்களும் செய்தி கேட்டுத் திருமணத்திற்கு இசைவு தெரிவித்தார்கள். 27

அவர்களும் இசைந்து தோழன் மைந்தனுக் காகும் என்றார்;
தவர்களோ டெழுந்து கும்பன் கிரிபன்பால் சார்ந்து தங்கள்
பவமுறை பேசி ஒத்த பண்பினால் இசைந்த போதில்,
தவநிகழ் கின்ற தொன்று நாரியர் இருவர் தம்மில்,

இறைவனின் தோழனாகிய குபேரனுக்கு மணக்கிரீபன் மகன். அவனுக்குத் தன் மகளாகிய சித்திரலேகையைக் கொடுப்பதில் மகிழ்ச்சியடைந்த கும்பநாதன், துறவிகளுடன் புறப்பட்டு, மணிக்கிரீபன் தங்கியிருந்த சோலைக்கு வந்து, தங்களுடைய பிறப்பு, பாரம்பரியம் பற்றிப் பேசிப் பெண்கொடுக்க இசைவு தெரிவித்தான். 28

## லீலாவதியின் பொருந்தாக்காமம்

பிரிந்துபோய்ப் போது கொய்த பிறைநுதல் கரிய கூந்தல்
கருந்தடங் கண்ணி லீலா வதிஅந்தக் காவை நீங்கி,
மருந்தெனும் தோழி சித்ர லேகையைத் துருவி வந்து,
அருந்துதற் கரிய இந்த அடவியின் வளனை நோக்கி,

தவத்தினால் தோழியராகிய இருவருள் மற்றொருத்தியாகிய பிய்த்துவைத்த பிறைபோன்ற நெற்றியும், கருங்கூந்தலும், கரிய பெரிய கண்களையும் உடைய லீலாவதி, வேறு வேறு சோலைகளில் அருமருந்து போன்ற சித்ரலேகையைத் தேடி, துய்க்க முடியாத காட்டுவளங்களையும் கண்டு வந்தாள். 29

கொண்டுதன் மனம்உ வந்து கொள்கையில் அமைத்து நேடிக்
கண்டனள் தென்றல் காவில் கதிர்வளர் பளிங்கு மாட
தண்தர ளத்தால் தூங்கு தமனியப் பந்தர் மீது,
வண்டலர் தாரி னானை வனிதையும் கண்ணுற் றாளே.

இங்கிருப்பாளோ அங்கிருப்பாளோ என்று, கொள்கை வகுத்துத் தேடும்போது தென்றல் உலாவும் சோலையில், சூரியன் போன்று ஒளிவிடும் பளிங்குமாடத்தில் முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட பந்தலில், வண்டுமொய்க்கும் மாலை அணிந்த மணக்கிரீபனைப் பார்த்தாள். 30

இந்திர லோகத் துள்ள இறைவனோ இங்குற் றார்கள்
அந்தர நாடர் தாமோ எனநவை உற்று நின்று,

சுந்தர மன்னன் தன்னைத் தொழுதனள் இவளும் ஆசை
முந்தினாள் தோழி தன்னை முயங்கினாள் முன்வந் தெய்தா,

இந்திர லோகத்தில் உள்ள தேவேந்திரனோ? தேவர் உலகத் தேவனோ? இங்கே இருப்பவர் யார்? என எண்ணி, மனத்தில் ஆசை அடைந்து, அழகான அரசனை நின்றபடி வணங்கினாள். சித்திரலேகை போலவே, லீலாவதியும் அவன் மேலே ஆசை கொண்டாள். கந்தர்வப்பெண் ஆகையால், சித்ராபதி என்னும் தோழி தனக்குமுன்பே இவனைச் சேர்ந்து விட்டாள். முதலில் அவளே காதல்கொண்டாள். பின்னே இவனும் அவள் மேலே காதல்கொண்டான் என்பதை உணர்ந்துகொண்டாள். 31

இவன்அவள் மேலே ஆசை உற்றனன் என்று நோக்கித்
தவனனைக் கண்ட போதின் தன்மைபோல் அளவி லாத
உவமைஇல் மயல்கொண் டங்஗ன் உற்றமர் செய்தி எல்லாம்
அவள்நனி அறிந்து தான்ஒன் றுறைகுவள் ஆகி அன்பாய்

ஆனால், நெருப்பின் சுவாலைபட்ட பூவைப்போல, அளவு கடந்த உவமை சொல்லமுடியாத, காமமயக்கத்துடன் அவனை நெருங்கி, நிகழ்ந்தவற்றை நன்கறிந்து, உறுதி செய்து கொண்டு, அன்புடன் மணிக்கிரீபனிடம் ஒரு வேண்டுகோள் வைத்தாள். 32

உன்னிடத் தியானும் மையல் உறுகின்றேன் இதற்கென் றுன்னை
முன்னைவந் துறவு கொண்டே முற்றிழை யவளை முந்தப்
பன்னியர்க் கோடி யான எமர்களும் பண்பின் தீண்டப்
பின்னைநீ வரைதல் செய்தி என்றனள் பிரமை யாலே.

உன்னிடத்தில் நானும் மையல் கொண்டிருக்கிறேன். முன்பே வந்து உன்னிடம் மையல் கொண்டு உறவாகவும் அமைந்துவிட்ட அலங்காரமுடையவள் முந்திக்கொண்டு, கோடிக்கணக்கான வர்களை மனைவியாகக் கொள்வதில் பிழையில்லை என்ற நிலை உள்ள என் சுற்றத்தாரும் (கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றிக் கூடுவோர் கந்தர்வர்) பண்பில்லாமல் (தம் உலகப்பண்பை மாற்றி) இங்கு வந்து கூடியுள்ளார்கள். எனவே, நீ திருமணத்திற்குச் சம்மதித்தாய். (மனத்தால் மணம் முடித்தது) என்று பிரமை பிடித்தவள் போல் பேசினாள். 33

காமனுக் கிணையி னானும் கன்னியாம் இவளைச் சேர,
வாமற்றை எழில்கொள் மைந்தர் ஆயினோம் இல்லை என்ன
ஏமுற்ற இனிய சாயல் இளமயில் இவளை நோக்கி,
நீமற்றை அரிவை; ஆகச் செய்யலாம் நிகழ்ந்த தொன்று,

*காமனுக்குச் சமமான மணிக்கிரீபன், கன்னியாகிய லீலாவதியைப் புணர — இருமனைவியரை மணக்கும் வல்லாள னாக நாமிருக்கக்கூடாது என்று கருதி, ஏக்கம் அடைந்திருக்கும் இனிய சாயல் இளமயிலாகிய லீலாவதியைப் பார்த்து, 'நீ என்னளவில் வேறொரு பெண். இதற்கு ஒரு வழி இருக்கிறது. அதைச் செய்யலாம்.* 34

உன்னையே மரபில் உள்ளான் ஒருவனுக் குறுதி பேசி,
மன்னின செயலால் உன்னை நாம்மணந் திடுதல் கூடா(து)
என்னவே உரைத்த போதும் இவளும்தன் இளமை யாலே,
பன்னிநான் ஒருபோ தேனும் புணர்ந்திடப் பாலை என்றாள்.

*உன்னை உன் கந்தர்வ மரபில் உள்ளவன் ஒருவனுக்குத் திருமணம் பேசி, நிலையாகச் சேர்க்கலாம். நான் உன்னை மணந்துகொள்வது கூடாது' என்றான். இதைக்கேட்ட பிறகும் லீலாவதி இளமை காரணமாக 'ஒருநாள் — ஒரு பொழுது மட்டு மாவது நீ என்னைப் பலமுறை (பன்னிப்) புணர்ச்சி செய்ய வேண்டும்' என்றாள்.* 35

முறைஉண்டோ ஞாயம் உண்டோ மோகம்உற் றவளுக் கென்னா
நிறைதவ றாத மன்னன் நேரிழை அவளைப் பின்னும்
மறையினில் வழுவாம் என்றான் மதர்நெடுங் கண்ணும் வாய்ந்த
பிறைநுதல் மயில்மென் சாயல் பெண்கொடி மயல்பொறாளாய்,

*'காமம் பிடித்தவளுக்கு முறை ஏது? நியாயம் ஏது' என்று, கற்புத் தவறாத அரசன் அவளிடம், 'வேதவிதிப்படி இது தவறு' என்றான். திமிறிய நீண்ட கண்களும் பிறை நெற்றியும், மயில் போன்ற மென்மையான சாயலும் கொண்ட அந்தப் பெண்கொடி மையலைப் பொறுக்கமுடியாததால், இந்த நியாயங்களை ஒத்துக்கொள்ளவில்லை.* 36

தனித்தொரு காமன் செய்யும் மயக்கையார் சாற்ற வல்லார்
சினத்துடன் சபிப்பேன் என்று செப்பினாள் செம்மல் தானும்,
வினைக்கிடம் இதுஎன் றங்ஙன் வெறுத்திட வேல்கண் ணாளும்
மனக்கவல் உற்றுச் சீற்றம் உந்தியே வலித்துச் சொல்வாள்.

*லீலாவதி கோபமாகப் பேசினாள். 'தணிந்த தெய்வமாகிய மன்மதன் செய்யும் மயக்கத்தை எப்படி முழுமையாகச் சொல்லமுடியும்? சாபம் இடுவேன்' என்றாள். தலை வணங்கிய மணிக்கிரீபன், 'தீவினையை அனுபவிக்க வேண்டிய இடம்— பொழுது—இது' என்று கருதி, அவளை வெறுப்புடன் பார்த்தான். வேல்போன்ற கண்ணை உடைய லீலாவதியும், அவன் பார்வையால் மனக்கவலை அடைந்தாள். அதிகக் கோபம் கொண்டாள். உரக்கக் கத்திப்பேசினாள்.* 37

## சாபங்கள்

என்னைநீ வெறுத்த லாலே இயைந்துறும் அவளும் நீயும்,
பொன்எனும் அழகு குன்றிப் புவியினில் பனிப்புக் கொள்ளத்
துன்னியே குட்ட ரோகம் தொடர்ந்திடச் சோர்வு கொண்டு,
பன்னகம் கொள்ள நின்ற பருதிஒப் பாகத் தானே.

'நீ என்னை வெறுத்ததால் சம்மதித்துச் சேர்ந்த அவளும் (சித்திரலேகையும்) நீயும் பொன்போன்ற அழகு அழிந்து, நடுக்கம் கொண்டு குட்டரோகம் (தொழுநோய்) தொடர, தளர்ச்சி அடைந்து — பாம்பு கவ்விய சூரியனுக்கு ஒப்பாக — இழிவடைந்து — பிசாசாக — ஆகக்கடவீர்' என்று சாபமிட்டாள். 38

நீசம்ஆ கியப சாசாய் நேர்படக் கடவீர் என்று,
பேசியே சபித்தாள் அந்தப் பெண்தரு சாபம் ஏற்றார்
ஆசினால் சபித்தாள் தன்னை அப்படி அழகு மாறி,
மாசுறக் கடவாய் என்று சபித்தனர் வழக்கி னாலே.

அந்தப்பெண் கொடுத்த சாபத்தை இருவரும் அடைந்தார்கள். குற்றமான சாபம் கொடுத்ததால், 'அதே சாபம் உனக்கும் ஆகட்டும்; அழகு மாறி அசிங்கம் ஆவாய்' என்று, அனிச்சச் செயலாக மணிக்கிரீபனும் சித்திரலேகையும், லீலாவதிக்குச் சாபமிட்டார்கள். 39

காமவல் வினையி னாலே மூவரும் கடைய ராகி,
ஏமம்ஒன் றின்றிக் கானத் தெய்தியே இடர்உ ழன்றார்;
சோமனே முதலாய் உள்ளோர் பட்டதைத் துருவிப் பார்க்கில்,
மாமயல் கொண்டார்க் கன்றோ துன்பத்தை வகுத்த தம்மா.

காமத்தால், கொடிய வினையால், பாதுகாப்பற்று மூவரும் இழிவடைந்து, காட்டை அடைந்து துன்பமுற்றார்கள். சந்திரன் முதலான பலரும் அடைந்த துன்பங்களை ஆராய்ந்தால், பெருங்காமமே துன்பத்தைத் தருவது என அறியலாம். 40

## பிள்ளையார் செய்த பேரருள்

பின்பொரு ஏது இன்றிப் பிழைப்படும் தம்மால் வந்த
துன்பினை நீங்கு மாறு சொற்றிடு முதியோர் காணா(து)
என்செய்வோம் என்ன எண்ணும் இரங்கிடும் மயங்கும் செல்லும்
கன்மமோ என்று ரைக்கும் முற்றிய கன்மத் தாலே.

'காரணம் இல்லாமல் பிழைப்பட்டு, தமக்குத் தாமே துன்பத்தை ஏற்றுக்கொண்டார்கள். ஒருவரிடம் ஒருவர் சமாதானப்படும்படி, கோபத்தை அடக்கக்கூடிய அனுபவம்

உள்ள பெரியவர்களும் அங்கே இல்லை. அதனால் இப்படி ஆகிவிட்டதே' என்று, மூவரும் ஒருவருக்கொருவர் புலம்பினார்கள். 'கர்மவினை என்பது இதுதானா?' என்றார்கள். இப்படிப் புலம்பியதும் முற்றிய கர்மத்தாலேதான். 41

காடும் கல்அதர் அத்தமும் கானியா(று)
ஓடும் சூழலும் ஓங்கு வரைகளும்
நாடும் மற்றை நகரியும் ஞாயில்சூழ்
மாடும் நாடி மறுகில் மறுகியே,

காடுகளிலும், பருக்கைக் கற்கள் பதிந்த பாறைகளிலும் காட்டாறு ஓடும் சூழலிலும், உயர்ந்த மலைகளிலும், நாடுகளிலும், நகரங்களிலும், மாடங்களின் மதில்களிலும், தெருக்களிலும் அவர்கள் சுழன்றார்கள். 42

இன்னல் எய்தித் திரிபொழு தோர்பெறு
முன்னர்த் தோன்றிய ஓர்இடம் முந்தினார்;
அன்ன சோலைசூழ் ஆலயப் பாங்கரில்
முன்னர்த் தோன்றினான் வேழ முகத்தனே.

துன்பம் அடைந்து திரியும்பொழுதில், அழகான ஓர் இடத்தை அடைந்தார்கள். அங்கே ஒரு சோலை இருந்தது. ஆலயம் இருந்தது. அங்கே யானைமுகன் இவர்களின் முன்னே தோன்றினார். 43

இந்த வேளை எமதிடர் தீர்த்திட,
வந்த நாதன் இவன்எனக் கண்டுவந்து,
அந்தம் இல்லதோர் ஆனந்தம் எய்தியே,
கந்த நாள்மலர்ப் பாதம் கருதினார்.

'நம் துன்பம் தீர, வந்த தலைவர் இவரே' என்று அறிந்து, பார்த்து, மகிழ்ந்து, முடிவில்லாத ஆனந்தம் எய்தி, மணம்மிக்க காலை மலர் போன்ற அவர் திருவடிகளைச் சிந்தித்தார்கள். 44

மணிக்கி ரீபன் வருத்தும் பிணியினைத்
துணித்தல் செய்யும்இத் தோன்றல்என் றேமனம்
கணித்த லால்எற் காவென்று வாதனைக்கு
இணக்கம் பற்றி இருந்தனன் என்பவே.

மணிக்கிரீபன், தன்னை வருத்தும் நோய்ப்பிணி, பேய்ப் பிணிகளை அழிப்பதற்காகத் தோன்றிய தலைவர் இவர் என்று மனம் கணித்ததனால், 'என்னைக் காப்பாற்று' என்று கூறித் தன் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருந்தான். 45

இத்தி றத்தில் ஒழுகிய நாளிலே,
அத்தி ஆனை தான்அருள் கூர்ந்தனன்;
பித்தர் போல்வரு மைந்தன் பிணிகெட,
முத்தன் வாணியி னால்மொழி கின்றனன்.

*இப்படிச் சிலநாள்கள் சென்றபின், யானை முகத்தான் அருள் செய்தார். பைத்தியம் போல் வந்த மணிக்கிரீபனின் பிணிகெடுமாறு, ஆகாச வாணியின் வழியாக முத்திநாயகன் அருள்வாக்குத் தந்தார்.* 46

இன்னமும் சிலநாள் ஏங்கல் உள்ளன
மன்னு தீர்த்தமும் வான்திரு ஆலயம்
துன்னி யேபடிந் தேத்தித் துதிசெய்வீர்
அன்ன நாளில்அங் கோர்தடம் தோன்றுமால்,

*'மேலும் சில நாள்கள் நீங்கள் ஏங்க வேண்டும் ; பிறகு நிலைபெற்ற ஒரு தீர்த்தம், உயர்ந்த ஒரு திருக்கோயில் உள்ள இடத்தை அடைவீர்கள். அங்கே தீர்த்தத்தில் குளித்து இறைவனைத் துதிப்பீர். அந்த நாளில் ஒப்பற்ற குணம் தெரியும்.* 47

எங்கன் உள்ளன தென்றிடில் தென்திசை
அங்கண் அம்மடு ஆடிடும் போதினில்,
துங்க வன்பிணி தீரும் துகள்அற
மங்கை பாகன் வயிரவக் கோலமாய்,

*இவை எங்கே உள்ளன என்றால், தென்னாட்டில் உள்ளன. அந்த இடத்தில் அந்த மடுவில் நீராடும்போது, அரசனான மணிக்கிரீபனின் பிணி பிசிரில்லாமல் தீரும்.* 48

வந்து தோன்றி வருத்தம் எலாம்தவிர்த்(து)
எந்தை நல்வரம் ஈகுவன் என்றுரை
தந்த னன்மகிழ் வெய்திச் சரண்பணிந்(து)
இந்த நன்மைகொ டெங்கணும் போற்றியே.

*மங்கைபங்கனாம் சிவன் அங்கே பைரவக் கோலத்தில் வந்து தோன்றி, எல்லா வருத்தங்களையும் நீக்கி, நல்ல வரம் கொடுப்பான்' என்ற நல்வாக்கை வழங்கினார். மூவரும் விநாயகரின் திருவடிகளைப் போற்றி, நல்வாக்குக் கேட்ட மகிழ்வில், தென்திசை நோக்கிப் புறப்பட்டார்கள்.* 49

## பைரவர் அருள்

தென்தி சைக்கண் எழுந்தனன் சிந்துர
வென்றி யான்அரு ளின்படி மேவிய

துன்றும் ஓர்நகர் அவ்விடம் தோன்றிட
சென்று கண்டனர் பாவங்கள் தீருவோர்.

*சிந்தூர முகம்கொண்ட விநாயகர் தெற்குத்திசையில் தோன்றினார். வெற்றிபொருந்திய வேழமுகத்தான் அருளிய நிலைபெற்ற ஒரு நகரம் தெரிந்தது. பாவம் தீருவதற்காக, மூவரும் அங்கே சென்று கண்டார்கள்.* 50

கண்ட தன்புறத் தெய்திஅப் பால்கறைக்
கண்டன் ஆலயம் தோன்றக் கவின்கொளும்
கண்டல் சூழ்தடம் ஒன்றுடன் கண்ணுற்றான்
கண்டெ னும்மொழிக் கன்னியர் தம்முடன்.

*அதன் புறநகர்ப் பகுதியிலிருந்து பார்த்தனர். நீலகண்டராம் சிவனின் திருக்கோயில் தெரிந்தது. அழகான தாழைகள் சூழ்ந்த குளம் தெரிந்தது. கற்கண்டு மொழிபேசும் சித்திரலேகை, லீலாவதி, மணக்கிரீபன் அதில் குளித்தெழுந்தனர்.* 51

இரங்கு நீர்த்தடம் ஆடி எழுந்தனர்
தரங்க மென்றுடும் பின்தெறு நோய்கள்தாம்
முருங்கல் நீங்கிட முன்எழில் மேனிதான்
கருங்கல் நீங்கிய காரிகை என்னவே.

*அலையெனத் தொடர்ந்து வாட்டிய பிணிகள், கொல்லுவதி லிருந்து நீங்கின — தீர்ந்தன. கருப்புநிறம் மாறி, முன்பிருந்த நிறம் (சிவப்பு) பெற்றனர். இக்காட்சி, கல்லான அகலிகை பெண்ணா னதைப் போன்றது.* 52

கோள்க டந்த குரூஉச்சுடர் என்னவே
வாள்வி டும்உரு எய்திமன் தீர்த்தத்தின்
நாள்வ ரும்பலன் நன்மையைப் பேசிடும்
வேளை தன்னில் விமலன் வெளிப்பட்டான்.

*கிரகங்களுடன் சேர்ந்திருக்கும் சூரியன் போல ஒளி பொருந்திய மேனி எய்தினர். நல்ல நாளில் நல்ல பயனும் நன்மை யும் தரக்கூடிய வேளையில், விமலனாகிய பெருமான் வெளிப் பட்டார்.* 53

பயிரவக் கோலம் காட்டப் பணிந்தவர் தம்மை நோக்கிக்
கயிரவ வாய ரோடும் கருத்தழிந் தவைக ழிந்திச்
செயிர்அறு தீர்த்தம் ஆடித் தீர்ந்தனிர் இந்தத் தீர்த்தம்
வயிரவ தீர்த்தம் ஆகும் மகிமைநாம் வழங்கக் கேண்மின்.

*பைரவக் கோலத்தில் இறைவன் வெளிப்பட்டார். மூவரும் இறைவனைக் கீழே விழுந்து வணங்கினார்கள். 'செவ்வாம்பல் மலர் போன்ற வாயைக் கொண்ட பெண்களுடன் சேர்ந்து,*

மூவருமாக, சிந்தனை கெட்டுத் திரிந்தீர்கள். குற்றம் அற்ற தீர்த்தத்தில் நீராடி நலம் பெற்றீர்கள். இந்தத் தீர்த்தம் இனிப் பைரவத் தீர்த்தம் என்று பெயர் பெறும். இதன் சில சிறப்பு களைத் தருகிறோம். 54

பஞ்சபா தகங்கள் தீரும் படிபவர்க் கருமை யான
எஞ்சலில் செல்வம் பாலித் தெளிதினில் முத்தி நல்கும்;
அஞ்சிடும் உங்கள் பாவம் அகற்றிய தன்மையாலே,
விஞ்சையாம் மோட்ச தீர்த்தம் என்றருள் விளம்பும் நாதன்.

இனி இதில் குளிப்பவர்களின் பஞ்சமா பாதகங்களை (பொய், கொலை, குருநிந்தனை, கள்ளுண்ணல், களவு) அகற்றும்; அருமையான — குறையாத செல்வத்தைக் கொடுக்கும். எளிமை யாக முத்தியின்பத்தைக் கொடுக்கும். அச்சம் கொடுத்த உங்கள் மூவரின் பாவங்களை வித்தை செய்வது போல நீக்கியதால், இதற்கு மோட்சதீர்த்தம் என்றும் பெயர் விளங்கும்' என்று, பைரவர் அருள் செய்துரைத்தார். 55

தன்அடி பணிந்து நின்று தம்கரம் சிரசில் கூப்பிப்
பன்னகா பரணா போற்றி பயிரவக் கோலம் பாலித்(து)
இன்னிலத் தெம்மை ஆண்ட இறைவனே போற்றி இந்த
நன்னலம் நாங்கள் எய்த நயந்தருள் நாத போற்றி

'பைரவரின் திருவடிகளைப் பணிந்து, கரங்களைச் சிரங்களின்மேல் கூப்பி, பாம்பை அணியாக அணிந்த பரமனே! பைரவக் கோலம் எடுத்து, இந்த உலகில் எங்களை ஆட் கொண்ட இறைவனே! போற்றி! இந்தப் பெரிய அழகை நாங்கள் அடையச் செய்த நாதரே போற்றி!' 56

எனத்துதித் திறைஞ்சி நின்ற இவர்கள்மேல் அன்பு கூர்ந்து,
வனப்பினுக் கிணைஇ லாதீர் வம்மின்கள் மணிக்கி ரீபா
தனக்கிணை யான இந்தத் தரணியில் ஆத்தி மேவும்
புனல்சடை முடியி னாற்குப் பொங்கும் ஆலயங்கள் செய்வாய்.

என்று துதி செய்து, நின்ற மூவரிடமும் அன்புடன், 'அழகுக்கு இணை இல்லாதவர்களே! வாருங்கள். மணிக்கிரீபா! உன் செல்வத்துக்கு இணையான செல்வம் உள்ள இந்த ஊரில், கங்கை யைச் சடையில் கொண்ட சிவனுக்கு ஆலயங்கள் திருப்பணி செய். 57

அவ்விடைப் பனைக்கை நால்வாய் ஐங்கர மைந்தன் தன்னை
செவ்விதின் விதித்துப் போற்றிச் சிறப்புடன் இங்கு வைகி,
நவ்விசேர் விழியி னாரை நன்மணம் புனைதி இந்தத்
திவ்விய நாதன் வேண்டும் சீர்களும் தருவான் என்ன

கோயிலில், பனைமரம் போன்ற துதிக்கையையும், தொங்கும் வாயையும், ஐந்து கரங்களையும் கொண்ட, பிள்ளையாரை அழகாகப் பிரதிஷ்டை செய்து, வணங்கி, இங்கே தங்கி, மான்விழி மங்கையரை மணந்துகொள்வாயாக. இந்தத் திவ்யமான இறைவன் உனக்கு வேண்டும் வரங்களையும் சீர்களையும் தருவார்' என்று அருள் செய்து, பைரவர் மறைந்தார். 58

## விநாயகரைப் பிரதிஷ்டை செய்து வணங்குதல்

அருள்செய்து மறைந்தான் எங்கோன் அருட்படி மணிக்கி ரீபன்
பொருவிடை யோனைப் போற்றிப் புரந்தவன் அருள்மேற்கொண்டு,
தரையினில் அதிகம் ஆன தலம்இதென் றெய்தித் தாழ்வில்
கரைஇலாப் பணிகள் செய்து கயமுகன் தனைவி தித்து

பைரவர் அருளியபடி, மணிக்கிரீபன், போர் செய்யும் காளை வாகனத்தவனாம் இறைவனிடம் பேரன்பு கொண்டு, தன்னைப் பேரிடரிலிருந்து காப்பாற்றிய பெருமானின் அருளை மறவாமல், உலகத்தில் சிறந்த தலம், இத்தலமே ஆகையால், குறைவில்லாத — முடிவில்லாத் திருப்பணிகளைச் செய்தான். விநாயகரைப் பிரதிஷ்டை செய்தான். 59

பூசனை இயற்றி ஆத்தி புரத்தினுக் கழகி யற்றி,
ஈசனை ஐங்க ரத்த இபமுகன் தன்னை எய்தி,
வாசனை மலர்இட் டேத்தி வாரண முகத்தாய் போற்றி
தேசிகா எம்மை ஆண்ட தேவர்கள் முதலே போற்றி,

பூசனைகள் நடத்த ஏற்பாடு செய்தான். ஆத்திபுரத்துக்கு அழகு செய்தான். ஈசனுக்கும் ஐங்கரத்து ஆனைமுகனுக்கும் வாசனை மலர்களை இட்டான். விநாயகரைத் துதி செய்தான். 'யானை முகத்தவரே! போற்றி! குருவே! எங்களை ஆட்கொண்ட வரே! தேவர்களுக்கு முதலானவரே போற்றி! 60

ஐங்கர நாதா! போற்றி!
ஆகு வாகனனே! போற்றி!
திங்கள் அம் பிறைசேர் கோட்டுத்
தெய்வநாயகனே! போற்றி!
பங்கய பாதா! போற்றி!
பவளமா மலையே! போற்றி!
கங்கை நாயகர்தன் மைந்தா
கருணை வாரிதியே! போற்றி!

[ஐங்கரநாதா— ஐந்து கைகளை உடைய தலைவரே; ஆகு— பெருச்சாளி; திங்கள்—சந்திரன்; அம்— அழகிய; கோட்டு —

*— கொம்பை உடைய; பங்கயபாதா— தாமரை போன்ற திருவடிகளை உடையவரே! வாரிதியே —கடலே.]* *61*

என்னவே உமையாள் பெற்ற இபமுகன் தனைஇ றைஞ்சிப்
பின்னவன் தாதை யான பிறைமுடிப் பெருமான் எங்கள்
முன்னவன் தனைஅர்ச் சித்து மும்முறை வலம்செய் தேத்திப்
பன்முறை துதிக்கின் றானால் பாவம்அ தகன்ற பாலன்.

*பாவம் நீங்கிய மணிக்கிரீபன், உமையவள் பெற்ற யானை முகனை இப்படிப் பலவாறு துதி செய்தான். பிறைமுடிப் பெருமானாகிய முன்னவனுக்கு அர்ச்சனை செய்து, மூன்று முறை வலம் வந்து, தொழுது புகழ்ந்தான்.* *62*

காரணம் இன்றி வந்த
கன்னியர் வலித்துக் காம
வாரியில் படுத்த மோக
மயல்விளை மகளி ராலே
நீரினில் பாசி என்னும்
நெடும்துயர் அகற்றி ஆண்ட
பூரண முதலே! போற்றி!
புண்ணிய நாதா! போற்றி!

*[வலித்து— வலியவந்து, தானாக வந்து; வாரி — கடல்; மயல்— காம மயக்கம்; விளை— விளைவித்த, உண்டாக்கிய; என்னும்— போன்ற; நெடும்துயர் — நீண்ட துன்பம்; அகற்றி — நீக்கி; ஆண்ட — ஆட்கொண்ட; பூரணமுதலே — முழுமையான மூலதனமே; புண்ணிய நாதா — நல்வினைகளுக்கு எல்லாம் தலைவரே!]* *63*

திங்களாம் பிறையும் பாம்பும்
திருமுடிக்கு அணிந்தாய்! போற்றி!
மங்கைஓர் பாகம் வைத்த
வாரண உரியாய்! போற்றி!
பங்கய பாதம் தந்து
பணித்து அருள் பகவ! போற்றி!
எங்களை ஆண்டு கொண்ட
இறைவனே! போற்றி! போற்றி!

*[திங்களாம் பிறை — சந்திரனின் அழகிய வடிவாகிய பிறை; வாரண உரியாய்— யானைத் தோலை ஆடையாகப் போர்த்தவரே; பணித்து — திருக்கோயில் பணிகள் செய்ய உத்தரவிட்டு; பகவ — பகவரே.]* *64*

## வரமும் மணமும்

என்றுமூ வருமே போற்ற இறைஎழுந் தருளி வேண்டும்
பொன்றிலா வரம்கேள் என்னப் பொன்அடி பணிந்து நின்று,
நன்றெனும் தீர்த்த மூர்த்தி நகரினுக் கடியேன் பேராய்
நின்றிட வேண்டும் நாதா நின்பதம் வேண்டும் என்றான்.

*மணிக்கிரீபன், சித்திரலேகை, லீலாவதி ஆகிய மூவரும் இவ்வாறு இறைவனைப் போற்றினார்கள். இறைவன் எழுந்தருளி னார். 'அழியாத வரம் கேள்' என்றார். இறைவனின் பொன்னடியை வணங்கி, 'நாதா! இந்த நல்ல மூர்த்திக்கும் தீர்த்தத்துக்கும், நலத்துக்கும் அடியேனுடைய பெயர் நிலைபெறவேண்டும்; உன்னுடைய திருவடியே எனக்கு வேண்டும்' என்று, வரம் கேட்டான் மணிக்கிரீபன்.* 65

இறைஅருள் செய்து லிங்கத் தெய்தினான் இமையோர் எல்லாம்
நறைமலர் தூவி ஆர்த்தார் நதிபுனை மணிக்கி ரீப
மறையவன் மணிக்கி ரீப நகரம்மற் றப்பேர் தீர்த்தம்
குறைவிலா தன்றும் என்றும் நிகழ்வதிக் கொள்கையாலே,

*அப்படியே ஆகட்டும் என்று இறைவன் அருள் செய்தார். இலிங்கத்துள் மறைந்தார். தேவர்கள் எல்லாரும் மணமுள்ள மலர்களைத் தூவி, ஆரவாரம் செய்தார்கள். அன்று முதல் வேதம் அறிந்த அவனின் பெயரால் ஆத்திவனம் மணிக்கிரீப நகர் என்றும், தீர்த்தம் மணிக்கிரீப தீர்த்தம் என்றும் பெயர் பெற்றன.* 66

நாதனைப் பணிந்து பின்பு நாரியர் இருவர் தம்மை
வேதியர் சடங்கி யற்ற வெவ்வழல் முன்னம் வேட்டுக்
காதலி யார்க ளோடும் கவின்பெறு நகரில் பன்னாள்
ஆதர வுடனே வைகி அகன்றுதன் அகிலம் புக்கான்.

*அந்தணர்கள் வேள்விச் சடங்கு செய்யச் சித்திரலே கையையும், லீலாவதியையும், மணிக்கிரீபன் இறைவனை வணங்கி, வேள்வித் தீயின் முன்னர் மணம் செய்து கொண் டான். காதலிகளுடன் பல நாள்கள் ஆதரவு தந்த அந்த அழகான நகரில் வாழ்ந்து, பிறகு தன்னுடைய குபேரபுரிக்குச் சென்றான்.* 67

## வீரசேனனின் வேண்டுகோள்

இத்திறம் உரைத்த யோக நாதனை இறைஞ்சி, இந்த
மைத்தகண் டத்தி னாற்கு மணக்கிரீ பப்பேர் வந்த

உத்தமம் இதுவா மென்று முடிகொண்ட உறும்பேர் இந்த
நித்தனுக் கெய்தும் அந்தக் கதையினை நிகழ்த்த வேண்டும்.

இந்தக் கதையைச் சொன்ன சங்கயோகியை, கதையைக் கேட்ட வீரசேனன் வணங்கி, "ஆத்திவன இறைவனுக்கு, 'மணிக்கிரீயேஸ்வரர்' என்ற பெயர் உத்தமமாக அமைந்தது. பெரிய கரிய கண்டம் கொண்ட இந்த இறைவனுக்கு, 'முடிகொண்ட பாண்டியநாதன்' என்ற பெயர் எப்படி வந்தது? அக்கதையைச் சொல்லவேண்டும்" என்று, கேட்டுக்கொண்டான். சங்கயோகியும், வீரசேனருக்கு அந்தக் கதையைச் சொல்லத் தொடங்கினார். 68

## பாண்டியன் மேல் சோழன் படைஎடுத்தல்...

என்னவே கேட்ட வீரமா சேனற்(கு)
இயம்புவான் எறிதிரை முன்னீர்
துன்னுசூழ் உலகில் பின்னும்ஓர் உகத்தில்
தோன்றிய சொலற்கரும் கொற்கை
நன்னிலப் பாண்டி நாயகன் அமுத
கிரணன்பால் தோன்றும்நட் புடைய
மன்னவன் இவனை மறுபுலப் பகைவன்
பொருதிட மதித்துவந் துதித்தான்.

திரை வீசும் மூன்றுநீர் (ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் சேர்ந்த கடல்) சூழ்ந்த உலகில், பின்னொரு யுகத்தில் (துவாபர யுகத்தில்) புகழுடன் தோன்றிய நல்ல பாண்டி நாட்டரசன் — அமுத கிரணன் என்பவனிடம் நட்பும் உடையவன். இவனுடன் சோழன்போர் தொடுத்தான். 69

பொரவரும் அவனோ டெதிர்ந்துபோர் புரியப்
புரவிதேர் புகர்முக வயமாத்
திரைநிகர் வீரர் வெள்ளமும் தெளித்துச்
செயம்குறித் ததிர்ந்துகண் சினத்துத்
தருமுனைப் படைகள் வகுத்தணி ஆற்றிச்
சாரிமா றிச்சர மழையால்
இருவகைத் தானை யரும்பொழிந் திடவே
இதனில்ஒன் னார்படைக் கிடைந்தே

அவனுடன் போர்புரிய, குதிரை, தேர், யானை, அலை போன்ற சேனை வெள்ளம் அமைத்து, வெற்றியை எதிர்நோக்கி, கண் சிவந்து, போர்க்களத்தில் அணிவகுத்து, குதிரைகளைச் சாரிமாற்றி (நடை மாற்றம் செய்வித்து) அம்புமழை

*பொழிந்து போர்தொடுத்தான். இச்செயல்களை இருவகைப் படையினரும் செய்தனர்.* 70

கவுரியன் தானை உடைந்திடப் பாண்டி
காவலன் கவலைஉற் றிந்தப்
புவிதனில் ஆத்தி வனத்திடை உற்றான்
புண்ணியன் தனைக்கண்டு போற்றிச்
சிவன்எனை ஆள இவண்வதிந் தனனே
என்றுகை சிரசின்மேல் கூப்பிப்
பவன்அடி தொழுது மறுபுலப் பகைவன்
தனைப்பொரப் பரிந்துகாத் தருள்வாய்.

*சோழன் படைக்குப் பாண்டியன் படை தோற்றது. பாண்டிய மன்னன் கவலை அடைந்தான். பாண்டிய நாட்டிலேயேஉள்ள ஆத்திவனத் தலத்துக்கு வந்தான். சிவனைத் தரிசித்துப் போற்றி, 'என்னை ஆளவந்த சிவன் இங்கே இருக்கிறார்' என்று, கைகளைத் தலைக்குமேல் தூக்கி வணங்கி, பவனைக் (தானாக உண்டானவரைக்) கீழே விழுந்து வணங்கி, 'மறுபுலப் பகைவனுடன் மீண்டும் போரிட்டு வெல்லவேண்டும்' என வேண்டினான்.* 71

மனம்அழிந் தெய்த்து மாற்றலர்க் குடைந்த
மானமும் இழிவும்மா றாத
சினமுடன் வேறு புகல்இலாக் கவலைத்
திரைமுந்நீர் எய்தினோம் சிறந்த
அனைஎன வருவோய் கரைதனில் எய்த,
அருங்கலம் என்னவே அணைந்தாய்
உனைஅலால் வேறு கதிஇலேன் கண்டாய்
ஒன்னலர் புரம்உகைத் தவனே.

*'பகைவர்களின் திரிபுரங்களை அழித்தவனே! மனம் உடைந்து விட்டது. துன்பமடைகிறேன். பகைவனிடம் தோற்ற அவமானமும் இழிவும், மாறாத சினமும் கொண்டுள்ளேன். வேறு புகல் இல்லாததால், அலைகடல் போலக் கவலை அடைந்திருக்கிறேன். சிறந்த தாய்போல வருபவனே! நான் கரைஏறக் கப்பல்போல நீ எனக்குக் கிடைத்தாய். உன்னைத்தவிர எனக்கு வேறுகதியில்லை' என்று, பின்னும் வேண்டினான்.*

72

கருணைவா ரிதியே இற்றைநாள் போரில்
தகைந்துகாத் திரட்சித்த தாலே
புரம்இவண் ஆத்தி வனத்தில்உன் கோயில்
புதியன பணிகளாய்ச் செய்து,

பரவிட உறுவேன் பரமனே இன்னும்
பணித்தன பணிகளும் பரிப்பேன்
வரம்அளித் தருள்வாய் மறைவளர் வாணா
வரதனே எனவணங் கினனால்.

*'காருண்யக்கடலே! பரமனே! போரில் நீ உதவி செய்து ரட்சித்தால்தான் ஆத்திவனத்தில் உன் கோயிலுக்குப் புதிய பல திருப்பணிகள் செய்து, உன்னை வணங்க வருவேன். இன்னும் நீ உத்தரவிடும் பணிகளை எல்லாம் செய்வேன். வரம்தந்து அருளுக! வேதங்களை வளர்த்து வாழ்பவரே! வரம் தருபவரே!' எனக்கூறி வணங்கினான்.* 73

## இறைவன் போர் வீரனாக வந்தமை

என்றமன் னவனுக் கிரங்கியே பொருதற்
கெய்துநா ளும்நீ நென்னல்
சென்றென முயல்வாய் என்றச ரீரித்
திருவுள வசனம்மே விடலும்
நன்றென மகிழ்ந்து மற்றைநாள் எழுந்து,
நால்வகைத் தானையோ டணைந்து
வென்றிடப் பொரும்அவ் வேளையில் கொன்றை
வேணியன் வீரர்போல் எழுந்தான்.

*இப்படி வருத்தத்துடன் கூறிய பாண்டிய மன்னனிடம், இறைவன் இரக்கம் கொண்டார். 'நாமும் போர்செய்ய வருகிறோம். நேற்றுப் போருக்குச் சென்றது போலவே, நாளைக்கும் சென்று, போர் முயற்சிசெய்' என்று, இறைவன் திருவுளப் படி அசரீரி வசனம் கேட்டது. 'நன்று' எனப் பாண்டியன் மகிழ்ந்தான். மறுநாள் காலையில் எழுந்து, நால்வகைப் படையுடன் வெற்றியை எதிர்நோக்கிப் போர்செய்யும் வேளையில், கொன்றையைத் தலையில் சூடிய பெருமான், போர்வீரனைப் போல வேடமிட்டுப் புறப்பட்டார்.* 74

மன்னவற் குவரி வருவது போல
வாம்பரி ஆயிரம் மள்ளர்
துன்னவே ஒன்றுக் கதிகமாய்த் தோன்றச்
சோழனும் கண்டுதன் சேனை
தன்னுடன் ஓடத் துரத்துபாண் டியற்குத்
தாதகி யான்முடி தன்னை
பன்னகா பரணன் பறித்தது சூட்டி
பல்வளம் சிறந்திடப் பரித்தான்.

கடல் பெருகி வருவது போலக் குதிரைகள் ஆயிரம் தாவி வந்தன. ஆயிரம் மல்லர்கள் சீறி வந்தனர். சோழன் கண்ணுக்கு அவை பலமடங்காகத் தெரிந்தன. சோழன் பயந்து, தன் சேனைகளுடன் ஓட்டம் பிடித்தான். அவனைத் துரத்தினான் பாண்டியன். ஆத்திமாலையணிந்த சோழனின் கிரீடத்தைப் பிடுங்கி, நாகாபரணராம் இறைவன், பாண்டியனுக்குச் சூட்டினார். 75

மானமும் மகிழ்வும் நல்கி வழுதிமன் னவற்குத் தானே
தேனலர் கொன்றை அண்ணல் திருவுரு மறைத்து வானில்,
தானச ரீரி ஒன்று தண்டமிழ் நாட்டில் நீயே
கோனணி முடியைக் கொண்ட கூடலான் என்றான் கோமான்.

மானத்தையும் மகிழ்ச்சியையும் பாண்டியனுக்குக் கொடுத்து, தேன்பில்கும் கொன்றை அண்ணலாம் சிவன் தன் திருவுருவை மறைத்து வானில் ஓர் அசரீரி ஒலி எழுப்பினார்.' கூடல் நகர்ப் பாண்டியன் சோழ அரசனின் கிரீடத்தைத் தரித்ததால், முடிகொண்ட பாண்டியன் எனப் பெயர் பெறுகிறான்' என்பது, அந்த அசரீரியின் ஒலியாகும். 76

வென்றுமுடி கொண்டபாண் டியன்என்னும் பெயர்விளங்க,
அன்றருளிச் செய்தனன்அந் நாயகற்கும் அப்பெயர்தான்
என்றும்நிகழ்ந் திடமன்னன் இறைஞ்சிவேண் டினன்இறையோன்,
நன்றுமகிழ்ந் தப்பெயரை நலம்பெறவே தரித்தனனால்.

பாண்டியனுக்கு முடிகொண்ட பாண்டியன் என்ற பெயர் நிலைத்திருக்குமாறு இறைவன் அருள்செய்தார். பாண்டியனும் அப்பெயர் இறைவனுக்கும் எக்காலத்திலும் நிலைத்திருக்க வேண்டினான். இறைவனும் மிகமகிழ்ந்து, 'முடிகொண்ட பாண்டீஸ்வரர்' என்ற பெயரைத் தரித்துக் கொண்டார். 77

அந்தநாள் முதல்என்றும் ஆத்திவன நாயகற்குப்
பந்தமாய் வென்றுமுடி கொண்டபாண் டியநாத
எந்தையார் எனஉலகம் ஏற்றிடநின் றனஇறைவன்
கந்தநாள் மலர்பரவிக் கசிந்துருகிப் போற்றினனால்

அந்தநாள் முதல் ஆத்திவன நாயகருக்குப் பொருத்தமாக 'வென்று முடிகொண்ட பாண்டிய நாதத் தந்தை' (முடிகொண்ட பாண்டீஸ்வரர்) என்ற பெயர் என்றைக்கும் உலகம் ஏற்குமாறு நிலைபெற்றது. பாண்டிய மன்னன், மணமுள்ள — அன்றலர்ந்த பூக்களால் அர்ச்சித்து, மனம்கசிந்து, உருக்கமுடன் இறைவனைப் பலவாறு போற்றினான். 78

## முடிகொண்ட பாண்டியனின் துதியும் தொண்டும்

வேத காரண! சரணம்; வென்றுமுடி
கொண்டுஅருளும்
நாத பூரண! சரணம்; நாயேனைப்
பொருள்படுத்தி,
வேதை,புரி மாற்றானை வென்று,அருளி
வெற்றிஅருள்
மாதுசேர் மேனி, மணிக்கிரீப!
வானவ! சரணம்.

*[வேதகாரண!— வேதங்கள் உன் திருவடிச் சிலம்பிலிருந்து தோன்றவும் வாழவும் காரணமானவரே!; நாத பூரண! — நாத மாகிய சுகசப்தத்தின் முழுமையானவரே!; நாயேனை— நாய் போன்ற— குறிக்கோளில்லாது அலைபவனும், வயிற்றுக்கு ஆகாது என்று கக்கியதையே மீண்டும் உண்பதுபோல — தீயது என அறிந்த பின்னும் தீது செய்பவனாகிய என்னை; பொருள்படுத்தி — அர்த்தமுள்ள வாழ்வு வாழ்பவனாக ஆக்கி; வேதை — வேதனை — இடையூறு; மாற்றானை — பகைவனை; மாது — உமையம்மை; மணிக்கிரீப! — மணிக்கிரீபா! வானவ— தேவரே.]* 79

ஆத்திவனத் தாலயமும் அணிவிழா முதலான
சூத்திரமும் திருநகரும் தொலைவிலாப் பெருவளமும்
பாத்திபன்செய் தனன்பதிக்குப் பெயர்பாண்டீ சுரம்என்றார்
சேத்திரநா யகன்மகிமை செப்பலாம் தகைமைத்தோ.

*முடிகொண்ட பாண்டியன் ஆத்திவனத்துத் திருக்கோயிலுக் குப் பல திருப்பணிகள் செய்தான். அலங்காரத் திருவிழாக்கள் நடத்தச் சூத்திரங்கள் (விதிகள் — நிபந்தங்கள்) செய்தான். திருநகரை வடிவமைத்தான். அழியாத பெரிய செல்வங்களைக் கொடுத்தான். (நிலதானங்கள் செய்தான்). ஆத்திவனத்திற்கு மக்கள், 'பாண்டீஸ்வரம்' என்று பெயரிட்டழைத்தார்கள்.* 80

## யுகம் மாறியது ; மண் மூடியது

மணித்திகழ்ந்த வழுதீசர் வரவுஇதுபின் கலியுகத்தில்,
மணிக்கிரிமைந் தனும்நகரும் மற்றும்உள வளங்கள்எலாம்
மணல்திடர்பட் டிடக்கிடந்த வருடம்அது சிலசெல்ல,
மணித்துகள்அற் றிடுவதென மற்றவைதான் வழியாலே.

*கண்டத்தில் நீலமணி கொண்ட வழுதீசர் (பாண்டீசர்) கோயில்கொண்ட வரலாறு இதுவாகும். துவாபர யுகத்துக்குப் பிறகு கலியுகத்தில், மணிக்கிரீபர் திருமேனியும், பாண்டியனும்,*

நகரமும் மற்ற மற்ற வளங்களும் மறைந்தன. மணல் திடராயின. அப்படிச் சிலவருடங்கள் கழிந்தன. பிறகு மணியிலே தூசை நீக்கினால் ஒளிவருவது போல, ஒரு நல்ல வழி தோன்றியது. *81*

பறித்திடப்பின் சிலதோன்றப் பதிக்கிடமாய் உறுவதென,
மறிக்கரத்தார் திருவருளால் மயிலின்வா ரணக்கொடியோன்
குறக்கொடியோ டினிதிருந்த கோலம்தோன் றப்பழைய
மறைப்பரமர் சிவலிங்க வடிவுதோன் றிடமகிழ்ந்தே.

மணல்திடரைத் தோண்டி எடுத்ததால், இங்கே ஓர் ஊர் இருந்திருக்கிறது என்று, மானைக் கையிலேந்திய சிவனருளால் அறியப்பட்டது. தோண்டிய இடத்தில் மயில் வாகனனாகிய கோழிக் கொடியுடையவனாகிய முருகன், குறக்கொடியாம் வள்ளி யுடன் காட்சி கொடுத்த திருமேனி தோன்றியது. பழைய வேதங் களின் நாயகனாகிய சிவனின் சிவலிங்கத்திருமேனியும் இருந்தது. *82*

## அரியநாயகன் திருப்பணி

பொருனைவளம் பதியார்கள் கண்டுபூ சித்தெழிலாய்
வருநாளி லேதொண்டை மண்டலவே ளான்தலைமை
அரியநா யகமன்னன் அவனிபுரந் திடும்அந்நாள்
பெருகவே சிவதருமம் பேணியே வருகின்றான்.

பொருனை நதியால் வளம்பெறும் ஊரைச் சேர்ந்தவர் கள், அந்தச் சிவலிங்கத்தையும் வள்ளிநாயகி சமேத முருகப் பெருமானையும் அழகாகப் பூசித்து வந்தனர். அப்பொழுது தொண்டைமண்டலத்திலே வேளாளர் தலைவனாகிய அரிய நாயகன் என்பவன், உலகில் பல தருமங்களைச் செய்து, பலரைக் காப்பாற்றிவந்தான். சிவதருமங்களைக் காப்பாற்றுவதும், தானும் சிவதருமங்களைச் செய்வதும் அவன் வழக்கமாகும். *83*

முன்செய்த தவமகிமை முற்றுதலாய் வரும்வேளை,
மின்செய்த வேணியற்கு விளங்குதிருப் பணிசெய்யப்
பொன்வந்த புயன்இங்ஙன் போந்திடவே புவிவாழ,
இன்னன்பின் தலமகிமை கேட்டுமகிழ்ச் சியின்எய்தி,

முற்பிறப்பில் செய்த தவமகிமை பழுத்த காரணத்தால், ஆத்தி வனத்தின் தலமகிமை கேட்டு மகிழ்ச்சியடைந்து, பொன் போன்ற தோள்களைக் கொண்ட அரிய நாயகன், மின்னும் சடையை உடைய இறைவனுக்குத் திருப்பணிகள் செய்ய ஆத்திவனத்திற்கு வந்தான். *84*

இதுபோலும் பேறுநமக் கில்லைஎன இணைஇல்லா
மதிவேணி தனைக்கண்டு வணங்கிமகிழ்ந் தன்பினால்,
துதிசெய்து கயிலாய நாயகா எனச்சொல்லிப்
புதியபணி செயஎண்ணிப் புண்ணியன்தன் அருள்வேண்டி,

*மதிதரித்த வேணியனைக் கண்டான். வணங்கி மகிழ்ந்தான். அன்புடன் துதி செய்தான். இதுபோன்ற பாக்கியம் எனக்கு வேறு இல்லை என்று கூறி, இத்தலத்துக்குப் புதிய திருப் பணிகள் செய்யப் புண்ணியனாகிய அரியநாயகன் 'கயிலாய நாயகா' எனச்செபித்து, அங்கே அவனருளை வேண்டி விரதமிருந்தான்.* 85

விரதமாய் அவண்இருந்தான் வேந்தவன்தன் கனவினிலே,
சரதமறை பூசிக்கத் தாழ்ந்தெமைவேண் டுதலாலே,
இரசதமால் வரைநீங்கி இவ்வுலகில் போந்தேமால்,
புரவலநின் மனம்நினைத்தல் கூடிவரும் எனப்புகன்றே,

*அரியநாயகனின் கனவில் இறைவன் தோன்றினார். "புரவலனே (தர்மவானே!) நீ வேதங்கள் சொல்லிப் பூசித்து, தாழ்ந்து வேண்டிக் கொண்டதால், வெள்ளிமலையிலிருந்து (கயிலாய மலையிலிருந்து) இவ்வுலகுக்கு வந்தோம். நின்மனம் நினைப்பது கூடிவரும்" என்றார்.* 86

ஆதலால் இத்தலத்தில் நமக்கருமைப் பணிஇயற்றிப்
பூதலம்போற் றுவைஎன்று புண்ணியன்அங் ஙனம்போந்தான்;
நீதன்இவை மனத்தெண்ணி நிருமலன்தன் அருள்போற்றிப்
பாதமலர் பணிந்தேத்திப் பணிசெய்யத் தொடங்கினான்.

*'இந்த ஆத்திவனத்தலத்தில் எமக்கு அருமையான திருப்பணிகள் செய்து, உலகத்தைக் காப்பாற்று' என்று, புண்ணி யன் மறைந்தான். நீதிமானாகிய அரியநாயகன், இறைவனின் உத்தரவை மனத்திலே சிந்தித்து, நிர்மலனாம் சிவனின் அருளை வியந்து, சிவனின் பாதங்களில் விழுந்து வணங்கிக் கோயில் திருப்பணிகளைத் தொடங்கினான்.* 87

கற்பகரம் முதலாக் கணபதிகூற் றாலயமும்,
சிற்பசாத் திரப்படியே செய்துதிருக் கயிலாய
வெற்பனுக்கு வடகீழ்பால் விமலைதிரு வுருஅமைத்து,
அற்புடனே அணைநாமம் அரியநா யகிஎன்றே,

*கர்ப்பக்கிரகம் முதலாகக் கணபதி கோயில் பிரகாரம் முதலியவற்றைச் சிற்பசாஸ்திரப்படி செய்து, திருக்கயிலாய மலையானுக்கு வடகிழக்கில் விமலையாம் அம்பிகைக்குத் திருவுரு அமைத்து, அன்புடன் அரியநாயகி என அம்பிகைக் குத் திருப்பெயர் சூட்டினான்.* 88

பெயர்விதித்து ப்ரதிட்டைசெய்து பின்புபஞ்ச லிங்கம்முதல்
செயல்பெறஅவ் விடத்தியற்றிச் சுற்றுசிக ரத்துடனே,
புயல்வளர்மென் சோலைகளும் பொன்னாடை ஆபரணம்
கயல்விழியார் முதலான கருவிகளும் கண்டனனால்

*அம்பிகையைப் பிரதிஷ்டை செய்தான். பிறகு சிறப்பாகப் பஞ்சலிங்கங்களை ஸ்தாபித்தான். சுற்றுக்கோபுரங்களைச் செய்வித்தான். மேகம் தங்கும் சோலைகளை உருவாக்கினான். இறைமூர்த்தங்களுக்குப் பொன்னாடைகள் வாங்கிச் சார்த்தினான். ஆபரணங்கள் வாங்கி அளித்தான். கோயில்பணிக்கு உதவும் கருவிகளான பணிப்பெண்களையும் நியமித்தான்.* *89*

வீதிவிழா முதலான மிகுபொருளும் முந்நூலோர்
ஓதுமட முவளகமும் உள்ளிட்ட முதல்அமைத்தான்;
நீதநகர்க் கரியநா யகபுரம்என் றேநிகழ்த்திப்
பூதலம் எலாம்புரந்து புண்ணியன்பொற் பதம்பெற்றான்.

*திருவீதிஉலா வருவதற்கு (திருவிழாக்களுக்கு) மிக்க செல்வம் கொடுத்தான். முப்புரிநூல் அணிந்த அந்தணர்கள் வாழ, மடவளாகம் அமைத்துக் கொடுத்தான். இவைபோன்ற பல பணிகள் செய்தான். நீதிபொருந்திய இந்நகரை 'அரிய நாயகபுரம்' என்று, உலகம் சொல்லப் பாதுகாத்துப் பின் இறைவன் திருவடியை அடைந்தான்.* *90*

ஆகத் திருவிருத்தம் - *1563*

# 3. புட்பவனப் படலம்

## விநாயகர்துதி

பூத லம்புகழ் பூவண நாயகன்
காதை யை,கரு திச்செயக் கந்தடு
போத கத்து முகன்,புழைக் கையினன்
பாத பங்கயம் போற்றிப் பரவுவாம்

உலகம் புகழும் திருப்பூவணத்துத் தலைவனின் கதையை, நன்கு சிந்தித்துக் கவிதை செய்வதற்கு, கட்டுத்தறியில் கட்டப் படும் யானையின் முகத்தைக் கொண்டவரும், துளை உள்ள துதிக்கையைக் கொண்டவரும் ஆகிய விநாயகரின் திருவடித் தாமரைகளைப் போற்றித் துதிப்போம். 1

## பூவணநாதர் துதி

உலகம்எலாம் உளம்குளிர உறுமகிழ்வின் வடிவாகி,
உம்பர் வாழும்
தலம், அதனுக்கு அமுதாகித், தமனியம்சேர் மழையாகிச்,
சான்றோர்க்கு எல்லாம்
பலம், உதவும் தருவாகி, நிதியாகி, மதியாகிப்
பரமா னந்தப்
புலன் அறிவாய் ஓங்கிவளர் பூவணநா யகன்பாதம்
புந்தி சேர்ப்பாம்.

உலகத்து உயிர்கள் எல்லாம் மனம் குளிரும்படியாகப் பொருந்திய மகிழ்ச்சியின் வடிவமாகத் திகழ்பவரும், தேவர்கள் வாழும் உலகுக்கு அமுதமாகிப், பொன்சேர்ந்த மழையாகி அறிவாற்றல்கள் மிக்க பெரியவர்களுக்கு எல்லாம் வலிமையாகி உதவுகின்ற கற்பகத்தருவாகி, செல்வமாகி, அறிவாகி, ஆனந்தங் களுக்கெல்லாம் மேற்பட்ட ஆனந்தமாகி, புலன்களின் உணர்வு களாகிய நுட்பமாகி ஓங்கி வளர்பவரும் ஆகிய திருப் பூவணத்துப் பெருமானின் திருவடிகளைப் புத்தியில் பதித்துக் கொள்வோமாக. 2

## பூந்தேவி அம்பிகை துதி

தவரூபம் முதல்ஈன்று தண்கிருபை தான்தளிர்த்துத்
தானாய் எங்கும்
அவனிமுழு வதும்,பூந்தேன், அரும்பிஅறம் தனைக்காய்த்தே,
அன்பர் உள்ளம்
சிவம்நிறையத் தான்பழுத்துத் தெய்வமணம் கமழ்ந்துலவத்
திகழும் செய்ய
புவன,வரை படர்ந்தகொடி பூந்தேவி அம்பிகைதாள்
போற்றி வாழ்வாம்.

*பூந்தேவி அம்பிகை, தவவடிவம் என்ற மூலதனம் ஈன்றவள்; குளிர்ந்த கருணை என்னும் தளிரானவள்; உலகம் முழுவதும் தானேயாகப் பூந்தேன் உள்ள அரும்பானவள்; தருமம் என்னும் காயாகக் காய்த்தவள்; அடியவர்கள் உள்ளத்தில் சிவம் நிறையும் படியாகப் பழுத்தவள்; பழத்தில் தெய்வமணம் கமழ்ந்து பரவும் படியாக விளங்குபவள்; செம்மையானவள். உலகம் என்னும் மலையில் படர்ந்த கொடிபோன்றவளாகிய அவளின் திருவடிகளைத் துதித்து, நல்வாழ்வு பெறுவோமாக.* 3

புயல்படி சோலைத் தென்திருப் பூவ
ணேசுர நாயகன் புகழைத்
தயவுடன் எங்கட் கருள்என நேமி
சாரணி யத்துறு தவத்தோர்
சுயமுலா வியமெய்ச் சூதமா முனியைத்
தொழுதடி பரவிட மகிழ்ந்து,
நயமுடன் தீர்த்த வைபவம் தெளிந்து,
நல்கிய சரிதையை நாமும்

*சுயம் என்னும் பிரம்மத்தைச் சரீரத்துள் உலாவ வைத்துள்ள சூதமுனிவரிடம் நைமிசாரண்யத்தில் உள்ள முனிவர்கள், 'மேகங்கள் படியும் சோலைகளைக் கொண்டதாகிய தென்திருப் பூவணேஸ்வரநாயகரின் புகழைத் தயவுசெய்து எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்று, அடிபணிந்து கேட்டுக்கொண்டார்கள். அவரும் திருப்பூவணத் தீர்த்தவிசேடம் உட்பட, அனைத்தையும் முனிவர்களுக்குத் தெளிவாகச் சொன்னார்.* 4

கொங்கலர் கொன்றைக் குழகனை வழுத்தும்
கோதிலாக் குணங்களில் மிக்க
உங்களுக் கறைவாம் என்றவன் உரைத்த
ஒப்பிலா மகிமையை உணர்ந்த

சங்கயோ கியரைத் தாழ்ந்திந்த வகையைச்
சாற்றிட வேண்டும்என் றிரந்து,
பங்கயம் வழுத்தும் வீரசே னற்குப்
பகர்ந்திடும் காதையைப் பகர்வாம்.

*'தேன் அலரும் கொன்றைமாலை அணிந்த இறைவனின் குற்றமற்ற குணங்களில், மேலானவற்றை உங்களுக்குச் சொல்வோம்' என்று, நைமிசாரண்ய முனிவர்கள் கேட்க, ஒப்பிலா மகிமை உணர்ந்த சங்கயோகி சொன்ன கதைஇது. அவரின் அடி வணங்கி யாசித்ததால், வீரசேனனுக்குச் சொல்லப்பட்ட கதை இது. இப்படிப்பட்ட கதையை, உங்களுக்கு நான் சொல்கிறேன்.* 5

புங்கவர் பரவும் பூவணே சுரனைப்
புனிதைபூந் தேவிஅம் பிகையைச்
சிங்கவா கனத்தாள் மயிடனைக் காய்ந்த
திரிமுனைச் சூலத்தாள் செப்பார்
கொங்கையில் ஆர்த்த கச்சிளங் குமரிக்
கொம்பனாள் துர்க்கையார் கோதை
பங்கய மலரால் பூசனை இயற்றிப்
பங்கயம் பரவியே வருநாள்,

*அக்கதையை வீரசேனன் கேட்டதற்கு இணங்கிச் சங்க யோகி தெரிவித்தார். இறைவனையே எப்பொழுதும் துதிக்கும் குற்றமற்ற குணங்கள் கொண்ட சிங்கவாகனத்தை உடையவளும், மகிஷாசுரனைக் கொன்றவளும், மூன்று முனைகள் கொண்ட சூலாயுதத்தை உடையவளும், செப்புப்போன்ற முலைகளை அடக்கிக் கட்டிய கச்சினையுடைய இளங்குமரியும், கொம்பு போன்றவளும் ஆகிய துர்க்காதேவி, தேவர்கள் வணங்கும் பூவணேஸ்வரரையும் புனிதம் மிகுந்த பூந்தேவியின் தாமரைபோன்ற திருவடிகளைத் தாமரைமலர்களால் பூசித்து வணங்கும் காலத்தில் இக்கதை நடந்தது.* 6

## வணிகனின் வாழ்வு

நிகழ்ந்ததோர் பருவம் நகரினில் சிறந்த
நேமியார் வழிபடு நேமி
புகழ்ந்தபூங் காஞ்சி புரத்தினுக் கருகாய்ப்
பொலிந்ததோர் புண்ணிய நகரில்,

திகழ்ந்திடும் வணிகன் தனந்தனிற் சிறந்தோன்
செந்திரு மாதுடன் வாழும்
அகழ்ந்தஏ னத்தான் வாழ்வென வாழ்வோன்
அவன்தரு மக்கள்ஓர் இருவர்.

*அரசர்கள் புகழும் திருமாலே, நகரங்களில் சிறந்தது காஞ்சியே எனப்புகழ்ந்தான். அப்படிப்பட்ட புண்ணிய நகரத்தின் அருகில் ஒரு வணிகன் நிறைந்த செல்வங்களுடன் வாழ்ந்தான். அவன் மனைவி ஸ்ரீதேவி போல இருந்தாள். பூமியைத் தோண்டிய, வராக அவதாரம் எடுத்த திருமாலின் பக்தனாக அவன் விளங்கினான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள்.* 7

புண்ணியம் கோடி பூவினில் பொலிந்து
போந்தபொன் அனையாள்இப் புவியில்,
எண்ணுதற் கரிய எழில்வளர் மேனிக்(கு)
இணைஇலா இம்பரில் சிறந்த
பெண்ஒரு கன்னி பிழைஇலாக் குமரன்
இவர்கட்கு மணங்களைப் பேணிக்
கண்ணினுக் கணியாக் கவின்மனை பெருக்கிக்
காதல ருடன்களிந் திடுநாள்,

*கோடிக்கணக்கில் புண்ணியம் ஒரு வடிவானதைப் போன்ற, தாமரை மலரில் உள்ள இலக்குமி போன்ற — எண்ண முடியாத அழகுவாய்ந்த உருவத்துடன் சிறந்த பெண்மகள் ஒருத்தி. பிழையே செய்யாத மகன் ஒருவன். வணிகன் மகளுக்கு மணமகனை — மகனுக்கு மருமகளைத் தேடித் திருமணம் செய்வித்தான். அவர்கள் இல்லறம் மேற்கொண்டார்கள்.* 8

## சண்பகவல்லியின் நிலை

மக்களைப் பிரிந்து மனையுடன் வணிகன்
வான்அடைந் தனன்மதி மருண்டு,
துக்கசா கரத்தில் பொருந்துதோன் றவரும்
ஒருதலை தேற்றிடத் துணிந்து,
தக்கஇல் லறத்தில் வாழும்நாள் தன்னில்
சண்பக வல்லிதன் கணவன்
மிக்கநீர் வேலை மரக்கலம் ஓடி,
விழைபொருள் கொணர்தும்நாம் என்ன,

*மக்கள் இருவரும் மணம்கொண்டு பிரிந்த காரணத்தால், தனிமை தாளாது வணிகனும் மனைவியும் இறந்தனர். இச் செய்தியால் மதிமயங்கித் துன்பக்கடலில் மூழ்கிய மகனும் மகளும் உறவினர்கள் தேற்றியதால், ஒருவாறு துயரத்திலிருந்து மீண்டனர். அவர்கள் இல்லற வாழ்வைத் தொடர்ந்தார்கள். சண்பகவல்லியின் கணவன், 'கப்பலில் வெளிநாட்டுக்குச் சென்று, தேவையான பொருள்களைச் சம்பாதித்து வருகிறேன்' என்றான்.* *9*

வாரிமேல் சென்றோர் இருதுவில் வருதும்
என்னவே மைத்துனர்க் கியம்பித்
தார்அணி புயத்தான் சென்றபின் வனிதை
தமையன்இத் தையலைக் காத்துச்
சீருடன் வரும்நாள் இருதுவும் கழிந்து,
சென்றதோர் வருடமும் செல்ல
நாரிதற் கிளையாள் கணவனைக் காணா
நலிதலைக் கண்டுநல் தமையன்

*சண்பகவல்லியின் கணவன், சண்பகவல்லியின் தம்பியாகிய மைத்துனனிடம், 'இரண்டு மாதங்களில் திரும்பி வருவேன்' என்றான்; மாலை அணிந்துகொண்டு கப்பலேறிச் சென்றான். அண்ணன் தன் தங்கையாகிய சண்பகவல்லியைப் பத்திரமாகவும் சிறப்பாகவும் காப்பாற்றினான். இரண்டு மாதங்கள் சென்றன. ஒருவருடம் கழிந்தது. தங்கையின் கணவன் வரவில்லை. தங்கை அடையும் துன்பத்தைக் கண்டு, அண்ணனும் வருந்தினான்.* *10*

## காஞ்சிக்கு வருதல்

வேலைமேல் சென்ற அருமைமைத் துனனை
மீட்பல்என் றெண்ணியே நமக்குச்
சீலம்உற் றிடுபாந் தவர்களும் இலைஇச்
சிறுமியை யார்அடைக் கலமாய்ச்
சாலவைத் திடுவர் என்றுளம் உன்னித்
தன்நகர் நீங்கியே சார்வில்
கோலம்ஆர் தங்கை அவளுடன் காஞ்சித்
திருநகர் குறுகியே அங்஖ன்

*'கடற்பயணம் சென்றவனை மீட்டு வரவேண்டும்' எனக் கருதிய அண்ணன், அதுவரை காப்பாற்றத் தகுந்த ஒழுக்கமான உறவினர்கள் தன் ஊரில் இல்லை என்ற காரணத்தால், 'இளையவளாகிய தங்கையை யாரிடம் அடைக்கலமாக ஒப்படைப்பது*

என்று சிந்தித்தான். அழகு பொருந்திய தங்கையை அழைத்துக் கொண்டு, தன் ஊரைவிட்டு நீங்கிக் காஞ்சிபுரத்தை அடைந்தான். 11

வணிகரில் ஒருவன் வசுதைநேர் பொறையான்
மதிநிகர் தயவினான் வாய்மைத்
துணிவுடை மனத்தான் தொலைவிலா நிதியான்
துணைவியும் சொலற்கரும் குணத்தாள்
தணிவுடை உளத்தார் இவர்களைச் சார்ந்தார்
தங்கையும் தமையனும் ஆகப்
பணிவுடன் நின்று பகர்ந்தனர் உங்கள்
பண்பினைக் கேட்டிவண் வந்தோம்.

காஞ்சிபுரத்தில் ஒரு வணிகன் பூமியைப்போன்ற பொறுமை உடையவன்; சந்திரனைப் போன்ற குளிர்ந்த கருணை உடையவன். வாய்மை பேச அஞ்சாதவன்; மனத்துணிவுள்ளவன்; அழியாத பெருஞ்செல்வம் கொண்டவன். அவனுடைய மனைவியும் சொல்லுதற்கு அரிய பல நற்குணங்களைக் கொண்டவள்; இத்தம்பதிகள் ஆசை தணிந்த மனமுள்ளவர்கள்; தங்கையும் அண்ணனும் இவர்களிடம் சென்றார்கள்; பணிவுடன் நின்றார்கள். 'உங்கள் பண்புகளை ஊரிலுள்ளவர்கள் சொல்லக் கேட்டு, உங்களிடம் வந்தோம்' என்று சொன்னார்கள். 12

## காஞ்சி வணிகனிடம் வேண்டுதல்

எனச்சொலும் வணிகன் தன்முகம் நோக்கி,
இறைதிருக் காஞ்சியூர் வணிகன்
மனத்துறும் கவலை முகத்தினில் நிகழ,
அருந்திரு மக்களீர் வந்த
வினைத்தொகை யாவ தென்னவே வினவ,
விளம்புவான் மேல்திசை யினிலே
தனித்ததோர் நகரம் தனில்அமர் குடியும்
தந்தைதாய் இறந்ததும் சாற்றி,

'அருமையான செல்வம் போன்ற மக்களே' உங்கள் மனத்தில் ஏதோ கவலை இருப்பதை உங்கள் முகம் சொல்கிறது. வந்த காரியம் என்ன என்பதை முழுமையாகச் சொல்லுங்கள்' என்று, காஞ்சியூர் வணிகன் கேட்டான். 'காஞ்சியில் மேல் திசை ஊர்க்காரர்கள் நாங்கள். தாயும் தந்தையும் இறந்துவிட்டார்கள்.' 13

இவள்எங்கை; கணவன் எறிதிரை முந்நீர்
ஏகின செய்தியும் இயம்பி,
அவனைநான் துருவிக் கொடுவர வேண்டும்
அற்றைநாள் வரைஇளை யவளைத்
தவம்உறு செயலீர் தயவுடன் காக்கும்
தத்துவம் உங்களுக் கென்ன
உவமைஇல் இவளே உங்கள்தம் புதல்வி
உறுதியாய்ப் பரிக்குவீர் என்ன,

*'இவள் என் தங்கை. இவள் கணவன் கடல் கடந்து சென்றான். குறிப்பிட்ட காலத்தில் வரவில்லை; நான் அவனைத் தேடிக் கொண்டுவரவேண்டும்; நீங்கள் நல்ல காரியம் செய்பவர்கள். எனவே நான் சென்று, இவள் கணவனைத் தேடிக்கண்டு அழைத்து வரும்வரை, இளையவளாக இருக்கும் இவளைத் தயவுடன் காப்பாற்ற வேண்டும். ஒப்புமை சொல்லமுடியாத இவள், இனி உங்கள் மகள். உறுதியுடன் காப்பாற்றுங்கள்' என்றான்.* 14

## அடைக்கலம்

கையினில் கொடுத்துப் பரவசம் செப்பிக்
கன்னியைக் காப்பது கடிதாம்
மெய்யிவண் வம்பாம் மிகுதியும் உளதாம்
மேன்மைநம் குலத்தினுக் கிழுக்கே
எய்திடா தருள்வீர் என்றிம்மூ வரையும்
இறைவியாள் காமக்கோட் டத்தின்
மைவளர் குழல்கா மாட்சிசந் நிதியில்
அழைத்துப்போய் வணங்கிமுன் நின்று,

*சண்பகவல்லியைக் காஞ்சி வணிகனிடம் அடைக்கல மாகக் கொடுத்தான். அடைக்கலம் ஏற்றமைக்காகப் பரவ்சம் அடைந்து, நல் வார்த்தைகள் சொன்னான். 'இளைய பெண்ணைக் காப்பாற்றுவதில் கடினம் உள்ளது. உண்மையில் புதுமையான காரியம் இது. இதில் மிகப்பல செய்திகள் உள்ளன. மேன்மை யான நம் வணிகர் குலத்திற்கு அவமானம் வராதபடி, காப்பாற்ற வேண்டுகிறேன்' என்று கூறி, காஞ்சி வணிகனையும், அவன் மனைவியையும், தன் தங்கையையும் கருங்கூந்தல் உடைய காமாட்சியின் கோயிலுக்கு அழைத்துச் சென்று வணங்கினான்.* 15

தோத்திரம் செய்து தாய்தந்தை இவர்பால்
துணைஎனச் சுருதிபோல் இவளைக்
காத்திட உரைத்தேன் கவுரிகா மாட்சிக்
கன்னியே நீயும்காத் தருள்வாய்
பூத்திகழ் பதத்தைப் போற்றினேன் என்றான்;
புனிதையாள் விடைபெற்றுப் புணரி
நீத்தமேல் சென்றான் தன்னையே நேடிச்
சென்றபின் நிகழ்ந்தவை இப்பால்,

காமாட்சியைத் தோத்திரம் செய்தான். 'வேதத்தைக் காப்பது போல் என் தங்கையை இவர்கள் தாய் தந்தைபோல இருந்து காப்பாற்ற வேண்டும் என ஒப்படைத்துள்ளேன். கவுரி! காமாட்சியே! நீயும் இவளைக் காப்பாயாக; உன் திருவடிகளையே தியானிப்பேன்' என்றான். தங்கையிடம் விடைபெற்றுக் கொண்டு, கடல்மேல் சென்றவனைத் தேடப் புறப்பட்டான். 16

பெண்ணினுக் காசை பெருக்கிய பருவப்
பெண்ணினைப் பெற்றவ ரினிலும்
புண்ணியக் குரவோர் போற்றுதல் செய்து,
புனைமணி மாடத்தில் பொலிவாய்
நண்ணியே கடிகொள் நாரியர்சூழ,
நாப்பணில் வைத்திவள் நமக்குப்
பண்ணிய தவமாய் வந்தவள் இந்தப்
பணிமொழி என்றுளே மகிழ்ந்து,

பெண்களுக்கே ஆசை வரும்படியான உருவ அழகுடன் இருந்த சண்பகவல்லியைப் பெற்றவர்களைக் காட்டிலும் புண்ணிய காரியமாக வளர்க்கும் காஞ்சி வணிகனும், அவன் மனைவியும் போற்றி வளர்த்தார்கள். மணிகள் பதித்த கன்னி மாடத்தில் தோழிகள் பலர் நடுவில் இருக்கச் செய்தார்கள். 'நாம்செய்த தவத்தால், இவள் நம்மிடம் அடைக்கல மாய் வந்தாள்' என்று, மகிழ்ச்சியடைந்தார்கள். 17

## அக்கினிவர்மனின் அக்கிரமம்

பேறிலா நமக்கோர் பேறென வந்த
பெண்கொடி இவள்எனப் பேணி,
ஈறிலா நமது தனங்களும் இவட்கே
என்றுதன் இல்லுடன் இயைந்தே,
மாறிலா மகிழ்வாய் இருக்கும்அந் நாளில்
வளம்படு காஞ்சியில் அரசன்
ஊறிலா தளிக்கும் கொற்றவன் மன்னன்
உறுவிர கத்தில்மிக் குள்ளான்.

'பிள்ளைப் பாக்கியம் இல்லாத நமக்குக் குறைபோக்க வந்தாள்' என்று, நன்கு காத்தார்கள். 'எண்ணற்ற நம் செல்வங்கள் எல்லாம் இவளுக்கே' என்று, முடிவு செய்தார்கள். வேறு குடும்பத்துப் பிறந்தவளாக அவளைக் கருதாமல், தம் பெண் ணாகவே கருதினார்கள். ஒப்பற்ற மகிழ்ச்சியுடன் இருந்தார்கள். அப்பொழுது காஞ்சியை வளம்மிக்க அரசன் மக்களுக்கு இடையூறு இல்லாமல் அரசாட்சி புரிந்து வந்தான். அவன் காமத்தால் விரகதாபம் கொண்டவனாக விளங்கினான். 18

அக்கினி வன்மன் என்னும் பெயரினன் அனங்கன் வாளி
தொக்கிய நெஞ்சி னான்பால் தூதுவர் உரைக்கும் செய்தி
மிக்கவேல் அரச கேண்மோ விண்அரம் பையரில் மேலாம்
தக்கநல் எழில்வேல் உண்கண் தாமரைத் தையல் போல்வாள்.

'அக்கினிவர்மன்' என்பது அவன் பெயர். மன்மதனின் அம்பால் துளைக்கப்பட்ட மனம்கொண்ட அவனிடம் தூதுவர்கள் ஒரு செய்தி கூறினார்கள். 'வேல் போரில் வல்ல அரசனே! கேளுங்கள். தேவலோகத்து அரம்பை முதலிய அழகி களைக் காட்டிலும் சிறந்த அழகி ஒருத்தி நம் ஊருக்கு வந்துள் ளாள். அவள் கண்கள் வேலைத் தோற்கடிக்கும்; அவள் மகாலட்சுமி போன்றவள்.' 19

வன்னச் சிந்துரம் வாய்ந்து மதம்பொழி
கன்னக் கச்சின் நிகழும் கறுத்துக்கண்
மின்னு மாமுலை யானையின் மேல்அணி
பொன்னந் தூசு முகபடாம் போன்றதே.

சிந்தூரம் போன்ற நிறம். மதநீர் பொழியும் யானையின் மத்தகங்கள் போன்ற முலைகள். முலைக்காம்புகளாகிய முலைக் கண்கள் கறுகறுத்துள்ளன. யானையின்மேல் முக படாம் போட்டதுபோலப் பொன்ஆடையை முலைகளின் மேல் போட்டுள்ளாள். 20

மலரில் தேன்உணும் வண்டெனும் மான்முகத்(து)
இலகு கண்ணுக் கிணைசொலில் இக்கெனும்
சிலையில் காமன் செறித்திடு நீலஅம்பு
உலகில் ஆடவர் தம்உயிர் உண்பதே.

தேனுண்ணும் வண்டுகள் போல அவளின் கருத்த கண்கள் சுழலுகின்றன. அதற்கு உவமை சொன்னால், மன்மதனின் கரும்புவில்லில் விடப்படும் நீலமலரைச் சொல்லலாம். அக்கண் கள், உலகில் உள்ள எல்லா ஆண்களின் உயிரையும் தின்று விடும். 21

இன்னமும் அவள்எழில் இயம்பக் கேண்மரோ
பின்னகத் துக்கிணை முகிலைப் பேசிடில்,
அன்னவை நேர்கிலா தகள தந்தரம்
பன்னிய சோமனும் நுதற்குப் பாதியே.

*இன்னமும் அவள் அழகைச் சொல்கிறோம்; கேளுங்கள். கூந்தல் அழகுக்கு மேகம் இணையாகாது; அவளின் நெற்றி யழகில் பாதியளவே சந்திரனின் அழகு உள்ளது.* 22

பண்சி றந்த பணிமொழி பைந்தொடி
விண்சி றந்த மதிமுகம் வில்லைநேர்
ஒண்சி றந்த புருவமெல் லோன்குகன்
கண்சி றந்திடும் ஊசலைக் காட்டுமே.

*இராகம் போன்ற குரல் உடையவள். பணிவான சொற்கள் சொல்பவள். பசும்பொன் ஆபரணங்கள் அணிந்திருப்பவள்; விண்ணுக்கு அழகுதரும் முழுமதி போன்ற முகம் உடையவள்; நேர்த்தியான வில்போன்ற புருவம் உடையவள்; மதிஒளி போன்ற கண்கள் உடையவள்; முருகனின் கண்ணழகு இவளின் கண்ணழகு. கண்கள் அசைவன ஊசலாடுவது போல் இருக்கும்.* 23

முத்தம் முல்லை அரும்பிவள் மூரலே
ஒத்த பைங்கழைத் தோளிபொன் ஒண்தொடி
கைத்த லம்தளிர் காந்தள் கவின்கொடி
எய்த்த நுண்இடை ஏந்திழைக் கென்பவே.

*அவளின் சிரிப்பழகு, முத்துகளின் அழகு; முல்லை அரும்புகளின் அழகு. அவள் தோள்கள், மூங்கில் போன்ற வழவழப் பானவை; அழகிய பொன்னாபரணங்கள் அணிந்துள்ள அவளின் கைகள், தளிர்போன்றுள்ளன; காந்தள் போன்றுள்ளன. அந்த அழகியின் நுண்மையான இடை, அழகிய கொடிபோன்றது.* 24

மேக லைக்கிணை மெல்லியல் ஆடைமேல்
மோக மைந்தர் உயிர்மொய்த்த முத்தமே
சோக பாசப்பொன் நாணில் துலங்கவே
போக வேள்தன் இருப்பிடம் போன்றதே.

*மேகலாபரணம் அணிந்துள்ளாள். அவள் ஆடைமேல் முத்துகள் பதித்துள்ளன. அவை முத்துகளல்ல; அவளை மோகித்த இளைஞர்களின் உயிர்கள்; போகத்தின் அரசனாகிய மன்மதன், பசிய பொன்நாண் கொண்டவன், வேறெங்கும் மனம் பதிக்காமல், அங்கேயே இருப்பிடமாகக் கொண்டுள்ளான்.* 25

பொன்னம் பூஞ்சிலம் பார்த்திடும் பூம்பதம்
அன்ன மென்னடை அந்தளிர் மேனியாள்
வன்னத் தூசணி மாமயில் சாயலாட்(கு)
இந்தி லத்தில் இணைஇலை என்பவே.

பொன்னால் செய்த சிலம்பு, அவள் பாதத்தில் ஒலி எழுப்புகின்றன. அவள் அன்னம்போன்ற மென்னடையாள். அழகிய தளிர்போன்ற மேனியினாள்; விதவிதமான பலவண்ண ஆடைகள் அணிகிறாள்; பெரிய மயில்போன்ற சாயல் உடையவள்; அவள் அழகுக்கு இவ்வுலகத்தில் இணை இல்லை. 26

சண்பக வல்லிஎன்னும் தளிர்நிறத் தையல் சாந்த
அண்படும் அயலூர் போந்த அணிகுழல் வணிகன் கன்னி
பண்படு சொல்லாள் இந்தப் பதிபுகுந் தணியள் செல்வ
நண்புடை வணிகன் இல்லில் நண்ணினாள் நங்கை என்னா,

தளிர்நிறம் கொண்ட அவளின் பெயர் சண்பகவல்லி என்பதாகும். அமைதியான பக்கத்தூரிலிருந்து வந்தவள்; வணிகனின் மகள். அவள் பேசினால் பண்ணுடன் பாடுவது போல இருக்கும். இவ்வூருக்கு, அண்மையில் வந்தவள். இவ்வூரில் மிகுந்த செல்வம் உள்ள வணிகனிடம் அடைக்கலமாக அடைந்தவள். 27

அவள்உனக் காகும் என்றார் அறிவிலா மன்னன் தானும்
தவம்இதன்று எண்ணான் வேறு தருமமும் நோக்கான் சாலப்
பவமிகு பழியும் ஓரான் பாதகன் மதன்அம் பாலே
இவளைஎவ் வாறு கொள்வ தென்றவன் எண்ணும் ஏல்வை,

'அவள் உனக்குப் பொருத்தமானவள்' என்று, தூதுவர்கள் காஞ்சி மன்னனிடம் கூறினார்கள். உடனே அரசன், இது தவமன்று என்று எண்ணவில்லை; தருமத்தை நோக்கவில்லை; மிகுந்த பிறப்புகளுக்கு ஏதுவான பழிவரும் என்று ஆராயவில்லை; அந்தப் பாதகன், மன்மதன் அம்பால் மயங்கினான். 'இவளை எப்படி அடைவது' என்று, யோசிக்கத் தொடங்கினான். 28

மந்திரர் அறியின் தீதாம் மந்தணம் ஆகத் தானே
புந்தியில் உரைபோ தித்த பொய்பழிக் கஞ்சார் தம்மை
வந்திடப் புகல வந்தார் தமைநோக்கி வணிகன் இல்லில்
முந்தியே புகுந்து மூக்கி வலியினால் முடிப்பீர் என்று,

'மந்திரிமார்கள் அறிந்தால், இந்தக் காரியம் நடக்காது; ரகசியமாகச் செய்யவேண்டும்; அறிவற்ற — சொன்னதைச் செய்யக்கூடிய — பொய் சொல்ல அஞ்சாத — பழிக்கு அஞ்சாத

— பேர்களை அழைத்து வாருங்கள்' என்று அக்னிவர்மன் தூதர்களிடம் சொன்னான். அவர்களும் அப்படிப்பட்டவர் களை அழைத்து வந்தனர். அவர்களிடம் 'வணிகன் வீட்டுக்குச் சென்று கலவரம் செய்யுங்கள். வலுக்கட்டாயமாக அவளைத் தூக்கிக்கொண்டு வாருங்கள்' என்றான். 29

## சண்பகவல்லி இறந்தாள்

மன்னவன் உரைத்த வாறே வணிகன்இல் வதியும் மாதைச்
சொன்னஅப் படியே கொண்டு சுருதியின் வழிநோக் காதான்
தன்இடத் துய்க்க வேறோர் தனிஇடம் சார ஏவ,
மின்னுமா டத்தில் வைத்தார் மேல்வரும் விளைவு நோக்கார்.

அவர்களும் அப்படியே செய்து, சண்பகவல்லியை வேதமார்க்கத்தை ஆராயாத அரசனிடம் சேர்த்தார்கள். 'வேறு ஒரு தனி இடத்தில் அளைச் சேருங்கள்' என்றான் அரசன். ஒரு ஒளி பொருந்திய மாடத்தில் அவளை வைத்தார்கள். என்ன நடக்கப் போகிறது என்பதை எவருமே சிந்திக்கவில்லை. 30

பின்பவன் தூதர் தாமே பேதையாட் கிசைக்கும் செய்தி
பொன்பணி ஆடை உள்ள புவனங்கள் போகம் யாவும்
உன்மனக் கிசையத் தானே உன்னதாப் பெறலாம் நீதான்
மன்மனக் கிணையில் பாதி ஆகநட் படைவாய் என்று,

மன்னனின் காமத்தூதுவர்கள் சண்பகவல்லியிடம், 'மன்ன னின் மனத்துக்கு ஏற்றபடி நீ நடந்துகொண்டால், பொன்னா பரணங்கள், ஆடைகள், நிலபுலன்கள், சுகங்கள் முதலியவை உனக்கே கிடைக்கும்; அவனுக்குச் சரிபாதியாக இருக்கலாம். அவனுடன் நட்புக்கொள்' என்று கூறினர். மன்னவனும் அங்கிருந்தான். 31

மன்னவன் உரையை மாற்ற மாதவள் வாளா நின்றாள்
இன்னம்ஓர் வேளை பேசி இணங்குதல் செய்வோம் என்று,
பொன்னினைப் பிரிந்து போனார் பொற்புறு கற்பு வாய்ந்த
மின்இடை என்செய் வாளாய் மிகுதுயர் எய்தி விம்மி,

அரசனின் உரையாகவே வந்த அப்பேச்சுக்கு அவள் பதிலேதும் சொல்லவில்லை. சிறிதுநேரம் கழித்துவந்து இன்னு மொரு முறை பேசிப் பார்ப்போம் என்று நினைத்து, அவர்கள் அந்த இடம் விட்டுச்சென்றார்கள். மதிப்புயர்ந்த கற்புடைய அவள், என்ன செய்வது என்றறியாமல் மிகத்துன்பப்பட்டு விம்மிவிம்மி அழுதாள். 32

கற்பெனும் படையி னாலே காரிகை உயிர்இ றந்தாள்;
அற்பனாம் மன்னன் தானும் அச்செயல் கண்டி ரங்கிப்
பொற்பினுக் குவமை இல்லாள் பொறைஇலி இவளை ஈமத்
திற்,புகச் செய்தும் என்னாப் பிணத்தினை ஈமம் சேர்த்தார்.

*கற்பு என்னும் ஆயுதத்தினாலேயே அப்பெண் தன்னை மாய்த்துக்கொண்டாள். அற்பனாகிய அரசன், இச்செயல் கண்டு இரக்கம் அடைந்தான். அழகுக்கு இணையில்லாத இவள், பொறுமையும் இல்லாதவள்; 'இவளைச் சுடுகாட்டுக்கு எடுத்துச்சென்று, கொளுத்திவிடுங்கள்' என்றான். 33*

பஞ்சுடன் மஞ்ச தான மஞ்சத்தில் படுத்தல் போலே,
வெஞ்சிதர்த் தானத் தேற்றி வெவ்வழல் மாலை போர்த்தார்;
அஞ்சன விழிக்கா மாட்சி அருளினால் அங்கோர் பூதம்
துஞ்சிய பிணத்தை வந்து தூக்கிஆ காயத் தூடே,

*பஞ்சுபோன்ற — மேகம்போன்ற படுக்கையில் படுக்க வைத்ததுபோல ஈமத்தில் அவளைக் கிடத்தி, கொடிய நெருப்பை மாலையாகப் போர்த்தினார்கள். மைபூசிய விழியைக் கொண்ட காமாட்சியின் அருளால், அங்கே ஒரு பூதம் வந்தது. பிணத்தைத் தூக்கிக்கொண்டு, ஆகாயத்துக்குப் போய் விட்டது. 34*

## நால்வர் இறத்தல்

கொண்டெழுந் தனவால் இப்பால் கொம்பினை இழக்கப்பட்ட
வண்டலர் கூந்தல் மாதும் வணிகனும் மன்னன் செய்த
மிண்டிறல் பழியை நாடி வெந்துயர் அடைந்து விம்மிக்
கண்தரு புனலில் ஆழ்ந்து கரைந்துநைந் தாவி சோரும்.

*வணிகனின் மனைவியும் வணிகனும் சண்பகவல்லிக்கு நேர்ந்தகதி மன்னனால் நடந்தது என ஆதாரங்களுடன் அறிந்துகொண்டார்கள். மன்னனின் பழி, நெருங்கிய பழி. அதனால் மிக்க துயரம் அடைந்தார்கள். விம்மி அழுதார்கள்; ஆழமான வடுவால் உருக்குலைந்து ஆவி தளர்ந்தார்கள். 35*

இருசிறை இழந்த புள்போல் இரங்கியே அலம்வந் தேங்கி,
எரியினில் வீழ்ந்து மாய்ந்தார் இவள்கண வனைமுன் தேடித்
துருவியே கொணரச் சென்ற தமையனும் துணைவ னோடே,
திரைவளர் பதியை நீங்கித் திருவளர் காஞ்சி சேர்ந்தார்.

*இரண்டு சிறகுகளையும் இழந்த பறவையைப்போல வருந்தினார்கள். இருவரும் இறந்துபோனார்கள். சண்பகவல்லியின் கணவனைத் தேடச்சென்ற சகோதரன், அவனைத் தேடிக்*

*கண்டுபிடித்து, அவனுடன் வெளிநாட்டிலிருந்து கடல்வழியாக வந்து, செல்வவளம்மிக்க காஞ்சிபுரத்தை அடைந்தான்.* 36

அவர்களும் இங்ஙன் உற்ற அரும்பழி கேட்டு வல்லே
தவம்முயன் றரிதின் பெற்ற தவர்கள்இத் தன்மை காணா(து)
உவர்கள்முன் உய்ந்தார் அந்தோ உறுதுணை யாக உய்த்த
இவர்களும் இவளால் அந்தோ இறந்தனர் வாய்மை யாலே.

*நிகழ்ந்தவற்றை ஊரார் சொல்லக் கேட்டனர். தவத்தில் சிறந்த வணிகனும் அவன் மனைவியும், இறந்த கோலத்தை உடனே சென்று பார்த்தார்கள். அன்றே இவர்களும் இறந்துவிட்டார் களே என வருந்தி, 'சண்பகவல்லிக்கு உற்ற துணையாக இருந்த இவர்கள் அவள் எய்திய துன்பத்தால் இறந்தார்கள்; வாய்மை காக்க இயலவில்லையே என்பதால் இறந்தார்கள்'.* 37

உயிர்கொடுத் துறுதியான புகழ்பெறும் உரவோ ரோடும்,
கயல்விழி மங்கை யோடும் கனலியில் எய்தி நாமும்
செயிர்அறும் உடலை நீத்துச் சேர்வதே திடம்என் றுன்னிப்
பயில்உடம் பதனை மாய்த்தார் பாவையாள் ஒருத்தி யாலே.

*உயிர்கொடுத்துப் புகழ்கொண்ட இந்த நெஞ்சுரம் படைத்த வணிகன், கயல்போன்ற விழியுடையவள் ஆகியவர் களுடன் நாமும் இறக்கவேண்டும் என நினைத்து, இருவரும் இறந்தனர். ஒருபெண் மரணத்தால், இத்தனை மரணங்கள் நிகழ்ந்தன.* 38

## அரசனைப் பிடித்த ஹத்தி

தீவினை புரிந்த வேந்தன் செய்கையால் ஐவர் மாய்ந்தார்;
பாவியாம் மன்னன் மாதை ஈமத்தில் படுத்த மற்றைக்
காவிநேர் விழியாள் வேந்தன் கலந்திடக் கவன்றான் என்னா,
ஆவியில் உறவு கொண்டு கலப்பதற் கணுகல் போலே,

*பாவியாகிய அரசனின் செயலால் ஐவர் இறந்தனர். நீலோற்பலம் போன்ற விழியாளைக் கலப்பதற்காக அவளை அரசன் திருடினான். அதனால் அவள் ஈமப்படுக்கைக்குப் போனாள். பேய் ஒன்று அவனைக் கலப்பதற்கு நெருங்கியதைப் போல....* 39

திரிஅத்தி வேந்தைச் சேரத் திகைத்துநன் மதிம யங்கிப்
பிரிவுற்ற மான்போல் எய்திப் பிதற்றிநாக் குழறி எய்த்தே,
எரியற்றி அலையில் எய்தும் துரும்பென இடர்உ ழந்து,
பொரியிற்ற பாவி நானே என்றெழும் போகும் மீளும்.

பெண்கொலைப் பாவப்பேய் அவனைப் பற்றியது. அரசன் பயந்தான். அறிவிழந்தான். காட்டில் வழிதவறிய மான்போலச் செயலறியாது தடுமாறினான்; பிதற்றினான்; நாக்குக் குழறினான். தூக்கி எறியும் எரிஅலையில் துரும்பு மாட்டிக்கொண்டது போல, மனம்பொசுங்கினான். 'பொரிந்து இற்றுப்போன பாவி நான்' என்று, எழுந்து கத்துவான்; ஓடுவான்; மீண்டும் ஓடிவருவான். 40

கோஎனும் இவன்செய் கின்ற கொடுமைக்குத் தக்க தீதோ
சாவினில் அதிகம்ஆன சங்கடம் சாரும் என்று,
யாவரும் இசைக்கக் கேட்டே யாது செய் குதும்நாம் என்னப்
பூவினில் வீழும் சோரும் புரிகுழல் தன்னைத் தேடும்.

'கோ' என ஓலமிடுவான். 'இவன் செய்த கொலைக்கு இத்தண்டனை போதாது; சாவைக்காட்டிலும் இன்னும் கொடிய தண்டனை இவனுக்கு வரும்' என்று, எல்லாரும் பேசினார்கள். அதைக்கேட்டு, 'நான் என்ன செய்வேன்?' என்று தரையில் விழுந்து சோர்வான். 'எங்கே அவள்?' என்று, இறந்தவளைத் தேடுவான். 41

## பரிகாரம்

மன்னவன் வருத்தம் தீர மந்திரி மார்மற் றுள்ளோர்,
என்னநாம் செய்தும் என்னா இருபிறப் பார்இ ருக்கிற்
சொன்னஅப் படியே செய்து துகளினைத் தீர்ப்போம் என்ன,
முன்னவர் தமைஅ ழைத்து முன்னம்இப் பாவம் செய்தார்,

மன்னவனின் வருத்தம் தீர்வதற்கு என்ன செய்யலாம் என்று மந்திரிப் பிரதானிகள் யோசித்தார்கள். இரு பிறப்பாளர்களாகிய அந்தணர்களிடம் சென்றார்கள். 'இருக்கு வேதத்தில் சொல்லியுள்ளபடி செய்து, குற்றம்தீர்ப்போம்' என்று, அந்தணர்கள் கூறினார்கள். 42

தீர்ந்தவர் உளர்கொல் என்னத் திருமறை யோர்கள் செப்பும்
காந்தழல் வேள்வி செய்து கபிலையைப் பனவற் கீந்து,
பாந்தமாய் அன்னம் சொன்னம் பலதெச தானம் பண்ணி,
ஆய்ந்தவர் பரிகா ரத்தின் விதிப்படி ஆற்றின் தீரும்,

இருக்குவேதத்தில் வல்லவர்களை அழைத்து, 'முற்காலத்தில் இப்பாவத்திலிருந்து விடுபட்டதுண்டா?' எனக் கேட்டார்கள். அவர்கள், 'பரிகாரவிதி உண்டு. நெருப்புப் பெருகும் பெரிய யாகம்செய்து, பசுமாட்டை அந்தணனுக்குத் தானம் கொடுத்து,

அன்னதானமும், சொர்ணதானமும் உள்ளிட்ட பத்துத் தானங்களும் செய்யலாம்' என்றும், 'வேதவிதிப்படி இவை நடந்தால், பரிகாரம் ஆகும்; தீரும்' என்றார்கள். 43.

என்றஅப் படியே செய்தார் இவ்வினை நீங்கல் காணார்
கன்றினை இழந்த ஆன்போல் கதறுவான் கற்பி னாளைக்
கொன்றஇப் பழிக்குத் தீர்வு குரவனால் தீர்கில் அன்றி,
நின்றிடல் அரிதென் றெண்ணி நிருபனோ டெழுந்து போந்தார்.

அப்படியே செய்தும் வினை நீங்கவில்லை. அவ்வளவு கொடிய பாவமாக அது அமைந்துவிட்டது. கன்றினை இழந்த தாய்ப்பசுபோல மன்னன் கதறினான். வேள்வி செய்தவர்கள், 'கற்புடையவளைக் கொன்ற இந்தப்பழி, குருவினால் நீங்கினாலன்றி, வேறு உபாயங்களால் நீக்குதல் அரிது' என்று கூறிச் சென்றுவிட்டார்கள். 44

## ஆசாரியர் - காமாட்சி

ஆசிரி யனைப்போய்த் தாழ்ந்திவ் அரும்பிணி அகற்றவேண்டும்;
நேசனே என்று கூற நிமலையால் தீர்தல் அன்றிப்
பேசிடற் கரிய பாவப் பெண்பழி மற்றோ ராலே,
வீசிடத் தகாதென் றெண்ணி வேந்தனை அழைத்துக்கொண்டு,

மந்திரிகள், இராஜகுருவிடம் அரசனை அழைத்துக் கொண்டு சென்றார்கள்; பணிந்தார்கள். 'இக்கொடியதாகிய — நோய்போன்ற 'திரிஹத்தி' — பெண்கொலையால் வந்த பேய்த்தனத்தை நீக்கவேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்கள். குரு, 'இதைப் பராசக்திதான் தீர்க்க முடியும்' என்றார். குருவுடன் எல்லாரும் கோயிலுக்குப் போனார்கள். 45

அறம்திகழ் ஆசான் தானே அம்பிகை தனைப்ப ணிந்து,
சிறந்தகா மாட்சி தேவி திருமுன்னர் எய்தி இன்னான்
உறும்பிணி தீர்க்க வேண்டும் சங்கரி யேஎன் தாயே,
நிறம்தளிர் மேனி யாளே நித்தில நகையாய் போற்றி,

தருமவடிவான குரு, காமாட்சியைப் பணிந்தார். 'சங்கரியே! என் தாயே!' இவன் அடைந்த பிணி தீர்க்கவேண்டும். தளிர் நிறம் கொண்டவளே! முத்துச்சிரிப்புடையவளே..! 46

காரணி அமிர்த ரூபி கவுரிகா மாட்சித் தேவி,
பூரணி இமய ராச புதல்வியே புனிதர் பாகத்

தாரணி அகிலம் ஈன்ற அம்பிகை, அகிலம்உண்ட
நாரணற் கிளைய மாதே நங்கைஉன் அபயம் நானே.

*"லோககாரணியே! அமிர்தவடிவானவளே! கவுரி! காமாட்சி! தேவி! பூரணமானவளே! இமவானின் மகளே! சிவனின் பாகம் கொண்டவளே! அணியானவளே! உலகத்தை ஈன்ற அம்பிகையே! உலகத்தை உட்கொண்ட நாராயணனுக்கு இளையவளே! நங்கையே, நான் உன் அபயம்." 47*

பரித்திட வேண்டும் என்று பன்முறை பரவி நின்றே,
அரித்தடம் கண்ணி நீயே தீர்த்திடில் அன்றி வேறே
உரைத்திடப் புகல்ஒன் றில்லை வேந்தற்கென் றுறுதி கொண்டு,
விரைக்கம லங்கள் போற்றி விசனத்தின் மேவி னாரே.

*'அருள்செய்ய வேண்டும்' என்று, பலமுறை வேண்டினார். மந்திரிகளும் மற்றவர்களும் 'செவ்வரி உள்ள பெரிய கண்களைக் கொண்டவளே! நீயே தீர்க்காவிட்டால், அரசனுக்குச் சொல்லும்படியாக வேறு அடைக்கலம் இல்லை' என்று கூறி, மணம்பொருந்திய காமாட்சியின் திருவடித்தாமரைகளைப் போற்றி, விசனத்துடன் இருந்தார்கள். 48*

சிலபகல் கழிந்த பின்பு திருவுளத் திரங்கித் தேவி,
நலம்மலி குரவோன் கேட்க நவிலுவாள் கனவில் தோன்றிக்
குலமக ளுடன்ஐந் தோரைக் கொன்றமன் னவன்தன் பாவம்,
பலபகல் எரிவாய்க் கும்பி நரகிடைப் பயின்றிட் டாலும்,

*இப்படிப் பிரார்த்தனை செய்வதிலேயே சிலநாள்கள் கழிந்தன. குரு கேட்டுக்கொண்டதால், காமாட்சி மனம் இரங்கினாள். இராஜகுருவின் கனவில் தோன்றினாள். 'குலமகளுடன் ஐந்துபேரின் மரணத்துக்குக் காரணமானவன் எரிகக்கும் நரகத்தில் பலகாலம் கிடந்தாலும், அவன் பாவம் தீராது'. 49*

கழித்திடாப் பழிக்கு நம்பால் கரைந்தனை ஆத லாலே,
செழித்திடச் செய்தும் என்னாத் தீவினை தீர ஒன்று
வழங்குதும் எனவி ழித்தான் மன்னனை நோக்கும் போதில்,
அழன்றகுஞ் சியதோர் பூதம் பிணத்தினைக் கொடுவந் தங்கண்,

*'நீ என்னிடம் உருக்கமாக வேண்டிக்கொண்டாய். எனவே, அப்பாவம் கழிய ஒருவழி சொல்கிறேன்' என்று, சொல்லிக் கொண்டிருக்கும்போது, குரு விழித்துக்கொண்டார். எதிரில் இருந்த மன்னனைப் பார்க்கும்போது, நெருப்புப்போன்ற தலைமயிரை உடைய பூதம் ஒன்று பிணத்தினைக் கொண்டு வந்து, அரசனின் தலைமேல் வைத்துவிட்டுப் போயிற்று. 50*

அரசன்தன் சிரசில் ஏற்றி அகன்றது மேலும் முன்னை
உரைசெயற் கரிய துன்பத் தளவிலும் பதின்ம டங்காய்
விரைசெறி தாரான் எய்தும் வேதையைக் கண்டு வேந்தன்,
குரவனும் துயரம் எய்தி அன்னையைக் கும்பிட் டேத்தி,

*சொல்லமுடியாத அளவு துன்பத்தை திரிஹத்தியால் அனுபவிக்கிற மன்னன், மேலும் பத்துமடங்கு துன்பத்தை அடைந்தான். அவனடையும் துன்பத்தைக்கண்டு, இராஜ குருவும் வருத்தப்பட்டார். காமாட்சியைக் கும்பிட்டு வேண்டினார்.* 51

சந்நிதி முன்பு நின்று தையல்அன் னையைத்து திப்பான்
முன்அறம் வளர்த்த தேவி அல்லையோ முந்நூல் மைந்தன்,
மன்னுபா தகத்தைத் தீர்த்து வருபழிக் கஞ்சும் நாதன்
தன்னுடன் தீர்த்தல் பொய்யோ சாற்றுநீ இரங்க வேண்டும்.

*காமாட்சி சந்நிதியில் நின்று, 'அறம் வளர்த்த நாயகியே!' மாபாதகத்தை மதுரையில் பெருமான் தீர்த்தான். பழிக்கஞ்சிய பாண்டியனுக்கு உண்மை தெளிவித்தான். அதெல்லாம் பொய்யா? நீ சற்று இரக்கம் காட்டவேண்டும்."* 52

பெருநிலம் பரிக்கும் கோலான் பிணம்பரித் திருந்த இன்னல்
வருவினை களைவாய் என்றான் பிணமதும் வவ்விப் பற்ற
முருகலர் தாரான் சூட்டும் முடியினில் உடும்பு போலாய்க்
கலைஇலாத் துயரம் எய்தும் பொழுதினில் கவுரி பின்னும்,

*'பெரிய நாட்டைத் தலைமேலே தாங்கிய மன்னன், இப்பொழுது பிணத்தைத் தலைமேல் தாங்குகிறான். இது வினைக் கேற்ற துன்பமா?' என்றான். அப்பொழுது பிணம், மன்னன்தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, கிரீடத்தை உடும்புப் பிடி போலப் பிடித்துக்கொண்டு, எல்லையில்லாத இம்சை செய்தது.* 53

## காமாட்சியின் அருளுரை

எய்ப்பிடத் தினில்வைப் பென்ன இன்னும்ஓர் உறுதி கூறும்
திப்பிய குரவ கேண்மோ திருவளர் காஞ்சி மன்னன்
அப்பிணம் சுமத்த லோடும் அவனுடன் நீயும் ஏகிப்
பைப்பணி சுமந்த பாரில் பகீரதி முதலாம் தீர்த்தம்,

*காமாட்சி அசரீரியாகப் பேசினாள். 'தூய்மையான ஆசானே! கேள். காஞ்சி மன்னன் பிணம் சுமக்கிறான். அவனுடன் நீயும் சென்று, ஆதிசேடன் சுமக்கும் இந்த உலகத்தில் தலயாத்திரை, தீர்த்த யாத்திரை முதலியன செய்யுங்கள்.'* 54

எங்கணும் ஆடி அந்நீர் அஞ்சடை இறைவன் கோயில்
தங்கிடம் பணிந்து தாம்ப்ர வன்னிசேர் மருதின் கீழ்சார்
முங்கிடக் குணபம் பூவாய் முந்தியே மிதத்தில் காண்டும்
அங்கனம் இவன்தன் பாவம் அகன்றிடக் கடவ தென்ன,

*'கங்கை முதலாகிய நதிகளில் தீர்த்தமாடுங்கள். சிவன் கோயில்களுக்கெல்லாம் சென்று வணங்குங்கள். தாமிரபரணி நதிக்கரையில், மருதமரத்தின்கீழ்க் குளிக்கும்போது, பிணம் பூவாய்மாறி மிதக்கும். அப்படியே இவனுடைய பாவம் நீங்குவதாக!" என்றாள்.* *55*

அந்தர வாணியாலே அன்னைகா மாட்சி கூற,
வந்தனை செய்து வேறு வசனிக்க மாற்றம் இல்லை;
இந்தவெங் கோலத் தோடே இறைவனுக் கிமவான் செல்வி,
தந்தஉத் தரவால் தீரும் தாழ்வில்லை என்று நேர்ந்து,

*அசரீரி வார்த்தை கேட்டு, வழிபாடு செய்து, மகிழ்ச்சியில் வேறு வார்த்தை கூறமுடியாதவர்களாகி, மன்னனுக்குக் காமாட்சி தந்த உத்தரவுப்படி பாவம் தீரும். இனிமேல் காலம் தாழ்த்தக்கூடாது என்று முடிவெடுத்தார்கள்.* *56*

தேசிக னுடனே மன்னன் சிறந்ததம் பதியை நீங்கிக்
காசியில் எய்திக் கங்கை முதல்உள கவின்கொள் தீர்த்தம்
மாசுநீங் கிடவே ஆடி வல்வினை தீர வேண்டி,
ஈசன்மெய்ப் பதிகள் எய்தி இறைஞ்சியே பணிந்து போற்றி,

*இராஜகுருவுடன் அரசன் காஞ்சிபுரத்தைவிட்டுப் புறப்பட்டான். காசிக்குச் சென்றனர். கங்கை முதலாகிய அழகிய தீர்த்தங்களில், குற்றம் நீங்குமாறு குளித்தார்கள். கொடிய வினை நீங்கவேண்டும் என்று, சிவத்தலங்களிலெல்லாம் வழிபாடுசெய்து வணங்கினார்கள்.* *57*

அங்கண் அகன்று நருமதைகா ளிந்தி கோதா வரியமுனை
துங்க பத்ரி காவேரி தோன்றிக் கிடக்கும் திக்கிடையே
சங்கை இல்லாத் தீர்த்ததலம் எல்லாம் சார்ந்து தண்பொருந்தம்
பொங்கு தீர்த்தப் புனல் கண்டார் புணர்ந்தபாவ வினைவிண்டார்.

*நருமதை, காளிந்தி, கோதாவரி, யமுனை, துங்கபத்திரை, காவேரி, முதலிய தீர்த்தங்களில் குளித்தார்கள். எல்லாத் திக்கிலும் உள்ள ஐயமற்ற தலங்களில் வழிபட்டார்கள். பின்னர் நீர்பொங்கும் பொருனையைக் கண்டார்கள். வினைநீங்கும் நேரம் வந்தது.* *58*

## பிணம் பூவானது

புடைமா மருதின் குணபாலில் போந்தார் புயல்சூழ் சோலைகளும்
தடம்நீ டியதண் டலைவனமும் சார்ந்த கருப்பஞ் சாறொழுகிக்
கடம்நீ டியமுள் புறக்கனியில் கலந்த களையைச் சேறாக்கி,
இடம்நீ டியதண் வயல்விளைக்கும் எழிலார் பதியில் இறைகோயில்,

புடைமருதின் மேற்குத்திசைக்கு வந்தார்கள். மேகம் தங்கும் சோலைகளும் பெரியவழிகள் உள்ள காடுகளும், கருப்பஞ்சாறு ஒழுகி, பலாச்சுளையில் கலந்து சேறாகி இருக்கும் வயல்கள் நல்விளைச்சல் தரும் ஊராகிய புடைமருதில், இறைவனின் கோயிலைக் கண்டார்கள். 59

கண்டு நமது பவம்இங்குக் கரக்கும் என்னக் களிப்பெய்தித்
தொண்டர் ஆடும் துறைஎய்திச் சுமையாம் பிணத்தைத் தாங்கிவரும்
வண்தார் இறைவன் மூழ்கிடலும் வனிதைப் பிணமே மலர்ஆகித்
தண்டா நீரில் மிதந்திடலும் தாங்கா உவகை தலைக்கொண்டார்.

'இங்கே நம் பாவம் போகும்' என மன்னன் மகிழ்ந்தான். சிவ பக்தர்கள் குளிக்கும் பொருனைத்துறைக்குச் சென்றான். பிணத்தைத் தாங்கிவரும் மன்னன், பொருனையில் மூழ்கினான். வனிதையின் பிணம் மலராகிக் குளிர்ந்த நீரில் மிதந்தது. மன்னனும் இராஜகுருவும் மற்றவர்களும், அடக்க முடியாத மகிழ்ச்சி அடைந்தார்கள். 60

குரவோன் மூழ்க அவன்அடியில் குறுகி மன்னன் கும்பிட்டுக்
கரவாக் காத லுடன்ஆடிக் கவலை வெகுநாள் உற்றதெலாம்,
பரைகா மாட்சி அருளால்எம் பாவம் தீர இப்பதியை,
விரவிப் படிய நேர்ந்திடலால் வினைநீங் கினன்என் றுளம்மகிழ்ந்து,

இராஜகுருவும் தீர்த்தமாடினார். அப்பொழுதே மன்னன் குருநாதரைக் கும்பிட்டான். ஒளிக்காத காதலுடன் கூத்தாடினான். வெகுநாள் பட்ட கவலைஎல்லாம் பராசக்தியாகிய காமாட்சியின் அருளால் தீர்ந்தது. இப்பதிக்கு வந்ததால் தீர்த்த மாடியதால் வினை நீங்கியது என்று, உள்ளத்தில் மகிழ்ச்சி குடிகொண்டது. 61

கரைஇ லாத மகிழ்வுடனே கரையில் ஏறிக் கறைமிடற்ற
பரனை ஏத்திப் பதம்பரவிப் பணிந்தான் செய்யும் வினைப்பவம்இத்
தரையில் நீங்கப் பெற்றனனால் தலத்தில் அதிகம் இவைஎன்று,
விரைஆர் மலர்கள் கொடுவந்து விமலற் போற்ற வேண்டும்என,

*கரையில்லாத மகிழ்ச்சியுடன் நதியிலிருந்து கரையேறி, கறை பொருந்திய கழுத்தைக்கொண்ட சிவனைப் புகழ்ந்து, திருவடிகளை வணங்கிப்பணிந்தான். பிராரப்த வினைப்பாவம் நீங்கி விட்டது. எனவே, விசேடமான தலம் இது. இனி, மணமுள்ள மலர்களைக் கொய்து கொண்டுவந்து, இறைவனை வழிபடவேண்டும் என்று கருதினான்.* *62*

## குருவணக்கம் – பூசை

தலத்தின் மகிமை மிகஎண்ணி தணவாத் துயரப் பெண்பழிஎத்
தலத்தும் தீரா ததனைஇந்தத் தலத்துத் தீர்த்த தயவுபுரி
நலத்த கங்கா தரர்போற்றி நவைதீர்த் தாண்ட நறுமலர்சேர்
சலத்த சடையும் கரந்தென்னைத் தான்ஆண் டருளும் சற்குருவே,

*திருப்புடைமருதூர் தலத்தின் மகிமையைப் பலவாறாக எண்ணினான். தணியாத துன்பத்தைக் கொடுக்கும் பெண் பழி எந்தத் தலத்திலும் தீராது. அதனை இந்தத் தலத்தில் தயவுடன் தீர்த்துவைத்த கங்காதரனைப் போற்றினான். அடுத்துக் குருநாதனைத் துதித்தான். 'மலரும் கங்கையும் மறைத்து என்னை ஆட்கொண்ட சற்குருவே'* *63*

ஈசன் வடஆல் நீழல்கீழ் இருந்த கோலம் கரந்தருளி,
ஆசான் ஆக எமைஆள அருணம் காட்டி அது பிடிக்க,
மாசில் மானே எனவந்து வடிவம் காட்டி மானிடமாய்
தேசு பொருந்த வந்தருளும் சிற்சற் குருதே சிகவாழ்வே.

*'வட ஆலமரத்தின் கீழே இருந்த கோலத்தை மறைத்து, ஆசானாக வந்த ஈசனே! என்னை ஆட்கொள்ளப் பொன்னைக் காட்டி, அதைப் பிடிக்க நான் முயன்றபோது, சாந்தமான மானுடனாய் ஒளியுடன் வந்து அருள்செய்த குருதேசிகனே! என் வாழ்வே!'* *64*

ஆசா பாசத் தெனைப்பற்றும் ஆபத் தேக அருள்செய்த,
ஆசா ரியனே அன்றிஒரு கருமம் இல்லை அவனாலே
ஆசா னதுநீங் கிடும்அன்றி அரனால் இயற்றும் அனைத்தறிவும்
ஆசா ரத்தால் பூசைபுரிந் தரனைப் போற்றப் பெறுவதுவும்,

*ஆசாபாசங்கள் என்னைப் பிடிக்கின்ற ஆபத்தில் இருந்து காப்பாற்ற அருள்செய்த ஆசாரியனே! உன்னைப் புகழ்வதைத் தவிர எனக்கு இனி வேலை இல்லை. குருவினாலே குற்றங்கள் நீங்கிவிடும். எல்லா அறிவுகளும் ஆசாரத்துடன் இறைவனைத் தொழுவதால் வரும். அந்தப் பயனும் குருநாதர் கொடுப்பதே ஆகும்.* *65*

எல்லாம் குரவ னால்அளிப்ப தன்றி உலகத் திருவினைக்கு,
நல்ஆ றுரைத்துப் பக்குவத்தின் வழியே நடத்தி நன்மைதரப்
பொல்லாங் குளதெல் லாம்கடிந்து போதம் கொடுத்துப்
புனிதன்அருள்
வல்லார் ஒப்ப மாட்சிதரும் குரவன் அருளே வலியதென,

*குருநாதர் நல்வினை தீவினை ஆகியவற்றின் வழிகளைச் சொல்லுவார். பக்குவத்திற்குத் தக்கபடி வழிநடத்திச் செல்வார். பழிபாவங்களை எல்லாம் நீக்குவார். ஞானத்தைக் கொடுப்பார். இறைவன் அருள்பெற்ற வல்லவர்களுக்குச் சமமாகப் புகழை ஏற்படுத்துவார். 66*

ஆசா ரியனைத் துதிசெய்திவ் அரன்அர்ச் சனையை ஆற்றுதற்குப்
பூசா நியமத் துறும்வழியைப் புகல வேண்டும் எனப்போற்றத்
தூசாய் யமுனை நீர்உடுத்த தோன்றல் குரவோன் சுருதிவழி
பேசா நிற்கும் விதிஉரைத்தான் பிறைசூ டியைப்பூ சித்திடவே.

*ஆசாரியனின் பெருமைகளை மேற்கூறியவாறு துதியாகச் சொல்லி, ஆசாரியனை நோக்கி, ‘ புடைமருதூர் இறைவனை அர்ச்சிப்பதற்குப் பூஜை நியமங்களைச் சொல்ல வேண்டும்?’ எனக் கேட்டுக்கொண்டான். யமுனா தீர்த்தத்தையே உடையாக உடுத்திக்கொண்ட குருநாதர், இறைவனைப் பூசிப்பதற்கு வேதத்தில் சொல்லியுள்ள விதிகளைச் சொன்னார். 67*

அரசன் வேண்டு வனஇயற்ற ஆசான் அர்ச்ச காளுடனே
சுருதி கூறும் விதிவழியே சுருதி நாதன் தனக்குவப்பாய்
வரைவி லாத அபிடேக மாலை சாந்தம் வகைசார்த்தி,
விரைசேர் நெய்வே தனம்அடைக்காய் வேள்வி வில்வ
அர்ச்சனைகள்,

*பிறைசூடிய பெருமானைப் பூசனை செய்ய, அரசன் உரிய ஏற்பாடுகளைச் செய்தான். குருநாதர் அர்ச்சகர்களுடன் வேத விதிப்படியாக வேதநாயகன் மனம் மகிழும்படியாக எல்லையில்லாத அபிஷேகங்கள் செய்து, மாலைகள், சந்தனங்கள் அணிவித்து, மணம்பொருந்திய நிவேதனங்கள் காட்டி, தாம்பூலம் காட்டி, யாகங்கள், வில்வ அர்ச்சனைகள் செய்தார்கள். 68*

ஈரெட் டான உபசாரம் இயற்றி இறைவற் கினிதாகச்
சீர்எட் டியதோத் திரம்உரைப்பார் செல்வர் தேவர் தமைப்புரந்த,
கார்ஓட் டியநேர் மணிகண்டா காலற் காய்ந்து கான்முளைக்கு
வீரட் டத்தில் விதிஅளித்த விமலா பரிவின் ணவர்கோவே.

பதினாறு உபசாரங்கள் காட்டினார்கள். இனிய இசையுடன் தோத்திரப் பாடல்கள் பாடினார்கள். 'சிவனருட் செல்வர்களையும், தேவர்களையும் காத்த கருத்த கண்டத்தைக் கொண்டவரே! எமனை வதைத்து மார்க்கண்டேயனுக்குக் கடவூர் வீரட்டானத்தில் அருள் செய்தவரே! மலங்கள் இல்லாதவரே! பரிவுடைய தேவர்களுக்கு அரசரே' 69

இந்நாள் என்னைத் துயர்செய்திரி அத்தி பாவ இடர்அகலத்
தன்ஆ தரவு தந்தாண்ட தரும் மூர்த்தி தாரணியில்
பொன்நா டென்னும் இத்தலபுண் ணியதீர்த் தத்தில் பிணம்பூவாய்
மின்னா நின்ற வகைசெய்த விமலா சரண்விண் ணவர்கோவே.

'என்னைத் துன்புறுத்திக் கொண்டிருந்த பெண்பாவத் தொல்லையை, ஆதரவுதந்து நீக்கி ஆட்கொண்ட தரும மூர்த்தியே! மண்ணுலகத்தில் உள்ள தேவநாடு என்னும் புகழ்பொருந்திய இத்தலத்தின் புண்ணிய தீர்த்தத்தில், பிணம் மின்னுகின்ற பூவாய் மாறும்படி வகைசெய்த இறைவனே! நான் உம்மைச் சரண் அடைகிறேன்.' 70

நாதா சரணம் எனைஆண்ட நம்பா நறிய நளினமலர்ப்
பாதா சரணம் பகைதீரப் பணியும் மதியும் அணிந்தசடைப்
போதா சரணம் பூவணமா நகரில் பூந்தே வியைப்பொருந்தும்
நீதா சரணம் சரணம்என நிருபன் துதித்து நின்றனனால்.

'தலைவரே! சரணம்; என்னை ஆண்டு கொண்ட சிவனே! நாறும் பூம்பாதம் கொண்டவரே! சரணம். பகை தீர்வதற்காகப் பாம்பையும் சந்திரனையும் அணிந்த சடையை உடைய ஞானமே! சரணம். திருப்பூவண நகரில் பூந்தேவி அம்பிகையைப் பொருந்தும் உயர் குணத்தவரே! சரணம்' என்றெல்லாம் காஞ்சிமன்னன் இறைவனைப் புகழ்ந்து துதித்தான். 71

## அடியார் வடிவில் சிவன்

புரவ லன்செய் பூசனைக் குவந்த வள்ளல் புரவலன்
பரிவு கண்டு துதியினுக் கிரங்கியே பரித்திடக்
கருதி யேஇ லிங்கம் நின்று கதிர்எ ழுந்த தென்னவே
வருணம் நான்கில் முன்பு வந்த மாத வத்தர் போலவே,

அரசன் செய்த பூசனைக்கு மனமிரங்கி, துதிக்கு மனமகிழ்ந்து, இறைவன் சிவலிங்கத்திலிருந்து சூரிய ஒளி புறப்பட்டது போல ஒரு பிராமண வடிவத்துடன் தோன்றினான். 72

புண்ட ரத்த நுதலும் மெய்,பு ணைந்தநூல் புரண்டதோள்
குண்ட லத்த கோலம் வாய்ந்த குறுநகைக்கு ணத்துடன்
அண்டர் தொண்டர் அன்புவாய்ந்த அவர்கள் உள்ளம் ஆகிய
முண்ட கத்த முந்து பாத முண்ட கத்தர் முன்நின்றார்.

*திருநீறு அணிந்த நெற்றியும், பூணூல் புரளும் தோளும், குண்டலம் பொருந்திய காதும் கொண்டு, புன்னகையுடன் தேவர்கள், அடியார்கள் ஆகியவர்களின் மனத்தாமரையில் அமரும் பெருமான் வெளிவந்தார்.* 73

அடிபணிந்து துதிசெய் கின்ற அரசை நோக்கி அடிகளாய்
வடிவு கொண்ட விமலர் கூறும் மன்ன நீயும் வழிபடும்
ஒடிவில் பூசை துதியினுக் குவப்பினால் மகிழ்ந்தனம்
படியில் வேண்டும் வரம்எ வன்ப கர்ந்தி டென்ன மொழிகுவான்.

*அடியார்போல் வந்த சிவனை அரசன் வணங்கினான். அவர், 'அரசனே, நீ செய்த குற்றமற்ற பூசை, தோத்திரம் ஆகியவை கண்டு, கேட்டு மகிழ்ந்தோம். உலகத்தில் உனக்கு என்ன வேண்டும் சொல்' என்றார்.* 74

## மன்னன் கேட்ட வரங்கள்

அய்ய என்நி மித்தம் ஆக அவமிருத்தி எய்தியே,
நைத லோடும் ஐவர் வாழ்வு நலிய வேஇ றந்தனர்
உய்யு மாறு புரிதல் வேண்டும் உந்தி நீரில் ஒழுகியே,
தையல் மேனி பூஅ தாக எய்தி டச்செய் தகைமையினால்,

*'தலைவரே! என்னால் மிகுந்த துன்பமடைந்து, ஐந்துபேர் அகால மரணம் அடைந்தார்கள். நான் அந்தப் பாவங்களில் இருந்து பிழைக்க வழிசெய்ய வேண்டும். என் தலையில் இருந்த பெண்பிணம், பொருனைநதியின் நீர்ச்சுழியில் பூவாக மாறியது.'* 75

தென்தி ருப்பூ வணம்அ தாய்ச்சி றந்தி ருக்க இந்நகர்
கொன்றை வைத்த குழக னேநி னக்கும் நின்கொ டிக்கும்மெய்
துன்றும் இத்து றைக்கு நாமம் தோன்று பூஅ தாகவே
நன்று நல்க வேண்டும் என்ன நாதன் நல்கி னான்அரோ.

*'பூவாக மாறிய ஊர் தென் திருப்பூவணம் என்னும் பெயருடன் விளங்க வேண்டும். கொன்றைமாலை அணிந்த பெருமானே! உனக்கும், உமா தேவிக்கும், இந்த நீர்த்துறைக்கும், பூவின் பெயரையே கொடுக்க வேண்டும்' என்று, வேண்டிக் கொண் டான். இறைவனும் அப்படியே அருள்செய்தார்.* 76

ஆன தால்அ வற்கு நாமம் அரியபூவ ணேசுரர்
தேன்அ தான மொழியி னாள்பூந் தேவி செல்வம் ஓங்கிய
தான மும்தென் பூவணம் தழங்கு தீர்த்தம் பூவணம்
மான்உ லாவு கையர் தந்த வரம்அ தான தென்றுமே.

மன்னன் பெற்ற வரத்தால் அத்தலத்து இறைவன் பூவணேசுவரர் என்றும், அம்பிகையின் பெயர் பூந்தேவி என்றும், செல்வம் மிக்க அவ்வூரின் பெயர் தென்பூவணம் என்றும், அங்குள்ள தீர்த்தத்தின் பெயர் பூவணதீர்த்தம் என்றும் வழங்கலாயின. மானைக் கையில்கொண்ட இறைவன் கொடுத்த வரத்தினால், அப்பெயர்கள் நிலைத்துள்ளன. 77

## ஐவரை அழைத்தல்

வரம்அளித் ததனை நல்ல மறையவன் நிதமும் போற்றிப்
பரவிய துர்க்கை தன்னைப் பார்த்திந்தப் தீர்த்தத் தின்பால்,
விரவிய மலர்கள் மேலே மிதக்கும்அம் மலரை வாரித்
தருகுவை மலர்யா தென்றால் தையல்தன் உருவமாகும்.

துர்க்கை கோயிலொன்று அங்கு உள்ளது. அந்தத் துர்க்கையை வேதப் பிராமணன் ஒருவன் தினமும் பூசித்துவந்தான். அந்தத் துர்க்கையை மன்னன் பார்த்தான்; வணங்கினான். வேத பிராமணனைப் பார்த்து, 'பூவண தீர்த்தத்திலே மிதக்கும் மலர்களிலே பெரியமலரை எடுத்துக் கொடுங்கள். அந்த மலர் சண்பகவல்லி ஆவாள்' என்றான். 78

யாதெனில் விபரம் சாற்றி யானைவேந் திவந்த னாலே
சாவது கருதிச் செற்ற சான்றவர் ஐவர் தம்மில்,
பூவில்நீர் ஒருத்தி அந்தப் பூவினுள் உதிக்கும் போக
மூவர்கள் வணிகர் ஓர்பெண் முயன்றிவண்அ ளிப்பாய் என்றான்.

சண்பகவல்லி மலரான வரலாற்றையும், ஐந்துபேர் இறந்து போன வரலாற்றையும் அரசன் கூறினான். 'பூவில் ஒருத்தி செண்பகவல்லி. பூவினை ஒட்டி மூன்று வணிகர்கள் காஞ்சி வணிகனின் மனைவி ஒருத்தி. இவர்களை உன் தவத்தால் அழைக்க வேண்டும்' என, மன்னன் வேண்டினான். 79

அருள்செய வேண்டும் என்றான் ஆற்றிடைத் தீர்த்தப் பாங்கர்
மருவியே மிதக்கும் பூவை உய்த்திடில் வனசப் பூவில்
திருஎன வருவாள் அந்தத் தீர்த்தத்தை நோக்கிக் கூவ,
வருவார்கள் மற்றை யோரும் வழங்குவை வல்லை என்றான்.

*மறையவன் துர்க்கையை நோக்கி, 'தீர்த்தத்தில் இருக்கும் பூவை எடுத்தால், தாமரைப் பூவிலிருந்து திருமகள் வருவது போல அவள் வருவாள். தீர்த்தத்தை நோக்கிக் கூவி அழைத்தால், மற்ற நான்குபேரும் வருவார்கள்; விரைவாக வரச்செய்' என்றான்.* *80*

துர்க்கையும் உடன்எ ழுந்து சோதியார் அளித்த வாறே,
மிக்கநீர் தன்னில் எய்தி மிதந்திடும் பூவை வாரி
அக்கரை தனிலே எய்தி அழைத்திட அவரும் போந்தார்
தக்கநீர் குளித்தெழுந்த தன்மைஒப் பாகத் தானே.

*துர்க்கை எழுந்தாள். தண்ணீரில் நடந்தாள். பூவை வாரி எடுத்தாள். அக்கரைக்குச் சென்றாள். மற்றவர்களையும் அழைத்தாள். குளித்தெழுந்து வருவது போல, மற்ற நால்வரும் வந்தனர்.* *81*

இவர்களோ டேகி நாதன் இணைஅடி பரவி நின்றாள்;
அவர்களும் பணிந்து நின்றார் அலரினை நீலி அங்கண்,
சிவசன்னி தானத் துய்க்கச் சிவன்அருட் பார்வை யாலே,
நவைஇலாக் கன்னி வந்து தோன்றினாள் நன்றிப் பூவில்.

*அனைவரும் இறைவனின் அடிகளை வணங்கினார்கள். பூவினைத் துர்க்கை, சிவன் திருவடியில் சார்த்தினாள். நல்லதாகிய பூவில் சிவன் அருட்பார்வையால், குற்றமற்ற சண்பகவல்லி தோன்றினாள்.* *82*

தையலும் எழுந்து போற்றத் தம்பரி சொழிந்து சார்ந்தோர்,
உய்வகை இவண்வந் துற்ற அதிசயம் ஓர்இ டத்தும்
தெய்வதம் இவர்போல் காணோம் செய்துநாம் கைம்மா றென்னே
பெய்திடு முகிலுக் குண்டோ பிரதியுப காரம் என்னா,

*சண்பகவல்லி எழுந்து வந்ததால், அனைவரும் மகிழ்ந்து, செய்வதறியாது திகைத்தனர். 'இது நாம் கடைத்தேறுவதற்கான அதியம். வேறெங்கும் நடவாதது. தெய்விக அதியம் வேறெங்கும் காண முடியாது. இதற்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்? மேகத்தின் உதவிக்குப் பிரதியுதவி செய்ய முடியுமா?' என்று அனைவரும் போற்றினர்.* *83*

## துதித்தல்

பாததா மரைகள் போற்றிப் பார்த்திபன் பணிந்தன் பாகப்
போதகம் உரித்துப் போர்த்த புயங்களுக் கபயம் பொற்பார்
மாதொரு பாகத் துற்ற வள்ளலுக் கபயம் மன்னும்
சீதள மதிஆர் சென்னித் திருமுடிக் கபயம் சேர்க.

*இறைவனின் திருவடிகளைப் போற்றியபடியே, அரசன் கீழே விழுந்து வணங்கினான். அன்புடன், 'யானைத்தோல் போர்த்த புயங்களுக்கு அபயம்;பொலிவுடன் உமையை ஒரு பாகத்தில் கொண்ட வள்ளலுக்கு அபயம்; நிலைபெற்ற குளிர்ச்சி யான பிறையைச் சூடிய திருமுடிக்கு அபயம்; போற்றி!'* 84

பூதநா யகனே போற்றி பூவண நாதா போற்றி
கோதைபூந் தேவி பாகா குணமெனும் குன்றே போற்றி
மாதுகா மாட்சி தேவி வழங்கிய கருணை யாலே
பூதலம் எல்லாம் போந்த புன்மையேன் பாவம் போக்கி,

*'பூதகணங்களின் தலைவரே போற்றி! திருப்பூவண நாதரே போற்றி! பூந்தேவியைப் பாகத்தில் கொண்டவரே போற்றி! குணக்குன்றே போற்றி! காமாட்சித்தாய் வழங்கிய கருணை யினாலே, முழுவதும் சுற்றியும் தீராத என் பாவத்தையெல்லாம் நீக்கியவரே போற்றி!'* 85

இத்தலம் அதனில் உய்ய இடர்கெடுத் தென்னை ஆண்ட,
முத்தனே போற்றி என்ன முகிழ்த்தகை முடிமேல் ஏற,
நைத்தஆ னந்த வெள்ளம் நயனங்கள் பொழியத் தேகம்
நெய்த்திடும் புளகம் பொங்கி நிமலனைப் போற்றி நின்றான்.

*'இத்தலத்தில் நான் பிழைக்கும்படியாக என் துன்பத்தை நீக்கி என்னை ஆட்கொண்ட முத்தரே போற்றி' என்று, கூப்பிய கையைத் தலைக்குமேல் தூக்கி, பீறிட்ட ஆனந்தக் கண்ணீர் வெள்ளமாகப் பெருக, உடல் இளகிப் புளகாங்கிதம் அடைய, இறைவனைப் போற்றி நின்றான்.* 86

## இறைவன் துறவியாக வந்தருளுதல்

பூவினில் உதித்து நின்ற சண்பக வல்லி போந்து
பாவிநான் என்னால் உற்ற பரிசிவை வேந்தனாலே
மேவிய செயலை எல்லாம் மறந்துவிண் ணவனைப் போற்றத்
தாவதன் போல்வந் தெங்கோன் அவர்கள்மேல் தயவு கூர்ந்து,

*பூவில் உதித்த சண்பகவல்லி முன்னே அரசன் செய்த செயல் களை எல்லாம் மன்னித்து — மறந்து, இத்தனை நிகழ்ச்சி களும் என்னால் நிகழ்ந்தவை' என்றுகூறி, இறைவனைப் போற்றினான். அப்பொழுது இறைவன் துறவிவேடத்தில் வந்து, ஐயவருக்கும் தயவு செய்தார்.* 87

அன்புளம் ததும்பி நின்றே அபயம்தந் தருள்பு ரிந்தே,
இன்பம்உற் றெல்லீர் நீவிர் இந்நகர் வதிந்தப் பால்நம்

பொன்பதி உற்றுத் தோழன் பொலிவெய்திப் புகழால் வாழ்வீர்
பின்புநம் உலகம் எய்திப் பேரின்பம் உறுவீர் என்றார்.

*அன்பு காட்டினார். அபயம் கூறினார். அருள் புரிந்தார். எல்லாரும் இன்பமாக இவ்வூரில் சிலகாலம் இருங்கள். அதன்பின் நம் தோழனாகிய குபேரனின் அளகாபுரி என்னும் பொன்பதிக்குச் சென்று, செல்வவளத்துடன் புகழுடன் வாழ்ந்து, அதற்குப் பிறகு சொர்க்கம் அடைந்து, பேரின்பம் பெறுவீராக. 88*

## அரசனுக்கு இறைவனின் கட்டளை

அன்னவர் விடைபெற் றேக அரசனை நோக்கிப் பாவம்
உன்னைவிட் டகன்ற தாகத் திரிஅத்தி உறவுக் கொன்று
பன்னியின் பரிகா ரத்தால் பகர்தும்நாம் இதன்கி ழக்குத்
தன்நிகர் கன்னி பேரால் தலம்ஒன்று செய்து தன்னில்,

*ஐவரும் விடைபெற்றுச் சென்றபின் அரசனை நோக்கி, 'உன் பாவம் நீங்கியது. பெண்கொலைப் பாவத்துடன் உறவாகித் திரிந்தாய். அதற்கு ஒரு பரிகாரம் சொல்கிறோம். இதன் கிழக்குத் திசையில், சண்பகவல்லி பேரால் ஒரு தலம் ஏற்படுத்து.' 89*

பொன்னினால் அவளைப் போலே பொற்புறும் உருவு செய்து,
மன்னுசண் பகமா தென்னும் பெயர்இட்டு ப்ரதிட்டை செய்து,
துன்னும்ஆ லயமும் செய்து சுபமிகப் பூசைக் காற்றி,
அந்நக ரத்தில் நூலோர்க் குவளகம் அமைத்துப் போற்றி,

*'அத்தலத்தில் சண்பகவல்லி போலவே பொன்னினால் ஓர் உருவம் செய். அந்தப் பொற்சிலையைப் பிரதிஷ்டை செய்து, கோயில் கட்டி, சுபபூசைகள் செய்ய நிதிகள் வைத்து, அந்த நகரத் தில், அந்தணர்களுக்கு அக்கிரஹாரம் அமைப்பாயாக.' 90*

அவர்கட்கு வேண்டும் செல்வம் அமைத்தவண் நிறுவி இந்தக்
குவலயத் தரனுக் கன்பாய் ஆலயம் கோலிச் செய்து,
நவம்நிகழ் குடியும் ஓம்பி நால்வகைச் சாதி அங்கம்
உவண்மஇல் திருநாள் வீதி உறுதிசேர் தரும சாலை,

*'அவர்களுக்குத் தேவையான செல்வம் கொடுத்து, சிவனுக்கு ஆலயம் அமைத்து, குடிமக்களையும் குடியேற்றி, நால்வகைச் சாதி யினருக்கும், திருவிழாச் செய்வதற்கும் ஏற்பாடு செய். நிரந்தரமான தருமசாலையையும் எந்தக் குறையுமில்லாமல் ஏற்படுத்து.' 91*

குறைவிலா தியற்றின் பாவக் குறைக்கிவை பரிகா ரம்தான்
இறைவனே செய்திப் பாரில் இன்னும்நல் வரங்கள் பெற்றுப்
பிறைவளர் மாடம் ஓங்கும் காஞ்சிமா நகரம் பேணித்
திறைகளும் கொண்டு பின்நாள் சிவபுரி சேர்வை என்று,

'பாவத்தில் மிச்சமுள்ளவற்றிற்கு இவை பரிகாரங்களாகும். அரசனே! இந்த உலகத்தில் இன்னும் நல்ல வரங்களைப் பெற்று, சந்திரன் தங்கும் உயரமான மாடங்கள் உள்ள காஞ்சிபுரத்தைத் திறைப்பொருள்களைப் பெற்று ஆண்டு, பின்னர்ச் சிவ புரியை அடைவாயாக' என்று, தவசியாக வந்த சிவன் கூறினார். 92

சங்கரன் உரைத்துச் சோதி ததும்பிய இலிங்கத் தெய்தத்
திங்களங் குடையான் போற்றிச் செப்புதற் கரிய இன்பம்
பொங்கிய கடலில் ஆழ்ந்து புளகம்உற் றினிஓர் போகம்
எங்களுக் குளதோ பெற்றேன் என்றிறும் பூதி னோடும்,

அப்படிக் கூறியபிறகு, ஜோதி வடிவமாக இலிங்கத்தில் புகுந்தார். சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையை உடைய மன்னன், சொல்லமுடியாத இன்பக்கடலில் ஆழ்ந்து, புளகாங்கிதம் அடைந்து, இதைவிடப் பெரியசுகம் ஏது? என்று கூறி, 'பெரிய சுகம் பெற்றேன்' என்று, பெருமிதம் அடைந்தான். 93

தோத்திரம் உரைத்துச் சிற்ப சூத்திரப் படிபொற் கோயில்
சாத்திர முறையே செய்யத் தகும்வினை ஞரைவ ரித்துப்
பூத்திகழ் வனத்தார் சொன்ன புதுமையை ஓர்ந்து போற்றிப்
பார்த்திபன் மகிழ்ச்சி கூர்ந்து பணிசெயும் பான்மை பூண்டான்.

இறைவனைத் தோத்திரம் செய்தான். சிற்ப சாஸ்திரம் வல்லவர்களை வரவழைத்தான். அந்தச் சூத்திரங்களில் சொன்ன படி, பூவணத்தார் சொன்ன புதுப்புதுமுறைகளின்படி, நன்கு ஆராய்ந்து, மகிழ்ச்சியோடு கோயிற்பணி மேற்கொண்டான். 94

## புதிய நகரும் கோயிலும்

இவைஎலாம் செய்யத் தக்க இரும்பொருள் வரித்துச் செய்வான்
சிவையுடன் இனிதிருக்கும் சிறந்தபூ வணத்தில் நாதர்க்(கு)
உவமைஇல் மண்ட பங்கள் ஓங்குசுற் றால யங்கள்
நவம்திகழ் கோபு ரங்கள் நாற்புற மதில்கள் மற்றும்,

இறைவன் இட்ட கட்டளைப்படி எல்லாப் பணிகளும் செய்யத் தேவையான செல்வங்களைக் காஞ்சிபுரத்திலிருந்து

*வரவழைத்தான். அம்பிகையுடன் இறைவன் எழுந்தருளியுள்ள தென்திருப்பூவணத்தில் உவமைசொல்ல முடியாத மண்டபங்கள், திருச்சுற்றாலயங்கள், புதுமை திகழும் கோபுரங்கள், நான்கு பக்கங்களிலும் மதில்கள் மற்றும் வேண்டுவன எல்லாம் அமைத்தான்.* *95*

வேண்டுவ அமைத்து வீதி விழாஅணி மாட கூடம்
பூண்டதெற் றிகளும் செய்து பூவண நகரும் செய்து,
காண்தகு வேள்விச் சாலை கதிதரு நியம சாலை,
நீண்டதாய் இயற்றிக் கீழ்பால் நிலத்தில்ஓர் நகரம் தன்னை,

*வீதிகள் அமைத்தான்; விழாக்களுக்கு ஏற்பாடு செய்தான்; மாடகூடங்களைக் கட்டினான். யாவற்றிலும் திண்ணைகள் அமைத்தான். தென்திருப்பூவணத்தை நகரமாகச் செய்தான். அழகான வேள்விச்சாலைகளையும், வேதபாடசாலை ஆகியவற்றையும் பெரிதாக அமைத்தான்.* *96*

## சத்திநகர்

சத்தியின் பெயரால் கண்டு சண்பக வல்லி என்னும்
நித்தியம் விளங்கத் தானே பொன்னினால் நிருமித் தந்த
உத்தம உருவைப் போற்றி ஓங்கும்ஆ லயமும் செய்து,
மெய்த்தவே தியர்கட் கில்லம் விதித்துவேண் டுபவும் செய்து,

*தென் திருப்பூவண நகருக்குக் கிழக்குப் பக்கத்தில், ஒரு கோயில் எழுப்பினான். அதில் பொன்னால் சண்பகவல்லிக்குச் சிலை எடுத்தான். அது நிலையாகப் பூசனைபெற ஏற்பாடுகள் செய்தான். தொகுதியாக அந்தணர்கள் வாழ்வதற்கு வீடுகள் கட்டினான். அவர்களுக்கு வேண்டுவன யாவும் செய்தான்.* *97*

சத்திமா நகரில் சத்தீ சுரனையும் தாபித் தங்ஙன்
நித்தியன் கோயில் செய்து நிருமலன் தனக்கு வேண்டும்
உத்தம வகைஇ யற்றிச் சொல்நிலைஉய் யானம் செய்து,
பத்தியாய்ப் பின்னும் வேண்டும் பணிகளும் செய்து பண்பாய்.

*சத்திமாநகரம் என்று அவ்வூருக்குப் பெயரிட்டான். சக்தீஸ்வரர் கோயில் கட்டினான். சிவனுக்கு வேண்டிய உத்தமப் பொருட்கள் யாவும் செய்தளித்தான். நந்தவனம் அமைத்தான். தொடர்ச்சியாகப் பல பணிகளைச் செய்தான்.* *98*

அன்னசா லைகள்நீர்ப் பந்தர் அறப்புறம் இயற்றி ஐவர்
தன்னைஈன் றளிக்க நின்ற சங்கரன் அருளால் வந்த,
கன்னிகை தனக்கும் வேறு கவின்கொள்ஆ லயம்இ யற்றிப்
பின்னைநீர் உலக மன்னன் பிஞ்ஞகன் தன்னைப் போற்றி,

அந்த ஊரில் அன்னசத்திரங்கள், தண்ணீர்ப் பந்தல்கள், தருமசாலைகள் ஆகியவற்றை அமைத்தான். ஐவரையும் பிழைக்கச் செய்த சங்கரனின் அருளால், ஐவருள் ஒருத்தியாக வந்த சண்பகவல்லிக்கு, வேறொரு கோயிலும் அழகாகக் கட்டினான். பிறகும் இறைவனைப் போற்றி வழிபட்டான். 99

திருவளர் பூவ ணத்தில் சிலபகல் வதிந்து காஞ்சிப்
பெருநகர் எய்திச் செங்கோல் பெருக்கியே இருந்தான் அங்கு
மருவிய வணிகர் தாமும் வரதனைப் போற்றித் தங்கள்
குருமணி மாடம் ஓங்கும் குலப்பதி தன்னில் எய்தி,

தென்திருப்பூவணத்தில் சிலநாள்கள் தங்கியிருந்தான். பின்னர்க் காஞ்சிநகருக்குச் சென்றான். அங்கே கூடிய வணிகர், இறைவனிடம் வரம்பெற்றவனாகிய மன்னனைப் போற்றினார்கள். ஒளிபொருந்திய மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்கள் ஓங்கியுள்ள காஞ்சியில் வாழ்ந்தான். 100

தனதன்போல் வாழ்ந்து பின்நாள் சங்கரன் பதவி சார்ந்தான்;
முனைவன்தன் அருள்நி னைந்து மூவுல கோரும் போற்றித்
தனிநகர்ப் பூவ ணேசர் சரண்பணிந் தன்பி னாலே
மணியதோர் துர்க்கா தீர்த்தம் வளர்புட்ப தீர்த்தமாலோ.

குபேரனைப் போல வாழ்ந்து பிறகு இறைவன் திருவடி அடைந்தான். இவ்வரலாற்றை நினைந்து, மூன்று உலகத்த வரும் பூவனேசுவரரைப் போற்றிப் பணிந்து, அன்புடன் வணங்கினார்கள். 101

அக்கினி வன்ம தீர்த்தம் அன்றிநால் தீர்த்தம் அங்கண்
மிக்கதோர் இடப தீர்த்தம் விளங்கிய வருண தீர்த்தம்
முக்கிய முனிவர் தீர்த்தம் மூலதீர்த் தங்கள்ஆடித்
தக்கபூ வணனைப் போற்றித் தம்பதி சார்கின் றாரால்.

பக்தர்கள் துர்க்காதீர்த்தம், புஷ்பதீர்த்தம், அக்னிவன்ம தீர்த்தம், மேலும் இடபதீர்த்தம், வருணதீர்த்தம், முனிவர் தீர்த்தம், மூலதீர்த்தம் ஆகிய நான்கு தீர்த்தங்களிலும் நீராடிப் புண்ணியத்துடன் தத்தம் ஊர்கட்குச் செல்கின்றார்கள். 102

## அகத்தியர் வருகை

அகத்திய முனிவன் போந்தே அரியபூ வணத்தில் உற்ற
மகத்துவ தீர்த்தம் ஆடி ஆலய அரனைப் போற்றி,
சுகத்தருப் பதியில் உற்றான் கஞ்சமா மலரோன் போற்றி,
இகத்தினில் வரங்கள் பெற்றான் இதன்புகழ் எண்ணு றாவே.

அகத்திய முனிவர் தென்திருப்பூவணத்திற்கு வந்து, மகத்துவம் பொருந்திய தீர்த்தங்களில் குளித்து, ஆலயத்தில் உள்ள இறைவனை வணங்கி, வானுலகம் சென்றார். தாமரை மலரில் உள்ள பிரமனும் இங்குவந்து வரங்கள் பெற்றார். எனவே, இத்தலத்தின் புகழை எண்ணி மாளாது. 103

புண்ணியம் நிறைந்து விம்மும் பூவண நகரில் என்றும்,
நண்ணிய விசேடம் ஈதால் நயந்தவர் படித்தோர் கேட்போர்,
எண்ணிய பதவி சேர்வார் இத்திறம் உரைத்த யோகி,
அண்ணல்வாழ் அரிகை மேவும் கதையினை அறையல்
உற்றான்.

இவை, புண்ணியம் நிறைந்து விம்மிதத்துடன் உள்ள தென் திருப்பூவண நகரில் பொருந்திய விசேடங்கள் ஆகும். இவற்றை விரும்புபவர்கள், படிப்பவர்கள், கேட்பவர்கள் என்னென்ன பதவிகளை விரும்புகிறவர்களோ, அந்தந்தப் பதவிகள் கிடைக்கும். இப்படிச்சொன்ன சங்கயோகி, இறைவன் வாழும் அரியநாயகபுரத்தின் கதையைச் சொல்லத் தொடங்கினார். 104

ஆகத் திருவிருத்தம் – 1667.

# 4. அரிகைப் படலம்

## விநாயக வணக்கம்

திருவளர் அரிகையின் நாதர் செய்கையைக்
கருதிய காதையைக் கழற வெள்ளநீர்
தருமதம் பொழிந்தருள் தந்தி மாமுகத்(து)
ஒருவனை நாள்தொறும் உளத்தில் உன்னுவாம்.

*செல்வம் வளர்ந்துள்ள அரிநாயகபுரத்து இறைவனின் திருவிளையாடலை மனத்தில் நினைத்தவாறு சொல்ல, வெள்ள நீர்போல் மதநீர் பொழிந்து அருள்செய்யும் யானை மாமுகத்து ஒருபெரும் கடவுளாகிய விநாயகரை, நாள்தோறும் மனத்தில் நினைப்போமாக.* 1

## அரியநாயகர் வணக்கம்

நாரணனும் நான்மறையும் நளினம் மேவும்
நான்முகனும் வானவரும் நாகம் மேய,
வாரணனும் மனத்தாலும் அளவை யாலும்
வாழ்த்துதற்கும் எட்டாதார் அரிகை மன்னும்
காரணகா ரியம்கடந்த கருணை நாதர்
கவுரிபெரி யவள்பாகம் கலந்த யோகர்
ஆரணிந்த வேணியினார் அறுகு வேய்ந்த
அரியநா யகர்பாதம் அகத்துள் வைப்பாம்.

*[நளினம்— தாமரை; நாகம் — யானை; நாகம் மேய வாரணன் — இந்திரன்; அளவை—தர்க்கம் — இங்கே தர்க்கத்தின் ஓர் அங்கமாகிய அனுமானத்தைக் குறித்தது; கவுரி — உமை; ஆர் — ஆத்தி; ஆரணிந்தவேணியர் — ஆத்தியைச் சூடிய சடையை உடையவர்; அறுகு — புலி, யானை; அறுகு வேய்ந்த —புலித்தோலை அல்லது யானைத்தோலைப் போர்த்திக் கொண்ட.]* 2

## பெரியநாயகி வணக்கம்

சுரிகுழல் கவினும் தோடார்
சுந்தரக் குழையும் சோமன்
பரவிய முகமும் வாயும்
பைந்தொடிக் கரமும் பச்சை
உருவமும் தனமும் பொன்பட்டு
உடையும்,பூம் பதமும் ஓங்கும்
பெரியநா யகியார் பாதம்
பெட்புடன் பேணி வாழ்வாம்.

*[ சுரி —சுருள்; கவின்—அழகு; குழை— காதணி—இங்கே காதைக் குறித்தது; சோமன்— அமுதம்; தொடி— வளையல்; தனம் —முலை; பெட்பு — காதல்]* 3

வேதவி யாசர் சகமுனி வேண்ட,
விளம்பிய காதையை விரிவாய்
ஓதுதல் வேண்டும் சூதமா முனியே
ஒப்பிலா நின்பதம் பணிந்தோம்
ஆதர வுடனே என்றலும் முனிவன்
அம்பிகை கணவனைத் தொழுது,
மாதவர் நேமி சாரணி யத்தோர்
தமக்குரை செய்தனன் மகிழ்ந்து.

*சூதமுனிவரே! சுகர் என்ற முனிவர் வேண்டிக் கொண்டதற்காக, வேதவியாசர் சொன்ன கதையை விரிவாகச் சொல்ல வேண்டும் என்று, நைமிசாரண்ய முனிவர்கள் சூதமுனிவரின் திருவடிகளை வணங்கிக் கேட்டுக் கொண்டார்கள். அவரும் உமாமகேஸ்வரரை வணங்கி, அக்கதையை மகிழ்ச்சியுடன் சொல்லத் தொடங்கினார்.* 4

அச்சரி தையினில் தெளிந்தவர் புகன்றார்
அருந்தவச் சங்கமா யோகி,
பச்சைமே னியன்போல் பரித்திடும் வீர
சேனற்குப் பகர்ந்தனன் அதனில்,
நச்சர வணிந்த அரிகைநா யகனை
நச்சழல் தீர்ந்திட வேண்டி,
நிச்சலும் போற்றி நேமியோன் பரவ
நின்றதை நிகழ்த்துதல் செய்வாம்.

*அந்தக் கதையை நன்கு தெரிந்துகொண்டவர் சங்கயோகி என்பவர். அவர் கருப்பு நிறமுடைய வீரசேனர் என்பவருக்கு அதைச் சொன்னார். அக்கதையில் விஷப்பாம்பை அணிந்த சிவனிடம், சக்கராயுதம் கொண்ட திருமால், விஷத்தின்*

*காங்கை தீருமாறு தினமும் போற்றிப் பரவியவிவரத்தை இப்பொழுது சொல்கிறேன்.* *5*

## நஞ்சுண்ட வரலாறு

**தேவர்கள் அசுரர் மற்றைத் திசைஉளோர் திருமால் இந்த்ரன்**
**பூவில்வாழ் கின்ற புத்தேள் புண்ணிய இருடி யோரும்**
**தாவிலா அமுதம் துய்க்கப் பாற்கடல் தாழி தன்னில்,**
**மேவுமந் தரம்மத் தாக மிருகவா சுகிநாண் ஆக,**

*தேவர்கள், அசுரர்கள், பல திசைகளிலும் உள்ளவர்கள், திருமால், இந்திரன், உலகில் வாழும் அந்தணர்கள், புண்ணியம் செய்யும் ரிஷிகள் முதலியவர்கள் அமுதம் உண்ணவேண்டும் என்னும் ஆசையால் திருப்பாற்கடலில், மகாமேரு மலையை மத்தாக இட்டு, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கட்டி, கடையத் தொடங்கினார்கள்.* *6*

**சந்திரன் அடைய தாகச் சார்ந்திடும் தகுவர் ஓர்பால்**
**அந்தரர் ஒர்பு றத்தும் அணைத்துவா சுகிபா சத்தால்,**
**உந்தவே கடைய நின்றார் உமையவள் கணவன் தன்னைச்**
**சிந்தனை செய்யார் தங்கள் திறத்தினால் திருக வாங்கி,**

*சந்திரன் முதலிய தேவர்கள் ஒருபக்கமும், அசுரர்கள் ஒருபக்கமுமாக நின்றுகொண்டு, வாசுகிக்கயிற்றை இழுத்துக் கடைந்தனர். உமையின் கணவனாகிய சிவனை அவர்கள் சிந்திக்கவில்லை. தங்கள் திறமையையே நம்பி, மேருமலையைத் திருகினார்கள்.* *7*

**கடைந்திடும் போதில் அங்கண் கட்செவி கடைவாய் நஞ்சம்,**
**உடைந்திடப் பிரள யத்தில் உவரிநீர் உருத்தால் ஒத்துப்**
**படர்ந்திடக் கண்ட தேவர் பதைபதைத் துட.ல்து டித்தே,**
**அடைந்தனர் கயிலா யத்தில் அடைக்கலம் என்று தாழ்ந்தார்.**

*அப்படிக் கடையும்போது, கண்களையே செவிகளாகக் கொண்ட பாம்பின் கடைவாய்வழியாக விஷம் உடைந்தோடி வந்தது; பிரளயகாலத்தில் வெள்ளம் வருவது போல் வந்தது. அந்த நஞ்சு படர்ந்து வருவதைப் பார்த்த தேவர்கள், பதைபதைத் தார்கள்; உடல் துடித்தார்கள். கயிலாயத்தை அடைந்தார்கள். சிவனின் திருவடிகளில் விழுந்து, 'அடைக்கலம் தரவேண்டும்' என்றார்கள்.* *8*

**அண்ணலே போற்றி நின்னை அன்றியே நாங்கள் யாரும்**
**பண்ணவ ருடனே கீர வேலையிற் பதமுன் கண்டே,**

உண்ணவே எண்ணல் நன்றால் உய்விலாச் சிறியோம் செய்த
திண்ணிய பிழைபொ றுத்துத் திருவுளம் இரங்க வேண்டும்.

'தலைவரே! போற்றி! உங்களை அன்னியில், நாங்கள் எல்லாம் — தேவர்கள் எல்லாம் — பாற்கடலில், அமுதத்தை உண்பதற்காக — ஒரு நல்ல எண்ணத்திற்காக, பிழைசெய்து விட்டோம். பிழைப்பறியாத சிறியவர்களாகிய நாங்கள், அழுத்தமான பிழையைச் செய்துவிட்டோம். தாங்கள் பொறுத்தருள வேண்டும்; திருவுளம் இரங்க வேண்டும். 9

பாலர்கள் செய்யும் குற்றம் மேலவர் பரிக்கல் பாற்றே;
நீலமால் முதலோர் எண்ணும் நினைவொன்று விளைவ தொன்றே;
சீலமாய் இயற்றல் ஒன்று தெய்வத்தால் நடத்தல் ஒன்றாம்;
சாலஐ யுறவொன் றில்லை முன்னவர் சாற்றும் சொல்லே.

பாலர்கள் குற்றம் செய்தால், பெரியவர்கள் மன்னிக்க வேண்டும். திருமால் முதலானவர்கள் நினைப்பதொன்று நடப்பது வேறொன்றாகிப் போகிறது; ஒழுக்கத்துடன் நடத்துவது ஒன்று; தெய்வத்தால் நடப்பது ஒன்று. (செயல் நல்லதாயினும் தெய்வசம்மதம் வேண்டும்). இதில் சந்தேகமே இல்லை. இது முன்னோர்கள் சொன்னதேயாகும். 10

அப்படி ஆன தாலே அறிவிலா தியற்றும் எங்கள்
ஒப்பிலாப் பிழைபொ றுத்தே உய்ந்திட அருள வேண்டும்;
திப்பிய முதலே போற்றி! சிவதயா பரனே போற்றி!
பைப்பணி அணிந்தாய் போற்றி! பரமனே போற்றி என்று,

எனவே, அறிவில்லாமல் செய்த எங்களின் ஒப்பற்ற அந்தப் பிழையைப் பொறுத்துக்கொண்டு, நாங்கள் பிழைக்க அருள்செய்ய வேண்டும். திவ்வியமானவரே! முதலானவரே! சிவனே! தயாபரரே! படம் உள்ள பாம்பை அணிந்தவரே! பரமனே! போற்றி!' 11

முறையிட்ட சும்மை கேட்டு முனிவுடன் வந்த நஞ்சைப்
பிறையிட்ட சடையோன் சித்தத் திரங்கியே பிரப்பங் கோலில்
உறையிட்ட நந்திக் கேவ உழுந்தள வுய்க்கக் கொண்டே,
கறையிட்ட கண்டம் காட்டிக் கடவுளர் தம்மைக் காத்தான்.

இவ்வாறு பேரொலியாக முறையிட்டவற்றைக் கேட்டு மனமிரங்கி வேகமாகப் பொங்கிவந்த விஷத்தை, பிறை முடித்த பெருமான், பிரப்பங்கோலை வைத்துள்ள நந்திக்கு உத்தரவிட்டார். நந்தியும் விஷத்தை உழுந்தளவுக்கு உருட்டிக் கொண்டு வந்தார். அதனைச் சிவன் உண்டார். அது சிவனின்

கழுத்தில் தங்கியது. சிவன், மற்ற எல்லாக் கடவுளைரையும் காத்தார். 12

மால்அயன் வணங்கி நின்று வாரியில் பிறந்த நஞ்சம்,
சாலவும் எம்மைச் சீறிச் சார்ந்தன தீர்த்தாய் இன்னும்
கால்கின்ற விடத்தின் காங்கை யால்உடல் கறுத்துக் கன்னி
மேல்உள வினையி னாலே வருத்திடும் விளைவு தீர்ப்பாய்.

திருமாலும் பிரமனும் சிவனை வணங்கினர். 'பாற் கடலில் பிறந்த விஷம் சீறிப் பாய்ந்தது. அத்துன்பத்தைத் தீர்த்தீர். விஷம்கக்கிய காங்கையால், உடல் கறுத்துவிட்டது; கன்னிப் போய்விட்டது. இந்த வினைத்துன்பத்தையும், வருத்தத்தையும் தீர்த்துவைக்க வேண்டுகிறோம். 13

செயல்அழிந்து உன்னை யன்றிச்
செய்வினை திறம்பி டாதே,
உயிர்உண வந்த நஞ்சை,
உழுந்து அளவு ஆக்கி உண்டு,
தயவினால் பின்னும் காத்தாய்
என்றிடல் சழக்க தாமே
கயிலைநா யகனே கைம்மாறு
யாதுஎனக் கழல்ப ணிந்து,

நாங்கள் செயலற்று நிற்கிறோம். உம்மை விட்டால், செய்வினை மாறாது. உயிர்உண்ண வந்த விஷத்தை உழுந்தள வாக்கி உட்கொண்டு, எங்களிடம் வைத்த தயவால் காப்பாற்றி னீர் என்று புகழ்வது அபசாரம்தான். உம் ஆற்றலுக்கு இச்செயல் சிறிதேயாகும். கயிலைநாயகரே! உமக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்' என்று கூறித் திருவடிகளை வணங்கினார்கள். 14

## திருமாலும் பிரமனும் துதித்தல்

செக்கர்அம் சடையில் பாம்பும்
திங்களும் அணிந்தாய் போற்றி!
முக்கண்எம் பிரானே போற்றி!
முப்புரம் எரித்தாய் போற்றி!
கொக்குஇறகு அணிந்தாய் போற்றி!
கோமளை பாகா போற்றி!
பொக்கவர் மனத்துக்கு எட்டாப்
பூதநா யகனே போற்றி!

*[செக்கர் —சிவந்த ; கோமளை — உமை; பொக்கவர்— அன்பற்றவர்]* 15

சம்பு,சங் கர,மா தேவ
சுயம்புவே சரணம் போற்றி!
உம்பர்கள் தலைவா போற்றி!
உமையொரு பாகா போற்றி!
நம்பினோர் தம்மைக் காக்கும்
நாதனே போற்றி! போற்றி!
செம்பொருள் துணிவே போற்றி!
தெய்வநா யகனே போற்றி!

*[சங்கரன் —இன்பம் செய்பவன்; சுயம்பு — தாமே தோன்றியவன்; உம்பர் — தேவர்; செம்பொருள் — வேதம்.]* 16

## இறைவனின் அருளுரை

காங்கயன் தன்னை ஈன்ற கர்த்தனே விடத்தின் காங்கை
நீங்கிடச் செய்ய வேண்டும் எங்கட்கு நிமலா போற்றி!
தாங்கிடல் ஆற்ற கில்லேம் தற்பரா என்றார் தம்மைப்
பாங்கினில் அழைத்துக் கூறும் பண்பினைப் பகரல் உற்றாம்.

*'காங்கேயனை (முருகனை) ஈன்ற கர்த்தாவே! விஷத்தின் காங்கையையும் தாங்களே நீக்கவேண்டும். மலமற்றவரே! விஷக்காங்கை தாக்குவதைப் பொறுக்க முடியவில்லை. தற்பரா (தனக்குமேல் ஒருபெரும் பொருள் இல்லாதவரே') என்று முறையிட்டார்கள். சிவன் அவர்களை அருகில் அழைத்துப் பேசினார். அந்தப் பண்பைச் சொல்கிறார்.* 17

மாலயன் தன்னைக் கொன்றை மாலையன் அழைத்துச்சொல்வான்
ஆலவாய்ப் பணிஅளித்த விடம்இது அழலம் காலும்
ஞாலத்தின் அரிகை என்னும் தலம்அதில் நண்ணி நீவிர்
சூலத்த கடவுட் போற்றத் தொலையும்இவ்விட நோய் என்றான்.

*கொன்றைமாலை அணிந்த சிவன், மாலை, அயனை அழைத்து, "இந்த விஷம் ஆலகால விஷம். நெருப்பைக் கக்குவது. உலகத்தில் 'அரிகை' என்று ஒரு தலம் உள்ளது. நீங்கள் அங்கே செல்லுங்கள். சூலம் ஏந்திய கடவுளாகிய எம்மைப் போற்றுங்கள். இவ்விஷக்காங்கை தொலையும்" என்றார்.* 18

தி-36

## திருமால் பிரமர் சிந்தனை

ஆலத்தை அமுதாய் உண்டு வானவர்க் கருளிச் செய்தார்;
வேலையில் பிறந்த நஞ்சம் எமக்குவெவ் வழல்போல் ஆமோ?
பாலநேத் திரத்தார் கோபப் பார்வையின் பண்போ அன்றிச்
சாலநாம் வருந்தும் செய்கை யாதென எண்ணிச் சார்வார்.

*சிவன் விஷத்தை அமுதாக உண்டார்; நமக்கு ஏற்பட்ட காங்கை, விஷத்தின் வெப்பத்தால் ஏற்பட்டதா? சிவனின் நெருப்புக் கண்களால் ஏற்பட்டதா? மிகவும் நாம் வருந்துமாறு ஏற்பட்டது எதனால்? என்று எண்ணியவாறே, திருமாலும் பிரமனும் புறப்பட்டார்கள்.* 19

கருதியே இருவர் அந்தக் கயிலைநா யகன்அ ளித்த,
வரம்நினைந் தமல மூர்த்தி வந்தெமைப் புரக்கும் என்று,
சுருதியால் பரவித் தாழ்ந்து சுந்தரன் விடைகொண் டிப்பால்,
பரன்உறை தலங்கள் போற்றி அரிகையின் பால்உற் றாரால்.

*கயிலைநாயகன் அளித்த வரத்தை நினைத்தார்கள். 'அமலன், (சிவன்) நம்மைக் காப்பான்' என்ற நம்பிக்கையுடன் வேதம் ஓதினார்கள். சிவனிடம் விடைபெற்றுக் கொண்டார்கள். மண்ணுலகிற்கு வந்தார்கள். சிவத்தலங்களைப் போற்றினார்கள். "அரிகை" என்னும் ஊரைச் சிந்தித்தார்கள்.* 20

## அரிகை வருணனை

முகில்செ றிந்தபைந் துணர்மலர்ச் சோலையும் முகிழ்வாய்
நகில்செ றிந்தநா ரியர்பயில் வளங்களும் நதிசூழ்
அகில்செ றிந்தசந் தனவரைத் தென்றலும் அழகார்
துகில்செ றிந்திடு கொடிகளும் மாடமும் துலங்கும்.

*அவ்வூர், மேகம் தங்கும் சோலைகளை உடையது. அச்சோலைகளில் பசிய இதழ்களைக்கொண்ட மலர்கள் இருக்கும். முலைகளை இறுக்கிக் கட்டிய பெண்கள் நடனம் ஆடுவர். வளங்கள் நிறைந்த ஊர். பொருனைநதி சூழ்ந்தது இவ்வூர். அகில், சந்தனமரங்கள் உள்ள மலையிலிருந்து தென்றல்வரும். அழகான துணிகளாகிய கொடிகள், மாடங்களில் கட்டப்பட்டிருக்கும்.* 21

ஏட்டி தழ்க்கம லங்களும் காவியும் இணைந்து,
காட்டும் ஒடையும் கனங்குழை மாதர்கள் கீத
நாட்ட மும்திகழ் நாவலோர் நால்வகைப் பாவால்
சூட்டு கானமும் மும்முர சோதையும் தொனிக்கும்.

ஏடுகளாக இதழ்களைக்கொண்ட தாமரைகளும், நீல மலர்களும் இணைந்து அழகுகாட்டும் நீரோடை ஓசையும், கனமான குழை என்னும் காதணிகளை அணிந்த பெண்களின் கீதஒலிகளும், நாவில் வல்ல புலவர்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகையான பாடல்களும் புனைந்து இசையுடன் பாடும் ஒலிகளும், திருநாள், படைநாள், திருமணநாள் என்னும் நாட்களில் கொட்டப்படும் முரசுகளும் அவ்வூரில் தொனிக்கும். 22

## திருமால், பிரமர், நகர் காணல்

என்றருள் வசனம் கேட்டே இவ்வுரை யினில்எ மக்குக்
கொன்றையன் விடம்தீ ராதே குவலயம் தனில்ஏ கென்ற,
வென்றியை அறிகி லேமால் எனவிதி யுடனே மாலும்
நன்றெனத் தவரை எய்தி அரன்செயல் நவிற்று கின்றார்.

என்றெல்லாம் இவ்வூரைப் புகழ்கிறார்கள். எங்களுக்குக் கயிலாயத்திலேயே, விஷக்காங்கையைத் தீர்க்காமல் மண்ணுலகிற்குச் செல்க என்ற சூட்சமத்தை அறிந்து கொள்ள முடியவில்லையே என்ற கவலையுடன், பிரமனும் திருமாலும் துறவிகளிடம் சென்று, சிவன் செய்த செயலைக் கூறினார்கள். 23

அதற்குமேல் திசையில் தென்பால் கயிலையை அகன்று போந்த
உதக்கினில் தரளம் சிந்தி உறும்கரை யினில்வி ளைந்த
நிதித்திரள் கன்னல் செந்நெல் நித்திலத் துடனே வாரிப்
பதிக்கணில் வீசு கின்ற பொருனையில் படிந்து போற்றி.

பொருனைநதி நான்கு திசைகளிலும் முத்துகளை வீசும். அதன் கரையினில் கரும்பும் செந்நெல்லும் செல்வமாக விளையும். ஊர்களுக்கு வளம் எற்படப் பொருனை, கருணை செய்யும். அந்தப் பொருனையில் திருமாலும் பிரமனும் குளித்தார்கள். பொருனையைப் போற்றினார்கள். 24

மாட மாளிகை மந்திரம்உ வளகம் சதுக்கம்
கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள் குழுமி,
ஆட ரங்கமும் அறம்பல இயற்றிய அணிசேர்
பீடு தங்கிய சாலையும் பிறங்குபே ரூரே.

மாடமாளிகை, அரசசபை, அந்தப்புரம், வளாகம், சதுக்கம், இரகசிய அறைகள், கோபுரம், திண்ணைகள், பொதுமக்கள் கூடும் கட்டடம், நடனம் ஆடும் அரங்குகள், தருமசாலைகள் வரிசையான பெருமை பொருந்திய சாலைகள் முதலியன உள்ள பேரூர் அதுவாகும். 25

வரைவ ளங்களும் மலைப்புற முல்லையின் வளமும்
திரைவ ளங்களும் செறிந்தன வீதியின் சிறப்பும்
உரைஇ றந்தன உம்பரும் இம்பரும் உலவும்
கரைஇ லாச்சிறப் போங்கிய நகரினைக் கண்டார்.

*இங்கே மலையில் விளைவன, காட்டில் விளைவன, கடலில் விளைவன ஆகிய பொருள்கள் எல்லாம் நிறையக் கிடைக்கும். வீதியின் அழகை வார்த்தைகளால் வருணிக்க முடியாது. தேவர்களும் மக்களும் தெருக்களில் உலாவுவார்கள். முடிவில்லாத சிறப்பு மிகுந்த இந்தநகரைப் பிரமனும் திருமாலும் கண்டார்கள்.* 26

## வழிபாடு

ஊர்தி நின்றிழிந் துவப்புடன் திருஎல்லை வணங்கி,
நீர்தி கழ்ந்திடும் வேணியன் நிலையம்அ தெய்தித்
தேர்தி கழ்ந்திடும் திருமுன்றில் பணிந்துசிந் தனையோ(டு)
ஆர்தி கழ்ந்தமெய் அன்புடன் சந்நிதி அணுகி,

*பிரமன் அன்னவாகனத்திலிருந்து இறங்கினார்; திருமால் கருடவாகனத்திலிருந்து இறங்கினார். மகிழ்ச்சியுடன் திருப்புடைமருதூர் எல்லையை வணங்கினார்கள். கங்கையை அணிந்த சடையவனாகிய சிவனின் கோயிலை அடைந்தார் கள். தேர்போன்ற கோபுரத்தை வணங்கினார்கள். நற்சிந்தனை களுடன் பொருத்தமான உண்மை அன்புடன் சந்நிதிக்கு வந்தார்கள்.* 27

பரவி அட்டபஞ் சாங்கமாய்த் தாழ்ந்தெதிர் பணிந்து,
சிரசின் மேல்கரம் குவித்துக்கண் துளித்திடத் திளைத்தே,
விரவு காதல்மெய் புளகம்உற் றிடவிதி மாயன்
கரம தாசலம் உரித்திடும் கடவுளைத் துதித்தார்.

*இறைவனைப் போற்றினார்கள். எட்டு அங்கங்கள் தரையில் படும்படியும், ஐந்து அங்கங்கள் தரையில் படும்படியும் (அஷ்டாங்க நமஸ்காரம், பஞ்சாங்க நமஸ்காரம்) செய்தார்கள். தலையின்மேல் கரம் குவித்து வணங்கினார்கள். அப்போது அவர்கள் கண்களில் ஆனந்தக்கண்ணீர் துளிர்த்தது. காதலால் உடம்பு புளகாங்கிதம் அடைந்தது. இறைவனைத் துதித்தார்கள்.* 28

முதல்வன் முன்றிலே தாங்கள்செய் திறன்எலாம் மொழிந்தார்;
அதில்நி கழ்ந்தன அவதிகள் யாவையும் அறைந்தார்;
மதிபு னைந்தருள் வளர்சடை மீதினில் வளம்சேர்
நதிபு னைந்தவ னேஅருள் செய்என நவின்றார்.

இறைவன் திருமுன்னிலையில், திருமாலும் பிரமனும் தாங்கள் செய்த செயல்கள் — பாற்கடல் கடைந்த வரலாறு பற்றிக் கூறினார்கள். நிகழ்ந்த நிகழ்வுகளையும், பட்ட பாடுகளையும் தெரிவித்தார்கள். 'மதிசூடிய சடையில் நதிசூடிய பெருமானே அருள்செய்க' என்று, வேண்டினார்கள். 29

தொண்டர் நாதனை அருச்சனை புரிந்திடத் தொடங்கி,
மண்டு காதலில் மஞ்சனம் மதுநெய்பால் முதலாய்க்
கொண்டு சந்தனம் அரனைநி வேதனம் குளம்பால்
தண்ட லைக்கனி வெள்ளிலை தண்புகை மற்றும்,

தொண்டர்நாதனாகிய சிவனுக்குச் சிறப்பு வழிபாடு செய்யத் தொடங்கினார்கள். செறிந்த காதலுடன் அபிஷேகம் செய்தார்கள். தேன், நெய், பால், சந்தனம், அபிஷேகம் செய்த பின் வெல்லம், பால், வாழைப்பழம் படைத்தார்கள். வெற்றிலை படைத்தார்கள். குளிர்ந்த தூபம் காட்டினார்கள். 30

வழுவில் ஆகம விதியினால் பூசித்து மனுவால்
பழுதில் வில்வஅர்ச் சனைசெய்து வேள்வியால் பரவி,
எழுநி கர்த்ததோள் இருவரும் இறைஞ்சிமுன் நின்று,
மொழிவர் தோத்திரம் முன்னவ முக்கண்எம் பிரானே.

குற்றமற்ற ஆகமவிதிகளின்படி பூஜைகள் செய்தார்கள். மணம்பொருந்திய பழுதற்ற வில்வங்களால் அர்ச்சனை செய்தார்கள். யாகங்கள் செய்தார்கள். கணையமரம் போன்ற தோள்களைக்கொண்ட திருமாலும் பிரம்மனும் இறைவனை வணங்கித் தோத்திரம் செய்தார்கள். முன்னவரே! மூன்று கண்கள் கொண்ட எங்கள் தலைவரே! என விளித்துத் துதிக்கத் தொடங்கினார்கள். 31

## திருமால், பிரமர், துதி

போத காரண சரணம்
புனித பூரண சரணம்!
சீத மாமதி அறுகு
திகழ்ந்த வேணிய சரணம்!
கோதை யாள்ஒரு பாகம்
கொண்ட கோமக சரணம்!
தாது லாவிய நினது
பாத தாமரை சரணம்!

[போத காரண — ஞானத்திற்குக் காரணமானவரே; பூரண— முழுமையானவரே; சீத —குளிர்ந்த; வேணி; கோதை

*— சிரம்; கோமக — தலைவரே; [தாது — மகரந்தம்; [தாது + உலாவிய = தாதுலாவிய]; சரணம் — அடைக்கலம்.]* 32

வேதகா ரண!ஓ!எம் வேதனையைத் தீர்க்க வரும்
நாதபூ ரண! ஓ! மெய் நாதாந்த நாயக! ஓ!
தாதுஉலாம் கொன்றைபுனை தற்பரா னந்த, சிவ
போத! ஓ! புண்ணிய!ஓ! புன்மை தீர்த்து எமை ஆள்வாய்!

*[வேதகாரண — வேதம் தோன்றக் காரணமானவரே!; நாத — தலைவரே; பூரண — முழுமையானவரே!; நாதாந்த — ஒலிகளின் தலைமையான (இறுதியான); தன்பரானந்த — தனக்குத்தான் அயலாகி ஆனந்திப்பவரே!; புன்மை— அற்பத் தனங்கள்; ஓ— அவலக்குறிப்பு; 'ஐயோ காப்பாற்றுங்களேன்' என்பது போல]* 33

எந்தாய் அகிலம்எலாம் ஈன்றாய் எமைஆள
வந்தாய்; நினையார்பால் வாராய்; மதியுடனே
கொந்துஆர் நறும்தொடையல் கொன்றையாய் கோமளம்சேர்
தந்தாய்; புரைசேர் தமியேற்கு இரங்காயே!

*[எம்+தாய் — எங்களின் தாய்போன்றவரே; நான்காவது வரியில் தந்தாய் — தந்தையே என வருவதால், எம்தாய் என்றே இதைப்பிரித்துப் பார்க்கவேண்டும்; அகிலமெல்லாம் ஈன்றாய் எனவருவதாலும், எம்தாய் எனப்பிரிப்பதே சரி என்றுஆகிறது. மதி—சந்திரன்; கொந்து— கொத்து ; ஆர் — பொருந்திய; நறும் — மணமான; தொடையல் — மாலை; கோமளம் — உமாதேவி; தந்தாய் — தந்தையே!; புரை — குற்றம்; தமியேற்கு — தனிமைப்படுத்தப்பட்ட எமக்கு]* 34

விண்ணோர் முதலே! விழுப்பொருளே! மெய்தெளிவார்
அண்ணா! அமுதே! அரனே! ஒருபாகப்
பெண்ஆர் திருமேனிப் பெம்மானே! பெட்புஉறு,நீர்த்
தண்ஆர் சடையாய்! தமியேற்கு இரங்காயே!

*[விண்ணோர் — தேவர்கள் ; முதலே — மூலதனமே; விழுப்பொருள் — குற்றமற்ற பொருள் ; மெய் — உண்மை, சத்தியம் ; அண்ணா — அண்ணலே — ஆடவருள் சிறந்த தலைவரே; பெட்பு — விருப்பம்; உறு — பொருந்திய; தண் — குளிர்ச்சி ; நீர் — கங்கை; இரங்காயே — இரக்கப்படு]* 35

என்றின்னன துதிகூறினர் இரந்தேஇரு வோரும்
பொன்தங்கிய புரிபுன்சடைப் புரம்மூன்றெரி செய்த
கொன்தங்கிய திரிசூலியைக் குழையாமனம் உருகா
நின்றன்பொடு துதிசெய்திட நிகழ்கின்றவை புகல்வாம்.

*என்று மேலே கூறியது போன்ற பல துதிகளைப் பிரமனும் திருமாலும் கூறினர். கங்கை தங்கிய பொன்போன்ற சடையை உடையவனும், திரிபுரம் எரித்தவனும், திரிசூலத்தைக் கையில் கொண்டிருப்பவனும் ஆகிய சிவனைக் கதியாக அடைந்தனர். அப்பொழுது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன். 36*

## உமையின் ஐயமும் சிவனின் அருளும்

**புகழ்கூறிய இருவோர்தமைப் புரிபுன்சடை அண்ணல்,**
**தகைவாய்அப யம்தந்துகை அமைத்தேதம திச்சைச்**
**சுகவாழ்வினில் இருந்தான்அரு குறும்தோகையும் எழுந்தே,**
**பகவான்தனைப் பணிந்தன்பொடு பகர்செய்தி உரைப்பாம்.**

*துதிகள் சொல்லி வணங்கிய பிரமனுக்கும் திருமாலுக்கும் சிவன், தயவுடன் அபயமளித்தார்; கையமர்த்தி அமரச் செய்தார்; பின், தன்ஆசைப்படியான சுகபோகங்களில் மூழ்கினார்; அருகில் இருந்த மயில்போன்ற அம்பிகை எழுந்து, பகவானை வணங்கிச் சொன்னவற்றைச் சொல்கிறேன், கேளுங்கள். 37*

**பாகத்துறு பரைஅம்பிகை எழுந்தேபர மனைத்தாழ்ந்து,**
**ஆகத்தொரு வடிவாகிய அமலாஇது போதுன்**
**தேகத்தரு கேவெம்மை வரத்தக்கன செய்கை**
**நாகத்துரி உடையோய்அதை நவில்வாய்என நவின்றாள்.**

*சிவனின் இடப்பாகத்தில் நிலையாக விளங்கும் உமையம்மை பரமனை வணங்கி, 'அன்பர்கள் நெஞ்சில் ஒப்பற்ற வடிவாக விளங்கும் மலம் அற்றவரே! உம்முடைய உடம்பின் அருகில் சூடாக இருக்கிறது. நாகாபரணம் அணிந்தவரே! உடம்பருகில் சூடு தோன்றும்படியான செயல் என்ன நடந்தது? சொல்லுங்கள்' எனக் கேட்டாள். 38*

**மாகத்துற இகலாய்ஒரு வரைநின்றிடப் பானு**
**போகப்புலின் இலதால்ஒரு புறம்உற்றன போலும்**
**சோகத்துடன் இருவோர்முனம் தேடித்துரு விடநீண்டு**
**ஊகத்தழ லாய்நின்றனிர் ஒருகால்அழல் மலையாய்.**

*"வேள்வியில், பகையானது இமயம் (இமராசன்); அப்பொழுது சூடானீர். திரிபுரங்களை எரிக்கச் சூடானீர்; திருமாலும் பிரமனும் அடிமுடி தேடும்போது, நீண்டதான யாகஸ் தம்பம் போல் நின்றீர்; நெருப்பு மலையாய் நின்றீர். 39*

யாதுற்றன இவைபோல்வன என்றாள்எழில் ஆரும்
போதுற்றனள் துதிசெய்தனள் புரம்மூன்றையும் எய்த,
கோதற்றவன் புகலும்குக னைத்தந்தருள் கோதாய்
மாதுற்றிடு புயன்பூமகன் பால்வாரியின் எய்தா,

அதைப்போன்ற நிகழ்ச்சி — உங்களைக் கோபப்படுத்தும் நிகழ்ச்சி இப்பொழுது எதுவும் நடந்ததோ?' என்று கேட்டாள் உமையம்மை. அழகான மலர்போன்ற உமையம்மை சிவனைத் துதிசெய்தாள். முப்புரங்களை அழித்த — குற்றமற்ற இறைவன் பதில்சொன்னார். 'முருகனின் தாயே!' திருமகளை மணந்த திருமால், தாமரையில் தங்கிய பிரமன் ஆகியோர் பாற்கடலில் தோன்றிய... 40

அமுதம்உண் டிடமு யன்றார் சாமள விடம்ஆர்ந் தோங்கித்
தமதுயர் மேனி கன்ற தவநனி காங்கை சார,
எமைஇரும் கயிலை எய்தி ஏத்தினார் தீர்தற் கின்னோர்
தமைஅருள் இத்த லத்தில் வருகெனச் சாற்றி னேம்ஆல்.

அமுதத்தை உண்பதற்கு முயன்றார்கள். பாம்பிலிருந்து ஆலகால விடம் பேரோசையுடன் புறப்பட்டது. அதனால் அவர்கள் உடல் கன்றியது; வெதும்பியது. அவர்களுக்கு மிகுதியான காங்கை ஏற்பட்டது. பெரிய கயிலாய மலைக்கு வந்து எம்மை வழிபட்டார்கள். அக்காங்கை தீர, இத்தலத்திற்கு வருமாறு சொன்னோம். அவர்களுக்கு அருள் செய்வதற்காக வரச்சொன்னோம். 41

ஆகையால் இவண்வந் துற்றார் அவர்கள்தம் காங்கை தீர,
வாகுடன் அரனைப் பன்னாள் பூசிக்கில் வலிய பாவம்,
ஏகிடும் என்றார் நின்ற இறைவியும் எம்பி ரானின்
பாகம்அ துற்றார்; காங்கை படர்ந்திடல் ஆற்று கில்லேன்.

ஆகையால் பிரமனும் திருமாலும் இங்கு வந்துள்ளார்கள். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள காங்கை தீரும்படி, பொருத்தமானபடி பலநாள்கள் சிவபூசை செய்தால், அவர்களின் வலிமையான பாவம் நீங்கும்' என்று, சிவன் கூறினார். எதிரில் நின்ற உமாதேவியும் இறைவனின் இடப்பாகத்தில் பொருந்தினாள். அப்போது உமையம்மை, 'சூடுபடர்ந்திருப்பதைத் தாங்கமுடியவில்லை' 42

முன்னொரு காலம் தன்னில் பிரிங்கிமா முனிவ னாலே,
பன்னுமெய்க் கேதா ரத்தில் அடைந்துநின் பாகம் வேண்டிக்
கன்னியர்க்கு அரிய தான விரதத்தை காத்த தாலே,
மன்னின பாதி மேனி வழங்கினை பெற்றேன் மாதோ.

முன்பு, ஒரு காலத்தில் பிரிங்கி முனிவனால் — உண்மைப் புகழ்மிகுந்த கேதாரத்தில் — உன்னில் நான் பாதியாக இருக்கு மாறு— பெண்கள் நோற்பதற்கு அரிய—விரதம் மேற்கொண்டேன். அதனால் பாதிமேனியை நிலையாக எனக்களித்தாய்... 43

பூவும்வா சனையும் போலும் புனலும்சீ தளமும் போலும்
தாவிலா திருந்தோம் இந்நாள் சாற்றுதற் கரிய காங்கை
நாவினாள் கொழுநன் மாயன் பொருட்டினால் நண்ணிற்றுஅன்ப
தேவர்கள் தேவே நல்காய் திருவுளத் திரங்கி என்றாள்.

பூவும் வாசனையும் போல, நீரும் குளிர்ச்சியும் போல நாம் இணைபிரியாமல் இருந்தோம். இன்று, நாவில் சரஸ்வதியைக் கொண்ட பிரமன், திருமால் ஆகியோரால், சொல்ல முடியாத காங்கை பொருந்தியது. அன்பரே! தேவ தேவா! மனமிரங்கி, இந்தக் காங்கையை மாற்றுக' என்றாள். 44

## பெரியநாயகியான வரலாறு

அரன்வடக் கருளும் பூசை ஆற்றிடும் அவர்கள் நீங்கார்
பரிவுறும் துயர்தீர்ந் தன்றிப் பரைஇதன் கீழ்பால் கோயில்
உரிமைகொண் டருள்வாய் இன்னார் நீங்கில்எம் இடத்தில் உற்று
மருவுவை என்றான் தேவி பிரிவது வழக்கோ என்றாள்.

'பராசக்தியே! நீயும் காங்கைச்சூட்டில் வாட வேண்டாம். பிரமனும் திருமாலும் வடக்கில் பூசிக்கப் போகிறார்கள். அந்தப் பூசை பலநாள்கள் நடக்கும். அவர்களின் துயர் தீர்ந்த பிறகுதான் அவர்கள் செல்வார்கள். நீ கிழக்குப் பக்கம் கோயிலில் இரு. இவர்கள் சென்ற பிறகு வந்து, என்னில் பாதியாகச் சேர்ந்துகொள்' என்றார். உமாதேவி, 'தேவியாகிய நான் அப்படிப் பிரியலாமா?' என்று, உமையம்மை கேட்டாள். 45

என்னலும் ஈசன் கூறும் இவ்வனல் எட்டெட் டாகச்
சொன்னஅப் பதத்தின் காறும் சுடும்அந்த எல்லைக் கப்பால்
பன்னியே வதிவாய் என்றான் பணிந்தந்தப் படியே நின்றாள்
மின்னிடை மகிழ வேண்டி இன்னமும் விதிக்கு மாலோ.

...என்று உமை கேட்டவுடன், ஈசன் இவ்வாறு பதில் சொன்னார். "பத்தினியே இவர்கள் உடலில் உள்ள நெருப்புக் காங்கை, அறுபத்துநான்கு ஜாதியடி தூரம் சுடும். அந்த எல்லையைத் தாண்டி இரு!' என்றார். உமாதேவி அப்படியே விலகி நின்றாள். மின்னலிடை கொண்ட உமையம்மைக்கு மேலும் சிலவிதிகளைச் சொன்னார். 46

நந்தியை நோக்கி நீயும் நாயகி ஆலயத்தில்,
முந்தியே உறுவாய் அன்னை மொழிவழி முயன்று முன்னும்
சிந்தனை உணர்ந்தெம் பாலில் தெளிந்தது செப்பென் றோதி,
மந்திர மாதர் சூழ விடுத்தனன் மாதை நோக்கி,

*இறைவன் நந்தியை நோக்கி, 'நந்தியே' நீ உமையம்மை ஆலயத்தில் இரு. அன்னை சொல்வதைச் செய். அவர்கள் நினைப்பதை என்னிடம் வந்துகேட்டு, நான் சொல்வதை அவர்களிடம் சொல்' என்றுகூறி, நந்தியை உடன் அனுப்பினார். தோழிகள் பலரையும் உமையுடன் அனுப்பினார். 47*

பூசனை புரிந்து வேண்டிப் போற்றுவோர் நம்பால் வேண்டும்
மாசிலா வரமும் நல்கி வரும்உப சாரம் எல்லாம்
ஈசரி யேமுன் கொள்வாய் இப்பதிக் கிறைவி நீயே
பேசரும் பெருமை பெற்றாய் ஆதலால் உனக்குப் பேர்தான்,

*'ஈஸ்வரியே, இப்பதிக்கு இறைவி நீயே ஆவாய். எனவே, இங்கே பூசனைபுரிந்து வேண்டுதல்கள் வைத்துத் துதிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டும் குற்றமற்ற வரங்களைக் கொடுத்து, அவர்கள் செய்யும் உபசாரங்களையெல்லாம் நீயே ஏற்றுக் கொள்க. புகழ்ந்து கூறமுடியாத அளவுக்கு உயர்ந்த புகழை நீ பெற்றுள்ளாய்... 48*

பெரியநா யகியாம் நம்மைப் பின்னுமோர் உச்சிக் காலம்
பரவுவாய் நீயும் என்று பரமன்அங் கருளிப் போனான்;
அரன்அருள் பெற்று நாதன் ஆலய முன்னர் நின்றாள்;
இருவரும் பூசை செய்து பெறுகின்ற இயல்பு சொல்வோம்.

*ஆகவே, உனக்குப் 'பெரிய நாயகி' என்பது பெயராகும். எனக்கு நாள்தோறும் உச்சிக்கால பூஜை நீயே செய்.' என்றார். சிவன்அருள் பெற்றுச் சிவன் சன்னதியின் முன் (கிழக்கே) இறைவி நின்றாள். பிரமனும் திருமாலும் சிவனைப் பூஜை செய்து, காங்கையிலிருந்து விடுபட்டதை இனிமேல் சொல்கிறேன். 49*

## காங்கை நீங்கியது

இருவரும் அநேக காலம் இறைஞ்சிட இரங்கி எங்கோன்
திருவுருக் கொண்டு, இலிங்கத் தினில்நின்றும் திகழும் செங்கேழ்ப்
பருதிபோல் உதயம் செய்து பாற்கடல் என்னும் பூதி
மருவியே இவர்கள் தம்மேல் மகிழ்ந்தருள் பார்வை யோடும்,

*இருவரும் அநேக காலம் இவ்வூர்ப் பெருமானுக்குப் பூஜை செய்தார்கள். இறைவன் இரக்கப்பட்டார். இலிங்கத்திலிருந்து*

வெளிப்பட்டார். அக்காட்சி, மலையிலிருந்து சிவப்புச்சூரியன் வெளிப்பட்டதுபோல் இருந்தது. சிவன் உடம்பெங்கும் பூசிய திருநீறு, பாற்கடல்போல் இருந்தது. இருவரையும் மகிழ்ச்சியுடன் பார்த்தார். அருளுடன் பார்த்தார். 50

செக்கர்அம் சடையும் காள கண்டமும் திகழ்முந் நூலும்
முக்கணும் நான்கு தோளும் மூரிவில் புருவம் நாரி
பக்கமும் அன்பர் தம்மைப் பாதுகாத் திடும்பொற் பாத
நக்கபங் கயமும் தோன்ற நகைநிலா முறுவல் பூப்ப,

*சிவபெருமான் சிவந்த சடையுடனும், நீலகண்டத்துடனும், மார்பில் பூணூலுடனும், மூன்று கண்களுடனும், நான்கு தோள்களுடனும், வில்போன்ற புருவம் கொண்ட உமாதேவி பக்கத்தில் இருக்கும்படியாகவும், அன்பர்களைப் பாதுகாக்கும் பொற்பாத தாமரைகளுடனும், நிலாப்போன்ற சிரிப்புடனும் காட்சி கொடுத்தார்.* 51

எழுந்துமுன் நின்றான் போற்றும் இருவரை நோக்கிப் பல்நாள்
தொழும்பரி வுடையீர் நுங்கள் தோடமும் சுரமும் தீர்ந்த
செழுந்திரு நன்னாள் இன்னாள் திசைஎலாம் போற்றிசெய்ய
வழங்கிய பதிஇ தாகும் வாரிநஞ் சயில்வ தாலே,

*பிரமனையும் திருமாலையும் நோக்கி, 'பலகாலம் பூஜை செய்த அன்பர்களே! உங்களுடைய தோஷங்களும், காய்ச்சல் நோயும் தீர்ந்த நன்னாள் இந்த நாளே. உலகம் போற்ற உங்களுக்கு நன்மை செய்த ஊர் இதுவாகும்.'* 52

நீலகண் டப்பேர் பெற்றேம் நினக்கும்அந் நீலம் போன்ற
ஆலம்போர்த் ததனால் மேனி அந்நிறம் ஆன தாலே,
ஞாலத்தோர் கருமால் என்று நவின்றிடும் நிலம்உண் டாக
சீலத்த பேர்தன் முன்பு பெற்றிடும் திறத்தி னாலே,

*'நாம் கடல்விஷத்தை உண்டதால், 'நீலகண்டன்' என்ற பெயரைப் பெற்றோம். திருமாலாகிய நீ, விஷக்காற்றுப் படிந்ததால், நீலநிறம் பெற்றாய். எனவே, நீ 'கருமால்' என உலகத்தாரால் புகழப்படும் நன்மை அடைவாயாக.* 53

அவற்கொன்றும் எய்தா தென்றான் அன்பிரு வடிவம் ஆகச்
சிவபரம் பொருளைப் போற்றும் செம்மலர் இன்னும் வேண்டும்
உவப்புறும் வரம்கேள் மின்கள் என்றலும் உவகை கூர்ந்து,
தவத்தர்கள் பணியும் தேவே சரணம்என் றடியில் வீழ்ந்து,

*ஒழுக்கமும் ஞானமும் கொண்டதால் பிரமன் நிற மாற்றம் அடையமாட்டார். அன்பின் இருவடிவங்களாகிய இருவரும் ஒருமித்துச் சிவனாகிய எம்மை வழிபட்டீர்கள்.*

இது தலைமையான செயலாகும். இன்னமும் உங்களுக்கு வேண்டிய மகிழ்ச்சியான வரங்களைக் கேளுங்கள்' என்று சிவன் கூறினார். இருவரும் மகிழ்ந்தனர். 'தவசியும் பணியும் தேவ தேவா! சரணம்' என்று, சிவனின் திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். 54

## வரங்கள்

நாதனே நினக்கும் இந்த நகர்க்கும்மும் மதத்த நால்வாய்ப்
போதக முகற்கும் திவ்ய புண்ணிய தீர்த்தத் துக்கும்
நீதமாய் எங்கள் பேராய் நிகழ்ந்திட வேண்டும் என்றும்
வேதமந் திரத்தால் பூசை விதிபெறச் செய்நாள் தோறும்,

"நாதனே! உனக்கும், இந்த நகருக்கும் மூன்று மதநீர் பொழியும் யானைமுகக் கடவுளுக்கும், திவ்வியமான புண்ணிய தீர்த்தத்திற்கும் எங்கள் பெயர் அமையவேண்டும்; வேத மந்திரங்களினால் பூஜை நடைபெறும் (தைப்பூச) நாள்களில், நாங்கள் இருவரும் இங்குவந்து தங்கி, உன் திருவடிகளை வணங்கவேண்டும்" என வேண்டினர். 55

இந்நகர் நீங்கி டாமல் இருந்திரு வோரும் உன்தன்
பொன்அடி பணிய வேண்டும் என்றனர் புரம்மூன் றெய்த,
முன்னவன் அருளிச் செய்து மூர்த்தியில் ஒளித்தி ருந்தான்
பன்னரும் பலன்கள் பெற்றார் பரவசம் எய்தித் தாழ்ந்தார்.

'இந்த நகரைவிட்டு நீங்காமல் இருவரும் தங்கள் பொன்னடிகளைப் பணியவேண்டும்.' என்றனர். முப்புரங்களை எரித்த முன்னவர், 'அவ்வாறே ஆகுக' என அருளிச் சிவலிங்கத்தில் ஒளிந்தார். பலவாகிய பயன்கள் பெற்ற திருமாலும், பிரமனும் பரவசம் அடைந்தார்கள்; வணங்கினார்கள். 56

அரியநல் லூர நாதன் ஐங்கரன் தீர்த்தம் என்று,
பரமனார் அளித்த வாறே பண்புற நின்ற தென்றும்;
மருமலர் அயனும் மாலும் அர்ச்சித்து வருவ தாலே,
தரும்அரி அயன்அர்ச் சிக்கும் தலம்என விண்ணோர் சாற்றி,

அரியநல்லூரின் தலைவர், ஐங்கரன் தீர்த்தம் எனப் (பரமன்) பெயரிட்டபடியே பண்புடன் தீர்த்தத்தின் பெயர் அமைந்து நிலைபெற்றது. மணமுள்ளமலரில் தங்கிய பிரமனும் திருமாலும் அர்ச்சனை புரிவதால் அரி, அயன் அருச்சிக்கும்தலம் என்ற பொருளில், இத்தலத்தின் பெயர் அரிஅயநல்லூர் எனப்பட்டது. விண்ணோரும் இத்தலத்தைப் போற்றினர். 57

பூமழை பொழிந்து போற்றப் பொன்நகர்க் கிறையோன் புத்தேள்
தாமரை யோனை மாலைத் தாழ்ந்துற இவர்க ளோடும்,
கோமளை தன்னைப் போற்றிக் கோயிலை வளைந்து தாழ்ந்து,
தேமலர்க் கொன்றை யானை வழிபட்டுச் செல்வம் பெற்றார்.

*தேவர்கள் பூமழை பொழிந்து போற்றினார்கள். புத்தேள் என்ற பெயரையுடைய தாமரையில் வீற்றிருக்கும் பிரமனையும், திருமாலையும் பொன்னகருக்கு இறைவனாகிய இந்திரனும் தேவர்களும் வணங்கினார்கள்; கோமளையாகிய உமையம்மையை வணங்கினார்கள். கோயிலை வலம்வந்து வணங்கினார்கள். கொன்றைமாலை அணிந்த சிவனுக்கு வழிபாடு செய்து, அருள்செல்வத்தைப் பெற்றார்கள். 58*

இவ்வண்ணம் இருவர்பணி தலத்தில் வாழும்
இறைவிபா கத்துறையும் இறைவன் தன்னைக்
கைவண்ண மலர்குவித்துக் கருதிப் போற்றக்
கனதனமும் சம்பத்தும் கவலை இல்லாப்
பைவண்ணப் பணிதாங்கும் உலகம் போற்றும்
பதவியும்இம் மையில்பெற்று மறுமைப் பாலும்
செவ்வண்ணல் பதம்பெற்றுத் திவ்யம் எய்திச்
சிவலோகத் தரசாள்வார் திண்ணம் தானே.

*இப்படியாகத் திருமாலும் பிரமனும் பணிந்த இத்தலத்தில் வாழும் இறைவியைப் பாதியாகப் பெற்ற இறைவனைக் கைகளால் வண்ணமலர்களைத் தூவிக் குவித்து, நல்லபடி நினைத்துப் போற்றினால், இந்தப் பிறவியில் நிறையச் செல்வங் களும், புத்திர புத்திரி பாக்கியமும், கவலை இல்லாத வாழ்வும், ஆதிசேஷன் தாங்கும் இந்த உலகமே போற்றக்கூடிய பதவி யும் பெறலாம். மறுமையில் சிவந்த சிவனின் திருவடியை அடைந்து, திவ்வியம் அடைந்து, சிவலோகத்தில் அரசர்போலச் சிறப்புடன் இருக்கலாம். இது உறுதியாகும். 59*

இவ்வியல்பாம் சந்நிதியில் கமல தீர்த்தம்
இருந்தீர்த்தம் ஈசானம் இமவான் தீர்த்தம்
செவ்வண்ணல் தீர்த்தம்கீழ் பாலில் தென்பால்
சிறந்தமணி கருணிவான் தீர்த்தம் மேல்பால்
பைவண்ணச் சாத்தன்அருந் தீர்த்தம் மேல்பால்
பரத்துவா சன்தீர்த்தம் வருணன் தீர்த்தம்
தெய்வஅனிலன் திசையில் அனுமன் தீர்த்தம்
தினம்ஆடச் சிவலோகம் அடைவர் அன்றே.

*இப்படியான இயல்புடைய சன்னதியில் கமலதீர்த்தம் உள்ளது. அது பெரிய தீர்த்தம் ஆகும். வடக்கிலே இமவான் தீர்த்தம் உள்ளது. சிவதீர்த்தம் கீழ்ப்பக்கம் உள்ளது. தெற்கில் மணிகர்ணிகை தீர்த்தம் உள்ளது. மேற்குப்பக்கம் பசிய நிறமுடைய சாத்தன் தீர்த்தம் உள்ளது. மேற்குப்பக்கத்தில் பரத்வாஜ தீர்த்தம் என்ற மற்றொரு தீர்த்தமும் உள்ளது. தெய்வத்தன்மை பொருந்திய அனிலன் திசையில் (கிழக்கு) அனுமன் தீர்த்தம் உள்ளது. இந்த ஏழு தீர்த்தங்களிலும் தினமும் நீராடினால் சிவலோகம் கிடைக்கும்.* 60

## கண்ட கர்ணன் கதை

காங்கையால் அயன்மாற் காகக் கவுரியாள் காமற் காய்ந்தோன்
பாங்கினை அகன்ற பின்பு மற்றவர் பரனைப் போற்றித்
தீங்கினை அகன்று பெற்ற செயல்இவை திருமால் பாதம்
பூங்கமழ் கண்ட கர்ணன் கதையினைப் புகலல் உற்றாம்.

*விஷக்காங்கை தீரப் பிரமனும் திருமாலும் பூசிப்பதற்காகச் சிவனின் பாகத்திலிருந்து உமை தனிக்கோயிலுக்கு வந்தாள். மன்மதனை எரித்த பரமன், அவ்விருவரின் துயரை நீக்கினார். என்பது இதுவரை கேட்ட கதை. திருமாலையே வழிபட்ட பூவாசனை வீசும் 'கண்டகர்ணன்' என்பவனின் கதையைச் சொல்கிறேன் கேளுங்கள்.* 61

கனிகொண்ட கழனி சூழ்ந்த காசியே முதலாய் உள்ள
தணிவிலா தோங்கும் சத்த தலத்தினில் அதிகம் ஆன
பணிவளர் அரவப் பாயல் பண்ணவன் மாயை வாழும்
மணிகண்ட கர்ணன் என்போன் மாயவன் மதம்மேற்
கொண்டோன்.

*வரப்புகளை உடைய வயல்கள் சூழ்ந்த காசி முதலிய தலங்கள் (காசி, அயோத்தி, மதுரை, காஞ்சி, அவந்தி, துவாரகை, மாயை எனப்படும் அரித்துவாரம்) சப்த (7) தலங்கள் எனப்படும். அவற்றுள் உயர்ந்ததாகிய மாயையில் பாம்புப் படுக்கை உடையவனாகிய திருமால் காட்சி கொடுக்கிறான். அத்தலத்தில், 'மணிகண்ட கர்ணன்' என்பவன் வாழ்ந்துவந்தான். அவன் வைணவ சமயத்தவன்.* 62

செந்திரு மார்பன் வாழும் திருப்பதி எல்லாம் சென்று,
வந்தனை செய்வோன் கங்கை வனைந்தவன் பெயர்உ ரைப்பின்,
சிந்தனை செய்யான் சொல்வோர் செப்பிடக் கேட்கும் என்று,
நிந்தனை செய்து காதில் நெறிமணி தூக்கி நேர்வான்.

*அவன் சிவந்த திருமகள் தங்கும் மார்பை உடைய திருமாலின் திருப்பதிகள் எல்லாவற்றிற்கும் சென்று, வழிபாடு செய்தான். கங்கைசூடிய சிவனின் பெயரைச் சொன்னால், அதை ஒரு பொருட்டாக மதிக்கமாட்டான். சிவன்பெயரைச் சொல்பவர்கள் கேட்கும்படியாகச் சிவனை நிந்திப்பான். 63*

சிவன்அடி யாரைக் காணில் சீற்றம்மிக் குழன்று சேய்நின்(று)
அவர்களை அரனைத் தூஷித் தடுங்கலால் எறியப் பட்ட
பவம்உறு கணங்கள் போலப் பண்பினை அறியா தெய்த்தே,
இவண்நெடு நாள்கள் இவ்வா றெய்தியே திரியும் ஏல்வை,

*சிவனடியார்களைக் கண்டால் கோபப்படுவான். தூரத்தில் நின்றுகொண்டு சிவனைத் தூஷிப்பான். கல்லடிபட்ட கணங்கள்போலப் பண்பில்லாமல் ஏமாற்றுவான். இப்படித் திரிந்துகொண்டிருந்த நாள்களில், இவன் கர்ணகண்டன் எனப் பெயர்பெற்றான். 64*

காதினில் கண்டம் தூக்கும் கருத்தினால் கண்ட கர்ணத்
தீதன்என் றுரைத்தார் இன்னோன் செல்லும்நாட் கணியன் ஆகி,
ஏதமாய் உறுதி எய்த ஈந்தனன்; இவனை யேஓர்
சீதரன் வைகுண் டத்தில் சேர்த்தனர்; சேர்ந்த பின்பு,

*இவன் காதில் மணிகளால் செய்த கவசம் (கண்டம்) அணிவதால் 'கர்ண(காது) கண்டன்' எனப்பட்டான். இவனுக்கு மரணநாள் நெருங்கியது. குற்றம் செய்தவன் ஆகையால், உறுதிப்பயனாகிய மோட்சம்பெறத் தருமங்கள் செய்தான். வைகுண்டத்தின் வாயிலின் ஒரு காவலன் இவனை, வைகுண் டத்தில் சேர்த்தான். அங்கு இவன் அடைந்தபிறகு... 65*

சூக்கும உருவு தாங்கிச் சுந்தர மாலைப் போற்ற,
நோக்குடன் சென்ற போதில் நுவல்கின்ற வாயிற் சீலர்
தாக்கிய சொல்லி னோடு சந்நிதா னத்தில் உய்ப்பப்
பாக்கியம் என்று வீழ்ந்து பகவன்தாள் பணிந்து நின்றான்.

*சூட்சும தேகத்துடன் கர்ணகண்டன் திருமாலைப் போற்றும் எண்ணத்துடன் போனபோது, வாயிற் காவலர்கள் கடும்*

*வார்த்தைகளால் திட்டியபடி, திருமால் சன்னிதானத்தில் சேர்த்தார்கள். இவன் 'பாக்கியம்' என்று கூறியபடி, திருமாலின் திருவடிகளைப் பணிந்து நின்றான்.* 66

பச்சைமால் இவனை நோக்கிப் பாரினில் பவுத்தர் போல,
நச்சணி கண்டன் தன்னை நாயகன் அடியார் தம்மை,
விச்சையால் அறிவி லான்போல் வீண்உரை பேசி நிந்தை
வைச்சுரை புகன்றாய் அந்தோ பாவத்தில் வலியன் ஆனாய்.

*திருமால் கண்டகர்ணனைப் பார்த்து, "பௌத்தர்களைப் போல உலகத்தில் நீலகண்டனாகிய சிவனையும், அவனின் அடியார்களையும், கல்வியறிவு இல்லாதவனைப் போல வீண்பேச்சுப்பேசி வைதிருக்கிறாய்; ஐயோ! கடுமையான பாவம் செய்துள்ளாய்."* 67

விடையவன் தன்னை என்னை விதியினை மேலோர் தம்மைக்
கடையராய் நிந்தை சொல்வோர் அளவிலாக் கற்ப காலம்
இடர்உழன் றம்பர் எய்தி ஈனராய் விலங்காய்ப் புள்ளாய்ப்
படர்உழன் றுருள்போல் எய்திப் பதைப்புடன் நரகில் வீழ்வார்.

*'விடையவன் (சிவன்) தன்னை, பிரமனை, மேலோர்களை நிந்தை செய்யும் கீழ்மக்கள், அளவில்லாத ஆயிரம் கோடி ஆண்டுகள் (கற்பகாலம்) துன்பம் அடைந்து, அம்பர் (அவ்விடம் — மண்ணுலகில்) ஈனராக, விலங்காக, பறவையாகப் பல இன்னல்கள் அடைந்து பதைபதைத்து, நரகத்தில் விழுவார்கள்.* 68

தரணியில் அரனை அன்பர் தங்களை நிந்தை சொன்னாய்
நரகிடை நீங்காய் நீயும் நுணுகிடக் கடவை என்றான்;
விரைமலர்ப் பாதம் போற்றி அறிவிலாச் சிறியேன் வெய்ய
புரையினைப் பொறுக்க வேண்டும் எனநைந்து புலம்பும் ஏல்வை,

*'உலகத்தில் நீ வாழ்ந்தபொழுது, சிவனையும் சிவனடியார்களையும் நிந்தை செய்தாய். நீ நீங்காத நரகத்தை அடைவாய்.' என்று, திருமால் கூறினார். வாசனை பொருந்திய தாமரை போன்ற திருமாலின் பாதங்களைக் கண்டகர்ணன் போற்றினான். 'அறிவில்லாச் சிறியவனாகிய நான்செய்த கடுமையான குற்றத்தை மன்னிக்கவேண்டும்' என்று, மனம் வருந்திப் புலம்பினான். அப்பொழுது,* 69

சீதரன் உளத்தி ரங்கிச் செவியினில் கண்டம் தூக்கிப்
பாதங்கள் பணிந்தோன் தன்னைப் பார்த்திந்தப் பாவம் தீர,

மேதினி தன்னில் எய்தி விளங்கிய அரிகை என்னும்
பூதல நகரில் போதி; புண்ணிய நகரில் வாழும்,

திங்கள்அம் சடையான் தன்னைத் தெரிசித்துத் தவங்கள்செய்து,
பங்கயம் பரவி ஏத்தப் பரமனும் காட்சி நல்கி,
மங்களப் பதவி ஈவான் நாமும்அவ் அரனை வாழ்த்திப்
பொங்கழல் துயரும் நீங்கிப் புனிதனைப் போற்று கின்றோம்.

*ஸ்ரீதரன் (திருமால்) மனமிரங்கினார். காதில் கவசம் போட்டுக்கொண்டவன் பணிந்தான். 'இந்தப் பாவம் தீர, மண்ணுலகத்தில் 'அரிகை' என்ற ஊருக்குப் போ. அப்புண்ணியத் தலத்தில் உள்ள திங்கள் சடையான் (சிவன்) தன்னைத் தரிசித்து, தவங்கள் செய்து, பாதங்களை வணங்கிப் புகழ்ந்து கொண்டிரு. பரமன் காட்சி கொடுப்பார். மங்களகரமான பதவி கொடுப்பார். திருமாலாகிய நாமும் அரனை வாழ்த்தினோம். காங்கையால் ஏற்பட்ட துயரத்திலிருந்து விடுபட்டோம், இன்னமும் அந்தப் புனிதனைப் போற்றிக் கொண்டிருக்கிறோம்' என்றார்.* 70,71

உடையவன் ஆணை யாலே ஒவ்வொரு காலம் இங்குப்
படிபவர்க் கருளிக் காவல் பரித்திடு வோம், பார் தன்னில்,
இடைவிடா தங்கு வாழ்வோம் இந்தவை குண்டம் தன்னில்,
புடவியல் அதிகம் ஆம்அப் பொன்நகர் புகலும் காலே,

*'உடையவனாகிய சிவனின் கட்டளைப்படி காவல் தொழிலைச் செய்யும் நாம், ஒவ்வொரு காலமும் இடைவிடாமல் அங்குச் சென்று தங்குவோம். என்னைப் பணிபவர்களுக்கும் இதையே சொல்கிறோம். இந்த வைகுண்டத்தைக் காட்டிலும் அழகின் திர்ட்சி அப்பொன்னகரில் அதிகம் ஆகும்.* 72

புண்ணிய வடிவம் ஆகும்; புகல்அடைந் தவர்க்கெந் நாளும்,
நண்ணிய பலன்கள் நல்கும்; நவையினை மாற்றி நன்காய்
எண்ணிய பருவம் ஈயும் இறைவனை அத்தீர்த் தத்தைக்
கண்ணினால் காணப் பெற்றோர் கயிலையில் காவல் பூண்டோர்.

*அவ்வூர், புண்ணியத்தின் வடிவம்; சரணடைந்தவர்களுக்கு எந்நாளும் பொருத்தமான பயன்களைக் கொடுக்கும்; ஆசைகளை மாற்றும்; நினைத்த பக்குவத்தை நன்கு கொடுக்கும்; இறைவனையும், அக்கோயிலிலுள்ள தீர்த்தத்தையும் கண்ணால் கண்டவர்கள், கயிலாயத்தில் அரசர்போல வாழ்வது திண்ணமாகும்.* 73

தலம்அதில் பெருமை பெற்ற சாமன வனம்அ தாகும்;
அலகிலார் ஒருவர் என்னும் அரன்உறை பதியில் நாமும்,
விலகிடா தவண்இ ருப்போம் எனவிண்டு விளம்ப லோடும்,
நலமிகக் கண்ட கர்ணன் அரியய நல்லூர் எய்தா.

*'அது சாமள(பச்சை) வனம்எனப் பெருமைபெற்ற தலம் ஆகும். முடிவில்லாத ஒருவர் சிவனே. அவர் இருக்கும் அத்தலத்தை விட்டுவிலகாமல், திருமாலாகிய நாமும் இருப்போம்' எனத் திருமால் சொன்னவுடன், கண்டகர்ணன் அரிஅய நல்லூரரை அடைந்தான்.* *74*

கண்டனன் கண்ட கர்ணன் கரைஇலா வளங்கள் ஓங்கும்
புண்டரீ கத்தன் வாழும் புரம்இதற் கிணைஒப் புண்டோ?
விண்டுவாழ் உலகி னுக்கும் அதிகமாய் விளங்கும் இவ்வூர்
அண்டர்கோ னுக்கும் காண ஆயிரம் கண்போ தாவே.

*கண்டகர்ணன், இவ்வூரைப் பார்த்தான். 'முடிவு இல்லாத வளங்கள் ஓங்குவதும், சிவன் வாழுவதுமாகிய இதற்கு இணையானதும் ஒப்பானதுமாகிய வேறுதலம் உண்டோ? இருக்கமுடியாது! திருமால்வாழும் வைகுண்ட லோகத்திற்கும் அதிகமான சிறப்புகள் உடையதாக இவ்வூர் விளங்குகிறது! தேவலோக அரசனாகிய இந்திரனுக்கு ஆயிரம் கண்கள். இவ்வூரழகைக் காண அவனின் ஆயிரம் கண்களும் போதா' என்று கூறிப் பெருமைப்பட்டான்.* *75*

என்றிறும் பூதி னோடும் இந்நகர் எய்தி எங்கள்
கொன்றைவார் சடையான் மேவும் ஆலயம் குறுகித் தாழ்ந்தே,
நன்றெனும் காத லோடு நாதனை வணங்கிச் சூழ்ந்து,
கன்றினால் கனிஎ றிந்தான் அருளினைக் கழறி னானே.

*கொன்றைமலரைச் சடையில் சூடிய சிவனின் ஆலயத்துக் குள் நுழைந்தான்; பணிந்தான். நல்ல காதலுடன் சிவனை வணங்கினான். கோயிலைச் சுற்றிவந்து, கன்றால் விளாமரத்தை எறிந்த திருமாலின் புகழைப் பலமுறை பேசினான். திருமாலின் அருளால் இந்தப் பாக்கியம் கிடைத்ததால், திருமாலைப் புகழ்ந்து பேசினான்.* *76*

## கண்டகர்ணன் துதி

பாதமும் முடியும் பண்டு
பன்றியும் புள்ளும் ஆகி,
வேதனும் மாலும் தேட
வெளிப்படாது ஒருங்கு நீண்ட,

சோதியார் தூணில் காட்டும்
சுந்தர விடங்க போற்றி!
நீதியே! அறிவா னந்த
நிருத்தனே! போற்றி! போற்றி!

*'சோதி வடிவமானவரே! அழகரே! உளியினால் செதுக்கப் படாதவரே! (விடங்கரே!) உம்முடைய பதத்தைத் தரிசிக்கத் திருமால் பன்றி அவதாரம் எடுத்து, மண்ணைத் தோண்டினார். பிரமன் அன்னப்பறவையாகி முடியைத் தேடிப் பறந்தார். அவர் களுக்கு வெளிப்படாமல் தாங்கள் ஒரு சேர நீண்டு இருந்தீர். தூணைப்போல இருந்தீர். நீதியே! அறிவே! ஆனந்தமே! போற்றி! போற்றி! 77*

காரணா சரணம்; வெள்ளிக்
கயிலையாய் சரணம்; கங்கை
நாரியைச் சடையில் வைத்த
நாதனே சரணம்; நான்செய்
பாரமாம் பாவம் போகப்
பாதுகாத்து அருள வேண்டும்;
ஆரணா சரணம் எங்கள்
அரிஅய நாதா போற்றி!

*யாவற்றுக்கும் மூலகாரணமானவரே! அடைக்கலம்; வெள்ளி மலையாகிய கயிலாய மலையின் தலைவரே! அடைக்க லம்; கங்கை என்னும் பெண்ணைச் சடையிலே வைத்த கணவரே! அடைக்கலம்; நான் செய்த கனமான பாவம் தொலையும்படியாக என்னைப் பாதுகாத்து அருள்செய்ய வேண்டும். வேதவடிவானவரே! அடைக்கலம். எங்கள் திருமாலுக்கும் பிரமனுக்கும் தலைவரே! போற்றி! 78*

## இறைவன் காட்சி தருதல்

இன்னன அளவி லாத துதித்தனன் ஏற தேறும்
மன்னவன் முன்றில் எய்தி மாதவம் புரிந்து நின்றான்;
பன்னெடு நாட்கள் இந்தப் பால்ஒரு பதத்தில் எங்கோன்,
முன்னர்வந் தெய்திக் காட்சி கொடுத்தனன் முனிவன் தாழ்ந்தான்.

*என்று, இவ்வாறெல்லாம் அளவில்லாத் துதிகள் செய்தான். ரிஷபத்தில் ஏறும் மன்னவனாகிய சிவனின் திரு முன்னிலையை — சன்னிதானத்தை அடைந்து, பெரிய தவம் செய்தான். பலநாள்கள் — நெடுநாள்கள் இவ்வாறு தவம் செய்தான்.*

அந்த நற்செயலால் ஒரு பக்குவம் எய்திய நிலையில், கண்ட கர்ணன் எதிரில் சிவன் காட்சி கொடுத்தார். தவத்தால் முனிவன் ஆன கண்டகர்ணன், சிவனைத் தாழ்ந்து பணிந்தான். 79

துதிசெய்து நிற்கும் போதில் சுந்தரன் விடைமேல் தோன்றத்
ததிகொண்ட மாயன் போதன் சார்ந்திரு பாகம் தோன்றக்
கதிதந்த வகையைக் கண்டு கருதிமூ வரும்ஒன் றான
மதிஅறிந் திலனே என்று வணங்கினான் வாழ்த்தி னானே.

கண்டகர்ணன் துதிகள் சொல்லி நிற்கும் வேளையில், அழகனாகிய சிவன், ரிஷபவாகனத்தில் காட்சி கொடுத்தார். வெண்ணெய் உண்ட திருமாலும், ஞானியாகிய பிரமனும் இறைவனின் இரண்டு பக்கங்களிலும் தோன்றினர். மூவருமாக நற்கதி கொடுத்த வகையைக் கண்டு யோசித்து, 'சிவன் திருமால் பிரமன் ஆகிய மூவரும் ஒருவரே என்ற அறிவை, இதுநாள் வரையில் நான் பெறாமற் போனேனே' என்று கூறிக் கண்ட கர்ணன் மூவரையும் வணங்கினான். வாயார வாழ்த்தி னான். 80

## கண்டகர்ணனின் மும்மூர்த்தி துதி

அறிவிலேன் செய்யும் குற்றம்
அரும்பெரும் கருணை யாலே,
பொறுமைகொண் டருள வேண்டும்;
புண்ணிய முதலே போற்றி!
கறுவிவீழ் காலன் காலால்
கட்டழித் தவனே போற்றி!
பிறைவளர் சடையாய் போற்றி!
பிஞ்ஞகா! போற்றி! போற்றி!

'புண்ணியச் செயல்களுக்கெல்லாம் மூலதனமானவரே! மூவரும் ஒருவரே என்ற அறிவு இல்லாதவனாகிய நான் செய்யும் குற்றங்களை, அருமையான பெரிய கருணையாலே பொறுத்துக் கொள்ள வேண்டும். கறுவி — கோபத்தோடு உம்முன்னே பாசக் கயிற்றுடன் (மார்க்கண்டேயனின் உயிரைப் பிடிப்பதற்காக) வந்த யமனைக் காலால் உதைத்துப் பலமிழக்கச் செய்தவரே! போற்றி! பிறைச்சந்திரன் தவழும் சடையை உடையவரே! போற்றி! சிவபெருமானே! போற்றி! போற்றி! 81

பெரியநா யகிம ணாளா
　　பேதகம் இல்லாய் போற்றி!
அரிஅயக் கடவுள் போற்றி!
　　அரிஅய நாதன் போற்றி!
விரிகமழ் அரிகை மன்னும்
　　விமல!மூ உலகம் ஆன
புரம்,இதில் மேவி வாழும்
　　புண்ணிய மூர்த்தி போற்றி!

*பெரியநாயகியின் கணவரே! எங்கும் எதிலும் பேதம் பார்க்காதவரே! அரியாகவும், அயனாகவும், ஈசனாகவும் இருப்பவரே! திருமால், பிரமனுக்குத் தலைவன் ஆகி, சோலைகள் விரிந்துள்ள 'அரிகை' என்னும் இவ்வூரில் நிலைபெற்றிருக்கும் விமலரே! (ஆணவம், கன்மம், மாயை என்னும் அழுக்குகள் அற்றவரே!) மூவுலகங்களிலும் பொருந்தி வாழும் புண்ணிய மூர்த்தியே, போற்றி!'* *82*

## கண்டகர்ணனுக்கு வரம் அளித்தல்

எனப்பல துதியால் போற்றும் இவனைநேர் நோக்கி ஈசன்,
உனக்குவேண் டியது யாதென் றோதலும் பணிந்து ரைப்பான்;
தனக்கிணை யான இந்தத் தலத்தினில் உனது தாளை,
மனத்தினில் அழுத்தி வாழ வரம்தர வேணும் என்றான்.

*என்று இவ்வாறு பல துதிகளால் போற்றும் கண்டகர்ணனை நோக்கிச் சிவன், 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். கண்டகர்ணன் பணிவுடன், கீழ்வருமாறு வேண்டினான். "இந்தத் தலத்துக்கு இணையான தலம் வேறில்லை; இதற்கு இதுவே இணையான தலம் ஆகும். இத்தலத்தில் இருந்து, உம் திருவடிகளை மனத்தில் பதித்து வாழும்படியாக, எனக்கு வரம்தர வேண்டும்" என்று, வேண்டினான்.* *83*

அவ்வண்ணம் செஞ்சடையோன் அருளிச் செய்தே,
　　அவன்காண மூவர்களும் ஆல யத்தில்,
செவ்வண்ணன் திருமேனி இலிங்கம் எய்தத்
　　தரிசித்தான் தேன்அமுதக் கடலில் ஆழ்ந்தான்;
மைவண்ணக் கந்தரனை மனத்தில் உன்னி,
　　மலர்ப்பாதம் சிந்தித்து வாழ்வு பெற்றான்;
இவ்வண்ணம் கதிபெற்ற கண்ட கர்ணன்,
　　யாவர்க்கும் தோற்றிடநோற் றிருக்கின் றானால்.

இறைவன் 'அப்படியே ஆகட்டும்' என்று, அருளினார். சிவந்த மேனியைக் கொண்ட சிவனின் இலிங்கத் திருமேனியில் மூவரும் (பிரம்மா, விஷ்ணு, சிவன்) ஒருமித்துக் காட்சி கொடுத்தார்கள். கண்டகர்ணன் தரிசனம் செய்தான். தேனும் அமுதமும் கலந்த கடலில் ஆழ்ந்த இன்பத்தை அடைந்தான். நீலகண்டனை மனத்திலே நினைத்து, அவன் திருவடிகளை மனத்திலே பதித்து, நல்வாழ்வு பெற்றான். இப்படி நற்கதி பெற்ற கண்டகர்ணன், பக்தர்கள் யாவரும் பார்க்குமாறு, இக்கோயிலில் தவம்செய்துகொண்டிருந்தான். 84

கண்டகர் ணன்தான் பின்னும் காதலால் அரனைப் போற்றிக்
கொண்டுபூ சிக்கும் நாள்அக் கோயிலின் குடபால் தன்னில்,
வண்டலர் கொன்றை வேணி வரதலிங் கம்தா பித்துப்
புண்டரீ கத்தாள் போற்றி வழிபட்டுப் புனிதம் பெற்றான்.

மீண்டும் மீண்டும் பெருகிய அன்பினால், அரனைப் போற்றிக்கொண்டே, பூஜைசெய்தான். கோயிலின் மேற்குப் பக்கத்தில் 'வரதலிங்கத்தை' ஏற்படுத்தினான். அதில் கொன்றை மலரை அணிந்த சிவனை இருக்கச்செய்தான். அவரின் தாமரைத் திருவடிகளை வழிபட்டான்; புனிதம் அடைந்தான்.

## வானோர் பூசித்து நலம் பெற்றமை

அச்சுதன் மதம்மேற் கொண்டோன் அரிகையில் பாவம் நீங்கும்
மெய்ச்செயல் இதுவாம் முன்னை வேதன்மால் வெம்மை தீர்ந்த
இச்செயல் உணர்ந்து மேலை இந்திரன் ஆதி வானோர்
நச்சணி கண்டர்ப் போற்றிப் பூசித்த நலம்உ ரைப்பாம்.

வைணவ சமயத்தவன் அரிகைக்கு வந்து, தான் செய்த பாவங்களிலிருந்து விடுபட்ட நிகழ்ச்சியைக் கேட்டீர்கள். முன்பு பிரமன் திருமால் ஆகியோரின் காங்கைநோய் தீர்ந்த நிகழ்ச்சியை உணர்ந்த இந்திரன் முதலாகிய தேவர்கள் நஞ்சைக் கண்டத்தில் பெற்ற சிவனைப் பூசித்த நன்மையை இனிச் சொல்கிறேன்; கேளுங்கள். 86

மூசுதேன் முகைஅ விழ்த்து மதுஉண்டு முழங்கும் தாதன்
வாசவன் வானோர் எய்தி வரதனை மலரி னாலே,
ஆசிலா துபசா ரத்தால் அருக்கிய அபிடே கத்தால்,
பூசனை மரபின் ஆற்றிப் போற்றினார் துதிசெய் கின்றார்.

*தேன் நிரம்பிய மொக்கு அவிழ்ந்ததும், அதிலுள்ள தேனை உண்டு ஒலிக்கும் மாலையை உடைய இந்திரன் மற்றும் தேவர்கள், சிவனை மலரால் சோடசோபசாரத்தால் மரபுப்படியாக(ஆகம விதிப்படியாக)ப் பூசை செய்தார்கள்; போற்றினார்கள்.* *87*

## தேவர்கள் துதி

வரிஅரவு அணிந்தாய் போற்றி!
　　மாதொரு பாகா போற்றி!
கரியினை உரித்தாய் போற்றி!
　　காலனைக் காய்ந்தாய் போற்றி!
பரிபுர பாதா போற்றி!
　　பரவுவார் பற்றாய் நின்ற
அரிஅய நாதா போற்றி!
　　அந்தரர்க்கு அமுதே போற்றி!

*[அரவு —பாம்பு; பாகா— பாகத்தில் கொண்டவரே!; கரி— யானை; காலனை — எமனை; காய்ந்தாய் — கோபித்தீர்; பரிபுரம் — கிண்கிணி; பரவுவார் — துதிப்பார்; அந்தரர்க்கு — தேவர்களுக்கு].* *88*

விண்ணவா போற்றி! வேத
　　வித்தகா போற்றி! விஞ்சைப்
பண்ணவா போற்றி! முன்னம்
　　எங்களைப் பரிந்துஆட் கொண்ட,
அண்ணலே போற்றி! யாவும்
　　ஆகிய அமலா போற்றி!
'கண்ணினுள் மணியே போற்றி!
　　கருணைவா ரிதியே போற்றி!

*[விண்ணவா— தேவா; வித்தகா — வல்லவரே!; விஞ்சை — வித்தியாதரலோகத்து ; பண்ணவா — இராகமே; பரிந்து — இரக்கத்துடன்; அண்ணலே — தலைவரே; அமலா — ஆணவம், கன்மம், மாயை (திமிர், வினை, மயக்கம்) அற்றவரே; வாரிதி — கடல்.]* *89*

## தேவர்கள் வரம்பெற்றமை

எனத்துதித் திறைஞ்சி னார்கள் போற்றிட இடப மீதில்,
கனங்குழை யுடனே தோன்றிக் காட்சிதந் தனனால் இன்னோர்,

வினைத்துயர் நீங்க நோக்கி வேண்டிய வரம்யா தென்ன,
உனைப்பணிந் தென்றும் போற்ற உறுதிதந் தருள வேண்டும்.

இந்திரனும் தேவர்களும் இவ்வாறு துதித்துப் போற்றினார்கள்; ரிஷபத்தின்மீது இறைவன் உமையம்பிகையுடன் தோன்றிக் காட்சி கொடுத்தார். அவர்களின் பாவத்துயர்கள் நீங்குமாறு பார்த்தார். 'உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?' எனக் கேட்டார். 90

பண்ணவர் பூசைக் கேற்ற பாரிசா தப்பைம் போதால்,
விண்ணில்வாழ் காம தேனு மிகும்ஐந்தால் மணியால் வேண்டும்
திண்ணிய பொருளும் தேவ நடனதுந் துபியும் மற்றும்
மண்ணினில் கொடுவந் தென்றும் வழிபட வேண்டும் ஆலோ.

உன்னைப் பணிந்துபோற்ற உறுதி தரவேண்டும்; என்றைக்கும் இச்செயல் தடை இல்லாமல் நடக்கவேண்டும்; உன்னைப் பூசிக்கவேண்டும்; தேவர்களாகிய நாங்கள் பாரிஜாதப்பூவால் பூசிக்கவேண்டும்; தேவலோகத்தில் உள்ள காமதேனுவையும், கற்பகத்தருவையும், சிந்தாமணியையும் இங்கே கொண்டுவந்து, அவற்றினை வேண்டிப் பூஜைப் பொருட்களைப் பெற்றுப் பூசிக்கவேண்டும். இப்படிக்கு வரம் தர வேண்டுமென்று, இந்திராதி தேவர்கள் கேட்டார்கள். 91

இவ்வரம் அருள வேண்டும் எனப்பணிந் திறைஞ்ச லோடும்,
நவ்விசேர் கரத்தி னானும் தந்தனம் என்று நாதத்
திவ்விய இலிங்க மீதில் சேர்ந்தனன் பணிந்து தேவர்,
கவ்வையாம் பதத்து நந்திக் கடவுளைப் பணிந்தி ருந்தார்.

இறைவனைப் பணிந்துவாழ்த்தி வரம் கேட்டவுடன், மானைக் கையில்ஏந்திய பெருமான், 'தந்தோம்' என்று அருளி, திவ்விய நாத வடிவாகிய இலிங்கத்தில் சார்ந்தார். தேவர்கள் வணங்கினர். கூட்டான பேரோசையுடன், நந்தியங் கடவுளையும் அவர்கள் பணிந்தார்கள். 92

## இலிங்கங்கள்

இந்திரன் அங்ஙன் வேறோர் இலிங்கம்ஒன் றமைத்துப் பூசை
மந்திர வழியால் பற்றி வழிபட்டான் மாகத் துற்ற
அந்தரர் யாரும் ஒவ்வோர் இலிங்கங்கள் அமைத்துப் போற்றிப்
புந்தியால் பரவி நாதன் அருள்பெற்றுப் பொன்னா டுற்றார்.

*இந்திரன் இத்திருக்கோயிலில் வேறு ஓர் இலிங்கத்தை அமைத்தான். அதற்கு மந்திரங்கள் சொல்லி வழிபட்டான். மற்ற தேவர்களும் யாகம் வளர்த்து, அதில் வந்த இலிங்கங்களை அமைத்துப் போற்றி, அறிவுடன் புகழ்ந்து அருள்பெற்றுப் பொன்னாடாகிய தேவலோகத்திற்குச் சென்றார்கள்.* 93

## ஆதிமனுவின் மகன் சுந்தரமாறன் வழிபாடு செய்தமை

பின்னொரு காலத்து ஆதி மன்னவன் பெற்ற மைந்தன்
மன்னிய சுந்த ரேச மாறமன் னவன்தான் இந்த
முன்னவன் மகிமை கேட்டு முப்புரம் செயித்த நாதன்
பொன்னகர் எய்தித் தாழ்ந்தான் பூசித்துத் துதிசெய் தானால்.

*பின்பு ஒரு யுகத்தில் ஆதி மன்னவனுடைய மகன் நிலை பெற்ற ஆட்சியை உடைய சுந்தரேச மாறன் என்ற அரசன் திருப்புடைமருதூர் இறைவனின் மகிமையைக் கேட்டு, முப்புரம் எரித்த சிவனின் பொன்னகராகிய இங்கு வந்து இறைவனைப் பணிந்தான். பூசித்தான். துதித்தான்.* 94

## மனுமகன் துதி

சங்கரா சரணம் மூல
சுயம்புவே சரணம் திங்கள்
பொங்கரா உடன்அ ணிந்த
புண்ணிய சரணம் பூமேல்
பங்கயன் மாயன் போற்றிப்
பரிவினை அகற்றி ஆண்ட
அங்கணா சரணம் எங்கள்
அரிஅய நாதா போற்றி!

*[சங்கரா — இன்பம் செய்பவரே; சரணம் — அடைக்கலம்; சுயம்பு — தான்தோன்றி; திங்கள் — சந்திரன்; பொங்குஅரா — சீறும் பாம்பு; பங்கயன் — பிரமன்; மாயன் — திருமால்; பரிவினை — துன்பம்தரும் வினை; அங்கணா — (விஷமுண்டவரே) சிவனே.]* 95

விண்ணவர் பூசித் தேத்த வியந்தருள் புரிந்தாய் போற்றி!
அண்ணலே போற்றி என்றே அகம்மகிழ்ந் தடிப ணிந்து,
தண்ணளி யுடன்இ ருந்து தற்பரா நினக்குக் கோயில்,
எண்ணிய படியே செய்ய அருள்தர வேண்டும் என்று,

"தேவர்கள் எல்லாம் பூசித்து வாழ்த்துமாறு வியப்புக்குரிய அருள் செய்தவரே! போற்றி! தலைவரே! போற்றி!" என்று, மனமகிழ்ச்சியுடன் அடிபணிந்தான். 'கருணையுடன் உள்ள — தமக்குத்தாமே தலைவராகிய உமக்குக் கோயில் கட்ட வேண்டும். நான் மனத்தில் நினைத்தபடியாகவே அக்கோயில் அமையவேண்டும். அதற்கு நீர் அருள்செய்ய வேண்டும்' என்று, சங்கல்பம் செய்துகொண்டு, விரதம் இருந்தான். *96*

## கனவில் இறைவன்

விரதம்உற் றிருந்தான் எங்கோன் வேந்தவன் கனவில் எய்திப்
பரிதிபோல் உலகம் தன்னில் பகைஇருள் ஒதுக்க வந்த,
புரவல பூத லத்தில் புண்ணிய நகரம் ஈதால்
விரைவினில் கோயில் செய்வாய் இலிங்கவி சேடம் சொல்வாம்.

கோயில் கட்டுவதற்காக விரதம் இருந்த சுந்தரமாறன் கனவில், சிவன் தோன்றினார். 'உத்தம அரசனே! சூரியன் புறஇருட்டை நீக்கும்; நீ பகை இருட்டை ஒதுக்கி, மக்களைக் காப்பாற்றுபவன்; இது உலகத்தில் புண்ணிய நகரம்; விரைவில் கோயிலைக் கட்டு; இங்குள்ள இலிங்கத்தின் சிறப்பைச் சொல்கிறேன், கேள். *97*

பூவினில் தானே தோன்றிச் சுயம்புவாய்ப் போற்ற நின்ற,
தாவர இலிங்கம் முன்னோர் மனுக்கள்மா னிடர்தா பித்தும்,
தேவர்கள் முனிவ ராலும் சித்தர்கள் இயக்க ராலும்,
காவியம் கண்டர்க் கண்ட நம்குறி அனந்தம் காண்மின்.

உத்தம அரசனே! இந்த இலிங்கம் செதுக்கப்பட்ட லிங்கமன்று; பூவில் தானாகத் தோன்றியது. ஆகையால், இது தாவர லிங்கம்; சுயம்புலிங்கம். உன் முன்னோர்கள், மனுமன்னர்கள், மனிதர்கள் முதலியவர்கள் இந்தத் தாவரலிங்கத்தை ஒவ்வொரு யுகத்திலும் இங்கே ஸ்தாபித்தார்கள். உத்தம அரசனே! தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யட்சகர்கள் ஆகியவர்களால், நீலகண்டனாகிய எம்மைக் குறிக்க ஏற்படுத்திய இலிங்கவகை பலவாகும். *98*

இவ்வகை இலிங்கத் துள்ளே இவ்விலிங் கத்தின் மேன்மை,
கவ்வைகொள் தரங்க வேலிக் கடலிடைப் பிறந்த நஞ்சம்
செவ்விய மலரோன் மாயன் தேகத்தில் காங்கை எய்த,
அவ்வினை அகலப் போற்ற அவர்வினை தீர வேண்டி,

*அவற்றுள் இந்த இலிங்கத்தின் மேன்மையைச் சொல்கின்றோம். ஒலிபொருந்திய அலைகளையுடைய பாற்கடலில் தோன்றிய விஷம், தாமரைமலரில் உள்ள பிரமன், திருமால் ஆகியோரின் தேகத்தில் வெப்பமாகிய காங்கையை ஏற்படுத்தியது. அந்தத் துன்பம் நீங்குவதற்காக, அவர்கள் இங்குவந்து இந்த இலிங்கத்தைப் போற்றினார்கள்.* 99

**இத்தலம் இதனில் வைகி இருவர்தம் இன்னல் தீர்த்துக்**
**கைத்தலத் துற்ற நெல்லிக் கனிஎன இருந்த தாகும்;**
**உத்தம மன்ன என்றே அருளினான்; இலிங்கத் துற்றான்**
**பத்தியாய் விழித்து வேந்தன் பரவியே பழிச்சு கின்றான்.**

*வினை நீங்குவதற்காக இந்தத் தலத்தில் தங்கினார்கள். இந்த இலிங்கத்தைப் பூசித்ததால், அவர்களின் துன்பம் தீர்ந்தது. உள்ளங்கை நெல்லிக்கனிபோல, இந்த இலிங்கத்தின் பெருமைக்கு இந்த நிகழ்ச்சியே தெளிவான ஆதாரமாகும்' என்று, சிவன் சுந்தரமாறன் கனவில் தோன்றிக் கூறினார். அரசன் விழித்துக்கொண்டான். மிகுந்த பக்தியுடன், இறைவனை வணங்கிப் புகழ்ந்தான்.* 100

## சித்தராய் வந்த சிவன்

புளகிதம் உற்று மன்னிப் புண்ணியன் அருளிச் செய்த
அழகிவன் மேன்மை யோர்க்கும் அமைச்சர்க்கும் அறியச் செப்பிக்
குழகனுக் கன்பு மிக்கான் சிற்பநூ லோரைக் கூவிப்
பழமறை பகரும் பண்பால் பரமன்ஆ லயம்எ டுத்தான்.

*சுந்தரமாறன் புளகாங்கிதம் அடைந்தான். அந்தப் புளகாங்கிதம் அவனுக்கு நிலைத்தது. சிவன் கனவில் அருளிச் செய்த அழகான வார்த்தைகளை, இவ்வூரில் வாழ்ந்த பெரியவர்களுக்கும், அமைச்சர்களுக்கும் விளக்கமாகச் சொன்னான். சிவனிடம் அன்பு மிக்கவனாகிய சுந்தரமாறன், சிற்பநூல்களில் வல்லவர்களை அழைத்தான்; பழமையான வேதத்தில் சொன்ன படியான குணவிசேஷங்களைக் கொண்ட சிவன்கோயில் எடுத்தான்.* 101

ஆல்யத் துறுப்பு மற்றும் அணிநகர் திருநாள் வீதி
மேல்உள தேவ தாயம் விதிவழி நிறுவ வேண்டும்;
காலநித் தியநை மித்யம் கடவுட்குச் சிறந்த பூசை,
சீலமாய் இயற்றிப் போற்றச் சிவன்ஒரு சித்தர் ஆகி,

*பரிவார தேவதைகளுக்கான சுற்றுக்கோயில்கள், மண்டபங்கள், மடைப்பள்ளி, யாகசாலை முதலிய ஆலய உறுப்புகள் கட்டவேண்டும்; நகரை உருவாக்க வேண்டும்; பல திருநாள்கள் செய்ய ஏற்பாடுகள் செய்யவேண்டும். கோயில் செலவுக்கு, வரி இல்லாமல் விளைநிலங்கள் தரவேண்டும். ஆறுகால பூஜை என்னும் நித்திய பூஜைகள், விசேஷகால பூஜைகள் எனப்படும் நைமித்திக பூஜைகள் ஆகியவற்றுக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்ற நிலையில், சிவன் ஒரு சித்தர் வடிவத்தில், மன்னன் எதிரிலே வந்தார்.* *102*

மன்னனை நோக்கி நீசெய் மந்திரப் பணிக்கு வந்தோம்;
இன்னம்ஒன் றுளது கேட்டி இந்திரன் பூசித் திங்ஙன்
பொன்நகர் விதிஅ மைத்தான் பூவில்அவ் விதியால் நீயும்,
நல்நிய மங்கள் ஆக நடத்துவாய் நாளும் என்றான்.

*சித்தர் மன்னனைப் பார்த்து, 'சுந்தர மாறனே! நீ செய்கின்ற கட்டுமானப் பணிகளைப் பார்க்கவந்தேன். இன்னும் ஒரு செய்தியை உனக்குச் சொல்லவேண்டும். சென்ற யுகத்தில் இங்கே இந்திரன் பூஜைசெய்து பொன்நகர் செய்தான். அந்த விதிப்படியே மண்ணுலகில் இவ்வூரை நீ அமைக்கவேண்டும். நல்ல நியமங்களை ஏற்படுத்த வேண்டும். நாளும் உன் நியமங்கள் நிகழவேண்டும்.* *103*

அந்தரர் போற்றும் இந்த அரிகைக்கு வாய்த்தேன் என்றே,
சுந்தர மாற மன்னா சுதினப்பெ ருக்கை ஈந்தோம்;
சிந்தையில் விளைதல் பெற்றுச் செகத்தினில் இன்பம் துய்த்து,
நந்தல்இல் செல்வம் பெற்று நம்உல கடைவாய் என்றான்.

*இதற்காகவே சித்தராக யாம் அரிகைக்கு வாய்த்தோம்; சுந்தரமாறனே! உனக்குச் சுதினம் (மங்களம்) தருகிறோம். சிந்தனையில் நன்மைகள் விளையப்பெற்று, உலகில் இன்பங்கள் துய்த்துக் குறையாத செல்வம் பெற்றுப் பிறகு நம் உலகுக்கு வருக' என்றார்.* *104*

அண்ணல்இப் படிஅ றைந்தே அவ்வடி வுடன்ம றைந்தான்;
கண்ணுதல் அருளைப் பேணிக் கசிந்தனன் கடவுள் நல்கும்
வண்ணமே பெற்றோன் மேலை வளம்எலாம் இவண்வ ருத்தி,
உண்ணிறை மகிழ்வி னாலே நடத்தினான் உலவா தென்றும்.

*சித்தர்வடிவில் வந்த சிவன், அவ்வடிவுடனேயே மறைந்தார். நெற்றிக்கண்ணை உடையவரின் கருணையை நன்கு போற்றி*

*மன்னன் மனம் உருகினான். கடவுள் கொடுத்த வரத்தின்படி வந்த வளங்களை இவ்வூருக்கு வரவழைத்து, மனம்நிறைந்த மகிழ்வுடன், குறைவில்லாமல் எல்லா நற்காரியங்களையும் செய்தான்.* 105

கற்பக மலரி னாலும் காமதே னுவின்பால் நல்கும்
அற்புத அமுதத் தாலும் அந்தர மகளிர் ஆடல்
பற்பல வகையி னாலும் பஞ்சவாத் தியத்தி னாலும்
பொற்புயர் விதியி னாலே பூசனை புரிந்திட் டானால்.

*மன்னன் கற்பக மலர்களினால் அருச்சனை செய்தான்; காமதேனுவின் பாலால் அபிஷேகம் செய்தான்; தேவலோகப் பெண்களை, இக்கோயிலில் நடனமாடச் செய்தான். பெருமைக் குரிய விதிகளின்படி, பலவகையான பூஜைகளையும் செய்தான்.* 106

## பயன்

அப்படி அன்றும் என்றும் அருச்சனை புரிவ தாகும்
விப்பிர முனிகாள் ஈது வேதவி யாசர் கூறத்
தப்பிலா துணர்ந்த திந்தச் சரித்திரம் உங்க ளுக்குச்
செப்பினம் கற்றோர் கேட்டோர் சிவபதம் சேர்வர் அன்றே.

*அதைப்போல அன்றும் என்றும் பூஜை செய்வதே நல்லது. மேன்மையான முனிவர்களே! வேதவியாசர்கூற இச்செய்திகளைத் தவறில்லாமல் புரிந்துகொண்ட வரலாற்றை உங்களுக்குச் சொன்னேன். இதைக் கற்பவர்களும், கேட்பவர் களும் சிவபுதம் அடைவர்.* 107

இத்திறம் உரைத்த சங்க யோகியோ டிறைவன் ஏகி,
உத்தமத் தலங்கள் போற்றி உளமகிழ் சிறந்தி ருந்தார்;
முத்தமிழ் முனிவ ரோடு முதுபதி உற்றார் மூன்று
வித்தகர் ஒன்றாய் நின்ற விமலன்கீர்த் திகள்உ ரைப்பாம்.

*இத்திறங்களைச் சொன்ன சங்கயோகியுடன், வீரசேனன் உத்தமத் தலங்களை அடைந்து மகிழ்ந்தான்.முத்தமிழ் முனிவ ராகிய அகத்தியருடன், திருப்புடைமருதூரை அடைந்தான். இனி, மூன்று கடவுளர் ஒன்றாய் எழுந்தருளும் மூன்றீசத் தலச்சிறப்பைச் சொல்வோம்.* 108

# 5. மூன்றீசுவரப் படலம்

## விநாயகத் துதி

மூதெயில் சூழும் மூன்றீ சுரத்தில்மூன் றீச நாதர்
காதையைத் தமிழால் செய்யக் கந்தடு க:ட நால்வாய்
மாதருள் புதல்வன் கந்த மைந்தன்முன் வந்த தெய்வப்
போதக முகத்தன் பாதப் போதகம் போற்றி வாழ்வாம்.

பழைமையான மதில்கள் சூழ்ந்துள்ள மூன்றீசத்தலத்தில் எழுந்தருளியுள்ள மூன்றீசநாதர் பற்றிய கதைபொதிந்த பாடல்களைத் தமிழில் செய்யக் கட்டுத்தறியில் கட்டப்படும், மதநீர்பொழியும், தொங்கும் வாயை உடைய — உமையம்பிகையின் புதல்வராகிய, முருகனின் முன் வந்தவராகிய, தெய்வமாகிய யானைமுகத்தவனின் பாதமலர்களைப் போற்றி வாழ்வோம். 1

## மூன்றீசர் துதி

மால்ஆகி அயன்ஆகி மன்னும்உருத் திரன்ஆகி,
வானம் ஆகிக்
கால்ஆகி அனல்ஆகி அகண்டமுமாய்ப் பிருதுவியாய்க்
கதிர்கள் ஆகி,
வாலைமர கதமாது பாகமாய் நிறைந்துவளர்
வன்னி நாதர்
மூலேசர் சித்தேசர் மூன்றீசர் பாதமலர்
முடிமேல் வைப்பாம்.

திருமாலும், பிரமனும், சிவனும் ஆகி, காற்று, நெருப்பு, அகண்டம், ஆகாயம், சூரிய சந்திரர்கள் ஆகி, இளம் பெண்ணாகிய மரகதவல்லியை இடப்பாகத்தில் கொண்டு, நிறைவாக வளரும் வன்னிமரத்தின்கீழ் உள்ள தலைவர், மூலமான ஈசர், சித்தேசர் ஆகிய மூன்றீசர் திருவடியாகிய தாமரையைத் தலைமேல் வைத்து வணங்குவோம். 2

## மரகதவல்லி துதி

மஞ்சுநிகர் குழல் போற்றி!
மதிவதன மலர்போற்றி
அஞ்னவேல் விழி போற்றி
அணிமுத்த நகைபோற்றி!
கொஞ்சுகிளிக் கரம்போற்றி
கோங்கரும்பின் குயம்போற்றி!
வஞ்சிமர கதமாது
வனசமலர்ப் பதம்போற்றி!

*மரகதவல்லியின் மேகம்போன்ற கருத்த கூந்தல் வாழ்க! பூர்ணசந்திரன்போன்ற முகமாகிய தாமரை வாழ்க! மைபூசிய வேல்போன்ற கண் வாழ்க! அழகான முத்துப் போன்ற புன்னகை வாழ்க! கொஞ்சும் கிளியை ஏந்தியுள்ள கை வாழ்க! கோங்கமரத்தின் அரும்புபோன்ற குவிந்த முலை வாழ்க! இளமையான மரகதவல்லிப் பெண்ணின் தாமரை மலர்போன்ற திருவடிகள் வாழ்க!* 3

## சங்கயோகி கதை சொல்கிறார்

மாதவர் கேட்பச் சூதன் வழங்கிய கதையை மன்னன்
ஓதுதல் வேண்டும் என்னச் சங்கயோ கியன்உ ரைப்பான்
போதனும் அரனும் மாலும் பூசித்து மூன்று லிங்க
நாதன்ஆ கியம கத்து வத்தினை நவிலல் உற்றாம்.

*முனிவர்கள் கேட்கும்படியாகச் சூதமுனிவர் சொன்ன கதையை, 'தலைவராகிய தாங்கள் சொல்ல வேண்டும்' என்று கேட்டுக்கொண்டவுடன், 'சங்கயோகி' என்ற முனிவர் சொல்லத் தொடங்கினார். "பிரமனும், திருமாலும், சிவனும் பூசனை செய்து மூவரும் சேர்ந்து ஒரு லிங்கவடிவமான மகத்துவத்தைச் சொல்கின்றேன்"* 4

ஆதிபால் அயன்மால் ஈசன் அவனிநீர் வித்தாய் நின்று,
பேதம்இலா ததுஒன் றாகிப் பிறங்கிய செயலை யார்க்கும்
வேதங்கள் முதலாய்க் காட்டி விதித்தனர் பயன்தே றாதார்;
வாதங்கள் தீர்ந்தே உய்ய வழிபடும் மகிமை சொல்வோம்.

*மூலப்பரம்பொருளில், பிரமன், திருமால், சிவன் ஆகிய மூவரும் உலகமாகவும், நீராகவும், விதையாகவும் நிலைபெற்று வேற்றுமை இல்லாமல், ஒன்றாகி, விளங்கும் செயலை யாவரும்*

அறியுமாறு வேதங்களை ஆதாரமாகக் காட்டிப் பெரியவர்கள் சொல்லியுள்ளார்கள். அந்தத் தத்துவத்தின் பயனை ஆராய்ந்து அறியாதவர்கள், பிரமன்வேறு, திருமால்வேறு, சிவன்வேறு என்று, வாதங்கள் செய்கிறார்கள். அந்த வாதங்கள் தீர்ந்து நற்கதி அடைய, வழிபடும் மகிமையைச் சொல்வேன்; கேட்பீராக. 5

**இறையவன் முடியும் தாளும் எய்திட இருவர் தேடிப்**
**பறவைபன் றியதாய்க் காணார் பருப்பத நெருப்பாய்க் கண்டார்;**
**விறல்அரி அவதா ரத்தில் விமலன்கா தைகள்உ ரைத்தார்;**
**அறிவினால் அறிந்தும் மாயை அவலத்தால் சவலம் உற்றே.**

அடிமுடி தேடிய புராணக்கதையில் பிரமன் பறவையாக முடியைத் தேடினார் என்றும், திருமால் பன்றியாகப் பாதத்தைத் தேடினார் என்றும் வருகிறது. இருவரும் மலையின் ஜோதியாகச் சிவனைத் தரிசித்தார்கள் என்றும் வருகிறது. இது திருமாலையும், பிரமனையும் குறைத்துக் கூறுவதாகும். திருமால் பற்றிய அவதாரக் கதைகள் கூறும் புராணங்களில், சிவன் பற்றிக் குறைத்துக் கூறப்பட்டுள்ளன. அறிவால் உண்மையை அறிந்தும், மயக்கமாகிய சோகத்தால் சபலத்தினால் இவ்வாறெல்லாம் கதைகள் சொல்கிறார்கள். 6

**திரிகுநா மதமேற் கொண்டோர் தெளிவிலார் நிந்தை பேசி**
**நரகிடை மேவா வண்ணம் நல்கிட வேண்டும் என்று,**
**பரவிழு வரும்பூ சிக்கப் பரமனும் காட்சி நல்கி,**
**உருஒன்றில் மூன்றாய்த் தோன்றி உய்ந்திட அருள்செய்**
**கின்றான்.**

பிறழும்நாக்கில் திமிர்பிடித்த தெளிவற்றவர்கள், நிந்தனையுடன் இவ்வாறெல்லாம் பேசி, அந்தப் பாவத்தால் நரகத்திற்குப் போகிறார்கள். அப்படியில்லாமல் அவர்கள் பிழைக்கும் வண்ணம் அருள்செய்ய வேண்டும் என்று, பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் பரம்பொருளைப் பூசித்தார்கள். அப்பரம்பொருள், ஒருவடிவிலேயே உலகம் உய்வதற்காக, மூவருமாகக் காட்சி கொடுத்திடும், அவரே மூன்றீசர் ஆவார். 7

**மூவரும் ஐவர் தாமும் முதல்ஒன்றே முளரிப் பூவில்,**
**தாவிலா இதழ்அ னேகம் சாற்றிடில் ஒன்றே போலத்**
**தேவர்கள் நீவிர் என்றே என்னவாய் மலர்ந்து செப்பித்**
**தாவிலா இலிங்கம் மூன்றீ சுரன்எனச் சாற்றி னானே.**

பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளும், அவர்களுடன் மகேசுவரன், சதாசிவமும் மூலமாகிய பரம்பொருளே. தாமரைப்பூவில் இதழ்கள் பல இருப்பன போலப் பல வடிவங்களில் பல தொழில்களை ஒரு பரம்பொருள் செய்கிறது. பல இதழ்கள் கொண்டதேனும், தாமரை என்ற ஒருபெயரே உடையதுபோலப் பல தொழில்கள் செய்யினும், பரம்பொருள் ஒன்றேயாகும். பிரமனும் தேவனே; திருமாலும் தேவனே; சிவனும் தேவனே; மகேஸ்வரனும் தேவனே; சதாசிவனும் தேவனே என்று கூறி, மூன்றீசரும் சேர்ந்த இலிங்கம் இதை மெய்ப்பிக்கும் எனக் கூறினார். 8

மூவர்க்கும் மேலாம் எங்கோன் அருள்தர மூவர் அந்தத்
தாவிலா இலிங்கத் தெய்திச் சார்ந்தனர் ஆதலாலே,
சேவுறை நாதன் மூன்றீ சுரன்எனத் திகழ்ந்தான் இந்தப்
பூவுளோர் தேவர் போற்றப் பொலிந்தினி திருக்கின் றானால்.

மூவர்க்கும் மேலான பரம்பொருள் — எங்கள் தலைவர் — குற்றமில்லாத இலிங்கத்தில் அடைந்து, சார்ந்தார். ஆகையால், ரிஷபத்தில் ஏறும் பெருமான் மூன்றீசர் எனப்பெற்றார். அவர், மண்ணுலகத்தவர்களும் தேவர்களும் போற்றும் வண்ணம் அழகாக இனிமையாக இருக்கிறார். 9

## வன்னி தோன்றிய வரலாறு

மூன்றுரு இலிங்கம் ஆன முறைஇது முதல்ஒன் றாகத்
தோன்றுநா யகனை வேதம் பூசிக்கத் தொடங்கும் காதை,
ஏன்றவா றுரைப்போம் கேண்மின் இவன்திரு வாக்கி னாலே,
கான்றமெய் வன்னி ஆக நிழல்செயும் கவின்உ ரைப்பாம்.

மூன்று உரு, ஓர் இலிங்கத்தில் வந்த முறைமை இதுவாகும். மூலம் ஒன்றுதான். இப்படித் தோற்றம் தரும் தலைவரைப் பூசிக்கத் தொடங்கும் கதைபொதிந்த பாட்டை, இயன்றவாறு சொல்வோம்; கேளுங்கள். இப்பெருமான் திருவாக்கால், 'வன்னி' தோன்றி நிழல்தரும் அழகையும் சொல்வோம். 10

முடிவினில் உலகம் யாவும் பிரளயம் மூழ்க மூல
வடிவினன் பொருட்டால் பின்னும் வழங்கிட உற்ற காலை,
நெடியவன் உந்தி பூத்தோன் தந்திட நிலவும் யோகர்,
படியினில் யாகம் பூசை பயின்றிடும் விதிப யக்கும்'

யுக முடிவில் எல்லா உலகங்களும் பிரளயத்தில் மூழ்க, மூலமான பரம்பொருள் ஆணையால், மீண்டும் உலகங்கள் படைக்கப்படும்போது, நெடியவனாகிய திருமால், அவன்

திருவுந்தியில் பூக்கும் பிரமன் ஆகியோரும் தோன்றுவர். உலகத்தில் யோகிகள் யாகவிதிகள் பூசைவிதிகள் பயிலக்கூடிய விதிகளைச் சொல்லுவது. . . 11

வேதநூல் அன்றி இல்லை மெய்ப்பொருள் விளங்கத் தேடும்
போதினில் விதிநூல் அன்றிப் புகல்இலை என்று யோகர்,
மாதொரு பாகன் வெள்ளி வரையினில் தவம்மு யன்றார்
ஆதிகா ரணன்ள முந்தே ஆலநீ ழலினில் எய்தி,

வேதநூல்களே அல்லாமல் வேறு இல்லை. யோகர்களாகிய முனிவர்கள், தத்துவஞானம் தேடும்போதில் வேதம் என்ற விதிநூல்கள் இல்லாமல் புகல் இல்லை என்பதால், யோகர், மாதொரு பாகனை எண்ணிக் கயிலாயத்தில் தவம் புரிந்தனர். ஆதியானவரும், யாவற்றுக்கும் மூலகாரணரும் ஆகிய பெருமான், ஆலநிழலில் எழுந்தருளினார். 12

தேசிக வடிவம் ஆகித் திருவருள் கூர்ந்து நின்றான்;
நேசமாய் முனிவர் யாரும் நிருமலன் தாள்ப ணிந்தே,
ஈசனே எனத்து தித்தார் இங்குநீர் தவம்பு ரிந்தே,
யோசனை யாதென் றோத வேதம்நா லுரைக்க வேண்டும்.

ஆலநீழலில் எழுந்தருளிய பெருமான் குருவடிவாகத் திருவருள் புரிந்தார். முனிவர்கள் எல்லாரும் அன்புடன் அவரின் திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். 'ஈசனே' எனக்கூறித் துதித்தார்கள். குருவடிவில் வந்த இறைவன், 'இங்கே நீங்கள் தவம்செய்யக் காரணம் யாது?' எனக் கேட்டார். முனிவர்கள், 'நான்கு வேதங்களையும் நீங்கள் சொல்ல வேண்டும்'... 13

சங்கரா எனத்து தித்தார் தவர்கள்மேல் அன்பு கூர்ந்து,
பொங்கிய வேதம் நம்மைப் பூசிக்கத் தவம் முயன்று,
துங்கம்ஆர் வன்னி யாகத் தோன்றிமூன் றீசு ரத்தில்
அங்கெமைப் போற்று கின்ற தவ்வகை அருளக் கேண்மின்.

'சங்கரா' எனக்கூறித் துதித்தார்கள். தவசிகள் அன்புடன் குருவடிவாகிய பெருமான் அருளுரை பகர்ந்தார். 'பொங்கிய வேதங்கள் நம்மைப் பூசிப்பதற்காகத் தவம் செய்தன. மூன்றீசுவரத்தில் ஒளிபொருந்திய வன்னிமரமாகத் தோன்றிப் போற்றுகின்றன. அந்தவகை நிகழ்வை அருளுகிறேன்; கேளுங்கள்.' 14

அலகிலாக் கலைகட் கெல்லாம் முதன்மையாம் ஆதி வேதம்
உலகில்ஆ ரணங்கள் காயாய் உயரும்பஞ் சாயி உண்மைப்

பலம்அதாய்ச் சாயை சாயை பணைத்தஇம் முதலாம் வன்னி,
நிலவியே நெடுநாள் போற்றிப் பூசித்து நின்ற காலை,

முடிவில்லாத கலைகளுக்கெல்லாம் முதன்மையானது பழைமையான வேதமே ஆகும். உலகத்தில் வேதத்தின் ஆரணங்கள் காய்கள்; அவற்றில் உயர்வான பஞ்சாயி, பழம்; வேதத்தின் சாகைகள், கிளைகள், அடிபருத்த இவ்வன்னிமரம் நிலைபெற்று, நெடுநாள்கள் நம்மைப் போற்றிப் பூசித்து நிற்கும்போது... 15

அப்பொழு தவ்வி லிங்கத் ததிகரித் தமலன் தோன்றி,
வைப்புநூல் வன்னி நம்கண் வன்னியில் தோன்றி வந்த,
இப்பெரு விருக்கம் நீயே இந்நிழல் நமக்கு நீழல்
ஒப்பிலா தியற்றி வாழ்வாய் வேண்டும்யா தெனஉ ரைத்தான்.

மூன்றீச இலிங்கத்துப் பெருமான் வெளிப்பட்டு 'இந்தப்பெரிய விருட்சமாகிய நீ வேதமே! இதன் நிழல் நமக்கு நிழலாகும். ஒப்பில்லாமல் இந்தப் படியாகவே நீ வாழ்க! உனக்கு என்ன வேண்டும்?' என்றார். 16

வன்னிஎன் பெயரால் ஊரும் இலிங்கமும் வழங்க வேண்டும்;
என்னநல் வரங்கள் நல்கப் பெற்றவண் இருத்த லாலே,
துன்னுமா தவத்தீர் நீவிர் அத்தலத் தெய்தித் தொன்மைப்
பன்னகா பரணற் போற்றிப் பாலிக்கும் வேதம் தன்னை,

வன்னியாகிய என்பெயரால் ஊரும், இலிங்கமும் வழங்கப்பெற வேண்டும் என்று கேட்டது. இறைவன் நல்ல வரங்கள் நல்கினார். அவற்றைப் பெற்று, அந்த இடத்திலேயே வன்னி இருப்பதால் நிலைபெற்ற தவம்செய்யும் நீங்கள் அந்தத் தலத்திற்குச் சென்று, தொன்மையான, நாகாபரணரைப் போற்றி, அருள்பாலிக்கும் வேதத்தை... 17

பெற்றுளம் மகிழ்வீர் என்று பேசியே மறைந்தான் எங்கோன்;
கற்றமா முனிவர் எல்லாம் கயிலையை அகன்று தென்பால்
நற்றமிழ்ப் பொதிகைக் கீழ்பால் நவகன்னி மார்பு ரத்தில்,
உற்றனர் அரனைப் போற்றி உயர்தவம் புரிந்த போதில்,

பெற்று, மனமகிழ்ச்சி அடையுங்கள் என்று அருளிச்செய்த குருவானவர் மறைந்தார். கல்வியில் வல்ல அம்முனிவர்கள் எல்லோரும் கயிலாயத்தை விட்டு நீங்கித் தெற்கே உள்ள நல்ல தமிழ்ப்பொதிகை வழியாக வந்து, அதன் கிழக்குப்பக்கம் 'நவகன்னியர் புரம்' அடைந்தனர். அங்கே சிவனைப் போற்றி உயர்ந்த தவம் புரிந்தபோது.... 18

சித்தநா யகன்முன் போலத் தேசிக வடிவாய்த் தோன்றி,
மொய்த்தநால் வேதம் தன்னை விரித்துணர்த் தருளி, வேண்டும்
உத்தம வரங்கள் நல்க உயர்சிவ லிங்கத் துற்றான்;
அத்தனைக் கன்னி மார்கள் போற்றும்அன் பினைஉ ரைப்பாம்.

சித்தநாயகன் முன்பு வந்ததுபோலக் குருவடிவாக வெளிப்பட்டு, செறிவான நான்கு வேதங்களையும் விரிவாக உணர்த்தி, உத்தமமான வரங்கள் கொடுத்து, உயர்வான சிவலிங்கத்தில் சேர்ந்தார். தலைவனாகிய சிவனை நவகன்னியர் போற்றிய அன்பினைப் பற்றி இனிச்சொல்கிறேன். *19*

தவத்தினால் சூர பற்பன் தாருகன் சிங்க சூரன்
பவத்தினால் பலவாம் அண்டப் பார்அளித்தி டும்அப் போதில்,
அவத்தனாய் அறிவு நீங்கி மமதைகொண் டகிலம் யாவும்
நவைகொளும் படியே பானு கோபனை நல்கி னானே.

சூரபத்மன், தாருகன், சிங்கமுகன் என்ற மூன்று அசுரர்களும் தவத்தினால் பெற்ற வரங்களைக் கொண்டு, உலகை எல்லாம் ஆளும் நிலையைப் பெற்றார்கள். அப்போது அறிவில்லாமல் திமிருடன் பாவம் செய்தார்கள். சூரனுக்குப் பானுகோபன் மகனாகப் பிறந்தான். *20*

அரசுசெய் சூர பற்பன் அவம்புரி செய்கை யாலே,
சுரர்தமை ஏவல் கொண்டு சுரபதி முதலோர் தம்மை,
விரைவுடன் சிறையில் இட்டான் விண்ணவர் சிலர்கள் சென்று,
பரமன்பால் இந்தத் துன்பப் பாட்டினை உரைப்பல் என்ன,

அரசு செய்யும் சூரபத்மன், பாவச் செய்கையால் தேவர்களை வேலை வாங்கினான். இந்திரன் உள்ளிட்டவர்களை அவசரமாகச் சிறையிலிட்டான். தேவர்களில் சிலர், பரமனிடம் சென்று, தாம் அடையும் துன்பங்களையும், பாடுகளையும் சொல்லவேண்டுமெனக் கருதினார்கள். *21*

இமையவர் யாரும் போந்து மந்தர கிரியில் எய்தி,
அமையம்யா தெனவி னாவி அவ்விடைச் சாரும் போதில்,
இமையமால் வரையில் மேனை இமயமன் தவத்தி னாலே,
உமையைஅன் னார்கட் குண்மை மகவதாய் உயிர்க்க ஏவி,

தேவர்கள் யாவரும் ஒன்றாகச் சேர்ந்து, மந்திரகிரி, (கயிலாயம்) அடைந்தனர். இறைவனிடம் முறையிடுவதற்கான தக்கநேரம் எது என விசாரித்துக் கொண்டார்கள். இறைவனிடம் நெருங்கினார்கள். மேனையும் (மேருவின் புதல்வி, இமராசனின் மனைவி, மநோரமை என்றும் இவளுக்குப் பெயருண்டு) இமராசனும் இமயமலையில் செய்த தவத்தால்,

உமாதேவியை அவர்களுக்கு மகளாய்ப் பிறக்கச்சொல்ல — உண்மையாகச் சொன்னால் உயிர்க்கச் செய்ய... 22

### காமதகனம்

மவுனயோ கத்தில் ஈசன் உறைந்தனன் மவுனம் நீங்கிப்
பவன்அருள் பெறுதற் கெவ்வா றென்னப்பண் ணவர்கள் யாரும்
தவனம்உற் றிருந்தார் எண்ணி மாரனைச் சார்ந்த வன்பால்
உவமைஇல் முகமன் கூறி உம்பர்கள் இடுக்கண் தீர்ப்பாய்,

இறைவன் யோக மௌனத்தில் உறைந்திருந்தார். தானாக 'உண்டாகியன் (பவன்) அருளை எவ்வாறு பெறுவது எனத் தேவர்கள் யாவரும் வேட்கை (தவனம்) அடைந்தனர். கூடி ஆலோசித்தனர். மன்மதனிடம் சென்றனர். அவனிடம் ஒப்புமை சொல்லமுடியாத அளவுக்கு உபசார வார்த்தைகள் பேசினர். 'மன்மதனே! தேவர்களாகிய எங்களின் இடுக்கண் தீர்ப்பாய்...' 23

என்றுநல் வசனம் ஓத இமையவர்க் கிரங்கி மாரன்,
துன்றும்யோ கத்தி ருந்த சோதியார் தம்பால் மோகம்
ஒன்றிய பூவின் வாளி ஏவினான் உமையோர் பாகன்
வன்திறல் செய்தான் தன்னைத் தழல்கணால் விழித்து மாய்த்தான்.

என்று நல்ல வார்த்தையைப் பலமுறை சொன்னார்கள். மன்மதன், தேவர்களின் நிலைமைக்கு இரங்கினான். செறிந்த யோகத்தில் இருந்த சோதிவடிவமான பெருமானிடம், மோகத்தை உண்டாக்கும் மலர்ஒன்றிய அம்பை ஏவினான். கொடுஞ் செயல் செய்த மன்மதனை, உமைபாகனாகிய இறைவன், அக்கினியாகிய நெருப்புக்கண்ணால் விழித்து எரித்தார். 24

### அனங்கன் தோற்றம் – தேவர்கள் முறையீடு

அவன்துணை இரதி வேண்ட அனங்கனாய் அளித்தான் எங்கோன்
சிவன்தவம் நீங்கல் கண்டு தேவர்கள் முறையிட் டார்த்தார்;
தவந்தனால் சூர பற்பன் தனக்குறு வரங்கள் ஈந்தாய்;
அவன்தனால் இடுக்கண் எய்தி அந்தரர் யாரும் வந்தோம்.

இரதிதேவி மன்மதனின் மனைவி. அவள் சிவனிடம் தன் கணவனைத் தருமாறு வேண்டினாள். சிவன் தான் எரித்த மன்மதனை உருவம் அற்றவனாக மீண்டும் உண்டாக்கிக் கொடுத்தார். இந்த நிகழ்ச்சியால் சிவனின் மௌன யோகம் கலைந்தது. அந்த நேரத்தில் தேவர்கள் சூரபத்மன் செய்யும் அக்கிரமங்களைச் சொல்லி முறையிட்டார்கள். 'அண்ணலே! சூரபத்மன் செய்த தவத்திற்காக வரங்கள் கொடுத்தீர்.

*அவனால் துன்பம் அடைகிறோம். அதைப்பற்றி முறையிடவே வந்தோம்' என்றுகூறித் துதித்தார்கள்.* *25*

## முருகன் தோற்றம்

அண்ணலே எனத்து தித்தார்க் கபயம்தந் தசுரன் தன்னை,
நண்ணிவெல் வதற்குச் சேயை நாம்அளித் திடுவோம் என்ன,
விண்ணவர்க் கச்சம் நீங்கி வெந்தழல் கண்ணில் ஆறு
துண்ணெனும் பொறிவி டுத்தார் சுரர்பகை மாயத் தானே.

*'அண்ணலே!' எனக்கூறித் துதித்த தேவர்களுக்கு இறைவன் அபயம் அளித்தார். 'அசுரனை நெருங்கிச் சென்று, வெல்வதற்கு நாம் சேயை (முருகனை) அளிப்போம்' என்றார். தேவர்களின் பயம் நீங்கியது. வெம்மையான நெருப்புக்கண்ணீரிலிருந்து, ஆறு தீப்பொறிகளை விரைவாக விடுத்தார். தேவர்களின் பகைவர்கள் மாய்வதற்காக இவ்வாறு செய்தார்.* *26*

பொறிஇரு மூன்றும் ஆறு முகம்அதாப் பொருந்த ஆரல்
அறிவுடன் உருஒன் றாக ஆறுமா முகனைத் தாங்கி,
மறிதிரைச் சரவ ணத்தில் வைத்தனர் வந்த சேயை,
அறநலாள் வளர்க்க அந்த அரன்மகன் தனக்கப் போதில்,

*ஆறு பொறிகளும் ஆறு முகங்கள் ஆயின. ஆரல் அறிவுடன் — நிறைந்த அறிவுடன் உரு ஒன்றாயிற்று. ஆறுமுகனை மறித்த அலைகள் உள்ள சரவணப் பொய்கையில் வைத்தனர். முருகனைத் தர்சம்வர்த்தினியாகிய உமை வளர்த்தாள். அரன்மகன் முருகனுக்கு அப்போது,* *27*

ஆயுத வீரர் வேண்டும் எனஅரன் அகத்தில் தோன்றக்
காயும்வேற் கந்தன் தாதை கவுரியை அழைக்க ஓடி,
வேயுறு தோளி அந்தப் புரம்விட்டு விரைவி னோடு,
நாயகன் முன்னர் எய்த நவமணிச் சிலம்பில் ஒன்று,

*ஆயுதப்போர் செய்யும் வீரர்களின் துணைவேண்டும் என அரனின் மனத்தில் தோன்றியது. சினவேல் கொண்ட கந்தனின் தந்தை, கவுரியாகிய உமையை அழைத்தார். மூங்கில்போன்ற தோளைக்கொண்ட உமையம்மை, அந்தப்புரத்திலிருந்து வேகமாக ஓடி, கணவன் முன்னர் அடைந்தார். அவள் காலிலிருந்த நவமணிகள் பொதிந்த சிலம்பில் ஒன்று...* *28*

தெறித்திட இவள்தன் சாயை சேர்ந்தநன் மணிஒன் பான்மேல்
குறித்திட ஈசன் ஒன்பான் கன்னியர் தோன்றக் கோலம்
நிறைந்தகன் னியரை நோக்கக் கருவுடன் நேர்ந்த போதில்,
அறக்கொடி மனத்தில் கோபம் உற்றனள் அந்நல் லாரை,

தெறித்தது. உமையின் சாயல் சேர்ந்த ஒன்பது மணிகள் சிதறின. அவை நவகன்னியராக உருவெடுக்க, அழகு நிறைந்த கன்னியரைச் சிவன் நோக்கினார். அவர்கள் கருவுற்றனர். தருமக்கொடியாகிய உமையம்மை கோபம் அடைந்தாள். அந்தப் பெண்களுக்கு... 29

கருவினை உயிர்த்தி டாது சபித்தனள் கன்னி யர்கள்
பெருமித வருத்தம் உற்றார் பேதையர் தம்மை நோக்கி,
அரன்அருள் செய்வன் இந்தக் கயிலையை அகன்று தென்பால்
திருவளர் பொதிகைக் கீழ்பால் போய்த்தவம் செய்வீர் என்றான்.

'கரு, உருவாகக்கூடாது' என்று சாபமிட்டாள். அப்பெண்கள், சிவனால் கரு உண்டானதற்குப் பெருமிதமும், உமையின் சாபம் பெற்றதற்கு வருத்தமும் அடைந்தனர். சிவன் அந்தப் பெண் களை நோக்கி, அருள் செய்யும் எண்ணத்துடன், 'இந்தக் கயிலா யத்தை விட்டுச்செல்லுங்கள்; செல்வம் வளரும் பொதிகைக்குக் கிழக்கே போய்த் தவம் செய்யுங்கள்' என்றார். 30

பின்னும்அவ் இடத்தோர் சேத்ரம் பேசிடில் பெருமை பெற்ற,
மன்னிய பொதிகை இந்தக் கயிலைநேர் வளம்கொள் பூமி
பொன்உல காகும் அந்தப் புவிதனில் வந்த நீத்தம்,
நன்னதி கங்கை ஆம்அந் நகர்அது நமது லோகம்.

மேலும், பொதிகைக்குக் கிழக்கே ஒரு புண்ணியத்தலம் உள்ளது. பொதிகை, நிலையான பெருமை உடையது. அது கயிலைக்குச் சமமானது. வளங்கொண்ட அப்பிரதேசம், பொன்னுலகுக்குச் சமமாகும். அந்தப் பிரதேசத்தில் வரும் ஆறு நல்ல நதி, (பொருனை) கங்கையே ஆகும். அந்த (பொதிகைக்குக் கிழக்கே உள்ள தலம்) நகரம், நம் சிவலோகம் ஆகும். 31

ஆகையால் புடைசேர் கின்ற அருச்சுனம் உளத தன்பால்,
மாகவர் ஆடும் தீர்த்த வரநதி வாரந் தன்னில்,
ஏகநா யகன்மூன் றீசன் ஆகிய இடத்தில் எய்தி,
யோகமே புரிவீர் உங்கள் வருத்தம்அ தொழியும் என்றான்.

ஆகையினால், மருதமரம் பக்கத்தில் வளர்ந்துள்ள தல மாகிய திருப்புடைமருதூர் உள்ளது. அதில் இந்திரர்கள் நீராடும் வரந்தரும் நதியாகிய பொருனையின் கரையில், ஒரு பெரும் தலைவன் மூன்றீசனாக ஆகிய இடம் உள்ளது. அங்குச்சென்று, யோகம் செய்யுங்கள். உங்களின் வருத்தம் ஒழியும்' என்றார்.32

## நவவீரர் தோன்றுதல்

ஈசன்ஏ வலினால் எய்தி இங்ஙனம் தவங்கள் செய்தார்;
மாசிலா விடைமேல் எங்கோன் வனிதையோ டெழுந்து நின்று,

ஆசிலாத் தவம்செய் கன்னி யர்க்கருள் புரிவாய் என்ன,
நேசமாய் உமையை நோக்கி நின்மலன் அருளிச் செய்தான்.

இவ்வாறு ஈசன் ஏவியபடி நவகன்னியர்கள் மூன்றீசத் தலத்துக்கு வந்து, தவங்கள் செய்தார்கள். இறைவன் குற்றமற்ற ரிஷபவாகனத்தில் உமையுடன் எழுந்தருளினார். 'குறைவற்ற தவம்செய்த நவகன்னியருக்கு அருள் புரிவாய்' என்று, காதலுடன் உமையம்மைக்கு, மலமற்ற பெருமான் அன்புக்கட்டளை இட்டார். 33

அப்பொழு தமலை அந்தப் பெண்கள்பால் அமைத்த சாப
மைப்புநீங் கிடவே நோக்க வனிதையர் கருஉ யிர்த்தார்;
துப்புறு வீரர் தோன்று போதினில் துளியால் வேர்வை
மெய்ப்படும் போதில் ஒன்பான் இலக்கவீ ரரும்பி றந்தார்.

அப்பொழுது, மலமற்ற பெருமாட்டியாகிய உமையம்மை, அந்த நவகன்னியருக்கு ஏற்பட்ட சாபமாகிய இருட்டு நீங்கும்படியாக அவர்களை நோக்கினாள். அவர்கள் பிள்ளைகளைப் பெற்றெடுத்தனர். வலிமைபொருந்திய ஒன்பது வீரர்கள் தோன்றினர். கருவுயிர்க்கும்போது தோன்றிய வியர்வைத் துளிகளில், ஒன்பது லட்சம் வீரர் தோன்றினார். 34

பிறந்தநவ வீரர்கள் பலாக்கிரமம் உற்றே,
சிறந்தஇவர் சேய்துணைவர் ஆகஎன வேசெய்து,
உறைந்தவர் அனேகரையும் உதவியப தாதி
அறந்தர அமைத்தமரர் உய்யஅருள் செய்தான்.

இப்படிப் பிறந்த நவவீரர்கள் பலம் பொருந்தியவர்களாக அமைந்தனர். சிறப்பான இவர்கள் சேய் (முருகன்) துணைவர்கள் ஆக இறைவன் அருள்செய்தார். அவர்களுடன் வந்த ஒன்பது லட்சம் வீரர்களையும் பதாதியாக (சேனைத் தொகையாக) தருமம் நிலைக்க — தேவர்கள் பிழைக்க அமைத்து, இறைவன் அருள் செய்தார். 35

அத்தகைமை நிற்கஅயி ராணிஅருள் பெற்றே,
இத்தகைய வீரரை உயிர்த்தபின்இம் மாதர்,
முத்தனை வணங்கிவர முற்றமகிழ் வெய்திச்
சித்தன்அரு ளால்உயர் சிவன்பதம் அடைந்தார்.

அது நிற்க, அயிராணி என்ற திருநாமம் கொண்டவளாகிய பார்வதியின் அருள்பெற்று, இத்தகைய வீரர்களைப் பெற்றெடுத்த பிறகு, நவகன்னியர் முக்தி தருபவனாகிய சிவனை வணங்கி, வரம்பெற்று, மகிழ்ந்து, சித்தனாம் சிவன்அருளால், உயர்வாகிய சிவனாரின் திருவடிப்பேறு பெற்றார்கள். 36

## அகத்தியர் பூசனை

இத்தகைமை பெற்றதல முக்கியம்இ தென்றே,
அத்தன்அருள் பெற்றுயர் அகத்தியன் எழுந்தே,
தத்துதிரை மொய்த்தபொரு னைக்கரை இதன்பால்,
நித்தனை வணங்கமுனி நெறிகொடிவண் எய்தா,

இவ்வளவு சிறப்புகள் பெற்ற முக்கியமான தலம் இது என்பதால், சிவனின் அருள்பெற்ற உயர்வான அகத்தியர், அலைகள் தாவி மொய்க்கும் பொருனைக்கரையின் பக்கமுள்ள நித்தியமான பெருமானை வணங்கச் சரியான பாதையில் இங்கு வந்தார். 37

மேல்நதியி னில்படிய வேமுனிவன் உற்றான்;
ஆனபொழு தில்பரமன் அன்னையொ டெழுந்தே,
வானில்விடை மீதுலவ மாமுனி பணிந்தான்;
தேன்இதழி யன்குழை சிறந்தமணி தன்னில்,

மேலான நதியாகிய பொருனையில் அகத்திய முனிவர் நீராட இறங்கினார். அப்பொழுது பரமன், நம் அன்னையாகிய உமாதேவியுடன் வானில் எழுந்தருளி உலாவினார். மகா முனிவராகிய அகத்தியர் வணங்கினார். தேன்சொட்டும் கொன்றைமாலையை அணிந்த சிவனின் குழை என்னும் காதணியில் இருந்த மணிகளில்... 38

ஒருமணி நதியில் வீழ அகத்தியன் உவந்து போற்ற,
மருமலர் இமையோர் போற்றி வான்குழை மணிபொ ருந்தும்
பெருமையால் அத்து றைப்பேர் மணிகர்ணி தீர்த்தம் என்றார்;
பரமனும் முனிவன் கேட்க வான்சொலால் பகரு கின்றான்.

ஒரு ம்ணி நதியில் விழுந்தது. அகத்தியர் மகிழ்ந்தார்; போற்றினார். தேவர்கள் போற்றினார்கள்! வானிலிருந்து குழைமணி விழுந்து பதிந்த பெருமையால், அந்த நீர்த்துறைக்கு 'மணிகர்ணி தீர்த்தம்' என்றபெயர் சூட்டினார்கள். பரமனும் அகத்திய முனிவர் கேட்கும்படியாக வானிலிருந்து, ... 39

இவ்விடை வன்னி ஈசன் தனைப்பணி வாய்என் றோதி,
வெவ்விடை யோன்எ ழுந்தான் போற்றிமே தினியில் வேண்டும்
திவ்விய ஞான போகம் தரும்இந்தத் தீர்த்தம் ஆடிப்
பவ்விய முடனே வன்னிப் பதியினை முனிவன் சார்ந்தான்.

"இங்கே இருக்கின்ற வன்னிமரத்தையும், ஈசனையும் வணங்கு" என்று, அருளினார். வலிமையான ரிஷபவாகனத்தார் மறைந்தார். அகத்தியர் போற்றியுரை சொன்னார். உலகத்

திற்கு வேண்டும்படியான திவ்வியமான ஞானத்தையும், போகத்தையும் தரக்கூடிய இந்தத் தீர்த்தத்தில் நீராடி, பணிவடக்கத்துடன் வன்னிப்பதியாகிய மூன்றீசுவரத்தை அகத்தியர் அடைந்தார். 40

குறுமுனி வன்னி மேவும் குழகனைப் பூசை செய்ய,
நறுமலர் மஞ்ச னாதி நல்லசாந் தமுதத் தாலும்,
இறைவனுக் கிணைஇ லாத இனியநல் உபசா ரத்தால்,
உறுதியாய்ப் பரவி நின்ற பொழுதினில் உமைஓர் பாகன்,

குட்டைமுனிவராகிய அகத்தியர், வன்னீசுவரத்தில் பொருந்திய இளையவனாகிய (குழகனாகிய) சிவனைப் பூசித்தார். மணமுள்ள மலர்கள், மணமுள்ள நீராட்டுத் திரவியங்கள், நல்ல சந்தனம், அமுதம் என்பவற்றால் இறைவனுக்கு, ஒப்பில்லாத இனிய நல்ல, உபசாரத்தால், திடமனத்துடன் பரவினார். அப்பொழுது உமையொரு பாகன்... 41

மூன்றுகூ றாகத் தோன்ற முனிவரன் நடுக்கம் உற்றே,
தோன்றும்இவ் வகையா தென்னத் துதித்திடும் போதில் ஈசன்,
வான்தரு சொல்லி னாலே மால்அயன் அரன்இம் மூவர்,
தான்திகழ் மூன்றாம் என்னச் சாற்றினான் சாற்றும் வேளை,

மூன்று கூறாகத் தோன்றினார். முனிவர் நடுங்கினார். 'இறைவா! ஏன் மூன்று கூறாகத் தெரிகிறீர்கள்!' என்று, துதித்து வேண்டினார். அப்பொழுது ஈசன் அசரீரியாக, 'திருமால், பிரமன், சிவன் இம்மூவரும் மூன்று கூறாக உள்ளனர்' என்று அருளினார். அப்படிச் சொன்ன நேரத்தில்... 42

பங்குமூன் றாகத் தோன்றும் பரமன்ஓர் குறியாய்த் தோன்ற,
இங்கெமக் கருள மன்னும் இறும்பூதென் றெண்ணி இந்தச்
சங்கரன் தனக்கு மூன்றீ சுரன்என நாமம் சாற்றி,
மங்கைஓர் பாகன் தன்னை வாழ்த்தினான் வணங்கி னானே.

மூன்று கூறாகத் தோன்றும் பரம்பொருள் ஒரே குறியாய், இங்கே எனக்கு நிலையாக அருளுகிறார்; இது மிகப் பெரும் மகிழ்ச்சி என எண்ணி, சங்கரருக்கு 'மூன்றீசர்' என்ற திருநாமம் வைத்து, மங்கைபங்கனை அகத்தியர் வாழ்த்தி வணங்கினார். 43

## அகத்தியரின் மூன்றீசத் துதி

மூவராய் வந்த இந்த
மூர்த்தம்நான் காண இங்ஙன்
தாவிலா(து) இருந்த கோலம்
தந்துதன் உருவம் காட்டி,

பூவுளோர் முதலோர் காண
இருந்தனை போற்றி போற்றி!
சேவுயர் கொடியாய் போற்றி
சித்தநா யகனே போற்றி!

(இங்ஙன் —இதைப்போல; தா — குற்றம் ; கோலம்— வடிவம்; பூ— உலகம்; சே— ரிஷபம்.) 44

வேதியா போற்றி! விண்ணோர்
விரைமலர் தூவிப் போற்றும்
நாதனே போற்றி! தெய்வ
நான்மறைப் பொருளே போற்றி!
சோதியே போற்றி! முன்னம்
தும்பியைப் பாது காத்த
மாதொரு பாகா போற்றி!
வன்னிநா யகனே போற்றி!

(விண்ணோர்— தேவர்கள்; விரை — மணம்; நான்மறை — நான்கு வேதங்கள்; சோதி — ஒளி; தும்பி —யானை; மாது —உமை.) 45

அன்பர்கட்கு அமுதே! அருள்வரை கனியே!
தென்பதிப் பொருனா தீரசின் மயனே!
மின்,மர கதப்பெண் விமல! வித் தகனே!
தொன்மறைத் தலைவா! எனத்துதித் ததனால்.

[வரை— மலை; பொருனாதீரம் — பொருனைக்கரை; மின்— மின்னல்போன்ற; தொன்— பழமையான; மறை— வேதம்.] 46

மூன்றீச நாயகனுக் ககத்தியமுனீ சுரன்என்று,
சான்றோர்கள் புனைந்தேத்தத் தமிழ்முனியும் வரம்பெற்றுத்
தேன்தாழும் கொன்றைபுனை சித்தர்பால் விடைபெற்று,
வான்தாழும் புனிதேசர் தமைவணங்க மருதுற்றான்.

இவ்வாறு அகத்தியர் துதி செய்ததனால், மூன்றீசனுக்கு 'அகத்திய முனீஸ்வரன்' என்ற பெயரையும் சான்றோர்கள் இட்டார்கள்; ஏத்தினார்கள். தேன்சொட்டும் கொன்றை மாலையை அணிந்த சித்தராகிய சிவனிடம் விடைபெற்று, வானிலிருந்து இறங்கிவந்து, வரம்கொடுக்கும் புடைமருதப் புனிதனிடம் அகத்தியர் வந்தார். 47

குறுமுனிவன் படிதீர்த்தம் அகத்தியதீர்த் தம்குடைவோர்
வறுமைநோய் பாவம்போம் வனிதையர்கள் படிதீர்த்தம்
இறைதீர்த்தம் மணிகர்ணி கைத்தீர்த்தம் பிரயாகை
மறைதீர்த்தம் கெசமோட்சம் சித்தர்வழி பாடுரைப்பாம்.

குள்ளமாக இருந்த அகத்தியர் குளித்த அகத்திய தீர்த்தத்தில் குளித்தால், வறுமைக்குக் காரணமாகிய பாவம் போகும். பெண்கள் குளிக்கவேண்டிய தீர்த்தங்கள் மணிகர்ணிகை தீர்த்தம், பிரயாகை, வேத தீர்த்தம், கெஜமோட்ச தீர்த்தம் ஆகியனவாகும். சித்தமூர்த்தி வழிபடுதல் பற்றி, இனிச் சொல்கிறேன். 48

## கருவூர்ச்சித்தர் வழிபாடு

கயிலைவாழ் கணத்தில் சோம கேதுபொன் வரைசூழ் காவில்,
பயிலும்வே டத்திக் காசை உற்றதோர் பாவத் தாலே,
மயலுடன் புவியில் எய்தி மானிடச் செனனம் உற்றான்
இயல்பினால் வேட்கை தீர்ந்தான் இறையவன் அருளி னாலே.

கயிலாயத்தில் உள்ள சிவகணங்களில், 'சோமகேது' என்பது ஒரு சிவகணம். சோமகேதுவுக்கு, மேருமலையை ஒட்டிய ஒரு சோலையில் விளையாடிக் கொண்டிருந்த ஒரு வேடத்தி மேல் ஆசை ஏற்பட்டது. அந்தப் பாவத்தால் வேடத்தியுடன் மண்ணுலகில் மானுடப்பிறவி அடைந்தார். இறைவன் அருளால் இயல்பாகவே அந்த ஆசை தீர்ந்தது. 49

சித்துகள் பெற்றுச் சித்தர் ஆகித்தென் மருதில் எய்தி,
முத்திநா யகனை நாறும் பூஎன அழைக்க முன்னோன்,
பத்திசேர் வசனம் கேட்டுப் பரன்திரு மேனி சாய்ந்து,
வித்தக மாக வாஎன் றிடமிகு வெள்ளம் வல்லே,

மனிதனாகிய சோமகேது, சித்துகள் கைவரப்பெற்றுச் சித்தர் ஆனார். அவர் திருப்புடைமருதூர்க்கு வந்தார். அவர் முத்தி யளிக்கும் தலைவனாகிய சிவனை, 'நாறும்பூ' (வாசனை உள்ள மருதப் பூ) என அழைத்தார். அந்தப்பக்தி வசனம் கேட்டுப் பரமன், திருமேனி சாய்ந்து, வித்தகமாக 'வா' என்று அழைத்தார். வான்மழையால் பொருனையில் வெள்ளம் விரைவாக... 50

முன்வற்றக் கண்டு தென்பால் முன்னிமுன் னவனைப் போற்றி,
மின்உற்றோன் உரைக்கும் வேடச் சாதிபால் வேட்கை தீர,
மன்உற்ற மதுவும் ஊனும் புசித்திட வினைகள் மாறி,
தென்உற்ற பதியில் போகென் றேவிடக் கருவூர்ச் சித்தர்,

வற்றியது கண்டு, தென்திசைக்கு வந்து முதல்வனைப் போற்றினார் கருவூர்ச்சித்தர். முற்பிறப்பில் புகழ்உள்ள வேடர்குலப் பெண்ஆசை தீர நிலைபெற்ற மதுவும், ஊனும் உண்ண, 'வினைகள் மாறுவதற்காகத் தெற்குத்திசையில்

உள்ள மூன்றீசத் தலத்துக்குச் செல்' என, இறைவன் இட்ட கட்டளைப்படி, கருவூர்ச்சித்தர் இங்கு வந்தார். 51

வந்தனர் வன்னி யூர்வாழ் வரதனை வணங்கும் போதில்,
வந்தான வன்னிக் காயைத் தேனைஊன் மதுஅ தாகத்
தந்திடக் கன்னியாலே சாற்றினன் தரவே உண்டு,
பந்தமும் வினையும் நீங்கிப் பரமனைப் பரவு கின்றான்.

சித்தர் வன்னியூரை அடைந்து, வரம்தரும் பெருமானை வணங்கும்போது காளிதேவியை நோக்கிச் சிவன், 'வன்னிக் காயைப் புலால் ஆகவும், தேனை மதுவாகவும்' தரச்சொன்னார். அப்படிக் காளிதேவி சித்தருக்கு வன்னிக் காயையும், தேனையும் கொடுத்தாள். சித்தர் அவற்றை உட்கொண்டார். அதனால் பழைய பந்தமும் வினையும் நீங்கியது. அப்போது இறைவனைப் பரவித் துதித்தார். 52

## கருவூரார் துதித்தல்

ஆனுயர் கொடியாய் போற்றி!
அடியவர்க்கு அமுதே போற்றி!
தேனினை வன்னிக் காயைத்
தேறல்ஊன் ஆகச் செய்து,
மானிடம் உற்ற சாபம்
வல்வினை தீர்த்தாய் போற்றி!
மேனதி அணிந்தாய் போற்றி!
வேதநா யகனே போற்றி!

[ஆன்—ரிஷபம்; தேறல்— கள்; ஊன் — மாமிசம்; மானிடம் — மனிதப்பிறவி, மான்போன்ற வேடப் பெண்ணிடம்; வல் — கடுமையான ; மேல் + நதி = மேனதி — ஆகாசகங்கை.) 53

பாததா மரைகள் போற்றி எனப்பர விடும்அவ் வேளை,
நாதனும் காட்சி நல்கி நவிலும்நின் துதிக்கு வந்தோம்;
போதனே நினக்கு வேண்டும் வரம்எவன் புகலு கென்ன,
நீதன்நின் பெயர்தான் சித்த இலிங்கமாய் நிகழ வேண்டும்.

உம் திருவடித்தாமரைகள் போற்றி என்று துதித்து வணங்கினார். இறைவன் காட்சி கொடுத்தார். 'நீ சொன்ன துதிக்கு மகிழ்ச்சியடைந்தோம்; உனக்கு வேண்டும் வரங்கள் யாவை? சொல்' எனக் கேட்டார். 'நீதிமானாகிய உன் பெயர் 'சித்தலிங்கம்' என, எல்லாராலும் அழைக்கப்படவேண்டும். 54

நின்னருள் பதவி வேண்டும் என்றனன் நிமலன் ஈந்தான்;
பன்னரும் வரங்கள் பெற்றுச் சித்தனும் பரமன் பாலில்,

துன்னிய விடைபெற் றிப்பால் சுயபுடார்ச் சுனத்தில் உற்றான்;
மன்னவன் பரவு கின்ற வகையினை வகுத்து ரைப்பாம்.

*'நின் அருளாகிய பதவி வேண்டும்' என்று வேண்டினார். சிவன் அவ்வாறே வரமளித்தார். பல வரங்கள் பெற்ற சித்தர், பரமனிடம் விடைபெற்று, சுயபுடார்ச்சுனமாகிய கயிலாயத்தை அடைந்தார். இனிப்பாண்டிய மன்னர்கள், திருப்புடை மருதூரைப் போற்றிய விவரங்களைச் சொல்வேன். 55*

## பாண்டியர் பணிவும் பணிகளும்

மன்னவன் மாமது ரைப்பதி மாறன்
பன்னு சவுந்தர பாண்டிய ராசன்
பொன்நதி மாமழை எனஅருள் பூபன்
தென்னவர் ஏறுயர் செழியனும் ஓர்நாள்,

*பெரிய மதுரைப்பதிக்குத் தலைவனாகிய, பாண்டிய அரசனாகிய புகழ்பெற்ற சவுந்தரமாறன் என்பவன், பெரிய மழை பொழிவதுபோலப் பொன்னையும் செல்வங்களையும் வழங்கும் கொடையாளி ஆவான். செல்வச்செழிப்புள்ள தென்னவரின் காளைபோன்ற அவன் ஒரு நாள்... 56*

பூவணையில் துயில்கொள்ளும் பொழுதில்அவன் கனவினிலே,
சேவுயர்த்தார் எழுந்தருளித் தென்னவன்தென் பொதிகைக்கீழ்
மூவர்களும் ஒன்றாக முயங்கியதோர் சிவத்தலம்தான்
தேவர்தொழும் புடைமருதத் தென்சாரில் திகழ்த்திலங்கும்,

*பூம்படுக்கையில் தூங்கும்போது, அவன்கனவில் ரிஷபக் கொடியை உயர்த்திய சிவபெருமான் எழுந்தருளி, 'தென்னவனே! தென்பொதிகை மலைக்குக் கிழக்கே மும்மூர்த்திகளும் ஒன்றாகக் கலந்த சிவத்தலம் ஒன்றுள்ளது. அது தேவர்கள் தொழும் திருப்புடைம்ருதூர்த் திருக்கோயிலுக்குத் தெற்குப்பக்கத்தில் புகழுடன் விளங்குகிறது.' 57*

அத்தலத்துப் பணிகள்எல்லாம் பிரளயத்தில் அழிந்ததனால்,
நித்தனுட னேதலமும் நிலையமும்நித் தியம்அதனில்,
சித்திதரும் பணிசெய்து சிந்திதம்எ லாம்பெற்று,
முத்திபெறு வாய்என்று மொழிந்தான்அங் ஙனம்மறைந்தான்.

*அத்தலத்தில் செய்யப்பட்ட திருக்கோயில் கட்டுமானப் பணிகள் எல்லாம், பிரளயகாலத்தில் அழிந்துவிட்டன. இறை திருமேனியுடன் தலமும் சன்னிதானங்களும் அமைத்து, வெற்றிகரமாகப் பணிசெய்து, சிந்திதம் எனப்படும் 'நினைத்த நற்காரியங்கள்' எல்லாம் நிறைவேறப்பெற்று, முத்தியை அடைவாய்' என்று கூறினார். அவ்வாறு கூறியபடியே கனவுத்தோற்றத்திலிருந்து மறைந்தார். 58*

எழுந்துணர்ந்து மந்திரற்கும் இனியவர்க்கும் இவைஉரைத்துத்
தொழும்பணிசெய் துய்வன்எனத் துரகத்தேர் மேற்கொண்டு,
செழுந்தரளக் குடைதானை சூழ்ந்துவரச் சித்தநகர்க்
கொழுஞ்சுடர்ச்செம் மேனியினைக் கும்பிடும்கொள் கையன்ஆகி,

அரசன் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து, மந்திரிமார்களுக்கும், இனிய நண்பர்களுக்கும் கனவுபற்றிச் சொல்லி, 'நான் அவ்விறைவனை, விளங்கும் பணியைச்செய்து நலம் பெறப் போகிறேன்' என்றான். குதிரைபூட்டிய தேரில் ஏறி, செழிப்பான முத்துகளாலான குடைகளைப் பிடித்துக் கொண்டு, சேனை சூழ்ந்து வர, சித்தநகர்க்கொழுஞ்சுடராம் பெருமானை வழிபாடு செய்யும் கொள்கையுடன்... 59

நெறிபோந்து பலகடந்து நிலவுபொரு னாநதியின்
துறைசேர்ந்து நீராடித் தும்பைநதி அறுகணிந்த
பிறைவேணி மூன்றீசப் பெருமான்நன் னகர்மேவிக்
குறையாத மகிழ்வினொடு குழகன்கோ யிலைஅணைந்து,

சரியான வழியில் நெடுந்தூரம் கடந்து, விளங்கும்படியான பொருனை நதித்துறையை அடைந்து, குளித்து, தும்பையையும், கங்கையையும், அறுகையும், பிறையையும் அணிந்த மூன்றீசப்பெருமானின் நல்ல நகரை அடைந்தான். நிறைவான மகிழ்ச்சியுடன், பெருமானின் கோயிலை அமைத்தான். 60

பணிந்துதுதித் திறைஅருளால் பலவான திருப்பணியும்
இணங்கும்விழா ஆபரணம் முதலாக இயற்றியபின்,
அணங்குடனே தென்பாலில் அரசன்தன் பெயர்விளங்க,
வணங்கிஆ லயம்செய்து சொக்கரையும் வதிட்டித்தான்.

பெருமானைப் பணிந்து, தோத்திரங்கள் சொல்லி, அவன் அருளால் பல திருப்பணிகள், இணக்கமான விழாக்கள் செய்வித்தான். ஆபரணங்கள் பல செய்வித்து அளித்தான். தன்பெயர் விளங்கும்படி, அத்திருக்கோயிலில் தெற்குப் பகுதியில், அம்பிகையுடன் சொக்கநாதர் எழுந்தருள ஆலயம் அமைத்து, பிரதிஷ்டைசெய்து வணங்கினான். 61

தென்புறம்சொக் கேசனையும் திகழும்மூன் றீசனையும்
இன்பமுடன் பணிந்தேத்தி இறைமைபுரிந் தேபலநாள்
அன்புடனே வதிந்தினிதாய் அரசன்அரன் அருளாலே,
பொன்பதியோர் புகழ்ந்தேத்தப் பொலிந்துபதம் கலந்தனனால்.

கோயிலின் தென்புறத்தில் எழுந்தருளச்செய்த சொக்கேசரையும், திகழும் மூன்றீசரையும், இன்பமடைந்து பணிந்து

புகழ்ந்து, இறைநெறிக் கடமைகள் செய்து, அன்புடன் பல நாள்கள் அங்கேயே தங்கி, இறைவன் அருளால், பொன்னுலகத் தேவர்கள் புகழும்படியாக அரசன் விளங்கினான். பின்னர்ப் பொலிவுடன் இறையடியில் கலந்தான். 62

## செண்பகமாறன், பராக்கிரமன் பணிகள்

பின்னும்இவன் மரபுளோரில் பெற்றிடும்சண் பகமாறன்
தென்னவன்ப ராக்கிரமன் தென்காசி கண்டருளும்
மன்னவன்இவ் அரன்தனக்கு வகைஇயற்றிப் பணிசெய்து,
பன்னெடுநாள் புவிகாத்துப் பரமன்அருட் பதம்பெற்றான்.

சவுந்தரபாண்டியனின் மரபில் வந்த சண்பகமாறன், தென்காசிக் கோயில் கட்டிய பராக்கிரம பாண்டியன் ஆகியோர், மூன்றீசருக்குத் தக்க வகையில் பலபணிகள் செய்து, பலகாலம் பாண்டிய நாட்டை ஆட்சி செய்து, பரமனின் அருள்திருவடிகளை அடைந்தார்கள். 63

மூன்றீசர் கதைஇவ்வா றிதனைமுயன் றிடுவோர்கள்,
சான்றோர்க ளுடன்கூடிச் சாற்றுநர்கேட் குநர்துதிப்போர்
கான்தேரும் மதுஇதழிக் கண்ணியன்பொன் கழல்தொழுவோர்,
வான்சேரும் மகிழ்வெய்தி வரதன்அருள் பெறுவாரே.

மூன்றீசரின் சரிதம் இவ்வாறு அமைகிறது. திருப்புடை மருதூர்ப் புராணத்தைப் படிப்பவர்கள், அறிஞர்களுடன் கூடி விமரிசித்துச் சுவைப்பவர்கள், கேட்பவர்கள், துதிப்பவர்கள், தேன்பொருந்திய காட்டுக்கொன்றைக் கண்ணியை அணிந்த பெருமானின் திருவடிகளைத் தொழுபவர்கள் ஆகியோர், விண்ணுலகை அடையும் மகிழ்ச்சியையும், பெருமானின் திருவருளையும் பெறுவார்கள். 64

ஆகத் திருவிருத்தம் – *1839*

## வாழ்த்து

வாழ்க தட்சிண காசி வளம்பதி
தாழ்வி லாதபு டார்ச்சுனம் சார்ந்தருள்
சூழ்இ லேபன சுந்தரன் தொல்கதை
ஏழ்பெ ரும்புவி எங்கும் விளங்கவே.

*திருப்புடை மருதூர் நாறும்பூநாதர் திருவிளையாடற் புராணம்*
*மூலமும் **ம.வே. பசுபதி** எழுதிய எளிய உரையும்*
*நிறைவு.*

